# இலக்கணத்தொகை

## யாப்பு - பாட்டியல்

முனைவர் ச.வே. சுப்பிரமணியன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# இலக்கணத்தொகை

## யாப்பு-பாட்டியல்

முனைவர் ச.வே. சுப்பிரமணியன்

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**International Institute of Tamil Studies**

இரண்டாவது முதன்மைச் சாலை, மையத் தொழில்
நுட்பப்பயிலக வளாகம், தரமணி, சென்னை-600113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Ilakkaṇattokai, Yāppu Paṭṭiyal** |
| Author | : | **Dr. S.V. Subramanian**<br>Former Director<br>International Institute of Tamil Studies |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 655 |
| Language | : | Tamil |
| Edition | : | Reprint; First Edition: 1978 |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Binding | : | Paper Binding |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xii+660 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.300/- (Rupees Three hundred only) |
| Printed by | : | United Bind Graphics<br>Old No.43 / N.No.95, Millers Road,<br>Kilpauk, Chennai - 600 010 |
| Subject | : | Grammatical compilation on Prosody |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

இலக்கணத்தொகை யாப்பு-பாட்டியல் எனும் தலைப்பிலான இந்நூல் 1978இல் தமிழ்ப்பதிப்பக வெளியீடாக வெளிவந்தது. தமிழுக்கு வளம் சேர்க்கும் இந்த நூலின் தேவை குறித்து முப்பது ஆண்டுகள் கழித்து எம் நிறுவனம் அதன்மறுபதிப்பை வெளியிடுவதில் மிகுந்த பெருமைகொள்கிறது.

தமிழ் இலக்கணம் குறித்த விரிந்த ஆய்வுச் சிந்தனைக்கு இந்நூலில் அடங்கியுள்ள தொல்காப்பியம்-செய்யுளியல், காக்கை பாடினியம், யாப்பருங்கலம், வீரசோழியம்-யாப்பதிகாரம், இலக்கண விளக்கம்-செய்யுளியல், தொன்னூல் விளக்கம்-யாப்பதிகாரம், முத்துவீரியம்-யாப்பதிகாரம், சுவாமிநாதம்-யாப்பதிகாரம், விருத்தப்பாவியல் அனைத்தும் இலக்கணவிய லாருக்கும், மொழியியலாளர்க்கும், பழந்தமிழ் இலக்கியத்தை நுகர்வோர்க்கும் பெரிதும் துணை நல்கக் கூடியவையாக அமையும் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

பாட்டியல் குறித்த பல வகைகள் இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டி முறையே விளக்கப்படுகின்றன. இந்திரகாளியம், பன்னிருபாட்டியல், வெண்பாப்பாட்டியல், வரையறுத்த பாட்டியல், பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கம் - பாட்டியல், பிரபந்த தீபிகை எனுமாறு முறையே விளக்கப்பட்டுள்ளன. பேராசிரியர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராக இருந்தபோது இந்நூல் வந்துள்ளது. மூதறிஞர் வ.அய். சுப்பிரமணியம் அவர்களது சிறந்த மாணவர்களுள் ஒருவராகத் திகழ்ந்தவர் ச.வே.சு. இந்த அடையாளமே போதும் ச.வே.சுவின் புலமையை விளக்கும்.

பாட்டியல் என்பது பாட்டின் இயல்பைக் கூறும் நூல் (பாட்டிலக்கணம்) அல்லது நூற்பகுதி எனப் பொருள்படும். பாட்டு என்ற சொல் இங்குப் 'பா' வாலாகிய இலக்கியத்தையும் குறித்து நிற்கின்றது எனக் கொள்ளலாம். *(ப.333)*

பாட்டியலைப் பொதுவாக இருகூறாகப் பிரிக்கலாம். ஒன்று தனிப்பாடலின் அல்லது இலக்கியத்தின் முதற்பாடலின் முதல்மொழியில் நினைக்கப்பட வேண்டிய பத்துப் பொருத்தங்களைப் பற்றியது. இதனுடன் சார்த்தி, பாக்களுக்கு நிலம், நிறம், கடவுள், சாதி, மலர் முதலியன வகுக்கப்படலையும் நினைக்கலாம். இவற்றைப் பெரும்பாலும் ஒழிபியல் கருத்தாகவே நூலாசிரியர் தருகின்றனர். (ப.333)

இரண்டாம் பகுதி சிற்றிலக்கியம், காப்பியம், தொகைகள் முதலிய இலக்கியங்களின் இயல்பைக் கூறுகின்றது. எனவே ஒரு பகுப்பு பொதுவாகப் பாவையும், மறு பகுப்பு தனி இலக்கிய வகையையும் ஆய்கின்றது எனத் தெளியலாம். (ப. 333)

தமிழ் இலக்கியங்களில் குறிப்பாகப் பாட்டியல் நூல்களில் சாதியம் குறித்தும் பாக்கள் வகைப்படுத்தப் பட்டுள்ளமை தெரிகின்றது. அடிநிலைப் பண்பாடு குறித்துத் தமிழ் அறிஞர்கள் ஆழமான நிலையிலும் விரிந்த நிலையிலும் ஆன ஆய்வுகளை நிகழ்த்த உள்ளனர். இன்றைய கலை இலக்கியம் மற்றும் இலக்கண ஆய்வாளர்கள் பலரும் பல நிலைகளில் ஆய்வு செய்ய இந்த நூல் பெரிதும் தமிழ் உலகுக்குப் பயன்தரத்தக்கதாக அமையும்.

இந்திய அரசினரால் தமிழ் செம்மொழித்தரம் பெற்றுள்ள இந்தச் சூழலில் பல நிலைத் தமிழ் ஆய்வுகளுக்கு இந்த நூல் பெருந்துணை செய்ய வாய்ப்பளிக்கும்.

இந்நூலின் பிற்சேர்க்கையாக அறுவகை இலக்கணம்-யாப்பிலக்கணம், ஏழாம் இலக்கணம்-யாப்பிலக்கணம் வண்ணத்தியல்பு, பொருத்த விளக்கம், யாப்பொலி என்பன அமைந்துள்ளன. இலக்கணத்தை மீறிய கவிதைகள் என உருப்பெற்றுள்ள கவிதை உலகில் இவை மரபினை மீறிக் கவிதைகள் படைப்போருக்கு எண்ணிப்பார்க்கவும் புதிய இலக்கணங்களையும், புதிய இலக்கிய வகைகளைப் படைத்திடவும் உறுதுணை செய்யும்.

இந்நூலினை எம் நிறுவனம் வெளியிட ஒப்புதல் தந்துள்ள நூலாசிரியரும், எம் நிறுவன மேனாள் இயக்குநருமான ச.வே.சு. அவர்களுக்கும் முதற்பதிப்புச் செய்துள்ள தமிழ்ப் பதிப்பகத்தாருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு.

உயர் ஆய்வு நிறுவனத்திலிருந்து வெளிவரும் இந்த இலக்கண ஆய்வு நூல் பல நிலை ஆய்வுகளுக்கு வழிவகுக்கும் என எண்ணும்போது மிகவும் மகிழ்ச்சியாகவும் பெருமையாகவும் உள்ளது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# முன்னுரை

யாப்பு, செய்யுள் வடிவமைப்புக் கல்வியை அடிப்படையாகக் கொண்டது. செய்யுளின் புறவடிவும் அகவமைப்பும் ஒருங்கே யாப்புக் கல்வியில் அடங்குதலுண்டு. பிற்காலத்தில் புறவடிவம் மட்டுமே கருதப்பட்டது. வரலாற்றடிப்படையில் யாப்பிலக்கணங் களைப் பார்வையிடும்போது இந்நிலை தெளிகின்றது. யாப்பு தனி யிலக்கணமாகப் பிரிந்த காலமும் காரணமும் இதுதான் போலும்.

தொல்காப்பியம் இலக்கணத்தை முப்பகுப்பாகத் தந்தது — எழுத்து, சொல், பொருள் என. பொருளில் ஒரு கூறாக யாப்பு அடங்கியது. தொல்காப்பியச் செய்யுளியலை யாப்பதிகாரம் எனக் கூறும் பழக்கம் இருந்தமையைப் பேராசிரியர் உரை சுட்டுகின்றது. இலக்கணம் நாற்பகுப்பாக விரிந்தமை இது. யாப்பு பிரிந்து தனி இலக்கண நூலாயினமையும் இங்கு நினைத்தற்பாலது. பொருளின் மற்றொரு கூறான உவமையும் வளர்ந்து விரிந்து அணியிலக்கணமாக உருப்பெற்றபோது ஐந்திலக்கணவமைப்புத் தோன்றியது. அகமும் புறமும் தனியிலக்கணப் பகுப்புகளாகிப் பிரிந்தமையை நூற்கள் காட்டுகின்றன. இவற்றுக்கெல்லாம் புறம்பாக இணைகின்றது பாட்டியல்.

மூன்றிலக்கணம் ஐந்திலக்கணம் எனும் நிலையிலிருந்து மாறுபட்டு யாப்பிலக்கணமே முதலாவதாகத் தனியிலக்கணமாக வளர்ந்தது போலும். 'யாப்பறி புலவர்' என்ற தொல்காப்பியச் செய்யுளியல் தொடரால் அவர் காலத்திலேயே தனி யாப்பு நூலி லிருந்தமையைத் தேர்கின்றார் புலவர் சோம இளவரசு. இத்தகைய தனி யாப்பு நூற்கள் மிகப்பல. அவற்றுள் பல இன்று முழுமை யாகவும் பகுதியாகவும் அழிந்தொழிந்தன.

செய்யுளிலக்கணம் கூறும் இந்நூற்களையும் நூற்பகுதிகளையும் பொதுநிலையில் மூன்றாகப் பகுக்கலாம் — யாப்புப் பற்றியன;

பாட்டைப் பற்றியன, இரண்டும் குறித்தன என. முன்னதில் சில வகைகள் அமைகின்றன. (1) உறுப்பும் செய்யுளும் பற்றி வருவன, தொல், இ.வி,என்பனவற்றின் செய்யுளியல், வீ.சோ யாப்பதிகாரம் கலம், காரிகை போன்றன இப்பகுதியில் அடங்கும்.

(2) இலக்கணங் கூறிச் செய்யுளை விளக்காது இலக்கியச் சான்றுகள் பல காட்டிப் பா, இன வகைகளை விரித்து வருவன. மாறன் பாப்பாவினம், சிதம்பரச் செய்யுட்கோவை திருவலங் கற்றிரட்டின் இரண்டாம் கண்டமாகிய பல்சந்தப் பரிமளம் என்பன இவ்வகையின.

(3) உறுப்போ செய்யுளோ பற்றி நினையாது, சில பாவினங் களைத் தெரிந்துகொண்டு இலக்கணம் வகுத்து அவையே சான்றுமாறு அமைப்பது. விருத்தப் பாவியல் இவ்வகையைச் சார்ந்தது.

பாட்டியல் நூற்களும் தம்முள் பொருண்மையில் சில வேறுபாடுகாட்டி நிற்கின்றன. பொதுவாகப் பாட்டியல் கருத்தை இருபகுப்பில் அடக்கலாம். ஒன்று செய்யுள் முதன்மொழிப் பொருத்தம்.மற்றொன்று,இலக்கிய வகைகட்குஇலக்கணம் கூறுவது இவ்விரண்டிற்கும் ஒழிபாக, பின் இணைப்பாகப் பாடல் ஆசிரியன், பாடற்றலைவன், பாடும் முறை, அரங்கேற்றம், அவையோர், பாவருணம் முதலியன பற்றிய செய்திகள் பல அமைகின்றன. பாட்டின் இயல்பு என்ற நிலையில் இவை ஏதாவதொரு விதமாக இங்குப் பொருந்துகின்றனவே யொழிய மிகுதியாக இணைவு காட்டுகின்றன என்பதற்கில்லை.

பாட்டியல் நூற்கள், அல்லது பிற இலக்கண நூற்களின் பாட்டியற் பகுதிகள் அனைத்தும் ஒரே அமைப்பின அல்ல. முதன் மொழிப் பொருத்தமும் இலக்கிய வகைகளும் பிற ஒழிபியல் கருத்துக்களும் தந்து நிற்றல் ஒருவகை. பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், வெண்பாப் பாட்டியல் ஆகியன இத் தன்மையின.இப்பாட்டியற்கருத்துக்களோடு,செய்யுளியல்கருத்தும் இணைத்துத்தருவது மற்றொரு வகை. சிதம்பரப் பாட்டியலின் இயல்பு இது. பொருத்தம் பற்றிய கருத்துக்களை மட்டும் மனத்திற் கொண்டு,அவற்றிலும் மங்கலப் பொருத்தமொன்றையேபொருண் மையாக்கி விரிகல்வி தருவது மற்றுமொருவகை. இது வரையறுத்த பாட்டியலின் அமைப்பு. மங்கலச் சொற்களினைத் தொடரும் இத்தகு எழுத்துச் சார்பும், இலக்கிய வகைபற்றிய ஆய்வும் இணைத்துத்தரும் பிரபந்த தீபிகை மற்றுமோர் இயல்பினைக் காட்டு கின்றது.

செய்யுளியல், பாட்டியல் கருத்துக்களை இணைத்துத்தருவன தொ.வி, மு.வீ, சுவாமி ஆகியவற்றின் யாப்பதிகாரங்களும், சிதம்பரப்பாட்டியலுமாம்.

பல காலத்திற்குரியனவான இந்நூற்கள் இற்றைக்குப் பல ஆண்டுகட்கு முன்னே பதிப்பிக்கப்பட்டுப்பயிற்சியில் இருக்கின்றன. இவை தவிரத் தற்கால ஆய்வாளர் முயற்சியால், யாப்பருங்கல விருத்தி, நன்னூல் மயிலைநாதர் உரை, பன்னிரு பாட்டியல் உரை போன்றவற்றிலிருந்து திரட்டப்பட்ட பாங்குடன் காக்கை பாடினியம், அவிநயம், அமுதசாகரம் எனும் யாப்பியல்களும், இந்திர காளியம் எனும் பாட்டியலும் வெளிவந்துள்ளன. சாமிநாதம் முழுமையாக அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக வந்துள்ளது. இவையும் முழுமை கருதி இங்கே எடுத்துக்கொள்ளப் படுகின்றன.

## நூல்கள் அறிமுகம்

1. **தொல்காப்பியம்:** எழுத்து-சொல்-பொருள் என மூன்று அதிகாரங்களும், ஒவ்வோரதிகாரத்திற்கு ஒன்பது இயல்களாக, 27 இயல்களும் உடைய தொல்காப்பியத்தில் 26 - வது இயலாகச் செய்யுளியல் அமைகின்றது. பொருளைச் செய்யுள் வடிவத்தில் தந்த காரணத்தால், அவ்வடிவங்கள் எவ்வாறு இருத்தல்வேண்டும் - எவ்வாறு இருந்தன, அவற்றிற்குரிய உறுப்புக்கள் எவை என்பன பற்றி யெல்லாம் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே, செய்யுள் பற்றிய பல நூற்கள் உரைத்திருந்தன. அவற்றின் கருத்தையும் ஏற்றுக்கொண்டு, தன் கருத்துக்களையும் இணைத்துத் தொல் காப்பியச் செய்யுளியலில் தருகின்றார் காப்பியர். என்ப, என்மனார், மொழிப போன்ற பல தொடர்களின் பயிற்சி செய்யுளியலிலும் விரவிக் காணப்படுகின்றது.* வல்லோர் ஆறு (10) பாங்குற உணர்ந்தோர் (49) புலவர் ஆறு (94) மறையோர்-ஆறு (178) போன்றனவும் பயின்றன.

இன்று கிடைக்கின்ற தமிழ் நூற்களில் முதல் நூலாகக், காலப்பழமையுடன் விளங்கும் தொல்காப்பியக் காலத்திற்கு ஏறத்தாழ 5000 ஆண்டுகட்கு முன்பே தமிழில் பல செய்யுள்கள்-

---

* உரைத்தனரே—1; என்மனார்புலவர்-2,75. 113, 124, 125, 192; என்ப—4, 15, 18, 19, 35, 54, 57, 65, 70. 71 84, 87, 96.97, 101, 102, 103, 111, 130, 135, 137, 143, 153, 154, 161, 165, 170, 171, 181, 185, 200, 204; எனப்படுமே — 11, 34, 100, 121, 132, 179, 195, 201, 228 232; மொழி 1—17.33, 38, 39, 41. 60, 74, 79. 83, 92, 95, 99, 104, 116, 123, 128, 131, 157, 163, 166, 193, 205, 226, 230, 238; புலவர் அறைந்தனரே—148. எண்கள்—இளம்பூரணம், கழகம்—1956.

வகைகள் இருந்தன என்பதனை இச் செய்யுளியலிலிருந்து உய்த்து உணரலாம். இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்பதனை இங்கு நினைக்கலா ப.

10-ஆம் நூற்றுண்டிற்குப் பின் எழுந்த உரையாசிரியர்கள், அதன் உயர்வு உணர்ந்து உரை விளக்கம் தரப் புகுந்தபோது, தங்கள் எண்ணத்திற்கேற்ப நூற்பாக்களைப் பிரித்துக்கொண்டனர்- வகுத்துத் தந்தனர். இதனுல், இளம்பூரணருக்குச் செய்யுளியலில் 235 நூற்பாவும், பேராசிரியர் நச்சினுர்க்கினியருக்கு 243 நூற் பாவும் அமைந்தன. பின்பு வந்த கழகத் தொல்காப்பிய மூலப் பதிப்பில் இவ் வெண் 241 ஆக அமைக்கப்பட்டுள்ளது.

செய்யுளியலுக்குப் பேராசிரியர் உரை சிறந்தது என்று கூறுவார்கள்; இதனுல் பேராசிரியர் உரையுடனமைந்த (கழகப்) பதிப்பையே இத்தொகைக்குத் துணையாக அமைத்துக் கொண்டோம்.

2. யாப்பருங்கலம் : யாப்பிலக்கணத்தை மட்டும் கூறும் நூற்களுள், பத்தாம் நூற்றுண்டில் தோன்றிய யாப்பருங்கலம், முதல் நூலாக அமைகின்றது. அமுதசாகரர் எனவும் அமித சாகரர் எனவும் இதன் ஆசிரியர் அழைக்கப்படுகின்றுர். பாயிரத் தைத் தொடர்ந்து உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என்ற மூன்று பகுப்புக்களையும் 98 (2+96) நூற்பாக்களையும் உடையது. இதில், உறுப்பியலின் உட்பிரிவாக 6 ஒத்துக்கள் கொடுக்கப்பட் டுள்ளன.

இந்நூலின் விருத்தி உரை வாயிலாக, அவிநயம், காக்கை பாடினியம், நாலடி நாற்பது, பல்காயம், மயேச்சுரர் யாப்பு போன்ற பல யாப்பிலக்கண நூற்களின் செய்திகளும், சில நூற் பாக்களும் கிடைக்கின்றன.

3. யாப்பருங்கலக் காரிகை : பத்தாம் நூற்றுண்டில் தோன்றிய மற்றெரு யாப்பிலக்கண நூல் யாப்பருங்கலக் காரிகை. காரிகையை முன்னிறுத்திக் கூறியதாலும் கட்டளைக் கலித்துறை எனப்படும் காரிகை யாப்பில் இயன்றதாலும் இப்பெயர் பெற்றது என்பர்.

யாப்பருங் கலத்திற்குப் புறநடையாக வந்த இந்நூல், அதே யாசிரியரால் இயற்றப்பட்டது என்பர். பாயிரம் தவிர, உறுப் பியல், செய்யுளில், ஒழிபியல் என மூன்று இயல்களாகவும், 44 (3+41) நூற்பாக்களாகவும் அமைகின்றது. காரிகை முதனினைப் பும் உதாரண முதனினைப்பும் இந்நூலுக்குரிய தனித்தன்மைகள். குணசாகரரின் உரை இதற்கு உண்டு.

4. வீரசோழியம்: வடமொழிவாணர்களின் எண்ணங் களைப் புகுத்தத் தோன்றிய நூல் புத்த மித்திரரால் பதினோராம் நூற்றாண்டில் எழுதப்பட்ட வீரசோழியம். ஐந்திலக்கணமும் கூறு கின்ற முதல் தமிழ்நூல் இதுதான். எழுத்து—சொல்—பொருள்—யாப்பு என்ற அதிகாரங்களையும், அலங்காரம் என்ற அணியிலக் கணப் பகுதியையும் கொண்டு, 181 கட்டளைக் கலித்துறைப் பாக் களால் இது அமைந்துள்ளது. பெருந்தேவனார் இந்நூற்கு உரை யெழுதியுள்ளார்.

இவ் யாப்பு நிலையும், சில பாடல்களில் அமையும் மகடூஉ முன்னிலையும் இதற்கு வீரசோழியக் காரிகை என்ற பெயரமையக் காரணமாகின்றன.

இதன் யாப்பதிகாரம், யாப்புப் படலம் எனவும் பெயர் பெறும்; 36 காரிகைகள் இப்பகுதியில் உள. வடமொழி யாப்புக் கருத்துக்கள் இடைமிடைவதால் இலக்கணிகட்கிடையேகருத்தில் ஏற்பட்ட மரபு வேறுபாடு தெரிகின்றது.

5. பன்னிரு பாட்டியல்: ஐந்திலக்கணமாக வளர்ந்த தமிழிலக்கணம், யாப்போடு இணைந்து, பாட்டின் இயல்புகளைப் பற்றியும் நுணுகிப் பார்க்கத் தொடங்கியது. அதனால், செய்யுள் வகைகள் பற்றிய கல்வி தனிநிலையில் பாட்டியல் நூற்களாக மலர்ந் தது. இன்று கிடைக்கின்ற பாட்டியல்களில் காலப் பழமையும் முதன்மையும் உடையது பன்னிரு பாட்டியல். இந்நூல் முழுமை யும் ஒருவரால் செய்யப்பட்டதென்றும், ஆசிரியர் பெயர் தெரிய வில்லை என்றும் கருதுகின்றனர் ஒரு சாரார். அவ்வாறன்றி, இது பன்னிருவரால் செய்யப்பட்டதால் இப்பெயர் பெற்றது என் பாரும் உளர். 17ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதெனக் கருதப்படும் இந்நூல், பாயிரத்தோடு 232 (1+231) நூற்பாக்கள் உடையது. மேற்கோளாக இணையும் நூற்பாக்களையும் சேர்த்து 358 என எண்ணிக்கை தருவர் சிலர். கழகப் பதிப்பின்படி 137 மேற் கோள் நூற்பாக்கள் அமைகின்றன.

எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்ற இதன் பகுப்புக் களில், இனவியல் இலக்கிய வகைகள் பற்றிய விரிவாய்வால் முதன்மை பெறுகின்றது. பிறவிரண்டும் எழுத்து, சொல் பற்றிய (பன்னிரு) பொருத்த நிலைகளை ஆய்கின்றன. இதனாலும் பன்னிரு பாட்டியல் என இந்நூல் பெயர் பெற்றது என்பர்.

எழுத்துக்களை வருண அடிப்படையில் பகுக்கும் நிலை இங்குப் புதிதாகப் புகுகின்றது.

6. வெண்பாப் பாட்டியல் : குணவீர பண்டிதரால் 12-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது இது. வெண்பா யாப்பில் அமையு மிந்நூல், ஆசிரியரின் குருவின் பெயரால் வச்சணந்தி மாலையெனவும் குறிக்கப்படுகின்றது.

103 வெண்பாக்களுடைய இந்நூல், முதன்மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என முப்பகுப்புடையது. இவற்றில் முறையே பத்துப் பொருத்தங்களும், இலக்கிய வகைகளும், பாவின் வருணம் போன்ற பண்பு முதலியனவும் ஆயப்படுகின்றன.

இந்நூலில் அமையும் உரைக்கு ஆசிரியர் பெயர் தெரிய வில்லை.

7. நவநீதப் பாட்டியல் : நவநீத நடன் என்ற வைணவரால் 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்நூல் செய்யப்பட்டது என்பர். கட்டளைக் கலித் துறை யாப்பாலமைந்தமையின் இதனைக் கலித்துறைப் பாட்டியல் எனவும் அழைப்பர்.

பொருத்தவியல் அல்லது முதன்மொழியியல், செய்யுண் மொழியியல், பொது மொழியியல் என முப்பகுப்புக்களில் இதன் பொருண்மை அமைகின்றது.

இதன்கண் 108 செய்யுட்கள் அமைந்தமை உ. வே. சா. பதிப்பிலும், மிகைப் பாடல் 27 தவிர 102 அமைந்தமை எஸ். வையாபுரிப் பிள்ளையின் பதிப்பிலும் காட்டப்படுகின்றன. இதன் பழைய உரையின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பிற பாட்டியல் களில் இல்லாத சில செய்திகளை இதன் பொதுமொழியியல் தருகின்றது.

8. வரையறுத்த பாட்டியல் : ஆசிரியர் பெயரோ காலமோ தெளிவில்லா இந்நூல், ஆசிரியரின் வழிபாட்டிற்குரி யோர் பெயரால் சம்பந்தப் பாட்டியல் எனவும் குறிக்கப்படு கின்றது. இதன் காலம் 14-ஆம் நூற்றாண்டெனக் கருதுவோர் உளர்.

பிற பாட்டியல்கள் போல் அன்றி, மங்கலப் பொருத்தத் தினை மட்டுமே தன் நூலின் ஆய்வுக்கு என வரையறுப்பதால் இது இப்பெயர் பெறுகின்றது.

10 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களுடைய இந்நூல், சில மங்கலச் சொற்களைத் தேர்ந்துகொண்டு, அவற்றைத்

தொடர்ந்து வரும் தன்மையும் தகுதியும்பெற்ற எழுத்து, சொற்களைப் பற்றி விரிக்கின்றது.

9. பிரபந்த மரபியல்: 16-ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் எழுந்ததாகக் கருதப்படும் இந்நூல், பெயருக் கேற்ப, இலக்கியவகைகள் பற்றியமைந்த ஒன்ருகும். 35 நூற்பாக்களுடன் அமையும் இந்நூலே பிரபந்தங்கள் தொண்ணூற்ருறு என வெளிப்படையாக எண்ணிக்கையைக் குறிக்கும் முதல் பாட்டிலக்கணம். இந் நூலின், முதல் 21 நூற்பாக்கள் பிரபந்தப் பெயர்களைச் சுட்டி இலக்கணம் வகுக்கப் பின் வரும் 14நூற்பாக்களும், பிற பாட்டியல்கள் ஒழிபுச் செய்தியாக இணைக்கும் பாவின்வருணம், நூல் பெயர் பெறும் விதம், அரங்கேற்றம் போன்ற பல செய்திகளைத் தொகுக்கின்றன. கவிதையையும் தமிழ்ப் பெண்ணையும் இணைத்துக் கூறும் பகுதி (32,33) இந்நூலின் தனிப் பெருமை, புதுமை.

இந்நூலின் ஆசிரியர் பற்றிய செய்தி தெரியவில்லை. தற்போது இந்நூல், தமிழ் நாடு அரசு கீழைச் சுவடிகள் நூல் நிலைய வெளியீடாக வந்துள்ளது.

10. சிதம்பரப் பாட்டியல்: 16-ஆம் நூற்றுண்டிற்குரிய இந்நூல் பரஞ்சோதியாரால் இயற்றப்பட்டது. பிறபாட்டியல் நூற்களிலிருந்து மிகுதியாகமாறுபட்ட இது, யாப்பியல் செய்திகளையும் தன்னுள்இணைத்து, பாட்டியற் செய்திகளையும் தந்து அமைகின்றது.

உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொதுவியல், மரபியலென ஐந்து பகுதிகள் உடையது. இவை முறையே செய்யுளுறுப்பு பா, புறநடைக்கருத்து, பொருத்தம், இலக்கியவகை என்பன குறித்து வருகின்றன. முதல் மூன்று பகுதிகட்குக் குறிப்புரையொன்றுள்ளது. உரையாளர் பெயர் தெரியவில்லை.

பாட்டியல் எனப்பெயர் பெறினும், 47 எண்சீர் விருத்தங்களுடைய இந்நூல், செய்யுளிலக்கணத்தை முழுமையாகத்தருகின்றது. இந்நிலை இதன் தனிச்சிறப்பு.

11. (மாறன்) பாப்பாவினம்: பாக்களையும் அதன் (வகைகளையும்) இனங்களையும் இலக்கணம்கூறியன்றி இலக்கியம் இயற்றி விளக்கிய தால் இந்நூல் இப்பெயர் (பா பாவினம்) பெற்றது என்பர். 140 செய்யுட்கள் இதன்கண் உள.

நாற்பா, நாற்பாவினங்கள் மட்டுமன்றி மருட்பாவும் பரிபாடலும்கூட இதன்கண் அமைகின்றன. சங்கப் பரிபாடலுக்குப்பின் அவ்வியாப்பில் கிடைக்கும் செய்யுட்கள் இதன்கண் உள்ளனவே.

இந்நூலின் ஆசிரியர் பற்றிய கருத்துவேறுபாடுகள் உள். பாடல்களைத் தொடர்ந்து அமையும் குறுகிய விளக்கம் பாடலின் யாப்பு, தொடை முதலியவற்றினைத் தெளிவாக்குகின்றன. இவை நூலாசிரியர் படைத்தனவா என்பது தெளிவில்லை. புலவர் சோம இளவரசு அவர்கள் நூலாசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவி ராயர் எனவும் குறிப்பெழுதியவர் பேரை காரிரத்னக் கவிராயர் எனவும் குறிக்கின்றார். இந்நூலின் காலம் 16-ஆம் நூற்றாண்டு.

*12.* சிதம்பரச்செய்யுட்கோவை: வைணவ மாறன் பாப்பா வினத்தை ஒத்து அமைகின்றது குமரகுருபர சுவாமிகளின் சிதம் பரச் செய்யுட்கோவை. பாடல்கள் சிவபிரானைப் புகழ்ந்து அமை கின்றன. இந்நூல் நாற்பா, இனங்களுடன் மருட்பாவையும் 84 செய்யுட்களில் தருகின்றது செய்யுட்களின் கீழ்க்குறிப்பு நூலாசிரி யரே தந்தவை என்பர்.

இதன் காலம் 17—ஆம் நூற்றாண்டு.

13. இலக்கண விளக்கம்: வைத்தியநாத தேசிகரால் 17-ஆம் நூற்றாண்டு இயற்றப்பட்டது இவ் ஐந்திலக்கண நூல்.

காப்பியம் போன்றே இந்நூலும் மூன்று பகுதிகளை உடையது- எழுத்து, சொல், பொருள் என. ஒவ்வொரு பகுதியும் ஐந்து இயல் களாலானவை, பொருளதிகாரத்தின் செய்யுளியல், பாட்டியல் என்பன இத்தொகையில் இணைக்கப்படுகின்றன. இவற்றில் முறையே 51, 181 நூற்பாக்கள் உள.

இந்நூலிற்கு விரிந்த உரை அமைகின்றது. இதனை ஆசிரியரே எழுதியது என்பர். தொல்காப்பியம் செய்யுளியலில் கூறிய திணை கைகோள் முதலிய பன்னிருஉறுப்புக்களை இது அகத்திணை இயலில் இணைக்கின்றது.

*14.* தொன்னூல் விளக்கம்; இத்தாலி நாட்டைச் சேர்ந்த பெஸ்கி எனும் வீரமாமுனிவரால் 17—ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது, இவ் ஐந்திலக்கணநூல். இதன் யாப்பதிகாரம் செய்யுள்,பாட்டியல் செய்திகளைத் தருகின்றது. செய்யுளுறுப்பு, செய்யுளியல், செய்யுண் மரபியல் எனஇதன்கண் மூன்று ஓத் துக்கள் உள்ளன. நூறுநூற்பாக்கள் யாப்புச் செய்திகளைத் தரு கின்றன. இதன் உரையாளரும் ஆசிரியரேபோலும்.

15. முத்துவீரியம்: இவ் ஐந்திலக்கண நூல் 19—ஆம் நூற் றாண்டில் முத்துவீர உபாத்தியாயரால் இயற்றப்பெற்றது. இதன் நான்காம் பகுதியான யாப்பதிகாரம் உறுப்பியல், செய்யு

ளியல் ஒழிபியல் எனமூன்று பகுதியாகச் செய்யுள் பாட்டியல் செய்திகளைத் தருகின்றது. 266 நூற்பாக்களுடன் விரிவாக இவ் அதிகாரம் அமைகின்றது. நூலின் யாப்பதிகாரமே முதலில் ஆசிய ரால் இயற்றப்பட்டது என்பர்.

நூலுக்குத் திருப்பாற்கடல் நாதன் கவிராயரின் உரை உள்ளது.

*16. பிரபந்த தீபிகை:* பிரபந்த இலக்கணம் கூறும் நோக்கத் துடன் 19-ஆம் நூற்றாண்டில் பாப்புவையர் எனப்படும்முத்து வேங்கட சுப்பையரால்இயற்றப் பெற்றது பிரபந்த தீபிகை. ஆசிரிய விருத்தத்தாலான இந்நூலின் முதல் 26 செய்யுட்களே செந்தமிழ்ப் பத்திரிகையில்வெளிவந்துள்ளன. மங்கலப் பொருத்த மும் அதனுடன் தொடர்புடைய எழுத்து நிலையையும் வரை யறுத்த பாட்டியல் போன்றேஇந்நூலும் நினைக்கின்றது. பிற பொருத்தங்கள் கூறப்பட்டில. பெரும்பான்மைப் பகுதி பிரபந்த இலக்கிய விளக்கமாக அமைகின்றது.

*17. சுவாமி நாதம்:* சாமிகவிராசரால் 19-ஆம் நூற்றாண்டில் எண்சீர் விருத்தயாப்பில் உருவாகிய ஐந்திலக்கண நூல் சுவாமி நாதம் (சாமிநாதம் எனவும் குறிக்கப்படுகின்றது). இதன் நான் காவதாகிய யாப்பதிகாரம், உறுப்புமரபு (4) பாவின மரபு (6) பிரபந்தமரபு (17) எனும்மூன்று பகுதிகளில் 27 விருத்தங்களிலாகச் செய்யுள், பாட்டியல் செய்திகளைத் தருகின்றது.

முழுவடிவில் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக வந்துள்ள இந்நூற்குப் பதிப்பாசிரியர் டாக்டர்செ வை. சண்முகம் உரை எழுதியுள்ளார்.

*18. விருத்தப்பாவியல் :* பிற யாப்பிலக்கண நூற்களைப் போலன்றி, யாப்பின் ஒருதனிக் கூற்றிற்கு இலக்கணம் வகுக்கின் றது டி. வீரபத்திர முதலியாரின் இந்நூல்.விருத்த யாப்பு வளர்ந்த காலத்தில், ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்துறை ஆகிய அளவொத்த அடிகள் நான்குடைய செய்யுட்கள் தமக்கெனச். சிலதனியமைப்புக்களுடன் வளர்ந்தன. வடமொழி யில் வளர்ந்த விருத்த இயல்பை உணர்ந்து தமிழ், மொழியில் வழங்கிய விருத்தச் செய்யுட்களின் தன்மைகளைக்கண்டு, பயின்றுவந்த சில வடிவமைப்புக்களைப் பிரித்துத் தருகின்றார், ஆசிரியர். விதிகளே சான்றுகளாகவும் அமையும் படி இந்நூல் யாக் கப்பட்டுள்ளது. தமிழ் யாப்பைப் பொறுத்தவரை இது புதுமுயற்சி யாம். 12 பகுதிகளில் 83 செய்யுட்களால் இந்நூல் அமைகின்றது.

19 ஆம் நூற்றாண்டு எழுந்த இந்நூலுக்குப் பதிப்பாசிரியர் திரு. இ. என். தணிகாசலமுதலியாரின்உரை உறுதுணையாக அமைகின்றது.

**19. திருவலங்கற்றிரட்டு-இரண்டாம்கண்டம்:பல்சந்தப்பரிமளம்**

பாம்பன் சுவாமிகளின் படைப்பான திருவலங்கற்றிரட்டு இரு பகுதிகளாலாயது. இதன் இரண்டாம் கண்டமாகியபல்சந்தப் பரிமளம், பாப்பாவினம், சிதம்பரச் செய்யுட்கோவை ஆகிய நூல்களைப் போன்று யாப்பு விதிகளை இலக்கிய நிலையில் உணர்த்தும் பகுதியாம். நான்கு இயல்களில் முருகனைப் பாடும்532செய்யுட்களாலாகிய இப்பகுதி நாற்பாவிற்கும் அவற்றினினத்திற்கும் சான்றாக அமைகின்றது. வாயுறை வாழ்த்து மருட்பாவுடன் முடியும் இப்பல் சந்தப் பரிமளத்தில் பல சித்திரக்கவிச் செய்யுட்களும் அமைந்துள்ளமை இதன் தனிச்சிறப்பாகும்.

காசியாத்திரை இந்நூலின் பெருமையைக் கீழ்க்காணுமாறு உணர்த்துகின்றது.

> யாப்பின் இலக்கணமும் யாத்த இலக்கியமும்
> யாப்பொலி பல்சித்திரமும் நச்சியல்போய்-மூப்போது
> அலங்கல் திரட்டின் இரண்டாங்கண்டம் பார்உன்
> விலங்கைத் தறித்துவிடும்.

இந்நூற்களைத்தவிர மறைந்துபோன பல யாப்புக்களை, உரைகளினின்று தொகுத்து வகுத்து வெளியிட்டுள்ளனர் தமிழ்அறிஞர். அவை முழுமையுடையன எனக்கூற வியலாவிடினும் தொடர்புடைய செய்தியன வாகையால் இத் தொகுப்பின்கண் எடுத்தாளப் படுகின்றன.

**20. காக்கை பாடினியம்:** தொல்காப்பியரின் ஒருசாலை மாணாக்கர் எனக் கருதப்படும் பெண்பாற் புலவரால் இயற்றப்பெற்றது இவ்யாப்பிலக்கண நூல். இந்நூலின் சிறப்பினை,

> சொல்லிற் சுருக்கிப் பொருள் பெருகித் தொல்ஞானம்
> எல்லாம் விளக்கி இருளகற்றும்—நல்யாப்பாம்
> காக்கை பாடினியம் எனும்நூலைக் கற்றவர்தாம்
> யாக்கையாற் பெற்றார் பயன்

எனும் பழையவெண்பா உணர்த்துகின்றது.

கழகம் வழி வெளிவந்துள்ள இந்நூல் உறுப்பியல், செய்யுளியல் பொதுவியல் எனும் பகுப்புடன், 89 நூற்பாக்களுடன் அமைகின்றது. இதற்குத் திரு. இளங்குமரன் உரையெழுதியுள்ளார்.

21, அவிநயம்: ஐந்து அல்லது ஆறும் நூற்றுண்டைச் சேர்ந்த தாகக் கருதப்படுகின்றது; அவிநயனர் என்ற சைனப் புலவர் படைத்த அவிநயம். திரு. க. ப அறவாணன், ஆய்வு முன்னுரை, விரிவுரைகளுடன் பதிப்பித்துள்ள இந்நூலைப் பார்க்கும் போது, இது ஐந்திலக்கண நூல் என்பது தெரிகின்றது. இந்நூலுக்கு இராச பவித்திரப் பல்லவத் தரையன் ஓர் உரையியற்றியுள்ளார்.

22. அமுதசாகரம்: இவ்வாறு ஒரு நூல் இருந்ததாகக் கருதிக் கலவிருத்தியுரை முதலியவற்றிலிருந்து தொகுத்துப் பதிப்பித்துள் ளார் திரு. க. ப. அறவாணன். கலம், காரிகையின் ஆசிரியராகிய அமுதசாகரரே இதன் ஆசிரியரானமையால் நூலுக்கு இப்பெயர் பதிப்பாசிரியரால் அளிக்கப்பட்டுள்ளது. பதிப்பாசிரியரின் ஆய்வு முன்னுரையும், உரையும் நூலுக்கு அணிசெய்கின்றன.

23. இந்திரகாளியம்: அவிநயம், அமுதசாகரம் போன்றே இந் நூலும் திரு. க. ப அறவாணன் அவர்களால் உரைகளிலிருந்து தொகுத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ப பா, வெ. பா, ந. பா ஆகியவற்றின் உரைப்பகுதியில் இதன் நூற்பாக்கள் கையாளப் படுவதால் இதனையும் ஒரு பாட்டியல் நூல் என உணரலாம்.

மறைந்துபோன தமிழ்நூல்கள், இலக்கண வரலாறு ஆகிய நூற்களை நோக்கும்போது, மேற்கூறிய இவையொழிய இன்னும் மிகப்பல நூற்கள் யாப்பு பாட்டியல்பற்றி வழங்கிவந்தமை தெரி கின்றது. உரைகள் வாயிலாக அவற்றின் சிற்சில நூற்பாக்கள் கிடைக்கின்றன. யாப்பிலக்கணம் செழித்து வளர்ந்த ஒரு இடைக் காலத்தையும் தளர்ந்து வீழ்ந்த ஒரு பிற்காலத்தையும் இவை காட்டுகின்றன என்ற எண்ணம் எழுகின்றது.

இலக்கிய—இலக்கண ஆய்வாளர், வரலாற்றுளர் குறிக்காத 'இலக்கணதீபம்' என்ற நூல்பற்றிய செய்தியை, சென்னை அரசு கீழைச் சுவடிகள் நூல் அட்டவணை தருகின்றது. இது ஆசிரிய விருத்தத்தாலான ஐந்திலக்கண நூல் எனத் தெரிகின்றது. இந் நூலின் ஆசிரியரோ காலமோ தெரியவில்லை, இதன் ஒன்பதாவது விருத்தம் யாப்பிலக்கணச் செய்தியை ஓரளவு தொல்காப்பியத் தினை ஒட்டித் தருகின்றது.

உறுப்பெண்ணிக்கை ஒத்து அமையினும் சில உறுப்புக்கள் விடப்பட்டுள்ளமை தெரிகின்றது. அவ்விருத்தம் இங்குத் தரப்படு கின்றது.

செய்யுள்விதி மாத்திரை எழுத்தசை கலந்தசீர்
சேருமடியாப்பு நிறையாய்ச்

செப்பவரு தூக்கினொடு தொடைநோக்கு வேறுபா(ர்)த்
தேரளவு திணைசொல் கைகோள்
துய்ய கூற்றோடு கேட்போர் களன் காலமேல்
தேரான்று பயன் மெய்ப்பாடலாற்
சொற்ற வெச்சம் பொருள்துறை மாட்டு வண்ணமிவை
தொகையிருபத்தாறும் இதன்மேல்
மையறுசொல் அம்மை யழகுறு தொன்மை தோல்பின்பு
வரு விருந்து இயைபு புலனோ
வைத்த இழை நான்கிரண்டு என்னுமவை விரிவெலாம்
வரன்முறைமை தவறுமலே
ஐயமற்று இனிதுள மகிழ்ந்துவித்தார் யாப்பு
அதிகார இலக்கண மெலாம்
ஆய்ந்து கூறுவது இலக்கணக் கவிதை அல்லதது
அவலக்கணக் கவிதையே

மேற்கூறிய இருபத்துமூன்று நூற்களே தொகைக்கு அடிப்படையான முதல்நூல்கள். தொகையின்கண் நூற்பாக்கள் கால வரையறைப்படி தொகுக்கப்பட்டு வரலாற்றடிப்படை மாற்றங்களை உணரத் துணையாகி அமைகின்றன.

அறுவகை இலக்கணம், ஏழாமிலக்கணம் ஆகிய இரு நூற்களை இயற்றிய தண்டபாணி சுவாமிகள் அவற்றின்கண் யாப்புப் பற்றிய செய்திகளைத் தருகின்றார். இவ்விரு நூற்களின் பாயிரமும் யாப்புப் பகுதியும் இத்தொகையின் இறுதியில் பிற்சேர்க்கையாகத் தரப்படுகின்றன. இவை தவிர வண்ணத்தியல்பு, பொருத்த விளக்கம் யாப்பொளி எனும் நூற்களும் பிற்சேர்க்கையின் கண் தொகுக்கப்பட்டுள்ளன.*

---

*நன்றி. திரு. முத்துக்குமாரசுவாமி, நூலகர், மறைமலையடிகள் நூலகம்

| பன்னிரு பாட்டியல் | வெண்பாப் பாட்டியல் (வச்சணந்தி மாலை) | வரையறுத்த பாட்டியல் (சம்பந்தப் பாட்டியல்) | நவநீதப் பாட்டியல் | பிரபந்த மரபியல் | சிதம்பரப் பாட்டியல் | பிரபந்த தீபிகை |
|---|---|---|---|---|---|---|
| — | குணவீர பண்டிதர் | — | நவநீத நாடனுர் | — | பரஞ்சோதியார் | முத்துவேங்கட சுப்பையா |
| கி.பி. 12-ஆம் நூற்றுண்டிற்கு முன் | கி.பி. 12-ஆம் நூற்றுண்டு | — | கி.பி. 13-ஆம் நூற்றுண்டு | கி.பி. 16-ஆம் நூற்றுண்டு | கி பி. 16-ஆம் நூற்றுண்டு | கி.பி. 19-ஆம் நூற்றுண்டு |
| நூற்பா | வெண்பா | கட்டளைக் கலித்துறை | கட்டளைக் கலித்துறை | நூற்பா | எண்சீர் ஆசிரிய விருத்தம் | ஆசிரிய விருத்தம் |
| 1 + 231 | 1 + 100 + 1 | 10 | 108 | 35 | 5 + 47 | 26 |
| பாயிரம் 1 | பாயிரம் 1 | — | பாயிரம் 3 | — | காப்பு 1<br>பாயிரம் 4 | — |
| எழுத்தியல் 51<br>சொல்லியல் 32<br>இனவியல் 148 | 1. முதன் மொழியில் 22<br>2. செய்யுளியல் 48<br>3. பொதுவியல் 30<br>அவையடக்கம் 1 | — | 1. பொருத்தவியல் 25<br>2. செய்யுண் மொழியியல் 43<br>3. பொது மொழியியல் 37 | | 1. உறுப்பியல் 6<br>2. செய்யுளியல் 5<br>3. ஒழிபியல் 5<br>4. பொருத்தவியல் 11<br>5. மரபியல் 20 | — |

| தொல்காப்பியம் | யாப்பருங்கலம் | யாப்பருங்கலக் காரிகை | வீரசோழியம் | இலக்கண விளக்கம் |
|---|---|---|---|---|
| தொல்காப்பியர் | அமித சாகரனார் | அமித சாகரனார் | புத்த மித்திரர் | வைத்திய நாத தேசிகர் |
| கி மு 1-ஆம் நூற்றாண்டு | கி பி 10-ஆம் நூற்றாண்டு | கி பி 10-ஆம் நூற்றாண்டு | கி பி 11-ஆம் நூற்றாண்டு | கி பி 17-ஆம் நூற்றாண்டு |
| நூற்பா யாப்பு | நூற்பா | கட்டளைக் கலித்துறை | கட்டளைக் கலித்துறை | நூற்பா |
| செய்யுளியல் | — | — | யாப்பதிகாரம் | செய்யுளியல் பாட்டியல் |
| இளம்பூரணர் பேராசிரியர் நச்சினார்க்கினியர் | — | குணசாகரர் | பெருந்தேவனார் | — |
| 243 (235, 241) | 2+96 | 3+41 (57) | 36 | 51+181 |
| | பாயிரம் 2 | பாயிரம் 3 | | |
| | I உறுப்பியல் 53 | I உறுப்பியல் 17 | — | — |
| | 1 எழுத்தோத்து 4 | | | |
| | 2 அசையோத்து 5 | | | |
| | 3 சீர்ஓத்து 7 | | | |
| | 4 தளைஓத்து 6 | | | |
| | 5 அடிஓத்து 10 | | | |
| | 6 தொடைஓத்து 21 | | | |
| | II செய்யுளியல் 40 | II செய்யுளியல் 15 | — | — |
| | III ஒழிபியல் 3 | III ஒழிபியல் 9 | — | — |

| தொன்னூல் விளக்கம் | முத்துவீரியம் | சுவாமிநாதம் | விருத்தப் பாவியல் |
|---|---|---|---|
| வீரமா முனிவர் | முத்துவீரிய உபாத்தியாயர் | சாமி கவிராயர் | டி.வீரபத்திர முதலியார் |
| கி பி 18-ஆம் நூற்றாண்டு | கி பி 19-ஆம் நூற்றாண்டு | கி பி 19-ஆம் நூற்றாண்டு | கி பி 19-ஆம் நூற்றாண்டு |
| நூற்பா | நூற்பா | எண்சீர் ஆசிரிய விருத்தம் | பல யாப்பு — |
| யாப்பதிகாரம் | யாப்பதிகாரம் | யாப்பதிகாரம் | |
| — | — | டாக்டர் செ வை சண்முகம் | இ என் தணிகாசலம் முதலியார் அவையடக்கம் 7 |
| 1+99 | 1+266 | 27 | 83 |
| | | | 1 அறுசீர்க் கழிநெடில் விருத்தம் 7 |
| | | | 2 கலித்துறை 2 |
| பாயிரம் 1 | பாயிரம் 1 | — | 3 எழுச்சீர்க்கழி நெடில்விருத்தம் 1 |
| I செய்யுளுறுப்பு 17 | I உறுப்பியல் 38 | I உறுப்புமரபு 4 | 4 எண்சீர் ,, 2 |
| | | | 5 கலிவிருத்தம் 3 |
| | | | 6 சந்தவுறுப்பியல் 4 |
| | | | 7 சந்தவிருத்தம் 25 |
| | | | 8 சந்தக்கலித்துறை 12 |
| | | | 9 அறுசீர்ச்சந்த விருத்தம் 9 |
| II செய்யுளியல் 32 | II செய்யுளியல் 61 | II பாவினமரபு 6 | 10 எழுசீர்ச்சந்த விருத்தம் 4 |
| | III ஒழிபியல் 167 | | 11 எண்சீர்ச்சந்த விருத்தம் 1 |
| III செய்யுண் மரபியல் 50 | — | III பிரபந்த மரபு 17 | 12 ஒழிபியல் 6 |

| பாப் பாவினம் (மாறன் பாப் பாவினம்) | | சிதம்பரச் செய்யுட்கோவை | | திருவலங்கற்றிரட்டு— இரண்டாம் கண்டம் பல்சந்தப் பரிமளம் | |
|---|---|---|---|---|---|
| திருக்குருகைப் பெருமாள் கவிராயர்<br>பேரைக்காரிரத்னக் கவிராயர் | | குமரகுருபரர் | | பாம்பன் குமர குருதாச சுவாமிகள் | |
| கி.பி. 16-ஆம் நூற்றுண்டு | | கி.பி. 17-ஆம் நூற்றுண்டு | | கி.பி. 19-ஆம் நூற்றுண்டு | |
| 140 | | 84 | | 532 | |
| வெண்பா விகற்பம் | 28 | 1 வெண்பா | 28 | 1 வெள்ளியல் | 86 |
| | | | | வெண்பாவினம் | 87—1 2 |
| வெண்பா இனம் | 13 | 2 வெண்பா இனம் | 12 | 2 ஆசிரியவியல் | 12 |
| | | | | ஆசிரியப் பாவினம் | 13—162 |
| ஆசிரியப்பா | 34 | 3 ஆசிரியப்பா | 5 | 3 கலியியல் | 38 |
| | | | | கலிப்பாவினம் | 39 163 |
| ஆசிரியப்பா இனம் | 16 | 4 ஆசிரியப்பா இனம் | 11 | 4 வஞ்சியியல் | 11 |
| | | 5 கலிப்பா | 3 | | |
| கலிப்பா | 20 | 6 வெண்கலி | 3 | வஞ்சிப் | |
| கலிப்பா இனம் | 12 | 7 கொச்சகக்கலி | 6 | பாவினம் | 12—84 |
| வஞ்சிப்பா | 3 | 8 கலியினம் | 7 | | |
| வஞ்சியினம் | 5 | 9 வஞ்சிப்பா | 2 | வாயுறை | |
| மருட்பா | 4 | 10 வஞ்சியினம் | 3 | வாழ்த்து | |
| பரிபாடல் | 5 | 11 மருட்பா | 3 | மருட்பா | 1 |

| அறுவகை இலக்கணம் | ஏழாம் இலக்கணம் | வண்ணத் தியல்பு | யாப்பொளி | பொருத்த விளக்கம் |
|---|---|---|---|---|
| தண்டபாணி சுவாமி | தண்டபாணி சுவாமி | தண்டபாணி சுவாமி | ஆர்.சீநிவாச ராகவாசாரிய | குலாம் காதிறு நாவலர் |
| 19-ஆம் நூற்றாண்டு | 19-ஆம் நூற்றாண்டு | 19-ஆம் நூற்றாண்டு | 1957 | 1830 |
| நூற்பா | நூற்பா | நூற்பா | நூற்பா | நூற்பா |
| யாப்பிலக்கணம் | யாப்பியல்பு | — | — | — |
| — | — | — | ஆசிரியரின் உரை | ஆ.கா. பிச்சை யிபுறுகீம் |
| 134 | 16 | 10+100+1 | 185 | 2+91 |
| இயலிசைத் தமிழியல்பு 49<br>நாடகத் தமிழியல்பு 9<br>வண்ண வியல்பு 28<br>மோனை யியல்பு 12<br>எதுகை யியல்பு 8<br>நாற்கவி யியல்பு 7<br>பனுவ வியல்பு 21 | | பாயிரம் 10<br>நூல் 1000 | கடவுள் வாழ்த்து 1<br>1 உறுப்பியல் 59<br>2 செய்யுளியல் 106<br>3 ஒழிபியல் 19 | பாயிரம் 2<br>நூல் 91 |

## யாப்பிலக்கண வரலாற்றில்...

செய்யுளின் அகப்புற வடிவ அமைப்புக்களைப் பற்றிய செய்திகள், விதிகள், வரையறைகள், இலக்கிய வகை பற்றிய கொள்கைகள் என்பன இலக்கணப் பகுதியாக அமைகின்றன. செய்யுள், யாப்பு, பா, பாட்டு, பிரபந்தம் போன்ற பெயருடைய நூல் அல்லது நூற்பகுதி இம்மரபுப் பொருண்மையைக் கையாளுகின்றது.

இலக்கணங்கள், இலக்கியங்களை அடிப்படையாக்கி எழுந்தவை ஆனமையால், காலந்தோறுமுள்ள இலக்கிய மாற்றம் இலக்கணத்திலும் பிரதிபலிக்க வேண்டும் என்பது எதிர்பார்க்கப்படுகிறது. வரலாற்று நிலையில் செய்யுள் இலக்கணங்களைப் பார்க்கும்போது பல இடங்களிலும் மாற்றங்கள், வேறுபாடுகள் தென்படுகின்றன. பழையன கழிதலும் புதியன புகுதலும் உண்டு. இந்நிலைகட்கு அவ்வக் கால இலக்கியங்களும் (Contemporary literature) அவை கைக்கொண்ட நெறிகளும் பிறமொழி மரபுத் தாக்கங்களும், சூழல் செல்வாக்கும் இன்ன பிறவும் காரணங்களாகலாம்.

காலந்தோறும் அமைந்த இலக்கிய வளர்ச்சியில், யாப்புக் கண்ணோட்டத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் அனைத்தையும் செய்யுள் இலக்கணங்கள் முழுமையாகத் தந்தன எனக் கூறுவதற்கில்லை. ஓரளவு அறிந்து கொள்ளத் துணை புரிகின்றன என்பது பின்வரும் பகுதிகளால் விளங்கும்.

*செய்யுள் இலக்கண நூற்கள்/பகுதிகள்;* காக்கை பாடினியம், யாப்பருங்கலக் காரிகை, அமுதசாகரம், விருத்தப் பாவியல் போன்ற இலக்கண நூற்களும், பாப்பாவினம், சிதம்பரச்செய்யுட் கோவை, திருவலங்கற்றிரட்டின் பல்சந்தப் பரிமளம் போன்ற இலக்கியச் சான்று நூற்களும் தொல்காப்பியம், இலக்கண விளக்கம் ஆகியவற்றின் செய்யுளியல்களும், அவிநயம், வீரசோழியம், தொன்னூல்விளக்கம், சுவாமிநாதம், முத்துவீரியம் என்பனவற்றின் யாப்பதிகாரங்களும் சிதம்பரப் பாட்டியலின் முதன் மூன்றியலும் ஆகிய நூற்பகுதிகளும் இப் பொருண்மையைக் கையாளுகின்றன.

**உட்பகுப்புக்கள்/இயல்கள்:** செய்யுளிலக்கணப் பொருண்மை, பகுப்புக்கள் இன்றியே காப்பியம் வீ. சோ, இ. வி, அவிநயம் (தொகுப்பு நூலானமையாற்போலும்) ஆகியவற்றில் தரப்பட்டன.

(1) உறுப்பியல்—செய்யுளியல்—ஒழிபியல் என்ற பகுப்பு நிலை, கலம்-காரிகை-மு. வீ-சி. பா என்பனவற்றில் உண்டு.

(2) உறுப்பியல்-செய்யுளியல்-பொதுவியல் என்பது காக்கைப் பாடினியம்.

(3) உறுப்பியல்-பாவியல்-ஒழிபியல் என்பது அமுதசாகரம்.

(4) செய்யுளுறுப்பு-செய்யுளியல்-செய்யுண்மரபியல் எனத் தொ. வி அமைக்கின்றது.

(5) உறுப்புமரபு-பாவின மரபு-பிரபந்த மரபு எனக் கூறுவது சுவாமிநாதம்.

(6) விருத்தப்பாவியல், 12 பகுப்புத் தருகின்றது.

(7) இலக்கணச் சான்றாக எழுந்த இலக்கியங்கள், பாக்கட்கும் இனங்கட்கும் தனித்தனியே பகுப்புக்கள் வகுத்தன. மாறன் பாப்பாவினம் பரிபாடலையும் கூறியது. திருவலங்கற்றிரட்டு மருட்பாவையும் விட்டது.

யாப்பு: தொல், காக்கை பாடினியம், அவிநயம், கலம், இ.வி, தொ, வி, மு. வீ—இவை நூற்பா யாப்பின.

காரிகை, வீ. சோ என்பன கட்டளைக் கலித்துறையில் வருகின்றன. மகடூஉ முன்னிலை உண்டு.

அமுதசாகரம், வெண்பா (பெரும்பான்மை)

சி. பா, சுவாமிநாதம் என்பன எண்சீர் ஆசிரிய விருத்த யாப்பின.

விருத்தப்பா வியலும், பிற மூன்று யாப்பு இலக்கியங்களும், இலக்கியமாகவும் அமைந்ததால், பல்வகை யாப்பு விரவுநிலையில் பொருந்துகின்றன.

நூற்பா யாப்புத் தவிர பிறவனைத்திலும் மிக்கும் குறைந்தும் மகடூஉ முன்னிலை உண்டு.

பாயிரம் முதலியன: தனிநூற்களானமையின், கலம் (2) காரிகை (3) என்பனவற்றில் பாயிரப்பகுதியுண்டு விருத்தப்பாவியலில் அவையடக்கமும் (7) சிதம்பரப் பாட்டியலில் காப்பும் (1) பாயிரமும் (4) கடவுள் வாழ்த்தும்(1)வருகின்றன. தொ. வி, மு.வீ என்பன யாப்பதிகார ஆரம்பத்தும் ஒவ்வொரு கடவுள் வாழ்த்துச் செய்யுள் தந்தன. பிற நூற்கள், நூலாரம்பப் பாயிரம் தருவதுடன் அமைகின்றன. அமுதசாகரம், அவிநயம், காக்கை பாடினி

யம் போன்ற தொகுப்பு நூற்கள் அத்தொகுப்புத் தன்மையால் போலும் பாயிரத்துடன் வந்தில.

செய்யுள்—பொது: செய்யுள் என்றால் என்ன என்ற கேள்விக்கு விடை அமுதசாகரம், தொ. வி ஆகியவற்றில்தான் அமைந்தன. முன்னது உவமை—உருவக நிலையில் இப்பொருண்மையை உணர்த்த, பின்னது, நன்னூற் கருத்தையே அடியொற்றி வந்தது.

செய்யுளியல்: செய்யுளிலக்கணம் பற்றிய அடிப்படைக் கோட்பாட்டில், காப்பியமும் பிறவும் பெரிதும் வேறுபடுகின்றன. வடிவமும், பொருண்மையும், வெளியீடும் ஒத்த முதன்மையுடன் காப்பியச் செய்யுளியலில் விரிக்கப்படுகின்றன. வடிவ முதன்மையே பிற யாப்பிலக்கணங்களில் அமைகின்றது.அவற்றுள் ஒழிபியல் சூத்திரங்கள் சில, பொருண்மை, வெளியீடு பற்றிய சிந்தனையை விதிகளாகச் சுட்டுகின்றன.

செய்யுள் உறுப்புக்கள்: செய்யுள் உறுப்பு - யாப்புக் கூறுகள் - எனும் நிலையில், தொல், கலம், காரிகை, இ.வி, தொ.வி, சுவாமிநாதம், சி.பா என்பன முதற்கண் தொகுத்துத் தந்தன. அ.சா, அவி, கா. பா, வீ.சோ, மு.வீ - தொகுத்துத் தந்தில.

செய்யுள் உறுப்பு 34 எனக் காப்பியமும், ஏழு எனக் கலமும், எட்டு எனக் காரிகை, சுவாமிநாதம், சி.பா என்பனவும், 6 எனக் கா.பா, அ.சா, இ.வி, தொ.வி என்பனவும் தர, நான்கு என வீ.சோ ஐந்து என மு.வீ ஆகியன நினைக்கின்றன.

அ.சா எழுத்தால் அசை ஆகும், அசையால் சீர் - என்ற முறையை எடுத்துக் கூறுகின்றது. இ.வி, உறுப்பின் பெயர்க் காரணத்தைக் குறிக்கின்றது. சுவாமிநாதம் உறுப்பினை வகை எண்களுடன் - எழுத்து 12, அசை-2, சீர்-30 எனத் தருகின்றது.

மாத்திரை: காப்பியம் மட்டும் உறுப்புத் தகுதி கொடுக்கின்றது.

எழுத்து: காப்பியம், இ.வி என்பன 'மேற்கிளந்தனவே' எனக் கூறி அமைந்து விடுகின்றன. மு.வீ, வீ.சோ - எழுத்தை உறுப்பாகக் கொண்டில. தொ.வி. கொண்டபின்னும் அதுபற்றி ஒன்றுமே கூறவில்லை. எழுத்துக்களின் எண்ணிக்கை நூலுக்குநூல் மாறுபடுகின்றது. கலம் 15; காக்கை பாடினியம், காரிகை-13; சி.பா-14; அவி-11; சுவாமி - (முதலிரண்டு சார்பு 10 என) 12. அ.சா கூறப்பட்ட எழுத்துக்களைத் தனிக் கோணத்தில் ஆய்கின்றது.

அசை: காப்பியம், நேர்நிரை நேர்பு நிரைபு என 4 அசை தருகின்றது. முன்னிரண்டு இயலசை எனவும் பின்னிரண்டு உரி யசை எனவும் பெயர் பெறுகின்றன. பிற இலக்கணங்கள் நேர் நிரையென இரண்டு வகையே தருகின்றன. தனியசை, இணை யசை என்ற பெயரில் இவ் இரண்டைக் கா.பா குறிக்கின்றது.

நேரசை 4, நிரையசை 4 எனவே அசை 8 என்ற கருத்து கலம், இ.வி, மு.வீ, சுவாமி போன்றவற்றில் அமைகின்றது.

காரிகையில் அசைக்குச் சான்றும் தரப்படுகின்றது.

அவி அலகுப் பகுப்புக் கூறியது.

சீர்: ஈரசை மூவசை இணைவுச் சீரையே காப்பியம் குறிக் கின்றது. அசைச்சீரையும் ஏற்கின்றது. பிற இலக்கணங்களில் (வீ.சோ ஒழிய) நாலசை வரை சீர் உண்டு. இயற்சீர் உரிச்சீர் எனும் பகுப்பு ஈரசைச் சீரிலும், வெண்சீர், வஞ்சிச்சீர் எனும் பகுப்பு மூவசையிலும் பொருந்தியது காப்பியத்தில். விரிநிலையில் காப்பியத்தில் சீர் 84 பிறவற்றில் 30. அ.சா நாற்சீரின் தேவை யின்மையைச் சுட்டியது. காரிகை, வீ.சோ சீருக்கு வாய்பாடு தந்தன. அ.சா, தொல் உரைக்கேற்ப வாய்பாடு தந்தது. கலம், இ.வி போன்ற பலவற்றிலும் இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் என்ற பெயர் நிலை உண்டு. வீ.சோ முற்சீர், இடைச்சீர், பிற்சீர் எனப் பெயர் தந்தது. அங்கு நாலசைச் சீர் இல்லை. சீருக்கு எழுத்தெண் ணிக்கை வரையறை காப்பியத்தில் மட்டுமே உண்டு.

பதச்சேதம், அதிகண்டம், இசை எனச் சீருக்கு அ.சா மறு பெயர் தருகின்றது.

தளை: காப்பியம், வீ.சோ என்பன இதனை உறுப்பாகக் கொண்டில. ஆனால் முன்னதில் தளை பற்றிய கருத்துக்கள் சில உண்டு.

பந்தம் என்ற பெயர் காரிகை, அ.சா போன்றனவற்றில் காணப்படுகின்றது.

ஓரசை, நாலசைச் சீர்கள் தளைபெறும் நிலையைக் காரிகை, தொ.வி, மு.வீ போன்றவற்றில் காணலாம்.

அடி: காப்பியத்தில் எழுத்தெண்ணிக்கைப்படி அமைந்த அடியும், சீரெண்ணிக்கைப்படி அமைந்த அடியும் உண்டு. 'ஆசிரிய அடி' (1287) 'கலித்தளை அடி' (1282) 'இயற்சீர் வெள்ளடி' (1319) என்ற காப்பியத் தொடர்களின் அடைகள், பிற கோணத்திலும்

(பா, தளை, சீர்) அடி பார்க்கப்படலாம் போலும் என எண்ணத் தூண்டுகின்றன. (எழுத்துவகை) அடி 5 எனவும் விரி 625 எனவும் காப்பியம் மட்டுமே கூறுகின்றது. கலம் முதலியவற்றில் சீர் எண்ணிக்கைப்படி யமைந்த அடியே உண்டு. அ.சா, சுவாமி, இ.வி ஆகியன தளை எண்ணிக்கையால் அடி குறிக்கின்றன.வீ.சோ ஐவகை அடிக்கும் பூதங்களின் பெயர் சூட்டுகின்றது.

காப்பியம், முடுகி வரும் நிலையில் 5,6,7 சீரடிகளைத் தருகின்றது. இ.வி ஏழையே பெருநிலையாகத் தந்தது. கா.பா, தொ.வி என்பன எட்டுவரை வருமெனவும் பிற சிறப்பில எனவும் சுட்டுகின்றன. 10 வரை வரலாம் என்பது கலம், மு.வீ என்பன தரும் கருத்து. பிறவற்றில் இப்பெருமை நிலை சுட்டப்படவில்லை. அ.சா பாதம் என்ற பெயரையும், நுண்ணுணர்விேனோரே அடியறியும் இயல்பினர் எனவும் கூறுகின்றது.

*யாப்பு:* காப்பியத்திற்கே உரிய உறுப்பு இது. இ.வி பாட்டியலில் இவ் வகைகளைப் பற்றிச் சுட்டும்.

*மரபு:* இதுவும் காப்பியத்திற்கே உரிய உறுப்பு.

*தூக்கு:* உறுப்பு நிலையில் இதுவும் காப்பியத்தில் மட்டுமே உண்டு. தூக்குக்கு இடனாகிய ஓசை பற்றிய கருத்து, காப்பியம் போன்றே பிற இலக்கணங்களிலும் உண்டு. காப்பியம் வெண்பாவின் ஓசைக்குப் பெயர் குறிக்கவில்லை (அகவலைக் கூறி, 'அஃதான்று என்றார்). பிறர் செப்பல் என்ற பெயர்நிலையை அமைத்தனர். ஒவ்வொரு பாவின் ஓசைக்கும் மூன்று பகுப்புக்கள் தொ.வி, மு.வீ போன்ற பிற்கால யாப்புப் பகுதிகளில் உண்டு.

*தொடை:* காப்பியம் மோனை, எதுகை, முரண், இயைபு என்பனவற்றை முதலாகவும் அளபெடையை அடுத்த நூற்பாவிலும் தருகின்றது. பிற்கால இலக்கணங்களில், வீ.சோ எதுகை, மோனைகளை மட்டும் தர, பிற அனைத்தையும் தந்தன.

பொழிப்பு ஒரூஉ என்பனவற்றை மட்டும் காப்பியம்தந்தது. இணை, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் முற்றுக்களையும் பிற இணைத்தன. கலம், இ.வி ஆகியன 'பாதம்' என அடிமோனை போன்றவற்றையும் இங்கே இணைக்கும்.

நிரல்நிறுத்தமைத்தல், இரட்டை யாப்பு எனக் காப்பியம் கூறுவன பிற்காலத்து இல்லை. அங்கு அந்தாதித் தொடையும் இரட்டைத் தொடையும் வந்தன.

மோனை கிளை எழுத்துக்களாலும் வரும் என்பது காப்பியம். இனவெழுத்துக்களில் இன்னின்ன வெழுத்து மோனையாகும் என அ.சா, வீ.சோ, தொ.வி என்பன சுட்டுகின்றன.

எதுகைக்கும், காப்பியம் கிளையெழுத்து உரியதெனப் பொதுவாகச் சுட்டியது. வருக்கம், நெடில், இனம் எனக்கலம் விரிக்கும் உயிர், ஆசு, இடையிட்டு, இரண்டடி மூன்றுமெழுத்து என வகைகளை இணைக்கும் காரிகை. இ.வி வழிமொழியும். தலையாகு, இடை, கடை எனப் பகுப்புத் தருகின்றது, தொ.வி ஆசாக வரும் எழுத்துக்களை மு.வீ, தொகுக்கும். சுவாமிநாதம், 5, 3, 35— இவற்றுடன் நெடில், மூன்றுமெழுத்து, உயிர், விட்டிசை, ஈரடி, வருக்கம், அனு என ஏழிணைத்துத் தொடை 50 எனக் கூறும்.]

முரணுக்கு, கடையிணை - பின் - இடைப்புணர் என மூன்றைக் கலம் தர, கடை, கடைக்கூழை என இணைத்துக் காரிகை ஐந்தைத் தருகின்றது. இ.வி வழிமொழிந்தது.

இயைபில், எழுத்தோ சொல்லோ ஒன்றுமெனச் சாமிநாதமும், எழுத்தோ அசையோ ஒன்றுமென மு. வீ யும் கருதும்.

அந்தாதியில், அடி, சீர், அசை, எழுத்து என்பன தொடர்புறலாம் என இ.வி, சாமிநாதம் தெளிவுறுத்தும்.

தொடையின் மொத்த எண்ணிக்கை, 'ஐயீராயிரத்து ஆறைஞ் ஞூற்றொடு தொண்டு தலையிட்ட பத்துக்குறை எழுநூற்று ஒன்பஃது, என்பது காப்பியம் (13699, 13708, 19291). 43 என இறுதிக் காரிகையும் தொ.வி யும் கூறுகின்றன. சுவாமி, 'ஒழுக்கின் ஐம்பான் ஒன்று தொடை' எனக்கூறுவது ஆய்வுக்குரியது.

நோக்கு : காப்பியத்திற்கே உரியது.

பா : இதனைச் செய்யுள் உறுப்பாகக் காப்பியம் மட்டுமே நினைந்தது. பா நான்கு எனவும் ஆசிரியம் - வெண்பா என இரண்டாக அடங்கும் எனவும் காப்பியம் கூறும்.

பா - பாவினம் எனும் பகுப்பு, காப்பியத்திற்குப் பிற்பட்டது. பத்தியம், கத்தியம் என்ற பகுப்பு, வீரசோழியம், தொன்னூல் விளக்கத்தில் உண்டு. பா, பாவினத்தைப் பத்தியம் எனத் தொ.வி கூறுகின்றது. தூக்கு என்ற சொல்லைப் பாவெனும் பொருளில் தொ.வி கையாள்கின்றது.

தாழிசை, துறை, விருத்தம் என்பன பாவினங்கள். முறை மாற்றி துறை தாழிசை விருத்தம் எனும் தொ. வி விருத்தம் துறை தாழிசை எனல் அ.சா, கா.பா என்பனவற்றில் உண்டு.

1. ஆசிரியம் : காப்பியம், காரிகை போன்றன முதலில் இப்பாவைக் கூற, கா.பா, கலம், அ.சா, இ.வி போன்றன இரண்டாமிடம் அளிக்கின்றன.

காப்பியம், வகைகள் கூறவில்லை. மண்டிலம், குட்டம் என்பனவற்றை ஓரளவு பொருத்தலாம் நேரிசை, இணைக்குறள், மண்டிலம், நிலைமண்டிலம் என்பன வகைகள் எனப் பிற கூறுகின்றன. காரிகை, வீ.சோ, தொ.வி, சி பா. மு.வீ மண்டிலத்தை அடிமறி மண்டிலம் என்றன.

ஈ,ஏ,ஓ,ஆய், என் என ஈறுகள் 5, அவி, கலம், சுவாமி ஆகியன சுட்டுகின்றன.

ஆசிரியத்திற்கு வேந்தர்பா என்ற பெயர்ப் பொருத்தத்தை அ.சா ஆய்கின்றது.

சுவாமி, இங்கேயே மருட்பாவைச் சுட்டுகின்றது. நூற்பா அகவலையும் சுட்டுகின்றது. எனவே ஆசிரியம் 6 என்பது இதன் கருத்து.

1. அ) ஆசிரிய இனம் : ஒரு தாழிசை தனித்து வரலாம் என்றது கலம், காரிகை போன்ற முன் நூல்கருத்து. ஒரு பொருள் பற்றி மூன்று தாழிசைகள் இணைந்தும் வரும் எனத் தொ.வி, மு.வீ, வெளிப்படையாக் கூறின.

விருத்தப்பாவியல் ஆசிரிய விருத்தம் பற்றி மிக விரிவாகப் பேசுகின்றது. வீ.சோ, தொ.வி சந்த விருத்தம் பற்றி நினைக்க, வி.பா விரிக்கின்றது. சந்த உறுப்புக்கள், அறுசீர் எழுசீர் எண்சீர் ஆசிரியச் சந்தம் என்பன இங்கு இணைகின்றன.

2. வெண்பா : காப்பியத்தின் வெண்பாப் பகுப்புக்கு அடியளவும் பொருண்மையும் அடிப்படையாகின்றன. குறுவெண்பாட்டு, நெடுவெண்பாட்டு, கைக்கிளை, பரிபாட்டு, அங்கதச் செய்யுள் என்பன காப்பியப் பகுப்பு. குறுவெண்பாட்டும் பிற்காலக் குறள் வெண்பாவும் நெடுவெண்பாட்டும் பிற்காலத்திய பஃறொடை வெண்பாவும் ஒத்த நிலையின. சிந்தியல், நேரிசை, இன்னிசை என்பன இணைய வெண்பா 5 என்பது கலம், இ.வி கூறும் புதிய பிற்காலப் பகுப்புக்கள். காரிகை சிந்தியலில் நேரிசை, இன்னிசை எனப் பகுப்புக் கண்டது. வெண்கலிப்பா- கலிவெண்பா எனக் காரிகை கூறும் ஓரே வகையை வீ.சோ இரண்டாகக் கொண்டு, பின்னதை வெண்பாவின் கீழமைத்து முன்னதைக் கலி

யின் கீழ்க்கொண்டு சென்றது. இத்தன்மை சி.பா, மு.வீ என்பன வற்றிலும் பின்பற்றப்படுகின்றது.

சவலை என வீ.சோ குறித்த பாவிகற்ப வகையைத் தொ.வி அமைத்துக் கொண்டு, வெண்பா 6 எனக் கூறுகின்றது. மு.வீ சவலையைக் கூறும்.

சுவாமி கருத்துப்படி வெண்பா-9. குறள்வெண்பா, இரு குறள் நேரிசை வெண்பா, ஒருவிகற்பு ஆசிடை நேரிசை வெண்பா, இருவிகற்பு ஆசிடை நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா, நேரிசைச் சிந்தியல் வெண்பா, பஃறொடை வெண்பா, கலிவெண்பா.

எழுத்தெண்ணிக்கையினை அடிப்படையாக்கி, வெண்பாவுக்குச் சிறப்பு நிலையில் 5 வகைப் பெயர் தருகின்றது அமுதசாகரம் (71) கட்டளை, கலம்பகம், சமநடை, சமவியம், மயூரசமவியம் என.

2. அ) வெண்பாவினம்: வேறுபாடுகள் இல்லை.

3. கலிப்பா: கலிப்பாவுக்கு முரற்கை என்ற பெயரும் காப்பித்தில் உண்டு.

காப்பியம் கலிக்கு நால்வகையைக் கூறியது. அவற்றுள் இறுதி வகையான உறழ்கலியைப் பிற இலக்கணங்கள் விட்டன. ஒத்தாழிசைக்கலி, வெண்கலி, கொச்சகம் என மூன்று என்பது கலம். தொ.வி வெண்கலிப்பா, கலிவெண்பா என இரு பகுப்புக்கள் கொண்டு(இ.வி யிலும் இவை உண்டு), கட்டளைக் கலிப்பாவையும் இணைப்பதால் வகைகளின் பெருக்கம் ஏற்படுகின்றது. சுவாமிநாதம் கலிப்பா 9 வகை எனத் தெளிவுபடுத்தும்.

காப்பியம் கூறும் ஒத்தாழிசை பிற்கால இலக்கணம் கூறும் ஒத்தாழிசையிலிருந்து மாறுபட்டது. காப்பியம் ஒத்தாழிசையை கலிக்குரிய உறுப்பு நிலையிலும், தேவர் பரவுதல் எனும் பொருள் அடிப்படையிலும் இரண்டாகப் பகுத்தது. தேவர் பரவல் மீண்டும் வண்ணகம், ஒருபோகு என இருபகுப்புப் பெறுகின்றது. அவற்றுள் ஒருபோகு மீண்டும் கொச்சக ஒருபோகு எனவும் அம்போதரங்கம் எனவும் பிரிவுபடுகின்றது.

காப்பியம் கூறும் உறுப்புநிலை ஒத்தாழிசை பிற்கால நேரிசை ஒத்தாழிசைக் கலியை ஒத்து அமைகின்றது. அவ்வாறே காப்பியத்தின் வண்ணகமும் அம்போதரங்கமும், பிற இலக்கணங்களின் வண்ணக ஒத்தாழிசை, அம்போதரங்க ஒத்தாழிசைகட்கு முறையே அடிப்படையாயுள்ளன.

காப்பியம் குறிப்பிடும் கொச்சகத்திற்கேற்பப் பிற்காலக் கொச்சகம் அமையவில்லை. ஆனால் ஒத்தாழிசையின் கீழ் வரும் கொச்சக ஒருபோகை ஒத்தே அவை அமைகின்றன. கொச்சகத் திற்குக் கலம் தரும் ஐவகைப் பகுப்பு அவ்வாறே பிற இலக்கணங் களனைத்திலும் தரப்படுகின்றது.

கா.பா முதல் முதலாகத் தரவு, தாழிசை தனிச்சொல், சுரிதகம் முதலிய கலியுறுப்புக்கட்குத் தனியாகத் தெளிந்த விளக் கம் தருகின்றது. தொ.வி யும் எடுத்து மொழிகின்றது.

3. அ) கலியினம்: கலித்தாழிசைக்கும் கலம் அடிவரை யறை கூறவில்லை. வீ.சோ ஈரடி ஆதி எனச் சிறுமை சுட்டியது ஒரு பொருள் மேல் மூன்றடுக்கலாம் என தொ.வி அமைத்தது. ஈற் றடி தவிரப் பிற அளவு ஒத்து வரவேண்டுமென்ற முன்னிலக்கணக் கருத்துத் தொ.வி யில் நெகிழ்த்தப்படுகின்றது.

கட்டளைக் கலித்துறையின் இலக்கணம் முதன்முதல் வீரசோழி யத்தில் அமைகின்றது. தொ.வி சீர் நிலையையும் வகுத்துக் கட்டளைக் கலித்துறையைத் தருகின்றது. சிதம்பரப் பாட்டியல் பின்பற்றியது.

கலித்துறைக்குச் சீர்நிலை வாய்பாடும், கலிவிருத்தத்திற்கு அவ்வாறமைத்தல் எண்ணில என்பதும் விருத்தப்பாவியலில் குறிக்கப்படுகின்றன. 'சந்த விருத்தம்' எனும் பகுப்பில் கலிச்சந்த விருத்தம், சந்தக் கலிவிருத்தம், சந்தக் கலித்துறை என்பன வற்றை விரிக்கின்றது வி. பா.

4. வஞ்சிப்பா: இப்பாவுக்கு, பிறபாக்களுக்கு அளிக்கப்பட்ட முதன்மை இல்லை. இரு சீரடியாலும் மூச்சீரடியாலும் வஞ்சி வரு மென்பது பொதுக் கருத்து.

சுரிதகம் பெற்று வஞ்சி முடியும் நிலையைக் கலமே முதலில் ஆய்கின்றது. (ஆசிரிய நடைத்தே வஞ்சி—என்றதால் காப்பியமும் இக் கருத்தை நினைந்தது எனக் கூறலாம்). வஞ்சி தனிச் சொலோடு அகவலில் முடியும் என்பது அது. பிற்கால நூற்களனைத்துமே ஓரளவு தெளிவாகவே இக் கருத்தைத் தருகின்றன. மு.வீ தெளி வாக குறளடியால் ஒருவகையும் சிந்தடியால் பிறிதோர் வகையும் அமையுமாற்றைக் குறிக்கின்றது.

அ.சா வஞ்சியை நான்காம் குலம் எனும்.

4 .அ) வஞ்சியினம் பற்றிக் கருத்து வேறுபாடு இலது.

5. மருட்பா; பா நிலையில் காப்பியத்தில் இப்பா பேசப்பட்டிலது. தூக்குப் பற்றிப் பேசும்போது தெளிவுபடுத்தப்பட்டது. வெண்பாவின் கைக்கிளைப் பொருண்மை பற்றிக் கூறுமிடத்தோ, பெயரின்றி வடிவம் மட்டும் சுட்டப்பட்டது.

கலம் மருட்பாவைக் குறிக்கவில்லை. சுவாமி, அகவலின் வகையாகச் சுட்டுகின்றது. பிற, வடிவையும் கைக்கிளை, புறநிலை, வாயுறை, செவியறிவு ஆகிய பொருண்மையையும் குறிக்கின்றன. வீ. சோ, தொ. வி-பொருண்மையைச் சுட்டவில்லை.

அ.சா வருணப்பகுப்பை இப்பாவுக்கும் அமைத்து, இதற்கெனத் தனி ஓசையின்மையையும் காப்பியத்தைப் போலச் சுட்டுகின்றது.

சான்றிலக்கியம், சமநிலை வியநிலை மருட்பாக்களையும் தருகின்றது.

6. பாவும் பொருண்மையும்: காப்பியம், நால்வகைப் பாவும் முப்பொருளிலும் வரும் எனக் கூறுகின்றது. வாழ்த்தியல், நாற்பாவிலும் வருமென நவில்கின்றது. புறநிலை, அவையடக்கம், வாயுறை, செவியறிவுறூஉ என்பன கலி, வஞ்சியில் வராதென இயம்புகின்றது. மருட்பாவில் புறநிலை, வாயுறை, செவியறிவு என்பன வருமெனவும் சுட்டுகின்றது.

பிற்கால இலக்கணங்களில் காரிகை, இ.வி, மு.வீ, சி.பா என்பன மருட்பாவுக்கு மட்டும் பொருண்மை வகுக்கின்றன.

அ.சா அறம் முதல் நான்கும், அகம் முதலிய நான்கும் செய்யுளில் வரும் எனவும், அகம் முதலாய பொருளே கவி(தை)க்கு ஆவி எனவும் தெளிவுபட மொழிகின்றது.

13. அளவு:—தொல்காப்பியம் இதனைத் தனியுறுப்பாகக் கொண்டது. பிற இலக்கணங்கள் பா, வகை பற்றிக் கூறும்போது சிற்றெல்லை பேரெல்லை ஆகிய அளவு பற்றிய செய்திகளைத் தருகின்றன.

ஆசிரியப் பாவுக்குச் சிற்றெல்லை 3 அடி பேரெல்லை 1000 என்பது காப்பியம். பரிபாடலுக்கு அவை 25ம் 400 ஆக அமைகின்றன. குறுவெண்பாட்டு 7 சீரும் நெடுவெண்பாட்டு 12 அடியும் பெறும். அளவில்லாச் செய்யுட்களும் உள.

அவி, ஆசிரியத்திற்கு 1உம், வெண்பாவுக்கு 2உம், வஞ்சிக்கு 3உம், கலிக்கு 4உம் அடி சிற்றெல்லையாகக் கூறியது.

சுவாமிநாதம் அகவலுக்கு 1 அடியும், பிற மூன்றிற்கும் 2 அடியும் சிறுமை என்றது.

கலம், காரிகை, மு.வீ, சி.பா என்பன அகவல் வஞ்சிகட்கு 3 அடியும் வெள்ளைக்கு 2ம் கலிக்கு 4ம் சிற்றெல்லை என்றன. இவை யனைத்திலும் பெருமை கூறுவோனது உள்ளக் கருத்து, பொருட் பரப்பு என்பனவற்றால் நிர்ணயிக்க விடப்பட்டது. தொ.வி இதே சிற்றெல்லைகளைக் கூறி வெண்பாவுக்குப் பெருமை 12, அகவல், வஞ்சிக்கு 1000, கலிக்கு வரையறை யின்று என அமைத்தது.

அளவுபற்றிய கருத்து இலக்கிய நிலையில் அவ்வாறே பொருந் தாது, பொருந்தவில்லை என்பது தெளிவு.

*14 - 25.* **திணை - கைகோள் - கூற்று - கேட்போர் - களன்- காலம் - பயன் - மெய்ப்பாடு - எச்சம்-முன்னம் - பொருள் - துறை :**

இவை காப்பியத்திற்கு உரியன. இ.வி அகப் பொருண்மை பற்றி அகத்திணையியலில் பேசும்போது ஒழிபுக் கூறாக இவற்றை இணைக்கின்றது. இறையனார் களவியலும், நம்பியகப் பொருளும் இத்தகு அகப் பாட்டுறுப்புக்கள் பற்றி நினைத்துள்ளன.

பொருண்மையும், வெளியீட்டுநிலையும் இங்கு உறுப்பாயின.

**26. மாட்டு :** இதுவும் காப்பியத்திற்கே உரிய உறுப்பு. பிற் கால யாப்பிலக்கணங்கள் சில ஒழிபியலில் கூறும் பொருள்கோள் இவ் வுறுப்புத் தாக்கத்தால் தொடர்ந்தனவே (கலம் 95, காரிகை 43. 44 அ.சா 68) எனலாம்.

**27. வண்ணம் :** காப்பியம் கூறும் முதற்பகுப்பு உறுப்புக் களில் இது இறுதியிடம் பெறுகின்றது. கலம், காரிகை என்பன ஒழிபியலில் இதனைச் சுட்ட மு.வீ அங்கு விரிவாகக் கையாள் கின்றது. வீ. சோ, இ. வி, தொ. வீ என்பன ஓரளவு விரிவாகத் தம் இறுதி நூற்பாக்களில் இப் பொருண்மையைத் தருகின்றன.

வண்ணம் இருபது என்பது காப்பியம் முதல் தொடர்ந்து வரும் கருத்து. அவிநயம் 100 எனும் என்பது உரையாளர் செய்தி; நூற்பா கிடைத்திலது போலும்.

தாஅ வண்ணம் தாஅவு எனவும் தரவு எனவும் பெயர் வேறு பாட்டுடன் அமைகின்றது. இடையினம் மிகுந்த இயைபு வண்ணம் இடையிசை எனவும் பெயர்பெற்றமை தெரிகின்றது.

**28 - 35 : வனப்பு :** அம்மை முதலிய எட்டும் வனப்பு என்ற பொதுப் பெயரால் காப்பியப் பாட வேறுபாட்டில் குறிக்கப்

படுகின்றன. கலத்தில், வனப்பு என்ற பெயரின்றி 'அம்மை முதலிய ஆயிரு நான்மையும்' என்றே குறிக்கப்படுகின்றது. காரிகை, சுவாமிநாதம் போன்றன ஒழிபுக் கருத்தாக இதனைச் சுட்டின. இ.வி காப்பியத்தைப் பின்பற்றி மிக விளக்கமாகவே அமைத்தது.

இவ்வுறுப்புக்கள் தவிர வேறு சில செய்தியும் அங்கங்கு வருகின்றது. அவற்றை ஒழிபியல் பகுதியில் யாப்பிலக்கணங்கள் குறிக்கின்றன.

1. கூன் : தனிச்சொல் எனவும் பெயர்பெறுகின்றது(கா.பா. அவி). காப்பியம் அடிபற்றிப் பேசுமிடத்தில் கூனைக் குறித்தது. இருசீர் முச்சீரடிகளில் அசையும், நேரடியில் சீரும் கூனுகலாம் எனத் தெரிகின்றது. கா.பா, அ.வி, கலம், காரிகை, வீ.சோ, இ.வி என்பன வஞ்சிப்பாவின் ஈற்றிலும் கூன் வரலாம் எனும். மு.வீ வஞ்சிப்பாவில் இடையிலும் வரலாம் என்று கூறுகிறது.

2. வகையுளி : அசையின் முடிபில், அசைகளையும் சீரையும் அலகிடும்போது இசைக்கு முதன்மையளிக்க வேண்டும் என்ற காப்பியக் கருத்து வகையுளி பற்றியது போலும். கலம், காரிகை, சுவாமி என்பன இச்சொல்லை மட்டும் குறிக்கின்றன. இ.வி, அ.சா, அவி என்பன விளக்கம் அமைக்கின்றன.

3. விகாரம்; அறுவகை எனக் கலம் குறிக்கின்றது. காரிகை பெயர் மட்டும் தந்தது.

4. குறிப்பிசை; பெயர் காரிகையில்உண்டு.'எழுத்தல் இசையை அசைபெறுத்து இயற்றலும்,(கலம் 95) என்ற கலப் பகுதி இதனையே விளக்கியது போலும். இ.வி இசை நிரைக்க வந்த எழுத்தல்லாத ஓசைகளையும் யாப்புச் செவ்வி கருதி எழுத்தாகவும் சீராகவும் ஏற்றுக் கொள்ளுமாற்றை இவண் விளக்குகின்றது.

5. வாழ்த்து- வசை: இவை முதற்கண் காரிகையில் சுட்டப் படுகின்றன. சுவாமிநாதமும் மொழிந்தது. இ.வி வாழ்த்து 'மெய்வாழ்த்து'. 'இருபுறவாழ்த்து' என இருவகைப்படும் எனவும் வசையும் அத்தன்மைத்தே எனவும் விரித்துக் கூறுகின்றது.

6. ஒப்பு: இலக்கணப் புறநடையாக ஒரு கருத்து, காப்பியம் முதல் தொடர்ந்து வருகிறது. செய்யுளியல்கள்/ யாப்பிலக்கணங்கள் கூறும் வரையறைகள் முழுமையாகப் பொருந்தாது இலக்கியங்கள் / செய்யுட்கள் தோன்றலாம். அவற்றை விலக்காது தழுவிக்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தில், ஏறக்குறைய ஒப்புமையுடையனவற்றைப் பொருத்தமான பகுப்புக்களில் ஏற்றுக்

கொள்க எனக் கூறுகின்றன. ஒழிபியற் பகுதியில் இதனை ஒரு உறுப்பாகவே கொண்டன என்பது அவி (102, 108), கா. பா (89), காரிகை (43), இ. வி (756) என்பனவற்றைப் பார்க்க ஏற்படு கின்றது.

7. புணர்ந்துரை: இ. வி மட்டும் இதனைக் குறித்தது,

8. மிறைக்கவி முதலியன: கலம், ஒழிபியலின் இறுதி நூற் பாவில் ஆசிரியனுக்கு அமைக்கும் விளக்கமும் அதில் வரும் மிகப் பல கூறுகளும், பிற்காலத்தில் பாட்டியலிலும் அதனைப் பற்றிய பகுதிகளிலும், அணியிலக்கணத்திலும் விளக்கப்படுவனவாம். சிலவே செய்யுளியல்களின் இறுதிப் பகுதியில் ஒழிபாக இணை கின்றன. சுவாமி, அம்மானை முதலியன வருங்காலச் செய்யுள் எனக் குறித்தது.

9. ஆனந்தம்; செய்யுளில் வரும் வழு இது, இ.வி, மு.வீ விளக்குகின்றன.

உறுப்பு எனும் நிலையில் மேற்கூறியவை ஒழிபு எனலாம். செய்யுள் எனும் நிலையில் அ. சா, வீ. சோ, தொ. வி என்பன சில இணைப்புக் கருத்துக்களைத் தருதல் இங்கு இணைவு பெறல் வேண்டும்.

பத்தியம் கத்தியம் என்ற வீ. சோ, தொ. வி கருத்து முன்பே நினைக்கப்பட்டது. வீ. சோ பத்தியச் செய்யுளாக ஏழைக் குறிக் கின்றது. முதல் நான்கு வெண்பாப் பகுப்புள்ளும், திலதம் கட்டளைக் கலித்துறையாகவும் அடங்கும். அனைத்தடிகளும் ஒத்து வரும் செய்யுள் விருத்தமும், நான்கடியில் இடையிடை குறைதல் சவலையும் எனப்படும்.

தொடர்ந்து வீரசோழியத்தில் வடமொழி யடிப்படைப்படி சந்தம், தண்டகம் விரிக்கப்படுகின்றன. தொ.வி சந்த விருத்தம் பற்றிய செய்தியைச் சுட்டும் (249). அ.சா இரண்டையும் தரும் (69). தாண்டகம் என்ற பெயர் வேறுபாடு இங்கு அமைகின்றது. லகு-குரு எண்ணிக்கை / பயிற்சி அடிப்படையில் பிரிக்கப்படும் சந்தஸ் அக்ஷர விருத்தம் பற்றிய கொள்கைகள் இங்குப் புகுந்தமை செல்வாக்குக் காரணம் பற்றியாகலாம்.

யாப்புப் பகுதிபோன்றே பாட்டியல் கருத்துக்களிலும் வர லாற்றடிப்படை மாற்றங்கள் அமைந்துள்ளன.

## பாட்டியல் இலக்கண வரலாற்றில்...

பாட்டிலக்கண நூற்கள்/ பகுதிகள்: இந்திர காளியம், பன்னிருபாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல்,

வரையறுத்த பாட்டியல், பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை போன்ற இலக்கண நூற்களும்; சிதம்பரப் பாட்டியலின் இறுதி இரு இயல்களும்; இலக்கண விளக்கத்தின் பாட்டியலும்; தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சுவாமிநாதம் ஆகியனவற்றின் யாப்பதிகார இறுதி இயல்களும் இப்பொருண்மையைக் கையாள்கின்றன.

*உட்பகுப்புக்கள்/ இயல்கள்:* பாட்டிலக்கணப் பொருண்மை சம்பந்தப் பாட்டியலாகிய வரையறுத்த பாட்டியலிலும், பிரபந்த தீபிகையிலும்,இலக்கண விளக்கப் பாட்டியலிலும் உட்பகுப்புக்கள் இன்றியே தரப்படுகின்றன. யாப்பதிகார இறுதியியலில் பாட்டிலக்கணம் அமைக்கப்படும்பொழுது தொன்னூல் விளக்கம் 'செய்யுண் மரபியல்,: முத்து வீரியம் 'ஒழிபியல்' சுவாமிநாதம் 'பிரபந்த மரபு'- என்ற பெயர் நிலைகளை அமைகின்றன. முழுமையும் பாட்டிலக்கணம் பற்றி வரும் நூற்களும் உட்தலைப்புக்களில் ஒற்றுமை காட்டவில்லை.

1) எழுத்தியல் - சொல்லியல்- இனவியல் என்பது ப.பா.

2) முதன்மொழியியல் – செய்யுளியல் - பொதுவியல் என்பது வெ.பா.

3) பொருத்தவியல் — செய்யுண்மொழியியல் – பொதுமொழியியல் என்பது ந. பா.

4) பொருத்தவியல் - மரபியல் என்பது சி.பா.

*யாப்பு:* செய்யுள் பாட்டிலக்கணங்களைக் கூறும் இலக்கண நூல்களில் பயிலும் யாப்பு முன்பே கூறப்பட்டதால் இங்குப் பாட்டிலக்கணம் மட்டுமே கூறும் நூற்களின் யாப்பே கருதப்படுகின்றது.

இந்திரகாளியமும் பன்னிரு பாட்டியலும் பிரபந்த மரபியலும் நூற்பாப்பின. வெண்பாப் பாட்டியல், பெயருக்கேற்ப வெண்பா யாப்பில் அமைகின்றது. வரையறுத்த பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் கட்டளைக் கலித்துறை வடிவில் வருகின்றன. பிரபந்த தீபிகையில் பல ஆசிரிய விருத்த வடிவங்கள் அமைகின்றன. இங்கும், நூற்பா யாப்பொழியப் பிறவற்றில் மகடூஉ முன்னிலைப் பயிற்சி ஓரளவு அருகியேனும் பயின்றது.

*பாயிரம் முதலியன :* ப. பா, வெ. பா, ந. பா ஆகியவற்றில் பாயிரமும், வெண்பாப் பாட்டியலின் இறுதியில் அவையடக்கச் செய்யுள் ஒன்றும் காணப்படுகின்றன. பதினொரு காரிகைகள்

மட்டுமே உள்ள வ. பா பாயிரம் எனத்தனிப் பகுதி வகுக்கா விடினும், முதல் மூன்று கவிகளில், வாழ்த்து, அவையடக்கம், வழி, பயன் என்பனவற்றைக் குறிக்கின்றது. இ. கா தொகுப்பு நூலானமையால் அதற்கொரு பாயிரப் பகுதி கிடைக்கவில்லை. பிரபந்த தீபிகை முதல் விருத்தத்தில் வாழ்த்து முதலியன கூறு கின்றதே யொழியத் தனிப் பாயிரப் பகுதி அமைக்கவில்லை. பிரபந்த மரபியல் நூல் பெயர் முதலியன கூறி அமைந்து விடு கின்றது.

பொருத்தம் ; ப.பா பன்னிரு பொருத்தங்களைத் தவிர, பிற பாட்டியல்கள் பத்துப் பொருத்தங்களைச் சுட்டுகின்றன. பிரபந்த தீபிகையும் வரையறுத்த பாட்டியலும் மங்கலம் பொருத்தம் ஒன்றனை மட்டுமே குறித்துப் பேசின ; அதனையே விரித்தன. பிரபந்த மரபியல் பொருத்தம் பற்றியே பேசவில்லை.

*பிறப்பு :* இதனைத் தனிப்பகுதியாகப் ப.பா மட்டுமே கொண்டது. தொ.வி,மு.வீ ஆகியன தவிரப் பிறநூற்கள் வருணப் பொருத்தத்துடன் இணைக்கின்றன. இன்ன எழுத்தை இவ் இறைவன் படைத்தான் என்ற கருத்தில் நூற்களிடையே மாறுபாடு காணப்படுகிறது. பன்னிரு உயிரையும் அயன் படைத் தான் என்றே அனைத்து நூற்களும் கூற, சுவாமிநாதம் சிவன் படைத்தான் என்கின்றது. கங வை அரன் படைத்தான் எனப் பிற நூற்களும் அயன் உருவாக்கினன் எனச் சுவாமியும் கூறு கின்றன. தந வை இந்திரன் படைத்தான் என்ற பொதுக் கருத்து, வெண்பாப் பாட்டியலில் மாறுபட்டு 'மால்' படைத்தான் என வந்தது. லகரவகரங்களை நிதிக்கோன் படைத்தான் எனப் ப. பா கூற, இந்திரன் எனச் சுவாமியும், கூற்றுவன் எனப் பிறவும் கூறு கின்றன. இவ்வாறே ழள-க்களைக் கூற்றுவன் இயற்றினன் எனப் ப.பா கூறப் பிற வருணன் என்கின்றன. அதேபோன்று றன வைப் படைத்தவன் வருணன் (ப. பா), பொன் அதாவது வியாழன் (வெ. பா), குபேரன் (பிற) என்ற பல வேறுபட்ட கருத்துக்கள் உள. ஒரே இறைவர் பெயர் பல்விதமாகக் குறிக்கப் படலும் உண்டு : சான்று —முதல்வன் —பிரமன்—விதியவன் — ஓதிமன்—அயன்.

இவ் இறைவர் எழுத்தைப் படைத்தனர் என்ற கூற்று அறிவி யலுக்கும், பிற மதத்தினருக்கும் ஏற்புடையனவல்லாமையாற் போலும் மு.வீ, தொ.வி என்பன இதைத் தந்தில. மரபைத் தகர்க்கும் நிலை இங்குக் காணப்படுகின்றது.

வருணம் : அந்தணர், மன்னவர், வணிகர், சூத்திரர் என்பனவற்றிற்கு முறையே (1) மறையோர்,மாமறையோர், திருமறையோர், கைசிகர், ஐயர் (2) அரசர், காவலர், வேந்தர் (3) வசியர் (4) வேளாளர், வளமையர், பின்னவர், உழவர் - எனப் பெயர் மாறுபாடுகள் உள. எழுத்துக்களுக்கு சாதிப் பகுப்புக் கூறும் முறையில் இருவகைகள் உள. ஒன்று, இன்னவெழுத்து இன்ன வருணம் என்பது மற்றொன்று இன்ன இறைவன் படைத்தன இவ் வருணம் என்பது.

கதி : வானவர், மக்கள், விலங்கு, நரகர் என்ற கதிகள் முறையே (1) விண்ணோர், வானோர், இமையோர், தேவர், சுரகதி (2) நரகதி (3) மிருககதி என வேறு பெயர்கள் பெறுகின்றன.

கதிக்குரிய எழுத்துப் பற்றிய கருத்தில், தொ. வி, சுவாமி என்பனவே வேறுபடுகின்றன. விலங்குக்கதிக்குரிய எழுத்துக்களாக ஒ, ஓ, ய, ர, ல, ற, ழ என்பனவற்றைப் பொதுவாக அனைத்து நூலும் கூற, ய, ர, ல, ள, ற என்பனவற்றைச் சுவாமி தருகின்றது. ஐ ஔ, ஃ ,வ, ள, ன ஆகியன நரகதி என்ற பொதுக் கருத்து ஐ, ஔ, ன, வ, ள என ஆய்தம் விடப்பட்டுச் சுருங்கியுள்ளது(தொ. வி.)

உணவு : அமுத எழுத்தெனப் பட்டியல் செய்வதில், ப. பா அமுத மெய்களின் உயிர் மெய்யையும் சேர்க்கப் பிற பாட்டியல்கள் ஒன்றுமே உயிர்மெய் பற்றி நினைத்தில. சுவாமிநாதம் எதிர் மறையில் 'ஐ, ஒ,ஔ,ஓ அல்லாத உயிர், எனக் கூறுவதால் அஇஉஎ அமுது என்ற பழைய கருத்து மாறுபடுகின்றது.

உயிரில் ஆ ஓ நஞ்சு எனப் ப.பா கூற,ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என விரிக்கின்றது ந. பா. மெய்யில் ய், ர், ல் என்பனவற்றுடன் 'ள்' என்பதை இணைக்கின்றது இ.வி. உயிர்மெய்யிலும் இம். மூன்று (நான்கு) டன் ஆ ஓ இணைந்தவை நஞ்சாகின்றன. சி. பா விதந்து ஓதாது 'அல்லாத எழுத்து நஞ்சு' என்றது; சுவாமி, ஞ, ண என்பனவற்றை நஞ்செனல் புதுமை. ஐவகைக் குறுக்கமும் சி. பா தரப் பிற மகரக் குறுக்கம் ஒன்றையே நஞ்சு என்றன. சுவாமிநாதம், அஃகேனம், வெற்றாய்தம் என இரண்டு கூற, பிற ஒரு ஆய்தமே தந்தன.

பால் : ஆண், பெண், அலி எழுத்துக்கள் முறையே ஆடூஉ, மகடூஉ, பேடு எனவும் பெயர் பெறுகின்றன.

குறில் ஆண், நெடில் பெண், ஒற்றும் ஆய்தமும் அலி என்ற பொதுக் கருத்தையே அனைத்து நூற்களும் கூற, தொ.வி, உயிர் ஆண், உயிர்மெய் பெண் என்ற கருத்தையும் இணைக்கின்றது.

தானம் : தானம் பற்றிய கருத்தில் நூற்களிடையே கருத்து மாறுபாடு காணப்படவில்லை.

கன்னல் ; இ.கா, ப.பா மட்டுமே கூறும் பொருத்தநிலை இது.

புள் : இப்பொருத்தநிலை ப.பா மட்டும் தருகின்றது.

நாள் : நாள் பொருத்தம், இன்ன எழுத்துக்கு இன்ன நாள் என அமைகின்றது. நாண்மீனின் பெயர் ஆசிரியருக்கேற்ப ஒவ்வோரிடத்து மாறுபடுகின்றது. சான்று: மகசிரம் - மான்தோல் - மகயிரம் - மிருகசீரிடம் - மான்தலை - இந்திரன் - மிருகசீரிரம் - என.

ஞு, ஞா, ஞொ அவிட்டம் என்ற பொதுக் கருத்து, ஞே என்ற எழுத்திணைப்பால் தொ.வி., மு.வீ என்பனவற்றில் மாறுபடுகின்றது; இவ்வாறே யா உத்திரட்டாதி என்பது ய என்ற எழுத்திணைவுடன் தொ.வி, மு.வீ தர, கருத்து வளர்ச்சி யமைகின்றது; யூயோ மூலம் என்ற கருத்து யுயோ என முத்து வீரியத்தில் வேறுபடுகின்றது.

சுவாமி, பொதுவாக நாட்பொருத்தத்தைச் சுட்டுகின்றதேயொழியப் பிற நூற்கள் போல் விரித்து, வகுத்து விளக்கவில்லை.

கணம்: ப.பா, சி.பா என்பன எண்வகை கணத்திற்கும் நாளும் வகுக்கின்றன. பாடலின் முதலெழுத்திற்கு நாள் வகுத்ததால், முதற்சீருக்கும் நாள் வகுத்தனர் போலும். நிரைநிரைநேர் எனும் சீருக்கு ஓணம், பூசம் என்ற நாள்களை முறையே ப. பா, சி. பா கூறி வேறுபடுகின்றன.

இவ் எட்டுச் சீர்களுக்கு எழுத்தால் பெயர் அளிக்கும் நிலை சி.பா, சுவாமி என்பனவற்றில் உண்டு. நிரைநிரைநேர் எனும் சீருக்கு இந்நூற்கள் முறையே வ, ச எனும் எழுத்துப் பெயர் அளித்து மாறுபடுகின்றன.

நான்கு மூவசைச் சீர் மட்டுமே வரலாம் என்றது அடிநாட் கருத்து. நிரையீற்றியற்சீர் மங்கலத்துடன் வரின் ஏற்கலாம் என்ற ப. பா கருத்து, இன்னும் வளர்ந்து, இயற்சீர் அனைத்தும் கொள்ளலாம் எனச் சுவாமியில் பெருகியது.

மங்கலம் : மங்கலம், எழுத்து, சொல் பொருத்தங்களை யெல்லாம் 'மங்கலம்' எனவே ப.பா கருத, பிற நூற்கள் மங்கலச் சொற்களை மட்டுமே தொகுக்கின்றன.

சொற்களின் எண்ணிக்கையில் நூலுக்கு நூல் வேறுபாடு உண்டு ப. பா-28, வெ. பா-19; ந. பா-24; சி.பா-25; இ.வி-24;

தொ.வி- 24; மு.வீ-20; சுவாமி-35; வ.பா-15; பி.தீ-32 - என. இவற்றில் வ.பா, பி.தீ என்பன மங்கலச் சொற்கும், தொடரும் எழுத்துக்கும் இணைப்புக் காட்டுவன.

மக்களைப் பாடுமிடத்துத் தனி உயிரில் தொடங்கும் மங்கலச் சொல் கூடாது; ஒற்றெழுத்துடன் எண்ணின் ஒற்றை யெண் ஆதல் வேண்டும்; பலபொருள் உடைய சொல் வரலாகாது; வருஞ்சொல் லோடு வகையுளி பெறல் தகாது; மங்கலம் சிதையின் தலை மகனுக்குத் தீது விளையும்; ஒருவன் கெடுவதற்காகச் சிதைப்பதும் உண்டு - இக்கருத்துக்கள் ப.பா மட்டுமே தருவன. ந.பா, மங்கலத்தில் தொடங்கி அமையாது, இறைவனையும் பாடுக எனக் கூறும். சி.பா பரியாயச் சொல், அடைபெறல், முதல் இடை கடைகளில் வரல், மங்கலத்தால் நஞ்சும் அமுதமாதல் போன்ற கருத்துக்களை இணைக்கின்றது. இ.வி, சுவாமி என்பன இக் கருத் துக்கள் சிலவற்றைப் பின்பற்றின.

பெயர் : பெயர் பற்றிய செய்திகளும் பன்னிரு பாட்டிய லுடன் நின்றுவிடுகின்றன. சில இலக்கிய வகைகளுக்கு இலக் கணம் கூறும்போது, 'தலைவன் இயற்பெயர்ப்பட எதுகை மொழி தலை' இந்நூற்கள் கூறுவதால், அதனைத் தனியே இங்கு நினைத்தில போலும்.

சொல் : ப.பா மங்கலத்தின் கீழ் அடக்கிய சொல் பற்றிய கருத்துக்கள் பிற்கால இலக்கணங்களில் தனிப் பொருத்தவகை ஆக்கின.

இவையிவை வரலாகாது என எதிர்மறையில் உணர்த்தும் பாங்கே பொருந்துகின்றன. வகையுளி, வனப்பின்மை, பல பொருள் தோன்றல், பொருளின்மை, ஈறுதிரிதல் போன்றன பாடலின் முதற்சொல்லில் வரலாகாது. இந்நிலையை 'ஆனந்தம், எனக்குறிக்கின்றது சி. பா.

தசாங்கத்தைப் பாடும்போது, அதனை ஒருசீராக உரைக்க வேண்டுமேயன்றிப் பிளவுபடக் (வகையுளி) கூறலாகாது எனவும் அதன் அயலில் கொலைச் சொல்லோ பொருளோ சார்ந்து வரலா காது எனவும் ந.பா, இ. வி என்பன விதந்தோதுகின்றன.

எழுத்து : முதற்சீரின் எழுத் தெண்ணிக்கை பற்றிய இப் பொருத் தம், நாம் முன் கண்ட வண்ணம், பன்னிரு பாட்டியலில் 'மங்கலம்' எனும் பகுதியினின்று தனிப் பொருத்தமாக வளர்ந்ததே.

ந.பா தலைவன் இயற்பெயர் எழுத்து நிலையையும், முதற்சீர் எழுத்து நிலையையும் இணைத்துக் கருதும் நிலையையும் சுட்டு கின்றது. இதனால், வியனிலை குற்றம் எனவும் சமநிலை ஏற்புடைத்து

எனவும் எதிர்மாறான கருத்து ஏற்படுகின்றது. முதற்சீர் எழுத்து நிலையில் வியனுதல் வேண்டுமென்றும், இயற்பெயர் வியனுதல் கூடாதென்றும் இதனைப் பொருத்திக் கொள்ளலாம்.

பொருத்தமுடிபு : வெ.பா பாட்டியற் பொருத்தத்தின் பயனாக, திருமகள் அகலாமை, நோய் நீங்கல், தருமங்கள் சார்பு என்பனவற்றைக் குறிக்கின்றது. வ.பா பொருத்தங்களை வாளா உரைப்பதில்லை; ஆய்ந்து உரைத்தல் வேண்டும் என்கின்றது. இ.வி கவிதைக்கும், தலைவனைப் பாடுமிடத்தும் பத்துப் பொருத்தங்களை யும் கைக்கொள்ளல் தேவை என உரைக்கின்றது.

செய்யுள் இலக்கியம் : 'இனம்' என்ற சொல்லால் பொது வாக இலக்கியத் தொகுதியைக் குறிக்கின்றது ப.பா. அகலப்பா (வெ.பா), வித்தார கவி, (இ.வி), பிரபந்தம் (சுவாமி) என்ற சொற் கள் இதனையே குறிக்கும். இதனைத் தொடர்நிலை எனவும் தனிப்பா எனவும் இரண்டாகப் பிரிக்கின்றனர் (வெ.பா, இ.வி). பா.பா ஒன்றே யாதல், ஒன்று பல ஆதல், பல ஒன்றுதல் எனப் பகுக் கின்றது. இவ்வகைகளுக்கேற்ப, இலக்கியங்களையும் தனித் தனிப் பட்டியல் படுத்துதல் ப.பா, இ.வி என்பனவற்றில் உண்டு. தொடர் நிலைப்பாவின் எண்ணிக்கை பரந்துபட்டது என்பதும் பொதுக் கருத்து (வெ.பா, இ.வி). இலக்கியங்கள் அனைத்தையும் முதலில் தொகுத்தும் பின்பு முறையே விரித்தும் தருவன ப.பா, இ.வி பி.தீ, சுவாமி என்பன.

சாதகம் : ப.பா, மு.வீ, பி.தீ மட்டும் இதனைப் பேசுகின்றன. குழந்தை பிறந்த சகாப்தம், ஆண்டு, ஞாயிறு, பக்கம், வாரம் இராசி என்பன மொழிதற்குரியன எனப் ப.பா கூற, பி.தீ சகாப் தம், ஆண்டு, தேதி, உடு, ஓரை, திங்கள், திசை, சித்ரம், அபகாரம் கிரகநிலை — என்பனவாக விரிக்கின்றது. மு.வீ மிகத் தெளிவாக ஓரை, திதி, யோகம், நாண்மீன், வாரம், கரணம், கிரகம், ஏழு அவயவநிலை என்பனவற்றைக் கண்டு, அவை அமைந்தமையால் தலைவன் அடைவன எவை எனச் சாற்றலே சாதகம் என விளக்க மாக விரிக்கின்றது.

பிள்ளைப் பாட்டு : இ.கா, ப.பா என்பன பிள்ளைப் பாட்டு என மொழிய, வெ.பா, சி.பா முதலியன பிள்ளைக் கவி என்று வழங்குகின்றன.

ஆண்பாற்குப் பதினாண்டும் பெண்ணுக்கும் பூப்புப் பருவ மும் பிள்ளைப் பாட்டெல்லை என இ.கா கூறுகின்றது. மூன்று மாதம் முதல் இருபத்தொரு மாதமளவும் எனப் ப.பா நவில்கின்றது. ஆண்பாலுக்குச் சிறப்பாக ஏழு, ஐந்து, மூன்று ஆண்டுகள் பாடப் படுவதும் உண்டு; ஆணுக்குப் பன்னீராண்டும், பெண்ணுக்குப்

பன்னிரெண்டாண்டின் காமன் நோன்பும் எல்லையாதலும் உண்டு. இவை ப.பா கருத்துக்கள். பெண்ணுக்குப் பன்னிரண்டாண்டென வெண்பாப் பாட்டியலும், அரசனுயின் முடிகவித்தல் வரையென நவநீதப் பாட்டியலும் கூறுகின்றன. பி.தீ இன்ன திங்கள், அல்லது ஆண்டில் இன்ன பருவம் என விதந்தோதுவது புதுமை- 2 திங்கள்: காப்பு; 5: செங்கீரை; 7: தாலம்; 9; சப்பானி; 11: முத்தம்; சம்வற்சரம் (ஆண்டு நிறைவு): வாரானை; 1½ வருடம்: இந்து (அம்புலி); 2: சிற்றில்; 3: பறை முழக்கல்; 4: இரதம் ஊர்தல். இங்கு ஒற்றைப் படை எண்களுக்கு முழு முதன்மை கொடுக்கப்படாமை சிந்தித்தற்குரியது. 'மூன்று முதல் இருபத்தொன்றுள் ஒற்றை பெறு திங்கள் தனில் பிள்ளைக் கவியைக் கொள்ளே' (சி.பா) என்ற கருத்து இங்கு முரணுகின்றது. சி.பா, இ.வி, தொ.வி என்பனவும் ஒற்றை எண் நிலைக்கு வெளிப்படையாகவும் முதன்மை யளித்தன.

இ.கா கூறும் பருவநிலை, பிறநூற் கருத்திலிருந்து மாறுபடுகின்றது. பிறப்பு, ஓகை (உவகை), காப்பு, வளர்ச்சி,: அச்சமுறுத்தல், செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், குழமகன், ஊசல் - என்பனவும் பிறவும் எனக் கூறுவதால் ஆழ்வார் பாடல் தாக்கமும் (அச்சோப் பத்து), பத்துப் பருவம் என்னும் வரையறை ஏற்படாமையும் ஆண்பால்-பெண்பால் எனத் தனியெல்லை வகுக்காமையும் உணர முடிகின்றது. பொதுவாகப் பிற இலக்கணங்கள் கூறும் ஆண்பாற் பருவம் பத்தும்-காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை,(வருகை),அம்புலி சிறுபறை, சிற்றில், சிறுதேர் இங்கு ஒப்பிட்டு வேறுபாடு நோக்கத் தக்கன. பெண்பாற்கு, மேற்கூறிய பத்தின் ஈற்று மூன்றும் நீக்கிக் கூறுக என வெ.பா, ந.பா என்பனவும் அவற்றிற்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல், கூறல் என்ற கருத்துச் சில நூலிலும் (சி.பா, இ.வி, தொ.வி, மு.வீ, பி.தீ), சிற்றில் இழைத்தல், சிறு சோறுக்கல், குழமகன், ஊசல், காமன் நோன்பு என்பன பெண் பாற்கு உரியன (ப.பா) எனவும், பல்வேறு கருத்துக்கள் காலப் போக்கில் ஏற்பட்டுள்ளன.

யாப்புப் பற்றிய கொள்கையிலும் காலமாறுபாடு உண்டு. கொச்சகக் கலி, நெடுவெண்பாட்டு (12 அடிக்கு மிகாது) இவற்றில் பருவமொன்றுக்கு ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பான் அல்லது பதினொன்று செய்யுள் வரும் எனவும் பிறப்பு, ஓகை, வளர்ச்சி, அச்சமாகிய நான்கும் ஒன்று, மூன்று, ஐந்து அல்லது ஏழு செய்யுள் பெறும் எனவும் இ.கா கூறும்.

அகவல் விருத்தம், கட்டளை, கலிவிருத்தம் ஆகிய பாவுடன் நெடுவெண் பாட்டும் வரும் என்பது ப.பா; வகுப்பு, (அகவல்)

விருத்தம் வருமென வெ.பா, சி.பா, இ.வி, தொ.வி, சுவாமி கூறு கின்றன; மன்ன விருத்தம், ஈரெண்கலை வண்ணச் செய்யுள் என ந.பா கூற, அகவல் விருத்தம் என மு.வீ கூறுகின்றது. காப்புக்கு ஒன்பது அல்லது பதினொரு பாடலென ந.பா, இ.வி சுட்டுகின்றன.

காப்புப் பருவத்தில் வரும் கடவுளர் இவரிவர் எனவும் முதலில் திருமாலை அமைக்க வேண்டும் எனவும் கடவுளைக் கூறும்போது அவர்களது கொலைச் செயலை அகற்றவேண்டும் எனவும் ப.பா, வெ.பா, ந.பா, இ.வி என்பனவும், ஆண்பாற்கும் பெண்ணுக்கும் இவையிவை உவமை எனப் ப.பா கூறுவனவும் தனித்த கருத்துக் கள். கிளையளவாகப் (சுற்றத்தளவு) பாடல் என்பது பொதுக் கருத்தாயினும் தந்தை, தாய், பாட்டன், பாட்டி என்ற கிளை யோரைப் ப.பா மட்டுமே கூறுகின்றது.

குடைவெண் பாட்டு ; இ.கா, ப.பா ஆகியன மட்டும் இவ் இலக்கிய வகையை எடுத்தியம்பும். குடை என்ற சொல்லைச் சிந்தடி யின் (வெண்பாவின் ஈற்றடி) ஈற்றில் வைத்து, அக் குடை பற்றிய செய்தியை முதல் குறளில் (வெண்பாவின் முதல் இரு அடி) அடக் கிப் பிற இரு அடிகளில் இறைவனைப் (அரசனை) போற்றுதல் இவ் இலக்கியம் என இ.கா கூறும். ப.பா, இதனை மிகவும் விரிக்கின்றது.

நேரசை (நேரிசை) யாக இவ் இலக்கியம் அமையும் என்பது ப.பா. இவ் வெண்பா வடிவின் முதல் மூன்று அடிகளும் கட்டளை யாக இருத்தல் வேண்டும் என்பதும் கூறப் படுகின்றது. எழுத் தெண்ணிக்கை ஒத்து வருவதே கட்டளை எனப்படுகின்றது. எழுத் தெண்ணும் போது, குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஒற்றும் நீக்கி, உயிரையும் உயிர்மெய்யையும் கொளல் வேண்டும். நேரசை யாக ஏற்கவேண்டியன பத்துப் பற்றிய வெண்பா (37) தெளிவின்றி யமைகின்றது.

தேவபாணி ; ஒருபோகு எனவும் குறிக்கப் பெறும் இவ்விலக் கியம் பன்னிரு பாட்டியலுக்குப் பின் பின்பற்றப்படவில்லை.

கலம்பகம் : ஒருபோகு, வெண்பா, கலித்துறை எனக் கலம் பகம் தொடங்கவேண்டும் என்பது பொதுக் கருத்து. ப. பா பயிலும் பாவகையையும் கலம்பக உறுப்புக்களையும் இணைத்துக் கூற, பிற முதல் மூன்று செய்யுளும், அத்துடன் மடக்கும் பற்றி யுமே உறுப்புடன் இணைத்துத் தந்தன. வெ. பா முதல் மூன்றினைக் கூட இணைக்காது தனித்தே தந்தது.

ப.பா கூறும் கலம்பக உறுப்புக்கள் புயம், அம்மனை, ஊசல், யமகம், களி, மறம், சித்து, காலம் மதங்கி, வண்டு, கொண்டல், மருள் (மருட்பா) சம்பிரதம், தவசு என்பன. வெ.பா, பாண், கைக்கிளை, ஊர், தழை, இரங்கல், தூது எனப் புது உறுப்புக்கள்

இணைக்கின்றது. ந.பா 'குறம்' என்பதனையும் இணைக்கத், தொ.வி 'காற்று' என்றொன்றைத் தருகின்றது.

வண்டு, தவம், பாண், தழை இரங்கல் என்பன நவநீதப் பாட்டியலில் கூறப்படவில்லை; கார் தொன்னூல் விளக்கத்தில் இல்லை, மருட்பா சி.பா, இ.வி என்பனவற்றில் மட்டுமே உண்டு. பிற இலக்கணங்கள் சில இதனை யாப்பில் கருதின. ஊர் வெண்பாப் பாட்டியலிலும் காற்று தொன்னூல் விளக்கத்திலும் மட்டுமே உண்டு.

ஒரே உறுப்பு, சிறிது பெயர் மாறுபாட்டுடனும் வருவதுண்டு: புயம் - வகுப்பு - புயவகுப்பு; அம்மனை - அம்மானை; ஊசல் - பொன்னூசல்; (இ)யமகம் - மடக்கு; மதங்கி - மதங்கு - மதங்கம், மாதங்கம்; கொண்டல் - கார்; மருள் - மருட்பா; தவசு - தவம்- பாண் - பாணன்.

இவற்றை நோக்கப் 'பதினெட்டு' என்ற உறுப்பு நிலை வரையறை யின்மை வெளிப்படுகின்றது. யாப்புப் பற்றிய கருத்தில் காலத்திற்கேற்ற மாறுபாடு உண்டு.

ஒருபோகு, வெண்பா,கலித்துறை தவிர, வெண்டுறை, ஆசிரிய விருத்தம், வஞ்சித்துறை வருமெனப் ப.பா கூறும்; வெ.பா, இவற்றுடன் ஆசிரியப்பா, கலியினம், வஞ்சி விருத்தம், மருட்பாவை இணைத்தது. ந.பா வகுப்பகவல் விருத்தத்தை இணைக்கின்றது. இ.வி வஞ்சிப்பாவை இணைக்கின்றது - தொ.வி, பி.தீ, சுவாமி என்பன முறையே 'ஐம்பாவும் துறையும் விருத்தமும்' எனவும் 'ஐவகைப்பாவும் இனமும்' எனவும், 'தோய்ந்த பா இனம் முழுதும் பல துறையும் வகுப்பும்' எனவும் பொதுமையாகக் கூறின.

அந்தாதியாகக் கலம்பகச் செய்யுட்கள் வரும் எனும் கருத்து வெ.பா, ந.பா தவிரப் பிற நூலில் குறிக்கப்பட்டது. மண்டலித்து வரும் தன்மை இ.வி பாட்டியலில் மட்டுமே கூறப்பட்டது.

கலம்பகத்தின் பாடல் எண்ணிக்கை, பாட்டுடைத் தலைவற் கேற்ப வேறுபடுகின்றது. தேவருக்கு நூறு; முனிவருக்கு (ஐயர், அந்தணர்) - 95; அரசர்-90; அமைச்சர்- 70; வணிகர் (வசியர்)-50; வேளாளர் (உழவர், பின்னவர், சூத்திரர், சதுர்த்தர்)-30 என்பது ப.பா, வெ.பா, சி.பா, இ.வி, தொ.வி, என்பனவற்றின் பொதுக் கருத்து.

வெ.பா காவலரின் ஏவலர்க்கு-80;இருநிதியம் உடையோர்க்கு 70; மிக்கவர்க்கு ஐம்பதும் முப்பதும் என வேறுபடுகின்றது. மு.வீ, பி.தீ என்பன அமைச்சருக்குக் கூறவில்லை. சுவாமி ஐயர் -90; அரசர்- 80; இப்பர்-60; சூத்திரர்-50 என மிக மாறுபடுகின்றது.

உலா : ப.பா உலாவில் எண்வகை நிலை அமைகின்றது. உலா வரும் தலைவனின் குடிமரபு முதலியன முதனிலையாக அமைய எழுவகைப் பருவ மகளிர் முறையே உற்ற மாறுபாடு பின் எழுநிலை யாக அமைகின்றன. இவ் அமைப்புப் பிற இலக்கணங்களில் இல்லை.

ஆடவனுக்கு 48 ஆண்டளவும் உலாப்பருவம் எனலும் பன்னிரு பாட்டியலுக்கே உரியது. அவி ஆண்பாலுக்கும் ஏழு பருவம் வகுப்பது புதுமை. பெண்பருவத்திற்கேற்ற விளையாட்டுக்களை ப.பா மட்டுமே சுட்டியது. அதோடு, வேந்தர், கடவுளர், 'விதி நூல்வழி உணர் மாந்தர்' என்போர் தலைவராகலாம் என்பதும் அதன்கண் அமைகின்றது.

பெண் பருவத்திற்கேற்ற வயது (ஆண்டு) நிலையை வெ.பா, ந.பா, சி.பா, இ.வி என்பன கூறுகின்றன.

தலைவன், குழமகன் (சிறுவன், குழந்தை) என்ற கருத்து சி.பா, இ.வி, தொ.வி என்பனவற்றிலும், மிக்க இளமைப் பருவத்தான் என்ற செய்தி மு.வீ, பி.தீ ஆகியனவற்றிலும் அமைகின்றன.

தலைவனைக் கண்டு, காதலித்தல் என்ற ப.பா கருத்து, செய்கை மறந்து அயர்த்தல் என வெண்பாப் பாட்டியலின்கண் மாற்றமடைய, ஏத்துதல் என ந. பா, சுவாமி கூற வணங்கல் என மு.வீ நவில, தொழல் எனப் பிரபந்த தீபிகையில் உயர்கின்றது. இலக்கியங்கள், காதலுற்று விரகத்தால் வருந்தும் மகளிரைக் காட்டும் முரண் உன்னுதற்குரியது.

இதன் யாப்பு, கலிவெண்பாட்டு (ப.பா) எனவும், கலி வெண்பா (வெ.பா, ந.பா, சி.பா, இ.வி, தொ.வி) எனவும், நேரசைக் கலிவெண்பா (மு.வீ) எனவும், நேரிசைக் கலிவெண்பா (பி.தீ) எனவும் விரிக்கப்படுகின்றது.

உலாவினையே 'கலிவெண்பா' எனக் குறித்தலும் உண்டு (ப.பா).

சின்னப்பூ : அரச சின்னங்களைப் பற்றி யெழுந்த இவ் இலக்கி யம், சின்னம் (ப.பா) எனவும் சின்னப்பு (பி.தீ 4) எனவும் மாறியும் வழங்கப் பெறும்.

மலை, யாறு, நாடு, ஊர், பரி, களிறு, கொடி, முரசு, தார்' பெயர் எனும் தசாங்கங்களைப் ப. பா மட்டும் தொகுக்கின்றது (வெண்பாவின்) முதற்குறளில் அச் சின்னத்தின் தொழிலைப் புகழ்ந்தும் பின் குறளில் தலைவனைச் சார்த்தியும் அமைத்தல் வேண்டும் என்பது பன்னிரு பாட்டியலின்கண் மட்டுமே வரு கின்றது.

பத்து, ஏழு அல்லது மூன்று பாடல் (ஒவ்வொரு) சின்னத்திற்கு வரும் என்பது ப.பா. பிற்கால இலக்கணங்கள் பொதுவாக 100, 90, 70, 50 பாடல்வரும் (வெ.பா, ந.பா) எனவும், 90, 70, 30 (சி.பா) எனவும், 100, 90, 70, 50, 30 (இ.வி, தொ.வி, மு.வீ) எனவும் வேறுபடுகின்றன.

'ஆதிப்பாவின் அதன் இனம் வருமே' எனப் ப.பா கூற, நேரிசை வெண்பா என வெ.பா, ந.பா, இ.வி, தொ.வி, மு.வீ என்பன விதந்தோத, வெண்பா எனப் பொதுப்படக் கூறுகின்றது சி.பா.

*பரணி :* கொச்சக அடிகள் இரண்டு பொருந்திய தாழிசை, பரணிக்கு வடிவமாக வரும். இப் ப.பா கருத்து, நேரடிமுதல் நீண்ட அடிகளாலான ஈரடி கலித்தாழிசையால் வருதல் என வெண்பாப் பாட்டியலில் உருமாறுகின்றது. அமைப்பினைக் கூறித் தாழிசை (ந.பா) எனவும் பஃறுழிசை (தொ.வி, மு.வீ, பி. தீ) எனவும் கூறலும் உண்டு.

போர்க் களத்து வெற்றி பெற்றோனே பரணியால் ஏற்றப் பெறுகின்றான் (ப.பா). யானைகளைக் கொன்ற களமாக அது இருத்தல் தேவை என்பது அனைத்து நூற்குமுரிய பொதுக் கருத்து. யானைகளின் எண்ணிக்கை ஏழ் தலைப்பெய்த நூறு (ப.பா) எனவும், ஆயிரம் (சி.பா, இ.வி, தொ.வி, மு.வீ, பி.தீ) எனவும் வேறுபடுகின்றது. ஒரு நாளில் ஆயிரம் யானை கொல்லல் என விதந்தோதுகின்றது சுவாமி நாதம்.

பரணியின் பொருண்மைப் படிநிலைகள் ஒவ்வோரிலக்கணத்தில் விரிந்தும், பிறவற்றில் ஓரளவு சுருங்கியும் தரப்படுகின்றன. புறப்பொருள் சிறக்கப் பாடவேண்டு மென்பது பொதுக் கொள்கை யாகத் தெரிகின்றது.

*மடல் :* இன்பமடல் எனவும் (சி.பா) வளமடல் எனவும் (இ.வி, மு.வீ, பி. தீ) இது பெயர் பெறுகின்றது. சுவாமி மடலின் தொடர்புற்ற ஆனால் தனித்த இரு நிலைகளாக இவற்றைத் தருகின்றது.

பெண்டிர் பொதுவாக மடல் ஏறார் என்பதும், கடவுளர் தலைவராயின் ஏறுவர் என்பதும் ப.பா கூறும் தனிக்கருத்து.

தலைவன் பெயர்க்கு ஏற்ற எதுகை என்பது பொதுக் கருத்தாக இருக்க, ஒரு எதுகை எனச் சிதம்பரப் பாட்டியலும் ஈரடி எதுகை யென மு.வீ, பி.தீ என்பனவும் எடுத்து மொழிந்து வேறுபடுகின்றன.

மறம் : ப.பா விரிக்கும் இவ் இலக்கிய வகையைப் பெயர் சுட்டி யமைந்து விடுகின்றது சுவாமி. பிற இலக்கணங்கள் கூறிற்றில.

பல்சந்த மாலை: பலசந்த மாலை என்ற பெயர் வேறுபாட்டை தொ.வி, மு.வீ, பி. தீ என்பன குறிக்கின்றன.

ப. பா கூறும் பல்சந்தமாலை இலக்கணத்திற்கும் பிற நூல்கள் தரும் கருத்துக்கும் சிறிது மாறுபாடு அமைகின்றது. பத்து முதல் நூறு பாடல்களாக, கலம்பக உறுப்பு வகைகள் நீங்கி (அதாவது, பிற நிலைகளில் கலம்பகத்தை ஒத்து) வருவது, எனப் ப. பா கூறும். இக் கலம்பகத் தொடர்பு பிற நூற்களில் நினைக்கப்படவில்லை.

பத்து முதல் நூறு பாடலால் வரல் என மட்டும் வெ.பா, ந.பா என்பன கூறுகின்றன. 'அகவல் விருத்தம் வகுப்பு' என யாப்பு நிலையையும் இணைக்கின்றது சி. பா. வண்ண வகை பத்தால் வரும் என இ. வி, பத்துச் செய்யுட்கு ஒரு சந்தமாக வரும் எனப் பி. தீ, பல சந்தத்தொடு வரும் என மு. வீ, பத்துப் பத்துப் பாடல் ஒரு சந்தமாய் சில அந்தாதியாய் ஆசிரிய விருத்தம் வரும் என தொ. வி இவ்வாறு பல மாறுபாடுகள்.

இணைமணிமாலை; வெண்பாவும் கலித்துறையுமாக நூறு பாடல் அந்தாதித்து வருவது இது.

வெ. பா, சி. பா.இ.வி, மு. வீ என்பன, வெண்பாவும் அகவலுமாகவும் இணைமணிமாலை வரலாம் என ஒரு கருத்தை இணைக்கின்றன.

தொ. வி 'வெண்பா கலித்துறை அகவல் மனவிருத்தம்' என்பதால், ஆசிரிய விருத்தமும் (வெண்பாவுடன்) வந்து இவ் வகை இலக்கியத்தை அமைக்கலாம் என்பது தெரிகிறது.

பி. தீ 'அந்தாதியாய், தொடை நாலதாய் வரும்' என்பது போதிய விளக்கமின்றி அமைகின்றது.

இரட்டைமணிமாலை; வெண்பாவும் கலித்துறையுமாக இருபது பாடல் பெறுவது இது.

வெண்பாவும் அகவலும் வரும் எனவும், ஆசிரிய விருத்தமும் வெண்பாவும் வரும் எனவும் இருநிலைகளைக் கூறுகின்றது வெ. பா. இ. வி, பி.தீ என்பன வெண்பாக் கலித்துறையுடன் வெண்பா (ஆசிரிய) விருத்தம் வரும் எனப் பிறிதோர் இருநிலை மொழிந்தன. கலித்துறை, கட்டளைக் கலித்துறையாக அமைதல் என விதந்தோதுகின்றது மு. வீ.

சுவாமிநாதம் தரும் கருத்து, வெள்ளையுடன், கலித்துறை, அகவல், அகவல் விருத்தம் அனைத்தும் வரலாம் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றது.

*மும்மணிமாலை:* வெள்ளை, கலித்துறை, அகவல், விருத்தம் எனும் யாப்பில் 30 பாடல் வரல் என்பது ப. பா. பிற இலக் கணங்கள் அனைத்தும், வெண்பா, கலித்துறை, அகவல் என வேறுபடுகின்றன.

*நான்மணிமாலை:* வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம் என நாற்பது பாடல் வருவது இவ் இலக்கியம்.

ஆசிரியமும், ஆசிரிய விருத்தமும் நாற்பது வருவதும் இது எனப் ப. பா கூறுகின்றது.

இ. வி, மு. வீ, பி. தீ என்பன வெண்பா-கலித்துறை-விருத் தம்-அகவல் என முறை மாற்றம் செய்கின்றன.

*கலம்பகமாலை:* ப. பா தவிரப் பிற நூற்கள் இதற்குப் பன் மணிமாலை எனப் பெயர் அளிக்கின்றன. பி. தீ இருபெயரும் ஒரே இலக்கியத்தைக் குறித்ததை எடுத்து மொழிகின்றது.

கலம்பகத்தின் ஒருபோகு அம்மனை ஆகிய உறுப்புக்கள் நீங்கின் இவ் இலக்கியம் உருவாகும் என்பது ப. பா கருத்து. ஒருபோகு அம்மனையுடன் ஊசலையும் ஒழித்தல் வேண்டும் எனப் பிற இலக்கணம் எல்லாம் மொழிகின்றன. கலம்பகத்தின் சிதைவு பன்மணிமாலை என்பது சுவாமிநாதத்தின் எளிய விளக்கம்.

*மும்மணிக்கோவை:* நேரிசைவெண்பா-நேரிசை ஆசிரியப்பா-கலித்துறை என முறையே செய்யுள் வருவது இவ் இலக்கியம் என்பது ப. பா கருத்து. அகவல் - வெண்பா - கலித்துறை என்ற முறையைப் பிற இலக்கணங்கள் அனைத்தும் கூறுகின்றன. கலித் துறை, கட்டளையாக இருக்கவேண்டுமென இ. வி, மு.வீ, பி. தீ என்பன சிறப்பாகக் குறிப்பிடுகின்றன. சுவாமி பத்து வெண்பா, பத்து அகவல், பத்து கலிப்பா அடைதல்- என மிகவும் வேறுபட்டு இலக்கணம் வகுக்கின்றது.

*கலியந்தாதி:* ப. பா மட்டும் கூறும் இலக்கியவகை இது.

*ஒலியந்தாதி:* முப்பது ஈரெண்கலைச் செய்யுட்களாலாவது ஒலியந்தாதி. எட்டுக் கலையாலும் வரலாம் என மு.வீ, பி. தீ கூறும். அத்துடன் வெண்பா, அகவல், கலித்துறை, இவை பப்பத்தாக அந்தாதித்து வருவதும் ஒலியந்தாதி என்ற புதுமையான வேறு பட்ட கருத்தும் மு. வீ, பி. தீ என்பனவற்றில் மட்டும் உண்டு.

*யானைத்தொழில்:* மிகவிரிவான விளக்கம் அமைக்கின்றது ப. பா. யானையினைப் பாடுவது என்ற கருத்து ப. பா, இ. வி என்பவற்றின் கண் முன்னிட்டு நிற்க, வெ.பா, ந.பா, சி. பா என்பன யானையை அரசன் அடக்கல் அல்லது பற்றல் என்ற பொருண் மைச் சாயல் காட்டுகின்றன.

வெ, பா, ந. பா, இ.வி என்பன 'வஞ்சி' என இதன் யாப்பினை மொழிந்தன. 'வேளாண்பா' எனப் ப. பா மொழிவதுடன் 'ஆசிரிய அடியாலும் பாடலாம்' என ஒழிபும் கூறுகின்றது.

*வருக்கமாலை:* மொழிமுதல் எழுத்துக்களை அமைத்துப் பாடல் என்ற பொதுக் கருத்து ப. பா, இ. வி என்பனவற்றில் அமைகின்றது. எட்டு அகவற்பாவில், (க ச த ந ப ம வ எனும்) வருக்க எழுத்துக்களால் அமைதல் எனும் விரிகருத்து வெ. பா, சி. பா, தொ. வி என்பனவற்றில் உண்டு. மு. வீ, பி. தீ என்பன ஒரு எழுத்துக்கு ஒரு செய்யுள் என விதந்தோதுகின்றன. ஆயின் அகவல் எனக் கூறிற்றில.

*நாமமாலை:* பல்வகை அடி மயங்கிய வஞ்சிப் பாவில் ஆடவனைப் புகழ்வது இவ் இலக்கியம். சுவாமி ஒழியப் பிற கூறும் இவ் இலக்கியம், அகவலடியும் கலியடியும் மயங்க வரும் என மு. வீ, பி. தீ என்பன விதந்தோதுகின்றன. 'புகழ்ந்து அரற்றுவது' எனக் கைக்கிளைத் தன்மையைப் புகுத்துகின்றது பி. தீ.

*இன்னிசைத் தொகை:* ப.பா மட்டும் கூறும் இலக்கியம் இது.

*விருத்த இலக்கணம்:* இவ்வகை இலக்கியம் ப. பா முதலே காணப்படினும் இப்பெயர் சி. பா, தொ. வி, மு. வீ என்பன வற்றில்தான் உண்டு. 'திறம்' என நவநீதப் பாட்டியலும் விருத்த மென இலக்கண விளக்கமும் உரைக்கும். பிற (இயற்) பெயரால் பெயர்பெறும் எனக் கூறுகின்றன.

பரி, சிலை, யானை, வாள், குடை, வேல், செங்கோல், நாடு, ஊர் பாடப்படும் என்பது ப. பா. பத்துப் பத்து விருத்தம் வரும் எனப் பிற இலக்கணங்கள் கூறுகின்றன. வகுப்பு மனவிருத்தம் எனத் தொ. வி கூற அகவல் விருத்தம் என மு. வீ மொழிகின்றது. இ. வி 'குடை'க்குப் பதில் 'கொடை'யைக் கூறுகிறது.

*ஐம்படை விருத்தம்:* ப. பா மட்டும் கூறும் பிறிதொரு இலக்கியவகை இது.

*நாழிகை வெண்பா :* கடிகை வெண்பா எனும் பெயர் மு.வீ தருகின்றது. முப்பது வெண்பா எனப் ப.பா கூற, 32 எனப் பிற கூறுகின்றன. ப.பா இலக்கணம் கூறும்போதுள்ள விரிவு பிற வற்றில் இல்லை.

*நவமணிமாலை :* பா பாவினங்களாலாயது இது என்பது ப.பா. வெண்பா முதலாக வரவேண்டும் என இ.வி மு.வீ, பி.தீ கூறு கின்றன. ஒன்பது செய்யுள் என்பது பொதுக் கருத்து; ப.பா, தொ.வி என்பன் எடுத்து மொழியவில்லை.

கைக்கிளைமாலை : ப.பா விரிவாக இலக்கணம் வகுக்கின்றது. ப.பா மருட்பா, அல்லது ஆசிரியப்பாவும் இனமும் என யாப்புக் கூறும். 25 விருத்தம் என வெ.பா; எண்ணிக்கை கூறுது ந.பா; 5 விருத்தம் என இ.வி; 5 விருத்தம் அல்லது 32 வெண்பா என மு.வீ; 5 விருத்தம் அல்லது வெள்ளை 4 என பி.தீ - இவ்வாறு வடிவு பற்றிய கருத்து மாறுபடுகின்றது.

உற்பவமாலை ; ஆழியோன் பிறப்பு (ப.பா) தசப்பிராதுற் பவம் (வெ.பா, ந.பா, சி.பா) உற்பவமாலை (இ.வி, மு.வீ, பி.தீ) என்னும் பல பெயர்களில் இவ் இலக்கியம் வழங்கப்படுகிறது. ப.பா விரிவாகப் பத்து அவதாரங்களையும் பட்டியல் படுத்த, பிற அவ்வாறு தந்தில. பாட்டுடைத் தலைவனைக் காத்தல் வேண்டியே இப் பத்தினையும் பாடல் என்பதும் பன்னிரு பாட்டியலில் மட்டுமே உண்டு.

அட்டமங்கலம் : எட்டு ஆசிரிய விருத்தங்களால், ஒருவனைக் காக்கும்படி இறைவனை ஏத்தல் இது. 'காப்பு' எனும் கருத்தைக் கூறுது, இறைவனை ஏத்துதல் என்பதை மட்டுமே பொருண்மை யாகச் சுட்டுகின்றது ந.பா. யாப்பைப் பற்றிய கருத்தில், விருத்தம் (வெ.பா) எனப் பொதுவாகவும், வண்ணம் எனச் சிறப்பித்தும் (ந.பா) கூறல் உண்டு. அந்தாதிப் பண்பு மு.வீ, பி.தீ என்பனவற் றில் சுட்டப்பட்டது.

இல்லற வெள்ளை ; ப.பா மட்டுமே இதனைக் குறிக்கும்.

மங்கல வள்ளை ; ப.பா ஒழியப் பிற இலக்கணங்கள் மங்கல வெள்ளை என்ற பெயரினை இவ் இலக்கியத்திற்குத் தருகின்றன.

ஒன்பது பாடலால், சந்தம் (வகுப்பு), வெண்பா யாப்பில் இவ் இலக்கியம் உருவாகும் என்னும் பொதுக் கருத்து, சிதம்பரப் பாட்டியலில் சிறிது மாறுபடுகின்றது. வகுப்பு ஒன்பதும், வெண்பா ஒன்பதுமாகப் 18 செய்யுளில் இயலும் என்பதே அக்கருத்து. மு.வீ, பி.தீ இக்கருத்தைப் பின்மொழிகின்றன.

தாரகை மாலை ; மூவகை விளக்கங்கள் இதற்குத் தரப்படு கின்றன. இருபொருண்மையுடைய (சிலேடை) இருபத்தெழு வகைப் பாடலால் ஆவது எனப் ப. பா கூற, கற்புடைப் பெண் ணின் குணங்களைப் பாடுவது என வெ.பா, இ.வி, மு.வீ என்பன இயம்ப, தூசிப்படை யணியைப் புகழல் என சி.பா வகுக்கின்றது. பி. தீ இறுதிப் பொருண்மை யிரண்டையும் இணைக்கின்றது. வகுப்பு (சந்தம்) யாப்பாதல் வேண்டும் என வெ.பா, இ.வி, மு.வீ விதந்தோதுகின்றன.

செந்தமிழ் மாலை : ப.பா மட்டும் கூறும் இலக்கிய வகை இது.

*தாண்டகம்* ; ப.பா, மு.வீ என்பன இவ் இலக்கிய வகை யைப் பேசினபோதும், இரண்டு கருத்துக்களும் வேறுபட்டு நிற் கின்றன. ஆறு அல்லது எட்டுச் சீர்களால் முறையே வரும் குறுந் தாண்டகம், நெடுந்தாண்டகம், ஆடவர் அல்லது கடவுளரைப் புகழ்ந்து வரும் (ப.பா). அடிக்கு 27 எழுத்து முதலாகக் குருவும் லகுவும் ஒத்துவரும் அளவியல் தாண்டகம், எழுத்தும் அலகும் ஒவ்வாது வரும் அளவழித் தாண்டகம் (மு.வீ) என்பன அவை.

*பதிகம்* : ப.பா, மு.வீ, பி.தீ, சுவாமி என்பன இதற்கு இலக் கிய வகை எனும் மதிப்பளிக்கின்றன. ஒரு பொருள்மேல் 10 பாடல் வரல் என்பது பொதுக் கருத்து. ப.பா விரிவாகவும், விளக்கமாக வும் வேறுபட்டும் இலக்கணம் வகுக்கின்றது. ஆசிரியத்துறை ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், நான்குமுதல் எட்டு அடிவரை வரும் வெண்பா ஆகிய யாப்பில் 10 அல்லது 20 பாடல் வரல் எனப் ப.பா சுட்டும்.

*மெய்க்கீர்த்தி*: மெய்க் கீர்த்தி எனவும் மெய்க்கீர்த்தி மாலை எனவும் இரு தனி இலக்கியங்களை வகுக்கின்றது இ.வி. இதற்கு முற்பட்ட நூற்கள் 'மெய்க்கீர்த்தி'யை மட்டும் கூறப் பிற்பட்டன (மு.வீ, பி.தீ) 'மெய்க்கீர்த்தி மாலை'யை மட்டும் சுட்டின. ப.பா நாற்சீரடிகள் இரண்டடித் தொடைபெற்று வருமென யாப்புச் சுட்டப் பிற நூற்கள் சொற்சீரடி யாப்பு என வேறுபடுகின்றன. அரசனைப் பற்றிக் கூறல் (மெய்க்கீர்த்தி மாலை) அரசனிடம் கூறல் (மெய்க்கீர்த்தி) என இரு கூறுகள் இதன்கண் இணைகின்றன.

*மறக்களவழி- மறக்களவஞ்சி* : ப.பா மட்டுமே தரும் இலக் கியம் இவை.

*செருக்களவஞ்சி* : பத்து விருத்தங்களால் அமையும் எனப் ப.பா கூற, வஞ்சிப்பா என வெ.பா, தொ.வி என்பன கூறுகின் றன. பாடல் பொருண்மையை மிக விளக்கி மொழிகின்றன மு.வீ, பி.தீ என்பன. பிற, செருக்களத்தைப் பாடல் எனப் பொதுவாக மொழிய, இவை போர் முடிந்த பின், பேய், நாய் முதலியன இறந்த உடலங்களை எமதெமதென உண்ணும் நிலையை விரிக்கின்றன.

*ஆற்றுப்படை* : ஆற்றுப் படைக் குரியவராகப் புலவர், பாணர், பொருநர், விறலியர், கூத்தரை மொழிகின்றது ப.பா. விறலியர் ஒழியப் பிறரைக் கூறுகின்றன வெ.பா, ந.பா, சி.பா என்பன. புலவர் ஒழியப் பாணர், பொருநர், விறலி, கூத்தர் ஆகிய நால்வரையே மொழிகின்றன மு.வீ, பி.தீ. புலவர் ஆற்றுப் படை தேவர்க்கும் உரித்து என்ற சிறப்புக் கருத்தினைப் ப.பா தருகின்றது.

*கண்படை*: ப.பா, மு.வீ, பி.தீ என்பன மட்டும் இவ் இலக்கிய வகையைக் குறிக்கும். ப.பா தரும் கருத்து, பிற இரண்டிலிருந்து சிறிது மாறுபடுகின்றது. அரசனை வாழ்த்தி, இன்பத் துயில் கொள்க என உரைப்பது பொருண்மை என்பது ப.பா. அரசனும் அரசியல் தலைவரும் அரசவையில் மிகுதியான நேரம் (நாள்) வைகியபோது, மருத்துவர், மந்திரி போன்றோர், அவரைத் துயில் கொள்ளுமாறு வேண்டல் என்பது பிற நூற்கள் கூறும் பொருண்மை. 'கண்படைநிலை' என்ற பெயர் மாறுபாட்டையும் இவை தரும்.

*துயிலெடை நிலை*: ப.பா, பி.தீ என்பன மட்டுமே இதனைக் கூறுகின்றன. பொருண்மை வெளியீட்டில் இரண்டிற்கும் சிறிது வேறுபாடு உண்டு. விடியல் போது, பகை மன்னர் நின் உரை கேட்க விழைந்தனர் என எழுப்புதல் ப.பா. பாசறைக்கண் படை பலம் பற்றித் துயின்ற மன்னனை நற்செய்தி கொணரும் தூதர் எழுப்புதல் பி.தீ.

*விளக்குநிலை*: ப.பா, மு.வீ, பி.தீ, கூறும் பிறிதொரு இலக்கியம் இது. மன்னனின் விளக்கினைப் புகழ்வது இது. வேலும் தலையும் போலக் கோலும் விளக்கும் ஓங்குக என விரிக்கின்றன மு.வீ, பி.தீ.

*குடாநிலை-யாண்டுநிலை-பறைநிலை*: ப.பா மட்டும் கூறும் இலக்கியங்கள் இவை.

*அந்தாதித் தொகை*: ப.பா ஒழியப் பிற அந்தாதி எனக் குறிக்கின்றன. வெண்பா அல்லது கலித்துறை வரல் என்ற பொதுக் கருத்துடன் விருத்தத்தையும் இணைக்கின்றது சுவாமி. நூறு பாடல் எனும் கருத்து, வெ.பா, ந.பா, சி.பா என்பனவற்றில் உண்டு. சீர் அந்தாதி எதிர்பார்க்கப்படல் வெண்பாப் பாட்டியல் வழித் தெரிகின்றது.

*மருட்பா*: ப.பா புறநிலை, வாயுறை, செவியறிவுறூஉ எனும் பொருண்மைகளைத் தர, ந.பா, அகப்புறக் கைக்கிளையையும் இணைக்கின்றது. இப்பொருண்மைகட்குப் பிறபாவும் உரிய என்ற கருத்தினையும் ந.பா தருகின்றது. அவையடக்கியலையும் மு.வீ இணைக்கிறது.

*பாதாதி கேசம்-கேசாதி பாதம்*: 'பாதம் ஆதி' என்ற பெயரில் பாதாதிகேசம் பற்றி மட்டுமே ப.பா கூறுகினறது. ப.பா பாடப்படவேண்டியவனவாக அகஅடி முதல் நுதல் வரை 32 உறுப்புக்கள் தருகின்றது. பிறவற்றில் இந்நிலை இல்லை. யாப்பாகக் கலி வெண்பா வருதலைப் ப.பா தவிரப் பிற கூறுகின்றன.

*நயனப் பத்து-பயோதரப் பத்து*: ப.பா அகவல் விருத்தம் வரல் எனக் கூற, வெ.பா, ந.பா என்பன கலித்துறையையும்

இணைக்கின்றன. பிற, பத்துப்பாட்டு என எண்ணிக்கை கூறு கின்றனவே ஒழிய யாப்பு கூறிற்றில.

*உழத்திப் பாட்டு:* ப.பா மட்டும் கூறுகின்றது. 'பள்ளு நாடகம்' என்ற பெயர்நிலைக் குறிப்பு சுவாமிநாதத்தில் அமை கின்றது.

*குறத்திப் பாட்டு:* இதுவும் பன்னிருபாட்டியலில் மட்டுமே உண்டு. குறம் என்ற பெயர்க் குறிப்பு சுவாமிநாதத்தில் காணப் படுகிறது.

*ஒருபா ஒருபஃது:* வெண்பா அல்லது அகவல் பத்துவரல் என் பது ப.பா கருத்து. கலித்துறையை இணைக்கின்றன வெ.பா, இ.வி, தொ.வி, மு.வீ, பி.தீ. என்பன. 'எப்பாட்டேனும்' எனப் பொதுப்பட நிற்கின்றது சி.பா. சி.பா, மு.வீ, பி.தீ என்பன அந்தாதி வரல் எனும் கருத்தை இணைக்கின்றன.

*இருபா இருபஃது:* அந்தாதி அமைதல் எனும் குறிப்பு சி.பா, மு.வீ, பி.தீ. எனும் நூற்களில் அமைகின்றது.

*கோவை:* அகப்பொருட் கோவை எனும் பெயர், சி.பா, இ.வி, மு.வீ, பி.தீ ஆகியவற்றில் அமைகின்றது. சுவாமி, அகக் கோவை—புறக்கோவை என இருநிலை அமைக்கின்றது. மு.வீ, கலித்துறை தவிர, 'அகவல் வெண்பாக் கலி அடுக்கி அவ்வண்ண வஞ்சியினுலும் வழுத்தப்படுமே' என யாப்பு வேறுபாடு தருவது புதுமை.

*கணக்கு:* ப.பா மட்டுமே இவ் இலக்கியத்தைக் குறிக்கிறது.

*தொடர்நிலை:* தொடர்நிலைச் செய்யுள் எனவும் கூறப்படும் இது பன்னிருபாட்டியலில் மட்டுமே தனி இலக்கிய வகையாக நின் றது. பிற இலக்கணங்கள் பெருங்காப்பியம், காப்பியம், புராணம் எனும் நிலையில் இதனை விளக்குகின்றன. தொ.வி, சுவாமி என் பன தொடர் நிலையை இரண்டாக்கி, பொருட்டொடர் நிலையில் காப்பியம் முதலியவற்றை அடக்குகின்றன. ப.பா தரும் இலக்க ணம் பிறவற்றிலிருந்து வேறுபட்டது. தலைவனை,' வித்திலிருந்து தளிரும் கொடியும் வளர்வது போன்ற வளர்ச்சி நிலையில் காட்டி, வெள்ளை-விருத்தம்-அகவல்-ஒரு தொடைக் கொச்சகம் என்பன வற்றில் பாடுவது இது; தலை இடை கடை என்ற இதன் மூவகை யுள் தலை அறம் பொருள் இன்பம் வீடு எனும் பொருளினை உடைத் தாய் வரும் என்பது ப.பா.தண்டி கூறும் பெருங்காப்பிய, காப்பிய இலக்கணத்தையே வெ.பா முதல் சுவாமி வரைக் கூறுகின்றன. காவியம் என்ற பெயரை ந.பா தருகின்றது.வெ.பா, சி.பா, தொ.வி என்பன புராணம் பற்றியும் கூறுகின்றன. குலவரவு காரிகையாப் பில் கூறுவது புராணம் என்பது வெ.பா, சி. பா காப்பியத்தோடு

ஒத்தே புராணத்தையும் கொண்டது; 'புராணம் பற்கதை புனைந்' எனத் தொ. வி சுட்டும். சுவாமி, தொடர்நிலையில் பிரபந்தங் களையும் அடக்கியது.

பாட்டு: ப. பா மட்டும் கூறும் இலக்கியவகை இது.

கடைநிலை: ப. பா, மு. வீ, பி. தீ எனும் இலக்கணங்கள் இவ் வகை பற்றிப் பேசினும், ப. பா தரும் பொருண்மை பிற இரண் டன் பொருண்மையிலிருந்து வேறுபட்டது. பரிசில் தராத புரவலனை இரவலன் வெறுத்து இயம்புவது கடைநிலை எனப் ப. பா கூற, சேணிடை வந்த பெரியோர் தம் வரவைத் தலைவனுக்கு உரைக்கும்படி வாயிலோனிடம் கூறல் கடைநிலை என்பது பிற தரும்கருத்து.

கையறுநிலை: ப. பா, வெ. பா, மு. வீ, பி. தீ ஆகியன இவ் இலக்கியவகையை விளக்குகின்றன. வேந்தர் வான்புகக் கவிஞர் பாடுவது எனவும் கையறுநிலை பெறும் பாவும் ப.பா கூற, வெ.பா, யாப்புப் பற்றி மட்டுமே சுட்டியது. மு. வீ, பி. தீ என்பன, கண வனொடு மனைவி இறந்தபோது, அவர்களால் புரக்கப்பட்டோர் உற்ற துன்பம் கூறல் எனப் பரந்துபட்டு நின்றன.

ஊர் இன்னிசை-பெயர் இன்னிசை: இன்னிசை வெண்பாவால் தலைவன் ஊரையும் பெயரையும் சிறப்பிக்கும் இவ்வகை வெ.பா, இ. வி, மு. வீ, பி. தீ என்பனவற்றில் மட்டும் உண்டு.

ஊர் நேரிசை-பெயர் நேரிசை: வெ. பா தவிரப் பிற இன்னி சைக்கே முதலிடம் அளித்தன. வெ. பா, இ. வி, மு. வீ, பி. தீ என்பனவே இவ் இலக்கியத்தையும் சுட்டின.

தசாங்கம்: தசாங்கம் நஞ்செழுத்து நீங்கிவர வேண்டும் என்ற கருத்தை வெ. பா மட்டும் தந்தது. தசாங்க நிலை (வெ. பா), தசாங்கப்பத்து (சி. பா, இ. வி, மு. வீ, பி. தீ) என்ற பெயர் நிலை களும் உள.

ஊர் வெண்பா: வெ. பா, ந. பா, மு. வீ, பி. தீ இதற்கு வேறு பாடின்றி இலக்கணம் வகுத்தன.

அலங்கார பஞ்சகம்: வெள்ளை, கலித்துறை, அகவற்பா, அகவல் விருத்தம், வண்ணம் என ஐவகை யாப்பு மொழிகின்றன வெ. பா, இ. வி, மு. வீ, பி. தீ என்பன. ந. பா, அகவல் விருத்தம் என்னுது, பொதுவாக 'விருத்தம்' என்றது. சி. பா, வஞ்சி விருத் தம் என விதந்தோதியது. நால்வகைப் பாக் கலந்து, வகைக்கு ஐந்து பாடலாய் வருவது என மாறுபடுகின்றது தொ. வி. மு. வீ, பி. தீ என்பன, இவ் ஐவகைப்பா மாறிமாறித் தொடர்ந்து அந்தாதித் தொடை பெறும் எனக்கூறப் பி. தீ, நூறு செய்யுள்

வரும் என இணைக்கின்றது. சுவாமி, மிகப் பொதுவாகப் பாவும் இனமும் மாறிமாறி இயம்பிய ஐம்பான் (50) பாடலை இலக்கண மாக்குகின்றது.

ஊசல்: அகவல் விருத்தம், கலித்தாழிசை என்பன யாப்பு என்பது வெ. பா, ந. பா, இ. வி, மு. வீ இவற்றின் கருத்து. சி.பா, தாழிசையாய்ச் சொல்லுவது' என இணைப்பது தாழ்ந்த இசை எனவோ தாழிசை உறுப்பெனவோ கொள்ளல் தகும். தொ. வி, 'வண்ணகம் முதற்கண் வரினும் இயல்பே' எனச் சேர்க்கின்றது. ஆடீர் ஊசல்' 'ஆடாமோ ஊசல்' என்ற தொடர்ப் பயிற்சியினை மு. வீ சுட்டுகின்றது.

குழமகன்: குழமகன் உலாவர அவனைக் கண்ட எழு பருவ மங்கையர் செயலைக் கூறுவது குழமகன் என்ற வெ.பா கருத்துத் தனித்து நிற்கின்றது. ந.பா, இ.வி, மு.வீ, பி.தீ ஆகியன, மக ளிர் கையில் தவழும் குழமகனைச் சிறப்பித்தலே இவ் இலக்கியம் என மாறுபடுகின்றன.

அங்கமாலை: பல வெண்பா விருத்தத்தால் சிறந்த உறுப் பைப் பாடல் அங்கமாலை. உறுப்பு இவையிவை என ந.பா தொகுக் கின்றது. தொ.வி, மு.வீ, பி.தீ, என்பன இதனைக் கேசாதிபாதம் பாதாதி கேசத்துடன் தொடர்புபடுத்துகின்றன. கலிவெண்பா வாகவும் வரலாமென தொ.வி கூற, வெண்பாவிலும் வரலாம் என மு.வீ, பி.தீ இணைக்கின்றன. ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் இவ் உறுப்புப் புகழ்ச்சி உரித்து என மு.வீ, பி.தீ என்பன எடுத் துரைக்கும்.

தானைமாலை: பண்டைத்திறம் கூறல் எனவும் (வெ.பா, சி.பா, தொ.வி), தூசிப்படை (கொடிப்படை) யைப் புகறல் எனவும் (இ.வி, மு.வீ, பி.தீ) இரு கருத்துக்கள் நிலவுகின்றன. ஆசிரியப் பாவால் வரும் எனும் கருத்து, சி.பா தவிரப் பிறவற்றில் உண்டு.

வஞ்சிமாலை: வஞ்சி எனவும் (வெ.பா, சி.பா), வஞ்சிமாலை எனவும் (தொ.வி), போர்க்கெழு வஞ்சி (மு.வீ, பி.தீ) எனவும் பெயர் வேறுபடும் இதன் பொருண்மை வஞ்சிப் போருக்குப் புறப் படல் எனவும் போர் (தொ.வி) எனவும் மாறுபடுகின்றது.

வாகைமாலை: வெ.பா, சி.பா, தொ.வி, மு.வீ, பி.தீ, என் பன பொருண்மை மாறுபாடின்றி இவ் இலக்கிய வகையைத் தரு கின்றன.

புகழ்ச்சிமாலை: வஞ்சிப்பாவில் பாடல் எனவும் (சி.பா, தொ.வி) பல அடிகள் மயங்கும் வஞ்சியால் பாடல் எனவும் (வெ.பா, ந.பா, இ.வி) அகவலடியும் கலியடியும் மயங்கிய வஞ்சி என வும் (மு.வீ, பி.தீ) சிறிது வேறுபடுகின்றன.

*வரலாற்று வஞ்சி:* வரலாறு ஓதல் என்பது வெ.பா, சி.பா என்பனவற்றின் கருத்து. தானையைப் பாடல் என்பது இ.வி கருத்து. தொ.வி, இவ் இருநிலைக்கும் மாறுபட்டு அறம் முதல் நான்கும் உரைத்தல் எனக் கூறும். மு.வீ, பி.தீ கூறும் விளக்கம் மெய்க்கீர்த்தியுடன் ஒத்தது.

*தொகைவெண்பா:* ந.பா மட்டுமே இவ் இலக்கிய வகையை இயம்புகின்றது.

*தூது:* ந.பா, சி.பா என்பன பெயர்க்குறிப்போடு அமைந்து விடுகின்றன. இருதிணைப் பொருளையும் விடல் தூது என்பதுடன் (இ.வி) ஆடவரும் பெண்டிரும் தூது விடலாம் என மு.வீ அமைக்கின்றது. கலிவெண்பா யாப்பு ந.பா, இ.வி, மு.வீ இவற்றில் சுட்டப்படுகின்றது.

*அரசன் விருத்தம்:* ந.பா, மு.வீ, பி.தீ, என்பன இவ் இலக்கியத்தைப் பேசுகின்றன. மலை, நாடு, நகருடன் வாண் மங்கலம் மட்டும் ந.பா கூற, பிற தோள்மங்கலமும் இணைக்கின்றன; இவை, நகர் வருணனையைச் சுட்டாது, நீரும் நிலமும் (மு.வீ) கடலும் நிலமும் (பி.தீ) சுட்டுகின்றன.

*உலாமடல்:* சி.பா, இ.வி யாப்பு கூறிற்றில. கலிவெண்பா என மு.வீ, பி.தீ கூற, வெண்பா என சுவாமி இயம்பும்.

*அநுராகமாலை:* கனவில் ஒருத்தியைப் புணர்ந்ததைப் பாங்கனுக்குக் கூறல் என இ.வி, மு.வீ உரைக்கக் காவில் புணர்ந்ததை எனப் பி.தீ மாறுபடுகின்றது. இவ்வாறு நிகழ்வை நேரடியாகச் சுட்டாது, உள்ளத்து இன்னல் உரைத்தல் எனச் சி.பா மொழிய உற்றது உரைத்தல் என சுவாமி வேறுபடுகின்றது. நேரிசைக் கலிவெள்ளையால் இயல வேண்டும் எனும் கருத்து மு.வீ, பி.தீ என்பனவற்றில் உண்டு.

*மாலை:* எப்பொருள் மேலும் இயற்றப்படுவது மாலை என வெ.பா, இ.வி என்பன கருதுகின்றன. சி.பா, மு.வீ, பி.தீ என்பன புறப்பொருள் திணைகள் ஒவ்வொன்றும் பொருண்மையாகப், பல மாலைகள் அமைவதை விளக்குகின்றன. வெட்சிமாலையை வீர வெட்சி மாலை எனவும் (மு.வீ,பி.தீ) கரந்தையை வெற்றிக் கரந்தை எனவும் (மு.வீ) வெற்றிக் கரந்தை மஞ்சரி எனவும் (பி.தீ) குறிக்கின்றன. சி.பா, பொருள்-இடம்-காலம்-தொழில் பற்றி 30-40-70 90 அல்லது நூறு வெண்பாவோ கலித்துறையோ வரின் அவை அவ்வப் பெயர் மாலை எனப்படும் என்கின்றது. மாலையாக மட்டுமன்றி எண் செய்யுளாகவும் இவை அமைகின்றன.

*தொகைச் செய்யுள்:* இ.வி, மு.வீ, பி.தீ என்பன நெடுந்தொகை, குறுந்தொகை, கலித்தொகை, இவை போன்ற பிற இதன்கண் அடங்கும் என்கின்றன.

காப்புமாலை: 3, 5 அல்லது 7 பாட்டில் காப்புக் கூறல் இது என இ.வி கூற, தெய்வம் (கடவுள்) காத்தல் எனச் சிறப்பிக்கின்றன மு.வீ, பி.தீ என்பன.

வேனில் மாலை: வேனிலைப் பாடுதல் எனப் பொதுவாக இ.வி கூற, மு.வீ, பி.தீ என்பன இரு வேனிலையும் நினைக்கின்றன.

வசந்த மாலை: வசந்தத்தை வருணித்தல் எனவும் (இ.வி) தென்றலைப் புகழ்ந்து செப்பல் எனவும் (மு.வீ) இளந்தென்றலை வருணித்து உரைத்தல் எனவும் (பி.தீ) விளக்கப்படுகின்றது.

பதிற்றந்தாதி: இ.வி, மு.வீ, பி.தீ இதனை மாறுபாடின்றி மொழிகின்றன.

நூற்றந்தாதி: கலித்துறை அல்லது வெண்பாவில் நூறு பாடல் அந்தாதித்து வரல் என இ.வி, தொ.வி, மு.வீ, பி.தீ கூற, பதின்பத்து அந்தாதி என்ற பெயர் வேறுபாட்டையும், நூறு பாடலில் பத்துப் பத்துப் பாடல் ஒரு இசை பெற்றுவரும் என்பதையும் சுவாமிநாதம் கூறுகின்றது.

சதகம்: இ.வி, சுவாமி என்பன பொருண்மை பற்றியொன்றும் நுவலாதிருக்க, மு.வீ, அகப் பொருள் அல்லது புறப் பொருள் ஒன்றன்மேல் 100 செய்யுள் உரைத்தல் எனக் கூறுகின்றது.

எண்செய்யுள்: இ.வி, ஊரையும் பெயரையும் எண்ணால் கூறல் என்கின்றது. மு.வீ, பி.தீ என்பன ஒன்று முதல் ஆயிரம் செய்யுள் வரும் என இணைக்கின்றன.

ஐந்திணைச் செய்யுள்: இ.வி, மு.வீ என்பன பொருண்மையை மட்டும் கூற, பி.தீ, 'வெள்ளை, வஞ்சி, கலி, வணம், அகவல்' என யாப்பையும் கூறுகின்றது.

நாலுற்பது: காலம் இடம் பொருள் இவற்றை நாற்பயன் கருதி உரைத்தல் என இ.வி கூற, 'நாற்பது' என்ற பெயர் வேறுபாட்டுடன், வெண்பா நாற்பதால் காலம் இடம் பொருள் இவற்றில் ஒன்றினைப் பாடல் என மு.வீ, பி.தீ இயம்புகின்றன.

மணிமாலை: தொ.வி, மு.வீ, பி.தீ என்பன இதனை மொழிகின்றன.

வருக்கக் கோவை: மொழி முதல் எழுத்தும் அதன் வருக்கமும் வைத்துக் கட்டளைக் கலித்துறைச் செய்யுட்கள் வருவது இது என மு.வீ மொழியும். இதன் பொருண்மை, காட்சி முதலான அகப் பொருள் எனப் பி.தீ, சுவாமி இணைக்கின்றன.

பெருமகிழ்ச்சி மாலை: மு.வீ, பி.தீ என்பன, பெண்ணின் அழகு குணம் ஆக்கம் சிறப்பு இவற்றை உரைப்பது இது என மொழிகின்றன.

தண்டகமாலை: வெண்பா முந்நூறு பாடுவதிது என மு.வீ, பி.தீ மொழிக்கின்றன.

வாதோரண மஞ்சரி: தோரண மஞ்சரி என்ற பெயர் வேறு பாட்டினைப் பி.தீ தருகின்றது. யானையோடு பொருது வீரம் புலப் படுத்தியோரை வஞ்சியால் பாடுவது என மு.வீ, பி.தீ இயம்பு கின்றன.

புறநிலை: மு.வீ, பி.தீ என்பனவே புறநிலை வாழ்த்துக்குத் தனி இலக்கிய மதிப்பு அளிக்கின்றன.

தசாங்கத்தயல்: மு.வீ, அரசனது தசாங்கங்களை 10 ஆசிரிய விருத்தத்தால் அறைவது எனக் கூற, பி.தீ பதினான்கு ஆசிரியத் தால் கூறல் என வேறுபடுகின்றது.

பவனிக் காதல் : மு.வீ, சுவாமி என்பன, உலாக் கண்டு உற்ற காதலைக் கூறி வருந்துதல் என்ற பொருண்மையைத் தருகின்றன.

எழுகூற்றிருக்கை, முதுகாஞ்சி, இயன்மொழி : மு.வீ மட்டுமே இவற்றை மொழிந்தது.

புறக்கோவை, விரகமாலை, இரட்டை மணிக்கோவை, நான் மணிக் கோவை, திக்கு விசயம், காதல், வண்ணம் : சுவாமிநாதம் மட்டுமே இவ் விலக்கிய வகைகளைக் கூறுகின்றது.

இவை தவிர, பஞ்சரத்தினம், நவரத்தினம், ஏசல் என்பனவும் பெயர்நிலையில் சுவாமிநாதத்தில் சுட்டப்படுகின்றன.

புறநடையாக, பா, பொருள், அளவு முதலியன காரணமாக இன்னும் பல பிற இலக்கியங்கள் உள எனத் தொ. வி, சுட்டுகின் றது. மரபு நோக்கிப் புதியனவற்றை அடக்கிக்கொள்க எனப் ப.பா சுட்டுகின்றது.

ஒழிபு: ஆசிரியன் : அந்தமில் கேள்வி ஆசிரியனை யாப்பருங் கல் இறுதி நூற்பா காட்டுகின்றது. பாட்டியல் பகுதிகள் ஆசிரியனின் அறிவு நிலையை மட்டும் நினைக்காது, குலம் போன்ற பிறவற்றையும் நினைக்கின்றன. இ.வி, பி.தீ என்பன அவற்றைப் பேசாது அறிவு நிலையையே சுட்டின.

நற்குலத்தோனாகவும் ஒழுக்கம் அறம் தெய்வம் உடையோனா கவும் உயர் நெறியினனாகவும், ஒரு தெய்வத்தை வணங்கும் சித்தத் தினனாகவும் இருத்தல் வேண்டும் (ந.பா). நற்குணம் சீரொழுக்கம், மேன்மை அழகு உடையோனாதல் வேண்டும் (சி.பா) - இது ஒரு நிலை. 20 முதல் 70 வயதுள் இருத்தல் வேண்டும் எனவும் (வெ.பா, ந.பா, இ.வி) 30 முதல் 70 வயதுவரை இருக்கலாம் எனவும் (சி.பா) கருத்து உள. உறுப்புக்குறை இன்மை, பிணி இன்மை (வெ பா,ந.பா, சி.பா) என்பனவும் ஆசிரியனுக்குக் கருதப்படு கின்றன. ந.பா, புறநடையாக, நான்கு வருணப் பிறப்பு இல்லாத

இழிந்தோனுயினும், சாவவும் வாழவும் பாட வல்லவன், அறத் துறை நீங்காதவன், முக்கால உணர்வுடையவன் ஆக இருப்பின் பாடலாம் என்கின்றது.

ந.பா, பிறிதொரு கருத்தும் இணைக்கின்றது. பாடத் தகாத வர் பாடிஞல் ஆனந்தம் என்பது அது.

*புலவர் :* கவிகளைப் பற்றிப் பேசும்போது, கவி கமகன் வாதி வாக்கி, ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்பன அனைத்திற்கும் பொதுவாக அமைய, வெ. பா, சோரகவி, சார்த்து (க்கவி), பிள் ளைக்கவி, வெள்ளைக்கவி எனப் புன் கவிகளை இணைக்கின்றது. ந. பா, 'கள்ளக்கவி முதல் ஈரிரண்டும்' எனத் தொகுத்து வேறுபடுகின்றது. இ.வி, வெ.பா கூறியதையே தந்து 'சாத்து கவி' என்ற பெயர் மாறுபாட்டைத் தருகின்றது. மு.வீ, இக்கருத்துக்களைத் தர வில்லை.

*பாட்டு:* கவி பற்றிப் பேசும்போது, ஆசு மதுரம் சித்திரம் வித் தாரம் என்ற கவி வகைகளைத் தருகின்றன வெ.பா, ந.பா, தொ.வி,மு.வீ என்பன. இ.வி, பாட்டு என்பதை விளக்கவருமிடத்து இவற்றைத் தருகின்றது. கவிதையையும் கவிஞனையும் ஒரே பெயர்களால் கூறல் இங்கு அமைகின்றது.

*செய்யுள் :* செய்யுட் தொகுதி முத்தகம், குளகம், தொகை நிலை, தொடர்நிலை என நான்கு எனத் தொ.வி, சுவாமி என்பன இணைத்து நினைக்கின்றன. சுவாமி, முத்தகம் குளகம் என்பன வற்றைச் செய்யுள் முடிவு எனவும் இவற்ருல் ஆவது பிற இரண்டு எனவும் கூறுகின்றது. தொகை நிலை, தொடர்நிலைகளைப் பாட் டியற் பகுதிகள் இலக்கிய வகையில் அடக்குகின்றன.

*பாகம் :* சுவாமி மட்டுமே வைதருப்பம், கவுடம் என்ற (அணி) நெறிகளை யாப்புப் பகுதியில் சுட்டுகின்றது.

*பாவும் வருணமும் பிறவும் :* ந.பா, பாவுக்கு வருணம் மட்டும் வகுக்கின்றது. அவி, மங்கலப்பா எனும் கருத்தை மட்டும் தருகின்றது. ப.பா, சாதி-கடவுள்-நாள்-ஓரை-விரை-பூ-நிறம்-நிலம் ஆகியனவற்றை நாற்பாவுக்கும்வகுக்கின்றது.வெ.பா, இ.வி, தொ.வி, மு.வீ என்பன கடவுள் (கோள், கிரகம்), சாதி (குலம்), நாள், இராசி (ஓரை), நிறம், நிலம் எனும் ஆறினை மட்டுமே அனைத்துப் பாவுக்கும் வகுக்கின்றன. வெ.பா, விரை-பூ-ஆடை என்பன நிறமேடு ஒத்து அமையும் எனக் கூற, இ.வி, சாந்து-பூ-கலை-மணி என்பன அவ்வாறு அமையுமென இணைக்கின் றனவே யன்றி விரித்தில.

*நாற்பெயர் ;* அகலக் கவி எவ்வாறு பெயர் பெறுகின்றது என வெ. பா, சி.பா, இ.வி நினைக்கின்றன. 'நாற்குப் பேராம்' எனச்

சி.பா கூறுவதால் அனைத்துவகை நூற்கும் பொதுவாகவும் நினைக் கலாம். தொழில், அளவு, காலம், இடம், பொருள், பா, உறுப்பு, எல்லை, பாடினுன், பாடுவித்தான் இவற்ருல் பெயர் பெறலாம் என வெ.பா கூறும். ந.பா, இவற்றில் உறுப்பு ஒழிய ஏனைய வற்றைத் தந்து, 'எல்லை' என்பதை 'எண்' எனக் குறித்தது. சி.பா இவற்றில் பலவற்றை விட்டு, அளவு, பொருள், செய்தோன், செய் வித்தோன் என்பனவற்றையே தந்து, பின், தன்மை, மிகுதி என் பனவற்றையும் இணைத்து, இடுகுறியாகவும் பெயரமையலாம் எனப் புதுமை புகுத்தியது. இ.வி, வெ. பா கூறியனவற்றில் பா அளவு தவிரப் பிற தந்தது.

*எதுகைச் சிறப்பு:* பாட்டுடைத் தலைவன் ஊர்ப்பெயர் இயற் பெயர் பட எதுகை மொழிதல் சிறப்பு என வெ.பா, ந.பா, இ.வி கூறுகின்றன.

*வழூவுறுப்புக்கள்:* வடவெழுத்தையே மிகுதியாகப் புணர்க்கும் தன்மை வழூவாக வெ.பா, ந.பா, இ.வி என்பனவற்றில் சுட்டப் படுகின்றன.

*அவை :* நல்லவை நிறையவை தீயவை பற்றி வெ.பா மொழி கின்றது. ந.பா, இவற்றுடன் குறையவைவையையும் இணைக் கின்றது. இ.வி, நல்லவை நிறையவைகளை மட்டும் மொழிந்தது.

*மரபு :* காப்பியம் மரபியலில் கூறும் கருத்துக்களை, இ.வி, பாட்டியலில் கூறுகின்றது.

*உவமை :* ந.பா மட்டும் பெண்பாற்குரிய உவமைகளும், அரசனை முருகனேடுவமித்தல் போன்றவற்றையும் கூறுகின்றது,

*நால்வருணம் :* வெ.பா, ந.பா, இ.வி, என்பன அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்பனவற்றிற்கு விளக்கம் தருகின்றன. பிற இரு நூற்களைவிட இ.வி இக்கருத்துக்களை மிகச் சுருக்கமாக அமைக்கின்றது. ந.பா, இ.வி என்பன அந்தணனுக் கும் அரசாட்சி உண்டெனை இயம்பும். ந.பா, அரசரெனத் தகுவோர் எவரெவரெனத் தனித்து எடுத்து மொழிகின்றது. வணிகனுக்கு இ.வி வணிக வாழ்க்கை மட்டுமே கூற, பிற உழவு, நிரை பேணல் போன்றவற்றையும் இணைக்கின்றன. வேளாள ருக்கு ந.பா வாணிபமும் கூற, இ.வி, உழுதூண் அல்லது இல்லை எனக் கூறுகின்றது.

*நூல் :* பயன் நான்கு; வகை மூன்று; உரை பதின்மூன்று; மதம் ஏழு; குணம் பத்து; குற்றம் பத்து; உத்தி எண்ணுன்கு என வெ. பா, ந.பா தொகுக்கின்றன. நூல் பற்றிய இக் கருத்துக் களுடன் காண்டிகை விருத்தி போன்றவற்றையும் விளக்குகின்றது வெ.பா.

பாயிரம் : பொதுப் பாயிரம் பற்றி வெ.பா, ந.பா என்பன பேசினும், ந.பா மட்டுமே, அதிகாரத்தின் முன் கடவுள் வாழ்த்து வேண்டுமென நினைக்கின்றது. வெ.பா, சிறப்புப் பாயிரத்தின் கூறுகக் கடவுள் வாழ்த்தை நினைக்கின்றது. இ.வி, பாயிரம் பொது - சிறப்பு என இருவகைத்து எனமட்டும் இயம்புகின்றது.

பாப்புனையும் நல்ல நேரம்: நன்முகூர்த்தம் பற்றி வெ.பா, இ.வி நினைக்கின்றன. ஆறு நாழிகை ஒரு கூருகப் பகுத்த பகலில், முதல் மூன்றும் சிறப்பு என்பது இரண்டன் பொதுக்கருத்து.

நாமகளை ஏற்றல் : நூல் அரங்கேற்றத்திற்கு முன் நிகழ்த்த வேண்டிய கலைமகள் வணக்கம் பற்றிய செய்தியை வெ. பா, ந.பா, ஆகியன தருகின்றன.

அரங்கேற்றம் : ஓலைக்கு இலக்கணம் கூறுகின்றது இ.கா: அவி, அவைபுகு நெறியும் மாணி, ஆசான் முதலியோர் உடன்படா விடினும் நூல் வெற்றிபெறும் எனவும் நுவல்கின்றது. ந.பா, அரங்கேற்றும் முறையைப் படிப்படியாக விளக்குகின்றது.

பாடலைவாங்குதல் : அரசன் பாட்டுப் பொருளை உணர்ந்து பாவலனுக்குப் பரிசளித்து வணங்கும் முறையை ந.பா சுட்டு கின்றது. சி.பா, இ.வி என்பன புலவனுடன் ஏழடி சென்று மீளல் எனும் மரபையும் சுட்டுகின்றன.

பாடலின் நன்மை தீமை : மங்கலம் பிறழாது முதன்மொழிப் பொருத்தம் கருதி உரைக்கும் செய்யுள் நல்லவையில் சேர்ப்பது நன்மை; பிற தீமை என வெ. பா மொழிகின்றது. பரிசளிக் காமை பிழை என்றும் அவ்வாறு அளிக்காதிருப்பின் உரைத்ததெல் லாம் வசையாய் முடியும் என்றும், மிக உயர்த்தியும் மிகத் தாழ்த்தியும் கூறும் தன்மையுடைய செய்யுள் யாவும் தீமை என்றும் ந.பா சுட்டுகின்றது.

பொருந்தாதவனுக்காக இயற்றிய செய்யுளைப்பிறனிடம்கூறும் போது இவன் செல்வம் அவனிடம் சென்றெய்தும்; செய்யுளை மயானம் போன்ற இடத்து நினைந்து சுட்டால், பாடல் தலைவன் குறுகிய காலத்தில் இறப்பான்; புலவன் உளம் நொந்தால் தலைவன் சுற்றத்தொடும் முடிவான்; எழுத்து முதலிய குற்றம் இன்றிப் பாடினுல் செல்வம் பெருகும், நோய் அகலும், சுற்றம் அகலாது, வாழுள் மிகும், மரபு நீளும்; குற்றம் சேர்ந்தால், செல்வம் போகும், நோய் ஆகும், சுற்றம் அறும், மரணம் உறும்; இத்தகு கவிதையால் தேவரைப் பாடின், தீயபலன் பாடினவ னையே சாரும். இவை சி.பா தரும் கருத்துக்கள்.

நற்கவியால் பாடப்பட்டோர் மாமதிபரிதி போன்று இவ் உலகத்து உயர்ந்திருப்பார்; பாடியவர் கலைமகளும் திருமகளும் பெற்று வாழ்வர் என இ.வி அறைகின்றது.

## செய்யுள் உறுப்புக்கள்

| தொல் | கா.பா | அவி | அ.சா | கலம் | காரிகை | வீ.சோ | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 மாத்திரை | | | | | | | | | | | |
| 2 எழுத்து | 1 | 1 | 1 | 1 | 1 | | 1 | 1 | 1 | | 1 |
| 3 அசை | 2 | 2 | 2 | 2 | 2 | 1 | 2 | 2 | 2 | 1 | 2 |
| 4 சீர் | 3 | 3 | 3 | 3 | 3 | 2 | 3 | 3 | 3 | 2 | 3 |
| 5 அடி | 5 | 5 | 5 | 5 | 5 | 3 | 5 | 5 | 5 | 4 | 5 |
| 6 யாப்பு | | | | | | | | x | | | |
| 7 மரபு | | | | | | | | | | | |
| 8 தூக்கு | | | | 7 | | | | | | | |
| 9 தொடை | 6 | 6 | 6 | 6 | 6 | 4 | 6 | 6 | 6 | 5 | 6 |
| 10 நோக்கு | | | | | | | | | | | |
| 11 பா | x | x | x | x | x | x | x | x | x | x | x |
| 12 அளவு | | x | | x | x | | x | x | x | x | x |
| 13 திணை | | | | | | | | x | | | |
| 14 கைகோள் | | | | | | | | x | | | |
| 15 கூற்று | | | | | | | | x | | | |
| 16 கேட்போர் | | | | | | | | x | | | |
| 17 களன் | | | | | | | | இடன் | | | |
| 18 காலம் | | | | | | | | x | | | |
| 19 பயன் | | | | | | | | x | | | |
| 20 மெய்ப்பாடு | | | | | | | | x | | | |
| 21 எச்சம் | | | | | | | | x | | | |
| 22 முன்னம் | | | | | | | | x | | | |
| 23 பொருள் | | | | | | | | x | | | |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 24 துறை | | | | | | | | x | | | |
| 25 மாட்டு | | பொருள் கோள் | x | x | x | | | | | | |
| 26 வண்ணம் | | x | | x | x | x | x | x | x | x | |
| 27 அம்மை | | | | அம்மை முதலியன | வனப்பு | | | x | | | |
| 28 அழகு | | | | | | | | x | | | |
| 29 தொன்மை | | | | | | | | x | | | |
| 30 தோல் | | | | | | | | x | | | |
| 31 விருந்து | | | | | | | | x | | | |
| 32 இயைபு | | | | | | | | x | | | |
| 33 புலன் | | | | | | | | x | | | |
| 34 இழைபு | | | | | | | | x | | | |
| தளை | 4 | 4 | 4 | 4 | 4 | | 4 | 4 | 4 | 3 | 4 |
| | | | | | பந்தம் | | | | | | |
| கூன் | தனிச் சொல் | x | | x | x | x | x | x | | x | |
| வகையுளி | | x | x | x | x | | x | x | | | |
| | | | | விகாரம் | x | | x | | | | |
| | | | | எழுத்தல் இசை | குறிப் பிசை | | | குறிப் பிசை | | | |
| | | | | | வாழ்த்து | | | x | | | |
| | | | | | வசை | | | x | | | |
| | | | | | ஒப்பு | | | x | | | |
| | | | | | | | | புனைந்துரை | | | |
| | | | | | | | | ஆனந்தம் | | x | |

(1) எண்கள் முறை வைப்பைக் குறிக்கும். (2) 'x' அடையாளம் உறுப்பாக வன்றியும் செய்தி வருமாற்றைச் சுட்டும். எண் இன்றி வருவனவும் இவை. (3) பெயர் மாறுபாடு உள்ளே தரப்படுகின்றன.

# பிரபந்தச் செய்யுள் இலக்கியங்கள்

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 சாதகம் | | | | | | | 1 | 1 | |
| 2 பிள்ளைப் பாட்டு | 1 பிள்ளைக் கவி | 1 பிள்ளைக் கவி | 1 பிள்ளைக் கவி | 1 பிள்ளைக் கவி | 1 பிள்ளைக் கவி | 4 பிள்ளைக் கவி | 2 பிள்ளைக் கவி | 2 பிள்ளைக் கவி | 4 |
| 3 குடை மங்கலம் | | | | | | | | | |
| 4 ஒருபோகு (தேவபாணி) | | | | | | | | | |
| 5 கலம்பகம் | 4 | 2 | 2 | 2 | 2 | 5 | 4 | 4 | 26 |
| 6 உலா | 30 | 23 | 35 | 34 | 48 | 7 | 48 | 48 | 8 |
| 7 சின்னப்பூ | 18 | 14 | 15 | 14 | 36 | 10 | 87 | | |
| 8 பரணி | 50 | 43 | 60 | 56 | 29 | 6 | 3 | 3 | 28 |
| 9 மடல் | 32 | 26 | 36 இன்ப மடல் | 35 இன்ப மடல் | 46 வளமடல் | 8 | 50 வள மடல் | 50 வள மடல் | 10 இன்ப மடல் 11 வள மடல் |
| 10 மறம் | | | | | | | | | 36 |
| 11 பல்சந்த மாலை | 2 | 9 | 25 | 24 | 25 | 26 பலசந்த மாலை | 17 பலசந்த மாலை | 17 பலசந்த மாலை | |
| 12 இணை மணி மாலை | 15 | 8 | 8 | 7 | 7 | 34 | 13 | 13 | |
| 13 இரட்டை மணி மாலை | 14, 46 | 7 | 7 | 6 | 8, 19 | 29 இரட்டை மாலை | 12 | 12 | 20 |
| 14 மும்மணி மாலை | 11 | 4 | 19 | 18 | 9 | 33 | 30 | 30 | 21 |

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 15 நான்மணி மாலை | 12 | 5 | 20 | 19 | 10 | 22 | 15 | 15 | 22 |
| 16 கலம்பக மாலை | 17பன்மணி மாலை | 13பன்மணி மாலை | 3 பன்மணி மாலை | 3 பன்மணி மாலை | 3 | 31பன்மணி மாலை | 18பன்மணி மாலை | 18 (இரு பெயரும்) | 27பன்மணி மாலை |
| 17 மும்மணிக் கோவை | 6 | 3 | 9 | 8 | 4 | 32 | 8 | 6 | 18 |
| 18 கலியந் தாதி | | | | | | | | | |
| 19 ஒலியந் தாதி | 5 | 12 | 10 | 9 | 13 | | 45 ஒலிய லந்தாதி | 45 | |
| 20 யானைத் தொழில் | 42 | 30 | 59 ஆனைத் தொழில் | 55 ஆனைத் தொழில் | 62 | | | | |
| 21 வருக்க மாலை | 47 | | 18 | 17 | 16 | 14 | 22 | 21 வர்க்க மாலை | |
| 22 நாமமாலை | 45 | 27 | 33 | 32 | 52 | 19 | 16 | 16 | |
| 23 இன்னிசைத் தொகை | | | | | | | | | |
| 24 விருத்த வகை | 20 | 16 | 16 | 15 விருத்த விலக்கணம் | 44 | 23 விருத்த விலக்கணம் | 88 விருத்த விலக்கணம் | | |
| 25 ஐம்படை விருத்தம் | | | | | | | | | |
| 26 நாழிகைக் கவி | 24 கடிகை வெண்பா | 41 கடிகை வெண்பா | 56நாழிகை வெண்பா | 52நாழிகை வெண்பா | 40நாழிகை வெண்பா | | 86 கடிகை வெண்பா | | |
| 27 நவமணி மாலை | 26 | 36 | 23 | 22 | 28 | 25 | 14 | 14 | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 28 கைக்கிளை | 10 | 19 | 34 கைக்கிளை மாலை | 33 | 17 | | 72 | 51 | |
| 29 ஆழியோன் பிறப்பு | 27 தசப்பிரா துற்பவம் | 37 தசப்பிரா துற்பவம் | 55 தெசப்பிரா துற்பவம் | 51 தசப்பிரா துற்பவம் | 54 உற்பவ மாலை | | 28 உற்பவ மாலை | 28 உற்பவ மாலை | |
| 30 அட்ட மங்கலம் | 25 | 35 | 22 | 21 | 33 | 24 | 10 | 10 | |
| 31 இல்லற வெள்ளை | | | | | | | | | |
| 32 மங்கல வெள்ளை | 41 | | 30 | 29 மங்கல வள்ளை | 18 மங்கல வள்ளை | | 73 மங்கல வள்ளை | 76 மங்கல வள்ளை | |
| 33 தாரகை மாலை | 40 | | 54 | 50 | 53 | | 27 | 27 | |
| 34 செந்தமிழ் மாலை | | | | | | | | | |
| 35 தாண்டகம் | | | | | | | 77 | | |
| 36 பதிகம் | | | | | | | 78 | 74 | 16 |
| 37 மெய்க்கீர்த்தி | 43 | 38 | 31 மெய்க்கீர்த்தி வஞ்சி | 30 | 22 | | | | |
| 38 மறக்கள வழி | | | | | | | | | |
| 39 மறக்கள வஞ்சி | | | | | | | | | |
| 40 செருக்கள வஞ்சி | 48 | | 57 | 53 | 57 | 20 | 36 | 37 | |

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 41 ஆற்றுப் படை | 36 | 39 | 26 | 25 | 63 | 13 | 53 | 54 | |
| 42 கண்படை | | | | | | | 54 | 56 | |
| 43 துயிலெடை | | | | | | | | 57 | |
| 44 விளக்கு நிலை | | | | | | | 60 | 63 | |
| 45 கடாநிலை | | | | | | | | | |
| 46 ஆண்டு நிலை | | | | | | | | | |
| 47 பறைநிலை | | | | | | | | | |
| 48 அந்தாதித் தொகை | 3 அந்தாதி | 10 அந்தாதி | 4 | 4 | | | | | 24 அந்தாதி |
| 49 மருட்பா | | 42 | | | | | | | |
| 50 பாதாதி | 34 பாதாதி கேசம் | 20 | 27 | 26 | 60 | | 69 | 68 | |
| | 35 கேசாதி பாதம் | 21 | 28 | 27 | 61 | | 70 | 69 | |
| 51 முலைப் பத்து | 29 பயோ தரப் பத்து | 32 | 12 பயோ தரப் பத்து | 11 | 42 | | 68 பயோ தரப் பத்து | 65 பயோ தரப் பத்து | |
| 52 நயனப் பத்து | 28 | 31 | 13 அம்பகப் பத்து | 12 கண் பத்து | 43 | | 67 | 64 | |
| 53 உழத்திப் பாட்டு | | | | | | | | | 37 பள்ளு நாடகம் |
| 54 குறத்திப் பாட்டு | | | | | | | | | 35 குறம் |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 55 ஒருபா ஒரு பஃது | 16 | | 24 | 23 | 12 | 11 | 51 | 52 | |
| 56 இருபா இருபஃது | 13 | 6 | 11 | 10 | 11 | 12 | 52 | 53 | |
| 57 கோவை | 9 | 40 | 6 அகப் பொருட் கோவை | 5 | 5 | 28 | 5 அகப் பொருட் கோவை | 7 அகப் பொருட் கோவை | 5 அகக் கோவை |
| 58 கணக்கு | | | | | | | | | |
| 59 தொடர் நிலை | 51 பெருங் காப்பியம் | 44 | 61 | 57 | | 2 | | | 1 |
| | 52 காப்பியம் | 45 | 62 | 58 | 45 | 1 | | | 2 சிறு காப்பியம் |
| | 53 புராணம் | | 63 | 59 | | 3 | | | 3 பிரபந்தம் |
| 60 பாட்டு | | | | | | | | | |
| 61 கடைநிலை | | | | | | | 62 | 71 | |
| 62 கையறுநிலை | | | | | | | 63 | 72 | |
| | 7 ஊர் நேரிசை வெண்பா (பெயர்) | | | | 21 ஊர் நேரிசை | | 58 ஊர் நேரிசை | 61 ஊர் நேரிசை | |
| | | | | | 20 பெயர் நேரிசை | | 57 பெயர் நேரிசை | 60 பெயர் நேரிசை | |
| | 8 ஊரின் னிசை வெண்பா (பெயர்) | | | | 14 ஊரின் னிசை | | 56 ஊரின் னிசை | 59 ஊரின் னிசை | |
| | | | | | 15 பெயரின் னிசை | | 55 பெயரின் னிசை | 58 பெயரின் னிசை | |

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 19 தசாங்கம் | 15 | 14 தசாங்கப் பத்து | 13 தசாங்கப் பத்து | 30 தசாங்கப் பத்து | | 64 தசாங்கப் பத்து 59 | 73 தசாங்கப் பத்து 62 | |
| | 21 ஊர் வெண்பா | 17 | | | | | | | |
| | 22 அலங்கார பஞ்சகம் | 18 | 21 | 20 | 34 | 35 | 71 | 70 | 23 அலங்கார பஞ்சகம் |
| | 23 ஊசல் | 33 | 17 | 16 | 35 | 27 | 84 | | |
| | 31 குழமகன் | 25 | | | 59 | | 76 | 75 | |
| | 33 அங்கமாலை | 22 | 29 | 28 | 26 | 9 | 9 | 9 | |
| | 37 தானைமாலை | | 53 | 49 | 55 | 15 | 29 | 29 | |
| | 38 வஞ்சிமாலை | 29 | 47 | 43 | | 16 | 34 போர்க்கெழுவஞ்சி 41 | 34 போர்க்கெழுவஞ்சி 42 | |
| | 39 வாகைமாலை | | 52 | 48 | | 17 | | | |
| | 44 புகழ்ச்சிமாலை | 28 | | 31 | 51 | 18 | 20 | 20 | |
| | 49 வரலாற்றுவஞ்சி | | 58 | 54 | 56 | 21 | 35 | 35 | |
| | | 11 தொகை வெண்பா | | | | | | | |
| | | 24 தூது | 39 | 38 | 64 | | 74 | | |
| | | 34 அரசன் விருத்தம் | | | | | 66 | 66 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5 வருக்கக் கோவை | | | 7 | 44 | 7 |
| 32 பெரு மகிழ்ச்சி மாலை | | | 21 | 22 | |
| 37 உலா மடல் | 36 | 47 | 49 | 49 | 14 |
| 38அனுராக மாலை | 37 | 49 | 11 | 11 | 12 |
| 40 எண் மாலை | 40 | | | | |
| 41 மஞ்சரி | | | | | |
| 42, 48 காஞ்சி மாலை | 44 | | 37 | 38 | |
| 43 முல்லைக் கலி | | | | | |
| 44 சதகம் | | 37 | 79 | | 15 |
| 45 வெட்சி மாலை | 41 | | 32 வீர வெட்சி மாலை | 32 வீர வெட்சி மாலை | |
| 46 கரந்தை மாலை | 42 | | 33வெற்றிக் கரந்தை | 33வெற்றிக் கரந்தை மஞ்சரி | |
| 49 நொச்சி மாலை | 45 | | 38 | 39 | |

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 50 உழிஞை மாலை | 46 | | | 39 | 40 | |
| | | | 51 தும்பை மாலை | 47 | | | 40 | 41 | |
| | | | | 39 பெயர் மாலை (பொருள், இடம், காலம், தொழில்) | | | | | |
| | | | | | 6 தொகைச் செய்யுள் | | 44 | 44 | |
| | | | | | 23 காப்பு மாலை | | 24 | 24 | |
| | | | | | 24 வேனில் மாலை | | 25 | 25 | |
| | | | | | 27 வசந்த மாலை | | 26 | 26 | |
| | | | | | 31 பதிற்றந் தாதி | | 46 | 46 | |
| | | | | | 32 நூற்றந் தாதி | | 47 | 47 | 25பதிற்றுப் பத்தந்தாதி |
| | | | | | 38 எண் செய்யுள் | | 43 | 36 | |
| | | | | | 39 ஐந் திணைச் செய்யுள் | 6 ஐந் திணைப்பா | | 8 | |

| | | | |
|---|---|---|---|
| 41 நாஞற்பது | | 75 நாற்பது | 77 நாற்பது |
| 60 மெய்க்கீர்த்தி மாலை | | 23 | 23 |
| 58 மாலை | 30 மணி மாலை | 19 | 19 |
| | | 31 தண்டக மாலை | 31 |
| | | 42 வாதோரண மஞ்சரி | 43 தோரண மஞ்சரி |
| | | 61 புறநிலை | 55 |
| | | 65 தசாங்கத்தயல் | 67 |
| | | 80 செவியறிவுறாஉ | |
| | | 81 வாயுறை வாழ்த்து | |
| | | 82 புறநிலை வாழ்த்து | |
| | | 83 பவனிக் காதல் | |
| | | 85 எழுகூற்றிருக்கை | |
| | | 89 முதுகாஞ்சி | |

| ப.பா | வெ.பா | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ | சுவாமீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | 90 இயன் மொழி | | 6 புறக் கோவை<br>13 வீரக மாலை<br>17 இரட்டை மணிக் கோவை<br>19 நான் மணிச் கோவை<br>29 திக்கு விசயம்<br>30 காதல்<br>31வண்ணம்<br>32 பஞ்ச ரத்தினம்<br>33 நவ ரத்தினம்<br>34 ஏசல் |
| 62 | 52 (+ 1) | 45 | 63 | 59 | 63 (+ 1) | 35 | 90 | 77 | 37 |

குறிப்பு: எண்கள் பிரபந்த முறைவைப்பைக் குறிக்கும்; பெயர் வேறுபாடுகள் உள்ளே தரப்படுகின்றன. மொத்த எண்ணிக்கை இறுதியில் தரப்படுகின்றது.

# தமிழ் இலக்கியத்தில் யாப்பு

தமிழ் இலக்கணங்கள் காட்டும் பா, வகை, இனங்களும், அவை குறிப்பிடாத பல புதிய யாப்பு வடிவங்களும் இலக்கியத்தில் வேறு பாடின்றியும் பல மாறுபாடுகளுடனும் வளர்ச்சிகளுடனும் பயில் கின்றன. கவிஞனின் கற்பனை உள்ளமும், நாட்டுப்புற இலக்கியத் தாக்கமும் பிற மொழியாப்புத் தோய்வும் இத்தகு வேறுபாடு கட்குக் காரணமாகின்றன.

பல பழைய யாப்பு வடிவங்கள் மறைந்து, புதியன புகுவதற்கு இடமளித்துள்ளன. காலந்தோறும் இத்தகு புதுமைகள் இலக்கியத் தில் கால்கொண்டுள்ளன. அனைத்துக் கருத்து வெளியீட்டிற்கும் களனாக இருந்த செய்யுள் வடிவம், பின் யாப்பு வரையறையில்லாக் கவிதைக்கும் உரைநடைக்கும் வழிவிட்டு விலகியது. இன்றைய நிலையை நோக்குவோமாயின் கடின யாப்பு வரையறைகள் குன்றி, இனிமை மிக்க எளிய வடிவங்கள் தோன்றியுள்ளன.

*சங்ககாலம் :* சங்க இலக்கியங்கள் ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில், இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளில் எழுந் தவை என்பர். இவை ஆசிரியம், கலி, பரிபாட்டு ஆகிய யாப்பில் இயன்றவை. வஞ்சியமைப்பும் வெண்பாவும் விரவப் பெற்றவை. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு பதிற்றுப் பத்து, அக நானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு என்பன ஆசிரிய யாப் பிலும் கலித்தொகையும் பரிபாடலும் முறையே கலி, பரிபாட்டு யாப்பிலும் அமைகின்றன. பத்துப்பாட்டு, புறநானூறு பதிற்றுப் பத்து என்பன அங்கங்கே வஞ்சிச்சாயல் காட்டுகின்றன. கலி, பரி பாட்டின் இடையே வெண்பா அமைப்புக்கள் உள்ளன.

ஆசிரியப் பாடல்கள் மூன்று அடிமுதல் (ஐங்குறு நூறு) 782 அடிவரைச் (மதுரைக் காஞ்சி) செல்கின்றன. ஈற்றயலடி முச் சீரான நேரிசை ஆசிரியமும், அனைத்தடியும் நாற்சீரான மண்டில மும், பெரும்பாலும் ஒரு கூன் பெற்று ஐஞ்சீரடியாய் வருவன விரவிய அடிமயங்கு ஆசிரியமும், இடையடிகள் இரண்டு சீர் அல்லது மூன்றுசீர் அல்லது அருகி ஒருசீர் பெறும் குட்டமும் இங்குப் பயிலும் ஆசிரிய வகைகள்.

இடையடிகள் இரண்டும் மூன்றும் சீருமாய் வரும் ஆசிரியங் கள் பெரும்பாலும் புறப்பொருள் மேலன. இவை மிகுதியாகப்

புறநானூற்றிலும் பதிற்றுப் பத்திலும் காணக் கிடக்கின்றன. நெடும்பாடல்களில் மதுரைக் காஞ்சியும் பட்டினப்பாலையும் இவ் இயல்பின.

பட்டினப்பாலை வஞ்சி நெடும்பாட்டு எனப் பெயர் பெறுவதும், பதிற்றுப்பத்துப் பாடல் சில வஞ்சித் தூக்குப் பெறுவதும், புறநானூற்றில் டாக்டர் செட்டியாரின் கருத்திற்கேற்ப வஞ்சிப் பாக்கள் சில (4,17,22,98,136,166,239,396) காணப்படுவதும் இங்கு நினைத்தற்குரியன.

சங்க இலக்கியப் பாடல்கள் பெரும்பான்மையும் ஆசிரியத்தின் பொது அமைப்புப்படி ஏகார முடிவு பெறினும், ஆய் (குறு 150 ஐங் 21-30, 211-220), ஆர் (புறம் 361), ஓ (அகம் 46, ஐங் 87,196 231-240,289) ஆகிய முடிவுகளையும் பெற்றுள்ளன.

ஐங்குறு நூறும் பதிற்றுப் பத்தும், பத்துப் பத்துப் பாடல் இணைந்து வரும் பதிக அமைப்புடையன.

பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பத்தும் ஒரு 'பதிகம்' பெறுகின்றது. இப் பதிகம் ஓரளவு செய்யுள் அமைப்புப் பெறினும் முழுமையாக அகவலோசை உடையன அல்ல; உரைநடைக்கும் பாவுக்கும் இடைப்பட்ட ஒரு தன்மையுடன் இவை அமைந்துள்ளன. ஆசிரியம் போன்று தொடங்கிக் கட்டுரையாக இவை முடிகின்றன.

பதிற்றுப்பத்தின் பாடல்கள் வண்ணம், தூக்கு எனும் பகுப்புக்கள் பெறுகின்றன. காப்பியம் கூறும் தூக்கு, வண்ணம் எனும் உறுப்புக்களை இங்கு இணைத்து நினைப்போமாயின், ஓசையினிமைக்கு முதன்மையளித்த (sound conscious) தன்மை தெரிகின்றது. செந்தூக்கும் வஞ்சித்தூக்கும் ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும் இங்குப் பயின்றன. (1) பதிற்றுப் பத்தின் அனைத்துப் பாடல்களும் செந்தூக்கும் ஒழுகுவண்ணமும் பெறுகின்றன. (2) அவற்றுள் சில, இவற்றுடன் வஞ்சித்தூக்குப் பெறுகின்றன. (3) சில சொற்சீர் வண்ணம் பெறுகின்றன. (4) பிற வஞ்சித் தூக்கும் சொற்சீர் வண்ணமும் பெறுகின்றன. எனவே நால்வகை அமைப்புக்கள் உள.

பாவமைப்பும், அவை பெறும் வண்ணம்-தூக்குப் பகுப்பும் தொடர்புடையன என்பதைப் பதிற்றுப்பத்தின் பாடல்கள் வழி உணர முடிகின்றது. 1. நேரிசை ஆசிரிய அமைப்புப் பொருந்திய பாடல்களே செந்தூக்கும் ஒழுகு வண்ணமும் மட்டும் பெறுவன. 2. இவற்றுடன் சொற்சீர் வண்ணம் உடையன இடையே இருசீர் முச்சீரடி, கூன் பெறும் நிலையில் வேறுபடுகின்றன. 3. செந்தூக்கு ஒழுகு வண்ணங்களுடன் வஞ்சித்தூக்குப் பெறுவன, முதலிலோ

இடையிலோ இருசீரடி பட்டும் பயின்ற நிலையில் தனித்து நிற்கின்றன. இவ் இருசீரடிகளில் ஒருசீர் அசைச்சீராகப் பெரும்பான்மையும் அமைந்தமை பிறிதொரு தனித்தன்மை. 4. இருவகை வண்ணமும் இருவகைத் தூக்கும் பெறும் பிற பாடல்களில் மேற்கூறிய மூவகையின் இயல்பும் விரவியுள்ளது. இருசீரடியும் முச்சீரடியும் கூனும் ஓரசைச்சீரும் இவ் அமைப்பில் உண்டு.

சங்க இலக்கியம் காட்டும் ஆசிரியப் பாக்கள் பிற்கால ஆசிரியங்கள் போல் ஈரடி எதுகையோ, பொழிப்பு மோனையோ பெறாதே பெரும்பாலும் இயன்றன. பலவகைத் தொடைகளின் பயிற்சி இருப்பினும் குறிப்பிட்ட அமைப்பு நிலையின்றி விரவி வந்தன. செந்தொடை நிலையும் அமைந்து தொடைப் பயிற்சியின் பாங்கினை உணர்த்தின. ஐங்குறுநூற்றுத் தொண்டிப் பத்தின் பத்துப் பாடல்கள் அந்தாதித் தொடர்பு பெறுவது பிற சங்க இலக்கியப் பகுதியில் காணப்படாக் கூறு.

*பரிபாடல்* : பரிபாடல் காட்டும் பாடல்கள், ஆசிரியமும் வெண்பாவும் கலியும் கலந்து அமைவதே பரிபாட்டு எனும் எண்ணத்தை ஏற்படுத்துகின்றன. பரிபாடற்றிரட்டில் ஏழு தனி, வெண்பா ஒரு இன்னிசைச் சிந்தியல் வெண்பா, ஒரு பஃறொடை வெண்பா – இவை காணப்படுகின்றன. ஒரு தனி ஆசிரியமும் வருகின்றமை நினைத்தற்குரித்து. இவையொழிய 24 பாடல்கள் பரிபாட்டு யாப் பினவாகக் கொள்ளப்படுகின்றன.

பரிபாடலை வெண்பாவின் வகையாகக் காப்பியம் காட்டிய போதும், வெண்பாத் தன்மை குன்றியே இப்பாடல்கள் காணப்படுகின்றன. வெண்பாச் சுரிதகத்தில் இறும் பாடல்கள் அகவலில் முடியும் பாடல்களை விடக் குறைவாகவே உள்ளன. காப்பியம் பரிபாடல் உறுப்பாகக் கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து சொற்சீரடி, முடுகியலடி என்பனவற்றைத் தரப் பரிபாடல் நூல் அகவற்பா, ஐஞ்சீரடி ஆகியவற்றையும் இணைத்துள்ளது.

அன்றியும், பல கொச்சகங்களால் ஆகியது போன்ற சில பரிபாடலின் தன்மையும் கலிப்பாவுறுப்புக்கள் பயிலும் அமைப்பும், பரிபாடலைக் கலியோடு நெருங்கிய தொடர்புடையதாகக் காட்டுகிறது.

அகப்பொருண்மை பற்றி இப்பா அமைய வேண்டும் என்ற (காமம் கண்ணிய நிலைமைத்து ஆகும்) காப்பியக் கருத்து இருக்கப் பரிபாடல் இறைவணக்கமும், இடச் சிறப்பும் அகப்பொருண்மையுடன் பொருளாகக் கொண்டது.இது வேறுபாட்டு வளர்ச்சி நிலை

*கலித்தொகை* : கலிப்பாவின் வகையில், முன்னிலையில் தேவரைப் பரவல் எனும் பொருண்மை நிலையில் பகுப்பு ஒன்றனைக்

காப்பியம் அமைத்தமைக் கேற்ப, கடவுள் வாழ்த்தாக ஒருபாட லும் ஐந்திணைப் பொருண்மையுடன் பிறபாடலும் கலித்தொகை யில் அமைகின்றன.

பதினோரடிமுதல் (பாடல் எண் 6) என்பது அடிவரைச் (104) செல்கின்றது கலிப்பா. ஒத்தாழிசைக் கலியே கலிப்பா வகை களில் மிகுதியாகப் பயின்றது (68பாடல்) இவை பாலை-25, குறிஞ்சி -10, மருதம்-15, நெய்தல்-18 எனப் பயின்று, முல்லையில் இவ் எளிய அமைப்பு இன்மையைக் காட்டுகின்றது. நெடிய பாடலும் முல்லை யிலேயே அமைந்தமை (104), முல்லைப்பகுதி பாவமைப்பிலும் பிற திணைப் பாடலிலிருந்து மாறுபட்டு நிற்குமாற்றைக் காட்டு கின்றது.

கலிவெண்பா அமைப்புடைய பாடல்கள் எட்டு மட்டுமே காணப்படுகின்றன (6,12,18,24,27,51,65,111). நச்சினார்க்கினியர், ஒரு பொருண்மையே குறித்துப் பல கொச்சகம் விரவுவனவற்றை யும் கொண்டு, கலிவெண்பா பலவெனக் காட்டினார்.

60,87,91,113 ஆகிய பாடல்கள் காப்பியம் மட்டும் குறிப்பிடும் உறழ்கலி யாப்பின. உரையாடல் தன்மை பெற்று வரும் இப்பா வகை, அமைப்பு நிலையில் ஒருமை காட்டவில்லை. உரையாடல் அமைப்பே இவ் வகையை உருவாக்கியதால் பாவமைப்பில் வரை யறை முதன்மை இல்லை எனலாம். தரவு, கொச்சகம், ஆசிரியம், வெண்பாவடி என்பன மயங்கல் உண்டு (60). கூன் பெற்ற கொச்ச கங்கள் மட்டுமே வரல் உண்டு (87). இடைநிலைப் பாட்டு, கொச்ச கம், தனிச்சொல் வெண்பா, வடி விரவலும் உண்டு (113.)

ஏறக்குறைய ஒத்தாழிசையின் எண்ணிக்கையை ஒத்தே கொச்சகப் பாக்கள் கலித்தொகையின் கண் அமைந்துள்ளன. இவையும் அமைப்பொப்புமையைவெளிப்படுத்தவில்லை சிலதரவும் சுரிதகமும் பெற்று அமைகின்றன (21, 32); சில இருதரவும் சுரிதக மும் கொண்டு முடிகின்றன (55); இன்னும் சில, தரவும் இரு இடைநிலைப்பாட்டும் சுரிதகமும் உடையன (62). பிற பாடல்கள் இவ்வளவேனும் விளக்கத்துள் அடக்கவியலாது பல உறுப்புப் பல் விதமாக விரவும் பாங்கின. தனி வெண்பா அடிகள் இடை யிடையே தென்படுவதும் உண்டு. பிற்காலக் கருத்துப்படி இவற்றை மயங்கிசைக் கொச்சகம் எனலாம்.

பொதுநிலையில் கலித்தொகையின் கண் அமைப்பொழுங் குடைய பாடல்கள் பாலைப் பகுதியிலேயே மிகுதியாக அமைகின் றன (ஒத்தாழிசை). அமைப்பொழுங்குள் உட்படுத்த இயலாப் பாடல்கள் முல்லைப் பகுதியில் தான் மிகுதி.முடுகியல் அம்போத ரங்க உறுப்புக்களும் முல்லையிலேயே மிகுதியாகப் பயின்றன.

கீழ்க்கணக்கு: அகப்பொருண்மை மிகுந்து புறப்பொருண்மை ஓரளவு இணைந்து வந்த சங்கப் பாடலிலிருந்து வேறுபட்டு, புறம் முன்னின்று அறம் - பொருளாக விரிந்து பெருகி, அகம் இன்பமாகி மூன்றும் நிலைக்குப் பின் தங்கிவிட்ட அமைப்பு பதினெண் கீழ்க்கணக்கில் தென்படுகின்றது. பதினொரு நூற்கள் அறம் பற்றியும், ஆறு நூற்கள் இன்பம் குறித்தும், ஒரு நூல் புறம் (போர்) கூறியும் அமைகின்றன.

யாப்பு வடிவ நிலையில் பதினெண் கீழ்க்கணக்கு வெண்பாவுக்கே முதலுரிமை அளித்தது. சங்க இலக்கியத்தில் உதிரியாக (கலியிடையும் பரிபாடலிலும்) ஒரு சில வெண்பாக்களே அமைய, இங்கு வெண்பா பெருவாரியாகப் பயின்றதில் ஒரு முரண் தென்படுகின்றது. முதுமொழிக் காஞ்சியொழியப் பிற பதினேழு நூற்களும் வெண்பா யாப்பில் இயலுகின்றன. குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என்பன வருகின்றன. குறள் வெண்பா திருக்குறளிலும் நேரிசை வெண்பா பிறநூற்களிலும் மிகுந்து பயின்றன.

முதுமொழிக் காஞ்சியே வெண்பா வடிவம் பெறாதது. இதனை ஆசிரியம் எனவும் (க.த.தி) குறள் வெண்டுறை எனவும் (குழந்தை) கருதுவர். பத்துப் பத்துமுதுமொழிகளின் பத்துத்தொகுப்புக்களாக அமைந்து ஒவ்வோரடியும் ஒரு செய்யுள் ஆகிக் கருத்து முடிபு உணர்த்தி நிற்கின்றன. சொற் சீர் யாப்பு (நூற்பா) என இதனைக் கொள்வது தவறின்று. முதலடி மகுடமாக அமைகின்றது எனல் வேண்டும். எவ்வாறுயினும் புதுவகை யாப்புப் புகுந்தமையை இக் கால இலக்கியத்தில் காண்கின்றோம்.

நான்கடி வெண்பாவிலும் மூவடி (சிந்தியல்) வெண்பாவிலும் இன்னிசை, நேரிசைப் பகுப்பமைத்தது போல் குறள் வெண்பாவில் அமைத்திலர் இலக்கணிகள். திருக்குறள், நால்வகை அமைப்புக்களைத் தருகின்றது. அவற்றைக் கீழ்வருமாறு சுட்டலாம். ஒன்று, முதலடியில் ஒரூஉ எதுகை பெற்ற நேரிசை நிலை.

*அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை-வன்பாற்கண்*
*வற்றல் மரந்தளிர்த் தற்று* (78)

இரண்டாவது ஒரூஉ எதுகை பெறாது அடிஎதுகை பெற்ற இன்னிசை நிலை.

*அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு*
*என்புதோல் போர்த்த உடம்பு* (80)

மூன்றுவது, ஒரூஉ எதுகையும் அடி எதுகையும் உடைய இணைநிலை.

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் - அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு (72)

நான்காவது நிலை, மேற்கூறிய இருவகைத் தொடைகளும் நீங்கிய செந்தொடை நிலை.

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ் (64)

ஆசாரக் கோவை சிந்தியல் வெண்பாவுக்கு இடமளிக்கின்றது.

படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்றும்
அசையாத உள்ளத் தவர் (52)

சிலம்பு: காப்பிய காலத் தொடக்ககத்தைக் குறித்த சிலப்பதிகாரம், தொடர்நிலை எனும் அமைப்பிலும், பயன் கொண்ட பாவமைப்பாலும் புதுமைகள் புரிகின்றது.

ஆசிரியம், கலி, வெண்பா என்பன சிலம்பில் பயிலும் யாப்புக்கள். இவை யொழிய யாப்பு வடிவத்துள் அடங்காத சில பகுதிகளும் இதன் கண் உள. உரைப் பாட்டு மடை, கட்டுரை, கருப்பம் என்பன இத்தகையன. இவை ஓசையொழுங்குடையனவாக அமைந்து, உரைநடையிலிருந்தும் வேறுபடுகின்றன. சொற்சீரமைப்புடையன எனக் கூறினும் தகும். உரைப்பாட்டுமடை பொருட் தொடர்பு உருவாக்கும் கண்ணியாகச் செயற்படுகின்றது. கட்டுரைப்பகுதிகள் பின்னுரைகளாக அமைகின்றன. கருப்பம், முற்கூறிய கருத்தினை வலியுறுத்தும் பொருட்டு மீண்டும் பிறிதொரு ஓசையில் வரும் பகுதியினை உடையது.

சிலம்பின் பெரும்பான்மைப் பகுதியும் ஆசிரியமே. பதினேழு காதைகள் 'என்' எனும் ஈற்றுடன் வரும் நிலைமண்டில ஆசிரியங்கள். 22-ஆம், 23-ஆம்காதைகள் ஈற்றயலடி நாற்சீராய், என் என இறினும் இடையடிகள் வேறுபடுவதால் நிலைமண்டில அமைப்புமுழுதும்பெற்றில .முன்னதில்இடையடியொன்று ஒரு சீர் ஆகிவரப் பின்னதில் இடையே மூன்று குறள் வெண்பாக்கள் (25-30) இடம் பெறுகின்றன. இதனால் இவற்றை இடையடி குறைந்த (குட்டச் செந்தூக்கு) இணைக்குறள் ஆசிரியப்பா என்பதா நிலைமண்டில வேறுபாடு என்பதா என்பது கேள்வி. இப் பத்தொன்பது காதை தவிரப் பதிகமும் ஆசிரிய அமைப்புடையது. அடியார்க்கு நல்லாரால் குட்டச்செந்தூக்குஎனக்குறிக்கப்படும்இது இடையே நாற்சீருக்குக் குறைந்த அடிகள் விரவப் பெற்றதால் இணைக்குறள் ஆசிரியம் ஆகின்றது. காப்பியர் கூறிய இலக்கணத்

திலிருந்து வேறுபட்ட ஆசிரியப் பாவமைப்பை இவற்றில் இளங்கோ பயன் கொண்டுள்ளார்.

கலிப்பாவிலும் மேற்கண்டவாறே புதுவகைப் பரிசோதனைகள் கையாண்டுள்ளார் அடிகள். தொல்காப்பியக் கலிவகைகளின் இலகணக் கட்டுக்குள் உட்படா நிலையிலேயே பெரும்பான்மையான (கலியாப்புக்) காதைகள் சிலம்பில் வருகின்றன. சோதனை வடிவங்களாகவோ (experimental applications) வளர்ச்சி நிலையில் புறநடைகளாகவோ (exceptions) இவற்றைக் கையாண்டிருக்கலாம். இசைக்கு-இசையினிமைக்கு முதன்மை அளித்ததால் வடிவத்தில் நெகிழ்ச்சி ஏற்பட்டதெனக் கொள்ளினும் அமையும். கலியாப்பிலமையும் மங்கல வாழ்த்துப் பாடல் முதலிய பதினொன்று காதையில் (1,7,9,12,17,18,19,20,21,24,29,) கனாத்திற முரைத்த காதையும் (9), வஞ்சினமாலையும் கலிவெண்பா அமைப்புடையன. இவை முறையே 57- உம் 79-உம் அடிபெறும் செவ்விய கலிவெண்பாக்கள். இவை ஒழிந்த ஒன்பதும் கலியுறுப்புக்கள் பலவும் விரவியும் மயங்கியும் வருநிலையின. இவற்றுள்ளும் வழக்குரை காதை, முன்பகுதி தாழிசையும் கருப்பமும் சில நெடில் அடிகளும் பெற்று காட்சிமாறுபாட்டுக்குப்பின் ஆசிரியப் பகுதியுடன் முடிவதால், கலி, ஆசிரிய இணைவெனக் கருதத்தகும். வகையில் உள்ளது.

கலியமைப்புடைய காதைகள் பெரும்பான்மையும் உரைப்பாட்டுமடை, கட்டுரை, கருப்பம் அல்லது உரைப்பா எனத்தகும் பகுதிகள் (சில அடிகள்) பெற்றே வருகின்றன. நாடகப் பாங்கு அமைய வாய்ப்பாக இவை தரப்படுகின்றன எனலாம். தனிச்சொல் பெற்றும் பெருதும், பல கொச்சகங்கள் அல்லது தாழிசைகள் தொடர்ந்து வந்தே இக் காதைகளை ஆக்கும் நிலையை வரி, குரவை எனப் பெயர்பெறும் பகுதிகளில் தெற்றெனக் காணலாம். கொச்சக் கலி எனவும், உறழ்கலி எனவும் பொது நிலையில் இவை அமையினும், வடிவஅமைப்பு (pattern) வகுக்கும் எளிமை இன்மையால், இளங்கோவின் புதியன படைக்கும் கற்பனை யாற்றல் தந்த வடிவப் பெருக்கம் எனக்கொள்ள வேண்டியுள்ளது. யாப்பில் பாவகைகளைப் பொறுத்த மட்டில் இத்துணை புதுமைகள் படைத்த புலவர் இவரை மிஞ்சுவோர் எவரும் இல்லை எனல் வேண்டும்.

சிலம்பின் கலிப்பாக்கள் இடையே பயின்ற தாழிசைகளும் கொச்சகங்களுமே பிற்காலப் பாவினங்களின் வளர்ச்சிக் களனாக அமைவன எனப் பொருத்தமாக அறிஞர் கருதுவர். சங்கக் கலிப்பாக்களில் பாவின வித்தமைந்து, சிலம்புக் காதைகளில் இவை வளர்ச்சியுற்று தேவார திவ்வியப்ரபந்தங்களில் வேரூன்றிப் பரந்தமையை நாமும் உணர முடிகின்றது.

ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், ஆசிரியத்துறை ஆசிரியத் தாழிசை, கலித்தாழிசை என்பன சிலம்பின் இடை வரும் பாவி னங்கள். ஒரு பொருள்மேல் மூன்றடுக்கல், இடைமடக்கு போன்ற பண்புகளும் இவற்றில் பொருந்தியமைகின்றன. விருத்தப்பாவுக்கு வித்திட்டவர் இளங்கோ வடிகளே என்பது பொருந்தும்.

மேகலை, கதை: சங்க இலக்கியங்கட்கும் அற இலக்கியங் கட்கும் இடையே யாப்பில் பெருமாறுபாடு அமைந்தது போன்றே அவற்றிற்கும் சிலம்புக்கும் மிகுந்த வேறுபாடு யாப்பில் அமைந்தது. ஆனால் இந் நிலை இக்காலத்தை அடுத்துத் தோன்றிய காப்பியங் களில் அமையவில்லை. மணிமேகலையின் முப்பது காதைகளும் 'என்' ஈறு கொண்டு முடியும் நிலைமண்டில ஆசிரியப் பாக்கள். பெருங் கதையின் 5 காண்டங்களும் கிடைக்கும் சுமார் 100 காதைகளும் அனைத்தும் இத்தகு ஈறு பெற்ற ஆசிரியங்களே. ஆயின் அவை ஒரு தனித்த வேறுபாடும் உடையன. பொருள் தொடர்நிலை யெனும் காப்பிய அமைப்பு சிலம்பிலேயே தொடங்கிவிட்ட போதிலும் நிலைமண்டிலமும் என் ஈறும் சாத்தனார் நூலிலேயே முழுமையாகக் காண்கிறோம். சங்ககால ஐங்குறுநூற்றுத் தொண்டிப்பத்தின் பாடல்களில் அந்தாதித் தொடை காணப்படினும் அவற்றை முழு மையாக நூலில் ஆண்டு, சொல்-பொருள் தொடர் நூல் இயற்றிய பெருமை கொங்குவேளிரையே சாரும்.

சமய இலக்கியங்கள் யாப்பு வளர்ச்சியின் மற்றொரு கட்டத் தைக் காட்டுகின்றன. பாவுக்கும் பாவகைகளுக்கும் இருந்த முதன்மை இக் காலத்தில் பாவினங்களுக்கு ஆயிற்று. ஒரு நெடும் பாவுக்குள்ளே இடைநிலை பாட்டுக்களாகப் பல பாவினங்கள் அமைந்த (சிலம்பு) இயல்பு மாறி, பாவகையும் இனமும் இடை மிடைந்த (பட்டினத்துப்பிள்ளை நான்மணிமாலை, காரைக்காலம் மையார் இரட்டைமணிமாலை) யாப்பமைப்பு ஏற்பட்டது. முற் காலத்தில் பாவகைகள் முதன்மை பெற்றதற்கும் இடைக்காலத் தில் பாவினம் சிறப்புற்றதற்கும் இடைப்பட்டு, இரண்டையும் இணைக்கும்,ஒருமைப்படுத்தும் பாலம் சிலநூலில் அமைந்தது என லாம்.

பக்தி இலக்கியங்கள் ஆழ்வார்கள் - நாயன்மார்கள் என்ற அடிப்படையில் பகுத்துத் தொகுக்கப்பட்டிருப்பதால் கால நிலையில் அவை பல நூற்றாண்டுகளை உள்ளடக்கி, வரலாற்று நிலை யாப்பு வளர்ச்சியை அறியும் கண்ணோட்டத்திற்கு முழு வெற்றி தருவதில்லை. முதல்ஆழ்வார்கள் ஆறும் நூற்றாண்டளவுப் பழமை யினோராகக் கருதப்படுவதால் முதலில் ஆழ்வார்கள் பாடல் யாப்பு வளர்ச்சி தரப்படுகின்றது.

திவ்வியப்பிரபந்தம்: நாலாயிரம் பாடல்களுடையதாகக் கருதப்படும் திவ்வியப்பிரபந்தம் தனியன்களுடன், பெரியாழ்வார்

473; ஆண்டாள் 174; குலசேகரர் 107; தொண்டரடிப்பொடி 57; திருப்பாண் 11; மதுரகவி 12; திருமங்கை 1147; பொய்கை 101; பூதம் 101; பேய் 101; திருமழிசை 219; நம்மாழ்வார் 1304 என 3807 பாடல்களுடையது. சில திவ்யப்பிரபந்தப் பதிப்புக்கள் இணைக்கும் திருவரங்கத் தமுதனார் 111, மணவாளமாமுனி 177 ஆகியோர் பாடலுடன் (288) இவ் வெண்ணிக்கை நாலாயிரத்தையும் மிஞ்சி 4095, எனச் சொல்வதும் உண்டு.

பிரபந்தம் என்ற பெயர் இந்நூற்கு அளிக்கப் பட்டமைக்கு, அதன்கண் காணப்பெறும் அந்தாதி, தாண்டகம், திருப்பள்ளியெழுச்சி, நூற்றந்தாதி, மடல்,மாலை, விருத்தம் போன்ற பிரபந்தமும் உந்தியார், கோத்தும்பி, சப்பாணி, தாலாட்டு, திருவெழுகூற்றிகை, திருப்பாவை ஆகிய இலக்கிய வகைகளும் காரணமாகலாம்.

பெரும்பான்மையான யாப்பமைப்புக்களும் இப் பேரிலக்கியத்தின்கண் உள.

நேரிசை, இணைக்குறள், மண்டில ஆசிரியங்கள்; நேரிசை வெண்பா, கலி வெண்பா, தரவு கொச்சகம் ஆகியன பயிலும் பாக்கள். ஆசிரியத்துறை, அறுசீர்—எழுசீர்—எண்சீர் ஆசிரிய விருத்தங்கள்; வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம்; கலித்தாழிசை, கலித்துறை, கட்டளைக்கலித்துறை,கலிவிருத்தம் என்பன கையாளப் பெறும் பாவினங்கள். இவற்றில் பல இக்காலத்திற்கு முன் காணப் படாதவை.

நீண்ட அடிகளுடைய பாப்பயிற்சி சுருங்கி,சில அடிகளுடைய செய்யுட் பயின்றமை இவண் அமைகின்றது. நான்கடிச் செய்யுட்களே (4045) பிரபந்தத்தின் கண் மிகுதி. ஆறடிச் செய்யுள்-9; எட்டடியுடையன-3); ஒன்பதடியுடையன-4; பத்தடி பெறுவன-2;ஒவ்வொரு செய்யுள்,15,47,155,297 அடிபெறுகின்றன. இவற்றின் அடிகள் இரண்டு முதல் எட்டுச் சீர் வரைப் பெறும் நிலையும் குறிக்கத்தக்கது. ஓரடியின் கண் எட்டுச்சீர் வரல், இந் நூலுக்கு முன் காணப்படா இயல்பாகும்.

ஒரு தலைப்பின் கீழ் ஒன்றுமுதல் 120 பாடல் வரைத் தொடரும் பாங்கு இந்நூலின்கண் உண்டு. திருமொழியும், திருவாய்மொழிப் பகுதிகள் பத்து அல்லது பதினொரு பாடல் பெற்ற பதிக அமைப்பின. பெரும்பாலும் பதினோராம் செய்யுள் பிறபத்தின் வடிவத்திலிருந்து வேறுபடுகின்றது; ஆயின் அந்தாதித் தொடர்பு விடுபடுவதில்லை.

பா,யாப்பமைப்புக்கள் பெரும்பான்மையும் மரபைப் பின் பற்றியே வருகின்றன. பிரபந்தங்கள் புதிதாகப் புகுந்த வடிவமைப்பாம்.

திருவாசிரியம், திருவெழுகூற்றிருக்கை என்பன அகவற்பா வடிவின. முன்னது ஏழும் பின்னது ஒரு ஆசிரியமும் உடையன. அற இலக்கிய காலத்திற்குப் பின் வெண்பாவின் பயிற்சி மிகுதியாகப் பக்திக் காலத்திலும் அமைந்தமை திவ்வியப்பிரபந்தத்தில் புலனு கின்றது. மூன்றுவதாயிரத்தின் கண் அமையும் ஆறு திருவந்தாதி களும், உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி ஆகிய சேர்க்கைகளும் (507 + 177) இவ்யாப்பின.

இரு கலி வெண்பாக்களும் 'மடல்' பொருண்மையுடன் தனிச் சொல் பெறு இன்னிசை நிலையுடன் வருகின்றன. 280 தரவு கொச் சகங்கள், கலிப்பா வகையில் தற்காலம் வரைப் பயின்று வரும் பாவகையைக் காட்டுகின்றன. முதலில் தனித்தரவுகளைத் தரும் திருமூலரின் திருமந்திரம், இவற்றிற்குக் காலத்தால் முற்பட்டமை யால், தரவுதனித்து வரல் எனும் அமைப்பு திவ்வியப்பிரபந்தத்தில், செல்வாக்குக் காரணமாகத் தொடர்ந்தது எனலாம்.

தரவு கொச்சகத்திலும் இருவகைகள் காணப்படுகின்றன. திருப்பாவையின் முப்பது பாடல்கள் எட்டடித் தரவுகளைப் பெறு கின்றன. பிற பாடல்கள் வெண்டளையும் கலித்தளையும் விரவிய நாற்சீரடி நான்கு கொண்ட தரவுகள். ஒரு அமைப்புடைய பல பாடல்கள் ஒரு குறிப்பிட்ட பொருள்பற்றித் தொடர்ந்தமையும் அற இலக்கியக் கால நிலையே இங்கும் காணப்படுகின்றது.

முற்கால இலக்கியங்களோ பிற்கால இலக்கணங்களோ காட் டாத, வரையறை வகுக்காத வடிவங்கள் சில இந்நாலாயிரத்தின் கண் அமைகின்றன. இவற்றை இசைக் கேற்ப அமைந்த புதுவடி வங்கள் எனலாம்.

ஆசிரியத்துறையோடு ஓரளவு ஒத்து, ஓரளவு மாறுபட்டு அமைகின்றன சில பாடல்கள். ஈற்றயலடி அல்லது இடையடிகள் குறைந்து, முதல் ஈற்றடிகள் அளவொத்து அமையும் ஆசிரியத் துறை யியல்பு இவற்றில் வேறுபடுகின்றது. இந்நான்கடிச் செய்யுட் களில் முதலாம் மூன்றுமடியும் அளவொத்தமைய, இரண்டாம் நான்காம் அடியும் அவ்வாறே அளவொத்து அமைகின்றன. இரண்டாம் நான்காம் அடிகள் பிற இரு அடிகளினும் அளவில் குன்றியமைகின்றன. சவலைச் செய்யுட்கள் எனக் கூறத்தகும் இவற்றில் சீர் எண்ணிக்கை வேறுபாட்டால் பல வகைகள் அமை கின்றன. 8-5, 7-5, 6-4, 5-4 எனும் அமைப்புகள் உள.

நாலாயிரத்தில் மிகுதியாகப் பயின்றவை ஆசிரிய விருத்தம் (1594). அவற்றிலும் அறுசீர் விருத்தமே மிகுதி. திருச்சந்தவிருத்தம் திருமாலை, திருக்குறுந்தாண்டகம் ஆகியவை அறுசீர் விருத்தங்க ளால் மட்டுமே உருப்பெற்றவை. எழுசீர் எண்சீர் விருத்தங்களில்

சீர் அமைப்பு (pattern) வகுக்க வியலாவிடினும் அறுசீர் விருத்தங்களில் வகுக்க இயல்வது அவற்றின் வடிவச் செம்மையை வெளிப்படுத்துகின்றன. மா-மா-காய், மா-மா-விளம், விளம்-மா-மா என்பன அரையடியின் அமைப்பாகப் (இருமுறை) பயின்றன. மாச்சீரும் 5 காய்ச்சீரும் பெறல், நான்கு மா இருகாய் பெறல் ஆகிய தனியமைப்புக்களும் உள. காய் வருமிடத்து விளமும், விளம் வருமிடத்து மாவும் வந்து அருகி அமைப்பு மாறுபாடு ஏற்படுவதுண்டு.

வஞ்சித்துறைச் செய்யுட்கள் (33) மா-விளம், மா-காய்,விளம்-காய் என்பனவற்றில் அமைகின்றன. வஞ்சி விருத்தங்களில் (34) இவ்வாறு வரையறுக்க வியலும் சீர்நிலை காணப்படாததோடு, அவை கலிவிருத்தமாக அலகிடப்படும் தன்மையும் பெற்று நிற்கின்றன.

பெரியாழ்வார் திருமொழியில் கலித்தாழிசை மிகுதியாகப் பயில்கின்றன (115). பெரும்பான்மை நாற்சீரடிச் செய்யுளான இவை பல்லாண்டு, உந்தியார், கண்ணனின் குழுவிப்பருவம் போன்ற பொருண்மைகளில் பயின்றன.

கலித்துறை மிகுதியாகக் காணப்படுகின்றது(660).திருவிருத்தம் இராமாநுச நூற்றந்தாதி என்பன முழுமையும் கட்டளைச் செய்யுட்களாலானவை. பாவினப் பயிற்சியில் கலிவிருத்தம் மூன்றுமிடம் பெறுகின்றது(562).இவற்றில் பொழிப்பு, ஒரூஉ மோனைகள் பெரும்பான்மையும் வந்தன.

மேல்வைப்பு என்ற புதுவகை யாப்பைத் திவ்வியப்பிரபந்தம் புகுத்தியுள்ளது.திருமங்கையாழ்வார் இவ்வியாப்பில் ஒன்பது செய்யுள் அமைக்கின்றார் ஆறடிகளாலான இப்பாடல்கள் ஒவ்வொன்றும்இருபகுதிகளாலாயின. முதற்பகுதி கலிவிருத்த அமைப்புடையது; தொடர்ந்துவரும் பகுதி, தாழிசை வடிவு பெறுவதுடன் பாடல் தோறும் மீண்டும் வருகின்றது. கீர்த்தனையில் பல்லவி மீண்டும் பாடப்படுதலை நினைக்கும்போது, இம் மேல்வைப்பு வடிவமே கீர்த்தனையின் முன்னோடியோ என எண்ணத் தோன்றுகிறது.

இன்னொரு வகைப் புதிய அமைப்பையும் நாலாயிரம் சுட்டுகின்றது. ஈரடிச் செய்யுளாகக் கலித்தாழிசை அமைப்புடன் பதிப்பிக்கப்பட்டிருக்கும் இவை பெரிய திருமொழியில் காணப்படுகின்றன. இப்பத்துச் செய்யுளும் எதுகைத் தொடர்புடைய நாலடிச் செய்யுளாக எழுதத்தகும் தன்மையின. மூன்று அடிகள் அளவொத்து, மூன்றும் அடி மிக்குவரும் இவ் யாப்பு, அப்பரின் அங்கமாலையில் இதே யாப்பு வடிவு காணப்பட்டதை நினைவுறுத்துகின்றது.

திருத்தாய் செம்போத்தே
திருமாமகள் தன்கணவன்
மருத்தார் தொல்புகழ் மாதவ னைவர
திருத்தாய் செம்போத்தே (பெரிய திருமொழி)

தலையே நீவணங்காய்
தலைமாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேரும் தலைவனைத்
தலையே நீவணங்காய் (அப்பர்)

முதலடியே நான்காமடியாக மீண்டு வந்த நிலை நினைக்கத்தக்கது. அடிமடங்கி வரும் ஆசிரியத்துறையின் சாயல் சிறிது இங்குத் தென்படுகிறது.

திருப்பாணாழ்வாரின் 'அமலனாதிபிரான்' பிறிதொரு புதுவடிவ நிலையினது. மூன்றாவதடி பிற அடிகளிலும் அளவு மிகும் நான்கடிச் செய்யுளே இதுவும். அடிகளின் சீர் எண்ணிக்கை மிகுதியும் முதலடியே நான்காமடியாக வராமையும் முன்வகையிலிருந்து இதனை வேறுபடுத்துகின்றன. பாணர் ஆனமையால், புலவரின் இசையறிவு இவ் யாப்பு மாறுபாட்டைச் செய்திருக்கலாம்.

உவந்த உள்ளத்தனாய் உலகமளந் தண்டமுற
நிவந்த நீண்முடியான் அன்றுநேர்ந்த நிசாசரரை
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார் பொழி
லரங்கத் தம்மா னரைச்
சிவந்த வாடையின்மேல் சென்றதாமென சிந்தையே

அந்தாதிப் பயிற்சி, மண்டில அமைப்பு, ஒரு தலைப்பின் பல பாடல்களும் ஒரே ஈறு பெறல், மடக்கு வரல்- எதுகை யின்றியமைமயாக் கூறுகப் பொருந்தியமை-என்பன ஒரு காலப்பகுதியின் யாப்புச் செவ்வியை நிறுவுகின்றன.

திவ்வியப்பிரபந்தம் 'நாலாயிரம் என்று கணக்கிடுபவர்கள் முதலாயிரத்தில் பத்துப் பிரபந்தங்கள், இரண்டாமாயிரத்தில் மூன்று பிரபந்தங்கள், மூன்றாமாயிரமாகிய இயற்பாவில் பத்துப் பிரபந்தங்கள், நாலாமாயிரமாகிய திருவாய்மொழி ஒரே பிரபந்தம் ஆக இருபத்துநான்கு பிரபந்தங்கள் எனக் கணக்கிடவும் காண்கிறோம்' (பக்கம் 7; முன்னுரை; பிரபந்த மரபியல்)

திருமுறைகள்: பக்திக்காலம் ஆழ்வார் பாடல்களுடன் நாயன்மார் பாடல்களையும் பிரபந்தங்களையும் தருகின்றது. ஒரு விரிந்த காலப்பகுதியினராக ஆழ்வார்களும் நாயன்மார்களும்அமைவதால் ஒரு குறிப்பிட்ட கால யாப்பு வளர்ச்சியை நாம் கண்டு துணிய

முடியாது. அவ்வாறே ஆழ்வார் காலம் நாயன்மார் காலம் என வேறுபடுத்தி யாப்புக் கோட்பாடுகளை வரையறுக்கவும் முடியாத வண்ணம் சில ஆழ்வார் நாயன்மார் ஒரே காலத்தினராகவும் இருக்கின்றனர். எனினும் இலக்கியத் தொகுப்புக்கள் காரணமாக ஆழ்வார் பாடல் தனித்துப் பார்க்கப்பட்டது போன்று நாயன்மார் படைப்பும் பார்க்கப்படுகின்றது.

நாயன்மார், திருமூலர், மாணிக்கவாசகர், சேக்கிழார் ஆகியோர் இயற்றியன சைவத்திருமுறைகள் பன்னிரண்டாகப் பகுக்கப்பட்டுள்ளன. இறைவனைப் பாடுவதே பொருட்கொள்கை யாக அமைகின்றது. வடிவநிலையில், பாவினங்களே மிகுதியாகப் புயின்றன எனப் பொதுவாகக் கூறினும், புதுவகை யாப்பமைப்புக் கள், சித்திரகவிகளின் பயிற்சியைக் காணமுடிகின்றது.

மூவர் தேவாரத்தின் முதல் மூன்று திருமுறைகள் ஞான சம்பந்தர் பாடியன. இன்றைய நிலையில், மிகுதியாகக் கிடைக்கும் பதிகங்கள் இவருடையனவே. மூன்று திருமுறைகளிலுமாக 385 பதிகங்கள். முதல் திருமுறைக்கு 136, இரண்டாம் திருமுறையில் 122, மூன்றுமதன்கண் 125+2 எனப் பதிகத் தொகுப்பு அமை கின்றது. முதல் திருமுறை எட்டுப்பண்களிலும் இரண்டாம் திரு முறை ஆறுபண்களிலும் மூன்றும் திருமுறை ஆறுபண்களிலுமாக மொத்தம் 23 பண்கள் இவர் தேவாரத்தின் கண் உள.

பாவுக்குத் தனித்த ஓசைகள், பாவினத்தின் இசை யினிமை, சிலம்பின் வரி-குரவைப் பாடல்களின் இசை நயம், பதிற்றுப் பத்தின் தூக்கு-வண்ண இணைவுகள், பரிபாடலின் பாட்டு-இசை யாழ் (பண்) குறிப்புக்கள் (சான்றாக, பரிபாடல் 2 (திருமால்)— கீரந்தையார் பாட்டு: நன்னாகனார் இசை; பண்ணுப் பாலையாழ்) இவை இசையினிமை பற்றியஉணர்வினை உணர்த்தினும்தோவாரங் கள் பண்வகுப்புப் பெற்றும், இசையுடன் பாடப்பட்டும்-வந்தமை. இணைவு பெற்ற ஒரு காலக் கோட்பாட்டைக் காட்டின எனலாம் (திருப்பாணாழ்வாரின் அமலனாதிப் பிரானும் இங்கு நினைக்கத் தக்கது). யாழ் முரியின் தனத்தன்மையும் சுட்டத் தக்கது.

மொத்தம் 385 (383+2) பதிகங்களில், பாடல் 4162 (4140+ 22); அடிகள் 1667ɘ (1659+88). பெரும்பான்மையும் எல்லாப் பதிகங்களும் பத்துப் பாடல்களும் அப்பாடல்களின் சிறப்பினை உணர்த்தும் திருக்கடைக் காப்புப் பாடலாகப் பதினோராம் பாட லும் பெற்று அமைகின்றன. அப்பதினோராம் பாடலில், ஞான சம்பந்தரின் அக்குறிப்பிட்ட பதிகச் சிறப்போடு படிப்போர் பெறும் பயனும் உணர்த்தப்படுகின்றது. ஆழ்வார் பாடலிலும் இவ் அமைப்பு உண்மை நினைக்கத் தக்கது.

சம்பந்தர் பதிகங்களின் முதல் ஏழு பாடல்கள் பெரும் பான்மை பொதுநிலையிலும், எட்டாம் பாடல் இலங்கையர் கோன் பற்றிய குறிப்பையும் ஒன்பதாம் பாடல் அரி அயன் சிவபிரானது அடி முடி தேடிய செய்தியையும், பத்தாம் பாடல் பிறசமய எதிர்ப் பையும் தந்து அமைகின்றன. இத்தகைய ஒரு அமைப்பு நிலை, அவ ரிடம் கோட்பாடாகவே உருப்பெற்றது போலும். புற வடிவை மட்டுமன்றி அகநிலை யாப்பையும் கருதும் போது, இது ஒரு புதுமை.

இவரது பதிகங்களில் மிகுதியானவை கலிவிருத்தம், 106. ஆசிரியவிருத்தம் 88 பதிகம். கலித்துறை 79. கொச்சகங்கள் 54. ஆசிரியத்துறை 27. வஞ்சி விருத்தம் 13. வஞ்சித்துறை 9. குறட்டாழிசை 3. நாலடி மேல் வைப்பு 3. ஈரடிமேல் வைப்பு 2. இணைக்குறள் ஆசிரியம் 1. இவை போகச் சித்திர கவிகள் சிலவும் உள. திருவியமகம் 4. திருச்சக்கர மாற்று 2. ஏகபாதம் 1. எழு கூற்றிருக்கை 1. திருக்கோமூத்திரி 1. திரு மாலை மாற்று 2. இவை யொழியப் பொருள் கோள் நிலையிலும் ஒரு பதிகம் உண்டு. மொழிமாற்றுப் பொருள்கோள் அது.

இவற்றில், மேல்வைப்பும் சித்திர கவிகளும் தமிழ்யாப்பு வர லாற்றில் இவர் புகுத்திய புதுமைகள். நாலடி மேல்வைப்பாக மூன்று பதிகமும் (261, 262, 366), ஈரடி மேல் வைப்பாக இரு பதிக மும் (263, 264) அமைகின்றன. நான்கடிகளைத் தொடர்ந்து (கலி விருத்தம் போன்ற), வரும் ஈற்றடிகளிரண்டும் ஒரு பதிகத்தின் பாடல் தோறும் ஒத்தமைவது நாலடி மேல் வைப்பு; அவ்வாறே இரண்டடிகளைத் தொடர்ந்து வரும் ஈற்றடி யிரண்டு ஒரு பதிகத் தின் பாடல் தோறும் ஒன்றுகவே அமைவது ஈரடி மேல்வைப்பு. கீர்த்தனையில் மீண்டும் பாடப்படும் பல்லவி இங்குத்தான் கால் கொண்டதோ என எண்ணவேண்டியுள்ளது.

சில சிறப்புக் குறிப்புக்களோடு புதுமையாக அமையும் பதிகங் கள் சம்பந்தர் தேவாரத்தின் கண் அமைகின்றன. திருவிராகம் எனப் பெயர் பெறுவன அறுசீராசிரிய விருத்த, கலிவிருத்த, கலித் துறை யாப்பு நிலையின; வழிமொழித் திருவிராகம் எனக் கலித் துறை யாப்புப் பதிகம் ஒன்று குறிக்கப்படலும் உண்டு. இவை குற்றெழுத்துப் பயிற்சியும் முடுகியல் ஓசையும் பெற்றனவாம். திருமுக்கால் எனக் குறிக்கப்படுவன ஆசிரியத்துறையாகவும், திரு விருக்குக் குறள் எனக் குறிக்கப்படுவன வஞ்சித்துறையாகவும்அமை கின்றன. இங்கனைத்தும் செய்யுள் வடிவுக்கன்றி ஓசையமைப்புக்கு முதன்மையளித்தனர் எனல் பொருந்தும். இவற்றுடன் குறட் டாழிசையை ஈரடி எனக் குறிப்பதனையும் இணைத்து நினைக்கும் போது, பாவினங்கள் பெயர்க் குறிப்புடன் இலக்கண நிலையில்

உணரப்படாத, ஏற்றுக்கொளப்படாத (recognize) முற்பட்ட கால அமைப்பாகிய கருதுகோள் நிலையைக் குறித்தனவோ என எண்ண வேண்டியுள்ளது. சோதனைக் களத்தில் பாவினங்கள் இருந்த நிலை இது (experimental stage).

முதியவரும், ஞானசம்பந்தருக்குக் காலத்தால் முந்திப்பாட ஆரம்பித்தவரும் பின்பும் வாழ்ந்தவருமான அப்பர் பாடல்கள் தொடர்ந்து வரும் மூன்று திருமுறைகளை (4, 5, 6) ஆக்குகின்றன. யாப்பில் பல புதுமைகளும், புறநடைகளும் (exceptions) சோதனைகளும் இவரிடம் உள. பக்திக் காலத்தை யாப்பின் மலர்ச்சிக் காலம் எனின் அது மிகையாகாது. கலிப்பாவின் இடைநிலைப் பாட்டில் வித்திடப்பட்டு, சிலம்பின் வரி-குரவைப் பாடல்களில் வளர்ந்த பாவினங்கள் செழித்துப் படர்ந்து இலக்கியப்பரப்பு முழுவதையும் ஆட்கொண்ட நிலையை ஆழ்வார்-நாயன்மார் ஆகியவர் பாடல்களில் பக்திக் காலம் காட்டுகின்றது. அடிமரமும் சில கிளைகளுமுடைய ஆலமரம் பல விழுதுகள் விட்டு, அவையே பெரு அடிமரங்கள் போல் பருத்துப் பேரளவுக்குக் கிளைபரப்பி நிழல்பரப்பி நிலம் நிறைந்து நின்றமையையொத்தது இவ் யாப்பு வளர்ச்சி.

அப்பரின் 113 பதிகங்கள் 4-ஆம் திருமுறையிலும் 100 பதிகங்கள் 5-ஆம் திருமுறையிலும் 99 பதிகங்கள் ஆறும் திருமுறையிலும் தொகுக்கப்பட்டுள்ளன (மொத்தம் 312 பதிகம்) 3066 பாடல். இவை ஒரு குறிப்பிட்ட அமைப்புடன் தொகுக்கப்பட்டுள்ளன. முதல் 21 பதிகங்கள் கொல்லி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம் சாதாரி, காந்தார பஞ்சமம், பழந்தக்க ராகம், பழம் பஞ்சுரம்,இந்தளம், சீகாமரம், குறிஞ்சி ஆகிய பத்துப் பண்களில் வருகின்றன. தொடர்ந்து வரும் 58 பதிகங்கள் 'திருநேரிசை' எனும் சிறப்புக் குறிப்புப் பெறுவன; தொடர்ந்து வரும் 34 பதிகங்கள் 'திருவிருத்தம்' என்ற பெயர்க் குறிப்புடையன. 5-ஆம் திருமுறையின் அனைத்துப் பதிகங்களும் 'திருக்குறுந் தொகை' என்ற பெயர்க் குறிப்பு உடையன. ஆறும் திருமுறையின் நூறு பதிகங்களும் 'தாண்டகம்' என்ற புதுவகை யாப்பு நிலையின.

ஒரு பதிகத்தின் பாடலனைத்தும் ஒரேவகை ஈற்றுப்பகுதி பெறல் இவரிடம் காணப்படும் ஒரு சிறப்பு. இதனை ஈற்றடியியைபு எனும் நிலையில் யாப்பு வளர்ச்சிக் கூறுகக் குறிக்கலாம்.

பூட்டுவில் பொருள்கோள் (152), நிரனிறை (261) போன்ற அமைப்புக்கள் உள.

திருநேரிசை (58) என்பன அறுசீராசிரிய விருத்தமாகவும், திருவிருத்தம் (34) என்பன கட்டளைக் கலித்துறையாகவும், திருக்

குறுந்தொகை (100) கலி விருத்தமாகவும், திருத்தாண்டகம் (99) எண் சீராசிரிய விருத்தமாகவும் அமைகின்றன என வடிவநிலையில் பாவினங்களோடு பொருத்தலாம். ஆயின் ஓசைச் செவ்வியைக் கருத்தில் கொண்டு, பாடலின் எல்லா அடிகளிலும் ஒரே வகைச் சீர் அமைப்புப் பொருந்தி இன்னவிடத்தில் இன்னவகைச் சீர் வர வேண்டும் என்ற அமைப்போடு (pattern) கருதிச் செய்யப்பட்டன போன்று அமைவதால் இவை வடிவச் செவ்வியும் பெற்று அமை கின்றன.

சாதாரிப் பண்ணில் வரும் (9) திருவங்கமாலையின் பன்னிரு பாடல்கள், பாவடிவிலும் இலக்கிய வகையிலும் புதிய யாப்பு ஆயின. ஆழ்வார் பாடலில் இத்தகைய பா வடிவு முன்பு சுட்டப் பட்டது; பிற்காலப் பாட்டியல்கள் கூறும் அங்கமாலையிலிருந்து அப்பரது அங்கமாலை பொருளாலும் வேறுபட்டு நிற்கின்றது.

பழமொழிகள் ஒவ்வொன்றனை ஈற்றடியில் கொண்ட அறு சீராசிரிய விருத்தப் பாடல்கள் காந்தாரப் பண்ணில் தருகின்றார் அப்பர்(5). பதினெண் கீழ்க்கணக்கின் பழமொழிகளுக்குப் பின்னும் சதகங்கள் வகுக்கும் பழமொழிக்கும் இடைப்பட்ட காலத்தில் இவ ரிடமே நாம் இத்தகு பழமொழி யாப்பு நிலையைக் காண்கிறோம். தொல்காப்பியர் யாப்பென வகுத்த எழுவகையில் பழமொழி யமைந்ததும், என்றும் மக்களிடையே வழங்கி நாட்டுப்புற இலக் கிய வகையாக அமையும் பழமொழி நிலையும் இங்கு நினைக்கத் தக்கன.

மொழிமுதல் எழுத்துக்களைப் பாடல்களில் தொடர்ந்து ஆரம் பித்து அமைக்கும் வருக்கமாலைப் பதிகமொன்று அப்பரிடம் அமை கின்றது (211) கலிவிருத்தப் பாவமைப்புடைய இதன் 3) பாடல் கள், ஏனைய திருக்குறுந்தொகைப் பாடல் போன்றே வண்ணநிலை யுடையன. நேர் அசையில் தொடங்கிப் பதினொரு எழுத்துப் பெறும் 16 பாடலும் நிரையசையில் ஆரம்பித்து 12 எழுத்துப் பெறும் 14 பாடலும் இதன் கண் உள.

இவ்வருக்க மாலையிலிருந்து சிறிதே வேறுபட்டு அமைகின்றது சரக்கறைத் திருவிருத்தம் (112). இது 11 கட்டளைக் கலித்துறை களாலானது. வருக்கமாலை மொழி முதல் எழுத்துக்களை ஒவ் வொரு பாடலின் முதலில் கொண்டமைய, இப்பதிகம் அனைத்துப் பாடலும் வகர எழுத்தின் இனங்களை முதலாகக்கொண்டு அமை கின்றது.

காந்தாரப் பண்ணில் அமையும் பதிகங்கள்இரண்டு (3,4)கலித் தாழிசை யாப்பிலும், சீகாமரப் பண்ணில் அமையும் ஒரு பதிகம்

(20) ஆசிரியத்துறையிலும் அமைந்து பிற பதிகங்களில் அமையாத யாப்பு வேறுபாட்டினைத் தருகின்றன.

பொதுவாகஅப்பர்அளித்த புதுமைகள் மிகுந்தும், பழமரபைப் போற்றுதல் அமைந்தும் காணப்படுகின்றன எனலாம்.

சுந்தரர் தேவாரம் ஒரு திருமுறையாகத் தொகுக்கப்பட்டுள்ளது. அப்பரோ சம்பந்தரோ போல இவர் யாப்பில் புது முயற்சிகள் செய்யவில்லை. பண்ணுக்கியையும் வண்ணம் பாவமையும் தேவாரப் பொதுநிலையே இங்குக் காணப்படுகின்றது. நூறு பதிகங்களே இவருடையனவாக இன்று கிடைக்கின்றன. 1026 பாடல்கள். இவை இந்தளம் முதலிய 17 பண் அமைப்பின. கலிவிருத்தம், (கட்டளைக்) கலித்துறை, ஆசிரியத்துறை, அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள், கொச்சகக்கலி ஆகிய யாப்புக்கள் பயன்பட்டுள்ளன. அப்பர் தேவாரங்கள் போன்றே இவரது பதிகப் பாடல்களும் தம்முள் ஈறொப்புமை கொண்டு அமைகின்றன. சம்பந்தர் பதிகங்கள் போன்றே இங்கும் பதிகத்து ஈற்றுச் செய்யுளுள் சுந்தரர் பெருமையும் கற்போர் பெறும் பயனும் எடுத்துமொழியப்படுகின்றன.

சேக்கிழாரின் பெரிய புராணமும் நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியும் தோன்றக் காரணமாக அமைந்தது சுந்தரரின் திருத்தொண்டத் தொகை எனும் பதிகம். நாடுகள் ஊர்களைத் தொகுத்துப் பதிகம் அமைத்தல் என்ற நிலையிலும் யாப்புப் பொருண்மைக் கண்ணோட்டத்தில் இவர் தொண்டு அமைகின்றது.

திருவாசகம் திருக்கோவையார் என்பன எட்டாம் திருமுறையாக அமைவன. மாணிக்கவாசகர் இவ் இலக்கியங்கள் வாயிலாகத் தமிழ் யாப்புக்கும் தொண்டு செய்துள்ளார். சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவுக்கு அடுத்தபடியாக நாட்டுப்புறப் பாடல் அமைப்புக்கு இலக்கிய ஏற்றம் அளித்தவர் மாணிக்கவாசகரே.

51 பகுதிகளாக 658 (656+2) பாடல்கள் திருவாசகத்திலும் 25 அதிகாரங்களாக 400 பாடல்கள் திருக்கோவையாரிலும் இவர் பாடியனவாக அமைகின்றன. முன்னதில் 3382 அடிகளும் பின்னதில் 1600 அடிகளும் வருகின்றன. முன்னதில் ஒருபகுதியின் கண் ஒன்று முதல் நூறு பாடல் வர, பின்னதில் ஒன்று முதல் ஐம்பத்தாறு பாடல்கள் வருகின்றன.

அகம் பாடுபொருளாகவும் இறைவன் பாட்டுடைத்தலைவனாகவும் கோவையார் அமைய, இறைவற் போற்றலும் தன்னிலைக்கு இரங்கலும் வாசகத்தின் பொருளாகின்றன.

திவ்யப்பிரபந்தம் தேவாரங்களில் காணப்பட்ட பதிகஅமைப்பு இங்குத் தொடரினும் அல்லாத செய்யுட்களும் காணக்கிடக் கின்றன. பாவினங்களே பெருகப் பயின்று பாவகைப் பயிற்சி குன்றிய காலத்தில், அதன் பயிற்சியை (நேரடி நோக்கம் இன்று எனினும்) மிகுவிக்கும் நிலையில் அகவல், கலிவெண்பா, கொச்சகம், வெண்பா அமைப்புக்களை மீண்டும் உட்கொணரும் முயற்சியுடன் அமைந்தனவோ எனும்படி இவர் வாசகத்தின்கண் இரண்டும் வந்தன. ஆரம்ப நாயன்மாருள் ஒருவராகிய காரைக்காலம் மையாரின் பா வகை பயின்ற பிரபந்தங்களும் இங்கு நினைத்தற்பாலன. பாவகை-இனங்கள் உள்ளாகக் கலந்த நிலையைச் சிலம்பும், வெளிப் படையாக விரவிய நிலையை இவர் போன்றோர் பாடலும் காட் டியது எனவும் கூறலாம்.

திருவாசகத்தின் தொகுப்பில் ஒரு அமைப்பு காணப்படு கின்றது. பாடல்களும் பதிகங்களும் பெரும்பான்மையும் அடிவரை யறைப்படியும் பாடலெண்ணிக்கைப்படியும் தொடர்ந்து தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வமைப் பொழுங்கு பிற்பகுதியில் சிதைந்துள்ளது. முதற்கண் அமையும் நான்கு நெடும்பாடல்களும் அடிவரையறைப்படி ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்ததால், 95 அடியுடைய சிவபுராணம் முதலிலும் 225 அடியுடைய போற் றித் திருவகவல் நான்காவதாகவும் வந்தன. பதிகங்களில் இம் முறை மாறி வருகின்றது. பாடல் எண்ணிக்கையும் அதனால் வரும் அடிஎண்ணிக்கையும் மிக்க திருச்சதகம் (1C0 × 4) முதலில் வந்தது. பிற அடி எண்ணிக்கைப் படித் தொடர்ந்தன. ஆயின் இச் செவ் விய அமைப்பு அருட்பத்திற்குப் (29) பின் மாறுபடுகின்றது. இவற் றின் பாடல்கள் அனைத்தும் நான்கடிச் செய்யுட்களாகவே அமைந்த போதும், பாடல் எண்ணிக்கையில் ஆங்காங்கே குறை வும் மிகுதியும் வந்து இதற்குக் காரணமாயின. இந்நிலை பதிகப் பாடல்கள் பல இழக்கப்பட்டனவோ என்ற ஐயவுணர்வை எழுப்புகின்றன.

பாவகைகளில் நேரிசை வெண்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, கலிவெண்பா, தரவு கொச்சகக் கலிப்பா என்பனவற்றை வாசகர் பயன் கொண்டுள்ளார். பாவி னங்களில், கோவையாரில் கட்டளைக் கலித்துறை அமைய, திரு வாசகத்தில் ஆசிரியவிருத்தத்தின் பயிற்சியே மிகுதி கலியினங் களான கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தங்களும் அமை கின்றன. இங்குப் புதுயாப்பமைப்புக்கள் தோன்றவில்லை என்பதும் மரபு யாப்பு வடிவங்கள் தொடர்கின்றன என்பதும் தெளிவு. ஆயின் கோவை எனும் புத்திலக்கிய வகைத் தோற்றம், அச்சோப் பதிகம், திருக்கோத்தும்பி, திருச்சாழல், திருத்தெள்ளேணம், திருத்

தோணேக்கம், திருப்பூவல்லி, திருப்பொற்சுண்ணம், திருப் பொன்னூசல், திருவம்மானை, திருவுந்தியார் போன்ற மக்கள் லக்கிய ஆக்கங்கள் என்பன இவர் வகுத்த புத்திலக்கியப் பாதைகள்.

சிலம்பில் முதன்முதலில் தோன்றிய ஆசிரிய ஈருகிய இகரதி 225 அடியுடைய போற்றித் திருவகவலில் மீண்டும் வருவது நினைத் தற்குரியது. சிலம்புப் பதிகமும் சம்பந்தரின் எழுகூற்றிருக்கையும் அளிக்கும் இணைக்குறள் ஆசிரிய அமைப்பு 182 அடியுடைய திரு வண்டப் பகுதியிலும் காணப்படுகிறது. கலித்தொகையின் கலி வெண்பாக்களுக்குப் பின், சிலம்பின் இரு கலிவெண்பாக் காதை களுக்குப் பின், வாசகர் 95 அடியில் சிவபுராணத்தைக் கலி வெண்பா யாப்பில் அமைக்கின்ருர்.

திருவாசகத்தில் சொச்சகக் கலி மிகுதியாகப் பயின்றமை குறிப்பிடற்குரியது. நான்கடித் தரவு கொச்சகம் (137 பாடல்) மட்டுமன்றி, ஆறடி யுடையனவும் (29) எட்டடியினவும் (20) வரு கின்றன. திருப்பாவையின் ஆறடிப்பாடல்கள் திவ்யப்பிரபந் தத்தில் காணப்பட்ட கொச்சகங்கள் என்பதும் இங்கு நினைத்தற் குரியது. திருவெம்பாவை எட்டடிக் கொச்சகங்கள் தருகின்றது. திருவம்மானை, திருப்பொன்னூசல் ஆறடியுடனமைகின்றன.

திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைக் கவிகள் பாவைப் பாடல், அந்தாதி போன்ற இலக்கிய வகைகள் ஆழ்வார் பாடலில் முகிழ்த்தன எனப்பார்த்தோம். வாசகர் யாப்பில் இவற் றிற் சில தொடர்ந்தன; இவைதவிர இன்னும் மிகப்பல இலக்கிய வகைகள் எழுந்துள்ளன. திருவுந்தியார், திருவம்மானை போன்ற நாட்டுப்புற இலக்கியச் சார்புடையனவற்றை முன்பே நினைந் தோம். திருத்தசாங்கம், திருச்சதகம், போன்றன பாட்டியல் களில் இலக்கியமாக ஏற்றம் பெற்றன. அடைக்கலப் பத்து, பல வகை அடிகள் கலந்து எழுதப்படும் புதுநிலை (கலவைப் பாட்டு) காட்டுகின்றது. கலம்பகத்தில் பல பாக்கள் கலக்க, இங்கு ஒவ் வொரு பாட்டில் எழுத்தெண்ணிக்கை வேறுபாடுடைய அடிகள் கலக்கின்றன. கட்டளையாக வன்றி வரும் ஐஞ்சீரடிப் பாடலான கலித்துறை இவண் நினைத்தற்குரியது.

பாடல்களுக்குத் தலைப்புக் கொடுக்கும் நிலை இங்குப் பெருகி யுள்ளது. ஐங்குறுநூற்றின் பத்துக்களும், பத்துப்பாட்டும் பதிற் றுப்பத்தும் போன்று, அச்சப்பத்து முதல் வாழாப்பத்து வரைப் பல ‘பத்து’ப் பகுப்புக்கள் இவண் உள. இவைதவிர அச்சோப் பதிகம், திருச்சதகம் என எண் நிலையும் உண்டு. ஆனந்த மாலை,

திரு வெண்பா, கீர்த்தித்திரு அகவல் என்பன போல யாப்பும், யாப்பும் பொருண்மையும், மாலைப் பெயரினவும் உள. முதற்றொடரால் பெயர்பெறும் 'பண்டாயநான் மறை', பொருளால் குறி பெறும் 'திருப்புலம்பல்' போன்ற பல நிலைகள் குறிப்பிடத்தக்கன.

28 திருப்பதிகங்களுடைய திருவிசைப்பாவும் சேந்தனாரின் திருப்பல்லாண்டுமாக அமைவது ஒன்பதாந் திருமுறை. ஒன்பதின்மர் இயற்றிய, இறைவனையும் முருகனையும் பற்றிய பாடல்கள் 303 இதன் கண் உள. பலர்பாடிய ஒரு தொகுப்பு இது. பெயருக்கேற்ப (இசைப்பா) இதன் பகுதிகள் தேவாரப்பகுதிகள் போன்றே பண் வகுப்புப் பெற்றுள்ளன. சாளர பாணி என்பது தேவாரத்தில் காணப்படாது இங்குத் தோன்றிய புதுப்பண்.

ஆழ்வார் பாடல் போன்றே, இங்குச் சேந்தனாரின் திருப்பல்லாண்டு காணப்படுகின்றது. அப்பர் பழமொழிகள் பெய்து பதிகம் அமைத்தது போன்று வேணாட்டடிகள் புறநீர்மைப் பண்ணிலமைத்த கோயில் பாடல்களும் பழமொழிகள் சிலவற்றைத் தருகின்றன. திருவாலி யமுதனார் (11) திருமாளிகைத்தேவர் (11) பாடல் பகுதியில் இறைவற் புகழும் பாதாதிகேசம் எனும் புத்திலக்கிய வகைக்கு வித்திடப்படுகின்றது. சங்க காலத்திற்குப்பின், கோவையாரைத் தொடர்ந்து அகத்துறைப் பாடல்கள் இத்திருவிசைப்பாவின் கண் அமைவது எடுத்து மொழியத்தக்கது. திருவிசைப்பாவின் 28 பதிகங்களில் 20 அகத்துறை நிலையின.

இசைக்கு முதன்மை யமைந்த இத்தொகுப்பில் புதிய பாவகைகள் புகுந்தில. திருமாளிகைத் தேவரின் 'உறவாகிய...' எனும் கோயிற் பதிகம் பன்னிரு ஆசிரியத்துறை தரத் திருவாலியமுதனாரின் பாதாதிகேசம், ஏறக்குறைய ஆசிரியத் துறை யமைப்புடைய யாப்பில் வருகின்றது; திருவாலியமுதனாரின் 'பவளமால்வரை' எனும் கோயில் பதிகப் பாடல் அறுசீர் எழுசீர் அடிகள் விரவியது போன்ற அமைப்பைத் தருகின்றது. சேதிராயரின் கோயில் பதிகம் பாடல் சில ஈற்றடியில் முச்சீர் பெற்றுப் பொதுக் கலிவிருத்த யாப்பிலிருந்து மாறுபட்டன—இவையனைத்தும் இசை முதன்மை காரணமாகப் புகுந்த யாப்புச் சிதைவுகளாகலாம்.

திருமூலரின் திருமந்திரம் காலத்தால் முற்பட்டதாயினும் திருமுறைத் தொகுப்பில் பத்தாவது நூலாக அமைகின்றது. மூலர் பாடியன மூவாயிரம் எனப்படினும், இன்று பாயிரமும் ஒன்பது தந்திரங்களுமாக 239 அதிகாரங்களின் கீழ் 3069 பாடல்கள் காணப்படுகின்றன. பதிப்புகட்கேற்ப அதிகார, பாடல் எண்ணிக்கை மாறுபடுவதும் உண்டு. இதன்கண் நாற்சீரடி நான்குடைய பாடல்களே பயின்றன. வெண்டளையே பெறும் கொச்சகக் கலி

நிலை பல பாடலில் அமையினும் தனி விரவிய கலிவிருத்த நிலையும் உண்டு. நாலாம் தந்திரத்தின் 13 பகுதிகளும் அந்தாதித் தொடையமைப்பைக் கொண்டுள்ளன. மறையெனும்மந்திரப் பொருண்மையுடைய நிலையில் யாப்பு வரலாற்றில் இது தனியிடம் பெறுகின்றது.

பதினோராம் திருமுறை, 12 ஆசிரியர்களால் பாடப்பட்ட 40 நூற்களின் தொகுப்பு. பல காலத்தவரால் பாடப்பட்ட பல பிரபந்தங்களும் அமைவதால் பிரபந்தமாலை எனக் கூறத்தகும் சிறப்புடையது. திருவாலவாயுடையார் (1), காரைக்காலம்மையார் (4) ஐயடிகள் காடவர்கோன் (1), சேரமான் பெருமாள் (3) நக்கீர தேவர் (10) கல்லாடதேவர் (1) கபிலதேவர் (3), பரணதேவர்(1), இளம் பெருமானடிகள்(1), அதிராவடிகள் (1), பட்டினத்துப்பிள்ளையார் (5) நம்பியாண்டார் நம்பி (10) என்போர் ஆவர். இவற்றுள், அந்தாதி 8; ஆற்றுப்படை 1 1: இரட்டைமணிமாலை 4; உலா 1; உலாமாலை 1; எட்டு 1: எழுகூற்றிருக்கை 1; எழுபது 1; ஏகாதச மாலை 1; ஒருபா ஒருபஃது 1; கலம்பகம் 1; கலிவெண்பா 1; கோபப்பிரசாதம் 1; முகப் பாசுரம் 1; தொகை 1; நான் மணிமாலை 1; பதிகம் 2; பெருந்தேவபாணி 1; மறம் 2; மும்மணிக்கோவை 7; விருத்தம் 1: வெண்பா 1 என இலக்கிய வகைகள் அமைகின்றன.

பலபிரபந்த வகைகளின் முதல் நூற்கள் இப்பதினோராம் திருமுறையில் அமைந்துள்ளன என்பது மேற்காணும் பகுதியை நோக்கத் தெளிவாகும். காரைக்காலம்மையாரின் திருவிரட்டை மணிமாலை; சேரமான் பெருமாள் நாயனாரின் ஆதியுலா எனப் போற்றப்படும் திருக் கைலாய ஞான உலா; பதினென் கீழ்க் கணக்கில் களவழி நாற்பது, ஐந்திணை எழுபது போன்ற எண் செய்யுட்கள் அமையினும், எட்டுச் செய்யுட்களால் அமையும் நக்கீர தேவரின் கார் எட்டு, இடம்பற்றி எழுபது பாடல் அமையும் அவரது ஈங்கோய் மலை எழுபது; பட்டினத்தாரின் திருவொற்றியூர் ஒருபா ஒருபது; அரசனைப் பற்றி யெழுந்த நந்திக் கலம்பகம் இருப்பினும் இறை அடியாரைப் பற்றி எழுந்த நம்பியாண்டார் நம்பியின் ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்; பட்டினத்தாரின் கோயின் நான்மணிமாலை; பன்னிருபாட்டியல் இலக்கணம் வகுக்க வழி வகுத்த நக்கீர தேவரின் பெருந் தேவபாணி; புறக்கூறுகவும் கலம்பக உறுப்பாகவும் அமையினும் மறம் தனியிலக்கியமாக விரிந்த, நக்கீர தேவரும் கல்லாட தேவரும் இயற்றிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் எனும் இரு நூற்கள்; சேரமான் பெருமாள் இயற்றிய திருவாரூர் மும்மணிக்கோவை; நம்பியாண்டார் நம்பி

யின் ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் என்பன வழி காட்டி நூற்களாம். எனவே பிரபந்த யாப்பு வரலாற்றில் இப் பதினோராந் திருமுறை குறிப்பிடத்தக்க ஒரு மைல்கல் எனல்வேண்டும்.

ஆரம்ப நிலையின வாகையால் பிற்கால இலக்கணச் செவ்வி இதன்கண் இல்லாதும் இருக்கின்றது. மொத்தப் பாடல் எண்ணிக்கை, யாப்பு என்பனவற்றில் வேறுபாடுகள் அமைகின்றன.

காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி 109 பாடலும் நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதி 89 பாடலும் பெற்று 100 எனும் பொது எண்ணிக்கையிலிருந்து மாறுபடுகின்றன. திருத்தொண்டர் திருவந்தாதியில் மட்டும் மண்டிலம் காணப்படவில்லை. வெண்பா, கட்டளைக் கலித்துறை யாப்பிலே அந்தாதிகள் வரும் பொது இயல்பு பொருந்தியே அமைகின்றது. திரு ஏகாம்பமுடையார் திருவந்தாதி பல அகப் பொருட்டுறைப் பாடல்கள் உடையது.

வெண்பாவும் கலித்துறையுமாக 20 பாடல் பெறும் இரட்டை மணிமாலை இயல்பு, 37 பாடல்கள் பெறுவதால் கபில தேவரின் சிவபெருமான் திருவிரட்டை மணிமாலையில் வேறுபடுகின்றது.

கார் எட்டின் அனைத்துப் பாடலும் 'கார்' எனவும் ஈங்கோய் மலை எழுபதன் கிடைக்கும் 55 பாடலும் மலைக்குரிய பரியாயச் சொற்களானும் (குன்று, பொருப்பு, மலை, வெற்பு, சிலம்பு, கடறு) முடிகின்றன.

நம்பியின் திருநாவுக்கரசு தேவர் ஏகாதசமாலை ஆசிரிய இனப் பாடல் பல விரவி வந்து அந்தாதி மண்டிலம் பெற்ற 11 பாடலுடன் அமைந்து, ஒரே வகைப் பாவால் அமையும் பிற பதிகங்களிலிருந்து மாறுபடுகின்றது. 12 சீர், 16 சீர் ஆசிரிய விருத்தங்கள் இதன்கண் புதியதாகப் புகுந்தன. பக்திக் காலத்தில், 6,7, 8 சீர் விருத்தங்களே மிகுந்தன.

இதன்கண் அமையும் கலம்பகம், அந்தாதி பெறுகின்றதே யன்றி மண்டிலம் பெறவில்லை. 49 பாடலே பெறுவது புதுமை. ஒரு போகு வெண்பா கட்டளைக் கலித்துறையில் தொடங்கிப் பல ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்துறை, கலித்தாழிசை, அகவல், வஞ்சித்துறை, ஆசிரியத்துறை, கைக்கிளை மருட்பா ஆகிய யாப்புக்களில் வருகின்றது. 6, 7, 8 சீர் ஆசிரியவிருத்தங்

களோடு 10, 12, 14 சீர்ஆசிரிய விருத்தங்களும் வரல் குறிப்பிடத் தக்கது. மொத்தத்தில் ஆசிரிய விருத்தமே மிகுந்தது.

கோபப்பிரசாதம் என்பது, ஈற்றடி முச்சீரும் இடையில் இருசீரடி மூன்றும் முச்சீரடி ஒன்றும் ஐஞ்சீரடி நான்கும் பெற்றுப் பிற அடிகள் நாற்சீராக அமைந்து ஆசிரிய இயல்பு காட்டுகின்றது. இதன் முதலடியும் இறுதியடியும் (99) 'தவறு பெரிதுடைத்தே தவறு பெரிதுடைத்தே' என ஒன்றேயாகி யமைவது புதுமை; மொத்தநிலையில் இது பரிபாடலை நினைவூட்டுகின்றது.

ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை கலிவெண்பா யாப்பினது. இத்திருமுறையில் அமையும் திருக்கைலாய ஞானவுலா, போற்றித் திருக் கலிவெண்பா, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை இவைதரும் கலி வெண்பாவிலிருந்து மாறுபட்டது. இவை ஒரூஉத்தொடை பெற்று, இரண்டடி ஓரெதுகையாகிக் கண்ணியாக வரும் நேரிசைக் கலிவெண்பா நிலையின. திருத்தொகையின் கலிவெண்பா 65 அடியாலாகிச் சில அடிகளில் மட்டுமே ஒரூஉத் தொடை பெற்று வேறுபடுகின்றது.

வெண்பா கட்டளைக் கலித்துறை ஆசிரிய விருத்தம் அகவல் எனும் நாற்பா நாற்பது பாடலில் அந்தாதியும் மண்டிலமும் பெற்றது, இவண் அமையும் கோயின் நான்மணிமாலை. ஆசிரிய விருத்தத்தில் பன்னிரண்டும் பதினறும் சீர் அமைவது கருதத் தக்கது. இதன் ஆசிரியத்தின்கண், பேசு வாழி பேசுவாழி (28) எனவும் அருளுவாழி அருளுவாழி (32) எனவும் இரட்டை யாப்பு அடிகள் பயின்றமை குறிப்பிடத்தக்கது.

காரைக்காலம்மையாரின் இருபதிகங்களும் தம் பாடலிடையே ஈற்றடி யொப்புமை கொண்டு அமைந்து அப்பர், சுந்தரர் பதிக அமைப்பை நினைவுறுத்துகின்றன.

இரு கண்ணப்பதேவர் திருமறமும் ஆசிரிய இயல்பின. நக்கீர தேவரியற்றியதில் இருசீர், முச்சீர், ஐஞ்சீரடிகள் பயின்றன. ஐஞ்சீரடிகளின் ஈற்றுச் சீர் கூன்போன்றும் அமைவது நினைக்கத் தக்கது. திருக்கண்ணப்பன் என்ற மண்டிலமும் பெறுகின்றது. கல்லாட தேவர் பாடியதில் ஒவ்வொரு இருசீர் முச்சீரடிகளை வந்தன.

இத்திருமுறையின் கண் அமையும் ஏழு மும்மணிக்கோவைகளில் பட்டினத்தாரின் திருக்கழுமல மும்மணிக் கோவை 12 பாடலும், அதிராவடிகளின் மூத்த பிள்ளையார் திருமும் மணிக்கோவை 23 பாடலும் (பிறஇழக்கப்பட்டன என்பர்) நக்கீர தேவரின் திரு

வலஞ்சுழி மும்மணிக்கோவை 15 பாடலும் பெற்று 30 பாடல் என்ற நிலையினையுடைய பிறவற்றிலிருந்து வேறுபட்டன. இவற்றில் முன்னதும் பின்னதும், மூவகைப் பா கலப்பது மும்மணிக்கோவை என்ற பொதுமையைக் காட்டின (அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை).

நம்பியாண்டார் நம்பியின் இரு விருத்தங்களை நோக்கும் போது, அந்தாதியும் மண்டிலமும் பெற்றோ அன்றிப் பாடல்கள் தம்முள் ஈறொப்புப் பெற்றோ அவை அமையலாம்என்றுதெரி கின்றது.

ஐயடிகள் காடவர் கோனின் க்ஷேத்திரத் திரு வெண்பா, தலத்துக்கு ஒரு பாடல் விதம் அமைகின்றது. இதன் பாடல் சில அங்கமாலை போன்ற நிலையின.

நக்கீர தேவரை பக்திக் காலத்திற்கு முற்பட்டவராகக் கொண்டால் அவரது திரு எழுகூற்றிருக்கையே அவ்வகையின் முதல்நூல் எனலாம். சம்பந்தர்பாடிய திருஎழுகூற்றிருக்கை முன்பே நினைக்கப்பட்டது. கபிலதேவரின் பாடல்களில் மிகுதியாக யமகம்-திரிபு காணப்படுவதும் சுட்டத்தக்கது. அதிராவடிகளின் பாடல்களில் குழந்தைப் பருவங்களான சப்பாணி-ஊசல்-செங் கீரை வருவது குறிப்பிடத்தக்கது.

திருவொற்றியூர் ஒருபா ஒருபஃதில் 'காலற்சீறிய கழலாய் போற்றி' என்று தொடங்கி ஒரு கீர்த்தித்திரு அகவலும் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில் 'சுடர்விடுசூலப் படையினை என்றும்' என்று தொடங்கி ஒரு கீர்த்தித்திரு அகவலும், கோயில் நான்மணிமாலையில் 'தாதவிழ் கொன்றைத் தாரும்' எனத் தொடங்கி ஒரு தசாங்கப்பத்தும் பாடி, ஒரு நூலுக்குள் இன்னொரு நூல் அமைக்கும் புது முறையைக் காட்டுகின்றார் பட்டினத்தார்.

இறைவனையே பாடுபொருளாகக் கொண்டு. அதுவரை பக் திக் காலத்தில் நூற்கள் பாடப்பட்டிருக்க, இத் திருமுறையின் கண்ணே சம்பந்தர், அப்பர், அடியார் ஆகியோர் பாடு பொருள் ஆயினர். யாப்பின் இப் பொருண்மை மாற்றம் குறிப்பிடத் தக் கது.

சிந்தாமணி: பக்திக் காலத்தை அடுத்து எழுந்த காப்பியங் களும், சமயச் சார்பு காட்டுகின்றன. சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம், பெரிய புராணம் ஆகியன விருத்த யாப்பினைத் தொடர்நிலைச் செய்யுட்கு வடிவாக்கிப் புது மரபு வகுத்துச் சூளா

மணி, வில்லிபாரதம், நைடதம் போன்ற பிற்காலக் காப்பியங் களும் அவ்வழி நிற்கும்படிச் செய்தன.

சங்கத் தொகைகளில் தனிப்பாடல் வடிவாகப் பொருந்திய ஆசிரியப்பா-கலிப்பா போன்றவற்றைத் தொடர்நிலைச் செய்யு ளுக்கு ஆக்கிய புது முயற்சி இளங்கோவடிகளுக்கு உரியது. அவ் வாறே, பக்தியுணர்வை வெளியிடும் தன்னுணர்ச்சிப் பாடல் அமைப்பான (நான்கடி) விருத்த உருவை நெடும்பாடலுக்கு ஆக்கும் முயற்சியில் வெற்றியுடன் ஈடுபட்டவர் திருத்தக்கத் தேவர். இந்நிலையில் இவர் முன்னோடியாக அமைகின்றார்.

விருத்தத்திற்கு வித்திடாவிடினும் காப்பியத்திற்கு விருத்த வடிவு அளித்த பெருமை தேவரைச் சாரும். சீவக சிந்தாமணிக் காப்பியத்தின் வடிவில், கலிவிருத்தம் (1291), கலித்துறை (255), கலித்தாழிசை(2), ஆசிரிய விருத்தம் (அறுசீர் 1525, எழுசீர் 40, எண்சீர் 16), ஆசிரியத்துறை (1), வஞ்சித்துறை (16) எனும் வடி வங்கள் அமைகின்றன. சிந்தாமணியின் கலித்துறை பல மா-மா கனி-மா-மா எனும் சீரமைப்புடன் காப்பியக் கலித்துறை எனச் சிறப்பிக்கப்படும் நிலையுடையன. இவை தேவர் புகுத்திய புது வடிவ நிலையின எனலாம்.

காந்தருவ தத்தையார் இலம்பகத்தில் பேடியின் வருணனையாக வரும் இரு செய்யுட்களும் ஓரடி மிக்கு வந்த கொச்சக ஒருபோகு என நச்சினார்க்கினியரால் கொள்ளப்படுகின்றன. ஆய்வாளர் கொள்வது போன்று, நான்கடிக்கு மேல் ஓரடி வந்த கலிவிருத்தம் எனக் கொள்ளாது, இவற்றை ஈற்றடி மிக்கு வந்த கலித்தாழிசை யாகக் கொள்வது ஏற்புடையதாக அமைகின்றது.

உணர்ச்சி மாறுபாடுகள், காட்சி வேறுபாடுகள், கூற்று மாற் றங்கள், கருத்து வேறுபாடுகள், செயல் மாற்றங்கள் போன்ற வற்றைப் பாடல்களின் யாப்பை மாற்றியே பாங்குடன் அமைத்து விடும் தன்மை தேவருக்கு வாய்ப்பாகவும் சிறப்பாகவும் பொருந்து கின்றது. அவர் காப்பியத்தில் கையாண்ட வடிவங்கள் சிலவாயி னும், அவரது கவியாற்றலும் இலக்கியப் பார்வையும் இவ்வுத்தி யில் அவரைச் சிறக்கச் செய்து, பலருக்கும் வழிகாட்டியாக்கி யுள் ளது. கலிவிருத்தம் அறுசீர் ஆசிரியவிருத்தம் ஆகியவற்றின் பயிற்சி மிகுதி, அவ்வடிவங்கள் கதை கூறப் பொருத்தமாக ஆசிரிய ருக்குப் பட்டதால் ஏற்பட்டன போலும்.

ஆசிரியத்துறைப் பாடல் ஒன்றே சிந்தாமணியில் அமைகின் றது. இதனை ஆசிரியத்துறையன்று என நச்சர் மறுப்பினும்,

பாவின் இலக்கணம் உரைக்கும் நூற்றடி, ஆசிரியத் துறையே. மூன் றுமடி குறைந்து பிற வடிகள் ஒத்து இதன்கண் அமைகின்றன.

நிறையோத நீர்நின்று நீடவமே செய்யினும் வாழி நீலம்
அறையோ வரிவை வரிநெடுங்க ணொக்கிலையால் வாழி நீலம்
கண்ணொவ்வா யேனுங் களித்து நகுதிநின்
வண்ண மிதுவோ மதுவுண்பார் சேரியையோ வாழி நீலம்
(2578)

பாடலின் நான்கடிகள், இரண்டடிக்கு ஒரெதுகை பெறுவது குறிப் பிடத்தக்கது. சிலம் பின் சிலபாடல்களிலும் இந்நிலை உண்டு.

தேவர் இருசீரடி நான்காலாகிய வஞ்சித்துறை சில (565-5) கையாள்கின்றார். (சம்பந்தரின் திருவிருக்குக்குறள் பாடல்கள் இவண் நினைக்கத் தக்கன). எழுத்துப் பயிற்சியால் ஓசையினை நிறைக்கும் 'வண்ண' அமைப்பு இவற்றில் உண்டு.

ஒரு பொருள் மேல் மூன்றடுக்கியும், இடையடிகள் மடக்கியும் இசையினிமை பொருந்தியும் வரும் வரிப் பாடல்கள் பல சிந்தா மணியில் அமைகின்றன. அகப் பொருட்சுவை நிரம்பியனவாகவும், இறை-வாழ்த்தாகவும் இவை பொருந்துகின்றன. சிலம்பின் வரிப் பாடல்களின் தோய்வு இவற்றில் வெளிப்படுகின்றது.

ஒரு பொருள் மேல் மூன்றடுக்கும் அகப்பாடல்களும் (732-34 1574-76) இறைவாழ்த்துப் பொருண்மையுடையன சிலவும் (1242-44) அளவொத்த நாலடி வந்த இயல்பான அமைப்பு நிலையின. கட வுள் புகழ்ச்சிப் பாடல்கள் சில(1245-47,1609-11,2561-63, 2739-41) இரண்டாமடி மூன்றுமடியில் மடங்கி அமைந்துள்ளன. இரண்டா மடியின் ஈற்றுப் பகுதி, மூன்றுமடியின் முதலில் மடங்குவது பிறி தொரு நிலையாக அமைகின்றது (724-26, 1467-69, 1698-1700, 2049-51)

ஒரு பாடலின் ஈறு, தொடர்ந்த பாடலின் முதலாகிப் பொருந் தும் அந்தாதி அமைப்புச் சிந்தாமணியின் சில பாடல்களில் உண்டு (982-83, 1437-38, 1569-70, 2756-57, 2830-31). நிகழ்ச்சித் தொடர்பு, கருத்துத் தொடர்ச்சி என்பன இங்கமைகின்றனவே யன்றி, இது ஒரு உத்தியாக வளர்ந்ததாகத் தெரியவில்லை.

ஓசையினிமையுடைய பாடல்களும்,உணர்வு வெளிப்பாட்டினை அளிக்கும் பாடல்களும் சிந்தாமணிக்குச் சிறப்புத் தருகின்றன. செயல், பாட்டில் சித்திரிக்கப்படும் வண்ணம் அமையும் விமலை பந் தாடல் (1952), விசையை அழுகை (1805) போன்றன இங்கு நினைக் கத் தக்கன. வினைமுற்று அடுக்கல் (1039), ஐய உவமை பல

தொகுத்தல் (1972) போன்ற பல்வகைப் பாடலும் சந்த இன்பம் மிக்க பாடலும் இவண் அமைகின்றன.

எதுகை இல்லாப் பாடலே இல்லை என்று கூறும் அளவிற்குத் தொடைப் பயிற்சி சிந்தாமணியில் மிக்கு அமைகின்றது. கலி விருத்தத்தில் ஒன்றும் மூன்றும் சீரிலும், அறுசீர் ஆசிரிய விருத்தத் தில் ஒன்றும் நான்காம் சீரிலும், சந்த ஓசை மிக்க எழுசீர் ஆசிரிய விருத்தத்தில் ஒன்றும் ஐந்தாம் சீரிலும் மோனை பெரும்பான்மை யாக அமைகின்றது. பாடல்கள் மூன்றடுக்கும் போதும் பிறவி டத்தும் ஈறியையும், அங்கங்கு முரண் முதலிய பிற தொடையழ கும் பொருந்துகின்றன.

கம்பன்: சங்க காலமும் சங்கம் மருவிய காலமும் பாவும் பாவகைகளும் மிகுதியாகப் பயின்று வந்த காலம். சிலம்பு வித் திட்டுத்தேவர் வளர்த்த விருத்தப் பாடல்கள் யாப்பமைதியில் மலர்ச்சியை உருவாக்கின. பா - பாவகைகளின் பயிற்சி குன்றி, பாவினங்கள் மிகுதியாகக் கையாளப்பெற்றன. இக் காவியத்தைத் தொடர்ந்து தோன்றிய கம்பராமாயணத்தில் இவ் யாப்பமைப்பு கனிந்துள்ளமை வியப்பன்று.

ஆறு காண்டங்களும் நூற்றுப் பதினாறு படலங்களும் பத்தா யிரத்து ஐந்நூற்று எழுபத்தாறு பாடல்களும் (10,576) கம்பன் அளிக்கும் கவி விருந்து (வை.மு.கோ.). பதிப்புக்குப் பதிப்பு இவ் எண்கள் வேறுபட்டும் மாறுபட்டும் அமைகின்றன. திருவேங்கட ராச முதலியார் போன்ற சிலரது பதிப்பில் பால காண்டம் முதல் யுத்த காண்டம் வரையுள்ள ஆறு காண்டங்கட்குப் புறம்பாக உத் தர காண்டமும் காணப்படுகின்றது. சிதம்பரனாரின் கம்பராமாய ணத் தொகுப்பில் 129 படலங்கள் அமைய மர்ரே ராஜம் பதிப்பில் 127 படலங்களும் உ.வே.சா பதிப்பில் 116 படலங்களும் வருகின் றன. ஒரு படலம் இரண்டு அல்லது பலவாகப் பிரிந்தும், அவ் வாறே இரண்டு முதலியன ஒன்றாக இணைந்தும் வருவதே இதற்குக் காரணம். இவ்வாறே நோக்குங்கால் பாடல்களின் எண்ணிக்கை யும் மிக்கும் குறைந்தும் வருவதைக் காணலாம். பல பிரதிகளை ஒப்பிட்டு ஆய்ந்து பதிப்பிப்போர் இடைச் செருகல்களாகச் சிலபல பாடல்களை நீக்கி வைப்பதே இதன் காரணம். அறிஞர் டி.கே.சி அவர்கள் பதிப்பில் மிகப்பல பாடல்கள் நீக்கப்பட்டமை நாம் அறி வோம். உ.வே.சா பதிப்பு 10,436 பாடல்களைத் தரும். மர்ரே ராஜம் பதிப்பு மூலத்தில் 10,057 பாடலும் மிகையாக 1506 பாட லும் தருகின்றது,

எண்வகை யாப்பமைப்புக்கள் கம்பனுல் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் கலிவிருத்தமே மிகுதியாகப் பயின்றது(வை.மு.கோ பதிப்பின்படி) 5094. இவற்றில் 86 தரவு கொச்சகம் போன்றும் அமைந்தன. அடுத்த நிலை பெறுவது அறுசீர் ஆசிரிய விருத்தம் 3195. 1805 பாடல்களுடைய கலித்துறை மூன்ரும் நிலையினது. இவை தவிர, 294 வஞ்சி விருத்தங்களும் 178 எழுசீராசிரிய விருத்தங்களும், ஆறு எண்சீர் ஆசிரிய விருத்தங்களும் நான்கு வஞ்சித்துறைப் பாடலும் இதன்கண் உள. தரவு கொச்சகம் எனக் கொள்ளாது பிற இனங்களில் அடக்கப்படும் போது எழுவகையாப்புக்கள் கம்பனில் அமைகின்றன.

கம்பராமாயணத்தில் சில பாடல்கள் யாப்பமைப்பில் இரு நிலையினவாகக் கொள்ளும் வண்ணம் அமைந்துள்ளன. சில வஞ்சி விருத்தம் வஞ்சித்துறையாகவும் அலகிட வாய்ப்பு அளிக்கின்றன. கலிவிருத்தங்களில் சில வஞ்சி விருத்தமாகவும் வேறு சில தரவு கொச்சகமாகவும் நிற்கும் தன்மையைப் பதிப்பாசிரியர் (வை.மு. கோ) சுட்டுகின்ருர். அதோடு கலித்துறைப் பாடல்கள் சிலவும் எழுசீர் ஆசிரிய விருத்தங்கள் சிலவும் கலிவிருத்தமாக அலகுபெறும் பான்மையனவாய் நிற்கின்றன. இத்தகைய யாப்பு மயக்கம்மிகுதியாகக் கம்பராமாயணத்தில் அமைந்ததன் காரணம் ஆயத் தக்கது.

சிந்தாமணியிலமைந்தது போன்றே கம்பனில் கலிவிருத்தம் மிகுதியாகவும் அறுசீராசிரிய விருத்தம் அடுத்த நிலையிலும் பயன்பட்டமை இணைத்து நினைத்தற்குரியது. தற்காலம் வரையிலும் இவ்விரு வடிவங்களும் பயின்று வரலும் குறிப்பிடத் தக்கது.

ஒரே வகைப் பாவில் பல்வகை ஓசை வேறுபாடுகள் அமையும் படிச் சீரமைப்பை மாற்றி இனிமை பொருத்தும் நிலை கம்பனிடம் காணப்படுகின்றது. 96 வகைச் சந்தங்களைக் கம்பன் கையாண்டுள்ளார் என்பர். பலவகை யாப்பமைப்புடைய விருத்தங்களை மாற்றி மாற்றிப் பயன் கொள்ளுவதனுலும் ஒரு வகைச் சந்தஇன்பம் கம்பனில் முழுமையாகக் காணப்படுகின்றது. ஒரே வகைப் பாவின அமைப்பைப் பயன்படுத்துவதால் இனிமை குறைந்து விடாதிருக்கவும், தொடர்ந்து கற்கும் சுவை இழந்து விடாதிருக்கவும், இடையிடையே பிற பாவடிவ நிலை பெய்யப்படும் இந்நிலை துணை புரிகின்றது.

சிந்தாமணியிலும், இவ்வகை அமைப்பிருப்பதால் இக்கூறும் அக்காப்பியத் தோய்வால் கம்பனுக்கு ஏற்பட்டிருக்கலாமோ என எண்ணலாம். 'ஓரிலம்பகத்தில், அறுசீரினை மிகுதியாக 37 முறை

யும், குறைவாக நான்கு முறையும் கையாண்டுள்ளார். இதில் ஒரே முறை மற்ற வகையிலிருந்து அறுசீருக்கு மாறும்போது மிகக் குறைவாக ஒரு பாடலைப்பாடி அடுத்தவகைக்குச் செல்லுதலும் உண்டு. மிகுதியான அளவில், அறுசீராக 49 பாடல்களைத் தொடர்ந்தும் அமைப்பதுண்டு. கலி விருத்தம் ஒரு முறையிலிருந்து 50 முறை மாற்றும் நெறி புலப்படுகிறது. தொடர்ந்துபாடுவதில் குறைந்த அளவு ஒன்றாகவும், மிகுதியாக 35 செய்யுளும் அமையும் பாங்கைக் காண்கிறோம். இவ் எண்ணிக்கை சந்த அடிப்படையிலும் பொருள் -அடிப்படையிலும் மேலும் பகுத்துக் காணப் பெரு வாய்ப்புள்ளது. இதனால் காப்பியத்திற்கு விருத்தமே ஏற்றது எனவும் அவற்றுள்ளும் அறுசீரும் கலிவிருத்தமுமே தொடர்ந்து பாடி விளக்கங்களையும் உணர்வு வெளிப்பாடுகளையும் காட்டத் தக்கவை எனத் தேவர் கொண்ட கொள்கை புலனாகும்.

'பாடல்களில் சந்தங்களை ஏறக்குறைய 22 பாடல்களுக்கு ஒரு முறை மாற்றும் போக்கைக் கம்பரிடம் காண்கிறோம். ஒரே ஒரு பாடலுக்காக மாற்றும் இடங்களும் உள. அப்போக்கு சுந்தர காண்டத்தில் மிகுதி (7 முறை). ஆறு காண்டங்களிலும் உள்ள சந்த மாற்றங்களைக் காணின் ஒரு வகை அலைக் கொள்கையைக் காண்கிறோம். செயல்கள் நிறையப் பால, ஆரண்ய, சுந்தர, யுத்த காண்டங்களில் சந்த மாற்றம் மிகுதியாகவும் உணர்வு மிகுந்த அயோத்தியா காண்டத்திலும் கிட்கிந்தா காண்டத்திலும் சந்த மாற்றம் குறைவாகவும் அமைந்து அலை வடிவை உணர்த்தும். உணர்வடிப்படையில் எழும் செயல் வேறுபாடு சந்த மாற்றத்திற்கு அடிப்படை எனக் கம்பர் கொண்டுள்ளார்.' (பக் 249, இலக்கியக் கொள்கை-2).

*வளையாபதி முதலியன :* ஐம்பெருங் காப்பியங்களில் அடக்கப்படும் வளையாபதி, குண்டலகேசி ஆகியன முழுமையாக இன்று கிடைக்கப் பெற்றில. வளையாபதி யினதாக இன்று நாம்பெறும் 72 பாடல்கள், தரவு கொச்சகம் (29+2), கலித்துறை (5), கலி விருத்தம் (33), அறுசீர் ஆசிரிய விருத்தம் ஆகிய யாப்பு நிலையின. குண்டலகேசியில் கிடைக்கும் 19 பாடல்களில், தரவு (2), கலித்துறை (3), கலிவிருத்தம் (3), அறுசீர் ஆசிரிய விருத்தம் (11) ஆகிய யாப்பமைப்புக்கள் காணப்படுகின்றன.

யசோதர காவியத்தின் 330 செய்யுட்களும் கலிவிருத்தம் (148) அறுசீர் ஆசிரிய விருத்தம் (182) ஆகிய இரு யாப்பிலுமே அமைய, அவ்வாறே உதயணகுமார காவியத்தின் 353 பாடல்களும் கலி விருத்தம் (181) அறுசீராசிரிய விருத்த (172) யாப்புக்களில் அமைவது குறிப்பிடத்தக்கது. சிந்தாமணியிலும் கம்பனிலும் மிக்கு வந்த இவ் யாப்புக்களே இங்கும் முழு உருவாக்கத்திற்கு உதவி

யுள்ளமை காப்பிய யாப்பின் ஒரு தனித்த இயல்பைக் காட்டு கின்றது எனலாம்.

நீலகேசியே பலவகைப் பாவினங்களின் பயிற்சியை மீண்டும் காட்டுகின்றது. இதன் 894 பாடல்களில் தரவு கொச்சகம் (211), கலித்துறை (210), கலி விருத்தம் (374), அறுசீர் (67) எண்சீர் (2) ஆசிரிய விருத்தங்கள், கலித்தாழிசை (18), வஞ்சி விருத்தம் (12) என்பன அமைகின்றன.

பெரியபுராணம்: திருத்தொண்டர் புராணம் எனவும் பெரிய புராணமெனவும் சிறப்பிக்கப்படும் சேக்கிழாரின் காப்பியம் இரு காண்டங்களாகவும் பதின்மூன்று சருக்கங்களாகவும் பிரிக்கப் பெற்று 4253 பாடல்களைக் கொண்டு அமைகின்றது. 'யாப்பு வகைகளுள் கொச்சகக் கலிப்பா சேக்கிழாரின் விருப்பிற்குரியது எனலாம். அடுத்து மாமாகாய் மாமாகாய் அமைந்த அறுசீர் விருத்தத்தின் ஆட்சி சேக்கிழாரிடத்து மிகுதி. நான்கு காய் இரண்டு மா அமைந்த அறுசீர் விருத்தங்களும் மிகுதி. விளமா மா விளமா மா அமைந்த அறுசீர் விருத்தமும் மிகுதியே. ஆனால் சந்த நயம் வாய்ந்த எழுசீர் விருத்தத்தைக் குறைவாகவே ஆள்கின்றார். கொச்சகக் கலியைப் போல மிகுதியாக ஆளவில்லை எனினும் கலித் துறையும் சேக்கிழாரின் விருப்பத்திற்குரியது எனலாம். அதில் பல சந்தங்களை அமைத்து ஆள்கின்றார். காய்காய்மாமா காய் காய் மாமா அமைந்தனவும் மாவிள விளமா மாவிள விளமா அமைந் தனவும் ஆகிய எண்சீர் விருத்தங்கள் சில விடங்களில் ஆளப்படு கின்றன. கலிவிருத்தமும் ஆங்காங்குத் தலை காட்டுகிறது' (பக் 271-72, தெய்வத் தமிழ்).

காப்பியத்தின் பொதுவமைப்பில், முத்தகச் செய்யுட்களும் குளகச் செய்யுட்களும் கையாளும் நிலை உண்டு. அனைத்துக் காப் பியங்களிலும் பல பாடல்கள் ஒரு தொடராக அமையும் குளக அமைப்புக் காணப் படுகிறது. இரண்டு முதல் ஒன்பது பாடல் வரை இத்தன்மை தொடர்ந்தமை கம்பனிடம் காணப்படுகின்றது.

சூளாமணி: சூளாமணி, பாயிரமும் நாட்டுச்சருக்கம் முதல் முத்திச் சருக்கம்வரை 12 சருக்கங்களும் பெற்று 2131 விருத்தங் களுடன் அமைகின்ற காப்பியமாம். 'சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி என்றிவற்றின் முதற் பாட்டு வண்ணத்தான் வருவன; அவற்றில் நேரசை முதலாய்வரின் ஓரடி பதினான்கெழுத்தாம், நிரையசை முதலாய்வரின் ஓரடி பதினைந் தெழுத்தாம்' என்ற யாப்பருங்கல விருத்தியுரைக்கேற்ப, நூலின் பாயிரம் கலிநிலைத்துறைச் செய்யுளில் தொடங்குகின்றது.

மொத்தமாகப் பார்க்கும் போது சூளாமணியின்கண் கலி விருத்தமே மிகுதி (1210). அறுசீர் ஆசிரிய விருத்தம் அடுத்த

நிலையினது (735). பல வகைக் கலித்துறைகள் சேர்ந்து, அடுத்த இடத்தைப் பெற்றன (92), எழுசீர் ஆசிரியவிருத்தம் (40), வஞ்சி விருத்தம் (31), எண் சீர் ஆசிரிய விருத்தம் (14), தரவு கொச்சகம் (8), வஞ்சித்துறை (1) என்பனவும் வருகின்றன. சிலம்பு சிந்தா மணி ஆகியவற்றின் செல்வாக்கால் போலும் மேற்கூறிய வஞ்சி விருத்தம், கலிவிருத்தம், கலித்துறை அறுசீர் விருத்த யாப்பில் வரிப்பாடல்களும் இயலுகின்றன. இவை ஒரு பொருள்மேல் மூன் றடுக்கியநிலையின (182-184, 187-189, 214-216, 539-541, 754-756, 1037-1039, 1126-1128, 1619-1621) இறைவாழ்த்தும் பிற பொருண்மைகளும் இதன்கண் உள. விதூடகனின் பாடல் (1619-21), முதல் அடியே நான்காமடி யாகும் புதுமை யுடையது.அவ்வடி களும்இரட்டையாப்பாக அமைதல் நினைக்கப் படலாம்.

ஓடுமேமன மோடுமே
கூடு மோதணி கோதையாய்
காடு சேர்கனி காண்டொறு
மோடு மேமன மோடுமே (1619)

இரட்டையாப்புப் பெறல் (745-747), அனைத்தடியின் முதற்சீர் ஒத்து வரல் (748, 749), முதலிருசீர் ஒத்து வரல் (807-810, 1521-1525), இரண்டாம் நான்காம் சீர்கள் ஒவ்வோரடியிலும் ஒன்றே யாதல் (750, 751), இரண்டாம் நான்காம் அடிகள் ஒன்றே யாதல் (752, 753) ஆகிய அமைப்புக்கள் சிறப்பும் புதுமையும் உடையன. வரிப்பாடல்களில், இடையடிமடக்கல், இரண்டாமடியின் இறுதி மூன்றுமடியின் ஆரம்பத்தில் பொருந்தல் ஆகிய பல நிலைகள் அமைந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. புது முயற்சிகள்-சோதனை கள் எனக் கூறும் வண்ணமும், மரபு தொடரல் எனும் வண்ணமும் இங்கு அமைகின்றன.

*சித்தர்:* இடைக்கால இலக்கியப் படைப்பாளர்களில் சிறப்பு வாய்ந்தவர்கள் சித்தர்கள். பாடு பொருளாலும் பயன்படுத்திய பாவடிவாலும் தனித்தன்மை யுடையவர்கள். மரபு யாப்புக்கும் புதிய பாவடிவுக்கும் இணைப்புப் பாலமாக்கியவர்கள். வரலாற்று நிலையில், யாப்பு வளர்ச்சியை நினைக்கும்போது சித்தர் காலம். குறிப்பிடத்தக்க ஒன்று. சிந்து, கும்மி, கண்ணி, ஆனந்தக் களிப்பு கீர்த்தனை, வண்ணம் போன்ற பல புது யாப்பு வகைகளின் பயிற்சிக் களமாகச் சித்தர் பாடல்கள் அமைகின்றன. பாவினங் களினும் ஓசைமிக்கு, இசையினிமை பொருந்திய இவ் வடிவங்கள் இன்றும் பயின்று வருவது அதன் நிலைபேற்றிற்கும் சிறப்புக்கும் நல்ல சான்றாகும்.

சிந்து எனும் பாவடிவம் முதன் முதலில் சித்தராரூடம் என்ற நூலில் தோன்றியது என்பர். பஞ்சமரபு (83) ஈரடிகள்

அளவொத்து அமைவது சிந்து எனக் கூறும். இந்நூற்ருண்டின் அறிஞரான புலவர் குழந்தை பல்வகை சிந்து அமைப்புக்களை இலக் கணம் கூறித் தெளிவுபடுத்துகின்ருர்.

சித்தரின் சிந்துக்கள் பெரும்பான்மை ஈரடிச் செய்யுட்களே, இவ் அடிகட்கிடையே தனிச்சீர் அமைவது ஒரு வகை. ஒவ்வோர டியும் இருபகுப்புற்று இடையே தனிச்சீர் பெறலும் உண்டு. முதற் பகுப்புக்கும் தனிச்சீருக்கு மிடையே சிறு ஓசை நிறுத்தம் நிகழ் கின்றது. தனிச் சீரால் ஏற்படுகின்ற ஓசை நீட்சி சிந்தின் சிறப் பியல்பு. முன்னிலைப்படுத்தும் நிலையிலும், தொடர்ச்சி தரும் நிலையி லும், பொருள் பொருத்தத்துடனும் இத்தனிச்சீர் வருகின்றது.

ஈரடி அல்லது இருபகுதி அளவொத்து வருதல் சிறிதே மாறு பட்டு ஓசை சிந்தி நிற்றல் இங்கு அமைகின்றது. இவ் ஓசை சிந்து தலிலும் நிலைத்த அமைப்பு உண்டு. இவ் இயல்புகளே இலக்கண மாகவும் இப்பா இப்பெயர் பெறக் காரணமாகவும் அமைகின்றன எனலாம். அடிகளும் அடிப் பகுதிகளும் இயைபுத் தொடை பெறுவ தும், அடிகள் எதுகையும், அடிப்பகுதிகளிடையே மோனை பொருந்துவதும் இச்சிந்தின் தன்மையாம்.

இடைக்காடரின் சில பாடலும் பீருமுகம்மதின் ஞான ரத்தினக் குறவஞ்சியும் எளிய சிந்து வடிவின. முன்னது நாற்சீரடி களிரண்டும், பின்னது ஐஞ்சீரடிகளிரண்டும் உடைய பாடல்களா லாயது. முதலடியின் ஈற்றில் தனிச்சீர் உண்டு. அடிகளில், ஒன்றும் மூன்றும் சீரில் மோனை வருகின்றது. முதலடி கேள்வியாக இரண்டாமடி பதிலாக அமைவதும் உண்டு.

பிறிதொருவகைச் சிந்து, அளவொத்த ஈரடிகள் இவ்விரண் டாய்த் துண்டுபட்டு, அவற்றிடையே தணிச்சீருடைத்தாய் அமை தல் பிற்காலப் பெயர் நிலைப்படி, நாற்சீரிரட்டை எனத் தகுவன இடைக்காடரிடம் காணப்படுகின்றன. ஒவ்வொரு அடிப்பகுதியும் நாற்சீர் பெறுவது இது. இவற்றின் கண் அடிகளின் ஈற்றின இரு சீரும் இயைபாக அமைகின்றன.

அடிப் பகுதிகள் முச்சீர் பெறுவது, முச்சீரிரட்டை இவ் வகை யும் இடைக்காடரிடம் உண்டு. தும்பியையும் மயிலையும் குயிலையும் முன்னிலைப்படுத்தும் பாடல்கள் அதற்கேற்ற இயைபு பெறு கின்றன. 'பால் கற' எனச் செயற்படுத்தும் பகுதியும் அவ்வாறே, சிந்தின் பொதுத் தொடையமைப்புப் பொருந்தி அமைகின்றன.

அகப் பேயாரின் செய்யுட்களும் இடக்காடரின் பாடல் சில வும், பிறிதொரு வகையான இருசீரிரட்டையில் அடங்குகின்றன. இவை முறையே அகப்பேய், பசுவே எனும் தனிச்சீர் பெறு

கின்றன. எளிய வடிவுடைய இவற்றின் இம் முன்னிலைச் சொற்கள் முதன்மை குன்றியே அமைகின்றன.

ஈசன் பாசமடி அகப்பேய்
இவ் வண்ணங் கண்ட தெல்லாம்
பாசம் பயின்ற தடி-அகப்பேய்
பரமது கண்டாயே

குதம்பையர் செய்யுளும், காடரின் புல்லாங்குழல் ஊதலும் தனிச் சிந்து வடிவின. முதலடி நாற்சீராக வர இரண்டாமடி இரு சீராக முதலடியுடன் எதுகையும் கருத்து முடிவும் பெறுகின்றது; தொடர்ந்து வரும் தனிச்சீருக்குப் பின் இரண்டாவதடி மடங்கு கின்றது. முன்னதில் குதம்பாய் என்பதும், பின்னதில் கோனே என்பதும் தனிச்சீர்; இப்பாடல்கள் முறையே கேள்வியாகவும் ஏவ லாகவும் வருகின்றன.

தன்னை யறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப்
பின்னாசை யேதுக்கடி?-குதம்பாய்!
பின்னாசை யேதுக்கடி?

இவ்வகைகள் இடைக்காடரைச் சிந்தின் தந்தை எனக் காட்டு கின்றன. இவற்றை ஓரடிச் சிந்து எனலும் உண்டு.

சிந்தினைப் போன்றே கும்மியும் சித்தரால் வளம் பெற்றது. இவை யிரண்டுமே பாடலைக் குறிக்கு முன் ஆடலைச் சுட்டி வந்துள்ளன. கொங்கணரின் வாலைக் கும்மியும், மதுரை வாலைச் சாமியின் ஞானக்கும்மியும் வெண்டளை மிக்க எழுசீரிரண் டடியா லான செய்யுட்களுடையன. ஏழாம்சீர் விளங்காயாதல் பெரும் பான்மை. அடியெதுகையும், ஒன்றும் ஐந்தாம் சீரில் மோனையும் உண்டு. கும்மித்தமிழ், கும்மிப்பாட்டு என்ற குறிப்புக்கள் இதனைத் தனி இலக்கிய வகை யாக்குகின்றன.

கடுவெளிச் சித்தரின் ஆனந்தக் களிப்பு தனியாப்புடையது. புது இலக்கியவகை எனவும் கொள்ளலாம். இது, பல்லவி யமைப் புடைய பகுதியும், 34 சரணமும் பெறுகின்றது. பல்லவி, எதுகை யுடைய அளவொவ்வா ஈரடியாலானது முதலடி முச்சீரும் தனிச் சொல்லும் பெற இரண்டாமடி நாற்சீராகி ஓசை நீட்சி பெறு கின்றது. பல்லவியும், முதற் சரணமும் ஒரே எதுகையின. பல்லவியின் வடிவம் இரட்டித்துச் சரணத்தில் முந்நாற்சீ ரிரட்டை யாக அமைகின்றது. சரணங்கள் சிந்துக்குரிய தொடையமைதி பெற்றுப் பல்லவியிலிருந்து சிறிதே மாறுபடுகின்றது. சரணங்கள் தோறும் பல்லவி பாடப்படல் எதிர்பார்க்கப் படுகின்றது.

பட்டினத்தாரின் 'முதல்வன் முறையீடு' இதனுடன் ஒத்த சாயல் உடையது. 'கன்னிவன நாதா கன்னிவன நாதா' என்ற

பல்லவிப் பகுதியும் வெண்டளேயே பெற்ற 72 கண்ணிகளும் உடையது. நான்கு கண்ணிக்கு ஒருமுறை பல்லவிப் பகுதி மீண்டும் பாடப்படல் எதிர்பார்க்கப் படுகின்றது (1,5,9...69 ஆகிய கண்ணி கட்கு முன் இப்பகுதி மீண்டும் மீண்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளமை இக் கருத்துக்கு அரணுகும்). இவ் அமைப்பே, பிற்காலக் கீர்த்தனேக் குப் பிறப்பிடமாயிற்ருே என்ற எண்ணம் எழுகின்றது.

இடைக் காடரின் தாண்டவராயக்கோன் கூற்று கீர்த்தனேச் சாயல் உடையது. நாற்சீரடி இரண்டு வந்த பல்லவியும், இருசீ ரொற்றையான அனுபல்லவியும் எட்டுத் தாழிசையும் பெறு கின்றது. பல்லவி தாழிசை தோறும் பாடப்படல் குறிக்கப் பெறு கின்றது. அனுபல்லவியும் முதல் தாழிசையும் மோனேத் தொடர்பு பெறுகின்றது. எண்சீரடித் தாழிசைகள் எதுகையும், ஒன்ரும் ஐந்தாம் சீரில் மோனேயும் அடிப்பகுதிகட்குள் இயைபும் பெரும் பாலும் வெண்டளேயும் ஏற்கின்றன.

அமைப்புச் செறிவுடைய கண்ணி, இடைக்காடர், பட்டினத் தார், பத்திரகிரியார் என்போரால் மெருகு பெற்றது. விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமுடைய குறள் வெண்செந்துறையோடு நெருங்கிய தொடர்புடையது கண்ணி. அளவொத்த நாற்சீரடிகளி ரண்டு, எதுகையும் பொழிப்பு மோனேயும் ஏற்றுப் பெரும்பான்மை வெண்டளேயும் அருகி 'யதி' வருமிடத்துப் பிறதளேயும் மயங்கி வருகின்றன. பல கண்ணிகள் ஒரே பொருண்மையில் தொடரும் போது தம்முள் ஈறியைபும் பெற்று நிற்கின்றன. முன்னிலேப் படுத் தற்கேற்ப இவ் ஈறியைபு அமைகின்றது. பல வடிவங்கள் தழைக் கக் காடர் புரிந்த தொண்டு இங்கும் தெரிகின்றது.

பட்டினத்தாரின் உடற்கூற்று வண்ணம் வடிவாலும் பொரு ளாலும் புது யாப்பாகவும் புது இலக்கிய வகையாகவும் அமை கின்றது. நான்கு கலேகளேயுடையது இவ்வண்ணம். ஒவ்வொரு கலேயும் நான்கு குழிப்பும் ஒரு தொங்கலுமாக அமைந்துள்ளன. ஒன்றும் மூன்றும் கலேகள் எதுகையும், ஒன்றுமிரண்டும் இரண்டு மூன்றும் மோனேயும் பெறுகின்றன. இவ் அமைப்பு பிற்காலத்தில் தாயுமானவரால் பின்பற்றப்படுகின்றது.

மிகப் பிற்காலத்து வாழ்ந்த காரைச் சித்தரின் கனக வைப்பு எனும் நூல் ஒருசீரடி நான்காலமைந்த செய்யுளொன்றைத் தருவது புதுமை புகுத்தல் எனும் நிலேயில் இங்கு நினேக்கத்தக்கது.

அழுகணிச் சித்தரின் 32 பாடல்களும் கலித்தாழிசை அல்லது ஒருவகைச் சிந்து அமைப்பின எனக் கூறத்தகும் வண்ணம் அமை கின்றன. நான்கடிகளும் தம்முள் அடியெதுகை பெற்று, ஈற்றடி நீண் டிசைத்து, இடையே 'என் கண்ணம்மா' என்ற (தனிச்)சொல்

பெற்று வருகின்றது. ஈற்றடி நீண்டிசைப்பதால் கலித்தாழிசை எனும் வண்ணம் அமைகின்றது; ஈற்றடியினிடையில் வரும் சொல் நிலையால் சிந்தினையும் ஒக்கின்றது.

பட்டணத்தை யாளுகின்ற பஞ்சவர்கள் ராசாக்கள்
விட்டுப் பிரியாமல் வீரியங்கள் தாம்பேசி
விட்டுப் பிரிந்தவரே வேறு படுங்காலம்
பட்டணமும் தான்பறிபோய் - என் கண்ணம்மா
படைமன்னர் மாண்டதென்ன

இதனை நோக்கும்போது கலித்தாழிசையே பிற்காலச் சிந்துக்கு இடம் அளித்ததோ எனவும் எண்ண வேண்டியுள்ளது.

சேஷயோகியாரின் ஞான ஏற்றம் 139 அடியில் அமைகின்றது. இருசீரடிகள் பல தொடர்ந்துவரும் இவ்வமைப்பு, வஞ்சிப்பாவின் எச்சவடிவினைக் காட்டுகின்றது எனலாம். நாட்டுப்புறப் பாடல்கள் இலக்கிய ஏற்றம் பெற்றமையை இளங்கோ, மாணிக்கவாசகரிடம் கண்ட வண்ணம் இங்கும் காண்கின்றோம்.

உயர்ந்து உணர்வதற்கு அரிதானவையாக இருந்த கருத்துக்களைப் பொதுமக்களைக் கருதிப் போலும் பாமரரிடையே பரந்து வழங்கிய எளிய இனிய செய்யுள் நடையில் தந்தனர் இப் புலவர்கள். அன்று, ஒருவேளை ஏட்டு வடிவம் பெறுத இச் செய்யுட்கள் அழியாது பல நூற்றாண்டுகள் தொடர்ந்து வாய்மொழியாக வாழ்ந்து வந்தமைக்கும் அவற்றின் வடிவ எளிமையும் பாமரர் வாயிலும் பயின்ற தன்மையுமே காரணமாக இருக்கலாம்.

மரபு வடிவங்கள் பலவும் சித்தர் பாடல்களில் வருகின்றன. காக புசுண்டர்குறள், ஒரு விகற்பக் குறள் வெண்பாவால் (16) ஆயது. சிவவாக்கியார் பாடல் (518) அறுசீர், எழுசீர் சந்த விருத்தங்களைத் தருகின்றது. பட்டினத்தார், அகவல், கட்டளைக் கலித்துறை, வெண்பா, தரவு கொச்சகம் போன்ற பல மரபு வடிவங்களைக் கையாண்டார். இவ்வறே பிறபல நூற்களும் அமைந்து, சித்தர்கள் பழமைக்கும் புதுமைக்கும் இணைப்புப் பாலமாக அமைந்ததைக் காட்டுகின்றன.

அருணகிரியார் : திருப்புகழ் பாடித் தனிப்புகழ் நிறுவியவர் அருணகிரிநாதர். சந்தக் குழிப்புக்கு ஒருமுழுநிலை எடுத்துக் காட்டாக அமைவது அருணகிரியாரின் பாடல்களே. 1008 சந்தங்களை அருணகிரியார் பயன்படுத்தியுள்ளார் என்பது பொதுக் கருத்து. இவரைப் பின்பற்றி வண்ணச் சரபம்தண்டபாணி சுவாமிகள் பல சந்தப்பா பாடியுள்ளார்.

அருணகிரியார் பாடியனவாக, திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி,கந்தரநுபூதி, வேல்விருத்தம், மயில் விருத்தம், சேவல்

விருத்தம்,திருவகுப்பு, திருவெழு கூற்றிருக்கை என்பன அமைகின்றன. 16000 திருப்புகழ் பாடியதாக வரலாறு; ஆயின் இன்று கிடைப்பன சுமார் 1300 மட்டுமே (எண்ணிக்கை பதிப்புக்குத் தக 1304, 1311, 1361 என மாறுபடுகின்றது). கந்தரலங்காரம் ஒரு காப்புச் செய்யுளும் 6 மிகைப் பாடல்களுடன் 108 செய்யுட்களுடையது. கந்தரந்தாதி, காப்புப் பாடல் இரண்டும் நூலின்கண் நூறுபாடலும் உடையது. கந்தரநுபூதி ஒருகாப்பும் ஐம்பத்தொரு பாடலும் கொண்டு அமைகின்றது. சில பதிப்பின்படி 105 பாடல் இந்நூலின்கண் உள. வேல்விருத்தத்தில் பத்தும், மயில்விருத்தத்தில் (ஒரு காப்பும்) பதினொன்றும், சேவல் விருத்தத்தில் (ஒரு காப்பும்) பதினொன்றும் விருத்தச் செய்யுட்கள் அமைகின்றன. திருவகுப்பு எனும் தொகுப்பு நூலில் 25 வகுப்புக்கள் உள; முதற் பதினெட்டே அருணகிரியார் பாடியது என்பர். இவர் பாடிய திருவெழுகூற்றிருக்கை 27 அடிகளுடைய இணைக்குறள் ஆசிரியம்.

கந்தர் அநுபூதி சந்தக் கலிவிருத்தங்களாலாயது. திருப்புகழும் திருவகுப்பும் சந்தப் பாக்களால் ஆயவை. கந்தரலங்காரமும் கந்தரந்தாதியும் கட்டளைக் கலித்துறை மயில், வேல், சேவல் விருத்தங்கள் (இரட்டை) ஆசிரிய விருத்தம். எழுகூற்றிருக்கை இணைக்குறள் ஆசிரியப்பா —இவ்வாறு பல செய்யுள் வடிவங்கள் பயின்றுள்ளன.

அருணர் ஆசுகவி என்பது திருப்புகழ் பாடிய வரலாற்றால் தெரிகின்றது. எழுகூற்றிருக்கையும் கரந்துறைப் பாட்டை ஒத்து அமையும் 173, 319-ஆம் பாடல்களும், ஓரெழுத்தினம் என ஓரளவு கூறத்தகும் 'திதத் தத்தத்' என்ற அந்தாதியும் (54), சித்திர கவிகள்.

தமிழிலக்கியப் புலவர்களில் மிகுதியான ஒலிக்குறிப்புச் சொற்களையும் எழுத்துக்களையும் பயன்படுத்தி வெற்றி பெற்றவர் இவர் மட்டுமே.

நாற்கவி யரசரான இவரின் நயமிக்க பாடற் செல்வாக்குக் காரணமாகப் பிற்காலத்தும் வண்ண விருத்தங்கள் எழுந்துள்ளன. அகப் பொருள் அமைப்புடைய சிற்றம்பல வாணர் வண்ணம் அண்ணாமலையார் வண்ணம் போன்றனவும், முகமதியப் புலவர் காஸிம் இயற்றிய ஞானத்திருப்புகழ்ப் பாடலும் இங்கு நினைக்கத்தக்கன. பட்டினத்தார், தாயுமானவர் அருளிய உடல்கூற்று வண்ணங்கள் திருப்புகழின் 'அறுகுநுனி பனியனைய'(862), பனியின் விந்துளி போலவே' (241) ஆகிய பாடல்களுடன் இணைத்து நினைக்கத்தக்கன.

திருவகுப்பின் 25 பாடல்கள் பல நெடிய அமைப்புக்களைக் காட்டுகின்றன. 16-வது பாடலாலாகிய சித்துவகுப்பு சீர் எண்

ணிக்கை நோக்கின் ஓரடிக்கு 195 சீர்ப் பகுப்புடன் அமைகின்றது. இவ்வாறே, பூதவேதாளவகுப்பு நூற்றறுபது சீரும் (5) பெறப் பிறவற்றில் நூற்றுப் பன்னிரண்டு (15) அறுபத்து நான்கு (7,12) எனும் சீரமைப்புக்களும் காணப்படுகின்றன.

அனைத்து அடிப்பகுதிகளும் ஒரே முடிவு பெறுவதும் திருவகுப்பில் காணப்படுகின்றது (20,21,4). திருப்புகழ்ப்பாடலின் தொங்கலின் நிலையில் ஓர் ஒப்புமையமைப்பு காணப்படுகின்றது. மிகப் பெரும்பான்மையும் பெருமாளே எனும் முடிப்புத் தொங்கலுக் கேற்பத் தனதான எனவும் அருகித் தம்பிரானே எனும் முடிப்புக் கேற்பத் தந்ததான எனவும் மிக அருகி 'வருபெருமாளே' என்பதற்கேற்ப 'தனதனதான' எனவும் அமைகின்றன.

நெடும் பாடல் பலவும் இருப்பினும் சாதாரண விருத்தம் போன்ற சிறுபாடலும் திருப்புகழில் உண்டு:

காலனிடத் தணுகாதே
காசினியிற் பிறவாதே
சீல அகத் திய ஞான
தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே
மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளானே
நாக கிரிப் பெருமாளே.

ஓசைக்கும் தாளத்திற்கும் முதன்மை அளித்து, அமைப்புச் செவ்வி காக்கப்பட்ட இப்பாடல்களில் ஒன்று கூட எதுகை மோனை பெருது வரவில்லை. அடிகள் தம்முள் எதுகையும் கலைகளும் குழிப் புக்களும் தம்முள் மோனையும் பெற்றே பயின்றன. வடசொற் பயிற்சி காரணமாக மோனை ஒற்றெழுத்தாகவும் வந்தது (அலங் காரம் 80). சந்தத்திற்கு முதன்மை காரணமாக, தேவயானை தெவயானை எனவும் (109) உலகம் உலாகம் எனவும் (203) சீராடவே போராடியே என்பன சிராடவெ பொராடியே எனவும் (101) திருப்புகழில் வருகின்றன.

வண்ணவிருத்தங்களெனக் குறிக்கப்படும் இவரது பாடல் களில், எழுத்துச் சொல் பயிற்சியால் அமையும் வண்ணங்கள் பலவும் விரவி ஒலிநயம் அளித்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

குமரகுருபரர் : குமரகுருபரர் பல பிரபந்தங்கள் படைத்த நிலையிலும், யாப்புக்குச் சான்றிலக்கியமாகிய மாறன் பாப்பாவி னத்தை யொத்துச் சிதம்பரச் செய்யுட்கோவை இயற்றி அளித்த தன்மையிலும், யாப்பியல் வரலாற்றில் தனித்தொண்டு புரிந் துள்ளார்.

குமர குருபரர் அருளியனவாகப் பதின்மூன்று நூற்கள் இன்று கூறப்படுகின்றன. (1) கலிவெண்பா (2) மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (3) மதுரைக் கலம்பகம் (4) நீதிநெறி விளக்கம் (5) திருவாரூர் நான்மணிமாலை (6) முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் (7) சிதம்பரமும்மணிக் கோவை (8) சிதம்பரச் செய்யுட்கோவை (9) பண்டார மும்மணிக்கோவை (10) காசிக் கலம்பகம் (11) சகல கலாவல்லி மாலை (12) கைலைக் கலம்பகம் (13) காசித் துண்டி விநாயகர் பதிகம் ஆகியன. இவையொழிய மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை குறம், சிவகாமி அம்மை இரட்டை மணிமாலையாகியனவும் இவர் பெயரில் வழங்குகின்றன. இவற்றுள் கைலைக் கலம்பகச் செய்யுட்கள் பல இழக்கப்பட்டன; காசித் துண்டி விநாயகர் பதிகம் முழுவதும் இழக்கப்பட்டது.

பாவும் பாவினமுமாகிய யாப்புக்களை இவர் கையாண்டுள்ளார். கலிவெண்பா யாப்பில் அமைந்தது கந்தர் கலிவெண்பா. பல் வகைச் சந்த விருத்தங்களைப் பயன் கொண்டு யாக்கப்பட்டவை மீனாட்சியம்மை, முத்துக் குமார சுவாமி பிள்ளைத்தமிழ் நூல்கள். ஒருபோகு வெண்பா, கலித்துறை, வெண்டுறை, வஞ்சித்துறை, இன்னிசை வெண்பா, ஆசிரியப்பா, பலவகை விருத்தங்களின் கலவையால் ஆகியன மதுரை, காசிக் கலம்பகங்கள். வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்பன முறையே கலந்து நாற்பது செய்யுட்கள் அமைந்தது திருவாரூர் நான்மணிமாலை. இவ்வாறே ஆசிரியம் வெண்பா கலித்துறை விரவிய சிதம்பர பண்டார மும்மணிக்கோவைகள். சிதம்பரச் செய்யுட் கோவை, நாற்பாவிற்கும் அவற்றின் அனைத்து இனங்கட்கும், மருட்பாவிற்கும் செய்யுட்கள் அமைகின்றது.

அனைத்து யாப்புக்களையும் இவை இலக்கியங்களிலும் கையாண்டமையைக் கீழ்வரும் எண்ணிக்கை தெளிவுறுத்தும். இவர் பாடல்களில், வெண்பா 189, வெண்டாழிசை 5, வெண்டுறை 5, வெளி விருத்தம் 2, ஆசிரியப்பா 41, ஆசிரியத் தாழிசை 2, ஆசிரியத்துறை 4, ஆசிரிய விருத்தம் 298, கலிப்பா 38, கலித்தாழிசை 1, கலித் துறை 96, கலிவிருத்தம் 6, வஞ்சிப்பா 2, வஞ்சித்தாழிசை 1, வஞ்சித்துறை 3, வஞ்சிவிருத்தம் 4, மருட்பா 6. இவை அமைகின்றன.

தொடை நயங்களும் ஓசையமைதிகளும் இல்லாத பாடலே இல்லை எனும்படி இவர் செய்யுட்கள் அமைகின்றன. பெரும்பான்மையும், இவர் ஒரு மரபுக் கவிஞராகவே அமைகின்றார்.

**தாயுமானவர்:** பைந்தமிழ்ப் பாவியற்றியும் முரண்பட்ட வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசப்படுத்தியும் தமிழுக்கும் தமிழ் பதத்திற்கும் தொண்டாற்றியவர் தாயுமானவர். சித்தருக்குப்

பின், கண்ணியைச் செழிக்கச் செய்த தாயுமானவர் மிகப்பல யாப்புக்களைக் கையாண்டார்; ஆனந்தக் களிப்பையும் வளர்ச்சியுறச் செய்தார். 56 தலைப்புக்களாக அமையும் 1452 (+1) பாடல்களும் பலதரத்தன.

ஒரு தலைப்பின் கீழ் ஒன்று முதல் 385 பாடல் வரை காணப்படுகின்றது. தலைப்புகள், முதல் தொடராகவும், பாடல்தோறும் வரும் ஈற்றுத் தொடராகவும், ஈற்றடிப் பகுதியாகவும், பொருண்மையடிப் படையினவாகவும், யாப்பைச் சுட்டியனவாகவும், யாப்பும் தொடரும் இணைந்தமைந்தனவாகவும் வந்துள்ளன: மணிவாசகரின் திருவாசகப் பகுதிகள் இவ்வாறே அமைந்தமை நினைக்கத் தக்கது.

தாயுமானவர் இயற்றிய செய்யுட்களில் ஒரு பகுதி பாமாலைகளாகவும் மற்றொரு பகுதி கண்ணிகளாகவும் அமைந்துள்ளன. பெரும்பான்மையும் ஒரு தலைப்பின் கீழ் அமைவன ஒரே யாப்பு நிலையின. பொருள் வணக்கம், சிவன் செயல் என்பன சீர் எண்ணிக்கையில் மாறுபட்ட பல ஆசிரிய விருத்தங்களாலும், 'ஆசையெனும்' என்பது பல்வகை ஆசிரிய விருத்தங்களும் கலிவிருத்தமும் கலித்துறையும் கலந்தும் அமைந்து வேறுபட்டன.

ஒவ்வொரு தலைப்பின்கண் அமையும் பாடல்களும் ஈற்றெப்புமை பெறலோ அந்தாதியுடனமைதலோ பெரும்பான்மை. நான்கடிப் பாடல்களும் (593), ஈரடிப் பாடல்களும் (858), ஒரு ஆசிரியமும் (38 அடி), ஆனந்தக் களிப்பின் ஓரடிப் பல்லவியுமாக அமையும் இந்நூலின் அடிகள் முச்சீர் முதல் 52 சீர் வரை செல்கின்றன இவற்றில் நாற்சீரடிப் பயிற்சியே மிகுதி.

தாயுமானவரில் பாவகை இனங்கள் பயில்வதோடு சிந்தும் வருகின்றன. பாவகைகளில் நேரிசை வெண்பாவும், கொச்சகக் கலிப்பாவும், கட்டளைக் கலிப்பாவும், நிலைமண்டில ஆசிரியப்பாவும் வருகின்றன. குறட்பாவினமான குறள் வெண் செந்துறையில் அமையும் பாடல்கள் மிக்கு வருகின்றன. பிற பாவினங்களில் ஆசிரிய விருத்தத்தின் பயிற்சியே மிகுதி. 52 சீர் (வண்ணம்), 14 சீர் (1), 12 சீர் (128), 8 சீர் (55), 7சீர் (22), 6 சீர் (90) விருத்தங்கள் உள. கலிவிருத்தமும் (80) கலித்துறையும் (102) பயிலும் கலியினங்கள். கலித்துறையில் பெரும்பான்மையின கட்டளைக் கலித்துறை (59), ஆனந்தக் களிப்பில் சிந்து அமைகின்றது.

இதன்கண் அமையும் அகவல் ஏகார ஈறு பெற்ற நிலை மண்டிலமாகப் பதிக்கப்பட்டுள்ளது. இது முழுமையும் ஈரடி எதுகை பெறவில்லை. மாறாக, அடியெதுகையமையாத அடிகள் பொழிப் பெதுகை பெறுகின்றன. எனவே இதனை இடையடிகள் குறைந்து (2 சீர்) வரும் இணைக் குறள் எனினும் தவறின்று.

நூலின் இறுதியில் அமையும் 'வண்ணம்' எளிய சந்த அமைப் பினது. திருப்புகழ்த் தாக்கத்தை இவண் நினைக்கலாம். சந்தப் பாவானமையால் இது ஓசை யொழுக்குப் பெறுகின்றது. அடி மடங்கு மிடத்திலனைத்தும் எதிர்பார்க்கப்படும் மோனை இதன்கண் இல்லை.

ஆசிரிய விருத்தங்களில் பன்னிருசீர் விருத்தப் பயிற்சியே மிகுதி (128). குறள் வெண் செந்துறை எனப் பொதுப்பட மொழியும் பாக்கள் தாழிசை எனவும் கண்ணி எனவும் பகுக்கப் பெறும் தன் மையின. நாற்சீரடியிரண்டாய் நடப்பன (777), ஈரெதுகை யுடன் அமைவது பெரும் பான்மை. இவை பொழிப்பு மோனை பெற, எண் சீரடி யிரண்டாய் வருவன (51) 1, 5, 7-ஆம் சீர்களில் மோனை பெறுகின்றன.

ஆனந்தக் களிப்பின் சிந்துப் பாடல்கள் (30) தனிச்சொல் லுக்கு முன் முச்சீரடியும் பின் நாற்சீரடியுமாக வரும் ஈரடிகளை யுடைய முந்நாற்சீரிரட்டையாம். இப் பாடல்களுக்குப் பல்லவி போன்று முன் அமையும் ஒரு அடி, பாடல்கள் தோறும் மீண்டும் பாடப் படல் எதிர்பார்க்கப்படுகிறது.

வள்ளலார்: இராமலிங்க சுவாமிகள் அருளிய திருவருட்பா ஆறு திருமுறைகளிலாக 5818 பாடல்களைத் தருகின்றது. பல் வகைய தனிப் பாடல்களும் இணைய, இவ் எண்ணிக்கை 5970 வரை செல்கின்றது. பா, பாவினங்கள், இடைக்காலத் தெழுந்த சிந்து-கும்மி வடிவங்கள் என்பன இவர் செய்யுட்கு வடிவமைத்துள்ளன.

ஆசிரியப் பாட்டிற்கு அளவு கூறும்போது, பேரெல்லை ஆயிரம் அடியாகத் தொல்காப்பியம் முதல் குறிக்கப்படுகின்றது. மதுரைக் காஞ்சியின் 782 அடியினும் மிகுந்து, ஆயிரம் என்ற எல்லையையும் கடந்து அமைகின்றது வள்ளலாரின் அருட்பெருஞ்சோதி அகவல். 1596 அடிகளாலமைந்த இந் நிலைமண்டில ஆசிரியப்பா, இகர ஈறு டன், ஈரடி எதுகை பெற்று, இரட்டை எண்ணுடைய அடிகளனைத் தும் 'ஜோதி' எனும் ஈரெதுகை பெற்று அமைகின்றது.

ஆசிரியத்தில் போன்றே ஆசிரிய விருத்தத்திலும் புதுநிலை கண் டுள்ளார் வள்ளலார். திருவடிப் புகழ்ச்சியின் ஆசிரிய விருத்தம் 192 சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தமாக அமைகின்றது. பக்திக் காலத்தில் தோன்றிய அறுசீர் ஆசிரிய விருத்தம், காப்பிய காலத் தில் எண்சீர் வரை வளர்ந்து, பிரபந்த காலத்தில் பிள்ளைத் தமிழ்த் போன்ற நூற்களில் 32 சீர், 64 சீர் நிலைக்கு வளர்ந்தது. அருணகிரி யாரின் திருப்புகழும் திருவகுப்பும் இவ்வாறே பெருகிய சீர் நிலை யைத் தரினும், வள்ளலாரிடமே இம் மிகுநிலை யமைகின்றது. வள்ள லார், திருவாவடுதுறை ஆதீனம் வித்துவான் தாண்டவராயத் தம்

பிரான் சுவாமிகளுக்கு வரைந்த திருமுருகப் பாசுரத்தில் 102 சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் ஒன்று அமைவதும் இங்கு நினைக்கத் தக்கது.

பிரசாதப் பதிகம், தரிசனப் பதிகம் போன்றன மரபு பற்றி இவர் பின்பற்றிய பதிக அமைப்பைக் காட்டுகின்றன. குறையிரந்த பத்து, முறையிட்ட பத்து போன்ற பல பத்துக்கள் இவரிடம் காணப்படுகின்றமை திருவாசகத்தின் பத்துக்களை நினைப்பூட்டுகின் றன. ஒரு பொருள் பற்றிப் பல பாடல் தொடரும் இலக்கிய மாலை கள் இவரிடம் மிகப்பல. ஐந்தாம் திருமுறை அனைத்தும் மாலைகளே. தெய்வமணி மாலை, ஜீவசாட்சிமாலை முதலியன. தேவ ஆசிரியம், போற்றித் திருவிருத்தம், நெஞ்சுறுத்த திருநேரிசை போன்றன பல யாப்புணர்வோடு அமைக்கப்பட்ட தலைப்புக்கள்.

உள்ளப் பஞ்சகம், நாரையும் கிளியும் நாட்டுறு தூது, ஞான சிகாமணி திருச்சீர் அட்டகம் போன்றன பிரபந்தத் தாக்கத்தை யும் நடேசர் கொம்மி, சல்லாப லகரி ஆகியன நாட்டுப்புற இலக்கி யத் தோய்வையும் காட்டுகின்றன. வெண்ணியாக் கண்ணி, மங் களம், என்ன புண்ணியம் செய்தேனோ போன்ற பல பகுதிகள் கண்ணி, தாழிசை, சிந்து, கீர்த்தனை வடிவங்களில் இசையிணை வுடன் அமைகின்றன. இவை பண் வகுப்பும் பெறுகின்றன.

நான்காம் திருமுறையின் பாங்கிமார் கண்ணி, மொழிமுதல் எழுத்துக்களால் தொடங்கியமைந்து (முதல் 6 உயிரும் ககர வருக் கத்தின் அவ்வுயிர் மெய்யும்) வருக்கமாலை, வருக்கக் கோவை ஆகிய பிரபந்தங்களை நினைப்பூட்டுகின்றது.

திருவருட்பாவின் ஊரனடிகள் பதிப்பு வள்ளலார் பயன் கொண்ட யாப்புக்களை அழகாகப் பட்டியல் செய்து தருகின்றது (பக் 70-74). குறள் வெண்பா (3), குறள் வெண் செந்துறை (3), குறட்டாழிசை (1), நேரிசை வெண்பா (306), வெண்டுறை (1), நிலைமண்டில ஆசிரியப்பா (3), ஆசிரியத்துறை (5), அறுசீர் (1034), எழுசீர் (765), எண்சீர் (1526), பன்னிருசீர் (125), பதினான்கு சீர் (10), நாற்பத்தெட்டுச்சீர் (1) நூற்றுத் தொண்ணூற்றிருசீர் (1) ஆசிரிய விருத்தங்கள், வண்ணவிருத்தம் (1), சந்த விருத்தம் (8), கலிவெண்பா (2), கொச்சகக் கலிப்பா (190), கட்டளைக் கலிப்பா (15), கலித்தாழிசை (31), கலித்துறை (23), கலி நிலைத்துறை (16), கலிநிலை வண்ணத்துறை (4), கட்டளைக் கலித்துறை (571), கலிவிருத்தம் (208), வண்ணக் கலிவிருத்தம்(10), வஞ்சித் துறை (11), தாழிசை (191), சிந்து (748) என இது விரிந்து அமை கின்றது.

பெரும்பான்மையான பகுதிகளில் அந்தாதித் தொடர்போ அன்றிப் பாடல்கள் தம்முள் ஒறெப்புமையோ கொண்டு அமை

வதும் பக்திக்கால யாப்பமைப்பை நினைவூட்டுகின்றன. அந்தாதி பெற்ற பகுதிகளில் மண்டில இணைவு காணப்படுவதும் உண்டு. ஒரு பகுதியின் பல பாடல்களில் பொருள் ஒருமை காரணமாக ஒரு சொல், தொடர் அல்லது அடி மீண்டும் பயின்றமையும் காணப் படுகின்றது.

சண்முகர் கொம்மி, பொதுவாக வெண்டளை பிறழா அமைப் புடைய பிற கும்மிப்பாடல்களிலிருந்து மாறுபட்டு வெண்டளை யுடன் ஆசிரியத்தளையும் விரவி வருவது இசை காரணமாக ஏற் பட்ட வேறுபாடாகலாம். சண்முகர் வருகையில் சிந்துகள் ஓரடி ஒற்றையாகிய தனியமைப்புக் காட்டுவதும் புதுமை எனும் நிலையில் குறிப்பிடத்தக்கது.

வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா எனும் பாப் பெயர்களை யாளல் (1748, 1836), ஒரே எழுத்தைத் தொடர்ந்து பயன் கொண்டு பொருண்மை விளக்கல் (568, 1930, 2725, 2784), சொல் வைத்து இவ்வாறு விளையாடல் (2724), ஓரடியே பாடலின் மூன்று அடியிலும் மடக்குதல் (2783), ஒரே சொற்கள் சிலவற்றை மாற்றி மாற்றிப் பெய்து அடியமைத்தல் (4243, 4252) போன்ற பல் அமைப்புக்கள் இவர் பாடல் வடிவுக்கு மெருகூட்டுகின்றன. இடைக் காலத்துத் தனிப்பாடல் இயற்றிய காளமேகம் போன் றோரின் கொள்கை மரபு இவரால் பின்பற்றப்படுகின்றது என லாம்.

பாரதி : இருபதாம் நூற்றுண்டுக் கவிஞருக்கு முன்னோடியாக நிற்பவர் மகாகவி சுப்பிரமணிய பாரதியார். 'இலக்கிய வடிவம் என்பதைப் பொறுத்தவரையில் பாரதி முற்காலக் கவிஞர்களின் நிழலில் மறைந்து நின்று பாடியதைப் பார்க்கிறோம்' (தமிழவன்- இருபதில் கவிதை) என்ற கருத்து இருப்பினும் புதுமைகளும் புனைந்துள்ளார் பாரதி.

பாரதியார் கவிதைகள், புதிய பாடல்கள் 24, தேசீய கீதங்கள் 53, தெய்வப் பாடல்கள் 102, பல்வகைப் பாடல்கள் 30, வசன கவிதைகள் 7 என 225 தலைப்புக்களின் கீழ் ஏறத்தாழ 1875 பாடல் களும் 47 வசன கவியும் ஆக அமைந்தன. இவற்றில் ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலிப்பா, கண்ணி, கலித்துறை, கலி விருத்தம், கீர்த்தனை, குறள் வெண் செந்துறை, சிந்து, தாழிசை, வஞ்சித்துறை, வெண்பா என்பவற்றோடு வடிவம் இது என வகுக் கவியலாப் பாடல்கள் சிலவும் காணப்படுகின்றன.

பாரதியின் முதற்பாடலெனப்படும் தனிமையிரக்கமே அகவல் யாப்பில் தான் வடிக்கப் பெற்றது. ஒன்பது அடிமுதல் (வாழிய செந்தமிழ்) 205 அடிவரை (குருகோவிந்தர்) பிற அகவல்கள் செல்

கின்றன. நேரிசையும் நிலைமண்டிலமுமாகியும் பெரும்பாலும் ஈரடி எதுகையும் ஒரூஉ, பொழிப்பு மோனைகளும் பெறுமிவை பாரதி மரபு வழி நின்றமையைக் காட்டுகின்றன.

54 தலைப்புக்களின் கீழாக 222 ஆசிரிய விருத்தங்கள் உள. அறு சீரே மிகுதி (120). பன்னிருசீர் (2), எண்சீர் (67), எழுசீர் (33) என்பனவும் உள.

நெடும் பாடல்களும் நீண்டபாடல்களும் கொள்வ தொழியத் தனிப்பாடல்களில் 37 கட்டளைக் கலிப்பாக்கள் காணப்படுகின்றன. இவற்றில் சில மரபுநிலை கடந்து ஏகாரம் இன்றியும் முடிந்தன.

கலித்துறை (1), கலிவிருத்தம் (10), வஞ்சித்துறை (8) வெண்பா (11) என்பன அருகியே பயின்றன.

இவ்வாறு தனிப்பாடல்கள் முன்தோன்றிய யாப்பு வடிவம் பயின்றதோடு காலத்தால் முற்பட்ட இலக்கியங்களும் பிரபந்த வகைகளும் பாரதியில் செல்வாக்குப் பெற்றுள்ளன.

ஆழ்வார் நாயன்மாரைப் பின்பற்றிப் பாரதமாதா திருப் பள்ளியெழுச்சியை எண்சீர் ஆசிரிய விருத்தத்தில் யாத்துள்ளார். திருவாசகத்தில் கண்டமை போலப் பாரத தேவிக்குத் தசாங்கம் பாடினார். கிளியை அழைத்துக் கேள்வி பதிலாக நாமம், நாடு, நகர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார் என்பனவற்றைப் பத்து வெண்பாவில் தந்தார். தாயுமானாரின் கிளிக்கண்ணியின் தோய்வால் முருகக் கடவுள் மீது கிளித் தூது கீர்த்தனையில் அமைக்கின்றார். திருமுறையின் நான்மணிமாலைகளைப் பொன்னே போல் போற்றியமையை விநாயகர் நான்மணிமாலையால் அறி கின்றோம். இது வெண்பாக்கள் நேரிசையும், விருத்தங்கள் அறு சீராசிரிய விருத்தமும், கலித்துறைகள் கட்டளையும், அகவல்கள் பதினெட்டு முதல் இருபத்து மூன்று அடிவரையும் உள்ள நேரிசை யாய், நாற்பது பாடல்களில் அமைகின்றது. ஓரியாப்பில் பத்துப் பாடலில் அமையும் பதினோராம் திருமுறையின் ஒருபா ஒருபஃதை ஒத்து, பத்து வெண்பாவால் இளசை ஒருபாஒருபஃது இயற்றினார். பாரத மாதா நவரத்தினமாலை, பாட்டியல் கூறும் நவமணிமாலையி லிருந்து பெயரளவிலே மாறுபட்டு, அறுசீர் விருத்தம், ஆசிரி யப்பா, எண்சீர் விருத்தம், எழுசீர் விருத்தம், கட்டளைக் கலித் துறை, கட்டளைக் கலிப்பா, தரவு கொச்சகம், வஞ்சிவிருத்தம், வெண்பா என ஒன்பது வகைச் செய்யுளால் அந்தாதித் தொடர் புறச் செய்யப்படுகிறது. இதனைப் போன்றே பாட்டியல் வகுக்கும் அலங்காரப்பஞ்சகத்தினின்று, பெயரிலும் யாப்பிலும் வேறுபட்டு எழுசீர் ஆசிரிய விருத்தம் ஐந்தால் உருவாகியுள்ளது மஹாசக்தி பஞ்சகம். கோயிற்றிருவகவல், போற்றித்திருவகவல் ஆகியன

இவரது போற்றி அகவலுக்கும், நீதி வெண்பா விஞ வெண்பா போன்றவை இவரது மஹாசக்தி வெண்பாவுக்கும் விடுதலை வெண் பாக்களுக்கும் வழி வகுத்திருக்கலாம். சித்தரின் வாலைக் கும்மியும், பிற நாட்டுப்புற இலக்கியத் தாக்கங்களும், பெண்கள் விடுதலைக் கும்மி, சுதந்திரப் பள்ளு, கிளிப்பாட்டு, வண்டிக்காரன் பாட்டு ஆகிய பலவற்றில் வெளிப்படுகின்றன. ஔவையாரின் ஆத்திச் சூடியின் தாக்கம், நிலைமண்டில ஆசிரியக் காப்புப் பெற்று 110 நீதி களை நூற்பா யாப்பில் நவிலும் புதிய ஆத்திச் சூடியில் விளங்கு கின்றது.

இலக்கணத்தில் தனி யாப்பாக இடமும் ஏற்றமும் பெருத கண்ணி, கீர்த்தனை, சிந்து போன்ற பாவமைப்புக்கள் பாரதியார் பாடலில் பயின்றன. தன்னை ஒரு சித்தராகக் கொள்ளும் பாரதி, அச் சித்தர்கள் புதியனவாகப் புகுத்திப் பயன்படுத்திய வடிவங் களைத் தனதாக்கிக் கொண்டதில் வியப்பில்லை.

இவ்வாறு நோக்கும் போது பாரதியிடம் மூவித யாப்பு இணை வினைக் காண்கின்றோம். பா-பாவினம் ஆகிய மரபு யாப்பு. சிந்து போன்ற இடைக்காலப் புதுமை வடிவங்கள், வசனகவிதை போன்ற பிற்கால யாப்பு வளர்ச்சிகள் ஆகிய மூன்றன் இயைபும் பாரதியிடம் உண்டு.

இசையுடைய இரு அடிகள் இணைந்து ஒரு கண்ணியை ஆக்கும் நிலையை பாரதியில் காண்கிறோம். கண்ணி என்பது பொதுப்பெய ராக இசைப்பாடலின் ஈரடி யுறுப்பையும், கலிவெண்பாவின் (ஒருஉத் தொடை இணைவுடைய) இரு அடிகளையும், தனிச் சிந்தை யும் குறிக்கின்றமையால், ஒரு தனி யாப்புவகையாக வன்றி, இசை யொழுக்குடைய ஒரு பாடலாகவே (Stanza) கொள்ளவேண்டி யுள்ளது.

பாரதியிடம், பல்லவி அனுபல்லவி சரணம் எனும் மூன்று உறுப்புமுடைய கீர்த்தனைகள் நான்கு உள. பிற (41) அனைத்தும் அனுபல்லவி இன்றி அமைகின்றன. சரணங்கள் பெரும்பான்மை யும் ஈரடியாலான சிந்துகளே; சிறு பான்மை தாழிசையாகவும், சில நான்கடியாலும் வருகின்றன. கீர்த்தனைகளில் தெய்வப் பாடலே மிகுதி (21). தேசிய கீதங்கள் அடுத்த நிலையின (13). இசைக்குள்ள முதன்மையும் இறையுணர்வும் நாட்டுப் பற்றும் வெளிப்பட இசை கலந்த வடிவம் ஏற்புடையதாய் இருந்தமையும் புலப்படுகின்றது. மேற்குடி மக்களின் இலக்கியச் சுவைக்காக வன்றிப் பொது மக்களின் ஆத்தும எழுச்சிக்காக எழுதப்பட்ட இவை அனைவரையும் கவரும் இசை யமைப்பில் எழுந்தமை நோக் கம் எனும் நிலையிலும் வெளியீட்டுத் தன்மையிலும் பொருத்த மாகவே அமைகின்றன. இக் கீர்த்தனை, 'உறுப்பு நிலையிலும் இசை

நிலையிலும் கலிப்பாவின் பின்னோடியாக இருக்கலாமோ என்ற எண்ணம் எழுகின்றது.

பாரதியார் பாடல்களில் 15 தலைப்பின் கீழுள்ள 152 பாடல்கள் தாழிசையாக வந்தன. ஈரடி ஒத்து வரும் இவை பரணியின் தாழிசைகளையும் நினைப்பூட்டுகின்றன.

கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம் என்பனவற்றின் பெரும் பகுதியும், கீர்த்தனைச் சரணங்கள் பலவும் 45 தலைப்பின் கீழ்வரும் பாடலும் பாரதியிடம் சிந்து வெற்றி பெற்றதைக் காட்டுகின்றன. அடிகளின் அமைப்பாலும், பெறும் இசை மெட்டாலும், பயிலும் தனிச்சீராலும் சிந்துகள் பலவாகப் பல்கியுள்ளன. சிந்து, கண்ணி, கிளிக்கண்ணி, நொண்டிச் சிந்து, காவடிச் சிந்து, ஆனந்தக் களிப்பு, பண்டாரப்பாட்டு, தங்கப் பாட்டு, தான தனந்தன சந்தம், தான தனத்தன சந்தம், சமநிலை, வியநிலை சிந்துகள் ஆகியன பாரதியில் புது மெருகு பெற்றன. பாரதியில் சமநிலையைவிட வியநிலைச் சிந்துகளே மிகுதி. காவடிச் சிந்துப் பாடல்கள் எதுகை மோனைச் சிறப்புடன் பெரும்பாலும் முடுகியல் ஓசையுடன் வருகின்றன. தனிக் கருத்து வெளியீட்டிற்கே மிகுதியும் சித்தரால் கையாளப் பட்ட சிந்து வடிவத்தினை நெடும்பாடலின் கண்ணிகளாகக் கையாண்டு தொடர்நிலைச் செய்யுள் வடிவில் புதுமை புரிந்துள்ளார் பாரதியார். இவ்வாறே சுயசரிதையும், பக்திக் காலத்தில் தோன்றிய கட்டளைக் கலிப்பா தொடர்நிகழ்வுகளையும் எடுத்தியம்பும் பான்மையினது என்பதனை வெளிப்படுத்துகின்றது.

குயில் பாட்டின் புறவடிவம் பிரச்சினைக் குரியதாகவே இன்றும் அமைகின்றது. அகவல் போன்றும் கலிவெண்பா போன்றும் குறள் வெண் செந்துறை போன்றும் அமைவதாகக் கருதுவர். வெண்டளையே மிகுதியும் பயின்று நாற்சீரடிகளாலான இதன் பெரும் பகுதி, கொச்சகம் நீண்டு வந்த இடைக்கால அம்மானைப் பாட்டுக்களை நினைக்கச்செய்கின்றது. கீர்த்தனைச்சாயல் பொருந்திய குயிலின் பாடல், இத் தொடர் கவிதைக்கு இசையினிமை இணைக் கின்றது.

வடிவமிது என வகுக்கவியலாப் பாடல்கள் சில பாரதியிடம் உள. 'லாமார்ஸெலெஸ்' எனும் பிரஞ்சு தேசீய கீதம், பக்கிம் சந்திரரின் 'வந்தே மாதரம்' என்பனவற்றின் மொழி பெயர்ப்பும், புதிய கோணங்கி, சாதாரண வருஷ தூமகேது என்பனவும் இந் நிலையின. மொழி பெயர்ப்பானமையின் முன்னவற்றில் பிறமொழி யாப்புத்தாக்கம் இருக்கலாம். பின்னவை அவரது வசன கவிதை யோடு இணைத்துக் கருதப்படல் வேண்டும். 'யான்', 'சந்திரிகை', 'தனிமையிரக்கம்' என்பனவற்றை ஆங்கில சானட் வடிவோடு ஒத்தது என்பாரும் உள்ர்.

பாரதியின் 47 வசன கவிதைகளில் இறுதியிரண்டு பகுதிகளும் நாடக அமைப்புடையன. அவற்றில் 'விடுதலை' தொடை விரவி ஓசை நயமும் கொண்டுள்ளது. பிற, ஆங்கிலத்தில் 'ப்ரொசேக் பொயட்ரி' எனப்படுவனவும் தாகூரின் கவிதைகளை ஒத்தனவும் ஆகும். இன்றைய வரையறையில்லாக் கவிதை (வேர்ஸ் லிப்ரே) வளர்ச்சிக்குப் பாரதியும் காரணமாயினமை தெரிகின்றது.

*கவிமணி :* கவிமணி எனச் சிறப்பிக்கப்படும் தேசிக விநாயகம் பிள்ளை, நாஞ்சில் நாட்டுக்கும் நற்றமிழ்க்கும் கவிதை பல இயற்றி நற்றொண்டாற்றினர். அங்கதக் காவியமான நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியமும், ஆசிய ஜோதி போன்ற தழுவல் களும் மொழி பெயர்ப்புகளும், மிகப்பல குழந்தைப் பாடல்களும் இவரைக் கவிதையுலகின் சிறந்த ஒரு மணியாகக் காட்டின. யாப் பமைப்பைப் பொறுத்தவரை இவர் புதுமைகள் புரிந்திலர் எனினும் யாப்பின் செவ்விய வடிவில் பொருந்தாத சில உதிரி வடிவங்கள் பாரதியில் அமைந்தது போன்றே இவரிடமும் அமைகின்றன.

மலரும் மாலையின் ஐந்து தலைப்பின் கீழ் அமையும் (31, 37, 38, 41, 43) பதினேழு பாடல்கள் இத்தகையன. எதுகைத் தொடை பெறுத ஈரடிச் செய்யுட்கள் (31, 43), கலித்தாழிசை போன்று ஒரு நாற்சீரடியும் ஒரு அறு சீரடியாலுமான செய்யுள் (41) என ஓரளவு சிலவற்றை மரபு யாப்பு வடிவோடு இணைத்துக்காணலாம். பிற, கட்டற்ற செய்யுளாகவே அமைகின்றன.

கவிமணியின் ஐந்து கவிதை நூற்களிலாக 1410 பாடல்கள் அமைகின்றன. [மலரும் மாலையும் 986, தேவியின் கீர்த்தனங்கள் 75(-8), மருமக்கள் வழி மான்மியம் 19, ஆசிய ஜோதி 223, உமார் கய்யாம் பாடல்கள் 115]. இவை அகவல் (49), வெண்பா (134), தரவு (11), ஆசிரிய விருத்தம் (235), தாழிசை (195), கலிவிருத்தம் (15), கலித்துறை (3), சிந்து (687), கீர்த்தனை (73) ஆகிய பல வேறுபட்ட வடிவின. யாப்பு வரையற்ற 17 பாடல்கள் முன்பே குறிக்கப்பட்டன.

பதினாறு நேரிசை அகவல்கள் உள. இவற்றில் பல அடிகளில் தனிச்சொல் [கூன்] பெறுகின்றமை, கதை கூறும் போக்கிற்குத் துணையாக இவை வந்தன என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றது. இவற்றில் ஒன்பது முதல் 239 அடிகளும் நிலை மண்டில அகவலில் ஆறு முதல் 510 அடிகளும் காணப்படுகின்றன. பல ஏகார முடிவு பெறினும், ன், ம், ர், ள், அ, ஆ, ஒ எனும் முடிவுகளும் உள. ஈரடி யெதுகை அனைத்திடத்தும் காணப்படாவிடினும், பொழிப்பு மோனை அடிகளில் அமைகின்றன. இவ் அகவற் பாக்கள், தொடர் நிலைச் செய்யுட்களான மான்மியம், ஆசிய ஜோதியிலேயே மிகுதியும் பயின்றமை எண்ணத்தக்கது.

மூவகை ஆசிரிய விருத்தங்களைக் கவிமணி கையாள்கின்றார். உமாரின் பாடல்கள் அனைத்தும் ஒரே சீர் அமைப்புடைய அறுசீர் ஆசிரிய விருத்தங்களாம்.மா மா காய் எனும் அமைப்பு அரையடிக் காய் அதுவே மீண்டும் வந்து இதன் அடிகள் அமைகின்றன. விளம் மாமா இருமுறை வரலும் காய் மாமா இருமுறை வரலும் பிற அறுசீர் விருத்தங்களில் உண்டு. எண்சீரில் வரும் 34 பாடல்களில், நால்விதச் சீரமைப்புக் காணப்படுகின்றன. காய்காய் மாமா், காய் காய் காய்மா, மாவிளம் மாவிளம், மாமாவிளம் விளம் என்பன இரட்டிவரல் அவை. எழுசீர் விருத்தப் பாடல்களில் இத்தகு சீர் அமைப்பு இல்லை. அடிகள் எதுகையும், கூறுபடுமிடங்களில் மோனை யும் பெறல் இவற்றின் பொதுப் பண்பு.

எண்சீர் (70), எழுசீர் (8), அறுசீர் (53), நாற்சீர் (64) தாழிசைகள் கவிமணியிடம் உண்டு. இளங்கோ நவமணிமாலையின் தாழிசைகள், பொதுத்தன்மையான எதுகைக்குப் பதில் மோனை இணைவு பெற்றும் அடிகள் அந்தாதி இயைபு பெற்றும் வேறுபடு கின்றன.

அன்புநீரை அடைத்து நாங்கள் அகம் வளர்க்கும் பயிராம்
அகம் வளர்க்கும் பயிருமெங்கட் களிக்கும் நல்ல பலனே

கவிமணியில் சிறப்புற்ற வடிவம் சிந்து. சித்தர் காலத்து முகிழ்த்துப் பாரதியால் மெருகூட்டப்பட்ட இவ்வடிவம் கவிமணி யிடமும் ஏற்றம் பெற்றது. எளிமை மிகுதி பற்றியும் இனிமை, செவ்வி மிகுதிபற்றியும் வகைகள் மிகுதி பற்றியும் இது ஒரு வாய்ப் பான வடிவாயிற்று. ஆசிய ஜோதியின் பெரும் பகுதியும் சிந்தினுல் உருப்பெற்றது. இருசீரிரட்டை, முச்சீரிரட்டைச் சிந்துகளே கவி மணியிடம் மிகுதி. அவ்வாறே, வியனிலையினும் சமநிலைச் சிந்துகளே மிகுதி. எதுகையின்றி, மோனை இணைவு பெறும் 'ஒற்றை'களான சிந்துக் கண்ணிகளும் உள.

மீன்கள் கோடி கோடி சூழ வெண்ணிலாவே-ஒரு
வெள்ளி யோடம் போல வரும் வெண்ணிலாவே

கவிமணியிடம் அமையும் 73 கீர்த்தனைகளில் பெரும்பான்மை யும் பல்லவி, அனுபல்லவி, சரணம் ஆகிய மூவுறுப்பும் பெற்றுள் ளன. பன்னிரு பாடல்களே பல்லவியும் சரணமும் மட்டும் பெற் றவை. இச் சரணங்கள் பெரும்பான்மை தாழிசையும், சிறு பான்மை சிந்தும் விருத்தமுமாக அமைகின்றன. பல்லவிகள் 'ஒற்றை' அமைப்புடன் முதல் சரணத்தோடு எதுகைத் தொடர்பு பெற்று அமைகின்றமை பெரும்பான்மை.

மூவுறுப்பும் பெறும் அருபத்தொரு பாடல்களில் பல்லவியும் அனுபல்லவியும் தம்முள் எதுகைத் தொடர்பு பெறுகின்றன. அனு

பல்லவி பெரும்பாலும் தாழிசையும் சிறுபான்மை சிந்தும் ஆயின. கீர்த்தனங்கள் ஒரு சரணம் பெறப் பெரும்பான்மை பல கீர்த்தனை களிலும் சரணத்தில் 'அமைப்பு-ஒருமை' இல்லை. இசையின் முதன் மையே காரணமாகலாம்.

பொதுவாகக் கூறின் கவிமணியின் பாவமைப்பு எளிமையும் அழகும் பொருந்தியது. அகவலும் சிந்தும் நெடும்பாடல்களில் கையாளப்பட்டுள்ளன. ஆசிய ஜோதியின் நாடகப் பாங்குக்கு அகவல், சிந்து, தாழிசைகளை மாற்றி மாற்றிக் கையாள்வது துணை செய்கின்றது. பக்தியுணர்வு வெளியீட்டிற்குக் கீர்த்தனை வடிவம் துணை புரிகின்றது.

*நிறைவுரை:* மேற்கண்ட நூற்கள் தமிழிலக்கியத்தில் யாப்பு வடிவ வளர்ச்சியை உணர ஓரளவு துணைநிற்கின்றன. ஒவ்வொரு காலத்தின் யாப்புப் புதுமைகளும், ஒரே யாப்பு பல காலத்தும் பயின்றமையும், மரபு வடிவங்கள் வழக்கிழந்தமையும், பிற்காலத் தில் இசை முதன்மை பெற்றமையும் இதன்வழி விளங்கும். ஒரு காலத்தில் தனிச்செய்யுளுக்கிருந்த வடிவம் தொடர்ந்த காலத்தில் தொடர்நிலைச் செய்யுள் வடிவாக வளர்ந்தமை அனைத்துக் காலங் களிலும் காணப்படுகின்றது. இலக்கணங்கள் வகுக்காத வடிவுகளும், சோதனையாகவோ சாதனையாகவோ,புறநடையாகவோ வந்து,சில பிற்கால இலக்கணிகளால் ஏற்கப்பட்டுப் பல குறிக்கப்படாதே அமைந்து விட்டமையும் தெரிகின்றது.

புதுக்கவிதை வளர்ந்துவிட்ட தற்காலத்தும் மரபு வடிவங் களின் செல்வாக்கு முற்றிலும் அழிந்துபடவில்லை என்பது தெரி கின்றது. தமிழிலக்கணத்தைப் பொறுத்தவரை 'பாட்டு உரை' என்ற பகுப்பு ஏற்பட்ட காலத்தே பாட்டின் வரையறைகளைக் கடந்த உரைச் செய்யுட்கள் ஏற்பட்டுவிட்டமை தெரிகின்றது.

புதுக் கவிதைகளின் அடிப்படைக் கூறு 'சொல்'லாக அதற்கு மேல் ஒரு எண்ணமாக, கருத்தாக (தாட் யூனிட்) அமைகின்றன. பாவின் சீர் போன்றும், அடி போன்றும், ஒரு செய்யுள் போன்றும் இவற்றை இயைபு படுத்தலாம்.

தொல்காப்பியத்தின் 'பா' வண்ணமும் 'சொற் சீரடி'யும் சொல்லே சீராகவும் சொற்களே அடியாகவும் வருநிலையைக் காட்டுவது இங்கு நினைக்கத்தக்கது. பரிபாடலில் 'சொற்சீரடி' உறுப்பாயிற்று. கூனாகவும், தனிச்சொல்லாகவும், அம்போதரங்க மாகவும் அமையும் கலிப்பா உறுப்புக்கள் சொல்லே சீராகி, அடி யாகி வந்தமையைப் பிற்காலத்தும் காட்டுகின்றன. கலித்தொகை யின் இடையிடை வரும் தனியடிகள் (அறிவல் யான் எல்லா விது 121, தெளிந்தேன் தெரியிழாய் யான் 113) இதன் தோய்வைக்

காட்டின எனலாம். பதிற்றுப்பத்தின் சொற்சீர் வண்ணம் இத்தகு அமைப் பொன்ருல் ஏற்பட்டமை நினைத்தற்குரித்து. பதிற்றுப் பத்தின் பதிகங்களின் இறுதிக் கட்டுரையமைப்பு, சிலம்பின் கட்டுரை, உரைப்பாட்டு, கருப்பம் எனும் பகுதிகள், தொடர்ந்த காலத்தில் இதன் வளர்ச்சி நிலையைக் காட்டுகின்றன.

யாப்புச் செவ்வி இன்றியும் அமையும் 'செய்யுள்' நிலை இவற்றில் வெளிப்படுகின்றது. விருத்தங்களிடையேவரும் மாகபுராண அம்மானையின் 'நடை'ப்பகுதிகள் பாட்டும் 'உரை'யும் விரவல் எனும் நிலையில் அமைகின்றமையும் இவண் நினைக்கலாம். குறவஞ்சிகளின் வசனப் பகுதிகளில் உரையமைப்பு, முழு உரை நடைக்கு வந்துவிடுகின்றது.

பாரதியும் கவிமணியும் இந்நூற்ருண்டில் வசன கவிதையைக் கையாளத் தொடங்கினர். புதுமைப் பித்தன் மிகுதியாகப் பயன் கொண்டு இவ்வடிவை வளர்த்து, புது மரபை ஏற்படுத்தினுர். இன்றுவரை தமிழிலக்கியத்தின் இந்நூற்ருண்டுக் கவிதை வளர்ச்சியில் இப் புதுமரபு குறிப்பிடத்தக்க வண்ணம் அமைந்துள்ளது.

## முதல் நூற்கள்


1. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியர் உரை, கழகம், 1969.
2. காக்கை பாடினியம் - இளங்குமரன் உரை, கழகம், 1974.
3. அவிநயம் - க.ப. அறவாணன் உரையும் பதிப்பும், ஜைன இளைஞர் மன்றம், 1975.
4. அமுதசாகரம் - க.ப. அறவாணன் உரையும் பதிப்பும், ஜைன இளைஞர் மன்றம், 1974.
5. யாப்பருங்கலம் – Madras Government Oriental Manuscripts Library, 1960.
6. யாப்பருங்கலக் காரிகை - டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், 1968.
7. வீரசோழியம் - பவானந்தம் பிள்ளை பதிப்பு, 1942.
8. இந்திரகாளியம் - க.ப.அறவாணன் உரையும் பதிப்பும், ஜைன இளைஞர் மன்றம், 1974.
9. பன்னிரு பாட்டியல், கழகம், 1949.
10. வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும், கழகம், 1969.

11. நவநீதப் பாட்டியல் - டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், 1961.

12. பிரபந்த மரபியல், அரசு கீழைக் கலைச்சுவடிகள் நூல் நிலையம், சென்னை, 1976.

13. சிதம்பரப் பாட்டியல், செந்தமிழ்ப் பிரசுரம், 1932.

14. பாப்பாவினம், செந்தமிழ்ப் பிரசுரம், 1932.

15. சிதம்பரச் செய்யுட் கோவை, கழகம், 1971.

16. இலக்கண விளக்கம் - சி.வி. தாமோதரம் பிள்ளை பதிப்பு, 1889.

17. தொன்னூல் விளக்கம் - ஜி. மக்கென்சி பதிப்பு, 1891.

18. முத்து வீரியம், அல்பினியன் பிரஸ், சென்னை, 1889.

19. பிரபந்த தீபிகை, செந்தமிழ்த் தொகுதி 7, பக்கம் 153 - 174, 1918.

20. சுவாமிநாதம் - டாக்டர் செ. வை. சண்முகம் உரையும் பதிப்பும், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1975.

21. விருத்தப் பாவியல் - இ.என். தணிகாசல முதலியார் உரையும் பதிப்பும், 1939.

22. திருவலங்கற்றிரட்டு பல்சந்தப் பரிமளமாகிய இரண்டாங் கண்டம், சாது பிரஸ், சென்னை, 1929.

23. அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம் - தண்டபாணி சுவாமிகள், பூவை. கலியாண சுந்தர முதலியாரவர்கள் பதிப்பு, சென்னை, விஜய ஸ்ரீ கடகரவி.

24. பொருத்த விளக்கம் - குலாம் காதிறு நாவலர், ஆ.கா. பிச்சை யிபுருகீம் புலவர் உரை, காரைக்கால், 1900.

25. வண்ணத் தியல்பும் வண்ணங்களும், முத்தமிழ் ஆராய்ச்சிக் கூடம், 1867.

26. யாப்பொளி - ஆர். சீனிவாசராகவாசார்ய, திருவேங்கடவன் கீழ்த்திசைக்கலை ஆராய்ச்சிக் கழகம், திருப்பதி, 1957.

# பாயிரம்*

பாயிரங்கள் நூலுக்கு முகமாக அமைவன. அவற்றின் வாயிலாக ஆசிரியன், அவன் காலம், சமயம், நோக்கம் - இவை பற்றி அறிய இயலும். **

தொல்காப்பியத்தில் சிறப்புப் பாயிரம் மட்டுமே அமைந்துள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திற்கும் கடவுள்வாழ்த்து பிற்கால இலக்கணங்களில் உண்டு — நன்., தொ. வி. சிறப்புத் தற்சிறப்புப் பாயிரங்களோடு அவையடக்கமும் தெய்வவணக்கமும் காப்பும் இவை போன்ற பிறவும் கூறுவது பிற்கால வழக்காக அமைந்தது. தொல் காப்பியப் பாயிரத்தில் கடவுளைப் பற்றிய குறிப்பு இல்லை; பிற்காலங்களில் இது மிகுதி. முழுமையாகக் கிடைக்காது, பிற்காலத்தில் உரைகளிலிருந்து தொகுக்கப்பட்ட அ.சா, கா.பா போன்றவற்றின் பாயிரம் கிடைத்தில.

## இலக்கணங்கள்

### சிறப்புப் பாயிரம்

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு, முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்;

---

*இலக்கணப் பாயிரங்கள் — ஒரு மதிப்பீடு; புலவர் திரு. க. ப. அறவாணன்; பக் 145—152; தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை பவள விழாமலர் – 1973.

**நன். 47, 48, 54.

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே

— தொல்

## பாயிரம்

முழுதுலகு இறைஞ்ச முற்றெருங்கு உணர்ந்தோன்
செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கிப்
பாற்படு தென்தமிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலம்நனி யாப்புற வகுத்தோன்
தனக்கு வரம்பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வி துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத்தோனே

— யா. க

## சிறப்புப் பாயிரம்

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே

— யா. க

## தற்சிறப்புப் பாயிரம்

கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக் கண்ணார் நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்து, அசை, சீர்
பந்தம் அடிதொடை பாவினம் கூறுவன் பல்லவத்தின்
சந்தம் மடிய அடியான் மருட்டிய தாழ்குழலே

— யா. கா

## அவையடக்கம்

தேனார் கமழ் தொங்கல் மீனவன் கேட்பத் தெண்ணீர் அருவிக்
கானார் மலயத்து அருந்தவன் சொன்ன கன்னித் தமிழ்நூல்
யானா நடாத்துகின்றேன் என்று எனக்கே நகைதருமால்
ஆனா அறிவினவர்கட்கு என்னாங்கொல் என் ஆதரவே

— யா. கா

சுருக்கமில் கேள்வித் துகள்தீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொருளாம் பனிமால் இமயப்

பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாய்
இருக்கும் என்று இவ்வாறு உரைக்குமன்றே இவ் இருநிலமே
— யா. கா

## பாயிரம்

மிக்கவன், போதியின் மேதக்
கிருந்தவன், மெய்த் தவத்தால்
தொக்கவன், யார்க்குந் தொடரவொண்
ணுதவன், தூயனெனத்
தக்கவன் பாதந் தலைமேற்
புனைந்து தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன்பற்றி
மன்புத்த மித்திரனே

— வீ. சோ. பா 1

ஆயுங் குணத்தவ லோகிதன்
பக்க லகத்தியன் கேட்
டேயும் புவனிக் கியம்பிய
தண்டமி ழீங்குரைக்க
நீயு முளையோ வெனிற்கரு
டன்சென்ற நீள்விசும்பில்
ஈயும் பறக்கு மிதற்கென்
கொலோசொல்லு மேந்திழையே

— வீ. சோ. பா 2

நாமே வெழுத்துச்சொ னற்பொருள்
யாப்பலங் காரமெனும்
பாமேவு பஞ்ச வதிகார
மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கற் றேர்வீர
சோழன் றிருப்பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன்
மரபும் புகன்றுகொண்டே

—வீ. சோ. பா 3

## சிறப்புப் பாயிரம்

கடல்விளிம் புடுத்த கன்னகன் ஞாலத்
தடரும்வல் லிருடுரந் தனைத்தையும் விளக்கும்
பல்கதிர்ப் பரிதியிற் பரம்பர னருளா
லுள்ளகத் திருள்கடந் துறுபொரு ளெவற்றையும்

பாற்படத் தொகுத்த பதினெண் மொழியுளு
மேற்கடல் கீழ்க்கடல் வேங்கடங் குமரி
யாகிய வெல்லையு ளருந்தமிழ்ப் பௌவத்
தெழுத்துமுதன் மூன்றையும் யாவரும் தெரியத்
தொகைவகை விரியிற் பகருக வென்னு
வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு
கல்விக் கெல்லை கருணைக் காகரம்
பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கு
மேதகு புகழ்திரு வேங்கட நாத
ஞேதின ஞக வுவகைமீ தூர
முன்ஞேர் நூலின் முடிபு நோக்கிச்
சொல்லும் பொருளு மொல்வன தழீஇப்
பல்சுவைக் கரும்பி ஞெருவட் டேய்ப்ப
விலக்கண விளக்கமென் ஞெருபெயர் நிறீஇப்
புலப்படுத் தியலுறப் பொருள்விரித் துரைத்தனன்
பவத்தொகை யகற்றுந் தவத்தின்வரம் பாஞேன்
பன்மீ ஞுப்பட் பான்மதி போல
வன்மீக நாத மாதவன் வரத்தா
லந்த ஞரூர் வந்தருள் செல்வன்
வலம்புரி பெருமுத் தன்ன
நலம்புரி வைத்திய நாததே சிகனே

— இ. வி

## பொதுப் பாயிரம்

நீர்மலி கடறவழ் நிலன்முதன் மற்றருஞ்
சீர்மலி யுலகெலாஞ் செய்தளித் தழிப்ப
வல்லவ ஞய்முதன் மட்ட ஞெப்பொதி
ரில்லவ ஞுயய ரிறையோ ஞெருவனைப்
பன்மை யொழியப் பணிந்தே யிராவிருட்
டன்மை யொழியத் தரணியிற் ஞேன்றிய
வாதவ ணிகரிரு ளகத்தற வன்ஞ
ஞேதிய மறைநூ லோதின ஞகி
யம்மெய்ப் பொருளொன் றனைவரு முணரச்
செம்மெய்ப் பொருளத் திருமறை வழங்க
வமைத்துளத் தெழுந்த வாசையுட் டூண்டிச்
சமைத்துள யாவருந் தாங்கத் தருகென
வேவிய தாகவிப் பணியேற் றிநூன்
மேவிய வைம்பொருள் விளக்க லுணர்ந்து

விரிவிலாத் தொன்னூல் விளக்க மெனும்பெயர்த்
தரிய வாசிரிய ரருந்தமிழ்ச் சொல்லிற்
பிறநூன் முடிந்தது பெயர்த்துடன் படுத்தியும்
புறநூன் முடிந்தது பொருத்தியுந் தாஞெரு
வழிநூன் முடித்தனன் வாய்ப்பரு மெம்மறை
மொழிநூ லத்தராய் முதிர்சிறப் பிணையி
லிரோமை நாட்டினின் றெய்திய முனிவருள்
விரோத மொழிதயை மேவக
நேரமா தவத்தின் வீரமா முனியே

— தொ.: வி

## சிறப்புப் பாயிரம்

சொன்னூ லடையாத் தொகைக்குணத் தொன்ரூ
முன்னூ றந்த முதல்வனைப் போற்றி
நன்னூ லாய்ந்தோர் நவின்ற வைம்பொருட்
டொன்னூல் விளக்கமுன் சொற்றுது மெழுத்தே

— தொ.: வி

யாப்புற நலம்எலாம் இணைந்தவோர் சட்குணன்
காப்புற அடிதொழீஇக் காட்டுதும் யாப்பே

— தொ.: வி 201

## சிறப்புப் பாயிரம்

அகனுல குவப்பப் பகல்கான் றெழுதரும்
இரவியிற் ருஞெரு முதலே யாகி
நிலவணி வேணிய னலர்தரு தன்மையின்
அகவிரு டொலைதர வறம்பொரு ளின்பம்வீ
டோவற வருளிய மூவறு மொழியுளும்
வடவேங் கடந்தென் குமரியா யிடைத்தமிழ்
எழுத்தொடு சொற்பொரு ளியாப்பணி யைந்தும்
எளிதிற் புலப்பட வியற்றித் தருகென
உகளிள வராலின் மகணிசூழ் நெல்லைப்
பதியின னிலக்கண விதிமுழு துணர்ந்தோன்
சங்கரன் மிலைந்த கங்கையில் வந்தோன்
சுப்பிர மணியதே சிகன்கவிப் பெருமான்
அறைந்தன னக வகத்திய நூல்வழி
முத்துவீ ரியமெனத் தற்பெயர் நிறீஇ
வகுத்தன னுறந்தை யகத்தெழுந் தருளிய
முத்து வீரமா முனிவனென் பவனே

— மு.: வீ

## தற்சிறப்புப் பாயிரம்

எலாந்தா மாக விருக்கும் பொருளெது
அதனடி மலர்தொழு தறைகுவன் யாப்பே

—மு. வீ-யா. உ

## கடவுள் வாழ்த்து

பூமகளும் பாமகளும் போற்றுமே நாமகளுங்
கோமகளுங் கொண்டார்கைக் குஞ்சரமே-மாமகிமைத்
தொன்னூற்குள் உண்டாய்த் தொகுத்த இலக்கணமாம்
இந்நூற்குக் காப்பாகு மே

—சுவாமி 1

## சிறப்புப் பாயிரம்

பூமிசைக்கீழ்க் கடல்குமரி குடகம்வேங் கடத்துட்
புகுந்ததமி ழியலைந்தும் அகவல்விருத் தமதால்
ஆம்முன்னூல் வழியாய்மெய் யநித்தநூல் விரிவென்று
அஞ்சும் அவர் உணர்ந்துபய நூலுணர்ஏ துவினுன்
ஏமமெனுஞ் சுவாமிநாதம் பகர்ந்தான் பொதிகை நிகண்டு
உரைத்தோன் சிவசுப்பிரமணியன் எனும்என்னை
மாமகன் என்றருளும் எந்தை நதிகுலன் கல்லிடையூர்
வாழ் சுவாமிகவிராசன் எனு நூல் வல்லோனே

—சுவாமி 2

## இறைவணக்கம் நூல் முதலியன

தமிழ்தரு தென் பொதிகைமலை கயிலைமலை கமலஞ்
சங்கம் இவற்று இறைவருக்குப் பொருளைஅருள் வாயால்
உமிழ்குருவாய் ஆறெழுத்தோர் எழுத்தாகுஞ் செந்தூர்
ஒருகுமரன் இருசரண் என்உளத் துறைந்த வளத்தாற்
சிமிழ் அனைய களபமுலைப் பூமயிலே முதியோர்
செப்பெழுத்துச் சொற்பொருள் யாப்பு அலங்காரம் எனும்ஐந்
தமிழ்தின் இலக்கண விரிவை ஒவ்வொரு மூன்று இயலாய்
அடக்கி மொழிகுவன் சுவாமிநாதம் இந்நூற் பெயரே

—சுவாமி 13

## அவையடக்கம்

கற்று ணர்ந்தக விசர்த மக்கெனச்
சொற்ற தோமில் வையடக் கப்பணி
சற்று நூற்பொரு டன்மையு ணர்ந்திலேற்
கற்ற வற்கர சன்முடி யாகுமால்

—வி. பா

சிற்று யிர்க்குறு திப்பொரு டோர்ந்துரை
நற்ற வப்பய ஞகிய நாவலர்
கற்ற லேமென் றடங்கிக் கழறிஞ
லற்று நானும றைத லடுக்குமோ

—வி. பா

செஞ்சொ னன்னயத் தீங்கடன் மேய்ந்துவான்
மஞ்செ னப்பொழி வான்றமிழ் வல்லபே
ரஞ்ச னக்கிரி முன்னர றிவிலாப்
பஞ்சி னேனென் றுணர்ந்தும் பகருவேன்

—வி. பா

பன்ன லந்திகழ் பானுவி ருளிஞற்
கன்ன லின்சுவை வேப்பங் கனியிஞ
றந்த லங்கள் சிறந்துத யங்கல்போ
லென்னி ஞவல ரேற்றம் விளங்குமால்

—வி. பா

ஆயுண் முற்றும ருந்தமிழ்க் கேயளித்
தாயு நூல்க ளிறிந்த புலவர்மு
னேயெனுந் துணையேனு மெந் நூலையு
மாய கிற்றில ஞதலி னஞ்சுவேன்

—வி. பா

வானி ரங்கிவ் விருத்த மணித்தொடை
தானி ரங்கிச் சரண்புகு மென்கையில்
வான ரங்கைய கப்படு மாலையென்
றியானி ரங்குவ னேழைக் கவிக்கையோ

—வி. பா

விருத்தப் பாவியல் வேண்டுஞ் சிறுர்க்கெஞ
வுரைத்தன் மேயின ஞெண்புகழ் நூலிஞ
ருரைத்தி லாரென வாதலி னுட்கொளார்
வருத்த மோடு வயங்கு பிழையரோ

—வி. பா

சான்று நூற்கள்

## தெய்வ வணக்கம்

என்றுந் திருமாற்கே யாளாவே னெம்பெருமா
னென்றும் எனக்கே பிராஞவான்-என்றும்
பிறவாத பேராளன் பேரா யிரமு
மறவாது வாழ்த்துக வாய்

—பா. பா

## செயப்படுபொருள்

தேவர் திருவருள் ளுவர்புலமைச் செல்வத்தால்
யாவரிணை யென்பா ரிசைத்தகுறட்-பாவினையும்
பாடினேன் பாப்பா வினம்பாடப் புல்லறிவா
ளுடினேன் என்பதனு ளுன்

—பா. பா

குடிலைமெய் கூறு குருவடிக ளீயுங்
கொடியனபோ மாறு குயிலு-மிடிமடன்
கொய்குகனை நாடு குமரகுரு தாசன்
செய்திருவ லங்கற் றிரட்டு

—திரு

### பாட்டியல்கள்

## தற்சிறப்புப் பாயிரம்

சொல்லின் கிழத்தி மெல்லியல் இணையடி
சிந்தையில் வைத்து முன்னோர் பொருள்நெறி
கூட்டி உரைப்பல் பாட்டியல் மரபே

—ப. பா-எ 1

## பாயிரம்

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தாள்
துதிகொண்டு நாளும் தொழுது-நுதிகொண்ட
பல்கதிர்வேல் உண்கண்ணுய்ப் பாட்டியலைக் கட்டுரைப்பன்
தொல்லுலகின் மீதே தொகுத்து

—வெ. பா-பா 1

## அவையடக்கம்

என்களங்கம் யாவையும் நீக்கி யினிதருளி
நன்களந்தை நூலோடு நாட்டுவரால்-தென்களந்தை
மன்பெயரான் வண்புகழான் வச்சணந்தி மாமுனிவன்
தன்பெயரால் நாட்டுந் தமிழ்

—வெ. பா

பார்கொண்ட சோதியன் சம்பந்த மாமுனி பாதமலர்
நேர்கொண்டு இறைஞ்சி நிகழ்த்துகின்றேன்
நெடுநூல் சுருக்கி
ஏர்கொண்ட சொற்புலவோர் செய்த பாட்டியல்
கற்க மிக்க
சீர்கொண்ட மாமதி இல்லாதவர்க்குத் தெரிவுறவே

—வ. பா 1

தெரியாது வந்த வழியடை ஆளும் சிலர்தமக்கு
மரியாதையின்று என்மதியன்மையால் சொல்
மழலைப் புன்சொல்
பெரியார் பொறுப்பர் தம் பேரறிவாண்மையும்
பேதைமை போய்
விரியாதஎன் அறிவின்மையும் பாரில் விளங்குதற்கே

—வ. பா 2

விளங்கிய மங்கலமே முதலாக விரித்த பத்தும்
துளக்கற நாடும் பொருத்தமன்றே யில்லை
சொல்லறியா
உளக் கவிவாணர் எனைப்போல நாடொறும் உண்பொருட்டால்
வளக்கவி பாடிப் பிழைப்பது இந்நூ லின் வரும்பயனே

—வ. பா 3

## நூற்சிறப்புப் பாயிரம்

கார்கொண்ட மேனிக் கறைகொண்ட நேமிக் கமலக் கண்ணன்
பார்கொண்ட பாதத்தை ஏந்திப் பகருவன் பாட்டியலைத்
தேர்கொண்ட அல்குல் துடிகொண்ட சிற்றிடைச் செந்துவர்வாய்
வார்கொண்ட பூண்முலை வேல்கொண்ட வாள்விழி வாணுதலே

—ந. பா 1

## அவையடக்கம்

சகத்தினில் முத்தமிழ் தன்னை உண்டாக்கி முச்சங்கத்திலும்
அகத்திய மாமுனி ஆக்கிய பாட்டியல் ஆன பௌவம்
நிகழ்த்துகை மின்மினி ஆதித்தனுக்கு நிகர் ஒக்குமென்று
உகப்பதுபோலும் அன்றே புலவோர் முன் உரைப்பதுவே

—ந. பா 2

## சிறப்புப் பாயிரம்

ஈட்டிய எண்ணெண் கலையோடு இயல்இசை நாடகமும்
காட்டிய போதக் குறுமுனி ஆதி கலைஞர் கண்ட
பாட்டியல் ஆனவை எல்லாம் தொகுத்துப் பயன்படவே
நாட்டிய வேதத்தவன் நவநீத நடன் என்பரே

—ந. பா 3

## காப்பு

நினைத்தவர்க்கும் அன்றி நினைக்குமவர் தம்மை
நினைப்பவர்க்கு முத்தி நிரம்பும்-அனைத்துமாம்
ஆரணத்து முன்னவனும் அம்பிகையும் பெற்ற மத
வாரணத்தின் பாத மலர்

—சி. பா

## பாயிரம்

பாடலாம் செந்தமிழைப் பாடியான் அருளைக்
கூடலாம் இன்ப நலம் கொள்ளலாம்-பேடனுய்
நாட்டிய சீர்ப் பா இனங்கள் நாடும் சிதம்பரப்
பாட்டியலைக் கற்ருர் பயன்

—சி. பா

பாடும் முறைமைக்கும் பன்னு தமிழ்தெளிந்து
சூடும் பனுவற்குச் சொற்பொருள்கள் நாடுதற்கும்
எண்ணிலராய் நின்ருரும் இந்நூல் வினவினரேல்
கண்ணிலான் காட்சியது காண்

—சி. பா

பூமன்னு பொழில் வெண்ணை மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனை தத்துவ ஞானப்ரகாசமாய் வந்து
பாமன்ன உரையென்ன அவனருளால் அவன்தன்
பதம்பரவிச் சிதம்பரப் பாட்டியல் எனப்பேர் வகுத்தான்
மாமன்னு சிதம்பர புராண முதல்நூலும்
மதுரை உலாவும் பகர்ந்தோன் மருவு குலமைந்தன்
தேமன்னு புராணகலை பலதெரி புராணத்
திருமலை நாயகன் அருளின் தேசு பூண்டோனே

—சி. பா

சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் தமிழால்
சிதம்பர புராணம் முதல்செய்து-விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலை நாதன் தவத்தால்
சார்ந்த பரஞ்சோதி என்பான் தான்

—சி. பா

பூமேவு திசைமுகனும் செங்கண் நெடுமாலும்
புத்தேளிர் கணங்களும்மா தவத்தோரும் போற்றத்
தேமேவு குழல்உமையாள் கண்டுவப்ப மன்றில்
திருநடம்செய் பேரொளியைச் சிந்தைதனில் வைத்துக்
காமேவு கிளிஎன்னக் கொழுஞ் செழுந்தேன் என்னக்
கடல் அமுதம் என்ன மிளிர் கனித்துவர்வாய் மாதே
பாமேவு தமிழ்ப் பொதியக் குறுமுனிவன் கூறும்
பாட்டியலைச் சுருக்கமதாய்ப் பகர்ந்திடுவன் யானே

—சி. பா-உ 1

மதிநாக நதிவேணி யன்சுதனை யஞ்ஞான
மதவந்த காரதீப
மாமான போதமரு டேசிகக் கடவுளிரு
மலரடி வழுத்தல் செய்வாம்

பதினுறை யாறிற் பெருக்குபிர பந்தாதி
பலவகை யெடுத்துரைக்கின்
பாரில்வரு ணந்நாலி னந்தகன் செவிடூமை
பாஷண்டி யலியுலோபன்
அதிபால னங்கவீ னன்முதி யரைத்தள்ளி
யருளுதா ரன்குலீனன்
அர்த்தமுளன் விற்பன சலட்சணன் புலவர்தமி
ழுருமைகண் டகுவோர்பால்
இதமான பத்துப் பொருத்தமு மிலக்கண
விலக்கியப் பொருள்சிறக்க
விசைபெற வுரைப்பரென் சிற்றறி விஞற்சொல்லு
மின்சொற் றழைக்க வென்றே

—பி. தீ 1

# செய்யுள் உறுப்புக்கள்

செய்யுள் உறுப்புக்களாகத் தொல்காப்பியம் முப்பத்து நான்கைக் (26+8=34) கூறுகின்றது. யாப்பருங்கலம் ஏழு உறுப்புக்களையும் யாப்பருங்கலக் காரிகை சி.பா, சுவாமி என்பன எட்டுறுப்பையும் இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் என்பன ஆறு உறுப்புக் களையும் பேசுகின்றன. வீரசோழியம் அவற்றின் எழுத்தும் தளையும் ஒழிய நான்கையும், முத்து வீரியம் எழுத்து மட்டும் நீங்க ஐந்தை யும் தந்தன.

வீ.சோ, மு.வீ என்பன உறுப்புக்களைத் தொகுத்துத் தந்தில. செய்யுள் உறுப்புக்கள் பற்றிய விளக்கத்தை அட்டவணை காட்டும்.

தொல். தளையை ஒரு உறுப்பாகக் கொள்ளாது தளை பற்றிய செய்திகளைக் கூறுகின்றது.

செய்யுள் உறுப்புக்களின் பெயர்க் காரணமாகக் கலம், காரிகை போன்ற நூற்களில் மேற்கோளாக உரையாசிரியர்களால் காட்டப் படுகின்ற பகுதியை இலக்கண விளக்கம் நூற்பாவாகத் தந்துள்ளது. அவ்விளக்கம் கருத்தைத் தெளிவாகப் புரிந்து கூறப்பட்டதாகக் கொள்வதற்கில்லை- சான்றாக, 'எழுதப்படுதலின் எழுத்து' என்று கூறியிருப்பினும் முதற்கண் எழுப்பப் படுதலால் ஒலியெழுத்து எனவும், பின்பு எழுதப்படுதலால் வரியெழுத்து எனவும் இருநிலை களில் விளக்குதல் வேண்டும் என்பதே தொல். கருத்து. இக் கருத்தை 'நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய கூட்டியெழூஉதல் என்மனார் புலவர்' என்ற எழுத்திலக்கண நூற்பாவும் அதன் உரை களும் தெளிவுபடுத்தும்.

உறுப்புக்கு இடனாகிய செய்யுள் பற்றிய பொதுநிலை விளக்கம் அருகிச் சில நூற்களில் இடம் பெறுகின்றது.

மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடி யாப்பு எனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ

திணையே கைகோள் †கூற்றுவகை எனுஅ
கேட்போர் களனே காலவகை எனுஅ
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனுஅ
முன்னம் பொருளே துறைவகை எனுஅ
மாட்டே வண்ணமொடு யாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபு எனுஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்து உரைத்தனரே

— தொல். செ 1

அறமுதலான் கென்றும் அகமுதலான் கென்றும்
திறனமைந்த செம்மைப் பொருள்மேல் — குறைவின்றிச்
செய்யப் படுதலாற் செய்யுள்; செயிர் தீரப்
பையத்தாம் பாவுதலாற் பா

—அ. சா 1

உள்ளப் பரவையி னூல்வரை நாட்டியொண் கேள்விதம்பா
எள்ளப் படாமை இயையக் கடையின் இசைபெருக்கும்
வள்ளற் குணநாவர் வானோர் களைவள மைப்படுக்கும்
வெள்ளைக் கவிதை அமிழ்தம் எல்லார்க்கும் வெளிப்படுமே

—அ. சா 2

அகமுத லாகிய பொருள்கவிக் காவி அணிதழைப்பத்
தகமுத லோர்சொற்ற பாவின சட்டகக் கட்டுரையே
நிகழ்தரும் ஓசை இயனடை யாடென்டு நீர்வரைப்பிற்
புகழ்தரு வாய்மைப் பயன்வியன் சீர்த்திப்புத் தேனுலகே

—அ. சா 3

எழுத்தினால் ஆகும் அசை; அசையாற் சீராம்
இழுக்கிகந்த சீரால் தளையென்று — ஒழுக்கினார்
சீரால் அடி; அடியால் செய்யுளாம் என்றிடையிட்டு
ஓராதே ஓதுவதோ ஒத்து

—அ. சா 29

அதிகண்டம் என்றும் இசையென்றும் சீரைப்
பதச்சேதம் என்றும் பகர்வர்; — பதச்சேதம்
சந்தித் ததனைத் தளையென்பர்; அத்தளையை
பந்தமென் பாரும் பலர்

— அ. சா 4

---

† பொருள் வகை — தொல்- செ-1, இளம்

எழுத்து அசை சீர் தளை அடி தொடை தூக்கோடு
இழுக்கா நடையது யாப்பு எனப்படுமே

— யா. க 1

கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக் கண்ணார் நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்து அசைசீர்
பந்தம் அடி தொடை பா இனம் கூறுவன் பல்லவத்தின்
சந்தம் மடிய அடியான் மருட்டிய தாழ்குழலே

— யா. கா 1

யாப்புவிதி எழுத்து அசை சீர் பந்தம் அடி தொடை பா இனம்

— சி. பா-உ 2

செய்யுள் என்பது தெரிவுறக் கிளப்பின்
முன்னர்க் கூறிய முறைமைத் தாகி
எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்ற
மூவிரண்டு உறுப்பும் மேவரச் சிவணிப்
பாவும் இனமும் எனஇரு பாற்றே

— இ. வி 710

எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்து இசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலின் சீரே; சீர் இரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே; அடி இரண்டு
தொடுத்துமன் சேறலின் தொடையே; அத்தொடை
பாவி நடத்தலின் பாவே; பா ஒத்து
இனமாய் வழங்கலின் இனமெனப் படுமே

— இ. வி 711

சிரைமுதல் யாப்புறச் சேர் உயிர்க்கு உடல்போல்
உரைமுதல் யாப்புற உணர் பொருட்கு உடலாச்
சிறப்பிற் செய்வன செய்யுளாம் அவை
உறுப்பியல் மரபு மூன்று உரைப்ப விளங்கும்

— தொ. வி 202

எழுத்து அசை சீர் தளை அடி தொடை ஆறும்
வழுத்திய செய்யுள் மருவு உறுப்பு எனவே

— தொ. வி 203

எழுத்து முதல் இரண்டு சார்பு ஈரைந்தாய் ஈராறு
என்பர் அசை இரண்டு முப்பான்சீர் தளைஏழ் அடிஐந்து
ஒழுக்கின் ஐம்பான் ஒன்றுதொடை ஒன்பான் ஆறு ஒன்பான்
உடன் இரண்டாய் விரி நாற்பா மூன்றுஇனம் யாப்பியலாம்

— சுவாமி 152

காரிகை, தொ.வி ஆகியவற்றின் இறுதி நூற்பாக்கள், யாப்பியலின் உறுப்புப் பற்றி நினைக்கின்றன. இவற்றையும் முன்கண்டவற்றுடன் இணைத்து நோக்கும்போது, யாப்பு உறுப்பு எனவும் யாப்பியல் உறுப்பு எனவும் இருநிலை அமைவது தெளிகின்றது. யாப்பு அல்லது செய்யுளுக்கு உறுப்பாக அமைவன இவையிவை என்றல் ஒன்று; யாப்பிலக்கணம் உரைக்கும் நூலின் கூறாக வருவன இவையிவை எனல் மற்றொன்று.

எழுத்துப் பதின்மூன்று இரண்டசை சீர்முப்பது ஏழ்தளை ஐந்து
இழுக்கில் அடி தொடை நாற்பதின் மூன்று ஐந்துபா இனம் மூன்று
ஒழுக்கிய வண்ணங்கள் நூறு ஒன்பது ஒண்பொருள் கோள் இருமூ
வழுக்கில் விகாரம் வனப்பு எட்டு யாப்புள் வகுத்தனவே

— யா. கா 44

ஈரசை ஐஞ்சீர் எழுதளை ஐயடி
ஆறேழு ஒருதொடை ஐம்பா மூவினம்
செய்யுள் நான்கும் செய்யுள் விகற்பமும்
ஐயிரு பொருத்தமும் ஆக
மெய்யுரை யாப்பை விளக்கிய தொகையே

— தொ. வி 300

## மாத்திரையும் எழுத்தும்

மாத்திரை பற்றிய செய்தி தொல்காப்பியத்தில் மட்டுமே உண்டு.

தொல். யாப்புக்கு உரிய எழுத்துக்களை எழுத்திலக்கணத்திற்கு உரிய எழுத்துக்களாகவே கூறுகின்றது. எழுத்திலக்கணத்திற்கு உரிய எழுத்துக்களை வகைப்படுத்தும் முறையும், யாப்பின் எழுத்துக்களை வகைப்படுத்தும் முறையும் சிறிது மாறுபடும் என்று கூறலாம். உரையாசிரியர் செய்யுளுக்கு உரிய எழுத்து வகைகளைத் தருகின்றனர். இளம்பூரணர் பதின்மூன்றும் நச்சினார்க்கினியர் பதினைந்தும், பேராசிரியர் மகரக் குறுக்கத்தையும் இணைத்துப் பதினாறும் அமைக்கின்றனர். கலம் பதினைந்தாகவும், காரிகை பதின்மூன்றாகவும் வகைப்படுத்துகின்றன. கீழ்த் தரப்படுகின்ற விளக்கம் இதைத் தெளிவாக்கும். அ.சா திறனாய்வு நோக்கில் செல்கின்றது.

அவற்றில்,
மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்

— தொல்- செ 2

குறில்நெடில் அளபெடை உயிர்உறுப் புயிர்மெய்
வலிய மெலிய இடைமையோ டாய்தம்
இஉஐயென் மூன்றன் குறுக்கமோடு
அப்பதின் மூன்றும் அசைக்கு உறுப்பாகும்

— கா. பா 1

நெடிய குறிய உயிர்மெய் உயிரும்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமோடு ஆமசைக்கு எழுத்தே

—அவி 47

குற்றெழுத்துத் தொண்ணூற்று ஐந்தாகும்
நூற்றெருரு முப்பத்துமூன்று நெடிலாம்

—அவி 48

குறிலும் நெடிலும் அளபெடையும் ஒற்றும்
அறிஞர் அசைக்குறுப்பாம் என்பர்-வறிதே
உயிர்மெய்யும் மூவினமென்று ஓதினர் என்று
செயிரவர்க்கு நின்றதோ சென்று

—அ. சா 5

ஐம்மூ வெழுத்தும் அசைக்குறுப்பாம் என்பதற்கண்
உம்மைதாம் எச்சம் எனஉரைப்பர்-ஐம்மூன்றின்
மிக்கனவும் கைக்கோடல் வேண்டி வியன்பொருளை
மெய்ப்படுக்கும் ஆங்கே விதப்பு

—அ. சா 6

ஆற்றல்சால் ஆவிமுயல அகத்தியல் கால்
ஏற்றெழுந்த தெட்டிடத்தும் முத்திறத்தால்-தோற்றி
விசையா மணுக்கந்தம் ஐந்தெழுத்தாய்ப் பத்துத்
திசையாய்ச் செவிப்புலனாய்ச் சென்று

—அ. சா 7

கால விகற்பத்தால் கட்டுரைக்கப் பட்டவற்றுள்
மூல வியனூல் முறைமையால்-ஞாலத்துள்
எல்லாம் எடுத்துரைத்தார்க்கு ஆமோ சிலவெழுத்துச்
சொல்லாதார்க்கு ஆகுமோ தோம்

—அ. சா 8

அசையாக்கும் தன்மையவே அன்றித் தொடையோடு
இசையாக்கும் ஏனையவும் சொற்றார்-இசைதொடைதோம்
ஆக்கும் எழுத்தனைத்தும் சொன்னார் அசைமுகத்தால்
தூக்கிய நூற்கு ஏற்பத் தொகுத்து

—அ. சா 9

உயிரென்ற சொல்லானே ஒன்பதாம் ஆவி
செயிரின்றிச் சென்றடங்கு மேனும்-பயில்புரைத்தார்
குன்றுதலால் எண்ணில் குணம்புரிந்தார் ஔவுந்தான்
குன்றுதலால் கூறப்படும்

—அ. சா 10

ஐயௌமவ் என்றிவற்றிற்கு ஆங்குஅந்த தீபகமா
நையா தகாரம் நடத்தாதே-மெய்யானே
கற்ருய்ந்த நூலோர்கள் தாமே புணர்ந்ததூஉம்
குற்ருய்தம் தானும் கொளற்கு

— ,, 11

சிறப்புடைய அல்லளன இவற்றுள் கொள்ப
சிறப்புடைய என்பவே சிந்தித்து—உறுப்பசைக்கண்
காலளவாம் ஒன்றினையும் கைக்கோடல் காரணமா
நூலளவில் சொற்ருர் நுனித்து

— ,, 12

மகரக் குறுக்கம் வகுத்ததுதான் ஆய்தக்கு
இகரக் குறுக்கம் முதலாப்—புகரற்ற
நூலொன்றும் எண்ணுதே நாட்டுதற்கு ஞாபகமாய்
நூலொன்றி நிற்றற் பொருட்டு

— ,, 13

ஆய்தமும் ஒற்ருய் அடங்கினும் ஆங்கதனை
ஓதினுர் தொன்னுல் உணர்வுடையோர்—நீதியால்
ஒற்ருய் அடங்குகினும் உன்கால வேற்றுமையால்
சொற்ருர் மகரச் சுருக்கு

— ,, 14

மெய்யென்ற சொல்லானே மிக்கமக ரத்தினையும்
நையு மடங்கும் நனியென்னின்-ஐயென்பது
ஆவி எனவடங்கும் அஃகிற் றெனின் மகரத்
தேய்விற்கும் அஃதே திறம்

— ,, 15

வடாது தெனுதென்று வைத்ததனுல் மற்ருண்டு
எடாதனவும் சொற்ருர் இனத்தாற்-கெடாததுபோல்
மஃகான் குறுக்கம் வகுத்ததனுல் மாட்டெறிந்தார்
அஃகாய் தந்தானும் அசைக்கு

— ,, 16

உயிரே மெய்யே உயிர்மெய் என்ரு
குறிலே நெடிலே அளபெடை என்ரு

வன்மை மென்மை இடைமை என்று
சார்பில் தோன்றும் தன்மைய என்று
ஐஔ மகரக் குறுக்கம் என்றுங்கு
ஐம்மூ எழுத்தும் ஆம்அசைக்கு உறுப்பே

—யா. க 2

குறில் நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்தம் மெய்யே
மறுவறு மூவினம் மைதீர் உயிர்மெய் மதிமருட்டும்;
சிறுநுதல் பேரமர்க்கண் செய்யவாய் ஐய நுண் இடையாய்
அறிஞர் உரைத்த அளபும் அசைக்கு உறுப்பு ஆவனவே

—யா. கா 4

இவையில் குறில் நெடில் ஒற்று உயிர்மெய் உயிராய்தம்
கோப்புடைக் குற்றுகரம் குற்றிகரம் ஐ ஔ காரக்
குறுக்கமே வல்லினம் மெல்லினமொடு இடையினமே
நீப்பரிய உயிரளபு ஒற்றளபு அசையில் எழுத்தாம்

—சி. பா-உ 2

அவற்றுள்
எழுத்து மேற்கிளந்த இயல்பிற்று ஆகும்

—இ. வி 712

எழுத்து முதல் இரண்டு சார்பு ஈரைந்தாய் ஈராறு என்பர்...

—சுவாமி 152

| யா. க | யா. கா | இளம் | பேரா | நச் | சி. பா |
|---|---|---|---|---|---|
| 1. உயிர் | 3ஆவி | | 3 | 1 | |
| 2. மெய் | 8 | | 4 | 9 | ஒற்று 3 |
| 3. உயிர்மெய் | 12 | 11 | 11 | 15 | 4 |
| 4. குறில் | 1 | 1 | 1 | 2 | 1 |
| 5. நெடில் | 2 | 2 | 2 | 3 | 2 |
| 6. அளபெடை | 13 | 3 | 12 | 4 | உயிரளபு 13 |
| 7. வல்லினம் | 9 | 4 | 6 | 11 | 10 |
| 8. மெல்லினம் | 10 | 5 | 5 | 10 | 11 |
| 9. இடையினம் | 11 | 6 | 7 | 12 | 12 |
| 10. கு. இகரம் | 4 | 7 | 8 | 5 | 7 |
| 11. கு. உகரம் | 5 | 8 | 9 | 6 | 6 |
| 12. ஆய்தம் | 7 | 9 | 10 | 13 | உயிராய்தம் 5 |
| 13. ஐ. குறுக்கம் | 6 | 12 | 13 | 7 | 8 |
| 14. ஔ. குறுக்கம் | | | 14 | 8 | 9 |
| 15. ம. குறுக்கம் | | 13 | 16 | | |
| | | 10 ஒற்றளபெடை | 15 ஒற்றளபெடை | 14 | ஒற்றளபு 14 |

அசை

தொல். அசைகளை நேர், நிரை, நேர்பு, நிரைபு என நான்காக வகுக்கின்றது. பின்வந்த இலக்கணங்கள் நேர், நிரை என்ற இரண்டையே கூறின. நேர்பு, நிரைபு என்பவற்ரோடு ஒத்தது எனக் கொள்ளத்தகும் காசு பிறப்புப் பற்றி ஒழிபியலில் நினைக் கின்றன சில.

குறிலோ நெடிலோ தனித்து அல்லது ஒற்றெழுத்துத் தொடர வருவது நேரசை. இருகுறில் இணைந்தோ, குறில் நெடில் இணைந்தோ, ஒற்றுப் பெற்ரோ நடப்பது நிரையசை. நேரசையும் நிரையசையும் உகரமோடு அமைதல் முறையே நேர்பும் நிரைபுமாம்.

குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்
ஒற்ருெடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே

—தொ-செ 3

இருவகை உகரமோடு இயைந்து அவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப

— ,, 4

குறில் இணை உகரம் அல்வழி யான

— ,, 5

தனியசை என்ரு இணையசை என்ரு
இரண்டென மொழிமனுர் இயல்பு உணர்ந்தோரே

—கா. பா 5

நெடிலொடு நெடிலும் நெடிலொடு குறிலும்
இணையசை யாதல் இலவென மொழிப

— ,, 6

ஐயென் நெடுஞ்சினை ஆதி ஒழித்தலகு
எய்தும் இணையசை என்றிசி னேரே

— ,, 7

நேரசை ஒன்றே நிரையசை இரண்டலகு
ஆகும் என்ப அறிந்திசி னேரே

—அவி 52

நேர் ஓரலகு நிரை யிரண்டலகு
நேர்பு மூன்றலகு நிரைபு நான்கலகு என்று
ஓதினர் புலவர் உணரு மாறே

— ,, 53

வழுக்கா இயல்வகையின் வாய்மையில் வேருய்
இழுக்கின் எறும்பொழுக்கே போலும்—எழுத்தின்
இசைத் தொடர்ச்சி மாலையை எண்முறையாற் கண்டித்து
அசைத் திசைய வைப்பது அசை

—அ. சா 28

நேரசை என்று நிரையசை என்று
ஆயிரண்டு ஆகி அடங்குமன் அசையே

—யா. க 5

நெடில்குறில் தனியாய் நின்றும் ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே

— ,, 6

குறில்இணை குறில்நெடில் தனித்தும் ஒற்று அடுத்தும்
நெறிமையின் நான்காய் வரும் நிரை அசையே

— ,, 8

ஈறும் இடையும் இணைந்தும் இணையசை
ஆகும் ஐ என்ப அறிந்திசி னோரே

— ,, 9

குறிலே நெடிலே குறிலிணை ஏனைக் குறில்நெடிலே
நெறியே வரினும் நிரைந்து ஒற்று அடுப்பினும் நேர் நிரை என்று
அறி வேய்புரையும் மென் தோளி உதாரணம் ஆ ழி வெள் வேல்
வெறியே சுறா நிறம் விண்தோய் விளாம் என்று வேண்டுவரே

—யா. கா 5

குறிலும் நெடிலும் எனும் இவை நேரசை; குற்றெழுத்துப்
பெறின் முன் இவையே நிரையசையாம்; பிழைப்பில்லை பின்பு ஒற்று
இறினும்.........

—வீ. சோ 107: 1-3

நெடில் குறில்கள் தனித்தும் ஒற்றை யடுத்தும் வரின் நேராம்
சாய்ப்பரிய குறிலிணைகள் குறில்நெடில்கள் தனித்தும்
தமதுடன் ஒற்றெழுத்தும் வரின் நிரையசையும் ஆமே

—சி. பா-உ 2

நேர்நிரை என அசை ஓரிரண்டு ஆகும்

—இ. வி 713

நெடிலும் குறிலும் தனித்தும் ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேரசை நான்கு; நீங்காக்
குறிலிணை குறில்நெடில் தனித்தும் ஒற்று அடுத்தும்
நெறிவரும் நிரையசை நான்கும் ஆகும்

— ,, 714

அசையே நேர்நிரையாம் இரு வகைய
நெடில் தனிக் குறில் மெய் நிகழ் குறில் நேராய்

இணைக் குறில் குறில்நெடில் இவை நிரையசையே

—தொ. வி 204

நெடில்குறில் தனியா நின்றும் ஒற்று அடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே

—மு.வீ-யா.உ 1

குறிலிணை குறில்நெடில் தனித்தும் ஒற்று அடுத்தும்
நெறிமையில் நான்கு ஆய் வரும் நிரை அசையே

— ,, 2

அழுத்து குறில் நெடில் தனித்தும் அவற்றினில் ஒற்றடுத்தும்
ஆய்ந்த நேரசை நான்கு குறிலிணைந்து நின்றுங்
கொழுத்த குறினெடில் தனித்தும் அவற்றினில் ஒற்றடுத்தும்
கூடு நிரையசை நான்கொடு எட்டாம் ஈரசையே

—சுவாமி 152

தொல். அசைகளை இயலசை (நேர், நிரை) உரியசை (நேர்பு நிரைபு) என வகைப்படுத்துகின்றது. ஏனைய இலக்கணங்கள் இது போன்று சுட்டவில்லை. அலகு பெருத எழுத்துக்கள் பற்றிய செய்தியும், சூழ்நிலைக்குத் தக அலகு பெற்றும் பெருதும் வருகின்ற எழுத்துக்கள் பற்றியும் குறிப்பிடுகின்றார் சிலர்.

இயலசை முதல் இரண்டு ஏனைய உரியசை

—தொ-செ 6

தனிக்குறில் முதலசை மொழி சிதைத்து ஆகாது

— ,, 7

ஒற்றெழுத்து இயற்றே குற்றியலிகரம்

— ,, 8

முற்றியலுகரமும் மொழி சிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும்

— ,, 9

குற்றியலுகரமும் முற்றியலுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே

— ,, 10

†அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே

— ,, 11

---

† இந் நாற்பாவை இளம்பூரணர் வகையுளிபற்றிக் கூறுவதாகக் கொள்வர். பிற இலக்கணங்கள் வகையுளி பற்றி ஒழிபியல் பகுதியில் குறிக்கின்றன. கலம் 95, காரிகை 43, இ.வி 752......

அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே

—தொ-செ 17

ஒற்று அளபெடுப்பினும் அற்று என மொழிப

— ,, 18

ஆய்தமும் ஒற்றும் அளபெழ நிற்புழி
வேறல கெய்தும் விதியின ஆகும்

—கா. பா 2

இ உ இரண்டன் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றும் நிலையின ஆகும்

— ,, 3

உயிரளபு ஏழும் உரைத்த முறையான்
வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே

— ,, 4

அளபெழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்
அலகியல்பு எய்தா என்மனார் புலவர்

— அவி 49

உயிரளபெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளை தபின் ஒற்றும்

— ,, 50

சீர் தப வரினும் ஒற்றியற்று ஆகும்

— ,, 51

கடையும் இடையும் இணையும் ஐ இரட்டியும்

— ,, 54

தனிநிலை ஒற்று இவைதாம் அலகு இலவே
அளபெடை அல்லாக்காலை யான

—யா. க 3

தளை சீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றியலுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல்பு இலவே

— ,, 4

குறிப்பே ஏவல் தற்சுட்டு அல்வழித்
தனிக் குறில் மொழிமுதல் தனிஅசை இலவே

— ,, 7

சீரும் தளையும் சிதையின் சிறிய இ உ அளபோடு
ஆரும் அறிவர் அலகு பெறுமை; ஐகார நைவேல்

ஓரும் குறிலியல்; ஒற்றளபு ஆய்விடின் ஓரலகாம்
வாரும் வடமும் திகழும் முகிழ்முலை வாணுதலே

— யா. கா 36

விட்டு இசைத்தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசை யென்று
ஒட்டப் படாது; அதற்கு உண்ணுன் உதாரணம். ஓசை குன்ரு
நெட்டளபு ஆய்விடின் நேர்நேர். நிரையொடு நேரசையாம்
இட்டத்திஞல் குறில் சேரின் இலக்கியம் ஏர்சிதைவே

—யா. கா 37

ஆந்தளை சீர்கெடில் இகரவுகரத் தேய வொற்று
மாம் அலகு பெரு அளவை ஔக்குறுமை குறிலா
மேய்ந்த வுயிர் ஓரளபும் ஈரளபும் ஆகி
ஈரசையாம் மூவசையாம் ஒற்றளபு குறினேர்
சேர்ந்தசையாம் ஒற்றிலேயேல் ஒற்ரும் ஒற்றளவாம்
செறிவில் ஈரொற்றும் மூவொற்றும் ஓரொற்ரும் முன்
சார்ந்த குறில் விட்டிசைக்கில் நேராம்

—சி. பா-ஒ 1

தளைசீர் வண்ணம் தாம் கெடவரினே
குறுகிய இகரமும், குற்றியலுகரமும்
அளபெடை ஆவியும் அலகு இயல்பு இலாமையும்
ஐகான் குறுகில் குறில் இயல்பு எய்தலும்
ஆய்தமும் ஒற்றும் அளபெழூஉ நிற்புழி
வேறு அலகு எய்தும் விதியின ஆதலும்
ஒற்று அளபு எழா வழிப் பெற்ற அலகு இன்மையும்
பெற்றி என்று உரைப்பர் கற்று உணர்ந்தோரே

—இ. வி 742

விட்டிசைத்து அன்றி முதற்கண் தனிக்குறில்
நேர் ஆகாமையும்; நெட்டெழுத்து அளபெழின்
நேர்நேர் ஆதலும்; குறில் நெடில் அளபெழின்
நிரைநேர் ஆதலும் நெறி எனப்படுமே

— ,, 743

தளையும் சீரும் தப வரில் குறுகிய
இ, உ, ஐயும் இசைபெரு என்ப

— மு. வீ-யா. ஒ 1

அளபெடை ஆவியும் அவற்ரே ரன்ன — ,, 2

ஆய்தமும் ஒற்றும் அளபெழ நிற்புழி
வேறு அலகு எய்தும் விதியின ஆகும் — ,, 3

விட்டிசைத் தல்லா விடின் முதல் தனிக்குறில்
நேரசை ஆகாது என்மனுர் புலவர் — மு.வீ-யா.ஒ 4

முதல்நிலை அளபெடை நேர் நேராம் கடை
நிலை அளபெடை நிரைநேர் ஆகும்மே

— ,, 5

சீர்தளை கெட்டிடில் குறுகும் உவ்வியும் அப் பெயருஞ்
சில ஒற்றும் அளபும் அலகு ஏருவாம் சந்தம்
சார்வுறிற் சீர் பார் தளை தீர் பல் ஒற்று ஓர் ஒற்ரும்
தனிக்குறிலாம் குறளையெள வொற்றளபும் பல நேர்
பேரும் உயிரளபு இருநேராம் குறில் விட் டிசைக்கில்
—சுவாமி 161

## சீர்

தொல். ஈரசை அல்லது மூவசை இசையோடு இணைந்து வருவது சீர் எனக் கூறுகின்ருர். இயற்சீர், ஆசிரிய உரிச்சீர், வெண்பா உரிச்சீர், வஞ்சி உரிச்சீர் எனப் பாவுக்கு ஏற்பச் சீரைத் தருகின்ருர். அசையும் சீராகலாம் என்பதையும் சுட்டுகின்ருர் (தொ- செ 27).

பிற்காலத்தார், ஓரசைச்சீர் — ஈரசைச்சீர் — மூவசைச்சீர் — நாலசைச்சீர் எனப் பகுக்கின்றனர். மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர், கனிச்சீர் எனவும் பூச்சீர், நிழற்சீர் எனவும் வாய்பாட்டு அடிப் படையில் சீருக்குப் பெயர் அளித்தது காரிகை. பிற்கால ஐந்திலக்கண நூலாகிய வீ. சோ, முற்சீர், இடைச்சீர், பிற்சீர் எனச் சீர்கட்குப் பெயர் வகுத்தது. ஈரசைச் சீர் நான்கையும் முற்சீர் என அடக்கினது; காய் இறும் மூவசைச் சீரை இடை எனவும் கனி இறுவனவற்றைப் பிற்சீரெனவும் சுட்டியது. கலத்தைப் பின்பற்றி இ. வி, ஈரசைச் சீரை இயற்சீர் எனவும், மூவசைச் சீரை உரிச்சீர் எனவும், ஓரசை நாலசைச் சீர்களைப் பொதுச் சீர் எனவும் குறித்தது.

ஈரசை கொண்டும் மூவசை புணர்த்தும்
சீர் இயைந்து இற்றது சீர் எனப்படுமே
— தொ-செ 12

இயலசை மயக்கம் இயற்சீர் ஏனை
உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர்
— ,, 13

முன் நிரை உறினும் அன்ன ஆகும்
— ,, 14

நேர் அவண் நிற்பின் இயற்சீர்ப் பால
— ,, 15

இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல ஆகும் என்ப

—தொ-செ 16

ஓரோ அசையினுல் ஆகிய ஈரசைச்
சீர் இயற்சீரெனச் செப்பினர் புலவர்

—கா. பா 8

இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர்

— ,, 9

மூவசையான் முடிவெய்திய எட்டனுள்
அந்தத் தனியசை வெள்ளே; அல்லன
வஞ்சிக் கிழமை வகைப்பட்டனவே

— ,, 10

நாலசையானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சிலவிடத்து உளவே

— ,, 14

ஈரசைச் சீர் நான்கு இயற்சீர்; மூவசையின்
இயற்சீர் எட்டினுள் அல்லன விரவினும்
நேரிறின் வெள்ளே நிரையிறின் வஞ்சி

—அவி 55

ஈரசைச்சீர் பின் முன்னு வைத்து உறழ்ந்து
மாறியக்கால் நாலசைச் சீர் பதினும்

— ,, 56

நேர் நிரை வரினே சீர் நிலே எய்தலும்
பாவொடு பிறவும் ஆகும் ஓரோ வழி

— ,, 58

நேரும் நிரையும் மயங்கிய நான்கென்ப; நேரிறுவாய்
நேர்பும் நிரைபும் முதல் இயற்சீர்களும் நேர்நிரைப்பின்
நேர்பும் நிரைபும் நிலவிய நான்கும் நிரைவளைத் தோள்
நேர்நுண் குழல்மடவாய், இயற்சீரென்று நேர்ந்தனரே

—அ. சா 40

நேர்பும் நிரைபும் மயங்கிய நான்கும் நிரையிறுவாய்
நேர்பும் நிரைபும் முதலிய சீர்களும் நேர்நிரையாய்ச்
சேரும் அளபெடைப் பின் விரை சேர் இருசீரொடு எட்டும்
ஆரும் அறிவுற ஓதினர் ஆசிரியக் கவையே

— ,, 41

நேர் நிரை நேர்பு நிரைபு முப்பாலும் நிரைத்துறழ்ந்தால்
சீர்நிலை முப்பத்திரண்டின் இரட்டி; அச்சீரிலுள்ளார்
நேர்நிரை யாதி இடைகடை நேர்வந்த நான்கும் வெள்ளைக்
காரியர் ஓதினர்; அல்லன வஞ்சிக் கறுபதமே

—அ. சா 39

இரு நான்கு அகவற்சீர்; ஈரைந்து இயற்சீர்
ஒருநான்கு வெள்ளைக்கு உரிச்சீர்; -ஒருவாத
மூவிருபான் வஞ்சிக்கு; .. ...

— ,, 32

குற்றுகரம் ஒற்ருக்கிக் கூன்வகுத்துச் சிந்தியற்றி
மற்று நெடிலும் வகையுளியும் — சொற்றபின்
மேலசைச் சீர் நாட்டி அளபெடை வீறழித்தால்
நாலசைச் சீர்க் கில்லை நடை

— ,, 43

இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று
மயக்கற வகுத்த சீர் மூன்ருகும்

—யா. க 10

ஈரசை கூடிய சீர் இயற்சீர்; அவை
ஈரிரண்டு என்ப இயல்பு உணர்ந்தோரே

— ,, 11

நாலசைச்சீர் பொதுச்சீர் பதினுறே

— ,, 13

ஓரசைச் சீரும் அஃது ஓரிரு வகைத்தே

— ,, 14

அசையிரண்டு ஒன்றின் முற்சீர்; மூவசை ஒன்றி நேர்
இறுவது இடைச்சீர்; நிரை இறின் பிற்சீர் என இயம்பே

—வீ. சோ 107:3,4

கருவிளம் கூவிளம் தேமா புளிமா எனக் கலந்து
மருவிய நான்கும் முதற்சீர்களாம்; மற்று அவற்றின் அந்தத்து
உருவமாங் காய் வரின் ஆகும் இடைச்சீர்; ஒண் கனி வருமேல்
செருவமர் வேற் கண்ணிஞய் கடைச்சீர் எனத் தேர்ந்தறியே

—வீ. சோ 108

நிரல் இயற்சீர் நேர்நேர்- தேமா; நிரைநேர் - புளிமா
நிரைநிரையே - கருவிளமே; நேர்நிரை - கூவிளம் பின்
வரு நேர் - காய் வெள்ளை; நிரைவரிற் - கனி வஞ்சிச்சீர்
மற்று நேர்நிரை வரிற் - தண்ணிழல்; நேர்நேர் -தண்பூப்

பரவு நிரைநேர் - நறும்பூ; நிரைநிரை வந்தக் கால்
பகரு நறுநிழலாம்; ஈரெட்டு இவை; நாலசைச்சீர்
விரவு வஞ்சி; நாள் மலர் ஓரசைச்சீர்; ஈரசைச்சீர்
மேவிய போல், தளை தமக்கு விளங்கி மருவிடுமே

—சி. பா-உ 3

யா. க 10...... —இ. வி 715

ஓரசை நின்றும் சீர் ஆகும்மே

—மு.வீ-யா. உ 7

தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல்
புணர்ந்து வருவது பொதுச் சீர் ஆகும்

— ,, 6

## பாவும் சீரும்

பொதுநிலையில் ஈரசைச்சீர் எல்லாப் பாக்களிலும் வரலாம். சிறப்பாக, ஈரசைச்சீர் ஆசிரியப் பாவிற்கும், மூவசையில் நேரிற்ற சீர் வெண்பாவிற்கும் நிரையிற்ற சீர் வஞ்சிப் பாவிற்கும் வரும் எனவும் தெரிகின்றது. கலிப்பா நேரீற்று மூவசையின் தளைமாற்றத்தால் தோன்றுகின்ற காரணத்தால் வெண்பா உரிச்சீர் - வஞ்சியுரிச்சீர் என்று கூறியதுபோல் கலியுரிச்சீர் என்று கூறாது விட்டார் போலும்.

இயற்சீர் இறுதிமுன் நேர் அவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப

—தொ-செ 19

வஞ்சிச் சீரென வகை பெற்றனவே
வெண்சீர் அல்லா மூவசை யான

— ,, 20

தன்பா அல்வழித் தான் நடையின்றே

— ,, 21

வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய

— ,, 22

இயற்சீர் உரிச்சீர் எனவிரு சீரும்
மயக்க முறைமையின் நால்வகைப் பாவும்
இனத்தின் மூன்றும் இனிதின் ஆகும்

—கா. பா 11

உரிச்சீர் விரவல் ஆயும் இயற்சீர்
நடக்குந ஆசிரியத்தொடு வெள்ளை;

அந்தந் தனியாய் இயற்சீர் கலியொடு
வஞ்சி மருங்கின் மயங்குதல் இலவே

—கா. பா 12

இணை நடுவியலா வஞ்சி யுரிச்சீர்
இணையுள ஆசிரியத்தன ஆகா

— ,, 13

நாலசையான் நடை பெற்றன வஞ்சியுள்
ஈரொன் றிணைதலும் ஏனுழி ஒன்றுசென்
றுகலும் அந்தம் இணையசை வந்தன
கூறிய வஞ்சிக் குரியன ஆகலும்
ஆகுந என்ப அறிந்திசி னோரே

— ,, 15

உரிமை இயற்சீர் மயங்கியும் பாநான்கு
இருமை வேறியல் வெண்பா ஆகியும்
வரும் எனும் வஞ்சி கலியின் நேரிற்ற
இயற்சீர் ஆகா என்மனர் புலவர்

—அவி 59

நிரையிறும் நாலசை வஞ்சி யுள்ளால்
விரைவினும் நேரீற் றல்லவை இயலா

— ,, 60

நேர் நடு இயலா வஞ்சி உரிச்சீர்
ஆசிரியத்தில் உண்மையும் உடைய

— ,, 61

... ... ... அவற்றுட் கலியகவற்
பாவிரவற் பாலனவும் பத்து

—அ. சா 32

மாசெல் புலிசெல் சுரங்காடு வான்கடறு
பாசிழையாய் பாம்பு களிற்றின்பின் - பேசிய
செவ்வாய் படுவாய் சிவணிய சீரிவையே
பல்லோர் பயின்றுரைக்கும் பத்து

— ,, 33

நேர்நேர் நிரைநேர்ப்பின் நேரொழித்த ஈரசையும்
சீரேற் றவற்றுதி நேர்பும் நிரைபசையும்
ஈரொன்றிற் சீரொன்றாய் இன்சீராம் வஞ்சிச்சீர்
ஆசிரியத்துட் புகும் பத்து

— ,, 34

நிரைபாதி நேர்பாதி அந்தாதி நேர்நேர்
நிரைநேரிற் சேர்ந்தவும் பத்து

—அ. சா 35

நேர்நேராம் நேரசையும் நேர்பும்; நிரைநேராம்
ஏனை இரண்டும் எனல்

— ,, 36

போதுப்பூப் போரேறு பூமருதென் றிம்மூன்றும்
பாதிரியா வைக்கப்படும்

— ,, 37

ஏனைய மூன்றும் கணவிரியாம் வெண்சீரின்
ஈறு நிரையாம் எனல்

— ,, 38

திரியேறு பூமாசேர் வாயத் திரிந்து
மருதுகொடி மாவருவா யாறு - விரிதீப்
புலிசேர ஆகும் புலிகளிறு வந்து
புலிவருவா யாங்கலியுட் புக்கு

— ,, 42

நாலசைச்சீர் வெண்பாவில் நண்ணு; அயற்பாவில்
நாலசைச்சீர் நேரீற்று நாலிரண்டாம்; - நாலசைச்சீர்
ஈறுநிரை சேரின் இருநான்கும் வஞ்சிக்கே
கூறினர் தொல்லோர் குறித்து

— ,, 44

காசு பிறப்புமே காட்டாது தேமாவும்
ஆசில் புளிமாவும் ஆய்ந்துரைத்தது - ஓசைமேல்
தேறித்தாஞ் செப்பல் தெளிவிப்ப தன்றாகிற்
கூறிற்றே கூறுர் கொணர்ந்து

— ,, 66

மூவசைச் சீர் உரிச்சீர் இரு நான்கனுள்
நேரிறு நான்கும் வெள்ளை; அல்லன
பாவினுள் வஞ்சியின்பாற் பட்டனவே

—யா. க 12

விரவியும் அருகியும் வேறும் ஒரோ வழி
மருவியும் பெறுதும் வழங்குமன் அவையே

— ,, 15

ஈரசை நாற்சீர் அகவற்குரிய; வெண்பாவினவாம்
நேரசையால் இற்ற மூவசைச் சீர்; நிரையால் இறுப

வாரசை மென்முலை மாதே வகுத்த வஞ்சிக்குரிச்சீர்
ஓரசையே நின்றும் சீராம்; பொது வொரு நாலசையே

—யா. கா 6

தேமா புளிமா கருவிளம் கூவிளம் சீர் அகவற்கு
ஆம் ஆங்கடை காய்அடையின்வெண்பாவிற்கு;அந்தம் கனியா
வாமாண் கலையல்குல் மாதே வகுத்த வஞ்சிக் குரிச்சீர்;
நாமாண் புரைத்த அசைச்சீர்க்கு உதாரணம் நாள்மலரே

—யா. கா 7

தண்ணிழல் தாண்பூ நறும்பூ நறுநிழல் தந்து உறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச்சீர் வந்துஅருகும்; இனி அவற்றுள்
கண்ணிய பூவினம் காய்ச்சீர் அனைய; கனியொடு ஒக்கும்
ஒண் நிழல் சீர்; அசைச்சீர் இயற்சீர் ஒக்கும் ஒண்தளைக்கே

—யா. கா 8

ஈரசை கூடியசீர் இயற்சீர்; அஃது
ஈரிரண்டாம்; அவை அகவற்கு இசைதலும்
மூவசை கூடிய சீர்உரிச் சீர்; அது
நாலிரண்டு ஆகி நடைபெறும்; அவற்றுள்
நேரிறு நான்கு வெள்ளை; அல்லன
பாவினுள் வஞ்சியின்பாற் பட்டிடுதலும்
நாலசையானும் ஓரசையானும்
சீர்பெற நடப்பது பொதுச்சீர்; ஆங்கது
எண்ணிரண்டு இரண்டாய் இயறலும் நெறியே

—இ. வி 716

நேரே நிரையே அசைச்சீர் இரண்டு என;
நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரை
ஈரசை இயற்சீர் ஈரிரண்டு; இவற்றோடு
ஈற்றது நேர்நிரை இருநான்கு உரிச்சீர்;
நேரிறும் வெண்சீர்; நிரையிறும் வஞ்சிச்சீர்;
நாலசை பொதுச்சீர் நானான்கு என்ப

—தொ. வி 205

நேர்நேர் தேமா நிரைநேர் புளிமா
நிரைநிரை கருவிளம் நேர்நிரை கூவிளம்
ஆகும் நாற்சீரும் அகவற்குரிய

—மு.வீ-யா. உ 3

ஈரசை நாற்சீர் ஈற்றினும் நேரசை
விளைந்து காய் எனவரல் வெண்பாக்குரிய

— ,, 4

நிரையசை அடைந்து கனியென நேர்வது
வஞ்சிக்கு உரியவாம் வழுத்துங்காலே

—மு.வி-யா.உ 5

அசை இரண்டாய் நான்கு இயற்சீர் அக வற்காம் உரிச்சீர்
அசை மூன்றாய் எட்டாம் நேர் ஈறுவெள்ளை நிரை ஈறு
அசையும் வஞ்சிக்கு ஓரசைச்சீர் இரண்டு நாலசைச் சீர்
எண்ணிரண்டும் பொதுவு இவை முப்பான் சீர்

–சுவாமி 153

உதாரணமுதல்நினைப்புக் காரிகை இலக்கணப் பகுதியினிடையே பொருந்தாமையால் தனியாக அங்கங்கே தரப்படுகின்றன. காரிகை மட்டுமே இத்தகைய பகுதியைத் தருகின்றது.

குன்றக் குறவன் அகவல்; பொன்னாரம் வெண்பாட்டு; வஞ்சிக்கு
ஒன்றும் உதாரணம் பூந்தாமரை யென்ப; ஓரசைச்சீர்
நன்றறிவாரிற் கயவரும், பாலொடு; நாலசைச் சீர்க்கு
அன்றதென்னார் அள்ளற் பள்ளத்தி னோடங்கண் வானத்துமே

—யா. கா 9

பெரும்பான்மை இன்னின்ன சீர், குறிப்பிட்ட இன்னின்ன பாவுக்கு வரும் வராது என்பன வற்றைக் கீழ்க்காணும் நூற்பாக்கள் குறிக்கின்றன.

வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்
இன்பா நேரடிக்கு ஒருங்குநிலை இலவே

—தொ. செ 23

கலித்தளை மருங்கில் கடியவும் படாஅ

— ,, 24

கலித்தளை அடிவயின் நேரீற்று இயற்சீர்
நிலைக்குரித்தன்றே தெரியுமோர்க்கே

— ,, 25

வஞ்சி மருங்கிலும் இறுதி நில்லா

— ,, 26

இசைநிலை நிறைய நிற்குவ ஆயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறவே

— ,, 27

இன்சீர் இயைய வருகுவது ஆயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே

— ,, 30

அந்நிலை மருங்கின் வஞ்சி உரிச்சீர்
ஒன்றுதல் உடைய ஓரொரு வழியே

— ,, 31

நாலசைச் சீரும் ஒரோவிடத்து இய லும்
பாவொடு பாவினம் பயிறல் இன்றி

—அவி 57

நிரை நடுஇயலா வஞ்சி உரிச்சீர்
கலியினேடு அகவலிற் கடிவரை இலவே

—யா. க 16

மாஞ்சீர் கலியுட் புகா; கலிப்பாவில் விளங்கனி வந்து
ஆம்சீர் அடையா; அகவல் அகத்தும்; அல்லாத வெல்லாம்
தாம்சீர் மயங்கும்; தளேயும் அஃதே; வெள்ளேத் தன்மை குன்றிப்
போம்சீர் கனி புகின் புல்லாது அயல்தளே பூங்கொடியே

— யா. கா 38

நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர்
கலியினெடு அகவலில் கடிதலும்; கலிவயின்
நேரீற்று இயற்சீர் நிலவுதல் இன்மையும்;
ஏனைய எல்லாம் எவ்வகைச் சீரொடும்
தாம் மயங்குதலும்; தளேயொடு மயங்கலும்;
வெள்ளேயுள் நிரை ஈற்று உரிச்சீர் விரவா;
சொல்லிய வெள்ளேயுள் பிறதளே தொடரா
என்றலும் ஒன்றிய இலக்கணம் என்ப

—இ. வி 744

பொதுச்சீர் வெள்ளேயுட் புணரா; உக்குறள்
அல்லன கலியும் அகவலும் சேரா;
வஞ்சியுள் அனேத்தும் வரினும் ஒரடி
எல்லேயுள் ஒன்றுமேல் இணேயில் தொடரா

—தொ. வி 206:3-6

மாச்சீர் கலியுள் வரப்பெறு என்ப

—மு.வீ-யா.ஒ 6

விளங்கனி கலிப்பாவினுள் புகா எனலே

— ,, 7

அகவல் இடத்தும் அடையப் பெருவே

— ,, 8

இவை நீங்கிய சீர்எல்லாம் மயங்கும்

— ,, 9

**சீருக்கு வரையறை கூறும்போது, ஐந்து எழுத்துக்குமேல் நின்று ஒரு சீராக அமையாது எனவும், வஞ்சிச் சீருக்கு மட்டும் ஆறெழுத்தும் வரலாம் எனவும் அச்சீரின் சிறிய அளவு மூன்றெழுத்து எனவும் குறிப்பிடுகின்றது தொல்.**

சீர்நிலை தானே ஐந்து எழுத்து இறவாது

—தொ- செ 41

நேர்நிலை வஞ்சிக்கு ஆறும் ஆகும்

— ,, 42

தன் சீர் எழுத்தின் சின்மை மூன்றே

— ,, 46

அளவியற்பா ஆன்றசீர் ஐந்தெழுத்தின் பல்கா
வளவஞ்சிக்கு ஆறுமாம் மாதோ; - வளவஞ்சிச்
சின்மையொரு மூன்ருகும் என்பர் சிறப்புடைமைத்
தன்மை தெரிந்துணர்வோர் தாம்

—அ. சா 19

சான்று

சீரில் எழுத்து

தூங்குகையான் ஓங்குநடைய
உறழ்மணியான் உயர்மருப்பின

—புறம் 22

ஈரசைச்சீர்

குன் றக் குற வன் கா தல் மட மகள்
வரை யர மக ளிர்ப் புரை யுஞ் சா யலள்
ஐய ளரும் பிய முலை யள்
செய் ய வா யினள் மார் பினள் சுணங் கே

—ஐங் 255

மூவசைச்சீர்

எந் நன் றி கொன் ருர்க் கும் உய் வுண் டாம் உய் வில் லை
செய்ந் நன் றி கொன் ற மகற்கு

—குறள் 110

நாலசைச்சீர்

கழி சூழ் படப் பைக் கலி யா ணர்...
மாரி பெய் யும் பரு வம் போ ல...
வரம் பறி யா மை வந் தீண் டி...
தொல் லா ணை நல் லா சிரி யர்...
வலை ஞர் முன் றில் மீன் பிற ழவும்,
விலை ஞர் குரம் பை மா வீண் டவும் ...

—பட்டினப்பாலை 33, 128, 132, 170, 197, 198

தளை

தளைபற்றித் தொல்காப்பியம் உறுப்பு என்ற முறையில் கூருவிடி னும் அங்கங்கே குறிப்பிட்டுச் செல்கின்றது. வீரசோழியம் தளை யென்பதைச் சுட்டவேயில்லை. பிற இலக்கணங்கள் தளை எழுவகைப்

படும் எனக் கூறுகின்றன. அவை—நேரொன்றாசிரியத் தளை, நிரை யொன்றாசிரியத் தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றா வஞ்சித்தளை என்பன. இத்தளை அமைப்புக்கள் ஒன்றுதல், ஒன்றாமை - இவ்விரண்டின் அடிப்படையில் ஆக்கப்பட்டுள்ளன. ஒரு பாடலில் பலதளை வரின் முதல் வருந் தளையால் அறியப்படும் என்பது அவிநயக் கருத்து.

இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதற்பெயர் ஆசிரி யத்தளை ஆகும்

—கா. பா 16

இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப நடையது வெண்டளை யாகும்

—,, 17

உரிச்சீர் அதனுள் உரைத்ததை அன்றிக்
கலக்கும் தளையெனக் கண்டிசி னோரே

—,, 18

வெண்சீர் இறுதிக் கிணையசை பின்வரக்
கண்டன வெல்லாம் கலித்தளை யாகும்

—,, 19

தன்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முளொத்து
ஒன்றினும் ஒன்றா தொழியினும் வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே

—,, 20

ஈரசை இயற்சீர் ஒன்றியது இயல்பே

— அவி 62

மயங்கிய தொடை முதல் வந்ததன் பெயராய்
இயங்கினும் தளைவகை இன்னணம் ஆகும்

—,, 72

நின்றசீர் ஈறும் வருஞ்சீர் முதலசையும்
ஒன்றியும் ஒன்றாதும் ஓசைகொள - நின்றால்
வளையொன்று முன்கையாய் வந்ததனை வல்லோர்
தளையென்று கட்டுரைப்பார் தாம்

—அ. சா 45

ஈரசைச்சீர் தாமுரிய ஆசிரியக் கென்றமையான்
நேரீற் றியற்பின் நிரை வருங்கால் - ஓரும்
கலித்தளையாம் எண்ணின் அகவற்சீர் கலியின்
ஒலிக்கியையா என்றுரைக்கும் ஒத்து

—,, 46

சீரோடு சீர் தலைப்பெய்வது தளை; அவை
ஏழென மொழிப இயல்பு உணர்ந்தோரே

—யா. க 17

வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
என்று இரண்டென்ப வெண்டளைக்கு இயல்பே

—யா. க 18

ஈரசைச்சீர் நின்று இனிவரும் சீரொடு
நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றல் என்று
ஆயிரு வகைத்தே ஆசிரியத் தளை

— ,, 19

நிரைஈறு இல்லா உரிச்சீர் முன்னர்
நிரை வருங்காலைக் கலித்தளை ஆகும்

— ,, 20

தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகை இரண்டாகும்

— ,, 21

தன்சீர் தனது ஒன்றில் தன்தளையாம்; தணவாத வஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக்கு உரித்து; வல்லோர் வகுத்த
வெண்சீர் விகற்பமும் கலித்தளை ஆய்விடும்; வெண்டளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே

—யா. கா 10

மருவு விள முன்னர் நிரை, நிரையொன்றாசிரியம்;
மா முன் நேர் வரின், நேரொன்றாசிரியத் தளையாம்;
விரவிய காய்முன்னர் நேர் வெண்சீர் வெண்டளையாம்;
ஈட்டுங் காய் முன்னர் நிரை கலித்தளையாம், மின்னே
கருது கனி முன்னர் நேர் ஒன்றாத வஞ்சி;
கனி முன் நிரை ஒன்றிய வஞ்சித்தளையாம்; மாமுன்
நிரையும் விளம்முன் நேரும் இயற்சீர் வெண்டளையாம்;
நிழல் கனியாம் பூக்காயாம், நிகழ் பொதுச்சீர்த் தளைக்கே

—சி.பா-உ 4

தன்சீர் தனதோடு ஒன்றலும் உறழ்தலும்
என்று இரண்டாகும் இயம்பிய தளையே

—இ. வி 717

நேர்நேர் ஒன்றல், நிரைநிரை ஒன்றல் என்று
ஆயிரு தளையும் அகவற்கு இசைதலும்
வெண்சீர் ஒன்றல், இயற்சீர் விகற்பமென்று
அவ்விரு தளையும் வெள்ளைக்கு அமைதலும்
நிரையீற்று உரிச்சீர் ஒன்றலும், உறழ்தலும்
வரையாது வருதல் வஞ்சிக்கு வருதலும்
வெண்சீர் விகற்பம் கலித்தளை யாதலும்
பண்பின் வழாஅப் பாங்கின என்ப

— ,, 718

தளையாம் சீர் தம்முள் தலைப்படும் கட்டே
அவை ஏழ்வகைய ஆகும்; அவற்றுள்

ஆசிரியத் தளையாம் இயற்சீர் ஒன்றல்

—தொ. வி 207

வெண்டளை என்பது வெண்சீர் ஒன்றலும்
இயற்சீர் விகற்பமும் என இருவகைத்தே

— ,, 208

கலித்தளை வெண்சீர் கலந்த விகற்பமே

— ,, 209

வஞ்சித் தளையாம் வஞ்சிக்குரிச்சீர்
ஒன்றலும் ஒன்றுது ஒழுகலும் என்ப

— ,, 210

காய்முன் நேரே வெண்சீர் வெண்டளை
மாமுன் நிரையும், விளம்முன் நேரும்
இயற்சீர் வெண்டளை என்மனுர் புலவர்

—மு. வீ-யா. உ 8

மாமுன்நேர் நேர் ஒன்றிய அகவல்
தளையாம்; விளம்முன் நிரை நிரைஒன்றிய
அகவல்தளையாம் ஆயுங்காலே

— ,, 9

கனிமுன் நேர் ஒன்றுத வஞ்சித்தளை
ஒன்றிய தளை நிரைவரின் ஆகும்மே

— ,, 10

காய்முன் நிரைவரின் கலித்தளை ஆகும்

— ,, 11

ஏழ் தளைகள்,
நிசவிளமுன் நிரைமாமுன் நேர் அகவல்தளை மா
நிரைவிளநேர் இயற்றளைகாய் முன்னேர் வெண்டளையாம்
வசி காய்முன் நிரை கலியின் தளை கனிமுன் நிரைநேர்
வஞ்சிக்காம் நிழல்கனிபூக்காய் பொதுச்சீர் தளைக்கே
—சுவாமி 153

தளையும் சீரைப்போன்று சில வரையறைகள் உடையன. அவ் வரையறை நீங்கும்போது தளைமயக்கம் ஏற்படுகின்றது. அம் மயக்கமும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. பொதுச் சீர்கள் தளை கொள்ளும் நிலையைக் காரிகை, சி. பா, மு. வீ, என்பன நினைக் கின்றன.

இயற்சீர்ப் பாற்படுத்து இயற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான

—தொ- செ 28

வெண்சீர் ஈற்றசை நிரையசை யியற்றே

— ,, 29

வெள்ளையுள் பிறதளை விரவா அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்

—யா. க 22

இனியவற்றுள்
கண்ணிய பூவினம் காய்ச்சீர் அனைய; கனியொடு ஒக்கும்
ஒண் நிழற்சீர்; அசைச்சீர் இயற்சீர் ஒக்கும் ஒண்தளைக்கே

—யா. கா 8

...தளையும் அஃதே வெள்ளைத் தன்மை குன்றிப்
போம் சீர்கனி புகின்; புல்லாது அயல்தளை பூங்கொடியே

— ,, 38

வெண்பாவெண் டளையலது மயங்காது மயங்கிடும் எப்பாவும்

—சி. பா-ஒ 1

பொதுச்சீர் இறுதியும் உரிச்சீர் இறுதியும்
தளைக்கும் ஒக்கும்; அசைச்சீர் இயற்சீர் அனைத்தே

—தொ. வி 206, 1 ,2

பொதுச்சீர் பூக் காயாகும்; நிழல் கனி
ஆகும் என்மனுர் அறிந்திசிஞேரே

—மு.வீ-யா.உ 12

அகவற்சீர் அற்ருகும் ஓரசைச்சீர்

—,, 13

எல்லாத் தளைகளும் இவற்ருேரற்றே

—மு.வீ-யா.ஒ 10

வெண்பாவில் வஞ்சி விரவப் பெருவே

— ,, 11

வெண்பா அயல்தளை விரும்பாது ஒழுகும்

— ,, 12

பிற பிறவொடு உறழும் வெள்ளை அடிதளைசீர் உறழாது

- சுவாமி 161

தொல். சீர் இயையும்போதே தளைகளின் நிலை தெளிவுபடு மாகையால் தளை என்ற பிறர் கூறும் தனியுறுப்பை உறுப்பு எனக் கொள்ளாது தேவைக்கு மட்டும் சுட்டிஞர் எனக் கொள்ளலாம். அதனையே கீழ்வரும் நூற்பா உணர்த்துகின்றது.

தன்சீர் உள்வழித் தளைவகை வேண்டா

—தொ- செ 55

தளைகளின் பெயருக்கு ஒரு அடிப்படைக் காரணத்தைக் கூறு வதற்காகவே அடுத்து நூற்பா கூறினுர் போலும்.

சர் இயை மருங்கின் ஓரசை ஒப்பின்
ஆசிரியத்தளை என்று அறியல் வேண்டும்

—தொ- செ 56

உதாரண முதனிலைப்புக் காரிகை

திருமழையுள்ளார் அகவல்;சிலைவிலங்காகும் வெள்ளை
மருளறு வஞ்சி மந்தாநிலம் என்ப; மைதீர் கலியின்
தெரிவுறு பந்தம் நல்லாய், செல்வப்போர்க் கதக்கண்ணன் என்பது
உரிமையின் கண்ணன்மை ஓரசைச் சீருக்கு உதாரணமே

— யா. கா 11

**சான்று**

1. நேரொன்றாசிரியம்

அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பற்
றுதேர் வண்ணங் கொண்டன
ஏதிலா ளர்க்குப் பசந்தவென் கண்ணே

—ஐங் 34

2. நிரையொன்றாசிரியம்

கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென
இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்
அற்சிர மறக்குந ரல்லர்நின்
நற்றோள் மருவரற் குலமரு வோரே

—ஐங் 464

3. இயற்சீர் வெண்டளை

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

—குறள் 3

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

—குறள் 90

4. வெண்சீர் வெண்டளை

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது

—குறள் 7

5. கலித்தளை

அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர் கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி

—கலி 11

தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்போல்
எல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய...

—கலி 129

6. ஒன்றிய வஞ்சித்தளை

வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி

—பட்டினப்பாலை 1-4

7. ஒன்றா வஞ்சித்தளை

வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனி

—பட்டினப்பாலை 5-8

அடி

சீர்கள் இணையும்போது அடி தோன்றுகின்றது. அவ்வடி குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என வகைப் படுத்தப்பட்டது. இச் சொற்றொடர்கள் ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பொருளில் பயன்படுத்தப்பட்டன. தொல். நாற் சீரடியில், நாலெழுத்து முதல் ஆறெழுத்துவரை வருவதைக் குறளடி என்று கூறிற்று; பிற, இரு சீரால் அமைந்த அடியைக் குறளடி எனப் பேசின. இது போன்றே ஏனையவும் அமைந்தன. தொல். எழுத்தெண்ணி அடிகூறுகின்ற அமைப்பு, செய்யுளை ஆழ்ந்து நோக்கியதைச் சுட்டும். ஏனைய நூற்கள் சீர்களின் அடிப்படையில் அடிபற்றிப் பேசினவே யொழிய எழுத்துக்களைப் பற்றி மிகுதியும் கவலையுறவில்லை. கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பாவுக்கு மட்டும் எழுத்துக்களைப் பற்றி நினைக்கும் நிலை பிற்காலத்தில் இருந்தது. தொல். பாவைப் பற்றி நினைக்கும்போது, சீரடிப்படையி லமையும் அடிவகுப்புப் பற்றியும் பேசுகின்றது, இந்நூற்களி லிருந்து வேறுபட்டுத் தளையடிப்படையில் அடியமைக்கின்றது இலக்கண விளக்கம். தொல்.இல் உள்ள ‘தளையடி’ என்ற தொடர் இங்கு நினைத்தற்குரித்து. வீ.சோ இவ் ஐவகையடிகட்கு ஐம்பூதங் களின் பெயரளிக்கின்றது.

நாற்சீர் கொண்டது அடி எனப்படுமே

—தொ-செ 32

அடியுள்ளனவே தளையொடு தொடையே

— ,, 33

அடி இறந்து வருதல் இல் என மொழிப

—தொ- செ 34

அடியின் சிறப்பே பாட்டு எனப்படுமே

— ,, 35

நாலெழுத்து ஆதியாக ஆறெழுத்து
ஏறிய நிலத்தே குறளடி என்ப

— ,, 36

ஏழெழுத்து என்ப சிந்தடிக்கு அளவே
ஈரெழுத்து ஏற்றம் அல்வழியான

— ,, 37

பத்தெழுத்து என்ப நேரடிக்கு அளவே
ஒத்த நாலெழுத்து ஏற்றலங் கடையே

— ,, 38

மூவைந்து எழுத்தே நெடிலடிக்கு அளவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பு என மொழிப

— ,, 39

மூவாறு எழுத்தே கழிநெடிற்கு அளவே
ஈரெழுத்து மிகுதலும் இவண்பெறும் என்ப

— ,, 40

எழுத்து அளவு எஞ்சினும், சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல் என மொழிப

— ,, 43

உயிர்இல் எழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மையான

— ,, 44

ஐவகை அடியும் விரிக்குங்காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்த
எழுபது வகையின் வழுவில ஆகி
அறுநூற்றிருபத்தைந்து ஆகும்மே

— ,, 50

ஆங்கனம் விரிப்பின் அளவிறந்தனவே
பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை

— ,, 51

குறள் சிந்து அளவு நெடில் கழிநெடில்என்று
ஐவகை மரபின அடிவகை தானே

—கா. பா 21

இருசீர் குறளடி; சிந்தடி முச்சீர்
அளவடி நாற்சீர்; ஐஞ்சீர் நெடிலடி
அறுசீர் கழிநெடில் ஆகும் என்ப

— ,, 22

எண்சீர் எழுசீர் இவையும் கழிநெடிற்கு
ஒன்றிய என்ப உணர்ந்திசி னோரே

— ,, 23

இரண்டு முதலா எட்டு ஈறுகத்
திரண்ட சீரான் அடிமுடி வுடைய
இறந்தன வந்து நிறைந்தடி முடியினும்
சிறந்த அல்ல செய்யுள் உள்ளே

— கா. பா 24

எண்ணெழுத்தில் திண்ணியராய் எஃகு செவியராய்
நுண்ணுணர்விற் சேர்ந்த நுழைவினராய் - மண்மேல்
நடையறிந்து கட்டுரைக்கும் நாவினோர்க்கு அல்லால்
அடியறியும் தன்மை அரிது

—அ. சா 47

தடுத்த தளையொன்றும் தாம்பலவும் கூடி
அடுத்து நடப்பின் அடியாம் - வடுத்தீர்ந்த
பாத வடமொழியைப் பைதீர் தமிழ்ப்புலமை
நாதரடி என்றூர் நமக்கு

— ,, 48

ஈரிரண்டும் ஓரேழும் ஈரைந்தும் மூவைந்தும்
பாரியன்ற நாற்சீர் பதினெட்டும் -ஓரா
விளையும் பதினேழ் நிலத்துக் குறள்சிந்து
அளவு நெடில் கழிலோடு ஐந்து

— ,, 49

குற்றிகரம் குற்றுகரம் என்றிரண்டும் ஆய்தமும்
ஒற்றும் எனவொரு நான்கொழித்துக் - கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினர் எண்ணச்
செயிரகன்ற செய்யுள் அடிக்கு

— ,, 18

ஒருதளை ஆதியா ஓரேழின் காறும்
வருவது மன்னும் அடியென்று - உரையாது
இருசீர் முதலாக எண்சீர்கா றென்ற
அருமுனிவர்க் காய்த்தோ அலர்

— ,, 30

ஒருதொடை ஈரடியென்று ஓதிய துள்ளிட்டு
இருதிறமாகச் சொல்லிய தெல்லாம் - இருதிறமும்
நல்லாசிரியர் நயமென்றற் கந்நயத்தால்
எல்லாரும் தீர்வர் இழுக்கு

— ,, 31

குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடில்அடி எனக் கட்டுரைத்தனரே

— யா. க 23

குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்
நிரனிறை வகையால் நிறுத்தனர் கொளலே

— ,, 24

கழிநெடில் அடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண்டு ஈறு
வருவன; பிறவும் வகுத்தனர் கொளலே

—யா. க 25

குறள் இருசீரடி; சிந்து முச்சீரடி; நாலொருசீர்
அறைதரு காலே அளவொடு நேரடி; ஐயொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடியாம்; நெடுமென் பணைத்தோள்
கறைகெழு வேல்கண் நல்லாய் மிக்க பாதம் கழிநெடிலே

— யா. கா 12

இருசீரும் முச்சீரும் நாற்சீரும் ஐஞ்சீரும் ஐந்தின்மிக்கு
வருசீரும் அந்தரம் கால் தீப் புனலொடு மண் பெயரால்
திரிசீர் அடியாம் குறள் சிந்து அளவு நெடில் தகைமை
தெரிசீர்க் கழிநெடில் என்று நிரனிறை செப்புவரே

— வீ. சோ 109

நிகழ் இருசீர் குறளடி; முச்சீர் சிந்து; நாற்சீர்
நேரொடு அளவடி; ஐஞ்சீர் நெடிலடி; ஆறுஆதி
திகழ் தருசீர் கழிநெடில்...

—சி.பா-உ 5

குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடிலடி என அடிஐந்து ஆகும்

—இ. வி 719

குறள் ஒரு பந்தம்; இருதளை சிந்தாம்
முத்தளை அளவடி; நாற்றளை நெடிலடி
ஐந்தளை முதலா எழுதளை காறும்
வந்தவும் பிறவும் கழிநெடில் என்ப

— ,, 720

அடியென்ப தளைத்த அஞ்சீரா நடை; அவை
குறளடி இருசீர்; சிந்தடி முச்சீர்
அளவடி நாற்சீர்; ஐஞ்சீர் நெடிலடி
கழிநெடிலடி ஐந்தே கடந்த சீர் இவற்றுள்
எண்சீர் மிக்க அடியெனில் சிறப்பு அன்றே

— தொ. வி 211

இருசீரான் வரல் குறளடி எனலே

—மு. வீ-யா. உ 14

முச்சீரான் முடிவது சிந்தடியே

— ,, 15

நாற்சீரான் வரல் அளவடியாகும்

— ,, 16

ஐஞ்சீரான் வருவது நெடிலடியே

— ,, 17

அறுசீர் முதல் ஐயிருசீர் அடி கடை
யாக வருவது கழிநெடிலாகும்

—மு.வீ-யா.உ 18

தளையொன்றுகுறள் இரண்டுசிந்து மூன்று அளவு
தளைநான்கு நெடில் அடி ஐந்தாதி கழிநெடிலாம்
தெளி அடி ஐந்து இவையாம்

—சுவாமி 154

*உதாரண முதனிணைப்புக்காரிகை*

திரைத்த விருது குறள் சிந்து; அளவடி தேம்பழுத்து
விரிக்கு நெடிலடி வேல்நெடுங் கண்ணி, வென்றுன் வினையின்
இரைக்குங், கணிகொண்ட, மூவடிவோடு இடங் கொங்கு மற்றும்
கிரிக்கைக் கவான் மருப்பு ஏர்முலை மாதர் கழிநெடிலே

—யா. கா 13

பொதுநிலையில் அடிபற்றிக் கூறும்போது, நாற்சீர்கள் உடையதே அடியெனவும் அவ் அடியே தளை தொடைகட்கு இடமளிக்குமெனவும் சுட்டி, அதன் கண் வரும் எழுத்துக்களின் எண்ணிக்கை அடிப்படையில் குறள், சிந்து, அளவு, நெடில், கழிநெடில் எனப் பகுக்கின்றது தொல்.

இன்ன பாவுக்கு இன்ன எழுத்துவகை யடி வரல் வேண்டும், சீர் வகையடி வரல் வேண்டும் என்ற வரையறைகள் சில இலக்கணங்களில் உண்டு.

வஞ்சிப்பாவில் இருசீர் முச்சீரடிகள் வரும். அதோடு அகவல் கலியடிகள் மயங்குதலும் உண்டு.

வஞ்சி அடியே இருசீர்த் தாகும்

—தொ-செ 45

முச்சீரானும் வரும் இடன் உடைத்தே

— ,, 47

குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை இலவே வஞ்சிக்கு என்ப

— ,, 57

வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே

— ,, 71

சிந்தடி குறளடி என்று இரண்டும்
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே

—கா. பா 25

இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்

—அவி 63

ஈரிரண்டோடு ஈரேழு எழுவாய் இறுவாயாச்
சேரும் எழுத்து இருசீர் வஞ்சிக்காம் - ஒரும்
நெடிலடிக்கு நேர்ந்தனவும் மூவொருசீர் வஞ்சிக்கு
அடிவகுத்தார் எட்டாதி ஆய்ந்து

—அ. சா 51

சிந்தடி குறளடி என்றிரண்டு அடியான்
வஞ்சி நடக்கும் என்மனா் புலவர்

—யா. க 26

வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்

— ,, 31

வஞ்சியுள் அகவல்அடி கலிஅடியும்
விரவி வரப்பெறும் விளம்புங் காலே

—மு. வீ-யா. ஒ 14

ஆசிரியப் பாவின் பொது இலக்கணமாக, ஐவகை அடியும் வரும் எனவும் தளை நிலையில் வெண்டளையும் விரவும் என்றும், ஈற்றயலடி முச்சீரான் வரும் எனவும் பேசுகின்றனர்.

ஐவகை அடியும் ஆசிரியக்கு உரிய

—தொ-செ 52

விராஅய் வரினும் ஒரூஉநிலை இலவே

— ,, 53

தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையின் ஐந்தடிக்கும் உரிய

— ,, 54

இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்கு உரி மரபின் நிற்கவும் பெறுமே

— ,, 62

வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீரடியும் உள என மொழிப

— ,, 63

அறுசீர் அடியே ஆசிரியத் தளையொடு
நெறி பெற்று வரூஉம் நேரடி முன்னே

— ,, 64

ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கில்
தோற்றம் முச்சீர்த்து ஆகும் என்ப

— ,, 68

இடையும் வரையார் தொடை உணர்வோரே

— ,, 69

ஐந்தும் அகவற்கு ...

—அ. சா 50

நான்கு முதலாக நாலைந்து எழுத்து அளவும்
ஆன்ற அகவல் அடிக்கு எழுத்தாம் ... ...

—அ. சா 23

சேரும் நேரடிப் பாவில் ஐஞ்சீரடி
ஏரும் வெள்ளை அல்லா வழி என்பது
சோர்விலாத தொல்காப்பியத் துள்ளும்நக்
கீரனார் அடிநூ லுள்ளும் கேட்கவே

— ,, 52

இயற்சீர் வெள்ளடி வஞ்சியடி இவை
அகப்பட வருஉம் அகவலும் உளவே

—யா. க 29

இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம்
அகவற் பாவினுள் அடையப் பெறுமே

—மு. வீ-யா.ஒ 13

ஏழு எழுத்து முதல் பதினான்கு எழுத்துவரை வரும் சிந்தடியும் நேரடியும் வெண்பாவில் அமையும். ஈற்றடி முச்சீர் ஆகவும், ஓரசைச்சீர் இறுதியிலும், இறுதிச் சீருக்கு முந்திய சீர், அதற்கு ஏற்ப நேரீற்றியற்சீராகவும் அல்லது அதன் முறைபிறழ்ந்தும் வெண்பா வரும் என்பர்.

அளவும் சிந்தும் வெள்ளைக்கு உரிய
தளைவகை ஒன்றாத் தன்மை யான

—தொ- செ 58

வெண்பாட்டு ஈற்றடி முச்சீர்த்து ஆகும்

— ,, 72

அசை சீர்த்தாகும் அவ்வயினான

— ,, 73

நேரீற்று இயற்சீர் நிரையும் நிரைபும்
சீர் ஏற்று இறாஉம் இயற்கைய வென்ப

— ,, 74

நிரை அவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின்று என்ப வாய்மொழிப் புலவர்

— ,, 75

... ... ... வெள்ளைக்கு அளவடியும்
சிந்தும் நெடிலடிக்கண் தொல்லிரண்டும்

—அ. சா 50

பண்பாய்ந்த ஏழு பதினாறு இழிபு உயர்வா
வெண்பா அடிக்கு எழுத்து வேண்டினார் - வெண்பாவின்
ஈற்றடிக்கு ஐந்தாதி ஈரைந்து எழுத்தளவும்
பாற்படுத்தார் நூலோர் பயின்று

— ,, 20

முற்றுகரந் தானும் முதற்பாவின் ஈற்றடிப் பின்
நிற்றல் சிறுபான்மை நேர்ந்தமையால் - மற்ற
அடிமருங்கின் ஐயிரண்டோடு ஒரெழுத்து
துடிமருங்கின் மெல்லியலாய் சொல்லு

—அ. சா 22

பதினைந்து எழுத்து முதல் இருபது எழுத்துவரைக் கலிப்பா அடியில் வரலாம். இருசீராலும், முச்சீராலும், ஏனைய தளைகள் விரவியும் கலித்தளை அமைந்தும் கலிப்பாவடி நடக்கும்;

அளவடி மிகுதி உளப்படத் தோன்றி
இரு நெடில் அடியும் கலியிற்கு உரிய

—தொ-செ 59

நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்பினும்
வரைநிலை இன்றே அவ்வடிக்கு என்ப

— ,, 60

விராஅய தளையும் ஒரூஉநிலை இன்றே

— ,, 61

எழுசீரடியே முடுகியல் நடக்கும்

— ,, 65

முடுகியல் வரையார் முதல் ஈரடிக்கும்

— ,, 66

ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்
மூவகை அடியும் முன்னுதல் இலவே

— ,, 67

முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்

— ,, 70

எழுசீர் இறுதி ஆசிரியம், கலியே

— ,, 76

வெண்பா இயலினும் பண்புற முடியும்

— ,, 77

... வந்தது
அளவிரண்டும் ஆன்ற நெடில் கழியும் ஒன்பாற்
தளைசிதைவில் தண்டாக் கலிக்கு

—அ. சா 50

— ... ... ... ... மூன்றுடைய
பத்து ஆதியாகப் பதிற்றிரட்டி ஈருக
வைத்தார் முரற்கைக்கு எழுத்து

— ,, 23

சேரும் நேரடிப்பாவில் ஐஞ்சீரடி
ஏரும் வெள்ளை யல்லா வழி என்பது

சோர்விலாத தொல்காப்பியத்துள்ளும் நக்
கீரனுர் அடிநூ லுள்ளும் கேட்கவே

— அ. சா 52

வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே

—யா. க 30

கலியினுள் வெள்ளடி அகவலும் கலக்கும்

—மு. வீ-யா ஒ 15

பொதுநிலையில் பாக்களுக்குரிய அடிநிலையும் அடிமயக்கமும் சில இலக்கணங்களில் உணர்த்தப்படுகின்றன.

ஆசிரியம் வெண்பாக் கலியொடு மும்மையும்
நாற்சீர் அடியான் நடை பெற்றனவே

— கா. பா 26

சிந்தும் குறளும் வருதலும் அவ்வழி
உண்டென்று அறைப உணர்ந்திசி னோரே

— ,, 27

விருத்தம் துறையொடு தாழிசை என்று
இனச் செய்யுள் எல்லா அடியினும் நடக்கும்

— ,, 28

உணர்த்திய பாவினுக்கு ஒத்த அடிகள்
வகுத்துரை பெற்றியும் அன்றிப் பிறவும்
நடக்குந ஆண்டை நடைவகை யுள்ளே

— ,, 89

இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்
நாற்சீர் அடியால் பாப் பிற மூன்றே

—அவி 63

எல்லா அடியினும் இனப்பா; நாற்சீர்
அல்லா மேலடிப் பாவினுக்கு இயலா

— ,, 64

கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னுல் நடக்குமன் அவையே

—யா. க 27

பாவினம் எல்லா அடியினும் நடக்கும்

— ,, 28

இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவல் உள்ளான்
மயக்கப்படா அல்ல; வஞ்சி மருங்கின் எஞ்சா அகவல்;
கயற்கண் நல்லாய் கலிப்பாதமும் நண்ணும்; கலியினுள்ளான்
முயக்கப்படும் முதற்கால் இருபாவும் முறைமையினே

—யா. கா 39

அருகிக் கலியோடு அகவல் மருங்கின் ஐஞ்சீரடியும்
வருதற்கு உரித்து என்பர் வன்தமிழ் நாவலர்

—யா. கா 40:1,2

மயங்குமடி யெப்பாவும் வெண்பாவுக் கன்றி
மன்னினமும் தளையும் மயங்கி வரும்

—சி. பா-ஒ 2

வெண்பா அகவல் கலி நேரடியும்;
ஒண்பா வஞ்சி குறள் சிந்து அடியும்;
பாவினம் எல்லாப் பாதமும் பெறுமே

—இ. வி 721

இயற்சீர் வெள்ளடி வஞ்சியடி இவை
மயக்கப் படுதலும்; வெண்சீர் வெள்ளடி
கலியடி ஓரோவழி அகவலுட் கலத்தலும்;
வெள்ளடி அகவல் கலியுளும், அகவலுங்
கலியும் ஓரோவழி வெண்பா அடியும்
வஞ்சியுள் மயங்கி வருதலும், ஐஞ்சீர்
அடிகலி அகவலோடு அருகிவந்து அடுத்தலும்
கடிநிலை இன்றே கருதுங் காலை

—இ. வி 745

கலியினும் அகவலினும் ஐஞ்சீரடி
வருவதும் உள என வகுத்தனர் புலவர்

—மு.வீ-யா.ஒ 16

அமுதசாகரத்தில் அடிபற்றிய எண்ணத்தில் சில தனித்த கோணப்பார்வை அமைகின்றது. எழுத்தெண்ணிக்கையையும் தளைநிலையையும் உறழ்ந்து, அடிவகைகளைப் பெருக்கும் இந்நிலை, தொல்காப்பியம் அடிவிரி எனத் தரும் அறுநூற்றிருபத்தைந்தினைத் தெளிந்து கொள்ள உதவலாம்.

வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பாவுக்குரிய இந்நிலைகள் இங்கு இணைக்கப் பெறுகின்றன.

வெண்பாவோர் ஐந்தும் விகற்பத்தால் பத்தாகித்
தன்பால் தளைநான்கின் நாற்பதாய்த் - திண்பான்மைச்
செப்பல் ஒருமூன்றின் வந்துறழச் சேர்ந்தபாத்
தப்பாத முந்நாற்பது ஆம்

- அ. சா 21

ஒத்தாழிசைக்கலி என்று ஓதிய ஆறினையும்
முத்தரத்து ஓசையான் முன்முரணி -வைத்து
வழுவற்ற ஆறிரண்டு வான்தளையால் மாற
எழுமுப்பத்தாறும் எனல்

— ,, 24

கொச்சகம் ஈரைந்தும் வெண்கலி ஓரிரண்டும்
வைத்து இசை ஓர் மூன்றினுல் மாறிய - பின் மற்றவற்றை
மாசில் பதினுன்கு வான்தளையால் மாறவாம்
ஆசில் கலிக்கு ஐஞ்ஞூற்று நான்கு

— அ. சா 25

வஞ்சிப்பா நான்கும்தன் வாலிய மூன்று ஓசையால்
எஞ்சாத ஈராறும் ஈண்டு அவற்றை - எஞ்சாத
பந்தம் பதினுன்கின் மாறப் பழுதின்றி
வந்தன நூற்றறுபத் தெட்டு

— ,, 26

அந்தத்தில் பாவிற்கு இனமாய ஆறினேயும்
பந்தம் பதினுன்கினுல் பரப்ப - வந்தன
எண்பத்து நான்காம் இனியவற்றின் மிக்கனவும்
பண்புற்றுப் பார்த்துக் கொளல்

— ,, 27

## சான்று : 1. சீர்-அடி

*1.* ஒருசீரடி

பவமற்றவர்
தவமுற்றவர்
அவமற்றவர்
சினமுற்றவர்

—காரைச்சித்தர்

*2.* இருசீரடி

அரிமயிர்த் திரண்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணற் புனேபாவைக்குக்
குலவுச்சினேப் பூக்கொய்து
தண்பொருநைப் புனல்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சி

—புறம் 11

*3.* முச்சீரடி

அம்பொடு வேனுழை வழியெலாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்

சென்றுவீழ்ந் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ

—புறம் 235:7-16

தாழித் தண்கட றம்மோடும்
ஏழுக் கேழுல கெல்லாமன்
ருழிக் கையவ னம்பம்மா
ஊழித் தீயென வுண்ணுதோ

—கம்பன் 5:655

4. நாற்சீரடி

அவரோ வாரார் தான்வந் தன்றே
அஞ்சினைப் பாதிரி யலர்ந்தெனச்
செங்க ணிருங்குயி லறையும் பொழுதே

—ஐங் 346

5. ஐஞ்சீரடி

கிளர்மணி ஆர்ப்பார்ப்பச் சாஅய்ச் சாய்ச் செல்லுந்
தளர்நடை காண்டல் இனிதுமற் றின்னுதே
உளமென்னு நுந்தைமாட் டெவ்வ முழப்பர்
வளைநெகிழ் பியாங்காணுங் கால்

— கலி 80

குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே

—அப்பர்

6. அறுசீரடி

நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியுஞ் சான்றவ ரினமாக
வேய்புரை மென்ருேட் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியு மெல்லா முடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்
பூவெழி லுண்கணும் பொலிகமா இனியே

—கலி 39

தேனைப் பாலைக் கன்னலின் தெளியை யொளியைத் தெளிந்தார்தம்
ஊனை யுருக்கு முடையானை உம்ப ரானை வம்பனேன்
நானின் னடியேன் நீயென்னை யாண்டா யென்ருல் அடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மை யாமென் றன்மையே

—திருவாசகம்

**7.** எழுசீரடி

பானிலனந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே

— திருவாசகம்

## 2. எழுத்து-அடி

**1.** நான்கு எழுத்து

தேர்ந்து தேர்ந்து சார்ந்து சார்ந்து
நேர்ந்து வாமனை நினையின்
சேர்ந்த வல்வினை தேய்ந்தக லும்மே

—இளம்- உரை

**2.** ஐந்து

குன்று கொண்டு நின்ற மாடு
பொன்ற வந்த மாரி
சென்று காத்த திறலடி தொழுமே

— ,,

**3.** ஆறு

ஆறு சூடி நீறு பூசி
ஏறும் ஏறும் இறைவனைக்
கூறு நெஞ்சே குறையிலை நினக்கே

— ,,

**4.** ஏழு

போது சாந்தம் பொறப வேந்தி
யாதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வோரே

—யா. க-விருத்தி

**5.** எட்டு

அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கை யாம்ப லநுரி மென்கால்
நிறத்தினு நிழற்றுதன் மன்னே
இனிப்பசந் தன்றென் மாமைக் கவினே

—ஐங் 35

6. ஒன்பது

நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதா ணிழற்கீழ்
மூவகை யுலகு முகிழ்த்தன முறையே

—ஐங்-க. வா

7. பத்து

கரைசேர் வேழங் கரும்பிற் பூக்கும்
துறைகே ழூரன் கொடுமை நன்றும்
ஆற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் றடமென் றோளே

—ஐங் 12

8. பதினொன்று

கருவி வானம் பெயலொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே
விரியுளை நன்மாப் பூட்டிப்
பருவர றீரக் கடவுமதி தேரே

—,, 488

9. பன்னிரண்டு

மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே

—புறம் 131

10. பதின்மூன்று

இனமயி லகவு மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சார லவர் நாட்டுக்
குன்ற நோக்கினென் றோழி
பண்டை யற்றோ கண்டிசி னுதலே

—குறு 249

11. பதினான்கு

உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்

—புறம் 183

12. பதினைந்து

முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்

கருங்கா லன்றிக் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானாட் கங்குல்

—குறு 301

*13.* பதினாறு

பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் சில்பெயற் கடைநாட்
சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
நள்ளென் யாமத் தையெனக் கரையும்

— ,, 261

*14.* பதினேழு

விரவுமணி யொளிர்வரு மரவுற ழாரமொடு

— புறம் 398:27

இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு

—பதிற் 62:1

*15.* பதினெட்டு

கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்

—புறம் 55:7

*16.* பத்தொன்பது

நெடிங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும்

— ,, 55:8

## யாப்பு

தொல். செய்யப்படுவது அனைத்தும் செய்யுள் எனக் கருதினர் போலும். செய்யுளியலில், பாட்டு - உரை - நூல் - வாய்மொழி - பிசி - அங்கதம் - முதுசொல் என்ற எழுவகையாக அமைந்த செய்யுள் வடிவங்களைத் தருகின்றார். அவற்றில் முதலில் அமைவது பாட்டு. அப்பாட்டிற்கு அடிப்படையாக அமைவன எழுத்து - சீர் - அடி. இவை மட்டும் இணைந்து வந்தால் அது பாட்டு ஆகாது. அவ் இணைப்பால் ஏற்படும் பொருள் முடிவின் கோர்வையையே யாப்பு எனப் பேசுகின்றார். நியதிப்படி, யாப்பு என்பது எழுத்து-அசை - -சீர் போன்று ஒரு தனியுறுப்பெனக் கூற இயலாது. இவற்றின் சேர்க்கையில் (meaningful process) அமையும் பொருள் பொதி முறைமையையே யாப்பு எனக் கூறினர் போலும்.

இவ் யாப்பின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டவை ஏழு.

எழுத்து முதலா ஈண்டிய அடியில்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பு எனமொழிப யாப்பறிபுலவர்

— தொ-செ 78

பாட்டு உரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொலோடு அவ் ஏழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயர் எல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழியது என்மனார் புலவர்

—தொ-செ 79

ஓரடி யானும் பலவடி யானும்
ஒரோவழி இயலும் உரைத்தவச் செய்யுள்
அவைதாம், பாட்டு உரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே

—இ. வி 760

ஏழ்வகை நிலமாகிய செய்யுள் வகைகளைச் செய்யுளின் அளவு பற்றிப் பேசும்போது விளக்குகின்றார். பொருள் தொடர்பு கருதி அவை இங்கே தரப்பட்டுள்ளன.

தொல். காலத்திற்கு முன்பு கவிதையை அல்லது பாட்டை மட்டும் செய்யுள் என்று கூறவில்லை. எழுத்து, அசை, சீர் போன்ற உறுப்புக்களால் பல வகைகளாக அமைந்த நூற்களைப் பொருள் அடிப்படையில் நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என வகைப்படுத்தினர்கள். பிற்காலத்தில் செய்யுள் என்பதை யாப்பு (poetry) என்று மட்டுமே கொண்டு வழங்கியதால் யாப்பருங்கலம், காரிகை போன்ற நூற்கள் எழுந்தன. தொல். கூறிய பாட்டு என் பதன் விளக்கத்தை மட்டுமே பிற்காலத்தார் யாப்பிலக்கணமாக உரைத்தார்கள். ஏனையவையும் செய்யுளில் தான் இருத்தல் வேண்டும் என்ற முந்திய வரையறை இன்மையான், பின்னவர்கள் அவை பற்றிக் குறிப்பிடாதுவிட்டார் போலும். இ. வி மட்டுமே தொல்காப் பியத்தைப் பின்பற்றி இவற்றைச் சுட்டி விளக்கியது(பாட்டியலில்).

அவைதாம்,
நூலின் ஆன; உரையின் ஆன;
நொடியொடு புணர்ந்த பிசியின் ஆன;
ஏது நுதலிய முதுமொழி ஆன;
மறைமொழி கிளந்த மந்திரத்து ஆன;
கூற்று இடை வைத்த குறிப்பின் ஆன

—தொ-செ 165

எஞ்சிய இலக்கணம் எல்லாம் சொல்லின்
மாத்திரை முதலா யாத்து இனிது அமைத்த
பாட்டின் இயலும் நூலின் இயலும்
உரையின் இயலும் பிசியின் இயலும்

முதுசொல் இயலும் மந்திர இயலும்
குறிப்புரை இயலொடு ... ...

—இ. வி 761: 1-6

இவற்றுள் பாட்டு என்பது என்ன என்ற கேள்விக்குத் தொல்காப்பியத்தில் வெளிப்படையான விடையில்லை. தூக்கெனும் உறுப்பை விளக்குமிடத்து ஓசைகளும் சுட்டப்படுநிலையில், முடிபாக வரும் 'அவ்வியல் அல்லது பாட்டாங்குக் கிளவார்' எனும் நூற்பா, பா - பாட்டு என்பனவற்றின் தொடர்பைச் சுட்டியது எனக் கொள்ளலாம். பா,பொருண்மை பொருந்து நிலையில் பாட்டாகின்றது போலும்.

இ. வி பாட்டியலில் பாட்டு என்பதனை இவ்வாறே சுட்டி, நால் வகைகளை விளக்குகின்றது — ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என. இவற்றுள் வித்தாரத்தின்கண் இலக்கிய வகைகளான 'பிரபந்தங்க'ளை அடக்குகின்றது.

அவற்றுள்,
பாட்டு எனப்படுவது பைந்தமிழ் நாட்டகத்து
யாப்புறச் செய் பா உறுப்பு எழுந்து இசைக்கும்

—இ. வி 762

ஆசு மதுரம் சித்திரம் அகலம் என்று
ஓசை எழும் பாட்டு ஒருநால் வகைத்தே

— ,, 763

எழுத்துச் சொற்பொருள் அணி யாப்பு இவையின்
விழுத்தக ஒருவன் விளம்பிய உள்ளுறை
அப்பொழுது உரைப்பது ஆசு கவியே

— ,, 764

சொல்லும் பொருளும் சுவைபட நிறீஇச்
செல்வுழி தொடையும் விகற்பமும் செறீஇ
உள்ளத்து உள்ளே கொள்ளும் அமுது எனத்
தன்மை உவமை பின்வரு பெற்றியின்
உருவகம் முதல் உற்று ஓசை பொலியப்
பாடுதல் மதுர கவியெனப் படுமே

— ,, 765

சித்திர கவி மேல்செப்பியது ஆகும்

— ,, 766

வித்தார கவியை விளம்பும் காலை
அத்திறம் தொடர்நிலை அடிபல நடக்கும்
தனிப்பா என்னத் தான் இரண்டாகும்

— ,, 767

அவற்றுள்,
தொடர்நிலை விகற்பம் கடையில என்ப

— ,, 768

உரையென்பதனைப் பயிலும் நிலையால் நான்காகப் பகுத்துக் கண்டனர். முதல்வகை தனியாக நிற்றலின்றிப் பாட்டிலக்கியத் தினிடையே விரவுகின்றது; இரண்டாம் வகை பா வடிவு இன்றி வருகின்றது; பிற வாய்மொழி இலக்கிய நிலையினவாகத் தெரி கின்றன. உரையென்ற சொல் நிலையால், தலைமுறை தலைமுறையாக உரைக்கப்பட்டு வந்தவையும் (narrative) ஆசிரியன் அல்லது பாத்திரக் கூற்றாகப் பிற பாடலிடையே தனித்து இணைந்தவையும் நினைக்கப்படல் உண்டு. பொதுநிலையில் உரையாசிரியர் சிலப்பதி காரத்தையும் தகடூர் யாத்திரையையும் சான்றாகக் காட்டுகின்றனர். அவர்கள் எண்ணப்படி, சிலம்பின் உரைபெறு கட்டுரை, உரைப் பாட்டுமடை, கருப்பம் போன்ற பகுதிகளே உரை எனல் சாலும். இவற்றையே நால்வகையாகப் பகுத்துக் காண இயலும் எனத் துணிதற்கில்லை. பாட்டிடை வைத்த குறிப்பு, கவிஞன் அல்லது பாத்திரத்தின் கூற்றாகவும், பாவின்றெழுந்த கிளவி, வழக்குரை காதை, குன்றக் குரவைகளின் கருப்பமாகவும் உரைக்கலாம்போலும் இவையனைத்தும் உரைத்தலின் அடிப்படையிலேயே தோன்றியிருக் கின்றன.

பின் சூத்திரங்களை நோக்க, உரைத்தலே உரை என்பதனை உரையாசிரியர் வாயிலாகவும் உணர முடிகின்றது. செவிலி உரைத் தல், ஏனோர் உரைத்தல் எனும் இரு வகைகளுள் உரை நான்கையும் அடக்கலாம் என நூற்பாக்கள் பேசுகின்றன.

பாட்டிடை வைத்த குறிப்பினானும்
பாவின்று எழுந்த கிளவி யானும்
பொருள் மரபு இல்லாப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும் என்று
உரைவகை நடையே நான்கு என மொழிப

— தொ-செ 173

அதுவே தானும் ஓரிரு வகைத்தே

— ,, 174

ஒன்றே மற்றும் செவிலிக்கு உரித்தே
ஒன்றே யார்க்கும் வரைநிலை இன்றே

— ,, 175

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும் என்று
உரைவகை நடையே நான்கு என மொழிப

—இ. வி 903

நூல்பற்றித் தொல்காப்பியர் மரபியலில் கூறுவனவற்றையும் இணைத்து விரிவாக விளக்கம் அமைக்கின்றது இ. வி. அவையொழியப் பிறவனைத்தும் நூல் பற்றிய நிலையில், ஒன்றாகவே காணப்படுகின்றன. நூல் என்ற சொல் இலக்கண நூல்களைக் குறிக்கவே முன்பு பயன்பட்டது எனத் தெரிகின்றது. மொழியின் இலக்கணம் மட்டுமன்றி எல்லா இலக்கணங்களும் (Treatises) இவ்வாறு குறிக்கப்பட்டிருக்கலாம்.

அவற்றுள்,
நூல் எனப்படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள் நின்று அகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே

— தொ-செ 166

அதுவே தானும் ஈரிரு வகைத்தே

— ,, 167

ஒருபொருள் நுதலிய சூத்திரத்தானும்
இனமொழி கிளந்த ஓத்தினானும்
பொது மொழி கிளந்த படலத்தானும்
மூன்று உறுப்பு அடக்கிய பிண்டத்தானும் என்று
ஆங்கு அனைமரபின் இயலும் என்ப

— ,, 168

அவற்றுள், சூத்திரம் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே

— ,, 169

நேர்இன மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓர் இனப்பொருளை ஒருவழி வைப்பது
ஓத்து என மொழிப உயர்மொழிப் புலவர்

— ,, 170

ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலம் ஆகும்

— ,, 171

மூன்று உறுப்பு அடக்கிய தன்மைத்து ஆயின்
தோன்றும் மொழிப் புலவர் அது பிண்டம் என்ப

— ,, 172

நூல் எனப்படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி

உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
எண்ணான்கு உத்தி அண்ணுதல் உடைத்தாய்
ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்று உறுப்பு அடக்கிய பிண்டத் தானும்
தோன்றும் என்னச் சொல்லினர் புலவர்

—இ. வி 890

அவற்றுள்,
சூத்திரம் தானே
ஆடிநிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்து அமைப்பதுவே

— ,, 891

யாற்றது ஒழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்தின் வீழ்வு என்று
ஆவகை நான்கே கிடக்கை முறையே

— ,, 892

உரையெடுத்து அதன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடம்படக் காண்டிகை புணர்ப்பினும்
விளம்பலும் விலக்கலும் முறையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் பட்டுச்
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரை அகத்து அடக்கி
நுண்மையொடு புணர்ந்த வன்மைத்து ஆகித்
துளக்க லாகாத் துணைமை எய்தி
அளக்கலாகா அரும்பொருட்டு ஆதல்
சூத்திரத்து அழகுஎன யாத்தனர் புலவர்

— ,, 893

நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்துஎன மொழிப உயர்மொழிப் புலவர்

— ,, 894

ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலமாகும்

— ,, 895

மூன்று உறுப்பு அடக்கிய தன்மைத்து ஆயின்
தோன்றுமொழிப் புலவர் அது பிண்டம் என்ப

— ,, 896

ஈரைங் குற்றமும் நேரிதின் நாடில்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருள்இல மொழிதல் மயங்கக் கூறல்
கேட்டோர்க்கு இன்னு யாப்பிற்று ஆதல்
பழித்த மொழியான் இழுக்கம் கூறல்
தன்னுல் ஒருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி ஆகும்

— இ. வி 897

ஒத்த காட்சியின் உத்திவகை விரிப்பின்
நுதலியது அறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய் நிறுத்தல்
மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின்
மொழியாது அதனை முட்டின்று முடித்தல்
வாராததனுல் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வராதது உணர்த்தல்
முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோள் கூறல் முறை பிறழாமை
பிறன் உடம்பட்டது தான் உடம்படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற்று என்றல்
தன்குறி இடுதல் ஒருதலை இன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட்கு ஏற்பின் அல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்
பிறன்கோள் கூறல் அறியாது உடம்படல்
பொருள்இடையிடுதல் எதிர்பொருள் உணர்த்தல்
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்
தந்துபுணர்ந்து உரைத்தல் ஞாபகங்கூறல்
உய்த்துக்கொண்டு உணர்த்தலொடு மெய்ப்படநாடிச்
சொல்லிய அல்ல பிறஅவண் வரினும்
சொல்லிய வகையால் சுருங்க நாடி
மனத்தின் எண்ணும் ஆசறத் தெரிந்து கொண்டு
இனத்தில் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே

— ,, 898

முதல் வழி சார்பு என நூல் மூன்றாகும் — இ. வி 899

அவற்றுள்,
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்

— ,, 900

வழி எனப்படுவது அதன்வழித்து ஆகித்
தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனை மரபினவே

— ,, 901

இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவேறு உடையது புடை நூலாகும்

— ,, 902

வாய்மொழி என்பதே மந்திரம் என விளக்கப்படுகின்றது. 'மறை மொழி' என்ற தொடர் இதன் பண்பினை விளக்குகின்றது. ஒருவன் வாழவும் வீழவும் மொழி பயன்பட்டது இந்நிலையே போலும்.

நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

—தொ- செ 178

,, ,,

—இ. வி 906

பிசி இரு அடிப்படைகளில் தோன்றுகின்றது. ஒப்புமை கூற விடை தோன்றுவது ஒன்று. அத்தகைய தொடர்பின்றி வருவது மற்றொன்று. இன்று விடுகதை என்ற பெயரால் இது பொதுவாகக் குறிக்கப்படுகின்றது.

குறிப்பால் பொருளை உணர்த்துகின்ற, உணர்கின்ற ஆற்றலை வளர்ப்பதற்கு விடுகதை கூறி, அதன் விடையைக் கேட்பதுண்டு. இவ்வாறு வளர்ந்த ஒருவகை இலக்கிய வகையே பிசியாக உருப் பெற்றிருக்க வேண்டும்.

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்று இரு வகைத்தே பிசி வகை நிலையே

—தொ-செ 176

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்று இருவகைத்தே பிசி வரு நிலையே

—இ. வி 904

அங்கதம் என்பதே குறிப்புமொழி எனவும் விளக்கப்படுகின்றது எனக் கொள்ளலாம். வெண்பாப் பகுப்பின் கீழும் அங்கதம் பற்றிய விளக்கம் உண்டு.

நுணுகி நோக்கி உணர்வதை வளர்த்தன பழங்கால இலக்கியங்கள் (புறம்-95). அவற்றுள் ஒருவகை, அங்கதம் என்ற குறிப்பு மொழி. இன்றைய இலக்கியங்களில் அங்கதத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக அமைவது மருமக்கள் வழி மான்மியம் ஆகும்.

எழுத்தொடும் சொல்லொடும் புணராது ஆகிப்
பொருட் புறத்ததுவே குறிப்புமொழி என்ப

— தொ-செ 179

,, ,,

—இ. வி 907

முதுசொல் எனவும் முதுமொழி எனவும் குறிபெறும் யாப்பு வகை பழமொழி எனப் பரவலாக வழங்குகின்றது. காரண காரியத்தோடு தெளிவாகவும் சுருக்கமாகவும் கருத்தினை விளக்கும் நிலையை முதுமொழி என்றனர் போலும். பழமொழி நானூறு, தண்டலையார் சதகம் என்பன இவண் நினைவு கூரத் தக்கன.

நுண்மையும் சுருக்கமும் ஒளிஉடைமையும்
ஒண்மையும் என்று இவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப

—தொ-செ 771

நுண்மையும் சுருக்கமும் ஒளி உடைமையும்
மென்மையும் என்றுஇவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப

—இ. வி 905

தொல். பிசியோடு ஒத்தது எனக்கூறிப் 'பண்ணத்தி' என்ற ஒன்றையும் விளக்குகின்றார். பாட்டின் பொருண்மையும், இயலுந் திறனும் பொருந்தியது இது. வரையறை இன்மையால் வேறுபட்டது போலும்.

பாட்டிடைக் கலந்த பொருள ஆகிப்
பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே

—தொ-செ 180

அதுவே தானும் பிசியொடு மானும்

— ,, 181

## மரபு

பழக்கத்தின் காரணமாக வழக்கம் ஏற்பட்டு அதிலிருந்து மரபாக நிலைபெறுகின்றது. தொல். காலத்திற்கு முன்பு அமைந்த பழக்க வழக்கங்களால் ஏற்பட்ட மரபு இங்கே குறிப்பிடப்படுகின்றது. உலகிலுள்ள ஒவ்வொரு மொழியின் இலக்கணத்திற்கும் இலக்கியத்திற்கும் மரபு (Tradition) அமைவது இயல்பே.

மரபே தானும்
நாற்சொல் இயலான் யாப்பு வழிப்பட்டன

—தொ-செ 80

## தூக்கு†

தொல். ஓசைகளின் அமைப்பால் பாடல்கள் துணிக்கப் படு வதைத் தூக்கு எனப் பேசுகின்றார். பிற்காலத்தார், ஒவ்வொரு பாவிற்கும் உரிய ஓசை எனக் குறிப்பிடுவனவற்றையே தொல். இங்கு அமைக்கின்றது. இக்கருத்தினைத் தெளிவாக உணராத காரணத்தால், ††யாப்பெனினும் பாட்டெனினும் தூக்கெனினும் தொடர்பெனினும் செய்யுள் எனினும் ஒக்கும் என்று கூறிவிட்டார் கள். தொல். காலத்தில். யாப்பு வேறு; தூக்கு வேறு; பாட்டு வேறு; செய்யுள் வேறு. ஆனால் அவைகள் எவற்றைக் குறிக்கின்றன என்பதைத் தெளிவாக நம்மால் உணரமுடியாத காரணத்தால் எல்லாம் ஒன்றே என்ற முடிபுக்கு வந்துவிடுகின்றோம். இங்கு, ஓசை களால் துணிக்கப் படுவது தூக்கு என்று கொண்டு தெளிவுறலாம்.

அகவல் என்பது ஆசிரியம்மே

—தொ-செ 81

அதாஅன்று என்ப வெண்பா யாப்பே

— ,, 82

துள்ளல் ஓசை கலி எனமொழிப

— ,, 83

தூங்கல் ஓசை வஞ்சி ஆகும்

— ,, 84

மருட்பா ஏனை இருசார் அல்லது
தான் இது என்னும் தனிநிலை இன்றே

— ,, 85

அவ்வியல் அல்லது பாட்டு ஆங்குக் கிளவார்

— ,, 86

தூக்கு இயல் வகையே ஆங்கு எனமொழிப

— ,, 87

பாவுக்குரிய ஓசை பற்றியமையும் பல நூற்கருத்துக்களையும் இயைபு பற்றித் தூக்கு எனும் உறுப்பின் கீழ் நினைத்தல் பிழை யன்று எனத் தோன்றுகின்றது. தூக்கிற்குக் களனாகவும் பாவுக்கு அடிநாதமாகவும் அமையும் ஓசைகள் நான்கு என்பதும், அவை

---

† Tuukku — Journal of the dept. of Tamil, Uty. of Kerala, Vol.III-1972.
†† யாப்பருங்கலக் காரிகை – கழகம் - 1967, பக்கம் 3.
யாப்பருங்கல விருத்தி - Madras Oriental manuscripts Library Publication-1960, page 12.

அகவல், செப்பல், துள்ளல், தூங்கல் என்பன என்பதும் பொதுக் கருத்து. தொல். 'செப்பல்' எனப் பெயர் கூறிற்றிலது. அகவலை உணர்த்திப் பின் 'அது வல்லாதது' என எதிர்மறையில் மொழிந்து விடுகிறது. மருட்பாவுக்குத் தனி ஓசை நிலை கூறப்படவில்லை.

ஒவ்வொரு பாவின் ஓசையையும் மூன்றாகப் பகுத்துக் காணும் பண்பு யாப்பருங்கல விருத்தியுரையிலேயே ஏற்பட்டுவிட்டது. இவ் வுரையாசிரியர் கருத்தைச் சில வழக்கொழிந்த யாப்பு நூற் களின் மேற்கோள் நூற்பாக்கள் உறுதிப்படுத்துகின்றன. தொ. வி, மு. வீ போன்ற மிகப்பிற்கால யாப்புக்கள் இக்கருத்துக்களையடி யொற்றி நூற்பாக்களமைத்துள்ளன. செய்யுளியற்றியோர், ஓசைக்கு முதன்மை யளித்து நுண்மையோடு அதை ஆய்ந்து தெளிந்தமையை இப்பகுப்புக்கள் காட்டுகின்றன.

ஓசை பற்றி யமையும் இந்நூற்பாக்கள் பாவின் கீழ் தரப்படு கின்றன.*

ஓசை மயக்கம் பற்றிய கருத்தும் நினைக்கப்பட்டமை அருகி வரு கின்றது.

மயங்கி வருவனவும் வல்லோர் வகுப்ப
மயங்காமற் கொண்டுணரற் பாற்று

—அ. சா 62

## தொடை†

ஓசை இனிமையும் பொருள் அமைப்பும் ஒருசேரத் தந்து பாவுக்குச் சிறப்பூட்டும் உறுப்பு தொடை. பொதுநிலையில் முதற் றொடை, விகற்பத்தொடை என இருவகைப்படுத்துவர்.

தொல். முதல் பிற்கால இலக்கணிகள் வரை முதல் தொடையாக மோனை - எதுகை - முரண் - இயைபு - அளபெடை என ஐந்தினைக் கூறுவர். வீ. சோ மட்டும் மோனை, எதுகை என்ற இரண்டையுமே தருகின்றது.

---

*நூற்பா எண்கள் :
கா. பா — 46, 68, 82.
அவி — 82,73, 92, 100.
அ.சா — 59, 60, 61, 62, (65).
யா. க — 69,57, 78, 90.
காரிகை — 21.
சி.பா-செ 3,1, 4, 5.
இ. வி — 732,728, 736, 740.
தொ. வி — 223, 221, 227, 237.
மு. வீ - யா. செ 22, 30—33, 12—16,34, 44—47, 52, 55—58.

† Total—Journal of the Dept. of Tamil, Uty. of Kerala, Vol. IV, 1973.

விகற்பத் தொடையாக, இணை - பொழிப்பு - ஒரூஉ - கூழை-மேற்கதுவாய் - கீழ்க்கதுவாய் - முற்று, இவ் ஏழையும் கூறுவர். கலம், பாதம் என்பதனையும் சேர்த்துக் கூறும்.

இவைபோக, பொதுநிலையில் அந்தாதி, இரட்டை, செந் தொடை என்பனவற்றையும் தொடையோடு சேர்த்துக் கூறுவ துண்டு.தொல். செந்தொடையை விகற்பத் தொடையோடு சேர்த்து அமைப்பது சிந்திக்கத் தக்கது.

நிரல் நிறுத்தமைத்தலைப் பொருள் கோளிலும், (இ.தொ-சொல் பக்-367) அணியிலும் (தொல் - 1258, தண்டி - 67) கூறுவது வழக்கம்.தொல்.நிரல்நிறுத்தமைத்தலையும் செந்தொடை,இரட்டை யாப்புக்களோடு பேசுகின்றது. இதுவும் நினைத்தற்குரியது.

தொடைகளைப் பற்றிய வளர்ச்சி, மாற்றம் இவைகளை அட்ட வணை விளக்கும்.

பலதொடை விரவிவருநிலைபற்றித் தனியாக நினைக்கின்றது அவிநயம் போன்ற சில.

மோனை எதுகை முரணே இயைபு என
நால்நெறி மரபின தொடைவகை என்ப

—தொ-செ 88

அளபெடை தலைப்பெய ஐந்தும் ஆகும்

— ,, 89

பொழிப்பும் ஒரூஉம் செந்தொடை மரபும்
அமைத்தனர் தெரியின் அவையுமார் உளவே

— ,, 90

நிரனிறுத்தமைத்தலும் இரட்டையாப்பும்
மொழிந்தவற்று இயலான் முற்றும் என்ப

— ,, 91

தொடை எனப்படுவது அடைவகை தெரியின்
எழுத்தொடு சொற்பொருள் என்றிவை மூன்றின்
நிரல்பட வந்த நெறிமைத் தாகி
அடியொடு அடியிடை யாப்புற நிற்கும்
முடிவினது என்ப முழுதுணர்ந்தோரே

—கா. பா 32

முதலெழுத்து ஒன்றி முடிவது மோனை;
ஏனையது ஒன்றின் எதுகைத்தொடையே;
உறுப்பின் ஒன்றின் விகற்பமும் அப்பால்
நெறிப்பட வந்து நேரப் படுமே

— ,, 33

யரலழ என்னும் ஈரிரண்டு ஒற்றும்
வரன்முறை பிறழ்ந்துவந்திடை உயிர்ப்பினஃது

ஆசிடை எதுகை என்று அறிந்தனர் கொளலே

— கா. பா 34

மொழியினும் பொருளினும் முரணத் தொடுப்பின்
இரணத் தொடையென்று எய்தும் பெயரே

— ,, 35

இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே

— ,, 36

சொல்லிசை அளபெழ நிற்பதை அளபெடை

— ,, 37

இரண்டாம் சீர்வரின் இணையெனப் படுமே

— ,, 38

ஒருசீர் இடைவிடிற் பொழிப்பு; இருசீர்ஒரூஉ

— ,, 39

முடிவதன் முதல்அயல் கதுவாய் கீழ்மேல்

— ,, 40

மூன்றுவரிற் கூழை; நான்குவரின் முற்றே

— ,, 41

ஒருசீர் அடிமுழுதாயின் இரட்டை

— ,, 42

அசையினும் சீரினும் அடிதொறும் இறுதியை
முந்தா இசைப்பின் அஃது அந்தாதித் தொடையே

— ,, 43

செம்பகை அல்லா மரபினதாம் தம்முள்
ஒன்று நிலேயது செந்தொடை யாகும்

— ,, 44

தொடை அடியுள் பல வந்தால் எழுவாய்
உடையதனுல் பெயர் ஒட்டப் படுமே

— ,, 45

மறுதலே உரைப்பினும் பகைத்தொடை ஆகும்

— அவி 69

அளபெழின் மாறல தொடுப்பது அளபெடை

— ,, 68

ஒரூஉத் தொடை
இருசீர் இடைவிடில் என்மனுர் புலவர்

— ,, 67

கடையயல் முதலயல் கதுவாய் கீழ்மேல்

— ,, 66

ஒருசீர் அடிமுழுதாயின் இரட்டை

— ,, 71

மாறலது ஒவ்வா மரபின செந்தொடை — ,, 70

அகரமோடு ஆகாரம் ஐகாரம் ஔகாரம்
இகரமோடு ஈகாரம் எஏ-உகரமோடு

ஊகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
ஆகாத அல்ல அனு

—அ. சா 17

எழுத்தென்று அதிகாரம் ஈண்டியலா நிற்ப
எழுத்தென்று மீண்டும் இயம்பிற்று இழுக்காமை
எல்லா எழுத்தும் தொடைக்காம்; அடிக்கு எழுத்து
அல்லாதனவும் என்றற்கு

— ,, 53

எழுத்தியல் தொடைகளின் இடைக்கண் மாறுகோள்
மொழிப் பொருள் தொடைமுறை பிறழ வைத்ததோர்
இழுக்கியல்பிலா நிரல் நிறையும் எட்டுளன
ஒழுக்கினர் உண்மையை உணர்த்தல் வேண்டி

— ,, 54

தொடையே அடி இரண்டு இயையத் தோன்றும்

—யா. க 33

மோனை எதுகை முரண் இயைபு அளபெடை
பாதம் இணையே பொழிப்பொடு ஒரூஉத் தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணுமார் அவையே — ,, 34

செந்தொடை இரட்டையொடு அந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்குமன் பெயரே

— ,, 49

எழுவாய் எழுத்து ஒன்றின் மோனை; இறுதி இயைபு; இரண்டாம்
வழுவா எழுத்து ஒன்றின் மாதே எதுகை; மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்; அடிதோறும் மொழிமுதற்கண்
அழியாது அளபெடுத்து ஒன்றுவதாகும் அளபெடையே

— யா. கா 16

அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி; அடி முழுதும்
வந்த மொழியே வருவது இரட்டை வரன் முறையான்
முந்திய மோனை முதலா முழுதும் ஒவ்வாது விட்டால்
செந்தொடை நாமம் பெறும் நறு மென்குழல் தேமொழியே

— ,, 17

இருசீர் மிசை இணையாகும்; பொழிப்பு இடையிட்டு; ஒரூஉவாம்
இருசீர் இடையிட்டது; ஈறிலி கூழை; முதலிறுவாய்
வருசீர் அயலில மேல்கீழ் வகுத்தமை தீர் கதுவாய்;
வருசீர் முழுவதும் ஒன்றின் முற்றும் என்ப மற்றவையே

— ,, 19

எழுத்து அசை சீர் அடி அந்தம் ஆதி
யாம் அந்தாதித் தொடையே; அடிமுழுதும் ஒருசொல்

புகல்வது இரட்டைத் தொடையாம்; மோனை முதலாகப்
புகன்ற தொடை புகலாது புகல்வது செந்தொடையே

—சி. பா-உ 5

தொடை எழுவாய் எழுத்தொன்றின் மோனை; இயைபு இறுதி;
சொல் இரண்டாம் எழுத்தொன்றின் எதுகை; பொருள், மொழிகள்
உடன் முரணின் முரண்; அளபு வருதல் அடியளவே;
உயர் இருசீர் இணைதல் இணை; முதலொடு மூன்றும் சீர்
அடை பொழிப்பு; நடு இருசீர் அகறல் ஒரூஉ; அடியின்
அடர்தரு முச்சீர்க் கூழை; முதலயற்சீர் நீங்கல்
கெடலரும் மேற்கதுவாயே; ஈற்றயற்சீர் நீங்கல்
கீழ்க்கதுவாய்; சீர் முழுதும் கிடைத்திடின் முற்றுமே

— ,, 6

அ ஆ ஐ ஔ
நயங் கொள்ளும் இஈஎ ஏஉஊ ஒஓ
ஞணனநம வசதவனு மோனை மெய்யு மோனை
இயங்கும் இன நெடில் வருக்கம் வரில்எதுகை மோனை
யரலழ ஒற்று ஆசிடையிட்டு உயிரும் இரண்டடியும்
தயங்கிய மூன்றும் எழுத்தும் எதுகை கடைஇணை பின்
சார்கூழை இடைப்புணரும் முரண் தொடைக்குச் சாற்றே

—சி. பா-ஓ 2

சாற்று எல்லை யில்லை நெடில் அடி ஆதி மோனை
சார் எழுவாய் எழுத்தும் அலாது அநுமோனை விதியால்
தேற்று எதுகை மோனையுடன் வரின் சிறப்பு எத்தொடையும்
சீர் இடைஈறு அநுவும் வரும்

— ,, 3

மோனை எதுகை முரண் இயைபு அளபெடை
ஆன அவ்வைந்தும் அவற்றோடு ஒத்து உறாஉம்
பாதம் இணையே பொழிப்போடு ஒரூஉத் தொடை
கூழை கதுவாய் மேலதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணும் ஐயேழும்
தொடையும் அத்தொடையின் விகற்பமும் ஆகும்

—இ. வி 722

செந்தொடை இரட்டையோடு அந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்கவும் பெறுமே

— ,, 724

தொடை என்பது ஈரடி தொடுப்பதாம்; அவை
அடை முதன் மோனை; அந்தம் இயைபே;
இடையே எதுகை; எதிர்மொழி முரண்; அள
பெடையே அளபாம் என ஐவகையே

—தொ. வி 212

மோனை முதல்அடி முதல்வரின் அடியே;
இணைவது இணையே; இடைவிடல் பொழிப்பே;
இறுவது ஒரூஉ; ஈறுஒன்று ஒழிவது
கூழை; முதல் அயல் குன்றல் மேற்கதுவாய்;
ஈற்றயல் ஒன்று ஒன்றாது எனில் கீழ்க்கதுவாய்;
எல்லாம் ஒன்றுவது எனின் முற்று என்ப

—தொ. வி 216

அந்தாதி அடிக்கடை ஆதி ஆதல்;
இரட்டை முழுதோர் இறை அடுக்கிய அடி;
செந்தொடை ஒன்றும் சேரா அடியே

— ,, 217

அடிதொறும் முதல் எழுத்து அணைந்துவரல் அடி
மோனை என்மனார் முழுது உணர்ந்தோரே

—மு. வீ-யா.உ 24

இறுதி அசை எழுத்தேனும் ஒன்றுவது
அடி இயைபாம் என அறையப் படுமே

— ,, 25

இரண்டாம் எழுத்து ஒன்றுவது எதுகையே

— ,, 26

முரணத் தொடுப்பது முரண்தொடை யாகும்

— ,, 27

அளபெடுத்து ஒன்றுவது அளபெடைத் தொடையே

— ,, 28

அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி

— ,, 29

ஓரடி முழுதும் ஒருசொல்லே வரத்
தொடுப்பது இரட்டைத் தொடை எனப்படுமே

— ,, 30

செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்

— ,, 31

இணை, இருசீர் மிசை எய்துவது ஆகும்

— ,, 32

பொழிப்பு, இடையிட்டுப் போதுவது என்ப

— ,, 33

இருசீர் இடையிட்டு ஆதியும் அந்தமும்
ஒன்றின் ஒரூஉ என்று உரைத்திசினோரே

— ,, 34

இறுதிச் சீர்ஒழித்து எல்லாம் தொடுப்பது
கூழை என்மனார் குறிப்பு உணர்ந்தோரே

— ,, 35

முதலயல் சீர் ஒழித்து ஏனைய சீரெல்லாம்
இயையத் தொடுப்பது மேற்கதுவாயே
—மு. வீ-யா. உ 36

ஈற்றயல் சீர் ஒழித்து எல்லாம் தொடுப்பது
கீழ்க்கதுவாயின் கிழமையது ஆகும்
— ,, 37

முழுவதும் இயைவது முற்று எனப்படுமே
—,, 38

எளிதின் முதல் எழுத்து ஒன்றல் மோனை; ஈற்று உறும்சொல்
எழுத்து இசைத்தல் இயைபு; இரண்டாம் எழுத்து
ஒன்றல் எதுகை;
வருபொருட்சொல் முரணின் முரண்; அளபெடுக்கில் அளபாம்
மற்று இரட்டைத்தொடை ஒருசொல் அடிமுழுதும்
வரலே
— சுவாமி 154

முழுது அடிசீர் அகை எழுத்தின் அந்தம் ஆதியதாய்
மொழிதல் அந்தாதித் தொடையாம், இவைமுழுதும்
இலவேற்
பழுதறு செந்தொடை, இருசீர் இணைதல் இணை, முச்சீர்
பற்றுவது கூழை, நாற்சீர் முற்று, முன்பின்
எழும் ஒருஉப், பொழிப்பு ஒன்றுமூன்று உறின், முன்னயல் சீர்
இலது மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் பின்னயற்சீர்
அழிவுறலாம், நெடிலின் மூன்றெழுத்து உயிர் விட்டிசை ஈர்
அடி வருக்கம் அனுவொடு ஐம்பான் ஒருதொடை
என்றருளே
— சுவாமி 155

## மோனை

செய்யுள் அடியில் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது மோனை. தொல்காப்பியம், மோனையும் எதுகையும் கிளையெழுத்துக்களாலும் ஒன்றி வரும் எனப் பேசுகின்றது. பின் நூற்கள் எழுத்துக்களின் பிறப்பை வைத்தும், ஒலிப்பை வைத்தும் கிளையெழுத்துக்களை விளக்குகின்றன. இன்னின்ன எழுத்துக்கு இன்னின்ன எழுத்து மோனையாக வரும் எனத் தொல்காப்பியம் சுட்டவில்லை. பின்பு வந்த இலக்கண நூற்கள் அவற்றைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் தருகின்றன.

அடிதொறும் தலையெழுத்து ஒப்பது மோனை
— தொ-செ 92

ஆதி எழுத்தே அடிதொறும் வரின் அடி
மோனைத் தொடையென மொழிமனார் புலவர்

— யா. க 35

எழுவாய் எழுத்து ஒன்றின் மோனை

— யா. கா 16:1

முன் இரண்டு ஆவியும் ஈறும் ஐயும் மோனை; முன்னவற்றின்
பின் இரண்டு ஆவியும் ஏழும் எட்டும் மோனை; ஆறும் ஐந்தும்
பன்னிரண்டாம் உயிர் முன் இரண்டும் மோனை; பண்ணும்
தச்சப்

பின் இரண்டாம் நஞ மவ்வும் வவ்வும் மோனை பெண்
அணங்கே

— வீ. சோ 110

முதல் எழுத்து ஒன்றின் மோனையும்

— இ. வி 723:1

அடை முதல் மோனை...

— தொ. வி 212:2

மோனைக்கு இனமே அஆஐஔவும்
இஈ எஏவும் உஊஒஓவும்
சதவும் ஞநவும் மவவும் எனவே

— ,, 213

அடிதொறும் முதல்எழுத்து அணைந்துவரல் அடி
மோனை என்மனார் முழுதுணர்ந்தோரே

— மூ. வீ-யா 24

## எதுகை

செய்யுளில், இரண்டாவது எழுத்து ஒன்றி வருவது எதுகை. தொல்காப்பியம் கூறும் கிளையெழுத்துக்கள் விரிக்கப்படுகின்றன. எதுகையின் வகைகள் வளர்ந்துள்ளமையை பின்னெழுந்த இலக்கண நூற்பாக்கள் வெளிப்படுத்துகின்றன.

அஃது ஒழித்து ஒன்றின் எதுகை ஆகும்

— தொ-செ 93

ஆயிரு தொடைக்கும் கிளையெழுத்து உரிய

— ,, 94

இரண்டாம் எழுத்து ஒன்று இயைவதே எதுகை

— யா. க 36

வருக்க நெடில் இனம் வரையார் ஆண்டே

— ,, 37

இரண்டாம்
வழுவா எழுத்து ஒன்றின் மாதே எதுகை

— யா. கா 16:1,2

வருக்க நெடில் இனம் வந்தால் எதுகையும் மோனையும் என்று
ஒருக்கப் பெயரால் உரைக்கப்படும்; உயிர் ஆசுஇடையிட்டு
இருக்கும் ஒருசார், இரண்டடி, மூன்றும் எழுத்தும் ஒன்றி
நிரக்கும் எதுகை என்றலும் சிறப்பில நேரிழையே

— யா. கா 41

ஏன்று முதல் அளவொத்து இரண்டாம் எழுத்து ஒன்றிவரின்
சான்றோர் அதனை எதுகை என்று ஓதுவர்; தன்மை குன்று
மூன்றுவது ஒன்றல், இரண்டடி ஒன்றல், முழுதும் ஒன்றல்
ஆன்று இனம், உயிர், ஆசுஇடையாய் வரும் ஆங்கு அதுவே

— வீ. சோ 111

மோனை
இரண்டாம் எழுத்தோடு இயைபின் எதுகையும்...

— இ. வி 723:1,2

வருக்கமும் நெடிலும் இனமும் வரினும்
திறப்படும் எதுகையும் மோனையும் ஆதலும்,
உயிரும், யரலழ ஆசும் இடையிட்டு,
இரண்டடி, மூன்றும் எழுத்து ஒன்றி வரினும்
எதுகை ஆதலும்...

— ,, 748:1-5

இடையே எதுகை...

— தொ. வி 212:3

எதுகை என்ப இயைபன மொழிகண்
முதலெழுத்து அளவொத்து முதல் ஒழித்து ஒன்றுதல்
மூன்றும் எழுத்து ஒன்றல், ஆசு, இனம், தலையாகு,
இடை, கடை ஆறும் எதுகை வகையே

— ,, 214

தலையாகு எதுகை தலைச்சீர் முழுதுறல்
இடை கடை அவ்வவ் எழுத்து ஒன்றுவதே

— ,, 215

இரண்டாம் எழுத்து ஒன்றுவது எதுகையே

— மு. வீ-யா. உ 26

வருக்கம் நெடில் இனம் வந்தால் எதுகையும்
மோனையும் ஆம் என மொழியப்படுமே

— மு. வீ-யா. ஒ 17

ய ர ல ழ இடை உறின் ஆசு எனப்படுமே

— ,, 18

## முரண்

ஒற்றுமையில் மட்டுமன்றி வேற்றுமையிலும் அழகிருப்பதை முரண்தொடை காட்டுகின்றது. சொல் பொருள் நிலையில் இரண்டாக அமைவது உரையாசிரியரால் ஐந்தாக வகுக்கப்படுகின்றது.

மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே

— தொ-செ 95

மறுதலை உரைப்பினும் பகைத்தொடை ஆகும்

— அவி 69

தொ-செ 95... — யா. க 38

கடையிணை, பின்முரண் இடைப்புணர் முரண்என
இவையும் கூறுப ஒரு சாரோரே

— ,, 39

மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்...

— யா. கா 16: 2, 3

மற்று ஒருசார்
கருதின், கடையே கடையிணை பின் கடைக்கூழையும் என்று
இரணத் தொடைக்கு மொழிவர் இடைப்புணர் என்பதுவே

— யா. கா 40:2-4

மொழியினும் பொருளினும் முரணின் முரணும்...

— இ. வி 723:3

இரணத் தொடைக்கும்
கடையே கடையிணை பின் கடைக்கூழை
இடைப்புணர்பு இசைதலும் இசையும் என்ப

— ,, 748

...எதிர்மொழி முரண்...

— தொ. வி 212:3

முரணத் தொடுப்பது முரண்தொடை ஆகும்

— மு. வீ-யா: உ 27

## இயைபு

செய்யுள் அடிகளின், இறுதி எழுத்தோ அசையோ சீரோ ஒன்றி வருவது இயைபு எனக் கூறப்படுகின்றது. அடிகளின் ஈறொன்றலின் இவ் விரிநிலை முத்து வீரியத்திலேயே விளக்கப் பெறுகின்றது.

இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே

— தொ-செ 96

இறுவாய் ஒப்பின் அஃது இயைபு எனப்படுமே

— யா. க 40

...இறுதி இயைபு......

— யா. கா 16: 1

இறுவாய் ஒப்பின் இயைபுத் தொடையும்

— இ. வி 723: 4

...அந்தம் இயைபே

— தொ. வி 212; 2

இறுதி அசை எழுத்தேனும் ஒன்றுவது
அடி இயைபாம் என அறையப்படுமே

— மு. வீ-யா. உ 25

## அளபெடை - அளபு

இசை மிகும்போது அளபெடை தோன்றுகிறது*

ஒரு தனி எழுத்துப்பகுப்பை அடிப்படையாகக் கொண்ட தொடை இது. அளபெடையின் ஒலி நீட்சி ஒரு செய்யுளின் அடி, சீர்களில் வருகின்ற அமைப்பு நிலையே (Pattern) இங்குக் கருதப்படுகின்றது.

அளபு எழின் அவையே அளபெடைத் தொடையே

—தொ- செ 97

அளபெழின் மாறல தொடுப்பது அளபெடை

—அவி 68

அளபெடை ஒன்றுவது அளபெடைத் தொடையே

—யா. க 41

அடிதோறும் மொழி முதற்கண்
அழியாது அளபெடுத்து ஒன்றுவது ஆகும் அளபெடையே

— யா. கா 16: 3, 4

அளபெடுத்து ஒன்றின் அடி அளபெடையும்

—இ. வி 723: 5

அள
பெடையே அளபாம் ... ...

—தொ. வி 212: 4,5

அளபெடுத்து ஒன்றுவது அளபெடைத் தொடையே

—மு. வீ-யா. உ 28

விகற்பத் தொடைகளில் பொழிப்பு, ஒரூஉ என்பனவே தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளன. அவற்றையும் எதுகைக்கு மட்டுமே கொள்ளப்படுநிலை அங்கு உண்டு.

இயைபுத் தொடையின் விகற்பங்கள், ஈற்றுச்சீர் முதற்சீராக அமைத்துப் பின்னிருந்து முன்னாகக் கொள்ளப்படுகின்றது.

## இணை

முதலிரு சீரில் மோனை முதலியன வருவது இது.

இருசீர் மிசை வரத் தொடுப்பது இணையே

—யா. க 42

*உயிரளபெடை—நன் 91; ஒற்றளபெடை—நன் 92; இ. தொ-எழுத்து-பக். —30-34

இருசீர் மிசை இணையாகும்......

—யா. கா 19: 1

இருசீர் மிசை வரத் தொடுப்பின் இணையும்

—இ. வி 723: 6

இணைவது இணையே...

—தொ. வி 216: 2

இணை இருசீர் மிசை எய்துவது ஆகும்

—மு. வீ-யா. உ 32

## பொழிப்பு

ஒன்று, மூன்றும் சீர்களில் தொடை வரல் பொழிப்பு.

ஒருசீர் இடையிட்டு எதுகை ஆயின்
பொழிப்பு என மொழிதல் புலவர் ஆறே

—தொ- செ 98

முதலொடு மூன்றும் சீர்த் தொடை பொழிப்பே

—யா. க 43

பொழிப்பு இடையிட்டு...

— யா. கா 19:1

முதலொடு மூன்றும் சீர்த்தொடை பொழிப்பும்

—இ. வி 723: 7

இடைவிடல் பொழிப்பே......

—தொ. வி 216: 2

பொழிப்பு இடையிட்டுப் போதுவது என்ப

—மு. வீ-யா. உ 33

## ஒரூஉ

இருசீர்கள் இடையிட்டு, ஒன்றும் நான்காம் சீர்களில் வரும் தொடை ஒரூஉ எனப்படும்.

இருசீர் இடையிடின் ஒரூஉ என மொழிப

—தொ-செ 99

ஒரூஉத் தொடை
இருசீர் இடைவிடில் என்மனார் புலவர்

—அவி 67

சீர் இரண்டு இடைவிடத் தொடுப்பது ஒரூஉத் தொடை'

— யா. க 44

ஒரூஉவாம்
இருசீர் இடையிட்டது...

—யா. கா 19: 1, 2

சீர் இரண்டு இடைவிடத் தொடுப்பின் ஒரூஉவும்...

—இ. வி 723: 8

இறுவது ஒரூஉ...

—தொ. வி 216: 3

இருசீர் இடையிட்டு ஆதியும் அந்தமும்
ஒன்றின் ஒரூஉ என்று உரைத்திசினோரே

—மு. வீ-யா. உ 34

## கூழை

சீரிடைவிடாது, முதல் மூன்று சீரும் தொடை பெறுநிலையே கூழை.

மூவொரு சீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனார் குறி உணர்ந்தோரே

—யா. க 45

...ஈறு இலி கூழை...

—யா. கா 19: 2

மூவொரு சீரும் முதல் வரத் தொடுப்பின்
கூழையும்...

—இ. வி 723: 9, 10

ஈறு ஒன்று ஒழிவது கூழை...

—தொ. வி 216: 3, 4

இறுதிச் சீர் ஒழித்து எல்லாம் தொடுப்பது
கூழை என்மனார் குறிப்பு உணர்ந்தோரே

— மு. வீ-யா. உ 35

## மேற்கதுவாய்

இரண்டாம் சீரொழியப் பிறவற்றில் தொடை பொருந்தும் போது இப்பெயர் பெறுகின்றது.

...முதலயல் கதுவாய்...மேல்

—அவி 66

முதலயல் சீர்ஒழித்து அல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கதுவாயே

— யா. க 46

முதல்......
வருசீர் அயல்இல மேல்...வகுத்தமை தீர் கதுவாய்

— யா. கா 16: 2, 3

முதல்அயல் சீர் ஒழித்து அல்லன
மேல்வரத் தொடுப்பின் மேற்கதுவாயும்

—இ. வி 723: 10, 11

முதல் அயல் குன்றல் மேற்கதுவாய்

—தொ. வி 216: 4

முதல்அயல் சீர் ஒழித்து ஏனையசீர் எலாம்
இயைய‌த் தொடுப்பது மேற்கதுவாயே

—மு. வீ-யா. உ 36

## கீழ்க்கதுவாய்

நாற்சீரடியில், மூன்றும் சீரொழியப் பிற தொடை பெறுவது கீழ்க்கதுவாய்.

கடையயல்.. கதுவாய் கீழ்... — அவி 66

ஈற்றயல் சீர் ஒழித்து எல்லாம் தொடுப்பது
கீழ்க் கதுவாயின் கிழமையது ஆகும்
—யா. க 47

இறுவாய்
வருசீர் அயலில... கீழ் வகுத்தமை தீர்கதுவாய்
— யா. கா 19: 2, 3

ஈற்றயல் சீர் ஒழித்து எல்லாம் தொடுப்பின்
கீழ்க்கதுவாயும்...
– இ. வி 723: 12, 13

ஈற்றயல் ஒன்று ஒன்றுது எனில் கீழ்க்கதுவாய்
—தொ. வி 216: 5

யா. க 47... —மு. வீ-யா. உ 37

## முற்று

நாற்சீரடி முழுமையாகத் தொடைச் செவ்வி பெறும் நிலையே முற்று. முரணில் இந்நிலை பொருந்துதல் எளிதன்று.

சீர்தொறும் தொடுப்பது முற்று எனப்படுமே
—யா. க 48

வருசீர் முழுவதும் ஒன்றின் முற்றும் என்ப
— யா. கா 19: 4

இளந்த ஈரிரண்டு
சீர்தொறும் தொடுப்பின் முற்றும் ஆகும்
— இ. வி 723: 14

எல்லாம் ஒன்றுவது எனின் முற்று என்ப
—தொ. வி 216:6

முழுவதும் இயைவது முற்று எனப்படுமே
—மு. வீ-யா. உ 38

## செந்தொடை

முதற்றொடையிலோ விகற்பத் தொடையிலோ அடங்காத பாடல்களைப் பெயர் சுட்டுவான் வேண்டிச் செந்தொடை என அழைத்தார்கள் போலும்.

சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்
சொல்லியல் புலவர் அது செந்தொடை என்ப
—தொ- செ 100

மாறல தொவ்வா மரபின செந்தொடை
—அவி 70

செந்தொடை ஒவ்வாத் திறத்தன ஆகும்
—யா. க 50

முந்திய மோனை முதலா முழுதும் ஒவ்வாது விட்டால்
செந்தொடை நாமம் பெறும் நறு மென்குழல் தேமொழியே
—யா. கா 17

சொல்லிய தொடையொடு வேறுபட்டு இயலின்
சொல்லி நிறுத்த செந்தொடையும்
—இ. வி 725: 1, 2

செந்தொடை தொடையொன்றும் சேரா அடியே
—தொ. வி 217:3

யா. க 50 ... —மு. வீ-யா. உ 31

## இரட்டை

தொல்.லின் இரட்டையாப்பும் பிற்கால இரட்டைத் தொடையும் ஒன்று எனக் கருதுவர். சொல்லோ தொடரோ இருமுறை வரு நிலையே இரட்டை யாப்பு.* ஒரு சொல் நான்முறை பயிலல் இரட்டைத் தொடை.

ஒரு சீர் அடிமுழுதாயின் இரட்டை
—அவி 71

இரட்டை அடிமுழுதும் ஒருசீர் இயற்றே
—யா. க 51

அடிமுழுதும்
வந்த மொழியே வருவது இரட்டை வரன்முறையான்
—யா. கா 17: 1, 2

நேரடியில்
முழுவதும் ஒருசொல் வரின் அஃது இரட்டையும்
—இ. வி 725: 2, 3

இரட்டை முழுது ஓர் இறை அடுக்கிய அடி
—தொ. வி 217: 2

ஓரடி முழுதும் ஒருசொல்லே வரத்
தொடுப்பது இரட்டைத் தொடை எனப்படுமே
—மு. வீ-யா. உ 30

## அந்தாதி

பாடல் அல்லது பாடலடியின் ஈற்றுப் பகுதி, தொடர்ந்து வரும் பாடல் அல்லது அடியின் முதலாதல் இது.

---

*இரட்டை யாப்பு - ஆய்வுக்கோவை - அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மாநாடு—ஏழாம் கருத்தரங்கு-1975

ஈறு முதலாத் தொடுப்பது அந்தாதி என்று
ஓதினர் மாதோ உணர்ந்திசினோரே

—யா. க 52

அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி

—யா. கா 17:1

அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின்
அந்தாதித் தொடையும் என்று அறிதல் வேண்டும்

—இ. வி 725: 4-6

அந்தாதி, அடிக்கடை ஆதி ஆதல்

—தொ. வி 217: 1

யா. கா 17: 1 ... —மு. வீ-யா. உ 29

## தொடைப் புறனடை

நுண்மாண் நுழைபுலத்தோடு நுணுகிப் பார்க்கும் எண்ணம் தொல். காலத்து இருந்ததைத் தொடைவகை பதின்மூவாயிரத்து எழுநூற்று எட்டு என்று கூறுவதிலிருந்து உணருகிறோம்.* தொடை எண்ணிக்கை பற்றியும் தொடை மயக்கம் குறித்தும் கருத்துக்கள் உள.

மெய் பெறு மரபிற் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத்து ஆறைஞ் ஞூற்றொடு
தொண்டு தலையிட்ட பத்துக் குறை எழுநூற்று
ஒன்பஃது என்ப உணர்ந்திசினோரே

—தொ-செ 101

தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும்

— ,, 102

தொடைவகை நிலையே ஆங்கு என மொழிப

— ,, 103

மயங்கிய தொடை முதல் வந்ததன் பெயரால்
இயங்கினும் தளைவகை இன்னணம் ஆகும்

—அவி 72

தொடை பலதொடுப்பினும் தளைபல விரவினும்
முதல் வந்ததனால் மொழிந்திசிற் பெயரே

—யா. க 53

தொடைகள் பல தளைகள்
தோற்றின் முதல் வந்த தொடையால் தளையால் பெயராம்

—சி. பா-ஒ 3

---

* இளம்பூரணர் 13699 (தொடைவகைகள்) என்று இசைக்கின்றார். பேராசிரியர் 13708 எனப் பேசுகின்றார். நச்சினார்க்கினியர் 19291 என நவில்கின்றார்.

அடி இணை பொழிப்பு ஒரூஉக் கூழை மேல்கீழ்க்
கதுவாய் முற்று என எட்டொடு, மோனை
இயைபே எதுகை முரணே அளபே
என ஐந்து உறழ எண்ணைந்து ஆகி
அடியந்தாதி, இரட்டைச் செந்தொடை
என இம்மூன்றும் இயையத் தொடையும்
விகற்பமும் எண்ணைந்து ஒருமூன்று என்ப

— தொ. வி 218

உதாரண முதனினைப்புக் காரிகை

மாவும் புள் மோனை; இயைபு இன்னகை; வடியேர் எதுகைக்கு
ஏவின் முரணும் இருள்பரந்து; ஈண்டு அளபு ஆஅவளிய;
ஓவில் அந்தாதி உலகுடனும்; ஒக்குமே யிரட்டை;
பாவரும் செந்தொடை பூத்த என்றாகும் பணிமொழியே

—யா. கா 18

மோனை விகற்பம் அணிமலர்; மொய்த்துடனும் இயைபிற்கு;
ஏனை எதுகைக்கு இனம் பொன்னினன்ன; இனி முரணிற்கு
ஆன விகற்பமும் சீரடிப்பேர் அது; அளபெடையின்
தான விகற்பமும் தாஅட்டாஅமரை என்ப தாழ் குழலே

— ,, 20

## சான்று

அடியில் வரும் தொடைகள்

1. மோனை

அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்

—குறள் 427

2. எதுகை

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது

— ,, 7

3. முரண் (1) பொருள்

இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது

— ,, 99

(2) மொழி –(சொல்)

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்

— ,, 637

4. இயைபு
மலையிடைப்பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா வமுதே யென்கோ

—சிலம்பு 2:77,78

5 அளபெடை
கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று

—குறள் 585

மோனை

1. இணை
குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி...

— ,, 29

2. பொழிப்பு
பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம்...

— ,, 6

3. ஒரூஉ
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து...

— ,, 28

4. கூழை
அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்...

— ,, 175

5. மேற்கதுவாய்
விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து...

— ,, 13

6. கீழ்க்கதுவாய்
இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்...

— ,, 5

7. முற்று
பெற்றார் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்பு...

— ,, 58

எதுகை

1. இணை
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்...

— ,, 1101

2. பொழிப்பு
அல்லல் அருள்வாழ்வார்க் கில்லை வளிவழங்கு...

— ,, 245

3. ஒரூஉ
ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து...

— ,, 21

4. கூழை

நன்னிற மென்முலை மின்னிடை வருந்த
—கலம். உரை-பக் 53

5. மேற்கதுவாய்

புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
—குறள் 719

6. கீழ்க்கதுவாய்

தன்னுயிர்க் கின்னுமை தானறிவான் என்கொலோ
— ,, 318

7. முற்று

நோக்கினுள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
— ,, 1082

முரண்

1. இணை

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்
— ,, 395

2. பொழிப்பு

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு
— ,, 86

3. ஒரூஉ

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்
— ,, 121

4. கூழை

உதுக்காண் அதுவே யிதுவென மொழிகோ...
—குறு 191: 1

5. மேற்கதுவாய்

வெள்வளைத் தோளும் சேயரிக் கருங்கணும்...
—காரிகை உரை

கருங்கட் கருணைச் செந்நெல் வெண்சோறு ..
— நற் 367: 3

6. கீழ்க்கதுவாய்

காலையும் பகலும் கையறு மாலையும்...
—குறு 32:1

7. முற்று

இன்றே சென்று வருவது நாளை
—குறு 189:1

தொடை

| | தொல் | | கலம் | | காரிகை | வீ.சோ | சி.பா | இ.வி | | தொ.வி | மு.வீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மோனை | 1 | | 1 | | 1 | 1 | 4 | 11 | | 1 | 1 |
| எதுகை | 2 | | 2 | | 3 | 2 | 6 | 2 | | 3 | 3 |
| முரண் | 3 | | 3 | | 4 | — | 7 | 3 | | 4 | 4 |
| இயைபு | 4 | | 4 | | 2 | — | 5 | 4 | | 2 | 2 |
| அளபெடை | 5 | | 5 | | 5 | — | 8 | 5 | அளபு | 5 | 5 |
| | | பாதம் | 6 | | — | — | — | 6 | அடி | 6 | — |
| | | இணை | 7 | | 9 | — | 9 | 7 | | 7 | 9 |
| பொழிப்பு | 6 | | 8 | | 10 | — | 10 | 8 | | 8 | 10 |
| ஒரூஉ | 7 | | 9 | | 11 | — | 12 | 10 | | 10 | 12 |
| | | கூழை | 10 | | 12 | — | 11 | 9 | | 9 | 11 |
| | | மேற்கதுவாய் | 11 | கதுவாய் மேல் | 13 | — | 13 | 11 | | 11 | 13 |
| | | கீழ்க்கதுவாய் | 12 | கதுவாய் கீழ் | 14 | — | 14 | 12 | | 12 | 14 |
| | | முற்று | 13 | | 15 | — | 15 | 13 | | 13 | 15 |
| செந்தொடை | 8 | | 14 | | 8 | — | 3 | 14 | | 16 | 8 |
| நிரல் நிறுத்தமைத்தல் | 9 | | — | | — | — | — | — | | — | — |
| இரட்டையாப்பு | 10 | இரட்டை | 15 | | 7 | — | 2 | 15 | | 15 | 7 |
| | | அந்தாதி | 16 | | 6 | — | 1 | 16 | | 14 | 6 |

எண்கள் வரன்முறையைக் குறிக்கும்
பெயர் வேறுபாடு உள்ளே தரப்படுகின்றது

எதுகை

| | கலம் | காரிகை | வீ.சோ | இ.வி | தொ.வி | மு.வீ |
|---|---|---|---|---|---|---|
| வருக்கம் | 1 | 1 | — | 1 | — | 1 |
| நெடில் | 2 | 2 | — | 2 | — | 2 |
| இனம் | 3 | 3 | 4 | 3 | 3 | 3 |
| | | உயிர் 4 | 5 | 4 | — | — |
| | | ஆசு 5 | 6 | 5 | 2 | 4 |
| | | இரண்டடி 6 | 2 | 7 | — | — |
| | | மூன்றெழுத்து 7 | 1 | 8 | 1 | — |
| | — | — | முழுதும் 3 | — | — | — |
| | — | — | | இடையிட்டு 6 | — | — |
| | — | — | — | — | தலையாகு 4 | — |
| | — | — | — | — | இடை 5 | — |
| | — | — | — | — | கடை 6 | — |

முரண்

| | கலம் | காரிகை | வீ.சோ | இ.வி |
|---|---|---|---|---|
| கடையிணை | 1 | 2 | — | 2 |
| பின் | 2 | 3 | — | 3 |
| இடைப்புணர் | 3 | 5 | — | 5 |
| | — | கடை 1 | — | 1 |
| | — | கடைக்கூழை 4 | — | 4 |

நீரும் நிலனுந் தீயும் வெளியு
மாக விசும்போ டைந்து மாகும்

—செய்யுளியல்-95 நச்சர் உரை

## இயைபு

1. இணை
கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
—குறள் 1101

2. பொழிப்பு
மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்...
— ,, 1118

3. ஒரூஉ
தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்...
— ,, 1107

4. கூழை
நோனா உடம்பும் உயிரும் மடலேறும்...
— ,, 1132

5. மேற்கதுவாய்
நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்...
— ,, 1093

6. கீழ்க்கதுவாய்
பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்...
— ,, 1083

7. முற்று
உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்...
— ,, 1125

## அளபெடை

1. இணை
உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ்
— ,, 1079

2. பொழிப்பு
மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்...
—புறம் 145

3. ஒரூஉ
உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும் —குறள் 1096

சிரூ அஅர் துடியர் பாடுவன் மகாஅஅர்...

—புறம் 291

4. கூழை

மாஅத் தாஅண் மோஒட் டெருமை...

—காரிகை-உரை

5. மேற்கதுவாய்

தேஎம் புனலிடைச் சோஒர் பாஅல் ..

— ,,

6. கீழ்க்கதுவாய்

மீஇ ஞஅர்ந் துகளுஞ் சீஇர்...

— ,,

7. முற்று

ஆஅ ஞஅ நீஇ ணீஇர்...

— ,,

## நோக்கு

தொல். மட்டுமே கூறுகின்ற உறுப்பாக இந்நோக்கு அமைகின்றது. இந்நோக்கு, மாத்திரை-எழுத்து-அசை-சீர்-அடி என்ற ஐவகைக் கூறுகளும் இணைந்து உருவாகும் ஒரு இலக்கியச் சிறப்பு என்று கொள்வதாகத் தோன்றுகிறது.

மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கு எனப்படுமே

—தொ-செ 104

## பா

பொதுநிலையில் செய்யுள், பா, பாவினம் என இருவகைப் படும். தொல். பாவையும் செய்யுளுக்கு உரிய உறுப்பாகக் கூறுகின்றது. பரிபாட்டு, கலிப்பா போன்ற பாக்களில் பாவகையும் இனமும் வருதலால் பாவையும் செய்யுள் உறுப்பாகத் தொல். (தொ-செ 1) கூறிற்று போலும்.

பாவினம் என்ற பாகுபாட்டைக் காப்பியத்திற்குப் பின்வந்த நூற்கள் அமைத்துள்ளன.

வீ. சோ அசலைப் பத்தியம் என்றும், அதன் போலியைக் கத்தியம் என்றும் வகைப்படுத்தியுள்ளது. இது வடமொழிச் சார்பு

காரணமாக இருக்கலாம். இப்பாகுபாட்டைத் தொன்னூல் விளக்கமும் தருகின்றது.

பா, ஆசிரியம்-வெண்பா-கலி-வஞ்சி என நான்கு வகைப்படும். இனம், ஒவ்வொன்றிலும் தாழிசை-துறை- விருத்தம் என மூவகையாக அடங்கும்.

*செய்யுள் தாமே மெய்பெற விரிப்பின்*
*பாவே பாவினம் என இரண்டாகும்*

— யா. க 54

## பாப்பகுப்பு

தொல். நால்வகைப் பாக்களை இரண்டுள் அடக்கலாம் எனக் கூறி, ஆசிரியம் (வஞ்சி), வெண்பா (கலி) வுள் அடக்குகின்றது. பாக்களின் சிறப்பினையும் நுண்மையினையும் கருதி ஆசிரியமும் வெண்பாவும் சிறப்பு நிலையில் தரப்பட்டன போலும். சி. பா, ஒழிபியலில் இக்கருத்தினை ஏற்கின்றது.

*ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென*
*நால் இயற்று என்ப பாவகை விரியே*

—தொ-செ 105

*பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்*
*ஆசிரியப்பா வெண்பா என்றாங்கு*
*ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப*

— ,, 107

*ஆசிரிய நடைத்தே வஞ்சி; ஏனை*
*வெண்பா நடைத்தே கலி என மொழிட*

— ,, 108

*வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சி எனப்*
*பண்பு ஆய்ந்து உரைத்த பா நான்கு ஆகும்*

— யா. க 55

*வெண்பா அகவல் கலிப்பா அளவடி, வஞ்சி என்னும்*
*ஒன்பா அடி குறள் சிந்து என்று உரைப்ப, ஒலிமுறையே*
*திண்பா மலி செப்பல், சீர்சால் அகவல், சென்று ஓங்கு துள்ளல்*
*நண்பா அமைந்த நலமிகு தூங்கல் நறுநுதலே*

—யா. கா 21

*பத்தியம் கத்தியம் என்றுஇரண்டாம் செய்யுள்;பத்தியம்,மேல்*
*எத்திய பதங்களால் வந்து இயலும் என; மொழிந்த*
*கத்தியம், கட்டுரை செய்யுளின்போலிக் கலந்தவற்றோடு*
*ஒத்து இயல்கின்றமையால் ஒன்று தாமும் உரைத்தனவே*

—வீ. சோ 112

ஆர் வெண்பா அகவல் கலி வஞ்சிப்பா நான்கின...

—சி. பா-செ 1

ஏற்ற பா இரண்டே வெண்பா அகவல்; வெண்பா
இடத்தில் வரும் கலி; அகவலிடத்தில் வரும் வஞ்சி

—சி. பா-ஒ 3

யா. க 55 ... —இ. வி 726

வெண்பா அகவல் விரி கலி வஞ்சி
மருட்பா என ஐவகைப் பா அன்றியும்
துறை தாழிசை விருத்தம் தூக்கினம் மூன்றே

— தொ. வி 219

பத்தியம் என்ப பாவொடு பாவினம்;
கத்தியம் அவைபோல் கலை அல்லனவே

— ,, 250

ஒன்பான் ஆறு ஒன்பான்
உடன் இரண்டாய் விரி நாற்பா மூன்றுஇனம்

—சுவாமி 152

உதாரண முதனினைப்புக் காரிகை

வளம்பட என்பது வெள்ளைக்கு; அகவற்கு உதாரணம் செங்
களம் படக் கொன்று; கலிக்கு அரிதாய; கண்ணார் கொடிபோல்
துளங்கு இடை மாதே! சுறமறி, தொன்னலத்தின் புலம்பு என்று
உளங்கொடு நாவலர் ஓதினர் வஞ்சிக்கு உதாரணமே

—யா. கா 22

அமுதசாகரம் பா, செய்யுள் என்பனவற்றிற்குச் சில விளக்கங்கள் அமைக்கின்றது. யாப்பிலக்கணங்களைப் பொறுத்த மட்டில் செய்யுள் என்பது என்ன என்ற நேரடி விளக்கம் தரும் நூல் இதுவொன்று. தொ.வி, யாப்பதிகார ஆரம்பத்தில் அமைக்கும் நூற்பாவும் ஒப்புமைபற்றி மீண்டும் தரப்படுகின்றது.

அறம் முதலிய நாற் பொருளும் - அறம், பொருள், இன்பம், வீடு, அகம் முதலான நாற் பொருண்மையும்-அகம், புறம், அகப்புறம் புறப்புறம், அடிப்படையாகச் செம்மையுறக் குறைவுகளற்று இயற்றப்படுவது செய்யுள். இப் பொருண்மையே கவிதைக்கு உயிராக அமைகின்றது. பா, இனம் என்பன இவ்வுயிர் தாங்கும் உடலாக உருப்பெறுகின்றன. இன்னோசை, நடையழகு கூட்டுகின்றது. புகழ் பயனாகப் பொருந்துகின்றது.

இக் கவிதை அமுதம், உள்ளக் கடலில் நூலாம் மலை நட்டு, அறிவெனும் கயிறால் வசையுறா வண்ணம் கடையப் பிறக்கின்றது.

அறமுதல் நான்கென்றும் அகமுதல் நான்கென்றும்
திறனமைந்த செம்மைப் பொருண்மேல் - குறைவின்றிச்

செய்யப் படுதலாற் செய்யுள்; செயிர் தீரப்
பையத்தாம் பாவுதலாற் பா

— அ. சா 1

அகம் முதலாய பொருள் கவிக்கு ஆவி அணிதழைப்பத்
தக முதலோர் சொற்ற பாவின சட்டகக் கட்டுரையே
நிகழ்தரும் ஓசை இயல்நடையான் நெடுநீர் வரைப்பிற்
புகழ்தரு வாய்மைப் பயன் வியன்சீர்த்திப் புத்தேள் உலகே

— ,, 3

உள்ளப் பரவையின் நூல்வரை நாட்டி ஒண் கேள்வி தம்பா
எள்ளப் படாமை இயையக் கடையின் இசைபெருக்கும்
வள்ளல் குணநாவர் வானோர்களை வளமைப் படுக்கும்
வெள்ளைக் கவிதை அமிழ்தம் எல்லார்க்கும் வெளிப்படுமே

— ,, 2

சிரை முதல் யாப்புறச் சேருயிர்க்கு உடல்போல்
உரைமுதல் யாப்புற உணர்பொருட்கு உடலாச்
சிறப்பிற் செய்வன செய்யுளாம்

— தொ.வி 202

## பாவினம்

தாழிசை - துறை - விருத்தம் என்பன பாவினங்கள். முதற் பாக்கள் நான்கிற்கும் இவை உரியன. பரிபாடல், மருட்பா, ஆகிய துணைப்பாக்களுக்கு இவை கொள்ளப்படவில்லை.

தாழிசை என்பதைக் கலிப்பாவின் உறுப்புள் ஒன்றாகவே தொல். கூறுகின்றது. பிற்கால இலக்கணங்கள் கூறும் தாழிசை - துறை- விருத்தம் எனும் இனப் பகுப்பு அதன்கண் இருப்பதாகத் தெரிய வில்லை. பண்ணத்தியுள் இவற்றைக் கூறினர் (தொ - செ 180) எனச் சிலர் கூறுகின்றனர்.

சீர், அடி என்பனவற்றின் எண்ணிக்கையின் அடிப்படையில், இம் மூவினங்களையும் நான்கு பாவிற்கும் கூறினவோ என்ற ஐயம் எழுகின்றது. காட்டாக, வஞ்சிக்குரிய இலக்கணமே இல்லாது வஞ்சித்துறை வரலாம் எனக் கூறினால், அதை எவ்வாறு பொருத்திக் கொள்வது என்பது தெளிவில்லை.

பாவிற்கு வரையறைகள் அமைகின்றன; பாவினத்திற்கோ அத்தகைய வரையறைகள் இல்லை. வரையறைகளை மீறிய செய்யுட்கள் முற்காலத்தும் இன்றும் தோன்றுகின்றமைக்கு இதுதான் முதற்படியாக அமைந்ததோ என்ற எண்ணம் எழுகின்றது.

கலிப்பா உறுப்பாகிய தாழிசையின் தனி வளர்ச்சியே தாழிசை- துறை - விருத்தம் எனும் பாவினங்கள் எனக் கொள்ளலாம் என்பர் பேராசிரியர் செட்டியாரவர்கள்.†

---

† Advanced Studies in Tamil Prosody, Pages XII-XIII; 99-106.

விருத்தம் எனும் சொல்லும், அதுகுறிக்கும் பாவின வடிவங்களும் வடமொழியை, வடமரபைப் பின்பற்றி வந்தன என்பதே பெரும்பாலோர் கருத்து. புதுமை எனும் பொருள் குறிக்கும் விருந்து எனும் சொல்லே விருத்தம் எனும் சொல்லாக்கத்திற்குக் காரணமாகிப் புதிதாகத் தோன்றி வளர்ந்த யாப்பு வடிவத்திற்குப் பெயராக அமைந்தது எனலாம். விருந்தெனும் வனப்பு வகையும், பொருந்து-பொருத்தம், வருந்து - வருத்தம், குருந்து - குருத்து எனும் சொல் நிலையும் இங்கு நினைக்கப்படல் வேண்டும். தாழிசை - துறைகள் தமிழுக்கே உரியனவாக விருக்க, விருத்தத்தை மட்டும் கடன் கொண்டனர் எனலும் முழுநிலையில் ஏற்றுக் கொள்ளக் கூடியதன்று.

தாழிசை, துறை, விருத்தம் ஆகிய பாவினங்களை முறை மாற்றித் துறை, தாழிசை, விருத்தம் என்றோ அன்றி விருத்தம், துறை, தாழிசை என்றோ கூறும் நிலை இருந்திருக்கிறது; அதற்கு மறுப்பும் எதிர்ப்பும் ஏற்பட்டுமிருக்கிறது. அமுதசாகர வெண்பாவொன்று இச் செய்தியைத் தருகின்றது.

பண்ணும் திறமும் போல் பாவும் இனமுமாம்
வண்ண விகற்ப வகைமையால் - பண் மேல்
திறம் விளரிக்கு இல்லது போல் செப்பல் அகவல்
இசை மருட்கும் இல்லை இனம்

—அ. சா 65

விருத்தம் வியன்துறை தாழிசை யென்று ஓதாது
ஒருத்து இறுதி ஆதியா ஓத - உரைப்பிற்
சிறுகாக்கை பாடினியார் செப்பக்கேட்டு அஃது
மறுத்தாரே வண்மையால் வைத்து

— ,, 64

தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாவினம் பா ஒரு பாற்பட்டு இயலும்

— யா. க 56

தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாவினம் பாவொடு பாற்பட்டு இயலும்

— இ. வி 727

துறை தாழிசை விருத்தம் தூக்கினம் மூன்றே

— தொ. வி 217:3

## ஆசிரியப்பா

தொல்காப்பியம் பாவைப்பற்றிக் கூறும்போது, கலிப்பாவுக்கும் வெண்பாவுக்கும் அளிப்பது போன்ற விரிவான விளக்கம் ஆசிரியப் பாவுக்கு அமைக்கவில்லை. இதனால் அப்பகுதியில் வரும் சில நூற்பாக்களை எப்பாவுக்கு அமைத்துக் கொள்வது என்ற தடுமாற்றம்

ஏற்படுகின்றது. மண்டிலம் குட்டம் என்பனவற்றை ஆசிரியத்திற்குக் கொள்வதே ஏற்புடைத்து. மண்டிலத்தின் விரியாகத் தான் பிற்காலத்தில் நிலை மண்டிலமும் அடிமறிமண்டிலமும் தோன்றியிருக்க வேண்டும். 'குறைதல்' எனும் பொருள் பட்டு வரும் 'குட்டம்' ஈற்றயலடி குறைந்து வந்த நேரிசை ஆசிரியத்தையும் இடையடிகள் குறைந்துவரும் இணைக்குறள் ஆசிரியத்தையும் அடக்கலாம். 'நேரிசை ஆசிரியம்' எனும் பெயரில்லாவிடினும் அவ்வமைப்பு தொல்காப்பியத்தில் உண்டு (தொ-செ 69). சிலப்பதிகார உரையாளர் நல்லார், இடையடி குறைந்துவரும் சிலம்புப் பதிகத்தைக் 'குட்டச் செந்தூக்கு' எனக் குறிப்பர். சுப்பராயச் செட்டியார் தமது புகார்க் காண்டப் பதிப்பில் அப்பதிகத்தை இணைக்குறள் ஆசிரியப்பா எனக் கூறுவதும் (பக்.9) மனங் கொள்ளத் தக்கது.

பொதுவாக ஆசிரியத்திற்கு நால்வகை கூறப்பட, சுவாமி, மருட்பா, நூற்பா இவற்றையும் இணைத்து, ஆறு எனக் கூறுகின்றது. சி.பா, ஒழிபில் நூற்பாவை 'அகவல்' எனும் பெயருடன் குறிக்கின்றது.

அமுதசாகரம் பாவுக்கு வருணம் கூறும்போது, ஆசிரியத்தை அரசவருக்கத்ததாகக் காரணத்துடன் சுட்டும். பாவும் வருணமும் பற்றிய பாட்டியல் செய்திகள், பின்னல் தரப்படுகின்றன.

தொல்காப்பியம், ஆசிரியம் பற்றிய கருத்துக்கள் பலவற்றையும் முன்னுறுப்புக்களைக் கூறும் பகுதியிலேயே அடக்கிவிடுகின்றது. சீர்-தளை-அடி-ஓசை ஆகியன பற்றிய செய்திகள் அவ்வாறு அமைகின்றன.

ஆசிரியப்பாவின் அடிகளில், ஆங்காங்கே வெண்சீரும் (தொ - செ30), வஞ்சியுரிச்சீரும் (தொ-செ 31) மயங்கி வருதல் உண்டு. ஆயின் வெண்சீரும் ஆசிரிய உரிச்சீரும் ஒருங்கு நிற்பதில்லை (தொ-செ 28). அத்துடன், இயற்சீர் பெறுவது போன்றே, ஆசிரியத்தின் ஐவகை யடியுளும் ஆசிரிய உரிச்சீரும் அதனல் உருவாகும் தளையும் இடம் பெறும் (தொ-செ 54).

இருசீர் இயைய, அசைகள் ஒன்றுவது ஆசிரியத்தளை (தொ-செ56). இயற்சீர் வந்தும், ஒன்ருமையான் அமையும் இயற்சீர் வெள்ளடியும் ஆசிரியத்தில் வரலாம் (தொ-செ62).

ஐவகை யடியும் ஆசிரியப்பாவுக்கு உரியனவாம் (தொ-செ52.) அவை தம்முள் விரவிவருவதும் உண்டு (தொ-செ53). முடுகி வரும் ஐஞ்சீர் அறுசீர் எழுசீர் அடிகள் ஆசிரியத்துள் வருதலில்லை (தொ-செ 67). இப்பாவின் ஈற்றயலடி முச்சீராதலோடு (தொ-செ 68). இடையடிகளும் அவ்வாறு வரலாம் (தொ-செ 69) எனத் தொல். கூறும்.

அகவல் என்பது இப்பாவுக்குரிய ஓசையாம் (தொ-செ81). நடையால் தன்னேடொத்த வஞ்சி (தொ-செ 107, 108) யிலிருந்து இது ஓசையால் மாறுபட்டது போலும்.

*ஒத்தாழிசையும் மண்டில யாப்பும்
குட்டமும் நேரடிக்கு ஒட்டின என்ப

—தொ-செ 115

*குட்டம் எருத்தடி உடைத்தும் ஆகும்

— ,, 116

*மண்டிலம் குட்டம் என்று இவை இரண்டும்
செந்தூக்கு இயல என்மனுர் புலவர்

— ,, 117

இருசீர் அடிமேல் ஒருசீர் குறையடி
பெறுவன நேரிசை ஆசிரியம்மே

— கா. பா 59

ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலை மண்டிலமே

— ,, 60

என்னென் கிளவி ஈறுப் பெறுதலும்
அன்னவை பிறவும் அந்தம் நிலைபெற
நிற்கவும் பெறாஉம் நிலைமண்டிலமே

— ,, 61

உரைப்போன் குறிப்பின் உணர்வகை அன்றி
இடைப்பான் முதல்ஈறு என்றிவை தம்முள்
மதிக்கப் படாதது மண்டில யாப்பே

— ,, 62

அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று இரண்டும்
இடைவர நிற்பது இணைக்குறள் ஆகும்

— ,, 63

தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்கு
அன்பா அறைந்த ஆசிரியம் என்ப

— அவி 82

ஏயெனச் சொல்லின் ஆசிரியம் இறுமே
ஓ ஆய் என ஒரோவழி ஆகும்

— ,, 83

---

* இம்மூன்று நூற்பாக்களும் கலிப்பாவுக்கு உரியன எனக் கருதுவர் டாக்டர் செட்டியார் அவர்கள்.
Advanced Studies in Tamil Prosody, Pp 54–56.

என்னென் சொல்லும் பிறவும் ஒன்றித்
துன்னவும் பெறாஉம் நிலை மண்டிலமே

—அவி 84

இற்றதன் மேலடி ஒருசீர் குறைய
நிற்பது நேரிசை ஆசிரியம்மே

— ,, 85

இடைபல குறைவது இணைக்குறள் ஆகும்

— ,, 86

மண்டிலம் ஒத்துஇறின் நிலைமண்டிலமே

— ,, 87

ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்னென் கிளவியை ஈறுகப் பெறும்
அன்ன பிறவும் அந் நிலைமண்டிலே

— ,, 88

எல்லா நிலமும் அடிப்படுத்து ஈரிரண்டு
நல் ஆகமப் பொருளை நண்ணுதலால்-பல்லோர்க்கும்
சீர் ஆசிரியத்தைத் தேர்வேந்தன் என்றுரைத்தார்
பேராசிரியர் பெயர்

—அ. சா 57

இயற் சீருள் தோன்றும் அகவல்...

— ,, 59

அகவல் இசையன அகவல்; மற்று அவை
ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ என்று இறுமே

- யா. க 69

நேரிசை இணைக்குறள் மண்டிலம் நிலைப்பெயர்
ஆகும் மண்டிலம் என்று அகவல் நான்கே

— ,, 70

அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரியம்மே

— ,, 71

இணைக்குறள் இடைபல குறைந்து இறல் இயல்பே

— ,, 72

மனப்படும் அடி முதலாய் இறின் மண்டிலம்

— ,, 73

ஒத்த அடியின ஆகியும் ஒற்று இற
நிற்பவும் என்னும் நிலைமண்டிலமே

— ,, 74

கடை அயற்பாதம் மூச்சீர் வரின்நேரிசை; காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள்; எல்லா அடியும் ஒத்து
நடைபெறும் ஆயின் நிலைமண்டிலம்; நடு ஆதி அந்தத்து
அடைதரு பாதத்து அகவல் அடிமறிமண்டிலமே

—யா. கா 28

ஈற்றயல் முச்சீர்வரின் நேரிசையாம்; இணைக்குறட்பா
ஏற்ற குறள் சிந்து இடையே வரும்; நிலைமண்டிலப்பா
சாற்றியதன் நேரடியா இயலும்; தலை நடு ஈறு
ஆற்றிய பாதத்து அகவல் அடிமறிமண்டிலமே

—வீ. சோ 115

பரவு அகவல் அகவல் இசை அளவடி ஈற்றயலில்
பாதம் முச்சீர் நேரிசை, எவ் அடியும் அளவொத்தல்
அரு நிலைமண்டிலம், இடைச்சீர் குன்றல் இணைக்குறளாம்
ஆதி நடு அந்தம் உறின் அடிமறிமண்டில ஆசிரியம்

—சி.பா - செ 3: 1-3

உறு பொருள் சூத்திரங் குறித்த யாப்பிற்றாய் நாற்சீர்
ஓரடியும் பலஅடியும் வரும் நூற்பா அகவல்

—சி.பா-ஒ 3

யா. க 69 ... —இ. வி 732

நேரிசை இணைக்குறள் நிலைமண்டிலமே
அடிமறி மண்டிலம் என நான்கு அகவல்

— ,, 733

அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்திடின் நேரிசை யாசிரியம் ஆதலும்
அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று ஆவிரண்டும்
இடைவர நிற்பின் இணைக்குறள் ஆதலும்
ஒத்த அடித்தாய் உலையா மரபொடு
நிற்பின் நிலைமண்டிலம் ஆகுதலும்
மனப்படும் அடிமுதல் இடை ஈறு ஆயின்
அடிமறி மண்டில ஆசிரியம் ஆதலும்
நடைதெரி புலவர் நாடினர் கொளலே

— ,, 734

ஆசிரியத்து ஒலி அகவலாய், இயற்சீர்
தன்தளை பிறவும் தழுவிய அளவடி
நடையான் நடந்து நால்வகைத்தாம் அவை
நேரிசை, இணைக்குறள், நிலை மண்டிலமே,
அடிமறி மண்டிலம் ஆகும் என்ப

—தொ. வி 223

நேரிசைச் சிறுமை நேரும் மூவடியே;
வரையா பெருமையே, மற்று அடி அளவடி
ஈற்றயல் சிந்தடி இயைந்து வருமே

— ,, 224

இணைக்குறள், முதல் ஈற்று ஈரடி அளவடி
இடைக் குறள் சிந்தடி இணையப் பெறுமே

— ,, 225

நிலைமண்டிலத்து எங்கும் நீங்கா அளவடி;
அடிமறிமண்டிலம் அந்நடைத்து ஆகி
அடி மாறி இறினும் தான் அழியா நிலைத்தே

— தொ. வி 226

அகவல் ஓசையொடும் அளவடித்தாய்
வருவது அகவற்பா என மொழிப

—மு. வீ- யா: செ 22

ஈற்றயல் அடி முச்சீராய் வருவது
நேரிசை அகவற்பா ஆகும்மே

— ,, 23

எல்லா அடியும் ஒத்து இறின் நிலைமண்டில
அகவல் என்மனார் அறிந்திசினோரே

— ,, 24

ஆதியும் அந்தமும் அளவடியாகி
குறளடி சிந்தடி என்று ஆங்கு இரண்டும்
இடைவரல் இணைக்குறள் ஆசிரியம்மே

— ,, 25

மூன்றுஅடி முதலா முடிந்து எலாவடியும்
இடைகடை முதலாய் எடுத்தாலும்
ஓசையும் பொருளும் உலவாது வருவன
அடிமறி மண்டில அகவல் ஆகும்மே

— ,, 26

அகவல் ஏந்திசையகவல் தூங்கிசை
அகவல் ஒழுகிசையகவல் மூவகைப்படும்

— ,, 30

நேரொன்று ஆசிரியத் தளையான் வரல்
ஏந்திசையகவல் எனப்படும் எனலே

— ,, 31

நிரையொன்று ஆசிரியத் தளையான் வரல்
தூங்கிசையகவல் எனச் சொலப்படுமே

— ,, 32

இவ் இருதளையும் பிறவும் மயங்கி
வருவது ஒழுகிசையாம் வழுத்திடினே

— ,, 33

சொல் அகவல் இசை, ஐந்து ஈறு, அளவடி ஆசிரியம்
நள்ளுற்ற ஈற்றயல் சிந்து ஏற்றின் நேரிசைப்பா
நான்கடியும் மாறிவரில் அடிமறிமண்டிலமே

— சுவாமி 157

அடியாவும் நேர் ஒத்துவரின் நிலைமண்டிலப்பா
அளவும் முன்பின் ஒத்து இடையிற்குன்றல்இணைக்குறட்பா
உடனே வெண்பா அடிப்பின் அகவல் இறின் மருட்பா
ஒன்று இரண்டாம் அடி நூற்பா அகவல் ஆறு ஆகும்

— ,, 158

## ஆசிரிய இனம்

தாழிசை, துறை, விருத்தம் எனும் பாவினங்கள் ஆசிரியத்திற்கும் உள.

அளவொத்த மூன்றடிகளாலமைவது ஆசிரியத்தாழிசை. ஒரு தாழிசையாகத் தனித்து வரலாம் என முந்தையோர் கூற, பிந்தியோர்(தொ. வி, மு. வீ) ஒரு பொருள் பற்றிய மூன்று தாழிசைகள் இணைந்து வரும் என வெளிப்படையாய்க் கூறுகின்றனர்.

கலம் முதல் மு. வீ வரை, ஆசிரியத்துறை பற்றிய கருத்துள் வேறுபட்டிருப்பதாகத் தோன்றவில்லை. ஆயின் வகைகளின் எண்ணிக்கையில், நால்வகை எனும் வரையறை பிற்காலத்து ஏற்பட்டமையைத் தொ. வி காட்டுகின்றது.

கழிநெடிலடிகள் நான்காய்த் தம்முள் ஒத்து வருவது ஆசிரிய விருத்தம்.

விருத்தப்பாவியல் ஆசிரியவிருத்தம் பற்றி விரிவாகப் பேசுகின்றது.

வீ. சோ, தொ. வி என்பன சந்த விருத்தம் பற்றி நினைக்கின்றன; வி. பா விரிக்கின்றது. சந்தவுறுப்புக்கள், அறுசீர்-எழுசீர்-எண்சீர் ஆசிரியச் சந்தம், சில ஒழிபியல் கருத்துக்கள் என்பன இங்கே இணைவுறுகின்றன.

மூன்று பாவினங்களையும் கூறும்போது ஒவ்வொரு யாப்பியலாரும் தமக்கேற்ற முறையில் அவற்றைச் சுட்டிச் செல்கின்றனர் என்பது தெளிகின்றது.

அறுசீர் முதலா நெடியவை எல்லாம்
நெறிவயின் திரியா நிலத்து அவை நான்காய்
விளங்குவ தப்பா இனத்துள விருத்தம்

—கா. பா 64

அடித்தொகை நான்கு பெற்று அந்தத் தொடைமேல்
கிடப்பது நாற்சீர்க் கிழமைய தாகி
எடுத்துரை பெற்ற இரு நெடில்ஈற்றின்
அடிப் பெறின் ஆசிரியத் துறை ஆகும்

— ,, 65

அளவடி ஐஞ்சீர் நெடிலடி தம்முள்
உறழத் தோன்றி ஒத்த தொடையாய்
விளவதும் அப்பெயர் வேண்டப் படுமே

— ,, 66

அடிமூன்று ஒத்து இறின் ஒத்தாழிசையே

— ,, 67

நாற்சீர் அடிநான்கு அந்தத் தொடை நடந்தவும்
ஐஞ்சீர் அடிநடந்து உறழ அடி குறைந்தவும்
அறுசீர் எழுசீர் அவ்வியல் நடந்தவும்
எண்சீர் நாலடி ஈற்றயல் குறைந்தும்
தன்சீர்ப் பாதியின் அடி முடிவுடைத்தாய்
அந்தத் தொடையின் அவ்வடி நடப்பிற்
குறையா உறுப்பினது துறை எனப்படுமே

—அவி 89

அறுசீர் எழுசீர் அடிமிக நின்றவும்
குறைவில் நான்கடி விருத்தம் ஆகும்

— ,, 90

மூன்று அடி ஒத்த முடிபின ஆய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆகும்

—யா. க 75

கடையதன் அயலடி கடை தடி*நடையவும்
நடுவடி மடக்காய், நான்கடி ஆகி
இடையிடை குறைநவும் அகவல்துறையே

— ,, 76

கழிநெடில் அடி நான்கு ஒத்து இறின் விருத்தத் அஃது
அழியா மரபினது அகவல் ஆகும்

— ,, 77

தருக்கியல் தாழிசை மூன்றடி ஒப்பன; நான்கடியாய்
எருத்தடி நைந்தும், இடை மடக்காயும், இடையிடையே
சுருக்கடியாயும் துறையாம்; குறைவில் தொல்சீர் அகவல்
விருத்தம் கழிநெடில் நான்கு ஒத்து இறுவது மெல்லியலே

—யா. கா 29

மூன்றுஅடி ஒப்பன தாழிசை; நான்கு அடியாய்க் கடை அயல்கண்
ஏன்றடி நைந்தும் இடைமடக்காயும், இடையிடையே
தோன்று அடி குன்றியும் ஆகும் துறை; தொல் கழிநெடிலாய்
ஆன்றடி நான்கு ஒத்திடில் ஆசிரிய விருத்தம் அன்றே

—வீ. சோ 122

மூன்றடி ஒத்தல் தாழிசை, நான்கு அடியாய்ச்
சீர் இடையிற் குறைதல் இடைமடக்கல் ஈற்றயலின்
மருவு அடி நைவது துறை, நான்குஅடி ஒத்து ஆறுஆதி
வளர் சீர்கள் பலவருதல் ஆசிரிய விருத்தம்

—சி. பா- செ 3

மூன்றடி ஒத்து முடிவன ஆய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆதலும்

* யா. கா, 'கடை தபு நடையவும்' எனப்பாடங் கொள்ளும்—யா. கா 9-உரை.

எருத்தடி குன்றியும் இடையிடை குன்றியும்
இவற்ருேடு இடைமடக்கு ஆகியும் நான்குஅடி
அவற்ருல் நடப்பின் அதன்துறை ஆதலும்
கழிநெடிலடி நான்கு ஒத்து இறின் அகவல்
விருத்தம் ஆதலும் விதி எனப்படுமே

— இ. வி 735

ஆசிரியத்துறை அளவி சீர்வரும்
அடிநான்கு ஈற்றயல் ஆதி குறைநவும்
இருவழி இடைமடக்கினவும் நால்வகைய

— தொ. வி 240

அகவல் தாழிசை அடிமூன்று ஒத்தவாய்
அடுக்கிய மூன்றும் ஒன்ருகியும் வருமே

— ,, 244

விருத்தம் என்ப, விரவிய எல்லாச்
சீரும் அடியும் சிதையாக் கொளினும்
அவை ஒத்தனவாய் அடிநான்கு அணையுமே
மாவிளங்காயே வஞ்சிச்சீர் இடையும்
பொதுச்சீர் இடையும் புணர் மாவிளம் இவை
ஒப்ப வரின் சீர் ஒப்புமை ஆகும்

— ,, 247

விருத்த விகற்பம் விளக்கிய காலை
... ... ... ... ... ... ...
அகவல் கழிநெடில் அடிகொள் விருத்தமே

— ,, 248: 1, 4

சந்த விருத்தம் தம்முள் ஒத்து எழுத்து அசை
வந்து ஒலிபற்றி வரும் உள பிறவே

— ,, 249

மூன்றடி ஒத்து வருவதும், ஒருபொருள்
மேல் மூன்றடுக்கி வருவதும் அகவல்
தாழிசையாம் எனச் சாற்றப்படுமே

— மு. வீ-யா: செ 27

அளவடியாய் ஈற்றயலடி குறைநவும்
ஈற்றயலடி குறைந்து இடை மடக்காக
வருநவும், இடையிடை குறைந்து வருநவும்
இடையிடை குறைந்து இடைமடக்காய் வருநவும்
அகவல் துறையென அறையப் படுமே

— ,, 28

கழிநெடிலடி நான்கு ஒத்து இறின் அகவல்
விருத்தம் என்மனர் மெய் உணர்ந்தோரே

— ,, 29

நெடிய மூன்றடி ஒத்தல் அகவல் தாழிசையாம்
நேர் ஒத்து ஈற்றயல் குறைதல் இடைகுறைதல் மடக்கல்
இடைகுறைந்து மடக்கல் அகவற்றுறை, நான்கடியே
எய்துகழிநெடில் விருத்தம், இனம் மூன்றும் கலப்பே
— சுவாமி 158

விருத்தங்கள் சிலவற்றைத் தனியே எடுத்துக்கொண்டு, அவற்றின் பயிற்சியை இலக்கியத்தில் கண்டு ஆராய்ந்து, அவற்றின் சீரமைப்பைத் தெளிந்து தரும்நிலை விருத்தப் பாவியல் எனும் நூலுக்கு உரியது. அருகித் தளைநிலையடிப்படையும் சுட்டப்படுகின்றது. இன்ன சீரைத் தொடர்ந்து இன்னின்ன சீர்வரும் என்ற அமைப்பு நிலையை (Pattern) அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம், எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம், எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம் என்பனவற்றிற்கு இப்பகுதியின் சூத்திரங்கள் உணர்த்துகின்றன. இவை கூறும் இவ்வமைப்பு நிலைக்கு, அவ்வப் பாடலே உதாரணமாக அமைந்தமையையும் நாம் தெள்ளிதின் உணரலாம்.

சான்றாக (1) முதற்பாடல், விளம் - மா - மா எனும் சீரமைப்பு இரட்டிய அறுசீர் விருத்தத்திற்கு இலக்கணமும் இலக்கியமும் ஆயிற்று; (2) இரண்டாம் பாடல், மா - மா - காய் எனும் அமைப்பு இருமுறை வந்தமையும் அறுசீர் விருத்த நிலையினைக் குறித்தது; (3) முதல் நான்கும் காய்ச்சீராகிப் பின்னிரு மாச்சீர் வருநிலை; (4) ஒரு மாச்சீரும் நான்கு விளச்சீரும் ஒரு காய்ச் சீருமாக அமைதல்; (5) ஒன்று, மூன்று, ஆறு எனும் சீர்கள் மாவாகப் பிற மூன்றும் விளம் ஆதல்; (6) ஒவ்வோர் அரையடியின் இறுதிச் சீரும் மாச்சீராகிப் பிற விடங்களிலனைத்தும் வெண்டளை தழுவி வரல்; (7) ஐந்து மாச்சீரைத் தொடர்ந்து ஒரு காய்ச்சீர்வரல் எனப் பல்நிலைகள் தொடர்ந்து தரப்படுகின்றன.

எழுசீர் விருத்தத்திற்கு நான்கு விளமும் மூன்று மாவும் வரும் நிலையும், எண்சீர் விருத்தத்திற்கு (1) இரு காயும் ஒரு மாவும் ஒரு தேமாவும், இருமுறை வந்து அமைதலும் (2) தேமாவைத் தொடர்ந்து இரு கூவிளமும் ஒரு புளிமாவுமாக இருமுறை வந்து அமைதலும் கருதப்படுகின்றன.

அங்கங்கு ஒவ்வோரிடத்து, இப் பொது விதிக்குள் சில சிறப்பு விதிகளும் குறிக்கப்பட்டுள்ளன. அவை, 'மாச்சீர், நெடிலோடு தொடங்கும் மாவாக இருக்க வேண்டும்' என்பன போல்வன.

சீர்வளர் கமலச் செல்வி
திகழ்தரு வதனக் கொண்மூக்

கார்வள மலிந்த கூந்தற்
　　கன்னலுங் கசக்கு மின்சொ
லேரிளங் கொங்கை மின்னே
　　ரிடையெழிற் கொடியம் பேதாய்
சீர்விள மாச்சீர் தேமாச்
　　சீரிணைந் திரட்டு மீங்கே

— வி. பா 1-1

இருமா காய்ச்சீ ரரையடிக்கா
　　யிவையே மற்றை யரையடிக்கும்
வருமா றுணர்க வாரணியுங்
　　கொங்கை பொலியு மடக்கொடியே

— ,, 1-2

மதிநாறும் வாண்முகத்தா மரைதிளைக்கும்
　　வண்டுவிழி மடப்பொற் பாவாய்
முதனான்குங் காயாகிப் பின்னவைமா
　　தேமாவாய் முடியு மன்றே

— ,, 1-3

நறிய பூங்குழற் கருவிழிக் குயின்மொழி
　　மயிலுறழ் நடைநல்லாய்
குறிய வீற்றுமாக் கூவிள முவ்விளங்
　　காயொடுங் குறிகொள்ளே

— ,, 1-4

ஒன்று மூன்றுட னாறு
மாவிளம் பிறவிட முறுமே

— ,, 1-5

கடையது மாவிள மாச்சீர்
　　கலந்தது வெண்டளை யென்ப
துடையது பாதியி ரண்டு
　　மேவியப் பொற்கொடிப் பாவாய்

— ,, 1-6

மாச்சீ ரைந்து காய தொன்று
வண்டார் குழன்மாதே

— ,, 1-7

நால்விள மும்மா நடைபெறுங் கொடிய
நச்சுவே லயனமா ரமிழ்தே

— ,, 3-1

காயிரண்டு மாவொன்று தேமாவொன்று
கலந்தவடி யிரட்டுமதன் விகற்பங் காணே

— ,, 4-1

ஆதி மாவொடுங் கூவிளம் விளமா
ஆகு மாயரை யடியிருங் குழலே

— ,, 4-2

விருத்தத்திற்கு ஒரு தனி மதிப்புக் கொடுத்து, அவற்றில் 'சந்த விருத்தம்' எனத் தனிப் பகுப்பு அமைக்கும் நிலை, எழுத்தெண்ணிக்கை யடிப்படையில் அமைந்தது போலும். மாத்திரையின் அடிப்படையிலும் எழுத்தினடிப்படையிலும் வடமொழியில் அமைந்த மாத்ரா, வர்ண விருத்தங்களின் செல்வாக்கும், தாக்குதலும் இங்குத் தெளிவாகவே தென்படுகின்றன; வெளிப்படையாகக் கூறவும் படுகிறது.

ஆசிரிய இனமாகிய விருத்தவகைக்கும் சந்தநிலை கற்பிக்கின்றமையால், அவற்றைத் தொகுத்துத் தருமுன், அச் சந்தத்தின் இலக்கணம் கூறும் விருத்தப்பாவியல் சூத்திரங்களை இவண் இணைக்கின்றோம். சந்தப் பாவிற்குரிய உறுப்பு, இலக்கண நிலைகள் இக் கீழ்க்காணும் பாடல்களில் தரப்படுகின்றன.

சீரியலி னுலமைவ தீந்தமிழ் விருத்தம்
ஆரியம றைந்தவுயர் சந்தவபி தான
வாரியது மாத்திரையி னுலமையு மென்ப
பாரிய லமைந்தபது மத்திருவ ணங்கே

— வி. பா 6-1

குற்றுயிர்த னக்குமிரு மாத்திரை குறித்தார்
ஒற்றதைய டுத்துறையி னென்றுதனி நிற்பின்
மற்றவுயிர் மாத்திரையி ரண்டென வகுத்தார்
ஒற்றதைய டுப்பினுமு ணர்ந்தறிய வல்லார்

— ,, 6-2

நீண்டவுயி ரொற்றுடைய நீண்டில திரண்டும்
நீண்டகுறி லேதனி நிகழ்ந்தகுறி லென்றே
மாண்டவபி தானமவை வைத்தது பொருந்த
வாண்டுவரு மீண்டுநனி யல்குமிடை மாதே

— ,, 6-3

அந்தத் துறைகுன் றியவக் கரமே
சந்தத் தினினீ டுயிராஞ் சமமாய்
வந்துற் றிடுசீர் கடையவ் வழியாஞ்
செந்தா மரைசேர் திருவா ணுதலே

— ,, 6-4

தொடர்ந்து, அறுசீர்-எழுசீர்-எண்சீர் (ஆசிரியச்) சந்தவிருத்தங்களின் வடிவ இயல்பு எடுத்து மொழியப்படுகின்றது. இங்கும், பாடல்கள், இலக்கணமியம்பும்போதே தாம் இலக்கியமாகித் தெளிவும் வழங்குகின்றன:

மூன்றெ ழுத்தி னுறு சீரு முற்றெ ழுத்துமே
தோன்று மோர டிக்கு நுண்ம ருங்கு தொண்டையே

போன்றி லங்கு செய்ய வாய்ப்பு லம்பு பொற்ருெடி
வான்ற யங்கு மிந்து வாண்மு கப்பொ லன்கொடீ

—வி. பா 9-1

குறையாப் புளிமா விருமூன் றுகடைக் குறியாக் குறியொன்றே
யுறையா வருமா லொளிவாண் முகமைக் குழலா ரொருமாதே

— ,, 9-2

குற்றுயி ரீற்றுறு கூவிளே யோடொரு நெட்டுயிர் கூடிடுமால்
பொற்றளிர் மேனிய ருங்குவ ளேக்கணி லங்குறு பூங்கொடியே

— ,, 9-3

நாலக் கரவிளே யொடுமா விறுதியி லொருகாய்நடைபெறுமால்
தாலக் கனிமுலே நீலக் குழலொரு சாலத் தனுவிடையே

— ,, 9-4

காய்விளம டுத்தவொரு சீர்விளமி றுத்தகனி
காமுறவு தித்தியலுமால்
வேய்புரைது ணேக்கரமு மாந்தளிரெ னத்திகழு
மேனியுமு டைச்சுரிகுழல்
காய்விளம டுத்தவொரு வைந்திறுமி டத்தினது
காணுறுநெ டிற்கடையெனப்
பாய்புனலு டுத்தவுல கோரிதனெ ழுத்தளவு
பாங்குறவி தித்தனரரோ.

— ,, 9-5

கள்ளூறு போதோக டுங்காம னம்போக ருங்கால
ஞேவன்றெனி
னள்ளார்ந டுங்கத்த னிச்சூர னேயேந்து நாமப்பு
லால்வேல்கொலோ
கள்ளார்க டித்தாம ரைத்தேன ருந்துங்க ரும்புள்ளெ
னத்தக்கவோ
உள்ளூறு காமக்கொ டுந்தீம ருந்தேயொ ளிர்கார்நி
றக்கண்களே

— ,, 9-6

ஓதவார் கடலகத் துற்றவா ரமிழ்தெனு வோதினர்
புலவர் மற்றுந்
தீதிலாத் தீங்கனிச் சுவையெனப் பாலெனத் தேமொழிக்
குவமைசொன்னர்
ஏதமே புலனுறு வழிநினேப் பாலவை யின்பமே நல்கிலாவால்
யாதெனக் கூறுகே னின்மொழிப் பண்பைநா னேந்திழைப்
பொற்கொடிக்கே

— ,, 9-7

ஓதியவு டம்பதணை யாதகுறி லீருென்ற
தொழிகூவி ளக்கருவிளச்
சாதியென நடுமெய்ம்மி காவிளங் காயெனத்
தனிவந்த குறிலீற்றகாய்
பேதமென வருமைந்து மாத்திரைச் சீர்களும்
பின்னோர்நெ டிற்பெற்றவும்
மேதகுவி ருத்தமென வான்றமிழ்ப் புலவருள
வேண்டினர றிந்துமாதோ

— வி.பா 9-8

ஆதி வாழிநெடி லக்கர மூக்குறி லாகுஞ் சிறுகாயே
கோதி லண்டையது குற்றுயி ரீற்றிரு கூவார் விளமென்றே
யோது மூன்றதுட ஞன்கது மோங்கிய தேமா புளிமாங்காய்
சீதவெண்மதிமு கக்கரு நீள்விழி மின்னேர் திருமாதே

— ,, 9-9

வாங்க ருங்கு ணத்த வேழு வாழி யோடு நெட்டெழுத்
தீங்கு றுஞ்சு கந்தி மற்று மேற்கு மாவி யல்புளி
தீங்க ரும்பொ டமுது தேன்பொ திந்து செய்ய செப்பையுங்
கோங்க ரும்பை யுந்தொ லைத்த குவிமு லைப்பெ தும்பையே

— ,, 10-1

கூவிள மேழுகு லாவநெ டிற்கடை
கொள்வது மானினி நேரசைசே
ராவிள மாதிந டப்பது பேர்கவி
ராசவி சாசித மென்றனரால்
கூவிள மேகரு வார்விள மேயிவை
கூடுவ சாத்துவி காசுலவும்
பூவிள வெம்முலை யாமமு தாரிரு
பொற்குட மேந்துபொ லன்குழையே

— ,, 10-2

ஒருநான்கி ரண்டொ டிருமூன்றி டத்தி
லொருநேர்மு னைந்த சிறுமா
புரைநீங்கு மற்ற முதலைந்து மூன்று
புளிமாவி ணைந்த சிறுகா
யொருநான்கு மூன்று புளிமாவ ளைந்த
ஒருவாரி லங்கு நுதலே
வரினேயி தற்கு வடசொற்க வீசர்
மணிமால மென்று சொலுவார்

— ,, 10-3

கத்து கின்றசி லம்பு மேகலை
கார்கு ழற்களி வண்டுநூ
லொத்த மெல்லிடை நுண்ணி தென்றிறை
யுள்ள லீரிரு கொங்கைகாள்

இத்த கைத்தெழு சீரி யங்குமி
  லங்கெ ழிற்கவி தோன்றிடின்
மத்த கோகில மென்று மூதறி
  வோர்வ ழங்கினர் நாமமே

—வி. பா 10-4

அழிவறு காய மீட்டி மடமாந்த ருய்ய
  வருநூல றைந்த பெரியோர்
மொழிதரு சந்த முற்று மியலின்ன தென்று
  மொழிவாரெ டுத்த லரிதே
கழிபெரு வாரிநீர ததுபற்றி யீங்கு
  கழறுற்ற சந்த விதியை
விழியென வைத்து மற்ற மொழியாத சந்த
  விதிதம்மை யோர்ந்து கொளலே

— ,, 11-1

விருத்தங்களின் சீரமைப்புக்கும் சந்த விருத்தங்களின் மாத்திரை - எழுத்து நிலைகட்கும் சில ஒழிபுகள், புறநடைகள் இருக்குமாற்றை விருத்தப் பாவியலின் கீழ்க்காணும் ஒழிபியல் நூற்பாக்கள் தருகின்றன:

விளமது வருமென விதித்த வீட்டினில்
விளமது கொண்டிலாக் காயும் வேண்டுவார்
விளமது நீண்டது காயின் மேவலு
முளதென வோர்கவொண் டொடிக்கைத் தையலே

—வி. பா 12-1

கூவிளம் பலவெனக் குறித்த வெல்லையில்
மேவருங் காய்த்தொடர் நேரும் வேண்டுவார்
மாவினைத் தொடர்நிரை யசையும் வைகுமால்
ஓவிய பதுமையே யனைய வெண்டொடீ

— ,, 12-2

நிரையொடு நேரசை நிற்ற லாகுமென்
றுரையுள விடத்தினி லுடம்பு பின்றொடர்
இருகுறின் மொழியினை யிருத்தி யொன்றைமுன்
னுரைதரு சீரொடும் புணர்ப்ப வுன்னிலார்

— ,, 12-3

மொழியொடு சீர்வழி முரணு மாகலின்
மொழியது கடைநிகழ் குறிலை முன்னிலா
மொழியொடு முடித்துமெய் யுடைக்குற் றீருயிர்
பிழையறு கூறிரண் டாலும் பேணுவார்

— ,, 12-4

வறியா ரெனவல் லொலியோங் கலிலாக்
குறியே யெறியப் படுகொள் கையதே

நெறிவேண் டுழியே நிலையா மதுவே
வறியா ரொருகால் வகையா குவபோல்

—வி.பா 12-5

உபயக் கரமொன்று மிகுந்து குறைஇ
இயலுந் திறனு னிதுவோ வெதுவோ
பயிலும் பெயரே பகர்தற் கெதிரென்
றயர்வுற் றிடலக் கவியே யெனலே

— ,, 12-6

## சான்றிலக்கியம்

இலக்கணம் விளங்க, பா, பாவினங்கட்கு இலக்கியம் தரும் பாப்பாவினம், சிதம்பரச் செய்யுட்கோவை, திருவலங்கற்றிரட்டுச் செய்யுள்கள் இங்குத் தரப்படுகின்றன. இவை தொடையழகும், ஒரு சில சித்திரகவி அமைப்பும் பொருந்தி, பல கோணங்களிலிருந்து பார்ப்பினும் யாப்பிலக்கணத்திற்கு உறுதுணை இலக்கியங்களாக மிளிர்கின்றன.

காமரு பன்மரங் கஞலிய பொதும்பர்
மாமரப் பணையின் மதுகர மிழைத்த
முதிர்நறுந் தேற லுெதுமலர் முன்னுபு
கொளத்தகு மரபிற் குன்ற வாண
வரைதலின் வரையா தொழுகலி னிருவிரு
மாறுபட் டொழுகிய மதியினி ராதலிற்
றிருமகிழ் மாறன் றிருவருட் கிலக்கா
யொழுகா தவருளத் தொன்று
மழுகா மதியின் மறுகுவல் யானே

—பா. பா 42

இறைவரங் கூரா வெறிபுனற் பொய்கைத்
துறைதொறுந் துவன்ற தோடவிழ் பன்மலர்
மாந்துபு வாயினிறை வெய்திய கவரி
யேந்தெழின் மாடத் தீன்றகன் றுள்ளிப்
படர்வுழிப் படர்வுழிப் பணைமுலைக் குறுங்கண்
மடைதிறந் துவளக மடுநிறைத் தொழுகும்
பாற்றடி னியினேர் பழிதீர் பெடையின்
மாற்றருங் களியின் மகிழ்வர மூழ்கிய
பானிலாத் தெறுசிறைப் பவளவா யெகினந்
தணந்தயற் கழனிச் சாதிப் பெடையை
மணந்தத னனந்தலை மள்ளர்தா முழுத
நாற்றடி யதன்க ணறுந்தழை பதனழிந்
தூற்றெழுங் களங்க வுறுபுன லாடிப்
பண்டுதான் மரீஇய பானிறப் பெடையைக்

கண்டுதான் வளைக்குங் காமரு கடல்கெழு
கண்ணகன் ஞாலங் கண்டுகண் களிப்பான்
விண்ணவர் வியப்ப மேதகு படிமத்
தரவணைத் துயின்ற வரங்கத் தமுதி
னுரவுநீர்க் காவிரிக் குறுவய லூர
புல்லேன் பொதுவுணின் மார்பெனச்
சொல்லே னெம்மன்னைத் தொடர்புடை யானே

— பா. பா 43

குவளையு நீலமுந் தவளவொண் பதுமமும்
பூம்பொறி வண்டுள ராம்பலுங் கஞலித்
திசைதிசை யோசனை தேங்கமழ் திவ்விய
வசைதீ ரந்தண் மயிலை வேலிப்
பொய்கையுட் டீந்தேன் பொதியவிழ் நறுமென்
செய்யபொற் றாமரைத் திருமல ரதற்கு
மாந்தினர் மதிமயர் வுறுத்தும் பாசடைக்
கரைசேர் வெள்ளிடைக் கலித்தெழு வனவாங்
கஞ்சா வினுக்குங் கஞ்சமென் றிடுகுறிப்
பெயர்மலிப் பான்மைப் பெரும்புன லூரன்
றெண்டிரைக் காவிரித் திருவரங் கேசன்
றொண்டர்தந் தொண்டர் தொடர்பினை யொரீஇப்
போதம் புறந்தரப் புரைதீர் தம்முயிர்க்
கேதங் கொள்ளுநர்க் கிடரிழைத் தகலா
தொல்லாப் புலன்வழி யுய்க்கும்
புல்லறி வினுட்குடி புகும்புன் மையனே

— ,, 44

இனியதெள் ளமுதா யெறித்தரு கிரணப்
பனிமதி யகடுழப் பணைநெடும் பொங்கர்ப்
பூந்துணர் ததைஇய பொழிலெழி னள்ளிடை
யீர்ந்தண் கோட்டகத் தினமலர் முற்றிய
பொன்னிதழ்த் தாமரைப் பொற்பொகுட் டாசனத்
தரசுவீற் றிருந்த வரிதுணர் பான்மைச்
சேவலோ திமமொரு சிறைப்படு காவிற்
குறுகுபு கொடுமுட் டாழைவெண் டோட்டினும்
வைகலு நசைஇய குறுபுன லூரன்
பூமக ளிலைகுலாம் பூண்முலை பொதுப்பத்
தேம்வழி பசுந்துழாய்த் திருமணி மார்பன்
றென்னரங் கேசன் றிருவருட் கிலக்கா
முரனுடை யோர்கட் குறுதுணை யெனவா
ழில்லறம் பழிபிறங் காதிருந் தில்லி

னகனமர்ந் தானு துறையுந்
தகவது மிலாத தவறு ளோனே

— பா. பா 45

நீர்நிலை முற்றலி னிழன்மலி சோலையுட்
கார்வழங் காத காலையுங் கவின்பெற
வேர்முதற் பகுத்து வியன்சினைப் பலவு
வளங்கெழு நாடவெம் மணிபுரை மாண்கவின்
புறந்தரு மாயினும் புனிதமொன் றின்று
லரவணைத் துயிலமர்ந் தருளரங் கேசன்
றா நீர்க் காவிரித் துறைபடிந் தல்லதை
யொல்லே மலரம ளியினுறப்
புல்லேம் பரத்தையர் பொதுவுணின் மார்பே

— ,, 46

உலைவினீ ரழுவத் துறுசிறை யவையி
னலைகொழித் தறைதொறு மறைதொறு மொத்துண்
டழுங்கலு ரெய்திய வாக்கைய தாகியுந்
தன்னால் வளர்க்கத் தகுசினை யதன்கண்
மன்னு தரவின் வயமீன் வைத்தகண்
வாங்கா துய்த்து வளர்புன லூரற்
கேவலிற் பிழையா வின்னிசைப் பாணர்
புதுவது வாய்வழி பிழைத்திவண் போதரு
மதுநினைந் தருவிருந் தளித்தற் கந்தோ
மதுமகிழ் மார்பினன் வழுதிநன் னாட்டவர்
குடிஞையைக் காய்திறன் குறிப்பது மின்றுன்
மாதோ மாணிழை மடவரல்
யாதோ கறியிங் கினிதமைப் பதுவே

— ,, 47

பன்மலர் சுலுலிய பழுமரச் சோலையுட்
டன்னிழ றுணையாத் தளிர்த்தமௌ வலின்மலர்
விரிகதிர் தெறுதலின் வெம்மையுற் றுணங்க
முட்புறக் குடக்கனி முடப்பல வதனயற்
செங்கிடை மலர்கவின் சிறப்பவு நிழற்று
மொண்புன லூரற் குறுபழி விளைக்கும்
யாமே திலமே திலமென வெங்கையர்
மாமணைப் பயின மாணிழை மடவரன்
மதரரிக் கண்ணாய் மதங்கனூற் றிலனுற்
புவிப்பா வலர்தம் புரவலன் மதுர
கவிப்பா வலன்புகழ் கருணையங் கடலெனு
மதுமகிழ் மாலிகை மார்பினன் மயர்வறச்
சதுமறைப் பொருளாற் றருந்தமிழ் மறைத்துணி

வுரனுடை யோரி னுணர்ந்துயர் வறவுயர்
நலனுடை யிறைநிலை நவையறத் தெளிந்தோர்
பழிதீர் படிவம் பயின்றன ராகிக்
குணவத மிழந்த கூடா வொழுக்கின்
மனனக மலமிக மறுகுன
ரினமென லொன்று யிகழ்பொய்ம் மையனே

—பா. பா 48

ஒன்றுய்ப் பரந்த வுறுவளி கறங்கலின்
மின்றுழ் பன்மீன் மிளிர்விசும் புழுசினை
சுமைமலிந் தொசிதரத் துணர்த்தமென் பூமுகை
பொறிச்சுரும் புளர்தொறு முளர்தொறும் பொதும்பருண்
முறுக்குடைந் திழிதரூஉ மொய்ந்நறுந் தேறல்
பரந்துபன் முகத்தவாய்ப் பவளக் கொடியொடுங்
குரூஉக்கட் பரூஉத்தாட் குடம்புரை செருத்தற்
கயவாய் மேதி கட்கழு நீருண்
டுயவால் வைந்நுதித் தொடர்நெறி மருப்பிற்
புறக்காழ் வயிரப் பூங்கழை தடிந்துகு
நிறக்காழ் நித்தில நிரந்தரம் வரன்றயல்
வெள்ளிடை நிவந்த மேதகு சுவலினை
யுள்ளுயிர்ப் பேடையை யுறையுளி னிருத்திப்
பாலுணீர் தெரித்துப் பருகுமொண் சேவ
லாலுநீர்ச் சிறைபுக் காய்ந்திரை கொணர்வலென்
றிகந்தற லிடைப்படிந் தெழுமயர் வுயிர்ப்பான்
வாலுக வைப்பென மறுகுபு குறுகிவீழ்ந்
தன்மையிற் றவக்குற் றச்சப் பார்வையிற்
புராதனப் பொய்கையுட் புகும்புன லூர
பொருவரு தாமரைப் புதல்வனைப் பயந்த
திருமறு மார்பினன் றிருவரங் கத்துட்
பொதுநலப் பெண்டிர் பொதுவுணின் மார்ப
மல்ல னீர்படிந் தல்லது
புல்லேந் தீண்டலெம் பொன்னடிப் போதே

— ,, 49

ஓங்கிய குரம்புசா ருவளக வயின்வயின்
வீங்கிய திணிதோண் மிடலுடை மள்ளர்
சுதைபெய் தாற்றலிற் சுடுமண் பன்முறை
ததைவுறப் படுத்த சால்பிற் றெண்ணீர்
வார்ந்துகு கவர்முழை மதகுபடர் குடுமியிற்
சேர்ந்தசை வறவிரு சிறகரு மொடுக்கி
மறைபுகு நோக்கின் மனப்பட் டிமையாற்

றுறைபுகு கயலினைச் சோர்புகண் டெடுத்துக்
கூர்வாய் வெண்சிறைக் குரண்ட மென்பெடைக்
கார்வா யெனவருத் தியினருத் துபுதுடித்
தயல்வீழ் வதனையாங் கற்றம் பார்த்து
மிச்சிலென் றறிந்தும் விழுநெறி யொரீஇ
நச்சியுண் புலவு நாற்றத் தோடுஞ்
செங்கால் வெள்ளுகிர்ச் சேவ லோதிம
மொருசிறை யிருந்த வோவாச் செவ்வி
யிருசிறைப் பெடையுறை யெழின்மலர் குறுகு
நளிமலர்ப் பொய்கை நல்வய லூர
திருநெடு மாயன் றிருவரங் கத்துப்
பொருணசைப் பரத்தையர் பொறித்தநின் மார்பிற்
றனக்குறி யாநிற் றழுவுபு சிதைவுறின்
மனக்கிட ரிழைப்பது மன்றி
நினக்கிட ருறுமா னெருங்கலெம் மிடனே

—பா. பா 50

விசும்பு தூர்த்தெழு வியன்சினை மாத்தின்
பசும்புறத் தீங்கனி பரீஇநுகர் கடுவன்
புரப்பவர் குறுகுபு புலம்புரீஇப் பொங்க
ரிரிந்தலம் போதரு மீர்ந்தண் சோலையுட்
புளிங்கறி வேட்டபுன் றெழின்மையர்க் குறுது
பழிப்பின் றுகப் பாகுசெய் தட்ட
கோதறு மான்பாற் குழம்புபொற் கலத்தினுட்
பெய்திருந் தாறிய பெற்றி போல
முடவடிப் பலவின் முட்புறக் குடக்கனி
வேர்முதற் பழுத்து விரிந்தபொற் றீஞ்சுளை
பதனழி பான்மைப் பாய்புன லூர
நூற்கடற் பழகிய நுண்ணுணர் வுடையோ
ராற்றலிற் பரவுசீ ரரங்கனுக் கமைந்த
பாற்கடன் முற்றப் பருகுதற் கெழுந்த
பேராப் பெரும்பசி யாளர்தம் முன்ன
ராரா வள்ளத் தமுதமைப் பவர்போற்
சிறுவரை யின்பத் துறுதுய ரிழைத்தற்
கிரத்த லீங்கியல் பன்றுற்
பரத்தையிற் பிரிதனின் பண்பா கும்மே

— ,, 51

திரைகொழித் துயிர்ப்பன திகழ்வலம் புரியே
வலம்புரி யுயிர்ப்பன வாணித் திலமே
நித்தில முயிர்ப்பன நெடுவெண் ணிலவே
நிலவுற வுடர்பிணி நெகிழ்வன குமுதங்

குமுதமங் குயிர்ப்பன குளிர்தெண் ணறையே
நறைநதி, சுழித்தெடுத் தனவாய்த் துறைதொறுந்
துறைதொறுந்
தெழித்துயிர்ப் பனவுங் குறுமணித் திரளே
மணித்திரள், பரிதிபோன் றிரவினைப் பகற்செய் வனவா
லருகுநின் றலர்வன வம்புய மலரே
மலரினை, அளகமர் புறவினு ளான்புன லுணமரீஇக்
குளகென மாந்துபு குழக்கன் றுள்ளலும்
உள்ளிப், படர்வுழிப் பணைமுலைத் துளைவழிக்
குடமடித் தீம்பால் குதித்திரு நிலத்துற
அப்பால், ஆறிரண் டெனப்பகுத் தலைத்தெழு நனந்தலை
வீறுட னெக்கர்கூர் வெண்மணல் வெள்ளிடை
நள்ளிடை, மதியக டுரிஞ்சிய மழைதவழ் பொதும்பர்ப்
புதியமென் மலரினைப் பூத்த காயா
வைகலுஞ், சொரிதரு நாண்மலர் துவன்றுயர் நீளிடை
விரிவன வாகி விழுமிதின் விளங்கும்
அத்திறம், பாலா ழியினடுப் பரிமள வரவணை
மேலாய் விழிதுயில் விமலனைப் பொருவருஞ்
சங்கணித், துறைபயில் பொருநைச் சொற்றமிழ்க் குருகூ
ரிறைவநின் பொன்னடி யிறைஞ்சுகே னின்னும்
நானிலத் தொருபிறப் புனதா நன்னகர்
மானிடப் பிறவியி லாணுரு வெனலா
மதுமுத லியபெறற் கரியன வெளிமையிற்
பொதுவற வெய்திநிற் புகழ்புல வனெனுப்
பருமணி குயிற்றிய பசும்பொற் கும்பத்
தருண்மலி மஞ்சன மாடிய காலையி
லுத்தன வீரவா டையுமுறுக் கொலியலு
மத்தக வடைந்தவ ணலங்கரித் தெழுதிருக்
கைத்தலச் சேவையு முத்திரைக் கரமுஞ்
சித்திர நாபியிற் செறித்தகைத் தலமும்
புத்தமு தனையசெந் தமிழ்மறைப் பொருள்புணர்
முத்தமுந் திருப்பவ ளமுங்குறு மூரலு
மறுத்துடைத் தொளிர்முழு மதிமுகச் சோதியு
முறுப்புடைத் திருக்குழை யுருவமும் புருவமும்
நயனமர்ந் தருள்புரி நயனும் புயமு
மயன்முதன் மதித்தபத் மாசனத் திருப்பும்
வகுளா பரண மார்பமு மவுலியு
முகுளா தினைவிழி முழுதுறு காட்சியிற்
கூடிய வுணர்வொடுங் குழைந்தெழி லுவாற்
பாடிநின் றடியும் பன்னாள் கழிந்தபின்

பொருவில்பே ரின்பமும் புணர்வான்
ஒருவரந் திருவுள முவந்தருள் கெனவே

—பா. பா 52

கார்கதழ் பரிநெடுந் தேரின்முந் தியதாற்
காகோ தரவணைக் கண்டுயி னெடுமால்
கார்வா னத்துகு மாரியும் வலவா
காரிகை மையுண் கண்கலுழ் மாரியுங்
காமனெங் கணைமலர் பொழிநறை மாரியுங்
காட்சிமுந் நீரிற் கலந்திவ ணெதிர்கொளுங்
காலுருள் கொடாததை யறிந்தொரு கனவரை
காணுதி யவணுறக் கடாவுதி யிரதங்
காவலுன் னுயிர்க்கினி யதுவே
காவலின் றெனதுயி ருறுதுயர்க் கடற்கே

— ,, 53

அணங்கனு ளுறையுளென் பதுந்தா மரையே
சுணங்குலா மிளமுலை துணைத்தா மரையே
யொளிர்முக மரங்கனுந் தியந்தா மரையே
தெளிதரின் மதர்விழி செந்தா மரையே
தொடிக்கையுந் துணைத்தா மரையே
யடிச்சுவ டணியிழா யலர்தா மரையே

— ,, 54

அராவணை மிசைத்துயி லமர்ந்தரு ளரங்கனைக்
கராசல மூலமென் றழைத்தருள் கண்ணனை
முராரியை யிரணியன் மதுகையை முறுக்கிய
நராரியை நயந்திறைஞ் சினரே
தராதலம் விரும்புமந் தாமமெய் துவரே

— ,, 55

செந்தா மரைமகள் புணர்திரு வரங்கன்
கார்க்கடல் வண்ணன் கண்ணனெம் பெருமான்
வாமனன் கேசவன் மாதவன் சீதரன்
நெடியோ னீரடி யெனநில மளந்தோன்
அடியிணை நறுமல ரதுதூய்
முடிமிசை தரிப்பவர் முத்தரா குவரே

— ,, 56

ஆஅ னிரைகாத் தருளரங் கேச
னீஇ னிறக்கரி நிழன்மருப் பொடித்தோன்
பூஉ மகள்புணர் புயலடித் துணையிற்
றோஎ மலரிடு மவர்வினை
போஒ மொருநொடி யினிற்புறக் கொடுத்தே

— ,, 57

நாவே விழுமிய நலனுடை முதற்பொருள்
பொருளுரை யாய்தரிற் புலமற் றுளதே
யுளதே வண்டிமி ருறுமல ரோடை
யோடை மால்வரை மூலமென் றுரைசெய
வோடை மால்வரை மூலமென் றுரைசெய
வுரைவிசைத் தடங்கா வொல்லையிற் குறுகுபு
புனிற்று வெனவருள் புரிந்திடர் செகுத்த
வறைபுன லரங்கத் தமுதினை யன்றியு
மதித்தொரு முதலினை மகிழ்ந்து
துதிப்பது முளதோ சுரர்பொரு நாவே

—பா. பா 58

திடனே திடனே திடனே திடனே
யிறைதிரு வரங்க னென்பது
மறைமுத லரியென வாழ்த்திய துறினே

— ,, 59

மாறனை யேத்தார் விழுதீ நரகிற்
சுடுநெறி யினியார் செல்வர்
விடலைநீ கங்கு லாறியே குதியே

— ,, 60

இரவினி லிருள்கடி முழுமதி வதன
மிதுசிறு பிறைநுத லிவைமுரி புருவவி
லினமணி நிரையென வணிநகை யிலகிய
திணைவிழி யிருகய லிணைபணி மொழிநறை
யிளமுலை மரைமுகை யிடுகிடை யிலையா
லிலைவயி றிமிழ்வளை களமெனு மிருநில
மிமையவ ரிறைவனொ டிரதிம னிருடிகண்
மனமரு டகைமட வரலெனு மமுதினொ
டளிமுரன் மதுமகி ழணிவர முனிவரை
யளவிய நலனிவ ணமைதலு
மவணெனை யெதிருரை யினனனு பமனே

— ,, 61

அறமுத லரியெனு மவனே பரனே
யணுவினு ளவனே செகமுணர் பரனே
மனனே கரிசெல வருபுயல் பரனே
யமுதரு ளினனே யவனே பரனே
நிலனே வானே நிறைமுதல் பரனே
வலனே தரிதிகி ரியனே பரனே
யயனே சிவனே யயனே பரனே
யின்னண மமைதர லிறையரங் கேசனைப்
பொன்னடி பணிபவர் புகுபதி
பன்னருஞ் சிறப்பிற் பரந்தா மமதே

— ,, 62

முற்குண னுற்பவ மாதலின் முழுமுதல்
பொற்கம லத்திரு முற்ற முயங்கிய
வற்புத னரண னுமென வுற்றபி
னற்றது பற்றெனி னுற்றது வீடுயிற்
செற்றது மன்னுறி லற்றிறை பற்றே
பற்றில்ன் முற்றி லடங்கென நற்றமிழ்
கற்றவன் மற்றிரு பற்றறு கொற்றவ
னுத்தம ஞானமுத் திரைக்கையு முகமும்
பத்திமை யாற்றெரி சிப்பவர்
நித்தர்வந் தெதிர்கொள முத்தரா குவரே

—பா. பா 63

அறிவில ருணர்வுள ரெனுமவ ரளவினி
லருவமொ டொளிர்தரு வுருவம துடையனை
யெளியனை யடியவர்க் கேனையோர்க் கரியனைக்
கனவினு நனவினு மறிதுயிற் கண்ணும்
வெண்சங் காழி செம்மணிப் பொன்முடி
காலையு மாலையுங் கண்டுநன் பகலினு
மின்புறத் துன்பமற் றிம்பரொ டும்பரு
ணறவார் மலர்மக ளுதனை
மறவா தவர்பதம் வாழ்த்துமென் னுவே

— ,, 64

நாஅல் வாஅய் மூலமென் றழைப்பச்
சாஅல் புணர்ந்து தாஅன் விரைதலின்
காஅ லெனநிமிர் கலுழனிற் போஒ
யாஅழ் நீஇர் வாஅழ் முதலையி
னுஅ ருயிருண் கோஒ மாஅன்
ருஅ தாஅர் பூமகள் சேஎர்
மோஒ கூஉர் மாஅ மாஅ
லெனவொரு காலுரை நாவே
நமையொரு காலமு நண்ணு னமனே

— ,, 65

கடுவே கயலெனக் கருநெடுங் கண்ணிணை
காமனுங் காமுறுங் காட்சிய காண்முகங்
கிள்ளையின் கிளவியுங் கிளைத்தகைக் கிளையுடைக்
கீரமுங் கீர்த்திக் கீரமுங் கீரே
குவடுடைக் குளிர்பொற் குன்றே குவிமுலை
கூற்புதற் கூன்சிலை கூற்றுயிர் கூட்டுனுங்
கெடலருங் கெழுதகை கெழுமுபு கெழீஇய
கேகயங் கேளொடுங் கேடுறுங் கேழியல்
கைபுனை கைக்கிசை கைக்கிணை கைத்துணை

கொண்டலுட் கொண்டன கொண்டையுங் கொடியிடை
கோடாக் கோவலர் கோற்றொடி கோமான்
கௌரவ கௌசிகன் கௌசிகங் கௌத்துவ
மணியெனக் கொண்டுமுன் மனவீ டளித்தோன்
கண்ணகன் குறுங்குடிக் கணவரை
மண்ணகத் துறையுளாய் வளர்நிலே மகட்கே

— பா.பா 66

இவையனைத்தும் பல்நிலேயில் அமைந்த நேரிசை யாசிரியப்பா:

தேமகிழ் மார்பன் றுடரியஞ் சிலம்பிற்
ருமரை மலருங்
காமரு குவளேயுங்
கோங்கரும் பிணையுங்
பூங்கரும் பிணையுந்
தாமலி பூங்கொடி தருமனக் களியே

— ,,67

படுதிரைப் பௌவமும் பானலம் போதும்
விடுசுடர்க் கதிர்வர விரிமரை மலருங்
கடுவுங் கணையும்
வடுவும் பிணையு
மடுபோர் கூற்றின் கணிச்சியுங்
கொடுவே லிணையுங் குறிக்கொளுந்
தடுமா றுண்கட் டாழ்குழ லாயத்
தொடுவாழ் வெய்திட முபநிட தப்பொரு
ணடுவாய்த் தமிழ்மறை நவின்றருண் மாற
னெடுமால் வரைச்சந் தனத்தண் ணிழலே

— ,, 68

இவை இரண்டாம் வகையான இணைக்குறளாசிரியப்பா.

வெண்டிரைப் புனற்கா விரியயல் விரிந்த
வண்டிமிர் பாசடைக் குவளேமென் பனிமலர்
முட்டாட் டாமரை முறுக்குடை நாண்மல
ரரக்கெறி வள்ளித ழாம்பற் போதுடன்
மேய்தரு கயவாய் மேதிகன் றுள்ளுபு
பணேமுலே சுரந்து பனிற்றுபாற்றடினி
நெட்டிலே யரம்பையி னீடுபொற் கூன்கனி
முடவடிப் பலவின் முட்புறக் குடக்கனி
நெடுவெண் டிங்க ளடுமறுத் துடைத்திடுஞ்
செந்தளிர்ப் பொங்கர் மாவின் றீங்கனி
சுழித்தெழு திரைக்கையிற் றூமலர் பலகொடு
பாற்கடல் பொன்னிபுட் படிதிரு வுருவங்

காண்பதின் முன்னிய காமர் காட்சியிற்
றுறைதொறுந் துறைதொறுந் துழனியின் வளைக்குந்
திருவரங் கேசனைத் திருமறு மார்பனை
வாழ்த்தியும் வணங்கியும் மனத்துற நினைக்குந
ரெக்குலத் தெவரே யாயினு
மக்குலத் தவர்க்கடி யேனடி யேனே

— பா.பா 69

வான்றிக ழுதய மதிமழை முகிற்கீழ்
மீன்றிரி தமர வெண்டிரை வைப்பினு
ளருவியஞ் சுவண வருவரை ஞாங்கர்
வாழ்திற மெனலாய் வதனமு மோதியுங்
காழ்புனை திதலைமென் கதிர்முலைச் சுவடு
முறுப்பமைந் தோவிய முயிர்ப்படைத் தியங்குத
லறியா தாங்க ணணிவரைச் சாரலிற்
செறியா வுடைந்ததென் றிண்ணிய நிறையே

— ,, 70

மன்னோர் நின்றனன் வடமலை மிசையே
முன்னே சிலர்தொழ முயல்வது கண்டே
பொன்னே யலவிடு வதுமொரு பூவே
யென்னே சிலரெவ னரகெய் துமதே

— ,, 71

இவை எல்லா அடியும் நாற்சீரான நிலைமண்டில ஆசிரியப்பா.

பதிகளி னதிபதி திருமகள் பதியே
துதிகளி னதிபதி தமிழ்மறைத் துதியே
மதிகளி னதிபதி மாறனுண் மதியே
நதிகளி னதிபதி வரசுர நதியே

— ,, 72

இது அடிமறிமண்டில ஆசிரியப்பா.

தண்ணறுங் கடப்பந் தார்ச்செவ் வேளொடு
மொண்மையுங் காந்தியு முயர்குடிப் பிறப்பும்
வாய்மையுங் குறையிரந் தொழுகலும் வண்மையுந்
தூய்மையும் வைகலுந் தொடர்பிடை விடாமையு மல்லாற்
கன்னலின் வளமலி கழனிநன் னாடும்
பொன்னெடுங் குன்றமும் புரவல புரப்பினுங்
கலைபயின் மாறன் காரிதந் தருள்கார்
மலைவளர் மயிலனை யாட்கு
முலைவிலை யாமென மொழிதலொல் லாவே

— ,, 73

கண்ணன் வானோர் பெம்மான் கார்போல்
வண்ணன் மேர் கூர் வைகும் மாயோன்

றண்ணந் தாமந் தாரான்
விண்ணின் றிங்கட் கென்செய் வேனே

— பா.பா 74

மறைநவின் மறைமொழி வகைமயர் வறவுறு
முறைதரு தமிழ்மறை மொழிமகிழ் முனிவனை
யிறையென வுணர்பவ ரெவரவ
ருறைபதி மலர்மக ளுறைபர னுலகே — ,, 75

## ஆசிரிய இனம்

கஞ்சத் திருமால் கழல்பரவு மாறனுர்
செஞ்சொற் றிருவாய் மொழியுணர்ந்த சீலத்தார்
வஞ்சப் பிறவி வலைப்பட் டுழலாரே
ஆயத் தகுமா லடிபரவு மாறனுர்
நேயத் திருவாய் மொழியுணர்ந்த ஞானத்தார்
மாயப் பிறவி வலைப்பட் டுழலாரே
தந்திக் கருண்மால்பொற் ருள்பரவு மாறனுர்
சிந்தித் துரைத்ததிரு வாய்மொழித்தேர் சிற்குணத்தார்
வந்திப் பிறவி வலைப்பட் டுழலாரே

— ,, 76

இருநில மூவடி யெனவளர்ந் தோங்கிய
திருமறு மார்பனைச் சிந்தையுள் வைப்பவ
ரொருபொழு தினுமிட ருறுவதொன் றிலரே

— ,, 77

இவை ஆசிரியத் தாழிசை

அலைபயில்பாற் கடல்கடைந்தன் றமுதளித்த திருவரங்கத்
தமுதை யேத்துங்
கலைபயில்வண் டமிழ்க்குருகூர் மகிழ்மாறன் வரையனையீர்
கட்ப டாந்தீர்
முலையெனுமான் மதக்களிற்றின் முன்னிறுத்தி வினையேனைக்
கொலை பயில்வேல் விழிபுதைத்த தறநிலையோ வறநிலையோ
கூறுவீரே

— ,, 78

திரைத்திருப்பாற் கடல்கடைந்து தெள்ளமுதும் பருக்களித்த
திருமால் செய்கை
யுரைத்திருப்பா ரிடத்திழைத்த வூழ்வினைசென் றணுகாதென்
றுரைப்ப தொன்றே
வுரைத்திருப்பா ரிடத்திழைத்த வூழ்வினைசென் றணுகாமை

வரைத்திருப்பா ரிடத்திழைத்த வல்வினையும்
வரைத்தவர் பான்மருவா தன்றே
— பா. பா 79

வண்ண மகிழ்மாறன் மால்வரைமா னனைத்துட்
கண்ணென் றிகல்புரிவன் கூற்றினையேன் வைத்தானெண்
கண்ணு ளானுங்
கண்ணென் றிகல்புரிவன் கூற்றினைவைத் தாலயலா
ருண்ணின் றுயிர்கவர்வ துள்ளாதென வெளிவிட்டா
ருரனுள் ளாரே
— ,, 80

இவை ஆசிரியத்துறை.

நெடுவான் கலைவயிரத் திழைத்தபருப் பதக்குடுமி நீவ நாளு
மோடுவான் மதியகட்டி னுறுபிணையைப் பிணையெனக்கொண்
டும்பர் வாவக்
கோடுவார்ந் திழிதருதெள் ளமுதவரு வியிற்குழுமிக்
கொடிய னுரே
யாடுவார் மைந்தருமுண் டுண்பதுமத் தெள்ளமுதே
யவர்க ளுளும்
— ,, 81

படியின்மேற் படிந்தகதிர்ப் படைமீது கிளர்களையாம் பனிவண்
டாடிக்
கடியுணீ லமுநறுமென் கமலமுஞ்சாய்ந் துடன்கிடந்த
காட்சி கூறி
னடியுமா கமுந்தழுவிக் கொழுநரொடுங் கலவியினி லழுந்தி
யோர்தம்
முடியுமே தகவுடைநன் முகத்துறவைத் துடன்றுயிலு
முறையே போலும்
— ,, 82

நிறந்தழைவான் கதிருணங்க வங்குரித்தங் குடன்வளர்ந்த
நீர்மைத் தாகுந்
திறந்தழைசெங் கமலமுமிந் தீவரமு முடனுணங்குஞ்
செயலுந் தீந்தேன்
வறந்தரவண் டினந்துறந்த செய்கையுநீ ரவருறவின்
மாண்புங் கள்ளுண்
டறந்தவறித் திரிகளிய ருறவினிழி வையுமுணர்த்து
மமைதித் தாமே
— ,, 83

காழகிற் பொழிலுஞ் சந்தனப் பொழிலுங்
கமழ்நறுஞ் சண்பகப் பொழிலுங்
கோழரைக் கமுகு நாளிகே ரமும்பொற்
கோங்கும்வேங் கையுமலர்க் குருந்து

மாழையஞ் சுளைமுட் புறக்கனிப் பலவு
மாவுநா கமும்பணை மருதுந்
தாழையுமகிழும் வாழையுங் கரும்புந்
தனித்தனி தழைத்தவெம் மருங்கும்

— பா.பா 84

மரவமுங் கடமும் பனசமும் பிடவும்
வடமுமா தவியுமா துளமுங்
குரவமு மிலவுந் திலகமும் விளவுங்
கொன்றையுஞ் செருந்திலுங் குமிழு
மரசுநா வலுந்தான் றியுமரீ தகியு
மாமல கமுநரந் தமுமாம்
பிரமுமே லமுமார் மரமும்வே ழமுஞ்சம்
பீரமுந் துவன்றசால் பினவே

— ,, 85

வள்ளையங் கொடியு முல்லையும் விரைமென்
மயிலையு மிருபுடை மயங்கிக்
கொள்ளைவண் டினம்பாண் முரன்றறு பதத்தாற்
குடைந்துதே மதுமடை திறக்கு
முள்ளுடைக் கொழுந்தாட் கமலமும் விரவி
முறுக்கவிழ் குவளையு மிரவின்
விள்ளிதழ்க் குமுதத் தொகுதியும் பகுதி
விளக்கும்வா விகள்பல பலவே

— ,, 86

தாழிதடங் கடலகடா யொலிக்குந் தண்ணந்
தளிதருதீம் பாறயிராய்த் தலைப்பெய் கோவாப்
பாழிநெடுங் கிரியெனுமந் தரமத் தாகப்
படநாகம் வடமாகப் பரந்த தேவர்
வாழியிருந் தெள்ளமுதங் கடைநா ளாழ்ந்த
வயிரவரை யிணைக்கமட வடிவா யேந்து
மாழிபுனைந் தெழுதடக்கைப் பெம்மான் றெண்டர்க்
கடியவரா நிலைமையரென் னடிக ளாவார்

— ,, 87

வெற்றானென் றிசையாது சாவா மூவா
விழுமருந் தொண்டுறக்க மேய்வா னேரை
செற்றானென் றிசைகனக னிங்கு ளானே
சிறுவனென மதுகைநர சிங்க மாகிப்
பொற்றாணெட் டகடுகிழித் தவன்ற னுகம்
போழ்ந்துகிரா லளைந்துகுடர்ப் புண்ணீர் மாலை
கற்றாணம் பொருவுதிர டிண்டோள் வேய்ந்த
கருணைவரைக் கடிமைசெயுங் காட்சி யாரே

— ,, 88

தேனிலங்கும் பைந்தாம மாலை மார்பிற்
றெசரதனன் மகவாகித் திண்கான் மேவி
வானிலங்கொ ளேழுமரா மரமும் வாலி
மார்பகமு மிலங்கேசன் மவுலி பத்து
நானிலத்தின் றிழிதரவோர் வாளி தூவி
நன்னுதலா ளுடன்கூடி யிளவ லென்போன்
றுனிலங்கா புரம்புரப்பக் களித்த வென்றித்
தனுராமன் றனக்கடிமை தழைந்து ளாரே

— பா.பா 89

உடைமணியுங் கிண்கிணியுங் கறங்கா வண்ண
மொதுக்கிமழ வொன்றுடனு ளற்ற நோக்கி
யிடைமகளிர் மனையிடைபுக் கதன்பொற் றேண்மீ
தேறிநிமிர்ந் திடக்கையுறி பிடியா மற்றைப்
புடைமலர்க்கை கொடுவெண்ணை தொடுவுண் டந்தப்
புதல்வனுக்கும் பகுந்தருத்திச் சிங்க நோக்கிற்
கடைநயன மணிவாயில் பற்ற நின்ற
காட்சிநினைந் தாடுவார் பாடு வாரே

— ,, 90

இவை யனைத்தும் ஆசிரிய விருத்தம். காலவாரியாகத் தரப்படுவதால், தொடர்ந்து சிதம்பரச் செய்யுட் கோவையின் பாடல்கள் தொகுக்கப்படுகின்றன.

பொற்றூது பொதிந்த சிற்சபை பொலியப்
பச்சிளங் கொடியொடு படருஞ்
செக்கர் வார்சடைக் கற்பகத் தருவே

—சி. செ. கோ 41

பூஉந் தண்ண் புனமயி லகவ
மாஅங் குயில்கள் சாஅய்ந் தொளிப்பக்
கோஒ டரங்கண் முசுவொடும் வெரீஇக்
காஅ றழீஇக் கவிழ்ந் தொடுங்கச்
சூஉன் முதிர்ந்து காஅல் வீஇழ்
வாஅன் றூஅழ் மழைபெய றலைஇத்
தேஎன் றூஅழ் பூஉங் காஅ
வளங்ங் கனிந்த மணிமன்றுள்
விளங்ங் கொளியை யுளங்கொளல் தவமே

— ,, 42

இவை நேரிசை யாசிரியப்பா.

தண்ணெனன் கடுக்கை கண்ணீர் கலுழ்தர
வெண்மதிக் கண்ணி சூடுங்
கண்ணுதற் கடவுள்

புண்ணியப் பொதுவி லாடும் பூங்கழ லிறைஞ்சுதும்
விண்மிசைப் போகிய வீடுபெற்ற பொருட்டே

— சி. செ.கோ 43

இது இணைக்குறள் ஆசிரியப்பா.

மாயிரு விசும்பிற் றூநிலாப் பரப்பிப்
பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்
மின்செய் கொண்மூ வெள்ளிவீழ் வீழ்ப்பப்
பொன்செய் மலர்ப்பூங் கொன்றையும்
புலியூர் மன்றி னொலிகழன் மிழற்றப்
பரம நாடக மிருவரைக் காட்டும்
எரிநிறத் தைம்முகத் தெண்டோண் முக்கட்
கருமிடற் றொருவநின் செஞ்சடைப் பொலிதலின்
நோயு மருந்தும் ஒருவழிக் கிடைத்தென
ஆருயிர்த் தரித்தன என்றே யதாஅன்று
தெள்ளமு தன்னவ ருள்ளுயிர் குடிக்குமித்
திங்க ளொன்றே திருமுடிக் கணியின்
கங்கை யாளும் உயிர்வா ழாளே

— ,, 44

தீர்த்த மென்பது சிவகங் கையே
யேத்த ருந்தல மெழிற்புலி யூரே
மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே

— ,, 45

## ஆசிரிய இனம்

சத்தமு மாகியச் சத்தத் தாற்பெறும்
அத்தமு மாகலின் அனந்தன் கண்களே
உத்தம னைந்தெழுத் துருவங் காண்பன

— ,, 46

சிற்றம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
கற்றைச் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
மற்றப் புனன் மங்கை வாணுதலை யொக்குமால்
பேரம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
வார்செஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்கள்
நீர்மங்கை கொங்கைக்கு நித்திலக்கச் சொக்குமால்
பொன்னம் பலத்து நடிக்குஞ் சிவபெருமான்
மின்னுஞ் சடைக்கு முடிக்குஞ் சுடர்த்திங்க
ளந்நங்கை செங்கைக் கணிவளையு மொக்குமால்

— ,, 47

இவை ஆசிரியத் தாழிசை:

நாகம் பொதிசடைமேல் நாண்மதியும் வான்மதிபோல்
நங்கை கங்குல்
மேகஞ்செய் கூந்தன் மிலேச்சுந் தலேக்கலனும் விளங்குந்
தோற்றம்
ஆகம் பகுந்தளித்த வந்நாளி லம்பலத்தான்
மாகம் பதியு மதியும் பகுந்தளித்த வண்ணம் போலும்
—சி. செ.கோ 48

மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள் கண்களிப்ப மன்று ளாடும்
நாயகன் கண்டங் கறுத்தன்றே பொன்னுலகை நல்கிற்றம்மா
நாயகன் கண்டங் கறுதேலந் நாட்டமரர்
சேயிழை மாதருக்குச் செங்கைகளுங் கொங்கைகளுஞ்
சிவக்கும் போலும்
— ,, 49

உண்டாங் கெனினு மிலதென் றறிஞர்கள்
பொய்யெனப் புகலவு மெய்யெனப் பெயர்பெற்
றுன்னுமுன மின்னுமென வுளதாய் மாய்வது நிலேயில்
யாக்கை
கண்டாங் கிகழுங் கிழமுதி ரமையத்
தைவளி பித்தென மெய்தரும் வித்திற்
கடலிற் றிரையென வுடலிற் றிரையொடு
கலியா நின்றன நலிவுசெய் நோய்கள்
புண்டாங் கயின்முக் குடுமிப் படையொடு
மெயிறலேத் தழல்விழித் துயிருணக் கனல்சேர்
புகையாமென நிழலாமெனத் திரியா நின்றது
கொலேசெய் கூற்றம்
விண்டாங் ககலுபு மெய்ப்பொரு டுணிவோர்
மின்பொலி பொன்புனே மன்றிலெம் முயிராம்
விமலன் குஞ்சித கமலங் கும்பிட
வேண்டுவர் வேண்டார் விண்மிசை யுலகே
— ,, 50

திங்கட் சடைக்கற்றைப் புத்தே டிருமார்பிற்
பைங்கட் டலேகள் பலவு நகுவ போலுமால்
பைங்கட் டலேகள் பலவு நகுவகண்
டங்கட் கமலத் தயனு மாலு மழுவரால்
— ,, 51

இவை பல்வகை ஆசிரியத் துறை.

கனம ளித்தபைங் காவில்வெண் டரளமும்
பவளமுங் கமுகினப்
புனம ளித்தபூங் கொன்றைபொன் சொரிதரப்
புண்ணிய மலர்த்தில்லே

வனம ளித்ததே யெனினுமோ ரானந்த
மாக்கடற் றிளைத்தாடும்
அனம ளித்தவேழ் பொழிற்குமோர் பலமென்ப
தம்பொனம் பலந்தானே

— சி. செ.கோ 52

கோமுனி வருக்குமரி தாய்முதும றைப்பனுவல்
கூறிய பரப்பி ரமமாம்
ஓமெனு மெழுத்தின்வடி வாய்நட நவிற்றுபுலி
யூரன்மகு டச்ச டிலமேல்
மாமதி யினைத்தனது கோடென வெடுப்பமத
மாமுகன் முகக்கை தொடரத்
தூமதி பணிப்பகை யெனுவர நதிப்புகவோர்
தோணியென விட்ட கலுமே

— ,, 53

அருவருக்கு முலகவாழ் வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வா மாடல்காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் றீநீர்
மண்ணெனுமெண் வகையுறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கு மொருத்திக்கு முருவொன் றுலவ்
வுருவையிஃ தொருத்தனென்கோ வொருத்தி யென்கோ
இருவருக்கும் முரித்தாக வொருவ ரென்றோர்
இயற்சொலில தெனின்யான்மற் றென்சொல் கேனே

— ,, 54

வளங்கு லாவரு மணங்க ளுர்விழி
மயக்கி லேமுலை முயக்கி லேவிழு மாந்தர்காள்
களங்கு லாமுட லிறந்து போயிடு
காடு சேர்முனம் வீடு சேர்வகை கோண்மினோ
துளங்கு நீள்கழ றழங்க வாடல்செய்
சோதி யானணி பூதி யானுமை பாதியான்
விளங்கு சேவடி யுளங்கொ ளீர்யமன்
விடுத்த பாசமு மடுத்த பாசமும் விலக்குமே

— ,, 55

கைத்தலத்த ழற்க ணிச்சி வைத்திடப்பு றத்தொருத்தி
கட்கடைப்ப டைக்கி ளைத்த திறலோராம்
முத்தலைப்ப டைக்க ரத்தெ மத்தர்சிற்ச பைக்கு ணிற்கும்
முக்கணக்க ருக்கொ ருத்தர் மொழியாரோ
நித்திலத்தி னைப்ப தித்த கச்சறுத்த டிக்க ணத்து
நிற்குமற்பு தத்த னத்தி னிடையேவேள்
அத்திரத்தி னைத்தொடுத்து விட்டுநெட்ட யிற்க ணித்தி
லக்கணுற்றி டச்செய் விக்கு மதுதானே

— ,, 56

இவை ஆசிரிய விருத்தம். திருவலங்கத் திரட்டின் இரண்டாம் காண்டமாகிய பல்சந்தப் பரிமளம் தரும் ஆசிரியப் பா, இனப் பாடல்கள் தொடர்ந்து தொகுக்கப்படுகின்றன.

வேத நாதன் வேலேந் தெம்மான்
பாதஞ் சூழ்வோர் பார்ப்பார்
ஓதை வேதத் துண்மை யன்றே

— தி.தி 2-1

சொல்லா னுண்மை சொல்லும் வேத
மெல்லா மேத மில்லாக் கன்ம
காண்ட ஞான காண்ட மாமந்
நீண்ட பாகந் தம்மு ணெய்தை
யாதி யில்லா வஃது நீயென்
றோது சாம வோத்து வாக்கைத்
தன்பா லுள்ள சால்பிற் றன்பி
னன்கார் ஞான நாட்டிக் கூறும்
ஆக மந்தா னுன்மா வீசன்
ஏக மில்லை யோக மென்றே
சாற்று கின்ற சால்பிற் றிந்தக்
கூற்றி ரண்டுங் கோதில் சோஹஞ்
சிற்சி வோஹ மென்று தேற
நிற்ற லாலோங் கார நீர்மை
யாக மத்து மார ணத்தும்
ஏக மென்றே யெண்ணி நின்பால்
நானு நின்றே னட்பின்
ஈன மில்வே லேந்தெந் தாயே

— ,, 2-2

துவம்பத பசுமலந் துமித்துயர் சமாதியில்
அவமிறப் பதப்பதி யடங்குத லசிபதம்
எனப்பகர் மகாமொழிப் படியுறு மிருங்கதி
மனச்சுழ விறப்பினில் வருமெனல் சரதமத்
திரமதி லெனைவிடச் சிகியிவர்
பிரணவத் திருவுருப் பெரியைநீ யருடியே

— ,, 2-3

நீயெனுந் துவம்பத நிலையா காமியமும்
மாயமே வாணவ மலமு மொழியும்
அதுவெனுந் தத்பத மதிற்சஞ் சிதமும்
மதமலி மாயா மலமு மொழியும்
ஆயினை யென்னு மசியிற் பிராரத்தம்
ஒய்வறு கன்ம மலமு மொழியும்

கலிவெண்பா; நேரிசை இன்னிசைபோல் மூன்றடியேல்
கருதப் பேர் சிந்தியல்......

— சி. பா-செ 2

செப்பல் இசையன வெண்பா மற்று அவை
அந்தடி சிந்தடி ஆகலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகவும் பெறுமே

—இ. வி 728

குறளே நேரிசை இன்னிசை பஃறொடை
சிந்தியல் என அஃது ஐந்து என மொழிப

— ,, 729

ஈரடியான் வரின் குறள்; அது இரண்டாய் அச்
சீரிய வான் தனிச்சொல் இடை சிவணி
இரு விகற்பானும் ஒரு விகற்பானும்
செப்பல் ஓசையில் சிதையாது ஆகி
அத்திறம் வரின் நேரிசை; அடி நான்காய்
ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி நடப்பின் இன்னிசை; அடிபல
துன்னில் பஃறொடை; நேரிசை இன்னிசை
அன்னவாய் மூன்றடியான் வரின் சிந்தியல்
வெண்பா ஆதலும் விதி எனப்படுமே

— ,, 730

வெள்ளைக்கு இயற்சீர் வெண்சீர் விரவி
ஏற்கும் அளவடி, ஈற்றடி சிந்தடி,
ஈற்றுச்சீர் அசைச்சீர், உக்குறள் மிகலுமாம்

—தொ. வி 220

வெள்ளையுள் பிறதளை விரவா. வெண்டளை
ஒன்றாய்ச் செப்பலோசையாம். அஃதே
ஏந்திசை வெண்சீர்; இயற்சீர் தூங்கிசை;
ஒழுகிசை இரண்டும் உளஎனிலாகும்

— ,, 221

குறள் சிந்து இன்னிசை நேரிசை சவலை
பஃறொடை என வெண்பா ஆறு; அவற்றுள்
ஈரடி குறளே, இருகுறள் சவலை,
இருகுறளிடைக் கூன்இயை நேரிசையே,
நாலடி விகற்ப நடை இன்னிசையே,
நேரிசை இன்னிசை நேர் மூவடிச் சிந்தே,
நாலடி மிக்கு அடிநண்ணில் பஃறொடை
என அறுவெண்பா ஏற்கும் நடையே

— ,, 222

வெண்பா அளவடி வேண்டப் படுமே

—மூ. வீ.-யா செ 1

உரத்து எழு செப்பலோசையைத் தழுவி
இரண்டு அடியாய், ஈற்றடி முச்சீராய்
ஒருவிகற்பானும் இருவிகற்பானும்
வருவது குறள்வெண்பா எனப்படுமே

மு. வீ-யா. செ 2

இடையில் தனிச்சொல் பெற்று இருகுறளாய்
ஒருவிகற்பானும் இருவிகற்பானும்
வருவது நேரிசை வெண்பா ஆகும்

— ,, 3

தனிச்சொல் இன்றி ஒரு விகற்பானும்
தனிச்சொல் இன்றி இரு விகற்பானும்
தனிச்சொல் இன்றிப் பல விகற்பானும்
தனிச்சொல் பெற்றுப் பல விகற்பானும்
தனிச்சொல் மூன்றும் அடியில் தழுவி
இருவிகற்பானும் வருவது இன்னிசையே

— ,, 4

அடியடி தோறும் தனிச்சொல் பெற்று
வருவதும் அதன் இயல்பாம் எனமொழிப

— ,, 5

நேரிசைபோல,இரண்டாம் அடியில்
தனிச்சொல் பெற்று ஒரு விகற்பத்தானும்
தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தானும்
மூன்றடியாக முடிவது நேரிசைச்
சிந்தியல் என்மனார் தெளிந்திசினோரே

— ,, 6

இன்னிசை போலத் தனிச்சொல் இன்றி
ஒரு விகற்பானும் பல விகற்பானும்
வருவது இன்னிசைச் சிந்தியல் ஆகும்

— ,, 7

இருகுறள் சவலை ஒருவிகற்பு ஆகும்

— ,, 8

பாதம் பலவரின் பஃறொடை ஆகும்

— ,, 9

அடிவரை இன்றித் தனிச்சொல் பெற்றும்
பெறாதும் வருவது கலிவெண்பாவே

— ,, 10

நேர் நாள் நிரைமலர் தேமாக் காசு
புளிமாப் பிறப்பு எனப் புகலப்படுமே

— ,, 11

செப்பலோசையில் சிறக்கும் வெண்பாவே

— ,, 12

ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை என ஒரு
மூன்று வகைப்படும் மொழியுங்காலே

— மு. வீ-யா. செ 13

வெண்சீர் வெண்டளையான் வரும் பாவே
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்

— ,, 14

இயற்சீர் வெண்டளையான் வரும் பாவே
தூங்கிசையாம் எனச் சொல்லப் படுமே

— ,, 15

வெண்சீர் இயற்சீர் விரவி ஒழுகுவது
ஒழுகிசை என்மனார் உணர்ந்திசினோரே

— ,, 16

அருள்பாவில் வெள்ளை செப்பல் அளவுபின் சிந்து இறும் ஓர்
அசை இரண்டேல் உவ்வாம், ஈரடி குறட்பா கூன்சேர்
இருகுறள் நேரிசை ஆசிட்டு ஆசிடை நேரிசை கூனில் அதாசிட்டு
இருகுறள் ஆசிடை விகற்பு ஒன்று இரண்டாம்
ஒருமை பன்மை விகற்பாய்க் கூன் நிலவு நேரிசையின்
ஒழிந்தவும் இன்னிசை அடிமூன்று இன்னிசை நேரிசை போல்
பரவுதல் சிந்தியல், ஐந்துமுதல் ஈராறு அளவும்
பஃறொடை, மிக்கு ஆதல் கலி ஒன்பதும் வெண்பாவே

—சுவாமி 156

## வெண்பாவினம்

ஆசிரியத்திற்குப் போன்றே வெண்பாவிற்கும் தாழிசை— துறை — விருத்தம் எனும் இனங்கள் உரியன.

வெண்டாழிசை வெள்ளொத்தாழிசை எனவும் பெயர்பெறும்; மூன்றடியாய் ஈற்றடி குறைதல் இதன் பண்பு. இவ்வாறு தனித்து வருவதோடு, ஒரு பொருள்பற்றி மூன்றாகவும் இது வரும் எனப் பிற்கால இலக்கணம் கருதுகின்றது.

மூன்றடிச் சிறுமையாய், ஏழடிப் பெருமையாய் (நான்கு, ஐந்து, ஆறடிகளாலும்) வந்து, முதலடிகள் அளவொத்தும், பின்னடி(கள்) குறைந்தும்(அளவொத்து) வருவது வெண்டுறை. கலம், சி. பா, இ. வி, மு.வீ என்பன, 'வேற்றொலி விரவினும் (வரினும்)' என்ற தொடரைக் கையாளுவதனாலும், உரையாசிரியர் ஓரொலி வெண்டுறை வேற்றொலி வெண்டுறை எனப் பகுப்பதாலும், இவ்வாறு வேறுபடுத்திப் பார்க்கும் எண்ணம் இருந்தமை தெரிகின்றது. அனைத்து அடிகளும் ஓரோசை யுடைத்தாய் வருவது ஓரொலி வெண்டுறை என்றும், முதலடிகள்

ஓரோசையினவாயும் பின்னடிகள் பிறிதோர் ஓசையினவாயும் வரல் வேற்றொலி வெண்முறை என்றும் உரையாளர் விளக்குவர்.

மூன்றடியானும் (நான்கடியானும்) வந்து, அடிதோறும் ஒரே சொல்லைத் தனிச் சொல்லாகப் பெறுவது வெளிவிருத்தம். இது வெள்ளை விருத்தம் எனவும் குறிக்கப்படும்.

பாக்களுக்கு இனமமையினும், பாவகைக்கு இனம் அமைதல் பெரும்பான்மையும் இல்லை. வெண்பாவிலேயே இச்சிறுபான்மை நிலை அமைந்தது. வெண்பாவின் இனமாகிய குறள்வெண்பாவுக்கு இனம் வருவதைக் கலம் முதல் அனைத்து நூற்களும் காட்டிச் செல் கின்றன.

வெண்பாவின் பிற இனங்கள் மூன்றடியைச் சிற்றெல்லையாகக் கொள்ள, குறட்பாவினம், தம் முதலாகிய குறளுக்கேற்ப இருவடி களையே களனாகக் கொண்டது. பாவினங்களிலேயே குறுகிய அடி எண்ணிக்கையுடன் வருவன இவை (யும் கலித்தாழிசையுமே).

விழுமிய பொருளும், ஒழுகிய ஓசையும் உடைத்தாய், எனைத்துச் சீரானுமாகிய அளவொத்த இருவடிகளால் வருவது குறள்வெண் செந்துறை. வெண்செந்துறை, வெள்ளைச் செந்துறை, செந்துறை எனும் பெயர்கள் இதையே குறித்து வருகின்றன. பிற்காலத்தில் தாழிசை என்ற பொதுச் சொல்லால் இவ்வினம் குறிக்கப்பட்டமை தெளிவு. பயிற்சி மிகுதியாலும் சிறப்பாலும், பொதுப் பெயரே சிறப்புப் பெயராயிற்றோ என எண்ணவேண்டியுள்ளது.

இரு அடிகளாய் முதலடியினும் இரண்டாவதடி குறைந்து வருவது குறட்டாழிசை. விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையுமின்றி அமையும் 'குறள் வெண்செந்துறை'யும் இதன்கண் அடக்கப்படு கின்றது. இவ்வாறு வந்த குறள் வெண் செந்துறைகளே பிற்காலத் தில் 'தாழிசை' என்ற பெயரோடு குறட்டாழிசையைக் குறித்து நின்றனவோ எனவும் நினைக்க இடமேற்படுகிறது. குறட்பா தனக் குரிய இலக்கணத்தில் பிழைத்து வரும்போதும் அதனைக் குறட் டாழிசையுள் அடக்குகின்றனர்.

வெண்பாவின் இனங்களை விட, இக்குறள் இனங்களே சிறப்பும் பயிற்சியும் பெறுகின்றன.

வெண்பா விருத்தத் துறையொடு தாழிசை
என்று இம் முறையில் எண்ணிய மும்மையும்
தத்தம் பெயரால் தழுவும் பெயரே

— கா. பா 53

அந்தம் குறையாது அடிஇரண்டாம் எனில்
செந்துறை என்னும் சிறப்பிற் றாகும்

— ,, 54

அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே

—கா. பா 55

ஒருமூன்று ஒருநான்கு அடியடி தோறும்
தனிச்சொல் தழுவி நடப்பன வெள்ளை
விருத்தம் எனப் பெயர் வேண்டப் படுமே

— ,, 56

அடி ஐந்து ஆகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றும் இரண்டும் சீர்தப வரினும்
வெண்டுறை என்னும் விதியின ஆகும்

— ,, 57

தன்பா அடித்தொகை மூன்றாய் இறும்அடி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளையின்
தன்பா இனங்களில் தாழிசை யாகும்

— ,, 58

ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை

— அவி 76: 2

வெண்பாத் தாழிசை வெண்டுறை விருத்தமென்று
இந்நான்கு அல்ல முந்நான்கு என்ப

— ,, 78

அடிமூன்று ஆகி வெண்பாப் போல
இறுவது ஆயின் வெள்ளொத் தாழிசை

— ,, 79

ஐந்து ஆறு அடியின் நடந்தவும் அந்தடி
ஒன்றும் இரண்டும் ஒழிசீர்ப் படுநவும்
வெண்டுறை நாமம் விதிக்கப் படுமே

— ,, 80

மூன்று நான்கு அடிதோறும் தனிச்சொல்
கொளீஇய எல்லாம் வெளி விருத்தம்மே

— ,, 81

ஒழுகிய ஓசையின் ஒத்த அடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந்துறையே

— யா. க 63

அந்தடி குறைநவும், செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே

— ,, 64

உரைத்த இரண்டும் குறட்பா இனமே

— ,, 65

அடி ஒருமூன்று வந்து அந்தடி சிந்து ஆய்
விடின் அது வெள்ளொத் தாழிசையாகும்

— ,, 66

மூன்றுஅடி முதலா ஏழடிகாறும் வந்து
ஈற்றடி சில சில சீர் பதம் நிற்பினும்
வேற்றுஒலி விரவினும் வெண்துறை ஆகும்

— யா. க 67

நான்கடியானும் நடைபெற்று அடிதொறும்
தான் தனிச்சொல் கொளின் வெளிவிருத்தம்மே

— ,, 68

அந்தம் இல் பாதம் அளவு இரண்டு ஒத்து முடியின் வெள்ளைச்
செந்துறையாகும், திருவே அதன் பெயர். சீர் பலவாய்
அந்தம் குறைநவும், செந்துறைப் பாட்டின் இழிபும் அங்கு ஏழ்
சந்தம் சிதைந்த குறளும் குறள்இனத் தாழிசையே

— யா. கா 26

மூன்று அடியானும் முடிந்து அடிதோறும் முடிவிடத்துத்
தான் தனிச்சொல் பெறும் தண்டா விருத்தம். வெண்தாழிசையே
மூன்று அடியாய் வெள்ளை போன்று இறும், மூன்று இழிபு
ஏழு உயர்பா
ஆன்றடிதாம் சில அந்தம் குறைந்து இறும் வெண்துறையே

— ,, 27

இரண்டு ஒத்து நிகழ் அடி வெண் செந்துறை இழுகிப்
போம் இசைச் செந்துறை, சந்தம் சிதை குறள், பூண் பலசீர்
தாம் அது அந்தம் குறைநவுமாம் குறட்டாழிசையே

— வீ. சோ 120

நான்கொடு மூன்று அடிதோறும் தனிச்சொல்லு நண்ணும் எனில்
தான் பெயர் வெள்ளை விருத்தம்; முப்பாதம் தழுவி வெள்ளை
போன்று இறும் வெண்டாழிசை; மூன்று இழிவு ஏழடி பொருந்தி
ஆன்ற அந்தம் குறையின் வெண்டுறை என்பர், ஆயிழையே

— ,, 121

......ஒப்பு ஈரடி செந்துறை; ஈற்று
இலகுஅடி குன்றுதல் குறட்டாழிசை; அடிமூன்றுய்ச் சிந்து
ஈற்றடியாய் இறல் வெண்டாழிசை; அடிமூன்றுஈறுஏழ்
குலவு அடி அந்தம் குறையும் வெண்டுறை; நான்கு அடியும்
கொண்டு, அடிகள்தொறும் தனிச்சொல் பரவல்
வெளிவிருத்தம்

—சி. பா-செ 2:2-4

இறுகுறளின் சிதைவும் செந்துறை இழிபும் குறள்தா
ழிசையாம்; வேற்றொலி வரினும் வெண்டுறை...

— சி. பா-ஒ 4:1

ஒழுகியல் ஓசையின் ஒத்து அடி இரண்டாய்
விழுமிய பொருள்தரும் வெண்செந்துறையும்,
அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்

சந்தழி குறளுமாம் தாழிசைக் குறளும்
குறட்பாவினமாம் கூறுங்காலே

— இ. வி 750

அடி ஒருமூன்று வந்து அந்தடி சிந்து ஆய்
விடின் அது வெள்ளொத் தாழிசை ஆதலும்,
மூன்றடி முதலா ஏழடி காறும் வந்து
ஈற்றடி சிலசில சீர் குன்றினும் அவை
வேற்றொலி விரவினும் வெண்துறை ஆதலும்,
ஒருமூன்று ஒருநான்கு அடி அடிதோறும்
தனிச்சொல் தழுவி நடப்பது வெள்ளை
விருத்தம் எனப் பெயர்வேண்டலும் விதியே

— ,, 731

துறை தாழிசை விருத்தம் தூக்கினம் மூன்றனுள்
வெண்செந்துறை குறள்வெண்பா இனமாய்ச்
சீர்தளை அடி எலாம் சேர்ந்து விரவினும்
ஒத்து அடி இரண்டாய் ஒழுகும். மற்ற
வெண்டுறை, அன்னவை விரவினும் மூன்றடி
ஆதி ஏழடி அந்தமாய் ஈற்றில்
சில அடி தம் சீர் சில குறைந்து இறுமே

—தொ. வி 239

குறட்டாழிசை, ஒலிகுன்றும் குறளும்
அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவுமாம்
வெண்டாழிசை எனில் வெண்சிந்தியல் போல்
அண்டாப் பிறதளை அணைந்து வருமே

— ,, 243

விருத்த விகற்பம் விளக்கிய காலை
... ... ... ...
அடிதொறும் தனிச்சொல் அணைவது வெள்ளை

— ,, 248: 1,3

இரண்டு அடியாய் ஈற்றடி சீர்குறைநவும்
செந்துறைப் பாட்டில் சிதைந்து வருநவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே

— மு. வீ-யா. செ 17

தம்முள் அளவொத்து அளவடி இரண்டாய்
விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும்
ஆய்வரல் குறள்வெண் செந்துறை ஆகும்

— ,, 18

மூன்று அடியாய் ஈற்றடி முச்சீராய்
வருநவும் ஒருபொருள்மேல் மூன்றடுக்கு
வருநவும் வெள்ளொத் தாழிசை ஆகும்

— ,, 19

மூன்று அடிமுதல் ஏழுஅடிகாறும் வந்து
ஈற்றடி சிற்சில சீர் தப நிற்பினும்
வேற்ருெலி விரவினும் வெண்டுறை ஆகும்
—மு. வீ-யா. செ 20

அளவடியாய் நான்கடி மூன்றடியாய்
அடியடிதோறும் தனிச்சொல் பெற்று
வருவது வெளிவிருத்தம் ஆகும்மே
— ,, 21

வெள்ளொத் தாழிசை அடிமூன்று ஈற்றடி முச்சீராம்
வேற்று ஒலி கீழ் குறையாகி அடிமூன்று முதல் ஏழ்
உள்ளூற்ருல் வெண்டுறையாம், மூன்றடி நான்கடி ஈற்று
ஓர் தனிச்சொல் பெறுதல் வெளிவிருத்தம் மூன்று இனமாம்
துள்ளூற்ற குறட்கு இனம் செந்துறையொடு தாழிசையாம்
— சுவாமி 157

வெண்பாவும் அதன் வகைகளும் தகுந்த இலக்கியச் சான்று களுடன் பா. பா, சி.செ. கோ, தி.தி ஆகிய நூற்களில் அமைக்கப் படுகின்றன. அப்பாடல்கள் இங்கு முறையே தரப்படுகின்றன.

தொல்காப்பியம் ஆசிரியப் பாவுக்கு முதலிடம் அளித்த போதி லும், பிற்கால இலக்கணங்கள் பலவும், இவ் இலக்கியச் செய்யுள் நூல்களும் வெண்பாவுக்கே முதன்மை யளித்தது இங்கு நினைத்தற் பாலது.

திருமகளோ பார்மகளோ தென்னரங்கன் வெற்பில்
வருமகளோ யாரோவிம் மாது
— பா. பா 1

மாத ரிலவிதழ்போன் மாண்பிற்ருே மாதவனுல்
வானே ரருந்து மருந்து
— ,, 2

மலைமதிதேன் மாறன் வரைவேல் விழியாண்
முலைவதன நண்பா மொழி
— ,, 3

தேர்வலவா வென்னு முகின்முந்திற் செங்கண்மால்
காரகத்தாட் கென்வா சகம்
— ,, 4

நிலம னிலமனல்வா னீரென் பனவா
யலம னலம னமலன் - புனைந்தும்
வென்ருர் தொழுமால் விளங்குதிரு விண்ணகர
மென்ருர்க்கு முண்டோ விடர்
— ,, 5

உலகு புகழரங்கத் துத்தமமெய்ஞ் ஞானத்
திலக ருடன்பயின்று சென்று - புலவீர்

நிலமிசைதாழ்ந் தேத்தி னெடுமா லுமக்குந்
தலமிசைப்பே ரின்பந் தரும்

— பா. பா 6

நாவலவன் பின்போந்த நன்னீர்த் திருவரங்கங்
காவலன்பொற் றளாங் கமலத்தே - பாவலர்தம்
பாமாலை சூட்டாதப் பாமாலை யையெவனே
தாமா னிடர்க்களிக்குஞ் சால்பு

— ,, 7

பூங்கமலக் கோயிலாள் புத்தமுதி னுட்பிறந்தாள்
வீங்கு துணைமுலையாள் வெண்ணகையா - ளோங்குபுனற்
பொன்னி நடுவு பொருண்மார் பகத்தாளென்
சென்னி பிரியாத் திரு

— ,, 8

அருண்மனையா ளாயுவந்த தாழியான் கோடு
பொருதிரைப்பாற் றெள்ளமுதிற் போந்த - திருவரங்கம்
பூம்பதுமக் கண்முகிழ்த்துப் புத்தேளிர் கைதொழமால்
பாம்பணைமேல் வைகும் பதி

— ,, 9

சிரந்தா ளிழந்தா னயனச் சிரங்கொய்
திரந்தா னிரப்பொழிப்பா யென்ன - வரந்தான்
புரந்தா னிருப்பப் பொருள்வேறுண் டென்று
பரந்தானுண் டென்ன பயன்

— ,, 10

மாதங்க மூலமெனும் வண்குருகூர் மால்வரையோர்
மாதங்க மஞ்ச வருபோழ்திம் - மாதங்க
மாதங்க வாகுவலை யத்தணைத்து வல்விரைந்தம்
மாதங்கம் வென்றானோர் மன்

— ,, 11

காவலர்போற் காவலர்போற் காதங் கமழநந்தை
காவலனைக் காவலர்தூய்க் காவலெனக் கற்றுணர்ந்தோர்
காவலனே காவலனே காத்தியெனக் கண்டுற்றுங்
காவலகா வென்னார் கலர்

— ,, 12

வாராய்நன் னெஞ்சமே வைகலுநம் பாலிளமை
தீராமுப் பெய்துந் திறமின் றுணர்ந்தனமா
னரா யணன்புகழே நாடியினி நாஞ்சனனஞ்
சாராத தாராய்தல் சால்பு

— ,, 13

இவ்வுலகத் தின்பமுவர்த் தெஞ்ஞான்றும் பூமகள்கோ
னவ்வுலகத் தின்ப மதுவே விருப்புற்றார்

முந்நீர் வளாக முழுதுறிலும் வாய்க்கொள்ளா
ருய்ந்நீர வல்லா வுரை

—பா. பா 14

மன்னுயிரே வான்பிரம மாதவனன் றென்றுரைத்தல்
பொய்கொலை கள்ளுண்டல் பொருள்வெளவ லிவ்வினைத்து
மின்றே சிறிய ரிடத்தன விவ்வூழிக்
கடைக்கா லென்செய்யார் கலர்

— ,, 15

கண்ணனருள் பெற்றூர்நன் கல்வியே செல்வமெனக்
கொல்லா விரதங் குறிக்கொள்ப வேறுசிலர்
தீக்கொலையிற் செய்பொருளே செல்வமென நின்றனரா
வென்னே யுலகியற்கை யென்

— ,, 16

கோங்கரும்பு போலுங் குவிமுலைக ளாம்பலகத்
தாங்கரும்பு முல்லை யரும்பேய்க்கும் - பூங்குழற்குச்
செவ்வாயும் வெண்ணகையுஞ் செண்பகமா றன்சிலம்பிற்
காமர் சுனைக்காவிக் கண்

— ,, 17

நாராய ணய நமவென்ற நாவீற
ஞேரா யிரமென் றுரைத்தகவிப் பாவமுத
மாராய் பவர்க்கடிமை யாகினேன் - வாரானிங்
கென்பா லொருநாள் யமன்

— ,, 18

மாதராய் தென்னரங்கன் மால்வரைவாழ் மாதராள்
காம னிரதியெனும் காட்சியாள்-காமவேள்
பூவாளி யென்பவற்றுண் மன்னுயிருண் பூவாளி
கண்டார் நிறையினையுண் கண்

— ,, 19

இமிழ்திரைநீர் ஞாலத் திருளிரிய வான்றேய்ந்
துமிழ்கதிர்வெண் டிங்க ளுடனேயெஞ் ஞான்றும்
வலஞ்செய் சுவண வடவரைபோன் மாடம்
பொலஞ்செய் மதிள்கோ புரஞ்சிகர பந்தி
யிலங்கு மெழிலரங்கத் தெம்பிரான் பல்புகழைப்
பாடினர் பாதமலர் பாடிப் பணிமுடிமேற்
சூடினர்க் குண்டோ துயர்

— ,, 20

தண்டுழாய் மார்பன் வடமலைசார் தண்புறவின்
விண்டுழா யோங்கி மிடைகோங்கின் கொம்பருழ
மண்டுகா ருக்க குறுந்திவலை வண்டளவங்
குண்டுகா ரென்று கடுக்கை யுடன்மலர்தல்

பண்டுநங் கேள்வர் பருவங் குறித்தெனக்
கொண்டதெவ னன்னெஞ்சே கூறு

— பா. பா 21

மாதவனை யெவ்வுள் வழுத்தியமெய்ம் மாதவர்தா
மின்ப முறவெதிர்சென் றீதிறனு மின்பமுடன்
பேரின்ப மெய்துவது மீறிலாப் பேரின்பப்
பொன்னே நிதியந் தருமெனமுன் பொன்னனையாட்
குற்றதையெவ் வாறுரைப்பே னுற்று

— ,, 22

கேளா திருந்திலேன் கேசவா வென்பதனை
வாளா திருந்திலேன் வாழ்த்தினே-னாளானுர்க்
காளானே னென்னிணையிங் கார்

— ,, 23

திருந்திழையாய் மாறன் றிருவாய் மொழியே
மருந்துபிற விப்பிணிக்கு மாதர்-தரும்பிணிக்கு
வாய்ந்தமருந் தென்பார் மடல்

— ,, 24

வழிமதுத்தார் மாறன் மணிவரைமேன் மாதர்
விழியெழுதி னுலுமினை வெற்பெழுதி னுலு
மொழியெழுத லாமோ மொழி

— ,, 25

சோலை மலையழகர் தோண்மாலை காமுறுமுன்
மாலையா யாமமாய் வைகறையா யல்கிரவின்
றென்னேநீட் டித்த தெவன்

— ,, 26

நாணு நிறையு நறுநுதாஅன் மாணிழையா
டந்தவன் காமத் தழல்கதுவ வெந்து
தருமடன்மா வேற்றந் தரும்

— ,, 27

நாரா யணனே நமவென் றுரைப்பவர்பால்
வாரா தொருநாளும் வல்வினைதான்
சாரா னொருதலையாய்த் தண்டதரன் சாராவாம்
பேராத மாயப் பிறப்பு

— ,, 28

## வெண்பா இனம்

பெருநூல் பிறபல கற்பதின் மாற
னொருநூல் கற்ப தூதிய முயிர்க்கே

— ,, 29

அண்டர் நாயக னரங்கன் தடித்தளி ர்ணிமுடி மிசைபுனை தூயோர்
மண்டு தெண்டிரைக் கடற்புவி யிடைப்பிற வாரே

— ,, 30

நிலைபி லாதன மூன்றுமே நிலையென்று நினைவொடு
நெடியமா லடியிணை நினையாதார்
தொலைவி லாப்பவக் கடலிடை யழுந்துபு துயர்தலைப் படுவாரோ
— பா. பா 31

அம்புய மாதன் புறுமால் மலர்ப்பதந்
தம்பமென் றுய்ந்திலார் தர்ம மெய்தார்
— ,, 32

புரவலர்நீத் தார்தமக்குப் பூமகள்கோன் றிருநறையூ
ரிரவலரிக் காமம் யமன்
— ,, 33

மூவா மறைக்கு முதன்மொழியாய் நின்றதுவு-முகுந்தனும
மோவா நமன்வந் துடக்கா தொழிப்பதுவு-முகுந்தனுமந்
தாவாத பேரின்பந் தனைவிழைவார் சாற்றுவது-முகுந்தனுமம்
— ,, 34

நாரா யணனே நரர்பேர் புகழா-தருள்கூர்வாய்
பேரா யிரவா பிறர்தே நயவா-தருள்கூர்வாய்
கூரா ழியனே நமனுர் குறுகா-தருள்கூர்வாய்
ஆரா வமுதன் றருள்வால் பிறவா-தருள்கூர்வாய்
— ,, 35

உண்டிக் காய்மா ணிடர்பே ருரையா
ரண்டத் தப்பா லந்தா மத்தான்
றெண்டர்க் காட்செய் பவர்
— ,, 36

படர்சிறைவண் டினந்துதைந்தே ழிசையெழுப்பு நறைவகுளப்
பைந்தா மத்தான்
துடரிவரைக் கொம்பரிற்செந் தேனெனவே யினிமைதருஞ்
சொல்லீர் சொல்லீர்
வடவரைபோற் பணைமுலைக்கீழ் மதித்திடுதற் குளதாய
விடர்பெறுநுண் ணிடையினைக்கட் புலங்கொளவிங் கேதென்றே
— ,, 37

ஏனைக் கடவுளர்பா லெவ்வரமும் பெற்றிடுக்க ணிழைத்த லாலே
கானத் தடைந்தரக்கர் கட்டழித்தான் றுள்பரவார்
மானத்தின் மாண்பிறந்த மானமும் வேறில்லையே
— ,, 38

தளையவிழ்தண் ணறவருந்திச் சுரும்பிமிர்பூந் தண்டுளபத்
தாரா னுறன்
விளைவளர்வண் புகழ்த்திருமால் பனிவரைமேன் மூன்றுமத
விழுது கூர்கைம்
மலையுளதோ வந்ததென்ப ரஃதன்றி வாளியொடுங்
கலையுளதோ வந்ததென்பர் கறையோடுங் கண்ணின்றிக்
கொலையுளவாம் படிவேட்டை குறிகொள்வா ரிடந்தழிய

சிலையுளதோ வெனிலுடக்குந் திண்சிலையுஞ் சினைதருபச்
சிலையுளரா லொளியிலரா லிவரெண்ணந்தெளிவரிதே

— பா. பா 39

மதுமகி ழணிதரு மார்பன் கூறிய
முதுமொழி யுரைதமிழ் மறைமுழு துற்று
ரிதுபொரு ளெனுமுர னெய்துவ ரெய்தா
ரெதுபொரு ளெதுபொரு ளெனுநொது மலர்நூ
லதுபுக லுரைகற் றூர்

— ,, 40

வான்மா சறவழுத்தும் வாச மகிழ்த்தாமத்
தான்மா சறவுரைத்த தண்டமிழ்ப்பா வின்றேற்றே
வான்மாவி தென்றறிவா ரார்
வாதியர்வாய் வீணடங்க வாசவகு ளாம்புயத்தா
ஞேதியநூ லொன்றிலையே லுத்தமநா ராயணனே
யாதிமுத லென்றறிவா ரார்
கொந்தா ரிலஞ்சியந்தார்க் கோமான் குருகூருள்
வந்தா:தரித்துரைத்த வண்டமிழ்ப்பா வொன்றிலையே
லந்தாம மென்றறிவா ரார்

— ,, 41

## பரிபாடல்

கருங்கட லுடுத்த காமர்திரு நிலமுதலா
வருங்கடன்மூ வுலகினையும் வரம்பில்பெரு மேனியொடு
மொருங்களந்தன் றகத்தடக்கி யோவாத வுவகையுடன்
பெருந்தகைய மாவலியைப் பிலம்புகவன் சிறையிருத்திப்
பொருந்தமரர்க் கருள்கூர்ந்த பொன்னடித் தாமரையோய்
அழகிய வரங்கநின் னவிர்பொலங் கழல்புனை
கழல்புரிந் தருளிய கருமமஃ தொன்றே
பழமறை பராஅய பாஅன்மையிற் பவித்திரத்
தழல்வளர்த் தாஅகுதி தான்றரு கவுதமன்
வெற்பினற் சிறைகுறை குலிச வேந்தனி
லிற்பழி யெய்திய வகலிகைக் கீத்த
கற்படி மத்தினைக் காமர்
பொற்படி வமதாய்ப் புரந்ததொன் றுள்தால்;
அஃதான்று,
உலகுயிர் தழைதர வுறுபகி ரதியினை
நிலமிசை யுறநிறு வியுமுத வினவே;
மலர்மகண் மகிழ்தர மிதிலையில் வரனெடு
சலமிகு தனுவிற மிதிதலை மையவே;

அலம்வரு பரதன்மு னவனென வணிநகர்
நலனுற வுடனுறை தருநசை யினவே;
பலகலை யுணர்வொடு பரனிலை முழுதுணர்
புலவனெ டெழுகென வெழுபுது மையவே;
அஃதான்று,
பார்த்தன்கதழ் பரிபண்ணமை
தேர்த்தட்டினிற் றேர்ந்தஞ்சலித்
தேத்தன்பினிற் றன்பாலிடு
பூத்தும்பைய தரனுர்தம
தெழில்கூர், குழவித் திங்கட் கொழுந்தினைச் செருகுந்
தழல்புரை குடிலச் சடிலத்
தழகுறக் காண்ப தளித்தது மதுவே;
அஃதான்று,
மிறைபயில் கொடிய விடந்துளி குறுந்துளைப்
பிறைபுரை யெயிற்றுப் பேழ்வாய்க் கட்செவி
நிறையழ லுயிர்ப்புமிழ் நேர்நுண் கவர்நாக்
கறைமிடற் றரவங் கலங்கிக்
குறையுயிர் படநடங் குனித்தொன் றுளது;
அஃதான்று,
ஒருகுடை நிழற்கீ ழிருநிலம் புரந்த
குருகுலத் தவர்தங் குலக்கொழுந் தெனலாந்
திருவுத ரத்தினுட் செறிந்துறை கருப்ப
மிருந்தை யாயிரு நிலத்துற
வருந்தவ மழலென வளித்ததொன் றுளதால்;
அஃதான்று,
மாதுல னாகிய வஞ்சனைக் கஞ்சனை
மூதுல குட்கொண் முதுமொழி தேர்ந்துணரா
வாதுல னுமென் றவன்பொன்முடி யுதைத்திட்
டோதுநற் செய்கையொன் றுண்டு;
அஃதான்று,
கூற்றுவனு மஞ்சக் கொலைத்தொழில்கூர் கூற்றமெனு
நூற்றுவர்க்கு முன்னோன்முன் னேற்றபல நோன்புடைய
வாற்றலுறு மைவர் சகாயனென வன்றுதூ
தூற்றமுறச் சென்றதுமொன் றுண்டு;
அஃதான்று,
பகடு தவழ்நடைசால் பண்பிதென மாயச்
சகடு தனையுதைந்து சாய்த்ததுட னண்ட
முகடு பொதிமருத மூண்டுதைத்து மூலத்
தகடு கிழித்ததுமுண் டன்று;

அஃதான்று,
கட்கடைதீச் சிந்தக் கறுவுகொள்வன் னெஞ்சினொடு
நட்புடையோர் முன்னர் நவையுரைத்தோன் மன்னுயிரை
விட்புலமுங் கொண்டாட வீழ்பொழுதில் வான்சபையு
ளுட்கொண் டருளியதொன் றுண்டு;
நாட்டிய கடவுளர் நலனுறச் சென்னியிற்
சூட்டிய தந்தத் துணையடிப் பூ;
வீட்டியல் புணர்ந்த விண்ணவர் சென்னியிற்
பூட்டிய தந்தப் பொன்னடிப் பூ;
தனைநிகர் தானெனுஞ் சதுமறை தலையுறப்
புனைவது மந்தப் பொலங்கழற் பூ;
வினைவியங் கோள்புரி விழுத்தவங் கூர்ந்தோ
ரனைவரு முடிக்கொள லவ்வடிப் பூ;
செக நீர்வளி தீவளி யெனுப்
புகழ்புலன் பூத்ததப் புனையடிப் பூ;
அகில வுயிர்களு மவ்வுயிர்க் குறையுளும்
பகர்திறத் தீன்றதப் பாதப் பூ;
எனவாங்கு,
இத்திறத் தனவா மிறைவநின் னிணையடிப் பொற்பூ
முத்திறத் திருதிற முயற்சியா முதலா
மெத்திறத் தெவரே புகழினு
மத்திறத் ததற்கதற் கமைதிறத் தினவாம்;
அதனல்,
முக்குணத்தினுண் முற்குணத்தின;
பொற்புடைக் கருடவாகன;
வரிவளை யிடத்த;
வலனுறை நேமிய;
கரிசொல வந்த கருணை நாரண;
உயர்வற வுயர்நல முதல்வ;
ஒருதெச ரதனருள் புதல்வ;
திருவுறை மார்ப;
எனயாம்,
பூரண நாதநின் பொன்னடி போற்றுதும்
பார்புகழ் மாறர் பராங்குச வாணையை
வாழிய தாக வளர்த்தருள் கெனவே
யூழிதோ றாழி யுவந்து

— பா. பா 136

யாஅர் வாழ்வார் யாஅர் வாழ்வா
ரெனுமுல கனைத்து மீறி லாநிலை
யுருபொடு சொருபி னுஅ ருதே

மாயையின் விரிந்த முதன்மா ஞென்றும்
யானெனுந் தொந்தமு மதனி னெய்திய
புலனைந்து மாகி யவையி னுற்றவுமான
வண்டமு மலகில வடிவமு மான்மா
முழுவது மயன்முத லமைந்திடுந் தாமாய்
பொழுதெதி ரொருபுன லும்பரி னுமால்
பொன்னியு ளமர்ந்தவ னல்லான்
மாயா வோர்தனி மழவென மகிழ்ந்து;
நூற்பல தாமு நுணங்கு மாரணப்
பாவி னுட்பமு ... மங்கா ரெனுஞ்
சால்புணர் புலவிர்கான் முந்திய முதல்வருள்;
ஓஒ, உணர்ந்தவீ துணர்கிலர் வெள்ளை யறிவுட்
புணர்ந்தோர் பொருட்கங் கிரங்கு புன்மையர்
புணர்ந்தோர் பொருட்கங் கிரங்கு புன்மையு
முணர்ந்தே னும்மையி னிழைத்த வூழென்
ருவஃ தலாது பலவாய்த் தொகுத்த
வான்மா முழுதினு நிற்ப தறிகிலர்;
காயங் கழிதருங் காற்றன் னுருபு
ளாகவே யொருங்குவை காவ லின்புறு
மேன்மையே சற்று முறுகில ரதனொடு
மீளவே யனைத்து மெழுபான் மையுற
நான்முகன் றனது செயலிது வென்னத்
தாணுவாய்ப் படிமத் தமைத்தபான்மைகளும்
வாழப் பருவத் தீரமில் சூரத்
தினமீறுந் தானவ ரிடும்பையிற் பாறுவார்
பாறு மிடரே கண்ண்
டாளினூங் காளியாய்த் தூணி னூறல்
தோன்றி முன்னங் கவனுடல் பேோழ்ந்தது
மறிகில் லாதோ மன்பதனை யெனுமவைமன்;
அவனிற் பாரி லல்லது பயந்த
வடல் பெருகு சிரங்கரமொருபதிரு பதுளான்;
தறுகணன்;
மத்தமடவன்;
மூர்க்கர்முன்னன்;
கண்டாகண்டன்;
நிருதர்பெருமான்;
மதுகையாளன்;
அன்பிறீம்பன்
வெண்பொன் வெற்பைக்கிளைத்த முன்பார் தோளன்;
மருப்புக்களுழுமுரன்;

திக்கக்கு நேத்திரன்;
வானிடி யெனத்தொனி மேய சொல்லன்;
நமனூர் நடுங்க வமர்புரி பொருநன்;
வானோர் நடுங்க வேல்விடு மறவன்;
களித்த வுள்ளமொடு கணக்கி னேன்பன்
றளித்தபல் வரத்துட னமையா யாக்கையன்;
தன்னைச் சமர்முகத்தி னேர்கணை யதுதொடா
மன்னு முயிருண் வகைமையு நினைகிலர்;
அதற்பி னகன்றிருந்த தேவி யடித்துணை
தொழுதன டுதித்தெழு பொருதருள் செய்யா
வடைக்கல மென்றவ னூரருண்மை யோரார்
அமரிடை வசந்தன்மீ வானந் தோய்ந்திடு
முடலுயி ருடன்வர நின்று
தமர்தொழத் திண்டேர் நடைகற்ற தனையுமூர்;
கமையடைந் தொடுங்குவான் விருந்தறைந் திடுகாலைத்
தமையன்வந் தனனெனப் பரதன துயிர்தந்தா
னமைவுகண் டடலுண்பா னருள்வைத்த குணனுமூர்;
பின்னும்,
பொதுவர் மடவர னற்று யென்னும்
விதியினன் பான்முன் வெளிவர றேற்றூர்;
தாயென வனிதையர் படிமேற் கொண்ட
பேயத னுவி யன்றுண்டு போஒய்
மாஅயமுற் றெதிர்க்குஞ் சாடு முருளிற
நோஒய்வகுத் திழைத்தவன் முடியுதைத் ததுமூர்;
முடிபடி யுறவசை மொழிபவ னுயிர்தளி
ரடியுற வருள்புரி நிலைமையு முறுகிலர்;
ஆதிநாதன்;
வாசுதேவன்;
சங்கருடணன்;
பைம்பொனிறவன்;
பரத்துவசொரூபன்;
சொலத்தகுவியூகன்
உரனுடைவிபவன்;
உயிர்களினயனன்
வெளிவருவிமலன்;
மறைபுரியமலன்;
உளனிலன்;
உணர்வுறவரியவன்;
என்பவை,
மறையின்மறைகளின் வழிநூ லொண்மையி

னிறைநிலை யுணர்த்து மேமவா ரியர்முன்
மதிமரு ணிலையற வழிபடு மதியுற்
றுருவாய்த் திறப்பட வுணர்த்தமெய்ஞ் ஞானம்
பிறவாப் பெற்றிகொண் டுணர்ந்தில ரஃதும்;
அதுவே,
இனியவ ருயிர்கட் கிரங்கியிங் கெவனென
வெனதுயிர் பிழைப்பதற் கிரங்குத லுடனே
தாமரைத் தவிசிற் சதுமுகன் மேனு
ளாநிரை காத்தசிற் றுயரைக் கன்றினைக்
குறுந்தடி தாம்பொடு தீங்குழல் கொம்பிவை
மாயையின் வானுற வைத்திடப் பண்டையின்
யாவையு மாகிமுன் னுதிக்குந் திறத்தினன்;
சுருதி முதல்வன்;
பரிதி வலவன்;
சுதமிலமிர்தன்;
பதுமைகொழுநன்;
மீனமு மாமையு மேனமு மாகி
வாமன னுமழு வாளியு மானபின்
வருபல தேவ னிவுளியு மாமவன்
தருமன் முதலவர் தமது நகர்பெற
நூற்றுவர் கூற்றுவ னகர்பெற வுய்த்தவ
னேற்றம துரைத்து மிறைஞ்சுவ துடனே
பிறவா நெறிபெற வேண்டி
மறவா தவனை மதிக்குவென் மனனே

—பா. பா 137

வேல் விழியிணை யெனவினை கூர்த்த
வாலெயி றென்மணி வாமொழுங் கினவே
கன்னலின் குழம்புங் களிகூர் யாழுஞ்
சொன்னலந் தனைவளர் வண்ணம்வாய்ந் தனவே
கனிதுகி ரிலவ தாகுந் தோகாய்
தனியிதழ் குழற்கற்றை கார்தோய்ந் தனவே
மாரன் வன்போர்க் குரிய கைச்சிலை
பார வேலினை வளைந்துதிரண் டோசெய்
சால்பினில் வார்கரும் புருவந்தோ ளினையே
வாணுதற் சந்தமும் வளர்பிறை மாண்பின
பூணுறு நோக்கிற் கொருபொரு வுளதே
மறுத்துடைத் தொளிர்முழு மதியே திருமுக
முறுப்பமை துணைமுலை யுபயபொற் குன்றே
வள்ளைத் தண்டே வார்கா தினையு
மொன்வளை யெனலா மொளிவளர் மிடறே

கதிர்வளை செறியுங் காமர் கைத்துணைக்
கெதிர்பிறி தின்றாற் காந்த ளிணையே
சதிருடை யென்னிறை தாயபொற் கொடிக்கே;
கங்கையின் சுழியினைக் கவின்பயி லுந்தியோ
டிங்கிணை யென்பது மிறந்ததொ டொன்றே;
இடங்கொள முலைசுமந் திடுகு நுண்ணிடை
படங்கொ ளாவெனப் புகழ்வதும் பழியே;
பாந்தளின் படமெனப் பழிப்பன் பழித்தபின்
ளுய்ந்தெழி லல்குலுக் கமைப்பது மதுவே;
கொழுங்குளிர் வாழைத் தண்டெனக் குறங்கினை
யொழுங்குற வுரைப்பது முவமையற் றன்றே;
தமனியத் திருமக டவிசெனச் சிறந்தவி
னமர்தரு நளினமு மணங்கின்மெல் லடிக்கே;
எனவாங்கு,
இன்னண மவயவ மியைந்துள வவட்கே
தென்னரங் கேசன் சிலம்பினோர் பொலங்கொடி
மன்னிய லொடும்வரு மாமெனிற்
சொன்னிலத் திணையெனத் துணியுமென் மனனே

—பா. பா 138

விழுமிய திறத்துரை வெளிறிலா மேதைகூர்த்
தொழுகவைத் துடனிகந் தொரீஇயவொண் சுடரினை
யிதுபொரு ளெனத்தெரித் தீறினுண் ணுரவுடைப்
புதுமொழி முகத்தகப் படுத்திய புலமைசால்
காமரு ஞானமுங் காட்சியுங் கருணையுந்
தாமொரு தலையாத் தனியுருப் புணர்ந்த
வெங்கோன் றிருமகிழ் மார்பின னிமையவர்
தங்கோன் றமிழ்மலைச் சந்தனப் பொதும்பர்க்
கொருதனி விளக்கம தாயுருத் துவந்த
திருவமர் மாணெழிற் றேசுடை மடவோய்
நுமர்புரந் தனராய் நோக்கமர் சீறூர்க்
கெமர்புரந் தனரா யேமுறு பேரூர்
தன்னுயிர்க் கூறு தருபட ருறீஇப்பிற
மன்னுயிர்க் குறுகண் மனக்கொளார் மனத்தினைப்
பொருளினுட் பொருளெனப் புனிதநூல் குறித்த
வருள்கெழு தகைத்தா யகலா தண்ணிய
தெவ்வள வணித்தெனு மிருநில
மவ்வள வெனுநிலை மையினணி மைத்து;
அஃதான்று,
காந்தியும் வாய்மையுங் கருணையுங் கவிகையும்
வாய்ந்தநன் குலனு மறைமுத லியவுரை
தோய்ந்தறி வுடைமையுந் தூய்மையு மொழுக்கமுஞ்

சாந்தியு நிறையும் பொறையுஞ் சால்புமென்
ருய்ந்துள விவற்றினென் றமைதிய திலவாய்
மாந்தரென் றிடுகுறி யுடைமட மையரா
நாரையுந் துதியா நன்னில நிலைஇப்
பரனுடை பாராட் டியமதிப் பாவலர்
வரனுடை நாவு மறுவில் வாய்மையு
முரவு நீர்க் கடல் சுலா முரனுடை யுலக
மெப்படிக் கணித்தா யினதெனு
மப்படிக் கணித்தா யினவணி மைத்து;
அஃதான்று,
மணியினும் பொன்னினும் புனைபொலந் துகிலினு
மணிதிகழ் செவ்விபெற் றலர்நறு மலரினு
மான்மதக் குழம்பினும் வாசமோ ரைந்தினு
மானவை யுறுதகைத் தன்றெனத் துறந்தே
வாய்மையி னகந்தூய் மையராய் வடிவமுந்
தூய்மையுற் றனராய்த் துறவறத் தொழுகுபு
செந்நிறப் பிருதிவித் திருவுடை யாடையு
முந்நிலைத் தெனப்பொறித் துளவிலாஞ் சனையுந்
திருமணி வடமுந் தியான சிந்தையிற்
பொருளுரை புலப்படப் புலப்படு திருமணு
மேவிய பெருந்தகை மையினடி விளக்கிப்
பூவினுள் ளவள்பணிப் பினிற்புரிந் தூட்டிய
சேடம தருந்தித் திருமகள் கோன்புகழ்
பாடியா டியபத் தியர்திரு மேனிக்
கருந்தவக் காந்தியெவ் வளவணித் ததுபோற்
றிருந்திய சிறப்பினிற் செறியணி மைத்து;
அஃதான்று,
தமரா யுள்ளவர் தமைத்தொடர்ந் துயிரொடங்
கமர்புரி மிடிநிரப் பேயென் ருமிடர்
கடித லெனதென வினைவிழை பவன்முய லினுளுள னின்புற்றே
யனவ ரதமுறை தருதிரு வும்போன் றணித்து;
இசைதிசை திசைநசை பெறவுற வசைதீர் நிதியிழை பண்பா
லறனுட னுயர்நல னெமையுந் தோய்ந் தருள்கென
நாளும், யாமே நீங்கல மெனவுரி மையவாத்
தாமே தகவெதிர் தன்மைய வாகிக்
கூடிய குறியுடைத் தெனலாய்
நாடுடன் பீடுடை நகரணி மைத்து;
பிறப்பெனப் பெயரிய பிணிக்கொரு வித்தா
யறப்படி றிழைக்கு மவாவெனு மவிச்சையை
நிலையுத லிவைநில யுதலில விவையெனுங்

கலைபல வுணர்ந்த காட்சியி னீக்கி
யையுணர் வெய்திய வமைதியி னழுக்கறு
மெய்யுணர் வடைந்த விச்சையோ ருள்ளத்
திடைய ருத்திறத் தீண்டிய வின்ப
மடைதரு நிலைமைய தெனவணி மைத்து;
இருநிலத் துழுவலன் பெய்துமென் னிதயமுந்
திருவுரு நலனிவை சிறத்தலிற்
பொருவரு நின்னையும் போன்றணி மைத்து;
மூவுரு முக்குண முத்தொழி லெனவிசைத்
தியாவையுந் தனவா விசைந்தமை யன்றியு
மோருரு வொருகுண மொருதொழி லெனதெனு
நாரண னுலவா நன்னர்மன் னுயிர்தொறு
நீப்பின் றுஅ நிலைஇய
யாப்பென் னணமணித் தற்றணி மைத்து;
அன்றியும்,
எம்மனோர் வைகுறு மேமமா ளிகைமிசைக்
கொம்மை வெம்முலைக் கோதையர் முன்கைக்
கிளியினம் வைகலுங் கேசவா கதியெனு
மளியநன் பொருளுரை யஃதிரு செவியுற
வொளிகிளர் நும்மலை யுறைபசுங் கிளியினங்
கேட்டவை தாமுங் கேசவா கதியெனக்
கோட்டினுட் குடம்பையிற் குதலையின் மிழற்றும்
படிக்கணித் தென்றுற் பையு
ளடிக்கொளு மனத்தி னழுங்க னீயே

—பா. பா 139

கதழெரி கால்கண் ணெதிர்நிழல் சீறு
மதமலை நூலின் முதன்மொழி கூறுந்
திதமத னுல்ன் றதனுயிர் பேணுந்
திருமகள் கேள்வன் கருணை விநோத
னடலர வெனவுல குயிர்தொழ வளர்தரு
வடமலை யதனிடை பலமலர் பூத்த
பூங்கொடி மானு மாதர்வடி வனைத்து
மாங்கமை வானீடு கிழியுட் படவெழுதி
யீங்கெதிர் வேனென் றனிர்;
கருங்கட லுடுத்த கண்ணகன் ஞால
மொருங்ககப் படுத்திரு ளொளித்திடக் கதிர்விரித்
தொருதனித் திகிரி யுரனுடை யூர்திப்
பரிதியங் கடவு ளலம்வரும் பரும
வொண்பொன் மால்வரை யொன்றல வீரண்டென
வெண்கொ ளப்புடைத் தினைத்திறு மாந்து

வளரிள வனமுலை வடிவினை யெழுதினும்
புளகமுற் றடிக்கடி புடைப்பதை யெழுதலு
மேந்தெழில் வள்ளைத் தண்டினை யெழுதினும்;
வாய்ந்தபொன் னூசலின் மறுகுவ தெழுதலுங்
காந்தளை யெழுதினுங் கதிர்வளை யுழல்வது
மேய்ந்துட னொலிப்பது மெழுதுவ தரிதா
லுழுவலன் பிடைநின் றூட்டிய வின்பக்
கெழுதகைக் கேளி ரின்னுங் கேண்மின்;
அரிமத ருண்கண் ணெழுதினு மருண்மருள்
புரிவன வகைவகை பொறிப்பது மரிதே;
குமிழினை யெழுதினுங் குணனுகர் குறிப்புயிர்ப்
புமிழ்திற மெழுதலு முணர்வுற வரிதே;
இதழமு துதவலு மெழுதுவ தரிதே;
புதன்முனி வுறநெறி புதுமையு மரிதே;
பதநடை முறவணி பரிபுர வொலியுற
விதமுறத் தேமொழி யெழுதுவ தெவரே;
எனவிவை,
எழுதிய கிழியொன் றுனவெனி லின்பம்
பழுது படாதல கலகொடு பயிலு
மன்றிலின் கூட்ட மகற்றலு நின்பாற்
பொன்றலி லருள்புறம் போம்வகை தொடங்கி
வன்றொழி லாடவர் மகிழ்ந்தயல் போதரப்
பூளையு மெருக்கும் புனைதா ராக
வேளைமுன் படர்த்தவன் வெண்ணீ றணிந்து
பனைமடல் பாய்மா வாகப்
புனைமணி மாட வீதிபோ துகவே

— பா.பா 140

பாப்பாவினம், இப் பரிபாடல்களைத் தனிப்பகுதியாக அமைப்பினும், தொல்காப்பியம் வெண்பாவின் வகையாக அதனைத் தருவதால் இப்பாடல்களும் இங்கேயே தொகுக்கப்பட்டுள்ளன.

தொடர்ந்து வருவன, சிதம்பரச் செய்யுட் கோவையின் வெண்பா, இனப் பாடல்கள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்

— சி. செ.கோ 1

அறனன்று மாதவ னென்ப துலகெந்தை
தாள்காணுன் நாணுக் கொள

— ,, 2

கண்ணுதல் காட்சி கிடைத்த விழிக்கில்லை
வெல்கூற்றின் தோற்றங் கொளல்

— சி. செ. கோ 3

திருமுடியிற் கண்ணியு மாலையும் பாம்பு
திருமார்பி லாரமும் பாம்பு-பெருமான்
திருவரையிற் கட்டிய கச்சையும் பாம்பு
பெரும்புயத்திற் கங்கணமும் பாம்பு

— ,, 4

கறையரவுக் கஞ்சுறு தஞ்சுறூஉந் திங்கள்
இறைவி நறுநுதலைக் கண்டு—பிறைமுடியோன்
கைம்மான் நடமுவந்த காற்புலிக்கஞ் சாதஞ்சும்
அம்மான் விழி மானைக் கண்டு

— ,, 5

வணங்கு சிறுமருங்குற் பேரமர்க்கண் மாதர்
அணங்கு புரிவ தறமால்-பிணங்கி
நிணங்காலு முத்தலைவேல் நீள்சடையெங் கோமாற்
கிணங்காது போலு மிரவு

— ,, 6

வரத்திற் பிறப்பொன் றருள்கெனினும் வள்ளல்
கரத்திற் கபாலத்தைக் காணாப்-புரத்தை
இரும்புண்ட நீகபுரத் தெய்தினார்க் கீயான்
அரும்புண்ட ரீகத் தயன்

— ,, 7

கூற்றங் குமைத்த குரைகழற்கால் கும்பிட்டுத்
தோற்றந் துடைத்தேந் துடைத்தேமாற் - சீற்றஞ்செய்
ஏற்றினான் தில்லை யிடத்தினான் என்னினியாம்
போற்றினால் நல்கும் பொருள்

— ,, 8

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று

— ,, 9

வாழி திருமன்றங் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கு முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்

— ,, 10

பூந்தண் பசுந்துழாய்ப் போது நறுவிரி
தேந்தண் திரள்திண்டோள் தேவற்குந் தேவிக்குங்

காந்தன் பதமலர்கள் காமுற்ருர் காமுருர்
பாந்தள் முடிச்சூடும் பூ

— சி.செ.கோ 11

புனலழுவம் புக்குடைந்தோர் தாளூன்றி நின்று
வனசங்காள் செய்தவநீர் வாழியரோ வாழி
பொருவிடையோன் தெய்வப் புலியூரை யொப்பாள்
திருமுகத்துக் கொப்பச் செயின்

— ,, 12

ஆதி முதலுணர்ந்தியா மன்புசெயப் பெற்றவா
ஓஒ பெரிது மரிதே யெளிதேயோ
வேதந் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணிந்தான்
பேதுற்றும் வெஃகேம் பிற

— ,, 13

பொன்மன்றம் பொற்ரு மரையொக்கும் அம்மன்றிற்
செம்மல் திருமேனி தேனெக்கும் அஃதேனே
உண்டு களிங்குங் களிவண்டை யொக்குமே
எம்பெரு மாட்டி விழி

— ,, 14

ஆடகச் செம்பொ னணிமன் றிடக்கொண்ட
பாடகச் சீறடியாள் பாகத்தான் - சூடகக்கைக்
கங்கையாள் கேள்வன் கழல்தொழூஉக் கைகூப்பி
நின்றிறைஞ்சச் சென்றிறைஞ்சுங் கூற்று

— ,, 15

காதன் மகளிர் கலக்கக் கலக்குண்டு
பேதுற்ருர் நெஞ்சும் பிழைத்தகன்ருர் நன்னெஞ்சும்
போதம் படரும் புலியூரே தாதுண்டு
வண்டுறங்கு நீள்சடையோன் வைப்பு

— ,, 16

காம ருயிர்செகுக்குங் கண்ணென்றே காமருசீர்
மாதர் நலனழிக்குங் கண்ணென்றே மாதருக்
கின்ன இரவொழிக்குங் கண்ணென்றே இந்நிலத்தில்
தன்னே ரிலாதான் றனக்கு

— ,, 17

செக்கர் சடையிற் பசுங்குழவி வெண்டிங்காள்
முக்க ணொருவற்கு நின்னோ டிருசுடரும்
ஒக்க விழித்தலா லுய்ந்தேம் ஒருநீயே
அக்க ணொருமூன்று மாயின்மற் றுய்வுண்டே
மைக்கண் மடவா ருயிர்க்கு

— ,, 18

பொன்புரிந்த செஞ்சடைக்கு வெள்ளிப் புரிபுரிக்கும்
வெண்டிங்கட் கண்ணியான் வெல்கொடியு மானேறே

அங்கவன்ற னூர்தியுமற் றவ்வேறே யவ்வேற்றின்
கண்டத்திற் கட்டுங் கதிர்மணிக்கிங் கென்கொலோ
பைந்தொடியார் செய்த பகை

—சி.செ.கோ 19

கருந்தாது கொல்லுங் கருங்கைத்திண் கொல்லர்
வருந்தா தியன்றதொரு வல்விலங்கு பூண்டு
திருந்தாதார் முன்றிற்றெறுஞ் சென்றுசிலர் தூங்க
இருந்தேங் களிதூங்கி யாமேமற் றம்ம
அருந்தா தலர்தில்லை யம்பலத்திற் றூங்கும்
பெருந்தேன் முகந்துண்ணப் பெற்று

— ,, 20

வின்மதனை வென்ற தலர்விழியே யொன்னார்தம்
பொன்னெயில் தீமடுத்த தின்னகையே பூமிசையோன்
தார்முடி கொய்தது கூருகிரே ஆருயிருண்
கூற்றுயி ருண்ட தடித்தலமே யேற்றான்
பரசும் பினாகமுஞ் சூலமும் என்னே
கரமலர் சேப்பக் கொளல்

— ,, 21

வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனே யவ்வூனி லுயிரே யுயிர்த்துணையே
ஆனேறு மேறே யரசே யருட்கடலே
தேனே யமுதே யளியேங்கள் செல்வமே
யானே புலனு நலனு மிலனன்றே
யானலு மென்போன்மற் றார்பெற்றா ரம்பலத்துண்
மாநா டகங்காணும் வாழ்வு

— ,, 22

வண்டுஞ் சுரும்பு ஞிமிறுங் குடைந்தார்ப்பத்
தண்டே னிறைக்கு மிதழி நறுங்கண்ணி
எண்டோண்முக் கண்ணா ளிமையம் புனைமன்றில்
அண்டர்கள் கண்களிப்பத் தொண்ட ரகங்குளிர்ப்ப
நின்றாடு மாடற் குருகா திருத்திரால்
வன்றின் மறலி புடைத்துக் கொடிறுடைக்கும்
அன்று முருகீர்கொல் லாம்

— ,, 23

கங்கைக்குக் கண்மலர் சாத்தக் கருங்குவளை
செங்குவளை பூத்தாள் செயலென்னே - யெங்கோமான்
பங்குற்றுந் தீராப் பசப்பு

— ,, 24

கம்பக் கரடக் களிற்றின் கபாயணிந்த
அம்பொற் புயத்தார்க் கமைந்ததால் - அம்பை
முலையானைக் கோடணிந்த மார்பு

— ,, 25

போற்றுமின் போற்றுமின் போற்றுமின் போற்றுமின்
கூற்றங் குமைக்க வருமுன் னமரங்காள்
ஏற்றுவந்தான் பொற்ற ளிணை

— சி.செ.கோ 26

உம்பர் பெருமாற் கொளிர்சடிலம் பொன்பூத்த
தம்பொற் புயம்வேட்டேந் தார்முலையும் பொன்பூத்த
பொன்பூத்த பூங்கொன்றை சூழ்ந்து

— ,, 27

கருமிடற்றன் செஞ்சடையன் வெண்ணீற்ற னென்னும்
மழுவலத்தன் மானிடத்த னென்னும் - முழுவலத்த
மன்றுடையான் தார்வேட்ட மான்

— ,, 28

செம்பொன் வேய்ந்த செழுமணி மன்றத்
தம்பொன் மேருவுக் கடிமுடி யின்றே

— ,, 29

கம்பை மாநதி யின்க ரைச்சிறு கன்னி பார முலைத்த மும்பணி
உம்பர் கோன்விடை யொன்றுல கேழுமுண் டதுவே

— ,, 30

முன்புல கீன்ற முகிழ்முலைக் கன்னியோ
டின்புறும் யோகி யெழுபுவிக் கரசே

— ,, 31

பின்றாழ் நறுங்கூந்தற் பிடிதழீஇ மால்யானைக்
கன்றீனும் முக்கட் களிறு

— ,, 32

கனகமார் கவின்செய் மன்றில்
அனகநா டகற்கெம் மன்னை
மனைவிதாய் தங்கை மகள்

— ,, 33

அம்பேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
கொம்பே றுடையான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வம்பே யிறந்து விடல்;
வாணேருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
நீணாகம் பூண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வீணே யிறந்து விடல்;
கோளாருண் கண்ணார்க் கழிந்த மடநெஞ்சே
ஆளாக வாண்டான் கழலிறைஞ்சா தென்கொலியாம்
வாளா விறந்து விடல்

— ,, 34

பரசிருக்குந் தமிழ்மூவர் பாட்டிருக்குந் திருமன்றிற் பரசொன் றேந்தி
யரசிருக்கும் பெருமானூர்க் காட்செய்யா ரென்செய்வார்

முரசிருக்கும் படைநமனுர் முன்ஞகு மந்நாளே
— சி.செ.கோ 35

படர்தரும்வெவ் வினைத்தொடர்பாற் பவத் தொடர்பப்
பவத்தொடர்பாற் படரா நிற்கும்
விடலரும்வெவ் வினைத்தொடர்பவ் வினைத்தொடர்புக்
கொழிபுண்டே வினையேற் கம்மா
இடர்பெரிது முடையேன் மற்றென்செய்கே னென்செய்கேன்
அடலரவ மரைக்கசைத்த வடிகேளோ வடிகேளோ
— ,, 36

கூற்றிருக்கு மடலாழிக் குரிசின்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
யூற்றிருக்குந் தில்லைவனத் தசும்பிருக்கும் பசும்பொன்
மன்றத் தொருதாளுன்றி
வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டஞ டுந்திறங் காண்மினே காண்மினே
— ,, 37

உருவல னருவல னெருவன்மற் றிருவருக்
கரியவ னெனவுணர்ந் தறைகுந ரறைகமற்
பரவைதன் மனைவயிற் பாவல னேவலி
னிருமுறை திரிதலி னெளியனென் றெளியனும்
பரவுவன் மன்றம் பணிந்து
— ,, 38

அங்கட் கமலத் தலர்கமல மேயீரு-நீரேபோலும்
வெங்கட் சுடிகை விரவரவின் மேயீரு-நீரேபோலும்
திங்கட் சடையீருந் தில்லைவனத் துள்ளீரு-நீரேபோலும்
— ,, 39

வெஞ்சம னஞ்ச வேலொ டெதிர்ந்தான்-நமரங்காள்
அஞ்ச லெனுஞ்சொல் லார்சொல வல்லார்-நமரங்காள்
மிஞ்சிவ ரிஞ்சி மன்ற மிறைஞ்சீர்-நமரங்காள்
நஞ்ச மயின்றூர் நல்குவர் மாதோ-நமரங்காள்
— ,, 40

## வெள்ளியல்

சீராரு நன்னெஞ்சே செங்கமலக் கட்கடவுள்
ஏராரு மாமருக னென், றுகிக்–கூராரும்
வேலேந்தி மாற்றலரை வென்றமரார் கட்குச்செங்
கோலீந்த கோன்றுணையைக் கொள்
—தி.தி 1-1

அன்னேக்கோ ரன்னேயுமா யப்பனுக்கோ ரப்பனுமாய்
முன்னவற்கு முன்னேனு மா, யுரிமை-பன்னவுள்ள
அன்பினர்கட் கன்பினனு மாய்நிற்கு மாறுமுகன்
தன்பதநெஞ் சேநினைந்து தாழ்

— தி.தி 1-2

சீலந் தருஞ்சதா சித்தமே கச்சை கொண்
டாலும் பராமரித் தன்,னேபோற்-சாலவும்
பாலொடு சாதம் பகுக்கும் பரிபுரம்
ஆலும் பதவே ளருள்

— ,, 1-3

நாளுமுள் ளேநினே நச்சிய யாவுமுன்
ஞளெலா நல்குநன் னட், பொடு-கோளுரு
வாளஞ் சிலம்பார் மலர்ச்சரண் டந்தெனே
ஆளுங் குகவே ளருள்

— ,, 1-4

பாவம் பொடிக்குமே பத்தியை யீட்டுமே
சாவுந் தொலேக்குமே தா, ரக-மாவருள்
கூட்டுமே முத்தியைக் கூட்டுடன் காணெனக்
காட்டுமே சண்முகன் கால்

— ,, 1-5

திங்கட் கிடையானின் சேயாகுஞ் செவ்வேளின்
அங்கழற் கேயடிமை யானுயே-யிங்குநனி
தங்கமன மின்றேகத் தானெண்ணு நெஞ்சேநீ
எங்கிருந் தாலுமினி யென்

— ,, 1-6

பெரிதிற் பெரிது பிரமாண்ட மேயப்
பெரியபிர மாண்டம்பல் பெம்மான்-முருகன்
உரோமநுனி நிற்குமெனி னேஞ்சே யுருவம்
விரோதவுரு வன்று விபு

— ,, 1-7

தற்புருட மீசானஞ் சத்தியோ சாதமதி
அற்புத வாம மகோர நறும்-பொற்பார்
முகமெனுஞ் சத்தி முகமொன்ருய் நிற்கும்
முகமே இறைசண் முகம்

— ,, 1-8

பூமியினேப் பொன்னதனேப் பூவையரைப் புத்திரரை
நாமிடலே வெற்றியினே நாகமதை-யோமில்
விரிவித்தை முத்திகளே வேட்போர்க் கருள்செய்
கருணேநிலே யேகந்தன் கண்

— ,, 1-9

நூல்கடா யாம்வேத நூலாக மங்கட்கும்
வால்கெடா மெய்ம்மைக்கும் வாக்குவலி-யால்வெளியாம்
எல்லா மொழிமூலத் திற்கு மிருக்கைநிதம்
நல்லார் தொழுங்குமர ஞ

— தி.தி 1-10

அடிகே ளடிகே ளடியீயென் றேத்தும்
அடியார் கவிச்சுவையை யன்பா-லுடனுகர்ந்து
நல்வற் சலம்பெருகு நாதசத் திக்கிருக்கை
செல்வக் குமரன் செவி

— ,, 1-11

அன்பூற் றெடுக்க வடிநாடி நிற்பவர்கட்
கின்பூற் றெடுக்க வினிதருளித்-துன்போட்டும்
மாசி லபய வரதங்க ளென்பனவே
காசின் முருகையன் கை

— ,, 1-12

ஆன்மாக்க ளேக்க மறியுங் குணமொன்றே
தான்மீக்கொண் ஞானமெனுஞ் சத்தியுமவ்-வான்மாக்கள்
ஊழ்வினைக ளூட்டியரு ளொண்கிரியா சத்தியுமே
காழ்வடிவுச் சேயிரண்டு கால்

— ,, 1-13

சதாநினைவோர் நெஞ்சத் தவிசிருக்குங் கந்தன்
அதீதசொரு பந்தா னளப்பி-லிதாகிதமாந்
தானங் கடந்தவுண்மைச் சைதன்ய நீங்காத
ஆனந்த மாம்பரமான் மா

— ,, 1-14

திருவாரும் பைங்கடம்புத் தேங்கண்ணி சூடி
வருவானே புள்ளி மயிலோன்-குருவாகிக்
கூடிக் களிப்பானே கோட்டாலை தீர்ப்பானே
பாடிப் பழிச்சுவார் பால்

— ,, 1-15

என்றுமுள்ள கந்தவே ளிட்டபல லைப்புசித்
தொன்றென்னு நல்வீ டுறுகாறு-மொன்றனையும்
எண்ணு திருந்துள் ளிதயநடு வேகுகனை
எண்ணுவது தானே யிதம்

— ,, 1-16

மாமாய லோக மயக்கப் பெருக்கிற்காங்
காமாதி யாறையுங் கைவிட்ட-தூமாண்
பொறியாளர் சிந்தைப் புலத்திலெஞ் ஞான்றுஞ்
செறியாறு மேமந் திரம்

— ,, 1-17

வீட்டெண்ண மாட்டெண்ணம் வித்தாரம் பேசெண்ணந்
தேட்டெண்ண மாகவே செப்பனைத்து-மோட்டியருட்
கந்தன் குமரன் கதிர்வேலன் பாதநனி
சிந்தித்த லேநற் செபம்

— தி.தி 1-18

தந்நாரர் மக்களினந் தாரமும் வாழவெனு
எந்நாளும் பொய்புகன் றீடழிவார்-தந்நேயம்
பண்ணுமன மோய்த்துப் பதியிளம் பூரணன்கால்
எண்ணியுயிர் வாழ்வதுதா னின்பு

— ,, 1-19

வையம் புரந்துய்யும் வாட்பொருந னாலும்
ஐயமெடுத் துண்பவனே யானாலு-மெய்யுணர்ந்து
தண்ணிருக்கும் பூங்கடப்பந் தாரான் பதப்போதை
எண்ணியிருக் கின்றதுதா னின்பு

— ,, 1-20

மாணிக்கப் பொற்குழையு மாசற்ற சண் முகமுங்
காணப் பசுஞ்சிகிமேற் காதலுளார்-காணவதி
உல்லாச மாகவரு மோமுருகை நாடியவா
இல்லா திருப்பதுவே யின்பு

— ,, 1-21

நல்வினையுந் தீவினையு நாடா நடுநிலையில்
தொல்வினைக டயளவுஞ் சோர்வின்றிப்-பல்புவிவாழ்
மிச்சையிலா வாவிகளை மெய்க்காப்பில் வைத்தருள்சேய்
இச்சைவிடா துய்வதுவே யின்பு

— ,, 1-22

காமமுங் கள்ளுங் கரப்பும் பராசனமும்
நேமவொண் சற்குருவி னிந்தையும்-பூமிதனில்
ஆற்றுவா ரோடுசேர்ந் தான்முனிவ ருக்குநனி
தோற்றுஞ் சகிக்கொணாத் துன்பு

— ,, 1-23

வினைவென்ஞா னப்பொதிய வேந்தரையிற் காவி
புனையவிலை யென்றே புகன்றான்-முனைநந்தி
மார்க்கண்ட மாமுனிக்கு மண்டலத்தின் மும்மலமும்
வேர்க்கொண்டார்க் கேது விதி

— ,, 1-24

இச்சையொழித் தேசிலிளம் பூரணனுக் காட்படுநல்
நிச்சயசன் யாச நிலையறியாப்-பிச்சரெல்லாம்:
நீண்டசடை முண்டனமாய் நீறுமணி காவியுடை
பூண்டறையும் யாவுமுழுப் பொய்

— ,, 1-25

தூக்கநிலை யிற்கண்ட சொப்பனம் போலவே
சாக்கிரமு மென்றறியாத் தன்மையர்தாம்-யாக்கையை
மெய்யென் பெயர்கண்டு மெய்யெனக்கொண் டேமெய்யைப்
பொய்யென்ப தேபெரும் பொய்

— தி.தி 1-26

மாக்காயம் வாக்கு மனந்தூய்மை யாய்நின்று
நீக்கா தெனைக்கொள்ளு நிர்மலவே-ளாக்கமருள்
பொய்யா வெழுத்தைப் புகன்றிவட் பொய்யாகு
மெய்யைமெய் யாக்கலே மெய்

— ,, 1-27

நற்றொண்டர் கேண்மையு ஞானமும் வாய்மையும்
அற்பர்கட் கின்பமா யாராவே-சிற்சபையுற்
றுய்யவொரு சேய்நோன் புளுற்றுநர்க் காருமிது
மெய்மெய்மெய் மெய்மெய்மெய் மெய்

— ,, 1-28

ஆக்கித் தரம்பார்த் தளித்துயிர்கள் யாவுமறு
போக்கோடு மீட்சி பொருந்தாம-லாக்கவடி
சேர்த்துக் கொளற்குள்ள தெய்வத்தைத் தான்மறக்க
நாத்திக ரல்லமே நாம்

— ,, 1-29

ஆசற்ற வண்டத்து மாச்சரிய பிண்டத்தும்
மாசற்ற ஞான மணியாகித் - தாசர்க்குட்
பூத்துவிரி கின்றவருட் புண்ணியனைப் பொச்சாக்க
நாத்திக ரல்லமே நாம்

— ,, 1-30

நித்தக் குமர னினைப்போ ரகத்திருந்து
சித்தப் படிக்கருளுஞ் சீர்வள்ள - லித்தரையிற்
பஞ்சமூ றுற்றாலும் பாலித்திங் காட்கொள்ளும்
நெஞ்சே மயங்காம னில்

— ,, 1-31

அருவா யுருவா யருவுருவ மாயெங்
குருவா யிலங்குங் குகேசன் - றிருவடியின்
இட்டஞ் சதாவுள் ளிருக்கவுள் கிற்பட்ட
கட்டையுஞ் சேருங் கதி

— ,, 1-32

பூவின் மணம்போலப் புந்தியகத் தேமறைந்து
மேவிக் கமழும் விறல்வேலோய் - கூவியழும்
என்னெண்ணம் போன்முடியா தென்றாலு மென்விரதம்
உன்னெண்ணம் போன்முடியா தோ

— ,, 1-33

நினைத்தார் வினைத்தா நெரிக்குமரு ளைத்தா
வெனைத்தா வுனைத்தா வெனத்தா - வனத்தார்கள்
சேர்புவளர் மாதரசி சேர்தலைவ வாசிறலை
யேர்புமயி லேறிறைவ னே

— தி.தி 1-34

ஞானவயில் வேலிறைவ நாகமயி லேறிறைவ
வானவர்பி ரானிறைவ' மாலிறைவ - கோனிறைவ
என்று துதிப்பா ரிருமையு மேல்வாழ்க்கை
ஒன்றுவ ருள்ளே யுணர்

— ,, 1-35

கரத்திற் சிலம்பிரண்டு காலி னெடுவேல்
உரத்திற் குழைசெவியி லொண்ணூ - லுரத்த
தலையிலரை ஞாணிடையிற் சார்முடியுண் டென்ப
மலைவிலர்மா தேவன் மகற்கு

— ,, 1-36

இருள்பொருதா வம்பலச்சித் தென்னுமுரு காநீ
டிருவிண்ணோர் தேடுமருந் தேமாண் - பொருவாச்சீர்
தேசுதருஞ் செந்திநறுந் தீர்த்தவிற லோங்குசிதா
வாசிறந்த மாவின் பருள்

— ,, 1-37

உள்ளபடி யெவ்வுயிர்க்கு மோவலற்ற வன்னையப்பன்
வள்ளிகொழு நற்றனே மானூன் முடிபுமிது
வள்ளலவ னைத்தான் மறந்தொருவன் மற்றவர்க்குப்
பிள்ளையெனச் சொல்லல் பிழை

— ,, 1-38

இகலுலகி லீன்ற விருவர்க்குந் தாதை
வகைமுறையெண் ணிற்றே வரைபோ மொருவன்
தகவின் றிடைநீங்கு மன்னூர்க்கே தன்னை
மகனென்று சொல்லல் வழு

— ,, 1-39

செய்தவினைக் கீடாகச் சேர்ந்திட்ட வன்னைபிதா
மெய்யையன் றுயா விளங்கா ரனைத்திற்கும்
ஈசுரனே யன்னைபிதா வென்றுணரா மேவேறு
பேசுவது மாதப் பிதம்

— ,, 1-40

வாளன்ன கண்மகண்மெய் வாழ்க்கைத் துணைவியல்லள்
வேளென்னு மெம்பெருமான் வேலோன் பதம்விழைந்து
நிற்பார்க் கனிச்சையே நித்தவாழ்க் கைத்துணைவி
அத்துணைவி வாய்ப்ப தரிது

— ,, 1-41

எச்சீவ னெச்சித்தி பெற்றுலு மென்றெய்வத்
தச்சன்போ லேதுந் தருமன்றி - யச்சிவம்போற்
பேரண்டஞ் செய்திடுமோ பேரருளை வென்றிடுமோ
நல்லுணர்வி ஞய்ந்து நவில்

— தி.தி 1-42

விரிபுவன வத்துக்கண் மூலமா மேன்மான்
பெரிததனுன் மாயை பிரமங் - கருதுமறி
வில்லா வதற்கஃ திருக்கு முயிர்பிரமம்
அப்பிரமத் தின்மே லது

— ,, 1-43

அதுவாம் பரப்பிரம மான்மாவுக் கான்மா
அதனலே யத்துவித மாகு - மிதுதானே
உண்மைச் சிவானுபவ முள்ளடங்கி நின்றீ
தறியா ரிரண்டொன்றென் பார்

— ,, 1-44

தெவ்விறந்த தெய்வநா மென்போய் கேள் சிற்றறிவாம்
எவ்வுயிர்க்கண் ணுந்தே விருப்பதுபோ லுன்கண்ணும்
அவ்வரிய தேவுள்ள தாகலினீ - யவ்வுயிரு
ளொன்றெனவெண் ணிக்குகனை யுள்கு

— ,, 1-45

ஆதரமார் நெஞ்சு மதன்மூல - போதமுநற்
சாதனையி னிர்ச்சலனஞ் சாருமேற் - பேதச்
சரியைகிரி யாயோகந் தாண்டோர் - விரியறிவாம்
அவ்வறிவே யோஞ்சே யருள்

— ,, 1-46

ஞானமின் றேன்முத்தி நண்ணுது ஞானமும்
யோகமின் றேல்வந் துதியாதவ் யோகமும்
மெய்ப்பத்தி யின்றி விளையாது மெய்ப்பத்தி
இன்கருணை யின்றெய்தா தே

— ,, 1-47

பத்தி மிகுமாயிற் பற்றென்று மிங்கில்லை
பத்தி மிகுமாயிற் பண்ணரிய யோகதுவே
பத்தி மிகுமேற் பதிமுருகன் ஞானமெய்தும்
பத்தி மிகுமேற் பரமசுக முத்தி யெய்தும்
சித்தமே யித்தைத் தெளி

— ,, 1-48

நாம்பிரம மென்று நவிலொருவன் வீணேமெய்
ஆம்பரம தேசிகனு வானேநன் னெஞ்சேசொல்
ஓங்குக வேளவன தொள்ளருள ருன்னினிங்ஙன்
நீங்குமல மெல்லா நிறைவுமுறு மாதலினேர்

ஏசி லுருவை யிதயத் தமர்த்தந்த
ஆசில் குணமுனக்கு மாம்

— தி.தி 1-49

பிரமக் குழவியின் பேரருளிற் சித்தி
வருமே வராவிடினு மாகதிகுன் ருதிதனுக
கப்பூதி மெய்ப்பொருள ராஞய ரேணுதி
துப்பேறு நீலநக்கர் சோமாசி மாறரருட்
சாக்கியர் வாயிலார் சத்தி குலச்சிறையர்
மூர்க்கர் முருகர் பெருமிழலை யார்மாறர்
காரிகணநாதர் கரி

— ,, 1-50

சின்மைசொல் சேய்வயதிற் றேடியெனை யாளவந்த
பொன்மையயில் வேலோய் புகலக்கேண் - முன்னர்நான்
சென்றுசென்று நின்ற செயலெல்லாம் யோசிக்கின்
என்றனக் கேயிறும் பூதுண்டாய் - நன்றில்
விசன மவமானம் விஞ்சுமவை யெல்லாம்
உசிதமுள்ள நீதா ஞெழித்துன் - சுசியடியே
ஏத்தியினி துய்யவென் றிட்டநன் றிக்காகத்
தோத்திரஞ் சொல்வேன் றெழுவேனுன் - கேத்திரஞ்
சென்றுசே வித்துச் செபிப்பேனின் ஞறெழுத்
தென்றறையு மந்திரமு மென்கோவே - பொன்ரு
வழிதந்து முன்சொற்ற வாக்கைநிறை வேற்ருய்
இழிவொன் றிலாதனைத் தே

— ,, 1-51

கூவுஞ் சரணு யுதக்கொடியோய் கூரயிலோய்
யாவும் புரக்குமுனை யாப்பினவில்
நாவுந் தொழுமுடலு நாளுநினை யுண்ணெஞ்சுந்
தூவுண்ணுந் தோமுண்ணு வே

— ,, 1-52

வளைதுகிலை வாயுடம்பைச் சுத்தியாய் வைத்துக்
கொளல்போலுள் வைத்துக் கொளநினைவோர்
உன்னை மறந்து மிருப்பாரோ வோகைதரற்
கென்னை விழுங்குமுரு கே

— ,, 1-53

கேழ்த்தா ரகதேவைக் கேகயமூர் கேடிலியைத்
தாழ்த்தா தெனையாளுந் தாளானை - யூழ்த்திநிதம்
வாழ்த்தா திராதெனது வாய்

— ,, 1-54

என்னு வியலாதா வெண்ணுவது போற்செயவென்

றந்நா ளுறுதிசொன்ன வள்ளிலேவேன் - மன்னுர்வின்
எந்நாள் வருமோ வினி

— தி.தி 1-55

நாற்றச் சரீரத்தை நன்குசெய வென்றுகுகன்
நீற்றினேயெற் கிட்டானந் நேமத்தை - யாற்ரு
திருப்பேனே வேழை யினி

— ,, 1-56

வெண்பொடியை யேயடியேன் மேனி மிசைத்திமிர்ந்து
கண்களிரண் டிற்குமிடைக் கைகாட்டி - நண்போ
டுரைத்தோ னெனேக்காவா னே

— ,, 1-57

பிறக்கும் பொழுதே பெயருரு மன்புஞ்
சிறக்கவிதித் தேதன்னேச் சேர்ந்துய் - நெறிக்கணென
வைத்தகுக னுளானே வந்து

— ,, 1-58

பாராளும் வேந்தர்க்கும் பண்ணுர்பா வாணர்க்கும்
வீராதி வீரர்க்கும் விண்ணேர்க்கு மேயதிகம்
ஆரா ரயிலனடி யார்

— ,, 1-59

எமக்கபரா தம்புரியி னுஞ்சகிப்போ மெந்தம்
அடியர்க் கிடுமபரா தஞ்சகியோ மென்றல்
செடியறுசேய் வாக்கதனேத் தேர்

— ,, 1-60

இருட்டை யருவருத்திங் கெல்லொளிக ளிச்சிக்கும்
பெற்றியுள்ள நெஞ்சே பிறங்கொளியெல் லாஞ்சடமா
மென்றுகுகச் சோதிவிரும் பே

— ,, 1-61

இருட்டளேயின் றியாதனேயின் றேயிருக்க நெஞ்சே
கருத்திற் குமரற் கருது

— ,, 1-62

தூஉ விசாகாவுன் ருேமற்ற நல்லருளேத்
தாஅ வெனக்கென்று தாழ்

— ,, 1-63

களிப்போஒ களிப்பென்று கூறிவில் லார்சே
யொளிப்போத ரின்னவர்சார் புய்

— ,, 1-64

பொய்ய் விழியிச்சை பொன்னயிலோன் றண்ணருளின்
மெய்ய் விழியில்லார் மேற்று

— ,, 1-65

எஃஃ கயிலேந்து மெந்தை திருவடியை
வெஃஃ குவார்க்கில் வெறிது

— ,, 1-66

சததங், குகனே குகனே குகனேயென் ஜேதிற்
சுகமே சுகமே சுகம்

— தி.தி 1-67

துப்புரவு நாடுயிரே சுப்பிரமண் யத்தின்மேல்
எப்பிரம முள்ள தியம்பு

— ,, 1-68

சீறுருவைப் பேருருவாச் செய்யு மதைமறைக்கும்
நீறுகொண்மெய்ச் சேயோர் நினைப்பு

— ,, 1-69

ஆயு மிகவோங் கரிபிரமர் வாழ்வளப்பில்
சேயுருவன் வாழ்விற் சிறிது

— ,,1- 70

திண்மைத் திருவருள்சிந் திப்போ ரெவர்க்குஞ்சேய்
வண்மைத் தரிசனமே மாண்பு

— ,, 1-71

இறந்துபிற வாக்குழவி யெந்தையறி யார்க்கில்
சிறந்த சிவானுபவச் சித்து

— ,, 1-72

என்னறிவா யாண்டு மிருக்குமொரு சேயென்னும்
மின்னறியார்க் கில்லையுயர் வீடு

— ,, 1-73

காறில் சிவயோகக் காட்சியுளா ரெவ்வருக்கும்
ஊறில் குகனருடா னுண்டு

— ,, 1-74

கேழார் திருமேனிக் கேடிலியின் சேயவனைத்
தாழாத தெய்வமுண்டோ சாற்று

— ,, 1-75

அல்காத வோங்கந்த ஞகமவ னன்பர்க்கேன்
பல்கா தருளறிவே பன்னு

— ,, 1-76

சிவஞ்சத்திக் கன்னியமாச் சேயை யுரைப்போர்
பவம்பற்றிப் பாசறைகொள் வார்

— ,, 1-77

சேய்நீயு நானுமே யோமென்று செப்பினன்
பாய்மா வுரியணிநம் பன்

— ,, 1-78

நன்று ரணஞ்சொலல்போ னற்குமர நானேநீ
என்றான் பரமசிவ னே

— ,, 1-79

ஆதியில்சே யாண்மை யளப்பவரா ரென்றறியும்
ஓதுரைகள் காந்தத் துள

— ,, 1-80

ஓதியுணர் வோய்செய்விட் டோமறையா கங்குருவுஞ்
சோதியு முண்டோ சொலாய்

— தி:தி 1-81

அருக்கம் புனபவன்செய்க் கன்னியம தாக
இருக்கும் பொருளொன் றிலே

— ,, 1-82

மடற்போதன் மான்முதலோ மாமுருகெண் ணுரேற்
கடப்பாரோ துன்பக் கடல்

— ,, 1-83

விளங்கயன்மால் விண்டு படைகளிருந் தென்சூர்ப்
பிளந்ததவன் வேலே பிற

— ,, 1-84

பகவற்குச் சேய்சிறிதென் பார்க்கு விகார
வகநிற்கு மைந்து மரு

— ,, 1-85

ஒன்றை யிரண்டு செயுமிரண் டொன்றுசெயுங்
கொற்றக் குமார குரு

— ,, 1-86

கங்கை மைந்தனல் வேல னீகதி
காணு மாறவன் கால்கட் கன்றலர்
துங்க மாமலர் சாத்தித் தோத்திரஞ் சொல்லுவலே

— ,, 1-87

பொய்சொ லேலினிப் பொய்சொ லேலெனப்
பொன்னி னுவசைத் தோதி யேகிய
துய்ய சேயடி சேர மாதுதி சொல்லுவலே

— ,, 1-88

சீற்ற வென்னகஞ் செவ்வி தாஞ்சமஞ்
சேர்ந்து சண்முக வாளென் றேகவி
சாற்ற வேவவன் பாதமாமலர் தாழுவலே

— ,, 1-89

பெண்ணி னூர்வமு மண்ணி னூர்வமும்
பிள்ளை யார்வமுங் கண்டு போதுமென்
றண்ணல் சண்முகன் பாத வார்வ மழுந்துவலே

— ,, 1-90

நாக ராக்கமுந் தேவ ராக்கமு
ஞால வாக்கமு நச்சி டாதுயர்
நாக நாயகன் சேந்தன் சேவடி நச்சுவலே

— ,, -191

அன்பர்க் கன்பின னும னுமய
வாறு மாமுகனன்பு கூர்ந்தபின்
கன்மத் தான்வரு மாதர் காமருங் கைத்ததரோ

— ,, 1-92

ஆரற் பூதர நாமத் தான்றெழு
மாதி சொன்னல வாய்மை கண்டபின்
பாரப் பூமியின் மோகப் பாடு படிந்ததரோ
— தி.தி 1-93

தொண்டர் செய்மனுக் கண்ட ருள்செயுஞ்
சோதி வேலிறை யெந்தை தண்ணளி
கொண்ட பின்றமி யேன ரந்தைகள் குன்றினவே
— ,, 1-94

இன்பக் கடலா விலகொரு சேயவன்
அன்பிற் பெரிய வடியவர்க் கெளியோன்
— ,, 1-95

இன்று சரவணப வாயநம வெனநாவே
அன்றென்செய் தாயோ வறம்
— ,, 1-96

பிறப்பிறப் பில்லிமகன் பிறவா னிறவான்
திறத்தவவன் சீடருமன் னர்
— ,, 1-97

பொய்யா மொழிப்புலவ ஞணப் புகலும்
நையா விலீலவே ஞ
— ,, 1-98

பார்வி சும்பும் படர்ந்து நிற்பான்
நார்கொ ளன்பர் நண்பு வப்பான்
சீர்கொள் வேற்கைச் சிவன்
— ,, 1-99

நாளுந் தாளை நாடு வாரை
நீளுந் தூய்மை நிறுவிக் கொள்வான்
கோளுண் ஞத குகன்
— ,, 1-100

சனக ராசன் சாமி தம்பி
அனக வாளென் பார்க ணிற்பான்
கனக வேல்கொள் கரன்
— ,, 1-101

கடிகொ ணீபங் கமழு மார்பா
அடிகொ டாயென் பவர்கண் ணூர்வான்
முடிவி லாச்சண் முகன்
— ,, 1-102

உடலி ருப்பா னுயிரி ருப்பான்
இடையி ருப்பா னிடர றுப்பான்
வடமி ருப்பான் மகன்
—,, 1-103

நன்றி ருப்பா னவையி ருப்பான்
மன்றி ருப்பான் மகனு வர்க்கார்
என்று முய்மீ னென

— தி.தி 1-104

நன்று மில்லி நவையு மில்லி
கன்ற லில்லி கருத லில்லி
வென்றி வேற்செவ் வியன்

— ,, 1-105

ஒன்றி லொன்றி லாமை யோதின்
வென்றி வேளை வினைதொ டாதஃ
தென்று மன்னோ னிரான்

— ,, 1-106

சித்தெ னுஞ்சேய் திரள சித்து
வத்து வாகா னதுவு மாணவ்
வத்த ளுகா தரோ

— ,, 1-107

சித்த சித்தாத் தெரியு மென்னிற்
சித்தின் மாயை யாகுஞ் செவ்வேள்
சித்தி னின்றே தெளி

— ,, 1-108

ஆற்ற லிவ்வி கார மந்தத்
தோற்ற மென்னிற் றாய்தின் றெம்மான்
ஊற்ற நின்றே யுணர்

— ,, 1-109

தேனூர்வே ரின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
ஞானனந் தச்சேயை நாடிநலங் கொள்ளாமே
ஏனோநா நிற்க விவண்;
முற்றற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
வெற்றிக்கை வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
எற்றுக்கு நிற்க விவண்;
தீதற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
கோதற்ற வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
ஏதுக்கு நிற்க விவண்

— ,, 1-110

கந்தன் பாத கமலத் துகளுளொன்
றந்த மிலாப்பே ரண்ட மாமே

— ,, 1-111

உலகா மாயைக் கிருக்கை யோங்குகன்
அலகி லடியா மருட்சன் னிதியே

— ,, 1-112

தேவரிறை யாய்மிளிருஞ் சேயவனீ செய்துள்ள
புவனந் தானே
மாவதிச யங்கட்கு மன்னுகரி யென்றறியார்
நாவிறைவ னற்புதமிஞ் ஞாலமிசை யென்னெனுமே
— தி.தி 1-113

இறையெனலே திருவினேயே திருவினேயி னுயிரேதென்
றியம்பு கின்ற
கறையனேயுங் கடவுளென வொருவனுள னெனுமார்க்கி
காதற் சேயாய்
அறிவொடுநீ யமைக்கினவ னும்பரனுண் டென்பானென்
றறிவலியோர் சிறிதுமிலர்க் கயிலோயென் புகல்வேனே
— ,, 1-114

அகிலநிரை தருவதற்குங் காப்பதற்கு மாய்ப்பதற்கு
மயனஞ் சாவும்
விகிர்தமுமி லொருபுத்தே ளுண்டென்றல் பொய்யெனவே
விளம்பி யிங்குச்
சிலமதவே ளம்பிற் சிந்தைநித நைவோர்
தொலேவறுமா னந்தந் துய்க்கவறி வாரோ
கலேஞரவாங் கந்தன் காமரடி நேடு
நிலேயுமரு வன்பு நித்தலுமுள் ளோரே
மலேவறுபே ரின்ப வாரிபடி வாரே
— ,, 1-115

சேவற் கொடியெம்மான் செப்பாதொன் ருேர்வேனே-
வென்செய்கோயான்
ஏவிக் குகனருண்மே லேற்ருதா ளாவேனே-
வென்செய்கோயான்
பாவுக் கருள்குமரன் பாரானே லுய்வேனே-
வென்செய் கோயான்
— ,, 1-116

கந்தன் சுகங்கருதுங் காதன் மலிந்ததிங-
னென்செய் கோயான்
சொந்தங் கவர்ந்தணேயுஞ் சோகம் பிறந்ததிங-
னென்செய் கோயான்
வந்தென் தலேவனவன் மாலாய் மருவிலனே-
யென்செய் கோயான்
— ,, 1-117

ஏமருள் சவ்வும் ரவ்வு மவ்வு-மெங் கோமான்
மாமலி ணவ்வும் பவ்வும் வவ்வு-மெங் கோமான்
ஓமொடு ரீயு மையுங் கிலியு-மெங் கோமான்
ஆமயம் வெல்லு மௌவுஞ் சௌவு-மெங் கோமான்
— ,, 1-11

தனியாய் வருவான் சவையாய் வருவா னெங் கோமான்
முனியாய் வருவான் முருகாய் வருவா-னெங் கோமான்
தொனியாய் வருவான் சுரனய் வருவா-னெங் கோமான்
மனுவாய் வருவான் மயிலே றியெனு-மெங்கோமான்

— தி. தி 1-119

வானூ டிருப்பான் வளியூ டிருப்பா-னெங் கோமான்
கானூ டிருப்பான் கடலூ டிருப்பா-னெங் கோமான்
ஊனூ டிருப்பா னுயிரூ டிருப்பா-னெங் கோமான்
ஆனூ டிருப்பா னயிலா ளியெனு-மெங் கோமான்

— ,, 1-120

மண்டல மாளு மந்திர மாளு-மெங் கோமான்
விண்டல மாளும் விண்முழு தாளு-மெங் கோமான்
முண்டக மாளும் விண்டுமெய் யாளு-மெங் கோமான்
வெண்டட மாளும் வேலிறை யான-வெங் கோமான்

—,, 1-121

மகமுத லுதன் வழுவறு வேத-னெங் கோமான்
துகளறு போதன் றுதிநுகர் காத-னெங் கோமான்
குகவடி யீயென் பவருரை கொள்வோ-னெங் கோமான்
புகழ்பவர் நேசன் புகழ்முனி யீச-னெங் கோமான்

— ,, 1-122

## கலிப்பா

கலிப்பா துறற்கை எனவும் குறிபெறும் (தொ-செ 70).

கலிப்பாவின் பொது இலக்கணங்கள் சில தொல்காப்பியத்தில் முன்னுறுப்புடனேயே அமைந்துவிடுகின்றன.

கலிப்பாவடிக்கண் நேரீற்றியற்சீரிரண்டும் வருதலில்லை (தொ-செ 25). வெண்சீரின் ஈற்றின் முன் நிரையசை வந்து இயலும் போது கலித்தளை தோன்றுகின்றது (தொ-செ 29). நிரையீற் றியற் சீரும் ஆசிரிய உரிச்சீரும் நிற்ப, நிரை முதல் வெண்சீர் வந்து நிரை யாக ஒன்றினும் கலித்தளையாம் (தொ-செ 60) என்ற கருத்து இன்னும் விளக்கப் படவேண்டிய ஒன்று. தளை விரவி வரலும் இப் பாவிற்கு உரித்து (தொ-செ 61).

அளவடியின் மிகுதியும், நெடிலடிகளிரண்டும் கலிக்கு உரியன வாம் (தொ-செ 59). கலிப்பாவின் கண் வெண்டளைகள், ஆசிரியத் தளைகள் விரவுமிடத்து ஐஞ்சீரடியும் வரலாம் (தொ-செ 63). நேரடி யினைத் தொடர்ந்து, அறுசீரடியும் வரற்குரித்து (தொ-செ 64). முடுகிவரும் எழுசீரடி கலியுள் வரலாம் என அமைக்கின்றார் உரை யாளர் (தொ-செ 66). அத்துடன் முடுகிவரும் ஐஞ்சீர் அறுசீர் அடி களும் கலியில் வரல் பெறப்படுகின்றன (தொ-செ 67).

முச்சீரடியும் கலி ஈற்றில் வரலாம் (தொ-செ 70). கலியின் ஈற்றுச் சுரிதகம் ஆசிரியமாகவோ (தொ-செ 76) அன்றி வெண்பாவாகவோ (தொ-செ 77) அமையுமாற்றைத் தொல்காப்பியம் குறிக்கின்றது.

கலிக்குரிய ஓசை துள்ளல் (தொ-செ 83). ஓசையால் வெண்பாவினின்று மாறுபட்ட இப்பா, நடையால் அதனையே ஒத்து அமையுமாற்றைத் தொல்காப்பியம் விளக்குகிறது (தொ-செ 106).

தொல். கலிக்கு நால்வகைகளைக் கூறியது. அவற்றுள் இறுதிவகையான உறழ்கலியைப் பிற இலக்கணங்கள் ஒன்றும் கூறவில்லை. கலம், கலிப்பா மூவகை எனக் கூறுவதும் இதனாலேயே. தொ.வி, வெண்கலிப்பா-கலிவெண்பா என இருபகுப்புகள் கொண்டு கட்டளைக் கலிப்பாவையும் இணைப்பதால், வகைகளின் பெருக்கம் ஏற்படுகின்றது.

தொல்காப்பியம் கூறும் ஒத்தாழிசைக் கலிக்கும் பிற்கால இலக்கணங்கள் கூறும் ஒத்தாழிசைக்குமிடையே வேறுபாடு உண்டு. தொல். ஒத்தாழிசையை உறுப்பு நிலையிலும், தேவர் பரவுதல் எனும் பொருள் நிலையிலும் இரண்டாகப் பகுக்கின்றது. தேவர்பரவல், மீண்டும் வண்ணகம்—ஒருபோகு என இரு பகுப்புப் பெறுகின்றது. அவற்றுள் ஒருபோகு, கொச்சக ஒருபோகு அம்போதரங்கம் எனப் பிரிவுபடுகின்றது.




தொல். கூறும் உறுப்புநிலை ஒத்தாழிசை, பிற்காலத்திய நேரிசை ஒத்தாழிசைக் கலியை ஒத்து அமைகின்றது. அவ்வாறே, தொல். கூறும் ஒத்தாழிசைப் பகுப்பான வண்ணகமும் அப்போதரங்கமும் பிற இலக்கணங்கள் கூறும் வண்ணக ஒத்தாழிசைக்கும் அம்போதரங்க ஒத்தாழிசைக்கும் அடிப்படையாக வந்தன போலும்.

தொல். கூறும் கலிவெண்பாட்டு, இலக்கணவிளக்கத்தில் முற்கால உரையாளரைப் பின்பற்றிப் போலும் இருபகுப்புப் பெறுகின்றது. வீ.சோ கலிவெண்பாவை வெண்பாவில் அடக்க, இ.வி கலியின் கீழே கூறுகின்றது.

தொல். குறிப்பிடும் கொச்சகத்திற்கேற்பப் பிற்காலக் கொச்சகம் அமையவில்லை எனவும், ஒத்தாழிசைப் பகுப்பான கொச்சக ஒரு போகின் வளர்ச்சியே பிற்காலக் கொச்சகக்கலி எனவும் டாக்டர். செட்டியாரவர்கள் கருதுவர். கொச்சகத்தின் கீழ், கலம் அமைக்கும் ஐவகைப் பகுப்பும் அவ்வாறே பிற இலக்கணங்களிலும் பின்பற்றப் படுகின்றது,

தொ.வி தவிர ஏனைய நூற்கள் கட்டளைக் கலிப்பாவிற்கு இலக்கணம் கூறாமைக்கு இப்பாவின் பயிற்சிக் குறைவே காரணமாகலாம். தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் முதலிய உறுப்புகட்குத் தனியாகத் தெளிந்த விளக்கம் தரும் நோக்குடன் சில நூற்பாக்கள் அமைக்கின்றது காக்கை பாடினியம். இதனைப் பின்பற்றிப் போலும் இத்தகு நுண் கருத்துக்களைத் தொன்னூல் விளக்கமும் இயம்புகின்றது.

சுவாமிநாதம் கலியில் ஒன்பது வகைகள் அமைக்கின்றது உறுப்புவகைகளில் மரபுமாறுபாடு இன்றெனினும் அனைத்தையும் இணைத்து ஒன்பது எனல் புதுமை.

ஒத்தாழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலி நல்வகைத்தே

—தொ-செ 130

அவற்றுள்
ஒத்தாழிசைக்கலி இருவகைத்து ஆகும்

— ,, 131

இடைநிலைப் பாட்டொடு தரவு போக்கு அடை என
நடை நவின்று ஒழுகும் ஒன்று என மொழிப

— ,, 132

தரவே தானும் நாலடி இழிபாய்
ஆறிரண்டு உயர்பு என்று அறையவும் பெறுமே

— ,, 133

இடை நிலைப்பாட்டே
தரவு அகப்பட்ட மரபினது என்ப

— ,, 134

அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடை நவின்று ஒழுகும் ஆங்கு என் கிளவி

— ,, 135

போக்கியல் வகையே வைப்பு எனப்படுமே
— தொ-செ 136

தரவியல் ஒத்தும் அதன் அகப்படுமே
புரைதீர் இறுதி நிலை உரைத்தன்றே
— ,, 137

ஏனை ஒன்றே
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே
— ,, 138

அதுவே
வண்ணகம் ஒருபோகு என இருவகைத்தே
— ,, 139

வண்ணகம் தானே
தரவே தாழிசை எண்ணே வாரம் என்று
அந்நால் வகையில் தோன்றும் என்ப
— ,, 140

தரவே தானும்
நான்கும் ஆறும் எட்டும் என்ற
நேரடி பற்றிய நிலைமைத்து ஆகும்
— ,, 141

ஒத்து மூன்று ஆகும் ஒத்தாழிசையே
— ,, 142

தரவில் சுருங்கித் தோன்றும் என்ப
— ,, 143

அடக்கியல் வாரம் தரவோடு ஒக்கும்
— ,, 144

முதல் தொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே
— ,, 145

எண் இடையொழிதல் ஏதம் இன்றே
சின்னம் அல்லாக் காலை யான
— ,, 146

ஒருபோகு இயற்கையும் இருவகைத்து ஆகும்
— ,, 147

கொச்சக ஒருபோகு, அம்போதரங்கம் என்று
ஒப்ப நாடி உணர்தல் வேண்டும்
— ,, 148

தரவு இன்றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை இன்றித் தரவு உடைத்து ஆகியும்
எண் இடையிட்டுச் சின்னம் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந்து ஒழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது
கொச்சக ஒருபோகு ஆகும் என்ப
— ,, 149

ஒருபான் சிறுமை; இரட்டி அதன் உயர்பே

— தொ-செ 150

அம்போதரங்கம் அறுபதிற்று அடித்தே
செம்பால் வாரம் சிறுமைக்கு எல்லே

— ,, 151

எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமொடு அந்நிலேக்கு உரித்தே

— ,, 152

ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபு இன்றி வருவது கலிவெண்பாட்டே

— ,, 153

தரவும் போக்கும் பாட்டு இடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்

— ,, 154

பாநிலே வகையே கொச்சகக்கலி என
நூல்நவில் புலவர் நுவன்று அறைந்தனரே

— ,, 155

கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கு இன்ருகல் உறழ் கலிக்கு இயல்பே

— ,, 156

வகுத்த உறுப்பின் வழுவுதல் இன்றி
எடுத்து உயர் துள்ளல் இசையன ஆகல்
கலிச்சொல் பொருள் எனக் கண்டிசினேரே

—கா. பா 68

வெண்கலி ஒத்தாழிசைக்கலி கொச்சகம்
என்று ஒருமூன்றே கலி என மொழிப

— ,, 69

வெண்டளே தன்தளே என்று இரு தன்மையின்
வெண்பா இயலது வெண்கலி ஆகும்

— ,, 70

தரவே தாழிசை தனிநிலே சுரிதகம்
என நான்கு உறுப்பினது ஒத்தாழிசைக் கலி

— ,, 71

தன்னுடை அந்தமும் தாழிசை ஆதியும்
துன்னும் இடத்துத் துணிந்தது போல்இசை
தன்னெடும் நிற்றல் தரவிற்கு இயல்பே

— ,, 72

தத்தமில் ஒத்துத் தரவின் அகப்பட
நிற்பன மூன்று நிரந்தவை தாழிசை

— ,, 73

ஆங்கென் கிளவி அடையாத் தொடைப்பட
நீங்கி இசைக்கும் நிலையது தனிச்சொல்

— கா.பா 74

ஆசிரியம் வெண்பா எனஇவை தம்முள்
ஒன்றாகி அடிபெற்று இறுதி வருவது
சுழியம் எனப் பெயர் சுரிதகம் ஆகும்

— ,, 75

நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கம் சுருங்கி அசையடி தாழிசை
விட்டு இடை விரியத் தொடுத்துச் சுரிதகம்
தாங்கித் தழுவும் தரவினொடு ஐந்தும்
யாப்புற்று அமைந்தன அம்போத ரங்கம்

— ,, 76

அச்சொலப்பட்ட உறுப்போடு அராக அடி
வைத்த நடையது வண்ணகம் ஆகும்

— ,, 77

எருத்தியல் இன்றி இடைநிலை பெற்றும்
இடைநிலை இன்றி எருத்து உடைத்தாயும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை பெற்றும்
இடையது இரட்டித்து எருத்து உடைத்தாயும்
இடையும் எருத்தும் இரட்டுற வந்தும்
எருத்தம் இரட்டித்து இடைநிலை ஆறாய்
அடக்கியல் காறும் அமைந்த உறுப்புக்
கிடக்கை முறைமையிற் கிழமையது ஆயும்
தரவொடு தாழிசை அம்போ தரங்கம்
முடுகியல் போக்கியல் என்றிவை எல்லாம்
முறை தடுமாற மொழிந்தவை அன்றி
இடையிடை வெண்பாச் சிலபல சேர்ந்தும்
மற்றும் பிறபிற ஒப்பு உறுப்பு இல்லன
கொச்சகம் என்னும் குறியின ஆகும்

— ,, 78

ஒத்தாழிசைக் கலி வெண்கலி கொச்சகம் என
முத்திறத்தான் வரும் கலிப்பா என்ப

— அவி 91

ஆய்ந்த உறுப்பின் அகவுதல் இன்றி
ஏந்திய துள்ளல் இசையது கலியே

— ,, 92

விட்டிசை முதற்பாத் தரவடி ஒத்து ஆங்கு
ஒட்டிய மூன்று இடைத் தாழிசை அதன்பின்
மிக்கதோர் சொல்லாம் தனிநிலை சுரிதகம்

ஆசிரியத்தொடு வெள்ளையின் இறுதல் என்று
ஓதினர் ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பே

— அவி 93

உரைத்த உறுப்பொடு தாழிசைப் பின்னர்
நிரைத்த அடியால் நீர்த்திரை போல
அசையடி பெறின் அவை அம்போதரங்கம்

— ,, 94

குறில் வயின் நிரையசை கூடிய அடிபெறினே
வண்ணகம் ஆகும்

— ,, 95

கலியொலி கொண்டு தன்தளை விரவா
இறும்அடி வரினே வெண்கலி ஆகும்

— ,, 97

(வெண் சீரிற் செப்பல் பிறக்கும்) விகற்பத்துப்
பண்பாய்ந்த துள்ளல் படும்

—அ.சா 59

துள்ளல் இசையன கலிப்பா ; மற்று அவை
வெள்ளையும் அகவலுமாய் விளைந்து இறுமே

— யா. க 78

ஒத்தாழிசைக்கலி வெண்கலிப்பாவே
கொச்சகக் கலியொடு கலி மூன்றாகும்

— ,, 79

நேரிசை அம்போதரங்கம் வண்ணகம் என்று
ஓதிய மூன்றே ஒத்தாழிசைக் கலி

— ,, 80

வெண்கலி ஒன்றே, கொச்சகம் ஐந்து எனப்
பண்பு அறி புலவர் பாற்படுத்தனரே

— ,, 81

தரவு ஒன்று, தாழிசை மூன்றும் சமனாய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத்து ஆகிச்
சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்றாய்
நிகழ்வது நேரிசை ஒத்தாழிசையே

— ,, 82

முந்திய தாழிசைக்கு ஈறாய் முறைமுறை
ஒன்றினுக்கு ஒன்று சுருங்கும் உறுப்பினது
அம்போதரங்க ஒத்தாழிசைக் கலியே

— ,, 83

அவற்றொடு முடுகியல் அடிஉடை அராகம்
மடுப்பது வண்ணக ஒத்தாழிசைக் கலி

— ,, 84

தன்தளை ஓசை தழீஇயும் நின்று ஈற்றடி
வெண்பா இயலது கலிவெண்பாவே

— யா. க 85

தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்தும் மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்

— ,, 86

தரவு ஒன்று, தாழிசை மூன்று, தனிச்சொல் சுரிதகமாய்
நிரல் ஒன்றின் நேரிசை ஒத்தாழிசைக் கலி; நீர்த்திரைபோல்
மரபு ஒன்றும் நேரடி முச்சீர் குறள் நடுவே மடுப்பின்
அரவு ஒன்றும் அல்குல், அம்போதரங்க ஒத்தாழிசையே

— யா. கா 30

அசையடி முன்னர் அராகம் வந்து எல்லா உறுப்பும் உண்டேல்
வசையறு வண்ணக ஒத்தாழிசைக் கலி; வான்தளை தட்டு
இசை தனதாகியும் வெண்பா இயைந்தும் இன்பால்
மொழியாய்
விசையறு சிந்தடியால் இறும் ஆய்விடின் வெண்கலியே

— ,, 31

தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே இயன்றும் மயங்கியும் வந்தன வாங்கு அமைத்தோள்
அரவு ஏர் அகல் அல்குல் அம்பேர் நெடுங்கண் வம்பேறு
கொங்கைக்
குரவே கமழ் குழலாய் கொண்ட வான்பெயர் கொச்சகமே

— ,, 32

சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவு; இரு மூன்று அடியே
தரங்கக்கும் வண்ணகக்கும் தரவு ஆவது; தாழிசைப் பாச்
சுருங்கிற்று இரண்டுஅடி; ஒக்கம் இரட்டி; சுரும்பு இமிரும்
தரங்கக் குழலாய் சுருங்கும் தரவினில் தாழிசையே

— ,, 42

தரவொடு, தாழிசை, சுற்றும் அராகம், அம்போதரங்கம்,
உரவுநடை நல்தனி, வாரம் என்றும் கலி; ஓர்ந்து அதனை
வரவிசை நேரிசை, அம்போதரங்கம், பின் வண்ணகமே,
விரவிய கொச்சகம் வெண்கலி என்று விகற்பிப்பரே

—வீ. சோ 116

வண்ணக ஒத்தாழிசைக்கு ஆறு உறுப்பு என்பர்; ஐந்து உறுப்பு
நண்ணுவது அம்போதரங்க ஒத்தாழிசை; நான்கு உறுப்பாம்
எண்ணிய நேரிசை ஒத்தாழிசை தான்; இறுதி சிந்தாய்த்
திண்ணிய நேரடியால் வரும் வெண்கலி தேமொழியே

— ,, 117

நிலவும் தரவும் தரவிணையும் நின்றதாழிசைகள்
சிலவும் பலவும் சிறந்தும் மயங்கியும் சீர்விகற்பம்
பலவும் வரினும் பவளமும் சேலும் பனிமுல்லையும்
குலவும் திருமுகத்தாய் கொண்ட வான்பெயர் கொச்சகமே
— வீ.சோ 118

ஆசுஇல் இசை துள்ளல்; அளவடி; கலிப்பாத் தரவு ஒன்று
அடைவில் தாழிசை மூன்றும் தனிச்சொல் சுரிதகமாம்
மாசில் நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அளவே
மன்சிந்து குறள்அடித் தாழிசைப் பின்பு வருமேல்
ஏசில் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, இவற்றோடு
இடை அராகம் வரில் வண்ணக ஒத்தாழிசையே,
பேசிய வெண்பா இயைந்து சிந்தடி ஈற்றடியாய்ப்
பிறதளை தன்தளை ஓசை பெறுவது வெண்கலிப்பா
— சி. பா-செ 4

பெறு தரவு, தரவிணையே சிலபல தாழிசையால்
பிறழ்வு இலவும் மயங்கினவும் அப்பெயர்க் கொச்சகமாம்
— ,, 5:1

சுருங்கும் தாழிசை தரவில் தரவு அடிமூன்று இழிபே
— சி. பா-ஒ 3 : 3

துள்ளல் இசையன கலியே; மற்று அவை
வெள்ளையும் அகவலுமாய் விளைந்து இறுமே
— இ. வி 736

—யா. க — 79...இ. வி 737

தரவு ஒன்றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொல் இடைநடந்து சுரிதகம் தழுவி
நிகழ்வது நேரிசை ஒத்தாழிசையும்;
ஆங்கு அதன் இடையே அளவடி சிந்தடி
பாங்கு அமை குறளடி படு நீர்த்திரை போல்
ஒய்ந்து ஒய்ந்து உற்றிடும் ஆயின் அன்னது
அம்போதரங்க ஒத்தாழிசையும்;
அசையடி மிசைத்தாய் அராகம் அவற்றொடு
மிசைவுஉறின் வண்ணக ஒத்தாழிசையும்;
வேற்றுத் தளை தட்டும் வெண்பா இயைந்தும்
ஈற்றடி முச்சீராய் இறின் முறையே
வெண்கலிப்பாவும் கலிவெண்பாவும்;
தரவே தரவிணை தாழிசை சிலபல
மரபான் இயன்றவும் மயங்கி வந்தனவும்
அவ்வப் பெயரால் அமைந்த கொச்சகமும்
ஆகும் என்ப அறிந்திசி னோரே
— இ. வி 738

வண்ணகம் அம்போதரங்க ஒத்தாழிசை
நண்ணிய தரவின் அடி இருமூன்றும்,
ஏனைய தரவுஅடி இழிபு ஒருமூன்றும்,
பேணிய பெருமை பெரும் பொருள் முடிபும்
இரண்டடி இழிபும் இரட்டிமூன்று ஆக்கமும்
ஒன்றிய தாழிசை உறுதலும், உறுங்கால்
தரவில் சுருங்கல் தகுதி என்று உரைத்தலும்,
அளவடி முதலா அனைத்து அடியானும்
வருவது வண்ணகம், வருங்கால் சிறுமை
நாலடி பெருமை நாலிரண்டு ஆகி
நடத்தலும் நெறி என நாட்டினர் புலவர்

— இ. வி 747

கலியொலி துள்ளல்; கலித்தளை, பிறவும்
வெண்சீர், பிறவும் விரவிய அளவடி
தன்னால் நடக்கும் தன்மைத்து ஆகி,
ஒத்தாழிசை மூன்றும், ஓர் ஐங் கொச்சகம்,
வெண்கலி, கலிவெண்பா, விகற்பம் ஈரைந்தே

— தொ. வி 227

கலி, முதல் உறுப்பாம் தரவு தாழிசையே;
துணை உறுப்பு எனக் கூன், சுரிதகம், வண்ணகம்
அம்போதரங்கம் ஆம்இவை நான்கே

— ,, 228

தரவு தாழிசை தன்தளை வெண்டளை
இரண்டு உறழ்ந்து அளவடி இரண்டும் பலவுமாம்

— ,, 229

வண்ணகம் அளவடி வரை முதல் பல அடி
நான்கு ஆதி எட்டு ஈருய் நடை முடுகு அராகமாம்

— ,, 230

அம்போதரங்கம் அம்பளாம் திரைபோல்
அளவடி ஈரடி இரண்டும் பேரெண்;
அளவடி ஓரடி நான்கும் அளவெண்;
சிந்தடி ஓரடி எட்டும் இடையெண்;
குறளடி ஓரடி நானான்கும் சிற்றெண்;
எட்டும் நானான்கும் நான்கும் எட்டுமாய்ச்
சுருங்கவும் அந்நால் துணை உறுப்பு உடைத்தே

— ,, 231

சுரிதகம் என்ப சுரிந்து எனக் கூனின்
பின் அகவல் வெள்ளையாக முடிவதே

— ,, 232

நேரிசை அம்போதரங்க வண்ணகம்
என்று ஒத்தாழிசை இவைமூன்று; இவற்றுள்

தரவு ஒன்று, ஒருமுத் தாழிசை, தனிநிலை,
சுரிதகம் என நால் துணைவரும் நேரிசை;
தாழிசைக் கீழ் அம்போதரங்கம் சாரவும்,
அம்போதரங்கம் மேல் அராகம் அணையவும்,
அம்போதரங்கமேயாம் வண்ணகமாம்

— தொ. வி 233

கொச்சகக் கலி ஐங்கூறுபாடு எனத்
தரவே தரவிணை தாழிசை சிலபல
சில பிறழ்ந்து உறழ்ந்தும் சில மயங்கியுமாம்

— ,, 234

வெண்கலிக்கு அளவடி, பலதளை பலதொடை
மண்டி, ஈற்று அசைச்சீர் வந்து, சிந்தடியாம்;
கலிவெண்பா வெண்கலி என நடப்பினும்
வலி வெண்டளை தவா வரவும் பலதொடை
நேரிசை வெண்பா நேரவும் பெறுமே

— ,, 235

கட்டளைக் கலிப்பா காட்டுங் காலை
ஒருமாக் கூவிளம் ஒருமூன்று இயைய,
நேர் பதினொன்று நிரை பன்னீர் எழுத்தாய்
நடந்து அடிப்பாதி ஆய் நான்குஅடி ஒத்தவாய்
வருவது இன்று வழங்கும் நெறியே

— ,, 236

அளவடியாய்த் துளல் அமைந்து வருவது
கலியாம் என்மனார் கற்று உணர்ந்தோரே

— மு. வீ-யா. செ 34

தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம்
எனும் நான்கு உறுப்பினது ஒத்தாழிசைக்கலி

— ,, 35

அளவடி சிந்தடி குறளடி ஆகும்
அசையடி ஆகிய அம்போதரங்க
உறுப்பைத் தாழிசை தனிச்சொற்கு இடையில்
கொண்டு, தரவு தாழிசை அம்போ
தரங்கம் தனிச்சொல் சுரிதகமென்னும்
ஐந்து உறுப்பொடும் வரல் அம்போதரங்க
ஒத்தாழிசைக் கலியாம் உரைதரினே

— ,, 36

தாழிசை அம்போதரங்கக்கு இடையே
அராகம் அடைந்து முன் தரவு தாழிசை
அராகம் அம்போதரங்கம் தனிச்சொல்
சுரிதகம் ஆறொடு தோன்றுவ வண்ணக
ஒத்தாழிசைக் கலியாம் உரைதரினே

— ,, 37

தரவுக் கொச்சகம் ஒருதரவொடு போதரும்
— மு: வீ-யா: செ 38

தரவிணைக் கொச்சகம் தான் இருதரவொடு
தனிச்சொல் சுரிதகம் தழுவியும் வருமே
— ,, 39

தரவு ஒரு தாழிசை மூன்று தனிச்சொல்
சுரிதகம் நான்கினவாம் சிஃறுழிசை
— ,, 40

தரவு ஒன்று தாழிசை ஆறு தனிச்சொல்
சுரிதகம் நான்கினவாம் பஃறுழிசை
— ,, 41

மயங்கி வருவது மயங்கிசைக் கொச்சகக்
கலியாம் என்மனுர் கற்று உணர்ந்தோரே
— ,, 42

கலித்தளை தட்டுக் கலியொலி விரவியும்
வெண்டளை தட்டு வெள்ளொலி தழுவியும்
ஈற்றடி சிந்தடியாய் வரல் வெண்கலிப்
பாவாம் எனப்பெயர் பகரப்படுமே
— ,, 43

துள்ளல், ஏந்திசை பிரிந்திசை அகவல்
என மூவகைப்படும் என்மனுர் புலவர்
— ,, 44

ஏந்திசைத் துள்ளல் இயையின் கலித்தளை
— ,, 45

வெண்டளை தன்தளை விரவி வருவது
பிரிந்திசைத்துளல் எனப் பேசப்படுமே
— ,, 46

இவ் இருதளையும் பிறவும் மயங்கித்
தொடருவது அகவல்துள்ளலாம் எனலே
— ,, 47

அம்போதரங்க வண்ணக ஒத்தாழிசைக்
கலியல்லாத கலிப்பாவினுக்குத்
தரவு மூன்றடி சிறுமை; பெருமை
உரைப்போன் குறிப்பினவாம் அளவின்றே
— மு: வீ-யா: ஒ 19

அம்போதரங்க வண்ணகக்கும் சிறுமை
பெருமை தரவுஇலை; பேசுங்காலை
ஆறடி என்மனுர் அறிந்திசினேரே
— ,, 20

கலிப்பா நேரடி துள்ளல், இரு சுரிதகம் பின்
காட்டும் ஒரு தரவு முத்தாழிசை கூன் பின்னிலை கொண்டு
ஒலித்தல் நேரிசை ஒத்தாழிசை, இடைதேர் குறள் சிந்து

ஒய்ந்து ஒய்ந்து உற்றிடில் அம்போதரங்க
ஒத்தாழிசை, முன்
பலித்து அராகம் பெறில் வண்ணக ஒத்தாழிசையாம்
பண்பின் வெண்பாச் சிதைந்து முச்சீர் இறுவது
வெண்கலிப்பா
வலித்தரவும் தரவிணையும் சிலபல தாழிசையும்
மயங்கலும் கொச்சகம் ஒன்பான் பிறங்கலிப்பா அளவே
— சுவாமி 159

## கலியினம்

பிற பாக்களைப் போன்றே கலிப்பாவுக்கும் மூன்று இனங்கள் உள்ளன. கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்பன.

இரண்டுமுதல் பலவடிகளாலாகி, முதலடியினும் ஈற்றடி நீண்டமைவது கலித்தாழிசை. அடிவரையறை கலத்தில் இல்லை. காரிகையும் அடிவரையறை இன்று எனவே கூறியது. வீ. சோ, 'ஈரடி ஆதி' எனச் சிறுமையைச் சுட்டியது. ஒருபொருள்மேல் மூன்றடுக்கியும் கலித்தாழிசை வரலாம் என்ற கருத்தை, உரையாசிரியரைப் பின்பற்றிப் போலும் தொ. வி அமைத்தது. அதேபோன்று ஈற்றடிகள் தவிரப் பிறவடிகள் அளவொத்து வரவேண்டும் எனும் முன்னிலக்கணக் கருத்து இதன்கண் நெகிழ்த்தப்படுகின்றது - அளவொத்தும், ஒவ்வாதும் வரலாம் என.

நெடிலடி நான்கால் வருவது கலித்துறை. இக்கருத்தே அணித்திலக்கணத்தும் அமைந்தது. சம்பந்தர் தேவாரத்தில் தோன்றிய புதிய கட்டளைக் கலித்துறை வடிவம் பற்றிய இலக்கணம் வீரசோழியத்தின்கண் முதலில் கூறப்படுகின்றது. கலித்துறை என்ற பெயரில் தொன்னூல் விளக்கம், சீர்நிலையையும் வகுத்துக் 'கட்டளை கலித்துறை' என்ற பெயரையும் தருகின்றது. சிதம்பரப் பாட்டியலும் இக்கருத்தைப் பின்பற்றியது. சுவாமிநாதம் 'கட்டளை' என்ற பெயர்த் தொடர்பின்றியே, கலித்துறைக்கு எழுத்தெண்ணிக்கை வகுக்கின்றது.

வீ. பா ஆசிரிய இனம் போன்றே, கலியின் இனங்கட்குச் சிறப்பான இடமும் விரிவான விளக்கமும் அளிக்கின்றது. எழுத்துச் சீர் அமைப்புக்களைக் கருதிக் கலியினங்களைச் சந்தச் சார்புடனும் காட்டுகின்றது.

நாற்சீரடி நான்கால் வருவது கலிவிருத்தம். பிற்கால நிலையில் தரவு தனித்துவரும் கொச்சகக் கலிப்பாவிற்கும் கலி விருத்தத்திற்கும் வேறுபாடு கருதா நிலை ஏற்பட்டிருக்கவேண்டும். ஒருவர் கலிவிருத்தம் எனக் குறிக்கும் பாடலை மற்றொருவர் கொச்ச

கக்கலி எனக் கூறும் நிலை அமைகின்றது. பாவகையான தரவு கொச்சகத்திற்கும் பாவினமான கலிவிருத்தத்திற்கும் வேறுபாடு இல்லை எனலாமா? அது ஏற்புடையதா? என எண்ணவேண்டி யுள்ளது.

நாற்சீரடி நான்கால் வரும் தரவு கொச்சகத்திற்கும் நாற்சீரடி நான்கால் வரும் கலிவிருத்தத்திற்கும் உள்ள வேறுபாடு:

(1) தரவு கொச்சகம் கலித்தளையும் வெண்டளையும் மட்டும் பெற்று வருகின்றது. இது பெரும்பான்மை. அருகிச் சிலவிடங்களில் ஒன்றுவஞ்சித்தளை வரலாம் எனப் பாடல்களைப் பார்க்கும்போது தெரிகின்றது. கலிவிருத்தத்தில் தளை பார்க்கப் படுவதில்லை.

(2) தரவு கொச்சகம் ஓரெதுகையில் நான்கு, ஆறு அல்லது எட்டடிகள் பெற்று வருகின்றது. கலிவிருத்தம் நான்கடியே பெற்று வரற்பாற்று.

நாலொரு சீரான் நடந்த அடித்தொகை
ஈரிரண்டு ஆகி இயன்றவை யாவும்
காரிகை சான்ற கலிவிருத்தம்மே

— கா: பா 79

ஐஞ்சீர் அடியின் அடித்தொகை நான்மையொடு
எஞ்சாது இயன்றன எல்லாம் கலித்துறை

— ,, 80

அந்தடி மிக்குப் பலசிலவாய் அடி
தந்தமில் ஒன்றிய தாழிசை ஆகும்

— ,, 81

ஈற்றடி மிக்கன ஒத்தன ஆகிப்
பலவும் சிலவும் அடியாய் வரினே
கலிப்பா இனத்துத் தாழிசை ஆகும்

— அவி 96

ஐஞ்சீர் நான்கடி கலித்துறை ஆகும்

— ,, 98

நாற்சீர் நாலடி வருவது ஆயின்
ஒலியின் இயைந்த கலிவிருத்தம்மே

— ,, 99

அடி எனைத்து ஆகியும், ஒத்துவந்து அளவினில்
கடையடி மிகுவது கலித்தாழிசையே

— யா: க 87

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை

— ,, 88

அளவடி நான்கின கலிவிருத்தம்மே

— ,, 89

அடி வரைஇன்றி அளவு ஒத்தும், அந்தடிநீண்டு இசைப்பின்
கடிதல் இல்லாக் கலித்தாழிசை ஆகும்; கலித்துறையே
நெடிலடி நான்கா நிகழ்வது; நேரடி ஈரிரண்டாய்
விடின் அதுவாகும் விருத்தம் திருத்தகு மெல்லியலே

— யா. கா 33

ஈரடி ஆதி எனைத்து அடியாலும் வந்து ஈற்றில் நின்ற
ஓரடி நீளில் கலித்தாழிசை; ஒலியோர் விருத்தம்
நேரடி நான்காய் நிகழும் என்றூர்; நெடில் என்று உரைத்த
பேர் அடி நான்கு கலித்துறையாம் என்பர் பெய்வளையே

— வீ. சோ 123

நெடில்அடி நான்கு, அவை நேர்ந்து நின்றே பதினறு
எழுத்தாய்
முடிவனவாம், பதினேழு நிரைவரின் முன்மொழிந்த
படி வழுவாது நடைபெறும் ஓசை, வண்டு ஏந்திநின்ற
கடிகமழ் கோதைக் கயல்நெடுங் கண்ணி கலித்துறையே

— ,, 124

இறுதி நீண்டு அளவு ஒத்தல் பலஅடி தாழிசையே
எழில் ஐஞ்சீரடி நான்கு கலித்துறை, நேரடி நான்கு
உறுதல் கலிவிருத்தம்

—சி. பா-செ 5:2,3

... ... ... ஒற்று எண்ணுது
அறை அடி நேர் பதினறு நிரை பதினேழு எழுத்தாய்
அடி நான்கு தொறும்வரின் கட்டளைக் கலித்துறையே

— சி. பா-ஒ 4:1,2

அடி எனைத்து ஆகியும் ஒத்தும் வந்து அளவினில்
கடையடி மிகுவது கலித்தாழிசையும்,
நெடிலடி நான்காய் நெறிப்பட நிகழ்வது
கலித்துறை ஆதலும், கலிப்பா விருத்தம்
அளவடி நான்கினது ஆதலும் விதியே

— இ. வி 739

கலித்துறை நெடிலடி நான்கு ஒத்து அவற்றுள்
இடை நேர் வெண்சீர் இயற்சீர் முதல் நான்கு
இடை நிரை வெண்சீர் இறுதிச்சீர் மோனையாய்க்
கடையே கொண்டு இறும் கட்டளைக் கலித்துறை

— தொ. வி 241

கலித்தாழிசையே கடையடி மிக்கு மற்று
அடி எனைத்து ஆகியும் அளவுஒத்து ஒவ்வாது
ஒருமூன்று அடுக்கியும் ஒன்றுமாய் வருமே

— ,, 245

விருத்த விகற்பம் விளக்கிய காலை
...... வரும் கலி அளவடி

— ,, 248 : 1,2

இரண்டு அடியாய் ஈற்றடி நீண்டு இசைப்பது
கலித் தாழிசை எனக் கருதப்படுமே

—மு. வீ-யா.செ 48

ஒருபொருள்மேல் மூன்று அடுக்கி இரண்டுஅடி
யாக வருவஃது அதன் சிறப்பாகும்

— ,, 49

ஐஞ்சீரடி நான்காய் அளவொத்து
வருவது கலித்துறையாம் வழுத்திடினே

— ,, 50

அளவடி நான்காய் வரல் கலிவிருத்தம்

— ,, 51

அளவு ஒத்து ஈறு உயர்ந்து அடிமட்டில கலித்தாழிசை, நான்கு
அடி நெடிலும் அதிற் பன்னேழ் பன்னிறு எண் முடிவுங்
களவற்ற கலித்துறை, நேரடி நான்கு பெறுதல்
கலிவிருத்தம் இனம் மூன்றும்...

— சுவாமி 160

**கலித்துறை**

குறிய மாவொடு கூவிள மிருவிள மாவென்
றறிதி காயது மந்தமூர் தருமருங் குழலே

—வி. பா 2-1

சீர்மாங்கனி கூவிளங் கூவிளஞ் சொற்ற தேமா
நேர்மா விரண்டிற் றனியேகுறி னிற்கு மென்றால்
ஓர்மா புளியொ டுறுமாபுளி மாங்க னிச்சீர்
சேர்மா விரண்டு மதனக்கொடி தேர்கு வாயே

— ,, 2-2

**கலிவிருத்தம்**

காத லிக்குங்க லிவிருத்தத் தொரு
பாத மாவரும் கூவிளம் பற்றிடி
ஞாத லானிரை நேர்க்கெழுத் தாறிரண்
டோதி னரொரு பஃதுட னென்றரோ

— ,, 5-1

முதலிரு சீர்விள மூன்று மாவினம்
பதமது கடையினிற் பசிய கூவிளம்
மதியது பொருகிலா மதிதொறுங் குறைஇ
புதியது செய்யினும் பொருவில் பூவையே

— ,, 5-2

பண்ட மிழ்க்கவிப் பாக்களை னைத்தையுங்
கொண்டு கூறுதல் கூடுத லின்மையால்
வண்டு லாமது வார்குழல் வந்துழிக்
கண்டு கொள்வ தறிஞர்க டமையால்

— வி.பா 5-3

## சந்த விருத்தம்

### கலிச்சந்த விருத்தம்

முதலெ ழுத்து மூன்று குற்றுயிர்
மதியி ரண்டு மாறி மாறியே
வதியு மேன்ம னேர மாவென
வுதவி னுரு வப்ப நாமமே

— ,, 7-1

முந்து மூன்று முன்றெ ழுத்தவா
யந்த மொன்று மைந்த தாகுமால்

— ,, 7-2

நாலக் கரமுற் றுநடக் குமவை
நீலக் குழலாய் நிகழும் பலவாய்
நாலக் கரமா நவில்வெண் டளையிற்
சாலப் பகர்வார் தமிழ்நா வலரே

— ,, 7-3

நிரைநேர் முதலா நிகழும் வகையா
னிருபா லவைதம் மியல்பென் றனரால்
நிரையே முதலா நிகழ்தோ டகமென்
றுரையும் பெயரோ டொளிர்காந் தியுமே

— ,, 7-4

### சந்தக் கலிவிருத்தம்

வேதப் பொருளார் விண்டோய் மொழியார்
ஓதிற் றிலரீ தோதுந் தமிழே
தீதற் றநறுந் தேமா புளிமா
பேதைக் குணமார் பின்றூழ் குழலே

— ,, 7-5

ஒருநான் குகலைப் புளிமா வொருநான்காய்
மருவக் கடைநீ டுயிர்வந் திடுமன்றே

— ,, 7-6

கோதறு கூவிள மூன்றொரு தேமா
போதர மேலவர் போற்றிய தற்கே

மாதர சேயழ கேமயி லேமால்
தோதக மாம்பெயர் சொற்றன ரன்றே

— வி.பா 7-7

சம்பக மாலாச் சந்த விருத்தத்
தம்பத மெட்டேழ் தானமி ரண்டில்
அம்புவி யாய்குற் ருவியு மூன்றின்
வம்பவிழ் கோதாய் வந்தன மாதோ

— ,, 7-8

சீரே நீளுந் தேமா முற்றும்
பாராய் தேனர் பாலெய் தீஞ்சொல்
வாரோ கொங்கைப் பூணர் மானே
பேரே வித்யுன் மாலைப் பேசே

— ,, 7-9

வாழி யென்னுமு தாரண மாச்சீர்
சூழு மோரிரு கூவிளை தூய்மா
வாழி வையம றைமணி ரங்கப்
பாழி யங்கவி பைந்தொடி மாதே

— ,, 7-10

இனிய நாயகா வென்னை யாளவா
வனைய மாவிளத் தாம்வி ருத்தமே
தனிமு கத்தினய் சம்ம தப்பெயர்
புனையு மென்பரால் போற்று நூல்வரால்

— ,, 7-11

நாலோ டொன்பது நாலு மொன்றுமேழ்
பாலே குற்றுயிர் பாங்கர் நீடெழுத்
தாலே முற்றிடு மாகி ஞமமு
மேலாஞ் சுத்தவி ராட்டு மேவுமால்

— ,, 7-12

ஓர்நெடிலு முக்குறிலு முற்றசிறு முக்கா
யோர்நெடிலு மோர்நெடிலு முற்றதொரு தேமா
நேர்நிரையு மாகிலது நீள்வன மாயூரப்
பேர்பெறு மெனப்பகர்வர் பேரியறெ ரிந்தோர்

— ,, 7-13

நுவணந்த னிற்பெரிய நுண்மறைக ளேபோல்
புவனந்த னிற்பெரிய பொன்னிமய மேபோல்
சிவனுந்த னித்தகைய தேவமொழி வல்லோர்
நவநந்தி நீயென நவின்றபெயர் நாடே

— ,, 7-14

முந்தோர்கு றிற்கடைமு டிந்தாறு மாங்காய்
பிந்தோரி டத்தொருவி ளங்காய்பி றங்க

முந்தோரி டத்தினது மூன்றுவ தாக
வந்தால தைத்தமிழ்வ லாராத ரிப்பார்

— வி.பா 7-15

வாரேறு கொங்கைமத னங்கொடிவ னப்பீர்
பாரேம மாக்குநர்ப டுக்குநரி டும்பை
நீரேயி லீரெனினி கழ்த்துபவர் மைந்தர்
யாரேது றக்கிலரு யிர்க்கிழிபு தேர்வர்

— ,, 7-16

பாராக்க டுங்கால்வ சப்பட்டு லைந்த
நீராழி யென்றேநி னைக்கின்ற வாழ்வை
யாரேக டப்பார்க லத்தீரி லீரேல்
சீரார்கு ணத்தீர்தி ருப்போலு ருப்பீர்

— ,, 7-17

நீடெ ழுத்திறுதி நீங்கிய மாவி
ளேடு மூன்றுகுறி லீற்றுறு காய்ச்சீர்
கூடு மற்றையவை கூவிளே தேமா
சூடு மால்பெயர்சு வாகத மென்றே

— ,, 7-18

ஒன்று மூன்றுபதி னொன்றொ டொன்பதே
ழென்ற தானமவை நீடெ ழுத்தவாய்க்
குன்றெ ழுத்தொழி யிடத்து கூடுமே
லொன்று நாமமி ரதோத்த மோதினர்

— ,, 7-19

சிற்றுவியெ ழுத்தாவிறு தேமாங்கனி மூன்றே
டுற்றுலிரு நெட்டக்கர மொண்சொற்றமி ழூடே
பொற்றுமரை நாணுத்திரு போலும்வத னப்பூம்
பிற்றுழ்குழ லாயக்கவி பேராமத னுர்த்தை

— ,, 7-20

புளிமாங்கனி புளிமாங்கனி புளிமாங்கனி யருகே
புளிமாவரு மமிழ்தாலியை பொலனங்கொடி யிடையே
நளினச்சினே மலர்வித்தன நளினத்துறை திருவே
களியைத்தரு கவியேயதி கரிணீயென மொழிவர்

— ,, 7-21

மூன்றே டொருநான்கே மும்மூன் றொருபத்தே
தோன்று விசுருங்கத் தோன்றுங் கவிநாமம்
வான்றேய் மொழிவல்லார் வைத்தார் மணிமாலை
மீன்றேய் விழிவேலால் வெல்லப் பொருதையால்

— ,, 7-22

அஞ்சுயிர்க் கூவிளச் சீரினு லாகுமா
லெஞ்சலில் கேள்வியார் சிர்க்விணீ யென்றனர்

நஞ்சமோ வேல்கொலோ நாமபா ணங்கொலோ
அஞ்சுமீ தென்கொலென் றையுறுங் கண்ணியே
— வி.பா 7-23

ஒன்று மூன்றினுட னெழுபதி னென்றுபதினைந்
தென்ற வாவிநெடி லாய்ப்பிறவெ ழுத்திலகுவாய்த்
துன்று மாறறிக தூமொழியி லங்குவதனப்
பொன்றுமா ருயிரெனப் பொலியும்வே னயனமே
— ,, 7-24

முன்னது கூவிளமாய் மூன்றது மவ்வியலாய்
பின்னது காயிறுதிப் பெற்றிடு கூவிளமாய்
யன்னது நான்கினையு மாடரு மென்றுணரே
நன்னுத லந்துவர்வாய் நாரியர் நாயகமே
— ,, 7-25

*சந்தக் கலித்துறை*

மூவெ ழுத்து மைந்தெ ழுத்து முற்றுவ
மேவு மென்ப சேணி நாம மேலையோர்
பாவி யல்ப சுந்த மிழ்க்கி லாதவே
தேவ பாடை தன்னு ளாய்ந்துதேர்கவே
— ,, 8-1

நன்மாத் திரைவெண் டளைமாக் கணடக் குறுமே
ளுன்மாத் திரைமா நளினீ யெனநா டுவரால்
வான்மாத் திரையா யவளம் பெறுபா டைகளாய்
தான்மாத் திரமா யதனித் தகைபா டையினே
— ,, 8-2

குற்றக் கரநான் களவை யொருசீர் குழுவிப்பின்
முற்றக் கடையோர் நெடிலெய் திடும்வெண் டளைமுறறும்
பற்றக் குறியாய் பனைமா முலைவெம் பணவல்குற்
கற்றைக் குழலார் கருநீள் நயனக் கனிவாயே
— ,, 8-3

முன்னே தேமா பின்னது தேமா மொழிமுன்றில்
துன்னுஞ் சீரே கூவிள நான்கிற் றுறுதேமா
பொன்னே யைந்திற் புல்லிய சீரே புளிமாங்காய்
சொன்னர் பேரே மத்தம யூரத் தொடர்பென்றே
— ,, 8-4

குற்றுயி ராவிறு கூவிள மைந்தொடு கூடியநேர்
பெற்றும ஸ்வக திப்பெய ரென்றனர் பேரியலோர்
சிற்றிடை முற்றிழை மைந்நய னக்கனி சேயிதழம்
பெற்றித லைப்பொலி பூண்முலை யேந்துபொ லங்கொடியே
,, 8-5

நீளாத வுயிரீற்றி ஞேரைந்து மாங்காய்பி னீடக்கரத்
தாளாளு தித்திட்ட மாங்காய்க்க லிக்காய சந்தத்துறை
யாளாத கவியல்ல வழகார்ப சுங்கிள்ளை யனமேயெனும்
வாளாய மைக்கண்ண டங்காமு லைக்குன்று மடமங்கையே
— வி. பா 8-6

நாலொரு மாத்திரை யளவிற் றோன்றிய நாலிருசீர்
பாலற விணையாப் பாடினர் பலதீந் தமிழோரென்
றூலது கலவைச் சந்தத் துறையென் றறைகிற்பாய்
பாலது புரையும் பாய்மன மிளகும் பனிமொழியே
— ,, 8-7

முதலு மூன்றது மாவி னத்தொரு மூன்றெழுத்
துதவு சீர திரண்டு நான்கொரு நான்கெழுத்
துதவு கூவிள மைந்தி லோங்கிய கூவிளம்
மதிநு தற்கலை யல்குல் மாந்தளிர் மேனியே
— ,, 8-8

முக்குறிலி னிற்றளவு பத்தரைய
தாகிவரு மூன்றினிடனீ
டக்கரமு மற்றொரிரு காயுமுடை
தாளிணையு மாய்ந்தறிகவே
மிக்கவரு ரைத்தகவி யாகுமென
வன்னநடை மின்னினிடையே
செக்கரர விந்தவத னக்கரிய
கூந்தலொளி செய்யதிருவே
— ,, 8-9

நீடுயிர் கூவிளக் கருவிளச் சீரிணு னோர்ந்தவற்றைப்
பாடுறும் பாவெனப் போற்றினர் பஃறுறைப் பாவெனுந்தண்
ணீடலைக் கடலையா ரறிவெனுங் கிரியிணு னிலைமருந்தைத்
தேடிணு ரண்டரும் பருகவே தென்மொழிப் புலவரம்மா
— ,, 8-10

ஐந்துயிர்க் காயொடு மைந்துயிர் விளத்தோடு மைந்திடத்தே
யைந்திஞே டிரண்டுபெறு காய்கனிச் சீரொடு மாகுமன்றே
— ,, 8-11

நேரொன்று காயு நிரையொன்று நேரு முதலீ
றீரொன்றே டொன்றி னிறையொன்று காய தியலு
நேரொன்று நேரி னிகழ்வாமி குந்த விடமே
வாரொன்று கொங்கை மதிபோன்றி லங்கு நுதலே
— ,, 8-12

சான்றிலக்கியங்களாகிய மூன்று நூல்களிலும் இக்கலிப்பா. வகை, இனங்கட்குரிய பாடல்கள் தரப்படுகின்றன.

பொலந்தளிர் மிளிர்தரப் பொறையுயிர்த் துலவா
நலந்தழைகோங் கரும்பரும்பி நறைததும்பு நறுநெய்தன்
மலர்ந்துளபொற் புடைக்கமல மலர்ந்தெதிர்ந்தோர்
மம்மர்நோய்
புலந்தனவாஞ் செழுங்காந்தள் பொருவில்கொழுங்
குமிழினெடு
மலர்ந்தளிதாய் மணமல்கி யமைந்தபொனங் கொடிமன்னோ
நான்முகத்தோன் றனக்கமைத்த நவையறுபொற் பினவாகும்
வான்முகத்தும் வளர்பொழிற்கண் வளர்வதுதா
னுளதென்றோர்
நூன்முகத்தும் வியப்புறவே நுவல்வதுமொன் றிலதாயும்;
வெண்டிரைப்பாற் கடல்பயந்த விழுமியதெள் ளமுதருந்து
மண்டர்தம னியப்புவனத் தமைந்துளவைந் தருவ கத்துங்
கண்டனனென் றொருபனுவல் கழறியதொன் றிலதாயும்;
தத்துதிரைக் கடல்வளைத்த தரணியினள் ளிடையாக
வைத்தவிரு சுடர்வலஞ்செய் வடவரையின் மருங்காய
வுத்தரதிக் கினும்பனுவ லுரைத்துளதொன் றிலதாயும்;
எங்கோன்
அருட்புயன் மாற னருவியந் துடரிப்
பொருப்பினுட் கண்டவற் புதத்தான்
மருட்கையின் வயத்ததாய் மகிழுமென் மனனே
— பா. பா 91

சீலாலங் குளிறுதிரை கெழுகடன்முற் றகன்ஞாலத்
தாலால மிசைபவள வருவரையுங் கருவரையுந்
தமவெனவாங் கமைந்ததொழிற் றன்மையுட னொருதலையா
யெமதெமதென் றெதிருனரின் னுயிர்செகுத்தீத் திருநோக்கிற்
கடைசிவந்து வரிபரந்து கவின்பெறுவார் குழைபோழ்ந்த
வடிபுரைமாண் மதர்மழைக்கண் மதிபுரைவா னறுநுதாஅல்;
இடந்தழுவுங் குனிசிலைக்கை யிகன்மறவர் தொடுகணையோ
டுடன்றெழிலொண் சுடர்வடிவேற் குணவாத லொருதலையாற்
றொடர்ந்தெழுநின் றமரேற்சென் பகமாறன் றுணையடிசேர்
திடந்தழுவுந ததியரெனத் தெறலருநன் கருளுவனே;
வாட்டானைத் துறுமறவர் வயிரவழற் பிழம்பெறிகட்
கோட்டானை யுடன்வரிலென் சூரிலைவே லவர்மார்பிற்
றீட்டாறை வினையளிப்ப னுமரேற்றிவ் வியதுளபத்
தோட்டானைத் தொழுமாறன் றொண்டரினன் கருளுவனே;
குளிர்மதிவா னகடுரிஞ்சுங் கொடித்தேரின் குழுவினெடு
மொளிதிகழ்வன் படைமறவ ருடன்றெழில்வைந் நுதிவேலாற்

களிபயில்வெந் தொழிபுரிவ னுமரேல்வண் கருணேச
னளிபயினன் மகிழ்மாற னடியரினன் கருளுவனே
எனவாங்கு
காணுதி காணுதி கனலிதெற் கெழினுந்
தாணுவி னிலேதவ றினுந்தவ ருவுரை
குன்றுசூழ் சூர்ம்பரற் கொடுநெறி
யொன்றுநீ யழுங்களு ருறலே குதியே

— பா.பா 92

அண்டரண்ட பகிரண்ட முழுவதுமீன் றகத்தடக்கிக்
கொண்டபெரும் பாழினுக்கு ஞாங்கரதாய்க் குளிறுதிரை
மண்டுபெரும் புனல்விரசைக் கப்புறத்தாய் மதிநலந்தோய்
தொண்டரினம் பேரின்பத் துறைபயிலந் தாமத்து
ளருணவிளங் கதிருதய மலகிறந்தொன் றியதொன்றுத்
திருமணிமண் டபத்தினுளிந் திரையுடன்வீற் றிருந்துளாய்;
இலகியவான் சுடர்விளக்கி னெழுதருபல் பந்தமெனு
வுலகொருநான் கினுமதன்க ணொருநால்வ ரெனும் படித்தாய்
நிலவலயத் தடைவடைவே நிரைத்துளதீ விருமூன்றுஞ்
சுலவியபாற் கடலரவிற் றுயிலுவந்த வொருமுதலாய்;
மீனுவ தாரமுதன் மேதினிமேல் வருகற்கி
தானுகி யுனக்குமொரு தந்தையா யுளவெனலா
யூனர்பைக் குரம்பியினே டுகந்தோறு முகந்தோறு
மானுதிங் கமைபருவத் தங்குமமை பவனுகி;
ஏழ்வகைத்தாய் நால்வகைத்தோற் றத்திசைந்து

மிழைத்துளதம்

மூழ்வகைத்தா யலம்போது முயிர்கடொறும் பிரியாது
வாழ்வகைத்தாய்ப் புனல்சொரிந்து மலர்தூவி வழிபடுதற்
காழ்கடற்பா ரடியவர்பா லங்கங்கங் கமர்ந்துளாய்;
பேதமையா ரிறந்துபிறந் துழல்வனெனப் பேதுரு
மூதறிவா ரழியாத முதல்வனெனத் தெளிந்துள்ளாய்;
சாபத்தா லிழுக்கமுறு தலைமையாய் சாபமடைந்
தாபத்தா யினர்சரணென் றடைதருமாங் கருள்புரிவாய்;
வேதனுமுற் றுணர்வலெனி லறிவரிய மேன்மையாய்;
ஆதரவுற் றிடுமெளியர்க் கறிவெளிய பான்மையாய்;
நினைபவர்தா நினைவுறுமவ் வுருவமதாய் வெளிநிற்பாய்;
அனைவருங்கண் டால்வியப்புற் றுசிபசுர்ந் தெழுபொற்பாய்;
திகிரியை யுயர்வலந் தரித்துளாய்;
திகழ்வரி வளையிடம் பரித்துளாய்;
புகர்முக மதமலை சொலச்செல்வாய்;
பொருமுத லையினுயிர் செலக்கொல்வாய்;
இரணியன் மார்பது பிளந்துளாய்;

இருநிலே மூவடி யளந்துளாய்;
அரணிய லார்கலி யடைத்துளாய்;
அதனிடை யேழ்மதிள் புடைத்துளாய்;
தேனிமிர் துளபத்தாய்;
செனனம துளபத்தாய்;
ஈனர திடமெய்தாய்;
எழுமெழு மரமெய்தாய்;
அலகையி னுயிர்கொன்ருய்;
அறனல தருகொன்ருய்;
உலகம துறுதுப்பாய்;
உரலிடை யடர்துப்பாய்;
மறைமொழி யினுமெட்டாய்;
வரைபொரு ளுரையெட்டாய்;
உறைதயி ரதுகட்டாய்;
உரைபுகழ் பலகட்டாய்;
அகன்மலே கவிகையுளாய்;
அழல்பெரு கவிகையுளாய்;
சகடம துதைமைந்தாய்;
தகவின ருளமைந்தாய்;
எனவாங்கு,
பரத்துவ முதலாப் பரந்துள வைந்தாய்
வரத்துடன் மூவுரு வாகிய வரத
திருக்குரு கூரநின் றிருவடி வழுத்துது
மெங்கோன் றிருமகிழ் மார்பின னியற்றமி
ழூழிதோ றாழியெவ் வுலகினும்
வாழிய தாக வளர்கநீ யெனவே

— பா: பா 93

பூமாது நிழன்மணிப்பூண் பொதியவிழ்பொன் னிதழ்புனிதத்
தேமாலே நறுங்களபஞ் செறிமார்பத் திடைமுயங்க
வளப்பரிதாம் பகிரண்டத் தப்புறமு மகத்தடக்கி
யுலப்பிலிளங் கதிருதயத் தொளிகிளர்பே ருருவாயு
நன்னரங்கத் தணுக்கடொறு நயந்தணுவா கியுமெழில்கூர்
தென்னரங்கத் தரவணைமேற் றெளிந்திருகண் வளர்ந்துளாய்;
ஒருசுடராஞ் சொருபமுட னுருபமமைந் தொருசுடரோ
டிருசுடராய் குணமொருமூன் றெனலாகி முறைமுறையே
படைப்பதையு மழிப்பதையும் புறம்போக்கிப் பழிபிறங்கா
திடைப்படுகா வலேநினதென் றெடுத்ததெவ னருளுதியே;
நின்றனவா யியங்கினவாய் நீடியபல் லுருவளித்தோன்
பொன்றியநா ளெழுந்தபெரும் புனற்படிந்த வுயிர்களேநீ

யெம்மானே திருவுதரத் திருத்தியகா வற்கவற்ருர்
கைம்மாறங் கெவனேமுன் கைக்கொண்ட தருளுதியே;
புறம்பயின்ற வினைவழிசார் போக்குவர வினும்பிரியா
தறம்பயின்ற தனுவுளதே லதற்கவற்றை யெடுத்தனையா
யுண்ணீர்மை யற்றனமாய்ந் துறுநரகிற் புகுவதுநீஇக்
கண்ணீர்கொண் டகன்றகலாக் காவலெவ னருளுதியே;
தரணியு ளெவரொடு முரணிய பெருவிற
லிரணியன் வரனெனு மரணற விகலினை;
ஒருபது சிரமுட னிருபது கரமுள
நிருதன துயர்மிசை பொருகணை சிதறினை;
மறையவ ரிறையவ ருறைவயின் வடுவுரை
பறைபவ னுயிர்புகு மறைகழ லிணையினை;
முதலையி னிடருறு மதமலை மடுவினு
ளுதவுக வெனுமுரை யதனொடு முதவினை;
வஞ்சனையோர் வடிவெடுத்து மாதுலனு மறைபயின்ற
கஞ்சனைக்கொன் றுரகேசன் கடும்பொறையைத்
தவிர்த்தனையே;
குருகுலத்தார் நூற்றுவரைக் கூற்றுவனுட் டினிலிருத்தித்
தருமன்முத லவர்க்கவனி தனியாளக் கொடுத்தனையே;
கழிபெருங்கற் பினளாடை கழியாம னயந்தனையே;
வழிபடுந்தூ தனுமாகி மடக்கோலை சுமந்தனையே;
ததிபாண்டன் றனக்கழியாத் தமனியநா டளித்தனையே;
விதிகாண்டற் குலப்பில்பல வேடமவை கொண்டனையே;
தாடகை யுடலுயிர் போக்கினை;
தாபதன் மனதிடர் நீக்கினை;
நீடக லிகைபழி தீர்த்தனை;
நேசமுள் ளவனொடு சேர்த்தனை;
வில்லினை மிதிலையில் வளைத்தனை;
மெல்லிய விளமுலை திளைத்தனை;
வல்லர வடல்கெட நடித்தனை;
மருதினை முதலொடு முடித்தனை;
உறித்தயிர்கட் டுண்டனையே;
உரலிடைகட் டுண்டனையே;
மறித்துநிரை காத்தனையே;
வழங்கினையைங் கரத்தினையே;
குடநடமுன் பாடினையே;
குழலினிற்பண் பாடினையே;
படர்சகடம் பொடித்தனையே:
பகட்டுமருப் பொடித்தனையே;
நூவலன்பின் னடந்தனையே;

நடித்தனைமன் னடந்தனையே;
கோவலரில் லிறுத்தனையே;
கோள்விடையே ழிறுத்தனையே;
புள்ளினைவா யிடந்தனையே;
புரந்தனைபா ரிடந்தனையே;
தெள்ளமுதங் கடைந்தனையே;
தேவருளங் கடைந்தனையே;
எனவாங்கு,
இனையதன் மையவா மெண்ணருங் குணத்தி
னினைவருங் காவ னிகழ்த்தினை யதனு
னின்னது கருணையு நீயு
மன்னிய திருவுடன் வாழிவா ழியவே

— பா.பா 94

ஆளாய் மதுரகவி யாதரித்த பூங்கமலத்
தாளான் மகிழ்மாறன் றந்த தமிழ்மறைப்பாக்
கேளா தவரே யிருசெவியுங் கெட்டாரே;
மாதா முலைப்பா லருந்தா வரோதயனுந்
தாதார் மகிழ்மாறன் றந்த தமிழ்மறைப்பா
வோதா தவரே யுரையறியா வூமார்களே;
புள்ளிப் பொறிவண் டிமிர்பூம் பொழிற்குருகூர்
வள்ளன் மகிழ்மாறன் வடித்த தமிழ்மறைப்பா
வுள்ளத் துணரா தவரே யுணர்விலரே;
புலவீர்,
பழுதற மாறன் பகர்தமிழ் கையா
லெழுதிய வேட்டி னினமலர் சூட்டித்
தொழுததன் வாசந் துற்றியவ் வேட்டைச்
செறிப்பதே சென்னி மற்றைய
பொறித்தலை யென்னப் புனைபொய்த் தலையே

— ,, 95

புண்டரிக மடலவிழ்பொற் பொருட்டினில்வாழ் திருமகளுந்
தெண்டிரைசூழ் புவிமகளுந் திருத்தகவாழ்ந் தெழில்பெருகும்
வண்டிமிர்பூம் புனற்பொன்னி மதிளரங்கன் றிருவடியுட்
கொண்டவர்க ளினிப்பிறவிக் கருக்குழியுட் குறுகாரே

— ,, 96

மாந்தளிர் போன்மேனி மையுண் கருங்கயற்கட்
பாந்தளின் மேதக்க பைபோன் றகலல்குல்
வாய்ந்தவனை மென்றேண் மடவர னல்லா
யழுங்கனுஞ் சீறா ரகன்மலைக் கெம்மூர்ச்
செழும்பசும் பொன்கோடு செய்துயர் குன்றந்
திணிதாய்ப் புடைத்தெழுநின் றெண்ணித் திலக்கா

மணிபூண் முலைபோன் றணித்து
தேமகிழ் மாலிகைச் செம்மலின் சென்னியும்
பூமகள் காதலன் பொற்முட் கமலமும்
போன்றணித் தன்றியும் பொய்தீர் வசிட்டனும்
வான்றனில் வைகும் வடமீ னெனலாந்
திருந்திய கற்புடைச் சேயிழை யென்னு
மருந்ததி யும்போன் றணித்து

— பா.பா 97

கற்பனைமேற் கொண்டொழுகுங் கடைப்பிடியார் வயிற்றிருநாண்
பொற்புறுமாற் றலிற்பொறித்த பொருவருசெவ் வணிநோக்கித்
தற்பொதிவாட் டுறந்தகெழு தகைத்தாய புனலூர
னிற்புகலால் வெஞ்சினநஞ் செனக்கூர்த்த மருணோக்க
முற்பலந்தெள் ளமிர்துயிர்த்தற் றெருளிகிளர்சீர் பயின்றனவே
அஃதன்றுல்,
அநகனிங் கெமையாண் டருண்மகிழ் மாறன்
புனல்வறங் கூராப் பொருநையுட் புத்தேட்
டினகரோ தயத்திற் செவ்விபெற் றலர்ந்த
தண்மலர் மரைபுரை தகைத்தா
மொண்ணுத லரிவை யொளிர்திரு முகமே

— ,, 98

இமிழ்திரையார் கலியமுவத் திரும்புனன்மீ மிசைபொடிக்குங்
குமிழ்புரைபுன் னிலைப்புலவுக் குரம்பையின்வீ வினையோர்ந்துங்
கடிகைதாங் கழிதொறாஉங் கழிபெருங்கா மருசெவ்வி
யொடிகையா யுயங்கிழைமூப் புடனுறனூன் முகத்துணர்ந்து
மமிழ்தினும்வான் சுவைபயப்ப வருண்மாறன் மயர்வறக்கூர்
தமிழ்மறையின் றுறைமூழ்கித் தத்துவந்தான் றலைப்பெற்றே
யொருதலைபற் றினர்க்கிகல்செய் குனருணர்வி னிலைநீத்த
பொருள்வேட்ட கெழுதகைமைப் புரவலநின் போக்குறீஇ
மருள்வேட்டா டிறத்தியான் வடிப்பனபற் பலவம்ம;
தாளாண்மை யகத்துறீஇத் தகவிலர்க்குந் தக்கார்க்கும்
வேளாண்மை செய்ததற்பின் வெள்வளைதா மிறைதுறப்பத்
தொய்யிரு னணைமென்றோட் டுணைதுறப்பப் புதுமதிபோன்
மையில்வாண் முகமாழ்கி மணிமாமை யதுதுறப்பக்
கறைகெழுவே லெனமிளிர்ந்து கள்ளுயிர்க்குங் கழுநீரி
லுறைமலிநோ யுழந்திருகண் ணெருங்குதுயில் வினைதுறப்ப
நன்னுதலார்க் கணியாய நலம்புரிநா ணுளந்துறப்ப
வின்னுயிர்தன் னிலைதுறக்கு மிவைமன்ற வின்னுங்கேள்;
அஃதன்றுல்,

புகழும் வாய்மையும் பொச்சாப் பின்மையு
நிகழுந் தோற்றமு நின்னிலை துறப்பக்
கற்கடங் கடந்து சேறற்
குற்றதொன் ருலுறு வனவுலப் பிலவே

— பா.பா 99

தாதிவர் தண்டுழாய் தளையவிழ் வகுளமதாய்
மேதகு புயநான்கும் விழுமியதோ ரிரண்டாகி
மாதவனென் றருமறையும் வாழ்த்துந் திருநாமம்
பூதலத்தோர் மாறனெனப் புகழ்க்குருகூ ரமர்ந்துளாய்;
ஈசனென்று நீயென்று மெண்ணுதற்கோர் பாவினையா
னீசனிறை யென்றுமிலே னென்றென்று நீநிகழ்த்து
மோசமதிங் கென்னென் றறியேன் மொழிந்தருளே;
மத்துறுவெண் ணெய்க்காக மாதவனீ கட்டுண்ட
தெத்திறமென் ருறுதிங்க ளெம்பிரான் சோகமுறு
மத்திறமு மேதென் றறியே னருளுதியே;
தன்னைத்தான் பாடியவண் சடகோப'ணுகியநீ
யென்னைப்பா டென்னைப்பா டென்றிறைவர் நிற்பவவண்
பின்னைத்தான் நீயிருந்து பாடியதென் பேசுகவே;
அஃதான்று,
நற்ருய் முலைப்பா னயவா விரதங்
கற்ரு யதனுற் கடவுளன் றுயிரென
நின்னிலை நினைவரி தெமக்கா
லுன்னிலை நீயே யுணர்வது கடனே

— ,, 100

அரவணைமேற் றிரைத்திருப்பாற் கடற்குடபா லறிதுயில்கூர்
பரனிலவுந் திருவுந்திப் பனிமலர்ப்பொற் பொகுட்டுயிர்த்த
வலகிலவாம் பகிரண்ட மவையனைத்து மகத்தடக்கி
யிலகுமொரு தனிப்பெரும்பா ழினையுமகத் தடக்கியவாம்
விரசையெனுந் திருநதிக்கப் புறத்தாய விழுமியவென்
றுரைபரசும் பரந்தாமத் துடனுறைவோ ரிருந்தெய்துஞ்
சுகமிவணின் றணைமென்ருேட் டுயின்முகத்தெய் தினனுக
வகனமர்ந்தும் மையிற்ருெடர்ந்த வமைதியவா யுயிரெனலாந்
தொடர்புடைய தமர்பிரியத் தொழிலியற்றி யதுவென்ருே
மடலவிழ்வண் பொழிசிறையு மறைதெருளா வகையமைத்துந்
திருவுருவம் பருவநலன் சிறந்தகுல னெடுமொன்றென்
ருெருதலையா கவுமமைத்த தொருங்கிவையென்
றுணைநெஞ்சான்

முயற்சியதொன் றிலனுகு முறைமையிற்கந் திருவமண
மியற்றியதா யியற்றமிழ்தேர் மகிழ்மாற னெழில்வரையிம்

மடவர லிணைமகிழ்ந் தளித்த
கடவுளை நினைதொறுங் களிக்குமென் மனன்றானே

— பா.பா 101

புத்தேளிர் நிரப்பிகப்பான் பொருதிரைப்பாற் கடல்கடைந்து
மெய்த்தேவர் பெருமானும் வேங்கடத்தெங் கண்ணபிரான்
புரந்தருணன் மருந்திறுத்த புலந்துவரத் துறந்திழைத்த
வரந்தருபெண் ணமிர்தாமிம் மடவரன்மென் றேடுறந்தே
யில்லறத்தின் றொடர்புடையோர்க் கின்பமுமா துலர்க்கருத்து
நல்லறத்தின் றொடர்ப்பாடு நனிதருசெம் பொருளென்றே;
ஆய்ந்ததனால்,
ஒருதலைபெற் றனனாகி யுருப்பவிர்வெங் கடத்திடைபோய்
வருபொழுதிற் பெருவறங்கூர் மணிநாவின் மம்மர்நோ
யருண்மடந்தை யிலவிதழ்த்தெள்ளமிர்தருந்தத் துறந்தனவே ;
அஃதான்று,
வேனுதிவன் பரற்கடத்தா ரிடைவேனில் வெயிற்குமையாள்
கோனுதற் கட்டழற்குளித்த மதனெனமெய் கூர்ந்தநோய்
பானலங்கட் கிளிமொழிமெய்ப் பரிசத்தாற் றுறந்தனவே;
அஃதான்று,
உருவிலா வுருவிற்று முருளிலா மசரதத்தைப்
பருகுவான் புனலெனச்செல் பாலைசார்ந் துளங்கொதி நோய்
திருமகளோ டுறுமின்பத் திரையாடத் துறந்தனவே;
அஃதான்று,
வரையிரு மருங்கினு மரீஇய வெவ்விடம்
புரைசுரத் தாரதர் புக்குயிர்க் குறுநோ
யம்மென் சாய லணிமயில் பைம்பூட்
கொம்மை வெம்முலைக் குன்றிடை முயங்கலி
னனவு கனவா நயந்துழி
நினைக லாநீ ளிடைநீத் தனவே

— ,, 102

மாதர்வான் முகத்திருடீர் மதிப்பிளவொத் திமிழிசைய
வோதநீர்ப் படுவிடந்துற் றுரவிடையார்க் கிடரிழைத்த
மேதையா னிடந்தழீஇ மேம்படுவிற் றுணைசெகுத்த
திலகவா னுதற்செவ்வாய்த் திருமகள்கா முறும்பெருமா
னலகிலாக் கணங்களினுழ்ந் தருமறைவன் டமிழ்கூர்ந்த
தெண்டிரைத்தண் டுறைப்பொருநைத் திருநாடன் றிமிரவரி
வண்டிரைக்கு மகிழ்மாலை மணிமார்பன் றுடரிவாய்;
குறுந்து ளைப்பற் பணியுமிழ்ந்த குருமணிநள் ளிருடுரீஇ
யுறும் பகல்போன் றழலினுமா ஞெளிவிடுநீ ணிலையவால்;
புறக்காழ்வன் பனையுகுத்த புதுமணிமா தவன்புகழ்போ

ணிறக்கார்வெண் மதியினுநீ டிருடுரத்து நிலையவால்
கொண்டலினூரங் கிடியெனவே கோதையிற்பே துறக்குளிறுந்
தொண்டகத்தி னொலியடங்காத் துயிரியற்று நிலையவால்;
ஆளியெனப் பொறிவரிய வடுபுலியிற் றெறுந்திறங்கூர்
ஞாளியின்வாய்க் குரைப்புரைக்கு நடுக்குதவு நிலையவால்;
நற்றூயர் முகத்துபய நமன்பொருவு முருவிற்றூய்
வெற்றூலத் தினுங்கொடிதாம் விழிதுஞ்சா நிலையவால்;
ஊர்துஞ்சா துஞ்சினுமோ வொருசிறைவாழ்ந் திருந்தவய
லார்துஞ்சார் நீளிடைவாழ் பவர்துஞ்சி யெவன்மன்னே;
எனவாங்கு,
கங்கு லின்னணங் கழியா நின்றது
திங்களஞ் சுடரினிச் சேணிற லுளதா
லின்னுயிர்க் கேள்வ ரெய்தாரென்
பொன்னிறப் பைம்பூட் புணர்முலைக் குவட்டே

— பா.பா 103

மணிமல்கு திரைத்திருப்பாற் கடனடுவண் வரியரவி
னணிமல்கு மமளியின்மே லறிதுயில்கொள் வுழிமதமா
வழுங்கஞர்கூர்ந் தழைத்தகுரற் கலர்மடந்தை முகுளமுலைக்
கொழுங்களபத் தினிலழுந்திக் குழைதிருமார்

பையுநெகிழ்த்துப்

பூங்கழல்வன் னிலத்துறைப்பப் பொலந்துகில்சுற் றவிழவிரு
டூங்குநறுந் துணர்க்குஞ்சி சுவற்புரளற் துணைத்தோளாற்
றூங்குகலு ழனைக்கொடுத்தாய்த் தாயிடங்கர் முரண்முருக்கித்
தேங்கமலத் தடம்புடைசூழ் தென்னரங்கத் தமர்ந்துளாய்;
ஆங்கும்,
ஆன்ற கதிர்போன் றணுக்கடொறும் வீற்றிருத்தல்
சான்றவர்மெய்ஞ் ஞானந் தரிப்ப வுலகனைத்து
மீன்றருணின் மாயை யினைத்தெருளா தேயிறப்பை
தோன்றுவைநீ யென்பதெவன் சொல்;
கற்பனசால் கோதமனூர் கற்படிவங் கைக்கொண்டாள்
சற்படிவ மாகியதைத் தாட்டா மரைதருதாள்
பொற்படிவஞ் செய்ததுரூர் போஎம்;
முருந்தி னகையாண் முறுவலிப்பப் பூந்தா
ளிருந்தை யதனை யிளவரச தாக்கிப்
பொருந்த வளித்துரூர் போஎம்;
அஃதான்று,
அணங்கொருத்தி தன்னை யளித்தியென வென்னூற்
றணந்தவணிற் கென்னத் தணந்தவனை நோக்கப்
புணர்ந்தவரே யல்லாதப் புண்ணியன்கா ணூத

துணர்ந்திலரோ மூடமுணர்ந் தோர்;
காத்ததலா லுந்திக் கமலமல ரண்டமெலாம்
பூத்த திறமறியார் போன்ம்;
துறவற முதலிய துரிசற வருளினன்
அறமலி புதல்வனே யருளிய தறிகிலர்;
திவமுறு சிறுவர்க ளிருவரோ டிருவரை
யவன்வயி னடைவினி லருளிய தறிகிலர்;
தாதை யாதலும்
புதல்வ னாதலும்
பேதை யாதலும்
அறிவ னாதலும்
பெரிய னாதலும்
சிறிய னாதலும்
கரிய னாதலும்
செய்ய னாதலும்
உணர்கிலர்,
கன்றொடு சிறுவர் கடைகயி றணிகுணில்
கொன்றையந் தீங்குழல் கொடுமல ரயனெழு
மவ்வுழி யவையவை யவரவர் தெருளுற
வெவ்வுரு வமுமா நினதுரு வழியா
திருப்பவும் வியாத்தியெய் தியதுணர்ந் திலரா
வற்புதன் மாயை யழிவிலாக் கருணைய
சிற்குண நினைத்தெருட் டினரே
யெற்கிறை யெனமனன் மதித்ததிப் போதே

— பா.பா 104

பொன்னெடுங்குன் றெனச்செறிந்து புடைத்தெழுமென் புளகமுலை
மின்னெனலா நுணுகிடையவ் வேய்புரையுந் துணைமென்றோட்
குளிர்மதிபோன் றொளிவதனக் கோமளப்பூங் கொம்பன்னா
டளிர்புரைமெல் லடிச்சுவடுந் தளர்ந்தனவெய் யோனென்றூற்
குடதிசைவான் கதிர்சுருக்கிக் கொடித்தேரி னொடுமறைந்தா
னடல்புனைவே டுவரென்று லற்றம்பார்த் தாறலைப்பார்
பொன்புனைபூண் மணிமார்பிற் புரவலவின் றிருவீடு
நன்குலத்தெம் மில்வைகி நறுந்தேன்செந் தினையருந்தி
மரையதளிற் றுயிலமர்ந்து வைகறைவாய்த் துயிலெழுந்து
விரைகமழ்தார் மகிழ்மாறன் மெய்த்தமிழ்ச்சொற் குருகூரின்
முதிர்த்திரைப்பா லாழியின்வான் முகடுரிஞ்சு முதயகிரிக்
கதிர்வருமுன் சேர்தல் கடன்

— உஉ 105

படுதிரைப்பா லாழி பயந்தவெண் டிங்க
ணடுவண தாகிய நாண்மலர் நீல
மிணையென வாண்முகத் தெய்துந் துணைவிழி
நன்னீ ரருவி நறுந்தே னருவியுடன்
மன்னீர்மை வாய்ந்தனவா மாழை வரைபுரையும்
வெண்ணித் திலத்தாம மேதகுமா மணிவடத்திற்
பண்ணமைத் தோங்கிய பைம்பூட் புணர்முலை
கூற்றுரு நேர்ந்தோர் குறிப்போ டுயிருண
மாற்றுருக் கூர்தன் மருள்வண ரைம்பா
லெம்போன் றடிப்பணி யீறின் றியற்று
துமதா ருயிர்கொண் டொருவுமின் சேய்த்தென்
றருடக வாண்டாண் டணித்துறு மைந்தர்க்
குருபமை நூபுர மோவா தொலிக்குந்
தளிர்புரை மெல்லடித் தையல் பொருட்டா
லிளம்பிறை வெண்கோட் டிரும்பிணர் வான்கை
வளங்கெழு தீவிழி வாரண வேட்டைக்குச்
சிங்கங் குழூஉச்செய் சீறா ரதரிடை
யிங்கியாந் துன்புற வீண்டிருள் யாமம்
பனிமகிழ் மாறன் பராங்குசன் வெற்பிற்
றனிவரல் வேலோய் தவிர்

— பா.பா 106

குருகையின் மகிழ்மாறன் குலகிரி தனில்வைகுந்
திருமுக மதிபோலுஞ் சிறுபிறை நுதன்மன்னோ
விருகயன் மதர்நோக்க மிலவின திதழ்செவ்வாய்
பருமணி நிரையென்னப் பழுதற மிளிர்முரல்
வருமிள முலைமாதே மதகளி றெனலாகு
மொருபிடி யிடையாகு மொருபிடி நடைசாலு
முருவளர் பணைமென்றோ ளுயர்வுறு மரவல்குல்
கருமுகில் குழன்மொழி கரும்பு

— ,, 107

மலர்புரை யாணர் மையுண்கண் மொய்யிழாய்
உலகிய லறிந்தோ ருசாத்துணை யுள்ளத் தருமறை
தமவெனுங் கருவிக ளடங்காச் சாக்கிரத்
தமர்தரு மகத்தவை யடங்கிய வேனைய
சொற்பன சுழுத்தியிற் பராவலுந் துன்னுனர்க்
குற்பவ மாமுளத் தெனலுண் மையதாம்;
நினதூரன்,
தளையவீழ் பல்பூத் ததைமெல் லணைமேல்
விளைவுறு வேட்கையின் விம்மித னாகி
வலைமலி முன்கையை வாழ்த்துபு பற்றி

யிளையரில் யாமத் தினில்;
பூங்குழ லோர்கையிற் றூங்கினன் றூங்கலு
மீண்டிய மென்மை யினிமையிரா கங்கமழ்தல்
கூண்டு மழலை மிழற்றுங் குளிர்பவளம்
யாண்டெய் தினைநீ யெனும்;
வேரிக் களப மெழுகித் தரளவடம்
பாரித்த கொம்மை முலைஞெமுங்கப் பன்முறையும்
பூரித் தழுந்தப் புணர்மார் பினைநோக்கி
யார்நிற் கிணையிங் கெனும்;
வாய்ந்தமருந் தீன்ற மலர்மடந்தை நன்படிவ
மீந்தவர்தாம் யாரிங் கெனும்;
கழுவா மணிக்குக் கவினுமுறுப் பொல்லாம்
வழுவா தமைத்து மலர்தூவிக் கண்டார்
தொழுதா தரிக்கத் துளக்கமதுய்த் தாரீ
ரெழுபா ரினும்யா ரெனும்;
இயற்கை யுறுப்பி னெழிலணிகள் வேய்ந்தார்
முயற்சி மறைத்தருளு மூடமிஃ தென்னென்
றுயர்த்தி யுறுகட் டுரையினுள மொன்றப்
பெயர்த்துந் தழுவிய பின்;
அணியிழாய்,
இக்காலத் தாராக் கவிஃதென் னென்றுணர்வே
னக்காலத் தொன்றி யயர்வுற் றனன்மன்னோ;
தோய்ந்ததுயில் விட்டுத் துணுக்குற் றுணர்வுறலு
மாய்ந்ததட மென்றோ ளணைமேற் றுயில் கொள்வா
ளுய்ந்ததட மென்றோ ளணைசேர் துயின்முகத்தாங்
கேந்திழைக்கென் னீக்கமிஃ தென்னுமென் னுமென்னும்;
ஆற்றுவா ராற்றற் கமைதருமந் நோயதனைப்
போற்றுவார் மாட்டென் புகழ்பழியென் பான்மன்னோ
போற்றுவார் மாட்டென் புகழ்பழியென் றுற்பிரித
றேற்றுவாய் நெஞ்சே யெனுமறைசிந் தித்தனனால்;
சிந்திப் பதனொடுமிச் சிந்தை யறைபோக
வந்திப் பசலை மறைத்ததுமெய்ம் மாசுணவே;
ஏடியென் சொல்வேன் மன்யான் றரிவென்ன
நீடியவுள்ளத் தவர்க்கு;
ஆயினும்,
எனதுயி ரெனவுறு நினதுயி ருணர்வுற
மொழிவது மொன்றோ பிரிவது புரிபவ ருடனே காமுறு
மனனே, குமையினை யுண்பது முறக்கமு மறக்குமென்
னையரிக் கண்கள தல்லான் மன்னோ

மெய்யென வுணர்ந்துணர்த் துகநீ
பொய்யென வுடலினை யுயிர்துறக் குமதே

— பா.பா 108

முள்ளுடைத் தாட்டா மரைமலர் முன்னிய
பிள்ளைமை யெய்தாப் பிதாமக ளுகிய
தெள்ளிய நான்முகத் தோதியுந் தேர்வரு
மொள்ளிய நான்மறை யோதா துணர்வினுட்
கொள்பவ ளுகிக் கொழித்த தமிழ்மறை
புள்ளுயர் கேதனத் தாற்கருள் பொன்மகிழ்த்தார்
வள்ள லுயர்துடரி வாய்;
திருந்திய வெண்ணெண் கலைகளுந் தெற்றெனத்
தரும்பனு வலின்றுறை சார்ந்துணர் கேள்வி
பொருந்திய பழிபிறங் காவருட் புரவல;
நெய்த்து மிருண்டுஞ் சுருண்டு நெறித்தனவாய்
மொய்த்தகுழல் கோதி முடிமுச்சி
வைத்தமுகை விண்டு மதுத்தூய்ச் சுவற்புரள்வ
துய்த்திங் கெழுதுவதொன் ரோ;
இருட்பான்மை யின்றி யிருதிணையைம் பாலுட்
பொருட்பான்மை முற்றப் பொறிப்பவரென் ருலு
மருட்பார்வை மையுண் மதரரிக்கண் செய்யு
மருட்பார்வை தீட்டுவதிங் கார்;
காந்தளி தெனுமிணைக் கரங்களை யெழுதினு
மாய்ந்தணி வரிவளை யவையுரா யொலிப்பதுந்
தோய்ந்திட வெழுதவுந் துணிபவர் யாரே;
வண்ண மணிக்கச்சின் வன்கட் டறவிம்மித்
தண்ணென்னும் வெச்சென்னுந் தன்மை புரிவனவாய்
வெண்ணித் திலவடங்கண் மீவாவும் பூண்முலைமேற்
பண்ணப் படுமோ பகர்;
உண்டிலையென் றைய முறுநுண் ணிடையுருவங்
கண்டெழுது வாரெவர்மென் காலுறினுந்-தெண்டமதுட்
கொண்டொசிதல் கூடும் படிக்குங் குறித்தெழுதும்
பண்டிதரிங் காருளர்நண் பா;
பலவாய், மறித்தினி யுரைப்பதென் மடவர லவயவ
நெறிப்பட நிகழ்த்திய படிநீ கிழியினிற்
செறித்துள தென்னிற் சீறார்
குறிக்கொளக் குழுவொடுங் கொடுபோ துகவே

— பா.பா 109

கதழ்பரி பூண்ட கடுந்தேர் கடாஅய்
மதனுடை நோன்ருள் வலவனி னீயற
புதமிவ ணெய்தல் புதனழிந்தீர் போலுந்

திதமகிழ் மாறன் றிருக்குரு கூர்வா
ழிதமரு ளெங்கைய ரீதுறி லின்பஞ்
சுதனுறுந் தேர்மீளத் தூண்டு;
மடநல்லாய்,
தவறென் றிழையாத் தமியேனை யீன
விவற லுடையா யெனலாலிப் போழ்து
கவர்வுற் றதுநெஞ்ச கம்;
புனலூர,
பொய்யினைப் பொய்யாகப் புறம்போக்கி மேதக்க
மெய்யினை மெய்யாக்கும் விழுமியவர் மாறுடுஞ்
செய்கைப் பொதுமகளிர்ச் சேர்ந்தாங் களவளாய்
மைய லுருநின் மனோவாக்கும் வெண்பளிங்காய்
யெய்திற்றென் சொல்வ தினி;
இன்சொல்லாய்,
சொல்வன் மையராந் துயவற் றவர்விறற்சொல்
வெல்வன் மையரார் விளம்பு;
புரவல கேட்டி,
நனிநீ ரவரு நகுதற் பொருட்டாய்த்
தொனிநீர் வளைமுன்கைத் தோதகங்கூர் மாதர்
முனிநீர் மையராக முள்ளுகிராற் செய்புண்
பனிநீர்பெய் சாந்தெழுதும் பண்பின் மறைத்துட்
கனிநீர் மையர்போலக் கையிருதாள் பற்றித்
தனிநீ குறையிரப்பத் தாழ்ந்ததுள நின்க
ணினிமேலென் செய்குவல் யான்

— பா.பா 110

அன்றினர் நிறத்துற வழுத்துபு பறியா
வன்றிறன் மாரதர் வலம்பட வேந்திய
கொழுங்குருதிப் புனன்முழுக்குண் கூரிலைவே லினைவென்றே
யழுங்கனூர்கூர் நமன்படைபோன் றமர்புரிமை யுண்கணார்
மந்தரவெற் பிணைப்பழித்து வயிரமணிப் பருவரைபோற்
சுந்தரமொன் றியபைம்பூட் டுணைத்தோளும் புனலூரன்
மின்றிகழ்தட் டொள்ளியினுமாண் மிளிர்வெய்திக் கதிர்சுலாம்
பொன்றிணிமால் வரைமார்பும் புணையாகப்
பொதுவுண்பான்;
தண்ணறும்பூந் துணர்ப்பொதும்பர்த் தமிழ்மலயத்
தரவுமிழ்ந்த
வொண்மணி பசுங்கழைவீன் டுகுமணியுங் கைக்கொண்டே;
வயிரவழற் பிழம்பெறிகண் மால்யானை மதமாடி
வெயில்விரிபொன் னசும்பதனை மெய்ம்முழுது மட்டித்தே;
பொறிவரிவண் டுளர்நறுமென் பொதியவிழ்பூ நறவருந்தி

வெறிகமழ்சந் தகிஞகம் வேர்முதல்கீண் டுருட்டியே;
மாங்கனியும் வாழையின்மா ழையங்கனியும்
வருக்கையின்மாண்
டீங்கனியு மெவ்வுழியுந் திசைதிசைபோய்த்திரைத்தெடுத்தே;
முதுமொழிவான் பொருட்டிறங்கண் முழுவதூஉ
முதுக்குறைவாற்
பொதுவறவுட் கொண்டவரிற் பொருண்முழுதுங்
கவர்ந்துராய்;
நெடும்புயனின் றுகுதிவலை நிலத்துறுமுன் னெதிர்கதுவிச்
சுடுஞ்சுரந்தண் மருதமெனத் தோன்றுதற்கா
யிடையடைந்தே;

புறவு பருந்தொ டெருவை வெருண்டு
பறலிய பம்பு தொழுதி வழங்கவே;
உலவை முளிந்த குடச முழிஞ்சி
லிலகு கடம்பு குரவை நெருங்கியே ;
இரலை மருண்ட பிணையொ டிரங்க
வருண நிறங்கொண் ஞமலியை யுந்தியே ;
உலைவில் குறும்பி னெயினர் கணஞ்செ
யிலைபெய் குரம்பை யுழுது பெயர்ந்திடா ;
குல்லையுந்தே னிமிர்கொழும்பொற் கொன்றையுந்தண்
காயாவு
முல்லையுந்தோன் றியுந்துவன்றமுல்லையுளொல் லையிற்படர்ந்தே
ஆம்பலந்தீங் குழற்குடவ ரகன்பாடித் தொழுவுறாஉ
மோம்படைமூ வினமொன்றிற் கொன்றுலக்கற் றிரியவே;
குடப்பால்வெண் டயிர்விராய்க் குளிர்புனற்கங் கையைப்
பழித்துக்

கடற்பாலின் வளமலிந்து கவின்மருதங் குறுகியே;
கருமேகந் தொடுசிகரக் கருவரையும் பொருவலவென்
றிருமேரு வெனப்பணைத்த விருகரையி னெடும்பொருதே;
சுடுமணுறப் படுத்திழுகு சுதைவழித்த மடைமுழைபுக்]
கிடுமணுறு முழவிணைவென் றெழிலியெனக் குளிறியே;
ஊதியங்கொள் வதற்குளதொன் றுதவினர்தம் முதவியை
வென்
றீதலியல் பறிந்தோரி னெழின்மணியேற் பவர்க்குய்த்தே;
எனவாங்கு,
வண்டானந்து ணைபுரிய;
மகன்றிலுந்தன் றுணைபிரிய;
தண்டாத வனமிரிய;
தடஞ்சிறைப்புள் ளினமிரிய;
பொய்கை தொறும்பரந்தே;
பொழில்க் டொறும்பரந்தே;

செய்க டொறும்பரந்தே;
திரள்கரும் பிற்பரந்தே;
பரந்த;
மதிநலத்தான் மிக்க மறைத்தமிழ்த்தேர் மாறன்
முதிய மகிழ்மாலை முன்னோன் குருகூர்த்
ததியர் புகழ்சங் கணித்தண் டுறையுட்
புதியவா மந்தண் புனல்

— பா. பா 111

## கலிப்பாவினம்

நெய்யமர் வேல நெடுமா லரங்கத்துண்
ணையரிக் கண்ணியை யாரென வின்னு மறியேன் யான்;
செஞ்சுடர் வேல திருமா லரங்கத்துன்
னஞ்சனக் கண்ணியை யாரென வின்னு மறியேன் யான்;
செம்புகர் வேல திருமா லரங்கத்துன்
னம்பமர் கண்ணியை யாரென வின்னு மறியேன் யான்

— ,, 112

தாய்போன் றுலகளித்த தஞ்சைமால் வெற்பனையாய்
சேய்போன் றௌியுடையான் செங்கைத் தழைதரலுஞ்
சேய்போன் றௌியுடைய கொண்டிலனென் சித்திரத்தால்
வாய்போன் றினிவரிலென் சொல்லி மறுப்பன் வினையேனே

— ,, 113

மின்பெற்ற மேக மெனமிளிரு மெய்த்திருமா
லன்பிற் றருதழையை யாயிழையா
ளன்பிற் றருகவென வாங்கி யதையணைத்த
பின்புற்ற வின்பப் பெருக்கென் புகல்வென் பெருமானே

— ,, 114

வாளி பின்செல முன்செலு மறிபுன லொழுக்கத்
தாளி பின்செல முன்செலு மடுகளி றந்தோ
கோளில் வான்பிடி குறுகலும் புணர்ச்சி யுற்கொளலால்
வேளின் மேதகு பெருவிறல் யாவரே விளைத்தார்

— ,, 115

அடனி லாதர ணிழந்துளார் யாவரே யானு
மிடனி லாரிடை பணிபவ ராமெனன் மெய்யே
யுடனி லாதவாய் ஞாளிமுன் பிரிநரி யுறுநீர்ப்
படரு மாகளிற் றெருத்ததாய்க் களித்தது பாய்ந்தே

— ,, 116

இறைவ னுலகைந் திரியல்போ குனரிறை மையிலாச்
சிறைவ லாருழைச் சரண்புக வுடனிரி திறனென்

றறைவ தாம்புன லலைக்குமா ளிகடுதிக் கையினத்
துறைவன் மாமுத றழீஇயுட னிரிதரு தொடர்பே
— பா.பா 117

கலங்கு பாய்புனல் கடிந்தெழக் கவட்டொடு மலங்கப்
புலங்கொ டாருவிற் புட்குலம் போகலா திரைத்தல்
குலங்க டாங்குனர் நடுக்குறக் குலத்துளா யவர்பா
னலங்கொள் வார்குழீஇக் கலுழ்வதே போன்றன நவிலின்
— ,, 118

அறைபொரு தமிழ்தரு மணியை தாருவை
நறைமரை வளக்கபி லையினை நாகினைத்
துறைதொறுஞ் சுழித்தெறி தொகுதி பாற்கட
னிறையமிழ் துயிர்த்தபல் வளநி கர்க்குமே
— ,, 119

தரங்கவான் புனலிரு கரையுந் தாக்கலின்
மரங்கடா மசைந்தல ருகுத்தல் வாழுமெம்
முரங்கெடா தளித்தியென் றுள்ளிக் கொம்பராங்
கரங்களாற் பனிமலர் கவிழ்ப்ப போன்றவே
— ,, 120

மண்ணக மடந்தைதன் வரம்பை வான்புனற்
பெண்ணர சழித்ததென் றுலகம் பேசுமா
றெண்ணியே யளவினுக் கெங்கு மார்த்தியா
யுண்ணுநீர்க் கடணையு முததிக் கீந்தவே
— ,, 121

புக்கமா நதிக்கெதிர் புணரி மாமணி
யொக்கவே தெளித்திட லுததி நாயகன்
மிக்கநா யகியென விரைந்து பாதகா
ணிக்கையாய்த் திரைக்கரத் திடுவ போன்றவே
— ,, 122

மடைதிறந் தொழுகுநீர் வாவி வாய்ப்புக
மிடைதிறந் தருமர விந்த நாண்மலர்
புடைதிறந் ததுமலர்ப் பூவை பொன்னிதழ்க்
கடைதிறந் தெதிர்கொள நினையுங் காட்சித்தே
— ,, 123

கலிப்பாவுக்கும் இனத்திற்கும் நயமிக்க இலக்கியச் சான்றுகள் இங்குத் தரப்படுகின்றன. தொடைப் பயிற்சி யழகும் ஒலிநயமும் இணைகின்றன.

கொன்செய்த கலையல்குற் கொலைசெய்த மதர்வேற்கண்
மின்செய்த சிறுமருங்குற் பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மணிமன்றி னடஞ்செய்த புகழோய்கேள்
முருகுயிர்க்கு நறுந்தெரியன் மொய்குழலின் மையுண்கட்

பொருகயற்குன் றிருமேனி புதுவெள்ளப் புணரியே;
தேன்மறிக்கும் வெறித்தொங்க லறற்கூந்தல் திருந்திழைகண்
மான்மறிக்குன் திருமேனி மலர்முல்லைப் புறவமே;
பிறையளிக்குஞ் சிறுநுதலப் பெண்ணமுதின் பேரமர்கட்
சிறையளிக்குஞ் திருமேனி தேனளிக்கும் பொதும்பரே;
அதனுல்,

மதுவிரிகோதை மடவரற் கம்ம
புதுவிருந் துண்ண வுண்ண
அதிசயம் விளைக்குநின் னற்புதக் கூத்தே

— சி. செ. கோ 57

பேதைமீர் பேதைமீர்
பூமன்னு திசைமுகனும் புயல்வண்ணப் பண்ணவனுங்
காமன்னு புரந்தரனுங் கடவுளரும் புடைநெருங்க
இருகோட்டுக் கிடைந்தவிடு கிடையவர்பல் லாண்டிசைப்ப
ஒருகோட்டு மழகளிறு மிளங்கோவு முடன்போத
அம்பொன்மணி மதிற்றில்லை நடராச னணிமறுகிற்
செம்பொன்மணிப் பொலந்திண்டேர்த் திருவுலாப் போதுங்
கால்;
பாரித்த பேரண்டஞ் சிறுபண்டி கொளப்பெய்து
வாரித்தண் புனற்றுஞ்சு மாலுக்கு மால்செய்வீர்
வேரித்தண் குழலார்கை வளைகொள்ள விழைந்தேயோ
பூரித்து வீங்குவநும் புயமென்பார் சிலமாதர்;
சொன்மாலை தொடுத்தணிந்த தொண்டர்க்குத் துணைவராய்
நன்மாலைக் குழலியர்பால் நள்ளிருளிற் செலவல்லீர்
பன்மாத ருயிர்கொள்ளல் பழியன்றே பகைகொள்ளும்
வின்மார னுயிர்கொண்ட விழிக்கென்பார் சிலமாதர்;
அங்கமலன் முடைத்தலையே பலிக்கலனு வையமிடு
மங்கையர்கள் நலங்கவர்வான் பலிக்குழலு மாதவத்தீர்
தங்கலர்தங் கிய்மும்மைப் புரமன்றே தலையன்பி
னங்கையர்தம் புரமுமது நகைக்கென்பார் சிலமாதர்;
அருங்கலை கவர்ந்துநீ ரளிக்கப் பெற்றநும்
இருங்கலை யினிதெமக் கென்ப ரோர்சிலர்;
நன்னிறங் கவர்ந்துநீர் நல்கப் பெற்றநும்
பொன்னிற மினிதெனப் புகல்வ ரோர்சிலர்;
தேரினை நோக்கியே திரிவர் சிற்சிலர்;
ஏரினை நோக்கியே யெழுவர் சிற்சிலர்;
தாரினை நோக்கியே தளர்வர் சிற்சிலர்;
மாரினை நோக்கிய மருள்வர் சிற்சிலர்;
நலன ழிந்துநிற் பார்சிலர்;
கலன ழிந்துநிற் பார்சிலர்;

நாண்து றந்துநிற் பார்சிலர்;
கண்க லுழ்ந்துநிற் பார்சிலர்;
பாடு வார்சிலர்; ஆடு வார்சிலர்;
பரவு வார்சிலர்; விரவு வார்சிலர்;
வாடு வார்சிலர்; ஓடு வார்சிலர்;
மகிழு வார்சிலர்; புகழு வார்சிலர்;
ஆங்கொருசார்,
முதிரா விளமுலை மழலையந் தீஞ்சொல்
மங்கை மற்றிவள் நங்குலக் கொழுந்து
கணங்குழை யவரொடும் வணங்கினள் நிற்பச்
சோர்ந்தது மேகலை நெகிழ்ந்தன தோள்வளை
சாந்தமுங் கரிந்தது தரளமுந் தீந்தன
இவ்வா றுயின ளிவளே செவ்விதின்
ஆம்பற் பூவின் முல்லையு முகைத்தில
இளையோள் சாலவு மம்ம
முதியோள் போலுங் காம நோய்க்கே

— சி.செ.கோ 58

தொல்லுலகம் படுசுடிகைச் சுடருமணி விளக்கேந்தும்
பல்பொறிய படவரவு மடுபுலியும் பணிசெய்ய
வந்தரதுந் துபிமுழங்க வமரர்மலர் மழைசிந்த
இந்திரனு மலரவனுங் கரியவனு மேத்தெடுப்பச்
சூடகத் தளிர்ச்செங்கைத் துணைவிதுணைக் கண்களிப்ப
ஆடகத் திருமன்றத் தனவரத நடஞ்செய்வோய்;
முன்மலையுங் கொலைமடங்க லீருரியு மும்மதத்த
வன்மலையுங் கடமலையின் முடையுடலின் வன்றோலும்
பொன்மலையின் வெண்முகிலுங் கருமுகிலும் போர்த்தென்ன
வின்மலையும் புயமலையின் புறமலைய விசித்தனையே;
கடநாக மெட்டும்விடங் கால்நாக மோரெட்டுந்
தடநாக மவையெட்டுந் தரித்துள்பூந் துகிலொன்று
முடனுக வடல்புயுரிங் கொடுவரியி னுடுப்பொன்று
மடனுக வரவல்குற் கணிகலையா வசைத்தனையே;
வருநீலப் புயன்மலர மலரிதழிக் கண்ணியையு
மருநீல முயற்களங்க மகன்றமதிக் கண்ணியையுங்
கருநீலக் கண்ணியுமை செங்கைவரு கங்கையெனுந்
திருநீலக் கண்ணியையுஞ் செஞ்சடைமேற் செறித்தனையே;
கறைவிட முகவெரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றெடுமிடல் பெறுபக டொடுமட

லெறும்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை;
உலகமொ டுயிர்களு முலைதர வல்ம்வரு
மலர்மகள் கொழுநனு மகபதி முதலிய
புலவரு மடிகளார் புகலென முறையிட
அலைகடல் விடமுன மமுதுசெய் தருளினை;
விசையிலெம் மிறைவியும் வெருவர விரசத
வசலம தசைதர வடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிரல் நிறுவினை;
இலவிதழ் மதிநுத லிரதியொ டிரதம
துலைவற நடவிடு மொருவனும் வெருவர
அலைகடல் நெடுமுர சதிர்தர வெதிர்தரு
சிலைமத னனையடல் செயுநுதல் விழியினை;
அருவமு முருவமு மாகி நின்றுமவ்
வருவமு முருவமு மகன்று நின்றனை;
சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையுந் துறந்து நின்றனை;
அந்நலம் விழைந்தவர்க் கறமு மாயினை;
பொன்னலம் விழைந்தவர் பொருளு மாயினை;
இன்னலம் விழைந்தவர்க் கின்பு மாயினை;
மெய்ந்நலம் விழைந்தவர் வீடு மாயினை;
முத்தொழிலின் வினைமுதல் நீ; மூவர்க்கு முழுமுதல் நீ;
எத்தொழிலு மிறந்தோய் நீ; இறவாத தொழிலினை நீ;
இருவிசும்பின் மேயோய் நீ; எழின்மலரின் மிசையோய் நீ;
அரவணையில் துயின்றோய் நீ; ஆலின்கீ ழமர்ந்தோய் நீ;
பெரியை நீ; சிறியை நீ; பெண்ணு நீ; ஆணு நீ;
அரியை நீ; எளியை நீ; அறமு நீ; மறமு நீ;
விண்ணு நீ; மண்ணு நீ; வித்து நீ; விளைவு நீ;
பண்ணு நீ; பயனு நீ; பகையு நீ; உறவு நீ;
எனவாங்கு,
கற்பனை கழன்றநின் பொற்கழ லிறைஞ்சுதும்
வெண்மதிக் கடவுண் மீமிசைத் தவழ்தரத்
தண்முகிற் குலங்கள் தாழ்வுறப் படிதலின்
செங்கா லன்னமும் வெண்மருப் பேனமுங்
கீழ்மே றுருவ வாரழற் பிழம்பாய்
நின்றநின் றண்மையை யுணர்ந்தும்
பொன்றிகழ் புலியூர் மன்றுகிழ வோனே

— சி.செ.கோ 59

சேல்செய்த மதர்வேற்கட் சிலைசெய்த சுடிகைநுதன்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யுந்
தருணவிளம் பிறைக்கண்ணித் தாழ்சடையெம் பெருமானின்
கருணைபொழி திருநோக்கிற் கனியாத கன்னெஞ்சம்
வாமஞ்சான் மணிக்கொங்கைக் கொசிந்தொல்கு மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கிற் கரைந்துருகா நிற்குமால்
அவ்வண்ண மாறிநிற்ப தகமென்று லகமகம்விட்
டெவ்வண்ண மாறிநிற்ப தின்று

— சி. செ. கோ 60

அற்புத மணிமன்றி லடிகணின் னடியுன்னார்
மைக்கடல் விடமென்னும் வடவைத்தீ யெழவஞ்சி
நொஎன வடிவீழ்ந்தார்க் குதவிலர் நாணூர்கொல்
கைத்தல வபயத்தார் வரதத்தர் கைசெய்யாச்
சித்திர மன்ன சிலர்

— ,, 61

தொடலைக் குறுந்தொடித் தோகாய்நம் பாவை
படலைச் சிறுமுச்சி யுச்சிப் பசுங்கிள்ளை
பேதைக் குழாத்தொடு நென்னற் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட் டயருங்கா
லஞ்சனக் கண்ணுளுந் தாமு மணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனார் வெள்விடைமேற் சேறலு
முண்ணெக் குருக வெதிர்ப்பட் டுடையானைக்
கண்ணிற் பிணித்து மனத்திற் கொடுபுக்
கிறைவளை சிந்த வணிதுகில் சோரப்
பிறரறியா வண்ணம் புணர்ந்தும் புணராள்போல்
மையுண்கண் ணீர்சோரச் சோர்தலும் வார்குழலார்
கைகோத் தெடுத்துக் கடிமனை கொண்டுய்ப்பப்
பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலுஞ்
செந்தீப் பிழம்பிற் கிடத்திச் செருச்செய்வ
தந்தோ கொடிதுகொடி தென்செய்தீ ரன்னைமீர்
பொன்னஞ் சிலையே சிலையாப் புரமெய்தான்
றண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ தம்மினென
மின்றந்த நுண்ணிடையா யெங்கோன் விரைத்தொங்கல்
தன்றந்தை தாளெறிந்தார்க் கன்றித் தாராரென்றேற்
கன்றே பகைநோக் களித்தாள்மற் றம்ம
சிறியாள் பெரும்பித் தறிந்திருந்துஞ் செவ்வி
யறியா துரைத்தே னது

— ,, 62

அடிகொண்ட குனிப்பன்றே யரிபிரமர் முதலானோர்
முடிகொண்ட தலைவணங்கின் குனிப்பெல்லா முறைமுறைபோய்

கடிகொண்ட பொழிற்றில்லை நடராசன் கழற்காலிற்
குடிகொண்ட படிபோலு மிடத்தாளிற் குஞ்சிதமே
— சி.செ.கோ 63

மல்லாண்ட திரடிண்டோட் டுழாய்முதலு மணிநாவிற்
சொல்லாண்ட மறைமுதலும் பலராங்குத் தொலைவெய்த
பல்லாண்டு செலச்செல்லா விளையோரும் பணிப்பெய்த
அல்லாண்ட நள்ளிருளி லழலாடுந் தொழிலினையே
அதனால்
பல்பே ரூழி செல்லினு மடிகட்
கெல்லையுஞ் செல்லாதாகு மாகலின்
அளவில் கால மலக்கணுற் றுழலுமென்
தளர்வு நோக்காய் போலு நோக்கின்
கருணைசெய் தருளா யல்லை
அருணலம் பழுத்த வாடவல் லோயே
— ,, 64

குழைதூங்கு கழைமென்றோட் கோமாரி கொலைக்கண்கள்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேயெய்தா நானெய்த
உழைதூங்கு குயிலேங்க வுருமுத்தி யுக நக்கு
மழைதூங்கு பொழிற்றில்லை மணிமன்று ணடஞ்செய்வோய்;
மீனேற்றின் றுவசத்தான் றனிதுஞ்ச விழித்தோய்நின்
ஆனேற்றின் றுவசமோ வடலேற்றி னூர்தியோ
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே;
எனவாங்கு
பைந்துழாய் மவுலிப் பண்ணவ னுவப்ப
அந்தணர் பழிச்சவு மறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்
அனைய தன்றே யான்றோர் கடனே
— ,, 65

மறைதங்கு திருமன்றி னடங்கண்டு மகிழ்பூத்துக்
கறைதங்கு படவரவ மிமையாது கண்விழிப்பக்
குறைதங்கு கலைநிறையிற் கோளிழைக்குங் கொல்லென்று
நிறைதங்கு தலையுவவு நிரம்பாது நிரப்பெய்தும்
பிறைதங்கு கடைக்கற்றைப் பெரும்பற்றப் புலியூரோய்
எனவாங்கு
வெள்ளெருக்குங் கரும்பாம்பும் பொன்மத்து மிலைச்சியெம
துள்ளிருக்கும் பெருமானின் றிருமார்பி னுறவழுத்தும்
கள்ளிருக்குங் குழலுமையாண் முலைச்சுவட்டைக்
கடுவொடுங்கும்
முள்ளெயிற்ற கறையரவ முழையென்று நுழையுமால்

அதாஅன்று
சிலைக்கோடு பொருமருப்பிற் புகர்முகனின் றிருமார்பில்
முலைக்கோடு பொருசுவட்டைக் கண்டுநின் முழவுத்தோள்
மலைக்கோடி விளையாடும் பருவத்து மற்றுத்தன்
கொலைக்கோடு பட்டவெனக் குலைந்துமனங் கலங்குமால்
அதாஅன்று
விடமார்ந்த சுடரிலைவேல் விடலைநின் மணிமார்பில்
வடமார்ந்த முலைச்சுவட்டைக் கண்டுதன் மருப்பெந்தை
தடமார்பம் விடர்செய்யச் சமர்செய்தான் கொல்லென்று
கடமார்வெங் கவுட்சிறுகட் கயாசுரனை வியக்குமால்
அதனால்
சிலைமுகங் கோட்டுமச் சில்லரித் தடங்கண்
முலைமுகங் கோட்டின ணகுமால்
மலைமுகங் கோட்டுநின் மற்புய மறைத்தே

— சி.செ.கோ 66

ஒரு நோக்கம் பகல்செய்ய வொருநோக்க மிருள்செய்ய
இருநோக்கிற் றெழில்செய்துந் துயில்செய்து மிளைத்துயிர்கள்
கருநோக்கா வகைகருணை கண்ணோக்கஞ் செய்ஞ்ஞானத்
திருநோக்க வருநோக்க மிருநோக்குச் செயச்செய்து
மருநோக்கும் பொழிற்றில்லை மணிமன்றுள் நடஞ்செய்வோய்;
கடிக்கமலப் பார்வைவைத்துங் கண்ணனூர் காணுநின்
அடிக்கமல முடிக்கமல மறியாதே மறிதுமே;
முத்தொழிலின் முதற்றொழிலோன் முடியிழந்தான் றலையிழந்த
அத்தொழிலிற் கெனிற்றமியே மறிதொழிற்கும் வல்லமே;
இருக்கோல மிட்டுமின்னு முணராதா லெந்தைநின்
திருக்கோல மியாமுணர்ந்து சிந்திக்கக் கடவமே;
நான்மறைக்குந் துறைகண்டார் தோளிழந்தார் நாவிழந்திங்
கூன்மறைக்க மறைப்புண்டே முய்த்துணர்வு பெரியமே;
தாமடிகண் மறந்துமறி தலைகொண்டார் கலைவல்ல
மாமடிகள் யாமடிகண் மறவாமை யுடையமே;
பலகலையுங் குலமறையும் பயின்றுணர்ந்தும் பயன்கொள்ளா
துலகலையுஞ் சிலகலையு முணராதே முணர்துமே;
அதனால்,
அம்மநின் றன்மை யெம்மனோ ருணர்தற்
கரிதே யெளிதே யாதல்
பெரிதே கருணை சிறியே மாட்டே

— ,, 67

சூன்முகத்த சுரிமுகங்க ணிரைத்தார்ப்பத் தொடுகடல்வாய்
வான்முகத்த மழைக்குலங்கண் மறிபுனல்வாய் மடுத்தென்னக்

கான்முகத்த மதுகரத்தின் குலமீண்டிக் கடிமலர்வாய்த்
தேன்முகக்கும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம்
பலத்துறைவோய்

புற்புதமுந் தொலைவெய்த நிலையெய்தாப் புலையுடம்பின்
இற்புதவு திறந்திறவா வின்பவீ டெய்தவொரு
நற்புதவு திறந்தன்ன நறும்பொதுவி னங்கையுடன்
அற்புதவு மானந்த நடம்பயிலு மறவோய்கேள்
எவ்விடத்தி லெப்பொருளு மொருங்குண்ண விருக்குநீ
வெவ்விடத்தை யெடுத்தமுது செய்ததுமோர் வியப்பாமே
எண்பயிலா வுலகடங்க வொருநொடியி லெரித்திடுநீ
விண்பயிலு மெயின்மூன்று மெரித்ததுமோர் வீறாமே
பெருவெள்ளப் பகிரண்டந் தரித்திடுநீ பெயர்த்துமலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததுமோர் புகழாமே.
மாயையினு லனைத்துலகு மயக்குநீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதோர் சிறப்பாமே.
மேதக்க புவனங்க டொலைத்திடுநீ வெகுண்டாய் போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைந்ததுமோர் வன்மையே.
ஓருருவாய் நிறைந்தநீ இருவர்க்கன் றுணர்வரிய
பேருருவொன் றுடையையாய் நின்றதுமோர் பெருமையே.
அறிவினி லறிபவ ரறிவதை யலதொரு
குறியினி லறிவுறு குறியினை யலை
உளவயி னுளவள வுணர்வதை யலதுரை
அளவையி னளவிடு மளவினை யலை
அருவெனி னுருவமு முளையுரு வெனினரு
வுருவமு முளையவை யுபயமு மலை
இலதெனி னுளதுள தெனினில திலதுள
தலதெனி னிதுரு வறிபவ ரெவர்
எத்தொழிலுங் கரணங்க ளிறந்தநினக் கில்லையந்து
மெய்த்தொழில்செய் வதுமடிகேள் விளையாட்டு நிமித்தமே
சீராட்டு நினக்கிலையச் சீராட்டுஞ் சிறுமருங்குற்
பேராட்டி விளையாட்டுன் பெயர்த்தாகி நடந்ததே
மெய்த்துயர முயிர்க்கெய்தும் விளையாட்டு முலகீன்ற
அத்திருவுக் கிலையதுவு மவர்பொருட்டே யாமன்றே
இன்னருளே மன்னுயிர்கட் கெத்தொழிலு மீன்றெடுத்த
அன்னைமுனி வதுந்தனயர்க் கருள்புரிதற் கேயன்றே
எவ்வுருவு நின்னுருவு மவளுருவு மென்றன்றே
அவ்வுருவும் பெண்ணுருவு மாணுருவு மாயவே
நின்னலா தவளில்லை யவளலா னீயில்லை
என்னினீ யேயவனு மவளுமா யிருத்தியால்
அதனுல்

தந்தைநீ ; தாயு நீ ; தமரு நீ ; பிறரு நீ ;
சிந்தை நீ ; உணர்வு நீ ; சீவ நீ ; யாவு நீ ;
எனவாங்கு
நெஞ்சகங் குழைந்து நெக்குநெக் குருகநின்
குஞ்சித சரண மஞ்சலித் திறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந் திருப்பது தீர்ந்து
மெய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே
— சி. செ. கோ 68

## கலியினம்

செல்லார் பொழிற்றில்லைச் சிற்றம் பலத்தெங்கள்
பொல்லா மணியைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்
முத்தேவர் தேவை முகிலூர்தி முன்னுன
புத்தேளிர் போலப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்
ஆங்கற் பகக்கன் றளித்தருளுந் தில்லைவனப்
பூங்கற் பகத்தைப் புகழ்மினோ வம்மின் புலவீர்காள்
— ,, 69

இருகூற் றுருவத் திருந்தண் பொழிற்றில்லை
ஒருகூற்றின் கூத்தை யுணராய் மடநெஞ்சே
ஒருகூற்றின் கூத்தை யுணரா யெனின்மற்றப்
பொருகூற்றந் தோற்றப் புலம்பேல் வாழி மடநெஞ்சே
— ,, 70

காளி யாடக் கனலுமிழ் கண்ணுதல்
மீளி யாடுதல் பாருமே
மீளி யாடல் வியந்தவ டோற்றெனக்
கூளி பாடிக் குனிப்பது பாருமே பாருமே
— ,, 71

பானற் கருங்கட் பசுந்தோகை யோகப் பயன்றுய்ப்பவத்
தேனக் கலர்கொன்றை சாருப் பியந்தந்த செயலோர்கிலார்
ஊனக்க ணிதுபீளை யொழுகும் புறக்கண் ணுளக்கண்ணதாம்
ஞானக்க ணேயாத னல்கும் பிரான்றில்லை நடராசரே
— ,, 72

செவ்வாய்க் கருங்கட்பைந் தோகைக்கும் வெண்மதிச்
சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு வொன்றே யுளதவ் வுருவினைமற்
றெவ்வாச் சியமென் றெடுத்திசைப் பேமின் னருட்புலியூர்ப்
பைவாய்ப் பொறியர வல்குலெந் தாயென்று பாடுதுமே
— ,, 73

கரும்புஞ் சுரும்பு மரும்பும் பெரும்படைக் காமர்வில்வேள்
இரும்புங் கரைந்துரு கச்செய்யு மாலிறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருண் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக் கும்மகி லாண்டத் தொகுதியையே

— சி.செ. கோ 74

கூகா வென்று குரைப்பத லாற்சமன்
வாவா வென்னின் வரேமென வல்லிரே
தேவே சன்பயி றில்லையி னெல்லையிற்
சேர்வீ ரேலது செய்யவும் வல்லிரே

— ,, 75

## கலியியல்

பண்டைக்குக் குடமஞ்ஞை பண்ணியதீ தாலிழிந்து
பண்டப்பொற் புயர்காஞ்சிப் பதியெய்தித் தவம்புரிநாள்
வண்டற்ற கதியவைகட் களித்தமுது மழவோய் கேள்
ஈரிரண்டு கணத்தலைவ ரிழைத்ததெவ் வாலிறந்த
பேருவண மோடனமும் பிழைக்கவருள் கூர்ந்தது நீ
அக்காலத் தரியயன்மா லாள்பதிக ணலிவோர்ந்து
மிக்காரும் வளமுன்போல் விளங்கவருள் செய்தது நீ
பராசரன் மகாரறுவர் படுசாபந் தீர்த்தவர்க்குச்
சுராசுரர்க ளுறற்கரிய தூய்மதியன் றீந்தது நீ
எனவாங்கு
எண்ணிடு மெற்கு மருள்வாயென் றேத்துமென்
கண்ணுமுற் றுள்ளங் கவந்தரு ளாலெனைத்
திண்ணவிண் வீட்டிற் செலுத்து

— தி.தி 3-1

மடன்மலர்சூ டசுரர்குலம் வருமிறையாஞ் சூரனும் வெம்
படர்தடியும் பெருமொய்ம்புப் பதுமனுமே புரிதவசுக்
கெழில்சேருந் தனதுயர்வாழ் வினையளிப்பா னிருவரையும்
பொழில்சேரு முடலொன்றிற் புகவிட்டவ் வுடலையயில்
கொண்டுபிளந் தொருபாதி கொடியாமற் றொருபாதி
தொண்டுபுரி வாகனமாத் துளங்கவருள் செய்தோய்கேள்
முதுமறைச்செந் நெறிமறந்து முதிரகந்தை கொடுநின்ற
பதுமத்தா னடுச்சிகரம் பறித்தபர மேட்டியுநீ
பொன்னனைன வுரம்பிளந்து புரைக்குடரைக் களமணிந்து
மன்னகமே மலிந்தவய மாவுரித்த சிம்புளுநீ
ஆர்கலியை நனிகலக்கி யகங்கரித்த மயிலையையும்
வார்கமடத் தையுமடக்கு மாண்புடைய தெய்வமுநீ
உலகினை யளந்தவ னூரமுது கென்பினை
இலகுகங் காளமா வேந்திநின் றவனுநீ
அம்பக மாந்திரு வலரிடத் தாளிலே
நம்பொடு சார்த்திய நாரண னிறையுநீ

திண்சலந் தரன்வகிர் திகிரிக் கரனுநீ
ஒண்பரி திவலவற் குதவு பரனுநீ
அரியய னுடலெரித் தணிநீற் றரனுநீ
திரிகுண மிலாவெண் டிறமார் சிவனுநீ
விடமுண்ட கண்டனு நீஇ
வெங்குரண்ட நாசனு நீஇ
கந்தர்ப்ப தகனனு நீஇ
காலுதைத்த காலனு நீஇ
சசிமிதித்த தாளனு நீஇ
சசிபரித்த சடையனு நீஇ
கரியுரித்த கத்தனு நீஇ
கங்கையணி கடவுளு நீஇ
முத்த னீஇ
முனிவ னீஇ
அத்த னீஇ
அனக னீஇ
சத்து நீஇ
சித்து நீஇ
இன்பு நீஇ
அன்பு நீஇ
ஆதி நீஇ
சோதி நீஇ
கால நீஇ
ஞால நீஇ
அரிது நீஇ
பெரிது நீஇ
ஆவி நீஇ
யாவு நீஇ
அதனல்
நின்னடி நினைந்து நின்னடி புகழ்ந்துன்
இன்னரு ளடைந்தே யென்னையு மறிந்தாள்
உன்னையு மறிந்தே யொல்லையத் துவிதந்
தன்னினீ நானெனுச் சமரச மாக
நிற்கவென் றுள்ளுமென் னினைப்பை
அற்புத ஞேர்ந்தினி தாள்வதுன் கடனே

— திதி 3-2

புனல்கொண்டும் பூக்கொண்டும் பூரணனைப் பூசித்துத்
தினமிளிரு முடரூனே திருவுடையா ருடலென்றும்
இழிவற்ற புகழ்கூறி யிணையற்ற மனுவோது
தொழினித்த முளநாவே சுசியுடையார் நாவென்றும்

நனவதிலுங் கனவதிலு நாயகனை நனிநினையும்
மனமதுநன் மனமென்று மகிழ்நெடிய வேலோய்கேள்
தக்கவரி குமாரிகள்செய் தவநிலைமுன் னெழுந்தருளித்
திக்கனைத்து மேபுகழச் சிலநாளின் மேனுங்கள்
மிக்கவிருப் பம்போல விரைமாலை சூட்டிடுவாம்
பக்கமுளீ ரென்றுரைத்த படிபிழையா திழைத்தனையால்
பண்டிளமை யறுமுனிவர் பரங்கிரியிற் புரிதவசு
கண்டவர்க ளருகிருந்து கருணைநிஜ நெறியாக
எண்டிசையு மப்பாலு மிணையறநின் றிடலுணர்த்தி
அண்டருமே பெறற்கரிய வரும்பெருவாழ் வளித்தனையால்
யாக்கையிரு ளென்னவரும் யமனையொரு மசகமென
நோக்குமிக லுளவிடும்ப னுன்னோடன் றெதிர்க்கக்கண்
டூக்கமிகு முனிவரரு முவணையருந் தாமதிக்க
ஆக்கையுயிர் பிரித்தருளி யங்கவனுட் கொண்டனையால்
நிறைமலி தமனிய னையரிய சிறைபணி நிருமித வினைமருவினை
அறமலி நெடியவ னயர்தவ னலனுற வடல்வளை யினிதருளினை
மறமலி யரியெனு மெறுழிசெ யிடரற மதுகையு
றுகொலைசெய்தனை
திறமலி சுரர்புகழ் குறுமுனி யுயர்கவி செயநல தமிழருளினை
விந்துவு நாதமும் விளங்க நின்றுமவ்
விந்துவு நாதமும் விலங்க நின்றனை
ஆரணச் சொல்லிடை யடங்கி நின்றுமவ்
வாரணச் சொல்லையு மகன்று நின்றனை
சின்மய வெளியெனச் செறிந்து நின்றனை
நின்மல வொளியென நிலவி நின்றனை
சதசத் தசத்தெனுச் சத்தென நின்றனை
பொய்த்தவ ரறியொணாப் பொருளென நின்றனை
சுகுர்த வருளென விளங்கினை
துகளி லியல்பென வியங்கினை
பிரம விபுவென விருந்தனை
பெரிய பதியென விலங்கினை
நெடிய திருவென நிரம்பினை
நிகில குருவென நிகழ்ந்தனை
நிகரில் கடியென நிமிர்ந்தனை
நிரவ யவனென நிறைந்தனை
தழைவு மாயினை
விளைவு மாயினை
சமமு மாயினை
தவமு மாயினை
அயில னுயினை

மயில ளுயினே
மழவ ளுயினே
கிழவ ளுயினே
வீர ளுயினே
தீர ளுயினே
முருட ளுயினே
திருட ளுயினே
மலைய ளுயினே
புலவ ளுயினே
பூம ளுயினே
ஓம ளுயினே
என வாங்கு
எல்லிலு மல்லிலு மென்மனத் தெண்ணியுன்
நல்லடி பரவி நாடுநா யேனைக்
காப்பது கடனுக் கருதியெஞ் ஞான்றுநீ
நீப்பறு திருவரு ணீட்டிடல் வேண்டும்
வீவில்புள் ளிருக்கும் வேளூர்க்
கோவில்வாழ் முத்துக் குமார தேவே

— தி.தி 3-3

மேலென்று சொலப்பட்ட பொருட்கெல்லா மேலாயெக்
காலுமிருந் தெங்கணுமாக் கழுமுபொரு ளொன்றதனைப்
பரசுப்ர மணியமெனப் பகருமுயர் சுருதியதன்
சரணச்செங் கமலமலர் தங்கியநுண் பூழிகளை
ஆதிபரா பரனென்னு மரனுர்தம் மொய்ம்புகளும்
ஓதிசெறி பருப்பதியி னுயர்தனபா ரங்களுமே
சில்காலம் பொருந்தியினி துய்ந்தவெனச் செல்வமிகு
தொல்பிரபா கரன்மைந்தர்க் ககத்தியனுர் சொற்றதிடம்
காந்தத்தி னுபதேச காண்டத்தி லுளததனுல்
வேந்தர்க்கும் வேந்தாகு விட்டுணுவு மேனேரும்
நுண்சரணத் துகண்மாண்பு நுவலரிதெத் துணையுமதைப்
புன்கவிஞ ஞனாஞே புகலுவலித் தகையுடைநீ
என்றுதிகொண் டெளிவந்துன் னின்னருணன் கீவாயேல்
தொன்றுலகி லெனைப்பொறிய னென்றெவர்தாஞ்
சொலவிசையார்

ஆதலினங் குகவெனையுன் னருணிலைவைத் தினிவருதல்
போதலுமில் லாமுடிவிற் போக்கு

— ,, 3-4

அருணைநல் லவிமுத்த மணிதில்லை மணியாரூர்
திருமலி பொழின் மதுரை திருக்காளத் தியுமுறையே
நினைக்கமெய் விடுக்கவொரு நிலையுறீஇத் தரிசிக்கச்

செனிக்கவுட் செவிகேட்கச் சிரத்தையுட னருச்சிக்க
முத்தியா மெனநூல்சொன் முறைபோலப் பலனல்கும்
அத்தனுர் நின்காற்றண் ணலர்பெரிய தந்தோள்பட்
டுள்ளமா மகிமையினுட் குளிர்ந்தனரக் குளிர்கொண்டே
வள்ளலா யின்பீவர் மலர்ச்சரணம் பினர்க்கென்னின்
அற்றமி லறுமுகவுன் னடிப்பூகம் முடிப்பார்வாழ்
வெற்றென மட்டிடலா மிங்கு

— தி.தி 3-5

ஆசறு மயின்மழவ னருந்தமுத முகைகடழல்
தேசவி ரவன்றந்தை திருவுருவுந் தழலேயால்
நாசமி லவற்சுமந்த நறுந்தேவுந் தழலினிய
தாசருள் கவனுமொண் டழல்

— ,, 3-6

தெவ்வற்ற கண்ணுவனுர் செப்பியவோர் சாபத்தை
இவ்வழியே தீர்ப்பாமென் றெண்ணியநீண் மாலென்பார்
மாசில் சிவமுனியாய் மானுன பார்க்கவியை
ஆசிரேக் காற்புணர்ந் தோர்பெண் ணளித்தஃ
துபேந்திரனும் வேடனுறையுள் வளர்ந்து
நபேந்துபோன் மின்னியிடு ஞான்றுநின் பானல்கி
வாழ்ந்தா ரிரப்பார்க்கும் வாழ்வளிக்கு மாண்புற்றுர்
தாழ்ந்தா ருளந்தாழ் சழக்கனே னென்றருவேன்
நெஞ்சா னினைப்பே னிறைபாக்க ளாற்றுதிப்பேன்
தஞ்சநின் பாதமெனத் தாழ்வேனின் னுமத்தைப்
பன்னுநர்க் குந்தண்டம் பண்ணிடுவே னன்பானே
என்னகத்தி னிற்கு மிரும்பொருளே வேன்மன்னே
பொன்றுக் கருணைப் புணரியினுன் புக்குய்தற்
கொன்று யணைத்தா ளுவந்து

— ,, 3-7

வனப்புமீ தூர வளர்மணிக்க லாபந்
தனைக்ககன நீட்டித் தலநின்-றெனைக்கொள்
இறைசெவ்வேள் கால்விழைவா ரெல்லாரு நாளும்
குறைவில்லாச் செல்வரெனக் கூத்தா-டிறைமஞ்ஞாய்
நீசூர னுயிருந்து நீடாக்க விண்ணோர்க்கு
மாசூர் புரிந்து மகிழ்போழ்து-தேசாரவ்
விண்ணோருன் மாண்பு விளியவெற்றி கொள்ளவெனு
எண்ணிச்சேய் மூல மிகறறுகா-னண்ணவ்
வுடம்புபோ யிந்த வுடம்புறுநீ வேரிக்
கடம்புமா வெட்சியுங் காமர்த்-தடந்தோளிற்
பூணும் பெருமான் புரிவுடையா ரானந்தங்
காணும் படிக்கருளுங் கத்தனெரு-கணமுமில்

கூரிலே வேற்கையன் குன்றெறிந் தோனடியாஞ்
சீரியதா டாங்கு திருப்பேறு-சார்வுற்ருய்
அவ்விண்ணேர் நாமெல்லா மர்ச்சிக்கும் வாழ்வுற்ருன்
றெவ்வனென் ருேதத் தெளிந்தென்று-மிவ்வுலகில்
நின்னிறையே யென்னிறையா நேடி யலேயெளியேன்
இன்னலுற லாங்கொ லிசை

— தி.தி 3-8

வளர்தில்லேக் கனகசபை மதுரைவெள்ளிச் சபைசோதி
கிளரால வனரத்ன சபைதளிமங் கெழுநெல்லேத்
தளர்வறுதாம் பிரஞ்சித்ர சபைகுற்ரு லநிருத்தம்
அளவின்றிச் செயுமரனு மருணிதியா மறுமுகனே

— ,, 3-9

கடல்கடைமால் விதிமுதனீள் கடவுள்ரார் மகிமையெலாம்
மடமருவா நினதுமகா மகிமையிலே சிறிதெனவே
அடமறுநூ லறையுமெனு வறிமதியோ ருனதிருதாள்
நடனமதே விழைவரரோ நவைதபுவே லிறையவனே

— ,, 3-10

நனிநாடு நனிநாடு நனிநாடு நனிநாடு
முனிவேறு நமனுள்கண் முரணுகி யணுகாமுன்
அனியாய நணுகாம லருள்பேணு மெமரீர்பொய்
நுனியாத சுரர்சூழு நுதிவேல னிருபாதம்

— ,, 3-11

நமனணுகாச் சிவநிலயங் களிலுமந்த நமனென்பான்
மமதையொடைங் குரோசத்துள் வாராத மாண்புடைய
அமலவவி முத்தங்கா ளத்தியிலு மமர்சிவனுர்
குமரனடி நினேவாரைக் குறுகானந் நமன்மாதோ

— ,, 3-12

மறலியொரு குரோசமள வுஞ்சரியா மதுரையிலும்
திறமையவ னிருகாவ தஞ்சரியாத் தில்லேயிலும்
விறல்வினேயர் துயர்தீர்த்து விளங்குசிவ ஞர்தந்த
அறுமுகனே நினேவாரை யணுகானந் நமன்மாதோ

— ,, 3-13

சீர்பூக்கு முயிர்க்குயிராத் திகழ்குகனுஞ் செவ்வேளின்
நார்பூக்கு நிறையருளான் முத்திபெற ஞானமில்லார்
கார்பூக்கு மயிர்வெளுப்புக் கண்டவர்க்கும் பல்லிலர்க்கும்
ஏர்பூக்கு மியோகமிலே முத்தியில்லே யெனவறைவார்

— ,, 3-14

வேதாக மப்பொருளே மெய்க்குருவி னினிதோர்ந்த
மேதாவி யோருடம்பு மெய்யிலேயென் ருெருமெய் தேர்

போதாவி யாவுமெந்தப் புரையுடனின் முனுமவை
ஆதார வேலிறைவ னருளடைந்து வாழுமென்பார்

— தி.தி 3-15

வாதாந்த வெளிச்சோதீ மயிலேறுந் திருச்சோதீ
நாதாந்த நிலைத்தேவுன் னவையிலரு ளிகழ்வினையின்
வேதாந்தம் படித்தோரு மெய்ந்நூலை மறுத்தோரும்
போதாந்தம் பிடித்தாலும் புகுதுவரோ பவம்போக்கி

— ,, 3-16

திருமருவு புயமாயன் றிகழ்கமலத் தயனறியாப்
பெருமைமலி பரசிவனும் பீடுசால் செவ்வேளும்
ஒருபொருளென் றுணர்வார்தம் முணர்விலுணர் வாய்விரவும்
அருணிமல குகனேநல் லறிவாவ தருள்குதியே

— ,, 3-17

திருவறு சுடருருவே தெரிவரு மதியுருவே
அருவரு ளொளியுருவே யறைமறை புகழுருவே
குருவரு டருவுருவே குறுமுனி பரவுருவே
இருடபு முருகுருவே யெனுநல ரிடரிறுமே

— ,, 3-18

உலகுளீர், தளர்வருநா வதுதழும்பு சாரநிதந் தலைவனுர்
உளர்கழல்க டுதிப்பவருக் குதவறமே யுளர்பண்டைக்
களமொழிந்து கதிகாண்ப ரென்றிடுமா கமமதனுல்
இளவுருவக் குகனைநித மேத்துநெறி பற்றுதிரே

— ,, 3-19

சேவிருக்குங் கைத்தீக்கை செஞ்சரண தீக்கையென்று
தூவிருக்கு நல்லார் சொலுமாறு தண்ணளியிற்
பூவிருக்கு நான்முகனம் பொற்சிரசு குட்டியுடல்
மாவருத்த மேவவுதை தந்தவனெம் மானேயோ

— ,, 3-20

வேதற்கு மேலா விளம்புமரிக் கும்மரற்கும்
கோதற்ற வாகனமுங் கொள்கொடியு மோருருவே
பேதற்ற ஞானப் பெருக்கிலமிழ் வாரினிய
காதற்கு ளாமா கருணையிறை யாம்வள்ளி
நாதற்கு வாகனமு நன்கொடியு மீருருவே

— ,, 3-21

தொடைமிலைச்சு குழன்முடித்த சூர்மகள்போ னேக்குடையாய்
பெடையனத்தை நிகர்த்துலவு பெண்ணரசீ பேரழகீ
இடைசிறுத்து முகைபெருத்த விளவிழும மலிமங்காய்
சடைதரித்த முனிவரருந் தாழ்ந்துவிழை சிறுநகையாய்
எனவாங்கு
உணர்வழிந் தரிவைமோ குழிதரா
திணர்முடிக் குகனடி யேத்துமா னவரே

— ,, 3-22

நறுநரலை கடைந்ததே நம்பனெழில் வடிவுகண்டு
பொறிநகிலம் வி ம்முறுமோ இனியாய பொழுதார்வம்
உறுமுரிமை யான்மாலென் ரெருநாமங் கொண்டிடவும்
பொறிவிரும்பி நோற்றதனுன் மாதவப்பேர் பொருந்திடவும்
மூட்டின பொருணீயா முடிசரதம் யாரறிவார்
தாட்டயை கிளர்தாசர் தாமறிவார் சருவவுயிர்
நாட்டிய முனக்குள்ளே நல்வினையுந் தீவினையும்
ஈட்டுயிர்க ளின்கணக்கு மிடுதீர்வு முனக்குள்ளே
அதனுல்
சேவடி யருளிற் செலுத்தெனைப்
பாவகி யெனும்பேர் படைத்தவெம் பரனே

— தி.தி 3-23

பாலுந்தி நஞ்சாற் கறுத்தவரி பாம்பணியான்
காலுன்னி நோற்ற கனதவத்தின் மானசமாஞ்
சூலுழிநற் கட்டழகே சோபிக்க வந்தவனைத்
தூலுறுப் புச்செயற்குத் தொன்மைதான் மூலமும்
கோலமுமாய்க் கண்டோ மவனே குலதெய்வம்
ஞாலத்தீர் காண்மினென நாவசைப் போர்கல்லாம்
ஆலடியி லுள்ளூன்றி யத்தனச வற்றபொழு
தேலுமத னென்செய்தா னென்பார்க ளென்குகனே

— ,, 3-24

ஓருருவும் பெயருரு மிலியாகி யுயர்மேல்கீழ்
நேர்நடுவுங் குறுமையுமின் றகண்டமென நிலவொருநீ
சீர்மருவும் பசுவெல்லாஞ் சிவகதியை யெளிதுறுமா
றேர்மருவும் பசுபதிக்கோ ரெச்சமெனத் தோன்றினையே
எனவாங்கு
உண்மையுண ருன்னடியே ரெண்பெயரு முருவிருப்பும்
எண்மையிலை வியனெனவே யெழின்மலர்நீர் கொடுபூசை
பண்ணுநிலை தண்டமிழிற் பரசினது முண்டன்றே - அதான்று
சகுணமதே நிர்க்குணமா நிலவுமெனத் தலைநூல்கள்
புகலுரைக ணிசமெனவென் புந்திமதித் தவ்வாறு
திகழுனது திருநாமஞ் செபித்ததுநா னுண்டன்றே - அதான்று
நானழைப்பேன் வாவெனவந் நாள்வரலா நீயென்று
போனநின தருள்வாக்குப் பொய்யாதென் றனுதினமுன்
கானளினங் களையேநான் கருதியது முண்டன்றே
அதனுல்
தெய்வச் சோழன் சிந்தைசெய் துற்ற
திருவே தணிகைத் தேவே சுவர்க்கர்
கோவே பரம குருவே குருந்தே
குன்றக் கொடிச்சி கொள்ளருட் டலைவா

சத்தியச் சைவ சமயக் கரும்பே
நெடில்வேன் மன்னே நிகழுன்
னடியே யடைமா றடியேற் கருளே

— தி.தி 3-25

சொல்லானும் பொருளானுஞ் சுட்டரிய விபுவாய்மற்
றெல்லாமா யல்லவுமா யிருக்குமொரு நிலைநின்று
பல்லுயிரும் பரமசுகப் பரிவணுகிப் பிழைத்திடுமா
றல்லறெறு மைம்முகத்தோ டதோமுகமு மானேய்கேள்
நுன்னருளிற் றிளைத்துய்யு நுணங்கியோர் வழிச்செல்லா
தின்னலுறு மிழுதைகளோ டிவன்கூட லினிமுறையோ
விரைகமழுன் னடிமலரே விழைந்துதுதிக் கின்றவொரு
தரமுடையே னருள்விழுமஞ் சாராது முய்வேனே
சந்ததமுங் கம்பலையென் சலராசிக் கண்ணாழ்ந்து
சிந்தைமயங் கிடினினிய திருவருளி னலமாமோ
திருவருளைத் தினமெண்ணித் தெருளின்றிக் கலுழ்வேனேற்
குருவருணன் குடையார்தங் குணநலமு நலமாமோ
தினமுமன நான்வாடத் திருவருட்குப் பிரிவாயேல்
எனையடைநர்க் கேதுறுக ணென்றதுவும் பொய்யாதோ
இன்றெனது முகம்வாடி யிளைக்கமறந் திருப்பாயேல்
அன்றெனது முன்சொன்ன வறைக்கானி யணுகாதோ
அதனால்
என்முகம் பார்த்தீண் டிரங்கனின் கடன்காண்
நன்முகத் தறுமீ னகிலப்பா லுண்ட
இளம்பூ ரணனே யிறும்பு
களம்பூ ணெழில்சால் கதிர்வே லிறையே

— ,, 3-26

மணிமலி யுவணைவரர் மாமுனிவர் களைநோக்கா
அணிமலி யெமைப்பூசித் தடையரும் பேறனைத்தும்
திணிமலி சரவணவேள் செயற்குரியா னறிமினென்றுத்
துணிமலி பிறைமுடியன் சொற்றவுய ருரைக்குரியோய்
அறுமீனுக் கறுசேயா யன்றிருந்த போழ்தாற்றல்
உறுமரிய திருலீலை யுஞற்றுவா னெருகணத்தே
மறுமேவா வெண்ணிறந்த வடிவங்க டன்கண்ணே
தொறுவுறவே காட்டியவை தோன்றியவா மறைத்தோய்கேள்
சலசப்போ தமர்செல்வி தான்புகழு முமைகொங்கைக்
கலசப்பா லினிதுண்டு கயிலைபுக் கிருந்தனையால்
வெண்காந்தள் பற்றைமுத லாயநல் விரைமலர்கொண்
டொண்காந்தித் தாளர்ச்சித் துய்வார்பங் குற்றனையால்
சிறைபுக்க சயந்தற்குந் தேவர்க்குங் கனவிற்போய்ச்
சிறைமீட்டிக் காப்பலெனச் சொனவண்ணஞ் செய்தனையால்

விண்ணிருடி களின்முதன்மை மேவுவென யாழ்முனிவன்
பண்ணுதவ மோர்ந்தந்தப் படியருடே வாயினையால்
பிரமன்சொற் படியுன்றன் பேராயி ரந்துதிக்குஞ்
சுரர்மிக்க பொறிபெறீஇச் சுகிக்கவருள் சூர்ந்தனையால்
அறுவாய்நோன் பாற்றியவோ ரந்தணனை யரியதிருப்
பெறுமனுவாம் வேந்தாகப் பிறங்கவருள் புரிந்தனையால்
எனவாங்கு
ஆசறு நின்சர ணுசையில் விஞ்செனுண்
மோசமி லந்தர மோகமெ ழுந்தது
விரிதரு முலகது பருவர லெனநவி
லுரியவ ருரைகளெ னுளநனி மருவின
தத்துவ ஞானம தித்தழி யாநில
யத்தினை யேறினை புத்தியு மேயது
அருளைய டைந்திடி னமுதுறு மென்றெணு
மொருமதி விஞ்சிய துணர்வுவி ளைந்தது
சண்பைநகர்த் திருஞான சம்பந்தற் பார்த்ததுபோற்
கண்குளிர்வி னென்னையுநீ கருதிநிதம் பாராயோ
வாகீசர் பனுவலெலாம் வள்ளுறையக் கேட்டதுபோல்
ஓகையினென் பனுவலையு முற்றுநீ கேளாயோ
சுந்தரத்தின் முடியிலடி சூட்டியாட் கொண்டதுபோல்
என்றனக்குஞ் சேவடிப்பூ விரண்டினையுஞ் சூட்டாயோ
வாதவூ ரடிகளுக்கு மனமுவந்து சொற்றதுபோற்
சீதமலர்ச் செவ்வாயைத் திறந்தெனக்குஞ் சொல்லாயோ
ஏழாட்டைத் தண்டிதனை யெடுத்தாசீர் வதித்ததுபோற்
கேழாட்டி னென்னையுநின் கிருபைகொளச் செய்யாயோ
கண்ணப்பு மொருவனைமுன் கரம்பற்றிக் கொண்டதுபோல்
அண்ணலெனை யுங்கரத்தி னுற்பற்றிக் கொள்ளாயோ
அணுவைநீ

ஆட்டினு லாடாதோ
ஆட்டாக்கா லாடிடுமோ
ஊட்டினு லுண்ணுதோ
ஊட்டாக்கா லுண்டிடுமோ
ஓட்டினு லோடாதோ
ஓட்டாக்கா லோடிடுமோ
காட்டினுற் காணுதோ
காட்டாக்காற் கண்டிடுமோ
அதனுல்
எனது போத மென்ப தினையினுன்
தனது போத மாகத் தழைத்துநான்

மேம்படு பொருளாய் விளங்க
ஓம்பரு ணிட்டையின் றுதவி யருளே

— தி. தி 3-27

எள்ளுக் குள்ளெண்ணெ யென்ன வணைத்திலு
மிருக்கு மோர்சச்சி தானந்த மாமுன
துள்ளத் திற்கிறை யேனுமொவ் வாநடை
யுற்று ளோருநின் பேருரு வாதிகள்
எள்ளி னோருமு னன்பர் கலங்கிட
வேசி னோரும்பொன் னுடர்க ளென்னினும்
அள்ள லாதி துவாந்தம்புக் கேங்குவா
ரன்பி னுலெனை யாண்முரு கையனே

— ,, 3-28

ஏக நோக்குறு வோர்பித்தர் பாலர்போ
லேக தேச மிருப்ப ரெனுநவில்
யோகர் சொற்பொரு ளிற்றென வேயுணர்
யூக மற்றவர் புத்தியில் பித்தரை
மோகந் தீர்பர மென்றுகொண் டாடுவர்
முத்தி வேட்கை யுளார்க்கிரங் கின்னருள்
மேக மாமுரு கையவுன் றுண்மலர்
வேண்டு மென்னெஞ்சு மம்மடங் கொள்ளுமோ

— ,, 3-29

கருவி யாவுங் கடந்தவ ரேனுமக்
கருவி யோடுறு காற்சிவ சன்னிதி
மருவி யானந்தக் கண்ணம் வடித்திடன்
மலர்க்க ரங்களைக் கூப்புதல் வாழ்த்துதல்
திருவெண் ணீறிடல் தேசிகற் போற்றுதல்
சிவசி வாவெனச் செப்பல் விடாரிவை
அருகி னோரெவ ருங்குண மில்லரென்
றறிவ தேயென் விவேகமெண் கண்ணனே

— ,, 3-30

அறிவில் பாச பதார்த்தமு ளொன்றனை
யந்த ரங்கத்தில் வைத்திருப் போரையும்
சிறிய போதப் பசுப்பிடிப் போரையுந்
தெளிவி லாவிழி தெய்வங்கொள் வோரையும்
நறிய நின்னடி பற்றிநிற் கின்றவென்
னன்னெஞ் சானது ஞானிக ளாமதித்
தறிஞர் பூசனை செய்யவெண் ணுதுகா
ணழகு மாமயி லூருமெண் கண்ணனே

— ,, 3-31

எட்டெ னுங்குடி வான்மிகி சோலையி
லிராம தேவரு மேர்ப்பரங் குன்றினில்
மட்டி லாமச்ச மாமுனி வேங்கட
மலையிற் கொங்கணர் மாவரங் கத்திலே
சட்டை மாமுனி யுந்தங்கி னூரவட்
டழைக்கு நன்மையெல் லாமவர் சித்தெனக்
கட்டு ரைக்குமெல் லாருந் தலைத்தெய்வக்
கருணை நீத்தவ ரேகந்த சாமியே

— தி.தி 3-32

தில்லை யிற்றிரு மூலர் வயித்தியன்
சேதி மப்புலந் தன்வந்த்ரி யுங்கெடாத்
தொல்லை யாரூர் தனிற்கம லன்சுடர்
சுடரண் ணுமலைக் கண்ணிடைக் காடரும்
வல்லை மேவொரு சேதுவி னந்தியும்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனச்
சொல்லும் யாவரு மைந்தொழி னுயகன்
றுப்பெண் ணுதவ ரேகந்த சாமியே

— ,, 3-33

சதுரர் சூழ்பழ நிப்புலம் போர்கர்மா
தணிகை யிற்கரு வூரரங் கேரளப்
பதிய னந்தன் படுக்கையில் வண்டமிழ்
பாடு கும்ப மகாமுனி வைகைபாய்
மதுரை யிற்சுந்த ரானந்த ராதியோர்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனக்
கதறெல் லாரு மனுதிப் பிரான்செயல்
கருதா வேழைக ளேகந்த சாமியே

—,, 3-34

சருவ சீவரு மீச வுபாசனை
தன்னின் மேம்படு வாரஙன் மேம்பட
அருளு நாயக னுளர சாகவு
மருள்பெ றும்பசு வாட்பட் டிருக்கவும்
மருவு தீர்வையுண் டாமென வோரவோர்
மதியி லாரடி யார்களை யேபெரும்
பொருளெ னச்சொலி நாத்திக ராவரென்
புந்தி மேய புராண விசாகனே

— ,, 3-35

மகத்தெ னச்சொல்விட் சேப மடங்கநின்
மகிமை நாமம் விடாமற் செபிப்பதும்
சுகத்தை மூடிக லாவர ணங்கெடச்
சுத்த மூர்த்தித் தியானம் விடாமலே

அகத்திற் செய்வது மஞ்ஞுமெ னல்லற
வகந்தை விட்டரு ளின்வய நிற்பதும்
இகத்தை நீக்குநர் செய்கையென் றுள்கிடா
ரெம்மெய் கண்டுயர் வாரயி லீசனே

— தி.தி 3-36

கமழ்க டம்பணி பூணறுங் கண்டனே
கரையில் விண்மண்ணு நிற்கும கண்டனே
இமிழ்சி லம்பணி தாங்கிரு காலனே
யெவையுந் தந்துபின் வாங்கொரு காலனே
தமிழ்நெ டுங்கவி பாடுநர் நாதனே
தந்தைக் குங்குரு வானவ நாதனே
அமிழ்த ராசைகொள் பேரின்பக் கட்டியே
யடிய னேனையு மாணலங் கட்டியே

— ,, 3-37

ஆட ராவணி வோனரு ளாளியே
யாறெ ஞநவின் மாதளி யாளியே
பீட ருவறி வாமருள் வாரியே
பீலி மாமயி லேறுப வாரியே
நாட வாவினர் காணுக ணுடியே
நாச மேதுமி லாதவி ணுடியே
சீட ராமவ ரேபல கோடியே
சேரு மாறெனை யேநனி கோடியே

— ,, 3-38

## கலிப்பாவினம்

செய்வினை தீர்த்துன் சேவடி வைத்திடவெம்
தெய்வத் திணிவேலோய் நட்ட மென்பா னடியாயோ
மொய்வினை தீர்த்துன் முத்தடி வைத்திடவெம்
செய்ய திருவேலோய் நட்ட மென்பா னடியாயோ
பொய்வினை தீர்த்துன் பொன்னடி வைத்திடவெம்
துய்ய சுடர்வேலோய் நட்ட மென்பா னடியாயோ

— ,, 3-39

தெளிபத்தி யாம்வலையிற் சிக்கிவயப் படுகுகவேள்
அளிபற்று சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்
வேண்டுவன வீகருணை மேன்கற்ப கக்கரவே
லாண்டவனுர் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்
எம்மையடை வார்க்கென்று மின்னனலி வேதென்ற
அம்முருகன் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்

— ,, 3-40

வாழ்வினை யெனவே மதித்திங் கீட்டைெவையும்
பாழ்பட வுயிரும் பதைக்க வுடனீக்கும்
சூழ்வினை தெரியீ ரோசே யருளுக் குரியாரே

— ,, 3-41

இன்றிருந் தெதிர்நா ளிலதாம் பொருளேமெய்
என்றிருந் துளநா டொலையா தெறும்வேலன்
பொன்றுலங் கடியா மலரே நாடீர் புவியாரே

— தி;தி 3-42

வல்லுறழ் முலையார் மயல்பட் டுழன்றுமுகை
வல்லெனப் பெயர்த்து மதியற் றதினுழைதல்
நல்லுணர் வாமோ நவில்வீர் சேய்வாழ் நகரீரே

— ,, 3-43

தோதகஞ் சிருட்டி தொடங்கி யனுபவித்தும்
போதுமென் றுணராப் புரைசேர் மனமுடையீர்
காதலி லினுநில் லாமே குகனைக் கருதுமினே

— ,, 3-44

கைவரு பொற்பயனே கருதிக் கறையேசால்
பொய்ம்மனு டர்ப்புகழும் பொறியில் புலவீர்காள்
சைவரு ணச்சொருசேய் சரணைப் புகழ்வீரேல்
ஐயுற லற்றவர்கா ணருளும் பொருளுமடைவீரே

— ,, 3-45

வலம்பணு ளுஞ்சான் மலைச்சார் புறைவார்முன்
சிலம்பணுய் நின்றுன் றிருக்கா ணினைநெஞ்சே
சிலம்பணுய் நின்றுன் றிருக்கா ணினையாயேல்
புலம்பணு வாயால் பொச்சாப் புண்ணே ணினைநெஞ்சே

— ,, 3-46

குருகு நிலவு கோடை சூடி
முருக நடன மாடுமே
முருக னடன மாடு மோதங்
கருது மடியர் காணு மாறு கடுகியே

— ,, 3-47

ஊரும் பேரறை நாவிழி மூக்கு முறுகாதும்
சீருங் காயமு நின்னன வென்று தெரியாமே
ஊரும் பேருரு வாதியெ லாநம் முடையென்னு
ஆரும் பேதைய ரோவுணர் வார்நூ லயிலோனே

— ,, 3-48

வீவு ணுதிப்பே மேவு சகத்தாள் வினையீரே
மூவர் முதற்றே வாக விருப்போன் முதுவேதா
யாவு நினைப்பா லீயு முரத்தான் யதிராசா
தூவி மயிற்கோ னேய மிகுத்தோர் சுகமேலே

— ,, 3-49

ஈரைந் தாகிய வங்குலி கூப்பி யீரெழிற்கை
சேர நெஞ்சிலு நெற்றியின் மேலுஞ் செய்வதுபோல்
ஓரைந் தைந்தையுஞ் சேயவன் பாதத் தொட்டிவிடா
வீரம் விஞ்சிட நாடுதிர் மோக்க வேட்கையரே

— ,, 3-50

மட்டி லீர்கரும் பேனழுக் கேறு வார்கதுப்பை
வெட்டி யந்தலை முண்டிதம் பார்த்த மேன்மையைப்போல்
எட்டு நெஞ்செழு மீவ்வுல காசை யேமழித்துப்
பிட்டு ணீசுரன் மைந்தனை நாடிற் பீடுறுமே

— தி.தி 3-51

கூடுந'றுங்கே சங்களி லொன்றுங் கொய்யாமல்
நீடுதல் கண்ட வாறணி மன்றுண் ணின்முடு
பீடுடை நம்பர் நந்தன னின்பம் பெய்மேகம்
நாடுத வந்தா னீளினி னைந்த நன்காமே

— ,, 3-52

நாரண னுன ராமனும் ராம னுடார்வே
பூரண மான வேடனு நீறு பூசிசா
காரண னேயெ னுநினை வேலர் காருனே
ஆரரு ளீதெ னுரரு ளாழி யாடாரே

— ,, 3-53

வான்மதி வளர்செவ் வேணியன் மொய்ம்பா மலையேறி
கூன்மதி யெனுட னீவிளை யாடுங் குணியோவென்
மேன்மதி முகவெம் மானயி லானை விழைவோரே
தேன்மதி யுறுவார் கீழ்நடை மேவார் திகையாரே

— ,, 3-54

சொக்க ரிக்குடி மக்க ளுக்குள துக்கமால்
பொக்கெ னக்கெட வக்கி புக்கெழு மக்கியாய்
நக்க டுக்கைகொ ணக்கர் பக்கந டக்குமா
வுக்கி ரக்குக னுக்கு மிக்கதி ருக்குமோ

— ,, 3-55

ஏசறு சென்னியின் மாமணி மின்முடி யேதாங்கும்
ஆசையொ டிவ்வுல காளினு முண்ணல மாமோசேய்
தேசவிர் பொன்னடி யேமுடி மேலணி தெய்வீக
தாசரு ளங்களி யேகொளும் வாதனை சாராதே

— ,, 3-56

ஒன்றாய் மிகையா யுயிரா யுடலா யுறவாய்
அன்றா யறிவா மொளியாய் வெளியா யருளாய்
நின்றே நிறைதே வொருதே வதுவே நிகழ்சேய்
என்றே யுணர்வா ரணவார் நசைநோ யினையே

— ,, 3-57

கா்ரீ மாலோ டானு வேதா காணுமா
சிரீ மாதே வாமே லோனீ சேயானே
னுரீ காலே பாடே ணேசா னுவோரா
லேரீ தூமா னுவா ரேசா லேகாரே

— ,, 3-58

திருமுரு காமா சிலேபோழ் திறலோய் தெருளோய்
குருமுரு காகோ குகவே டழைநீள் குருகே
ஞெருமுரு காமான் மகளார் வலவா வுரனூர்
செருமுரு காகா வெனவோ துநர்பார் செனியார்

— திருத்தி 3-59

அறுகா லளிமூ சலர்பல தருதரு வார்வளமே
சிறுகா லனம்வாழ் பலகுள முளவெழில் சேர்பொழிலே
உறுகா லனிலா மதுரையி லுறைமுரு கோனஞரே
தெறுகா றருவா னடிநினை மதியினர் சீர்பெறவே

— ,, 3-60

அம்பொ னேதியை யார்திருத் தவரெனக் குனித்தோன்
வெம்பு வஞ்சகர் முப்புர வியன்கெடச் சிரித்தோன்
நம்பு மாமக னாகிய நறுங்கய முகத்தான்
தம்பி யன்புடை யார்நமன் விடுதுயர் தடுப்பார்

— ,, 3-61

தரும மூர்த்தியென் சண்முகன் றுணினைந் தாற்று
கரும யாகமு ளார்க்கிடு புண்ணியங் கரிசில்
பெருமை யாயொரு பிறப்பள வுந்தவ யாகக்
குருமை யார்க்கிட னூறள வும்பலன் கொடுக்கும்

— ,, 3-62

சேய வன்றன தாணினைந் தேசறு செபஞ்செய்
நேய யாகமு ளார்க்கிடு புண்ணிய நிரம்பா
ஆயி ரம்பிறப் பளவுந் தியான வியாகர்க்
கீயு நன்மையொர் பிரமகற் பாந்தமின் பிசைக்கும்

— ,, 3-63

தீனர் நாயக னயவர் பூசைகொள் செவ்வேள்
கான மேதரு தாளச ரோருகக் கடிசால்
ஞான யாகமு ளார்க்கிடு நல்லவை பெரிய
மான மாம்பிர ளயமள வும்பலன் வழங்கும்

— ,, 3-64

கரவயிற் பெருமான் றிருவருட் பொலிவினைக் கண்டால்
இரவொடு பகலும் மிரவினிற் பகலிர வுகளும்
பரவிய பகலிற் பகலிர வென்பவு மிவ்வான்
இரவியி னுயர்வா மறிவுள ததையுயி ரேயும்

— ,, 3-65

முன்பி னீட்டிய குற்றமெ லாமற முன்னியே
அன்பர் மாட்டரு ளேவளர்க் கின்றகண் ணுளநான்
இன்பம் வேட்டுனே யேபுகழ் வேலையி லிங்குளேன்
துன்ப மோட்டுபு கோடிக டம்பணி சூடியே

— ,, 3-66

வானை நோக்கும ரங்களு லாத்தரு வானரம்
போனை வேனுனை யேபிடி யேனிருள் போழுநீ
பூனை போலெனை யேகொடு போகுதி பூம்புன
மானை நேடிவ னம்புகு நெட்டயின் மள்ளனே

— தி.தி 3-67

கோவென்ற படைமீளி யனைவோரு நனிநாடு கோவாளிதான்
நோவென்ற சிகியாகி வருகால மதிலேறி நொள்காதகூ
ரேவென்ற திதிபால ருயர்வாழ்வு தரல்போல வேகூழுநான்
காவென்ற பொழுதேகை தருவாயொர் விபுவாயகாங்கேயனே

— ,, 3-68

நீடை கொண்டவிரு மிஞ்சிகொ ளிலஞ்சி நிலைவாழ்
கோடை மஞ்சரிவி ரும்புள மலிந்த குமரா
பாடை வந்திடுமு னங்கரு துகின்ற படியே.
பீடை வென்றமல வின்பது பிறங்க நினையே

— ,, 3-69

மாதமொரு பூப்பூத்து வருடமொரு காய்காய்க்கும் வல்லி
ஏதுமிடை யூறின்றிப் படருமர மாயிருந்த வென்னை
வாதனையிஃ தாமெனவென் மனமிருந்து வேறுசெய்தவாறு
கோதிருளும் வேறுபட வருள்புரிதி வேல்பிடித்த கோவே

— ,, 3-70

எண்ணிறந்த விவகாரத் துள்ளுழன்று நாளுநின்ற வெனைநீ
நண்ணிவந்து நறுமதிதான் சொல்லியதண் ணளிவழியி
னடப்பான்
பெண்ணலமும் பொன்னலமு மண்ணலமுநான்விடுத்த பிறகும்
உண்ணலநன் கெய்தாத தென்கொனுதி வேற்பெரும வுரையே

— ,, 3-71

மணிகொள் பொற்பணிக ளேபூண் மாதா மகனும் வீ
யணிகொள் மற்புயவி சாகா நாகா வருளாளா
திணிகொள் வஜ்ரவயி லீசா தேசா சிறியேனோர்
துணிகொள் சிற்ககன மாநீ யாமா துயிலீயே

— ,, 3-72

பந்தப்பா டஞ்சிச்சூர் பரிவுறு பெரியவர் பண்டத்தா
நந்தப்பா நெஞ்சுக்கோர் நலமரு ளிறையென நண்புற்றோர்
எந்தப்பா டுஞ்செற்று ளிதவரு ளறுமுக வென்கட்டார்
சந்தப்பா கொண்டப்பா சமநிலை யெனைநனி தம்பித்தாள்

— ,, 3-73

பூவாய விந்த வுலகத்து வாழ்வைய பொய்யெனத்தம்
நாவார வோதிமெய்ஞ் ஞானோப தேச நவில்கவென்பார்
தாவாய வில்லத் தவாவினை விட்டே தழூவுமென்னிற்
யோவார் மறுமொழி சொல்லாது வீணர்தண் போரியனே

— ,, 3-74

ஓயாத நாட்டத்தி னின்றே யடையரு ளுண்மைநிலைக்
கேயாசை வைப்பவர்க் கிங்கொரு பாடு மியைவதின்றென்
ருயாத பேர்க்கந்த வுண்மைதா னெவ்வா றறிவிலுறுஞ்
சேயாகி யெங்கு நிறைவா யிருக்கின்ற சின்மயனே

— தி;தி 3-75

கண்ணன் சனகன் முதலாய பேர்கண்மெய்க் கண்ணுளராய்
எண்ணில் வினைசெய்ய வில்லைகொ ளுஞ்செயி
னென்னையென்பர்
அன்னிய சன்மத்திற் ருனே மருளற்ற வாற்றலவர்
நண்ணின ரென்றறி யாதார் திருவள்ளி நாய கனே

— ,,3-76

செத்தறச் சுத்தி புரிந்தநற் செம்பினைச்சேற்றினடு
வைத்தெடுத் தானுங் களிம்பூ றிடாதந்த வாறிச்சையின்
வித்தவித் தானு வருட்கட லாமுன் விபுத்துவவான்
சித்தணைந் தாற்பின்பு செய்வினை பற்ருது சேயவனே

— ,, 3-77

இப்பா ரெமக்குள்ள வேலையுங் காலமு மெண்ணங்களும்
தப்பாம லின்னுஞ் சிலநாளிற் றீருமச் சந்தர்ப்பமா
துப்பாய முத்தியை நாடுவே மென்பார் துணிபுநரி
உப்பாழி வற்றுமென் றுள்வேலை காத்தலொக் குங்குகனே

— ,, 3-78

நெஞ்சு முடம்பு மசைவறச் செய்துன்னு நிட்டையது
நெஞ்சு முடம்புந் தளராத வர்க்கே நிலைத்தலின்றேல்
நெஞ்சு முடம்புந் தளர்ந்தவர்க் கோவுண் ணிரம்புமென்றன்
நெஞ்சு முடம்பும் பணிந்துய்ய வாக்கயி னின்மலனே

— ,, 3-79

நீக்க மிலாநெடுந் தூக்கமுண் மூர்ச்சையி னின்றலென
நாக்கை வலத்தொளை யேற்றிநிற் கின்றதைநன்றென்பர்கொல்
போக்கும் வரவுமி லாச்சிவ யோகப் பொருத்தமுளோர்
ஊக்க முடையர்துஞ் சாதுன்னு நெட்டயி லுத்தமனே

— ,, 3-80

வாளா ரநாதி மயிலேறுஞ் சுந்தர மேயமகா
வேளா மயிலோய் விமலர்கண் வந்த சமாதியர் கோ
வாளா யெனுநாவுள் ளார்நா ருந்தெங்க ளாரியற்சே
யாளாகி வாழ்வது மாணப் பெரிதெனு மாகமமே

— ,, 3-81

அறிவான சாயுச்சி யந்தா வலதரு ளாற்பசுமை
செறிவான புன்புழு வைச்செங் குளவி செயுமுறை போற்
பொறிவான நாடர் பிரானீ யெனையும் புரிதிவண்மை
முறிவான நெஞ்ச ரறியாத வாறு முகசூருவே

— ,, 3-82

பிணிமுகங் கோடிகண் டாசைகொள் பேரெழிற் பீலியுடைப்
பிணிமுகங் காதலித் தேறி யுலாத்தரு பேழயிலோய்
பிணிமுகங் காணென் கலக்கற வென்னைப் பிறங்கருளிற்
பிணிமுகங் காட்டியுன் சேவடிச் சீர்வைத்துப் பேணுதியே

— தி.தி 3-83

வளைக்கை யெனக்கு மிலையுமை மைந்தவிம் மாநிலத்தோம்
வளைக்கை யெனக்கு மரபத ஞன்மல மாய்த்தருள்கு
வளைக்கை யெனக்கு யிலவுள்ள கட்குற மாதணங்கே
வளைக்கை யெனக்கு நலமென்று நாடொரு வாலியனே

— ,, 3-84

தகையயி லானை நிரஞ்சன ஞானத் தனிக்கடியைத்
தகையயி லானை நனிகாத்த கண்ணன் சதாநினைதீ
தகையயி லானை யெயிற்றத்த ஞரிளை ஞன்றணையார்
தகையயி லானை யிறைஞ்சடி யார்கட் சழக்கிலையே

— ,, 3-85

அலைவளர் சாகர மேவளை காசினி யாசையரோ
கலைவளர் மாமதி போலெழின் மாமயல் காதருடான்
இலைவளர் வேலிறை யேயுறு மோநவி லேழைமையேன்
முலைவளர் கோதையர் மோகமு ருதுயு மாறருளே

— ,, 3-86

சொல்லுய ராரியன் சுருதி போற்சொலும்
நல்லுரை யேற்றவர் நடுவிற் சோர்வுரு
மல்லுயர் சிந்தையின் மதித்த வான்பொருள்
வில்லுயர் நின்னடி விளங்கொள் வேலனே

— ,, 3-87

பணமலி பாம்புகொள் பரற்கி யாணரென்
மணமலி சேயென வருமெஃ கீசுரா
நிணமலி யாக்கையி னிரம்பிக் கோஒதுன்
குணமலி யாவியென் குறையை நூறியாள்

— ,, 3-88

நூல்வழி தேறிய நுண்ணுணர் வோங்குபு
மால்வழி யேபிற வென்றறி மாண்பினர்
தோல்வழி நின்னடி சூழுவர் சூழ்கலர்
நீல்வழி கூடுவர் நீளயி லரசே

— ,, 3-89

ஒருசிவ னெழுதிய வுயர்திரு முறையுநல்
இருவரொ டொருவர்செய் யிசைமலி முறைகளும்
நிருமல வருணைய னிறைபுகழ் களுமுணர்
அருளுடை யவரயி லரையவு னடியர்

— ,, 3-90

குககுக குககுக குருபர வெனநனி
புகனல முளருமு னணியடி புகழுளி
மிகவுறு நருமர ஹரமனு விரதரு
மகமுனு நருமரு ளமுதுற லுறுதி

— தி.தி 3-91

பொய்த்திடு மலகைகள் பொய்ப்பத நினைபவர்
பொய்க்கதி யுறுவது பொய்ப்பில யவர்வழி
பொய்த்திட வெனைவளை பொய்ச்சட முளவரை
பொய்ப்படர் பொடிவளர் பொற்பயி லரசே

— ,, 3-92

மாயவ ளக்கர் மயலற வேசொலு
பாயமு றைச்செந் நெறியுறு பாவகர்
காயம தைப்போ டளவுன கான்மலர்
நேயமி ருப்பர் நெடிலயி லரசே

— ,, 3-93

மேவு வாருனை வேண்டுநர் மேன்கதி
மேவு வாருனை வேண்டலர் வீழ்கதி
மேவு வாரக மேயொளிர் மேனுதி
மேவு வாரயில் வேந்தனு மீசனே

— ,, 3-94

கோமி னையன்வி லென்பதுங் குன்றமே
மாமன் வன்குடை யென்பதுங் குன்றமே
நீமன் னுந்தென் னிகேதனங் குன்றமே
பூமி யின்னயில் போழ்ந்ததுங் குன்றமே

— ,, 3-95

அழகு டம்பு ளமேத்திய மாருநேர்
பழவு யிர்க்கணு மாசு படர்ந்ததான்
மழவ ளுய்வரு வானவ னேயது
கழலு மாறு கடைக்கணித் தாளெனை

— ,, 3-96

செய்யு நற்கடன் தீர்ந்தவெச் செவ்வியும்
மெய்யும் பொய்யு மிழற்றுரை யாய்ந்துமெய்
உய்யு மாறுனை யுன்னு மெனைக்கொளாய்
கையுங் காலுமில் கந்த சுவாமியே

— ,, 3-97

வெண்பொன் போற்பல் விளங்கந்த ணுளர்சூழ்
பொன்கொண் மன்றுட் புராணன் குமாரனே
பைங்கண் மாகணம் பாடிப் பழிச்சுநின்
செங்க ழற்செல்வ மென்றெனைச் சேருமோ

— ,, 3-98

சீஇர் விஞ்சிய தேவர்கள் வாழ்விசும்
பூஉர் பம்பெழி லோகையின் மேனவில்
ஓஓர் சின்மய வோகைநல் காய்குகப்
பேஎர் கொண்ட பிராவென்னு மெந்தையே

— தி: தி 3-99

திருவே லவனரு டேடார் வினெரி
எரியஞ் செனையினி யேயெம் மருளே
அருளே யெனுமடி யார்தே நினைதி
அருளே யெனுமடி யார்தே நினைதி

— ,, 3-100

நனிசூழ் நனிசூழ் நனிசூழ் நனிசூழ்
தனிவே லவனர் சரண்மா மலரே
தொனிபோ யிருளாய் வளையோர் துகள்போய்
இனிதா நலமே யெழுமா றுளமே

— ,, 3-101

நீண்ட வைச்சரி யந்திரு வீரம்
மனவை ராக்கிய நற்புகழ் ஞானம்
ஆறு முள்ளப கேசனி ளங்கோ
விசாக னென்றறி வார்தெளி வுள்ளார்

— ,, 3-102

வாகை வாரணத் தோகையற் பாடும்
ஓகை யோங்கிய பின்பவ னன்பின்
ஈகை யீடெனக் குற்றன நீருந்
தோகை தோன்றவற் பாடுதி ரன்பீர்

— ,, 3-103

அருண்மு தற்பொரு ளறுமுகற் பாடு
திருவி ழந்துமை திமிர்நுதன் மாந்தர்
உருவி யந்தணி யுயர்கவி பாடின்
வருவ தென்சொலும் வளர்புவி யீரே

— ,, 3-104

பகவா னறுமுக னடிபுகழ் பரிவேம்
உகமே வெவரையும் வியனென வுனியே
பகரே மொருகவி யெனுநிலை படர்வோர்
துகடீ ரருணிலை யடைவது துணிபே

— ,, 3-105

கங்கைப கஞ்சசி கண்டம ணிந்தோன்
பங்குறு பண்புமை பங்கயக் கைம்மே
வங்கிள ரள்ளயி லத்தனைப் பாடல்
சங்கையில் சத்தனை சற்சனர் மாட்டே

— ,, 3-106

தேடரு மங்குக தேவனைத் தேடிப்
பாடணி யிற்றன பாடுறு பாங்கும்
ஆடருள் வல்லமை யாரழ காதி
கூடிட வாற்றுவர் கூர்மதி கூர்ந்தோர்

— தி.தி 3-107

தெள்ளிய தென்கவி வாணரைத் தெவ்வாற்
கள்ளமில் கல்வியி லார்நனி கண்ணூர்
எள்ளவ ரெவ்வுரை யுங்கெட வெந்தாய்
வள்ளிமன் வண்பதம் பாடுவர் வல்லார்

— ,, 3-108

மலர்ந்தநன் மருமலி மலரணை மறுவில்
அலங்கலென் னணிமன மறுமிழி வடையும்
உலம்பழ குரையணி யுலர்விழி வுறலின்
றிலங்கிடு மிதையயி லிறைக்கிட லியைபே

— ,, 3-109

மாதா வேனை மாகா மாவேகா
வேதா தூயா வீமா மாமாயா
நாதா வேலா ஞானே சாநீதா
போதா நாகா போகா நீயேகா

— ,, 3-110

தாவா னேநா னேநீ தானுமா
தூவே பூவே தோலா வேலோனே
கோவே வீடீ கோனே வானேனே
தேவே வாவே சேயே மாதாயே

— ,, 3-111

நம்பா வெம்பா நல்லா ருள்கயிலா
வம்பா வென்பார் கொம்பா மன்முகையார்
அம்பார் கண்ணு னையா ரம்பிகை சேய்
அம்பா தம்பே னும்பே றண்ணுவரே

— ,, 3-112

தீயார் தேடா வாயா வாயா
வீயா வாயா வில்லா காயா
தூயா சேயா தூயா டாயா
தாயா வாவா தாளீ தற்கே

— ,, 3-113

பெரிதுஞ் சிறிதும் பேசும் படியிழி
தெருளுந் தனுளார் பேதுஞ் சிகுநனி
விரிவிண் குகனை மெய்யுட் குவிவுடன்
ஒருகா லிருகான் முக்கா லுனினே

— ,, 3-114

மாறு வருள்வேன் மனன்மெய் யடியவர்
காறே கதையா ரமிதஞ் சமமற
ஈறே முதலே பறையா ரிடையிடை
ஏறு ரிழியார் கருதார் மறவார்

— தி.தி 3-115

ஆஅன் பாஅலு மஃகல்கொள் ளாத
தேஎன் பாகுநெய் திண்ணகண் டாசில்
வாஅன் கன்னலும் பின்போக மரூஉ
நாஅன் பேஎணு நன்செவ் வேள்கேள்

— ,, 3-116

தூஉ மாமணி துன்றெஉர் தாஅர்
பூஉ ணீஇணல் வேலண்ணல் பூஉங்
காஅ ஞஅடல் காஅண்ட லோஓங்
கேஎ ரேறுந ரெந்தைக ளாவார்

— ,, 3-117

தாமேவு போத மேதேவர் தாழ்வில்
பூமாலை சூடு போர்வேலன் மீது
பாமாலை பாடி யேபேணு தாசர்
நாமூட ராகி டோநாளு நாடு

— ,, 3-118

ஏரார் பெண்கா ளெம்பெரு மானைக்
கூடா வாழ்வென் வாழ்வருள் கூராய்
ஆனு வன்பா லாள்குக வென்றோர்
வாதே செய்துய் வேபெற வாரீர்

— ,, 3-119

மச்சறு தகைசான் மங்கைய ரேகை
கொட்டியுண் மகிழ்வே கொண்டொரு ஞான
முத்தியை யருள்செய் மொய்ம்பணி பாட
இக்கணம் வருவீ ரின்பரி வோடு

— ,, 3-120

எம்பெருமா னுஞ்செவ்வே ளியற்பே ரோதிக்
கண்டவொலி கலகலக்கக் கனிந்து பாடிச்
சுந்தரமா நடிப்பதற்குத் தொடர்ந்து வாரீர்
மஞ்சொழியா விளங்கன்னி மாரே யன்றே

— ,, 3-121

மெய்யுரை யோர்சூழு மேதைவி சாகன்
நல்லரு ளேவாழி நாளுமெ ழுவாட்
கொள்ளடி யேபாடி நாடுதிர் கோல
மவ்வலை நேர்மூரன் மாமுகை யீரே

— ,, 3-122

தொண்டக மேநாளுந் தொனிதரு சீறூர்
அண்டக னீனுக வணிபுற வுள்ளீர்
முண்டக னூர்பேணு முருகன பாதங்
கண்டக மேமாவின் களிகொள வாரீர்

— தி. தி 3-123

செம்மை நாய்கழு கோமை சேர்சுரமார்
நன்மை மானுடர் காளெ ளுனறவே
மெய்மை யோதிய வேல னூர்பெயரே
உண்மை யாநித மோதி வாழ்மினரோ

— ,, 3-124

மாமல் குங்குளிர் குல்லை வச்சிகளீ
பூமல் கும்பொழின் முல்லை யச்சுதனூர்
தூமல் குந்துதி சொல்லு மற்புடையீர்
சேய்மல் கன்பதர் செல்லு மிக்குயர்வீர்

— ,, 3-125

ஏர்க்கு ழாமுழு மேசி லாமருத
மாக்க ளேபெரு வான மாமுருக
ஆக்கை போமுன மாள வாவெனவொர்
நோக்க மாகுதிர் நூறு வீர்துயரை

— ,, 3-126

ஓவ வில்லலை வீசு மோர்கடனீர்
மேவு முள்ளிக டாழை வீறிடையீர்
கோல்வி டல்லக வூழர் கோள்கடிசேய்
தாவி னல்லடி தாழ்வி ரேலுயர்வீர்

— ,, 3-127

போதல் பின்னுறல் கூறு புந்தியர்நூல்
ஓதல் பன்னுத லோடு ளன்புடையார்
ஈத லெண்ணுவ ரேதில் கந்தனையே
தாழ்த றண்ணல மாகு மென்றறிவார்

— ,, 3-128

காதன் மல்குயி ரென்ற காரிகைதான்
ஏர்கொ ளுள்ளிட மென்ற பூவணைமேல்
ஆத வுள்ளமெ னங்கை யாலணையா
ஏத மில்லயி லெந்தை மேவுவளே

— ,, 3-129

சூரி யன்றெழு தூய வந்தணரே
ஏரி லங்கயி லீச னங்குமுளான்
நாளுமென்றவ னூடு நண்புறினே
பீளு டம்படை பீடை வெந்திடுமே

— ,, 3-130

கானி லங்கடிதுன்ன வேகமழ்தார்
கோடி தந்தெழில் வண்மை கூர்செடிகாள்
ஆசி னுஞ்சும மண்ணல் சேயுருவே
சாரி னுஞ்சிறு சன்ம மோசனமாம்

— தி. தி 3-131

கானூர் பக்கி களேயறி வார்பெரியோர்
கோனு யிட்டர் குழாமுட னேவருசேய்க்
கானு வன்பி னருஞ்சிறை வீசுமினே
ஊனு ரங்க முருநல மேவிடுவீர்

— ,, 3-132

காவாழ் கிள்ளை களேமயில் காளடியார்
கோவா மெந்தை குகேசன் சீரெழிலே
பாவா மாறு பகர்ந்தினி தாடுமினே
தூவா ரோகை சுரந்திடு நும்மகமே

— ,, 3-133

நீற்கண்டன ருமக னுய்வரு நீளுயிரார்
நீற்கண்டற வேபுரி நேரயி லாள்கரவேள்
வாற்கெண்டைகண் மால்கொளு மேர்கெழு மான்மகள்கோ
வாற்கெண்டைகள் பாய்புய மாதிரம் வான்வரையே

— ,, 3-134

செருநர் காதுகுக தேவை வேலொடு
திருவு லாமிதய நாடு சீரியர்
தெருள ராயிதய தேசு கூடுவர்
சிரம மேதுமடை யாது தீவிரம்

— ,, 3-135

ஆசி றம்முடலே லிங்க மாநினே
நேச மோடுயிரி னின்றவ் வாறதில்
நாச மில்குகனே நாட்டு வோருயர்
தேசி லங்குசிவ லிங்க மாகுவர்

— ,, 3-136

தோலார் திருலீ லேகளேச் சொலுமுந்தை
நூலே யறியா நொசிவுள் ளவர்முன்னோர்
காலே தறிவார் கதியென் னடைவாரேர்
வேலா விமலா விபுவா யவிர்சோதீ

— ,, 3-137

குளவம் பகமா றுளவெங் குருநாதா
அளவில் கலேயே தமிலா தறிவோராய்க்
களமில் களனே பெறினுங் கவிநாதர்
மிளிருன் கழலேப் புகழ்நூல் விழையாரோ

— ,, 3-138

செல்வப் பொருளோர் செயுநல் வினைபோலே
கல்விப் பொருளோர் கமழுன் கழன்மேதை
சொல்வித் தையிலே யுயர்வார் துகடீர்வார்
நல்வித் தகவே லிறைமா நடையானே

— தி.தி 3-139

வீடு வெறுக்கா தொருசெவ் வேள்பெயரிற்
பாடு திருப்பா வுயர்வே பாடதினும்
வீடு வெறுத்தே வெளிநின் றோரருளாற்
பாடு திருப்பா வுயர்வே பாடகரே

— ,, 3-140

முந்தை நோன்மையி னுனன் முத்தமிழ்
வந்து ளார்குகன் வாழ்த்தி யின்னருட்
சிந்து மூழ்கிவி டாத சேர்க்கையிற்
சொந்த மாயுறு வார்சு வாமியை

— ,, 3-141

எனக்கு நற்றமி ழீந்த சேயருள்
நினைக்கு நெஞ்சுடை யோய்தள் ளாடிடின்
தனக்கி லாபமெய் தாது தாழ்வெளி
மனக்கு மீனம தாமம் மானசம்

— ,, 3-142

தேனுறழ் முத்தமிழ் விரகு சிறந்துளவுன்
மீனுறழ் சித்திர ஞெகிழி மிடைந்தசரண்
பானினை வுற்றவர் பயில்கலை விஞ்சையராய்
மேனிலை பற்றுவர் விரைசெய் கடம்பணியோய்

— ,, 3-143

சேடை கொண்டதமிழ் செவ்விய தேவ
பாடை யென்றறவர் பன்னுவர் தேமார்
கோடை யங்குகனை யேயிது கொண்டு
பாடை யிங்கிதம ருமதர் பண்ணும்

— ,, 3-144

மங்கலமுத வீரைந் தங்கமுமுள மாணுர்
இங்கிதகவி மாலை யேசினின்முடி வேய்வோர்
தங்கமினுட லோடு சங்கமொருவி யந்தந்
துங்கவமுது சேர்வர் சுந்தரமுரு கோனே

— ,, 3-145

தீதறுசுக போதா சேடகடக கோகா
சாதறெறுகு கேசா சாடுதவறு சாடு
சூதறுபகை தீதீ சோதிபதிப கேசா
கோதறுகடி தாதா கோடிபடிக பாதா

— ,, 3-146

முன்மைமனுமுன் ஞான முன்னுமனனை நண்ணு
நன்மைநினைநன் மோன நண்ணினநன நண்ணு
மென்மைமுனிமன் னேம னெண்ணமெனைமு ணுமே
மென்மைமணிமின் மஞ்ஞை மின்னுமினிமை மன்னே
— தி.தி 3-147

வையவயவு லாவு வாலிலிழிவர் வாயால்
வையவளவி லாரி லேவிழைவரை வாரி
வெய்யவழலி லீயோர் வேலையுரிய ராவோர்
வெய்யவலலை யேவில் வேலவவளி யாயே
— ,, 3-148

வம்புமலர் முடிமுருகன் மதியுடையா ரெவரும்
பம்புமளி யால்விரும்பப் படுபொருளா யிடலால்
நம்பனெனும் பெயருமணை வானெனுநன் னடையர்
கும்புபடர் குகவெனையுங் கொளவருளி னினையே
— ,, 3-149

கரியபிரான் மருகனெனக் கனகமயில் வருவோன்
பிரியமுளார் மனம்போலப் பேருதவி செயலாற்
பெரியபிரா னெனும்பெயரும் பெறுவனெனு வறியோர்க்
குரியபரா பரவெனையு முவகையொடு நினையே
— ,, 3-150

வச்சிரத்தோ டயில்பிடிக்கு மருமரைக்கை மழவன்
எச்சகப்பே ரழியினுந்தா னழிவடையா வெழிலால்
அச்சுதப்பே ருறுவனெனு வறியறிஞர் மனமே
வுச்சிதப்பா வகியெனையு முவகையொடு நினையே
— ,, 3-151

எண்ணரிய குகபரம்வின் ணென்னுமறி வுடனும்
மண்ணுலக கிரியையொடு மன்னிமிளிர் வதனல்
விண்ணுமணு மதுவயவென் றேயறியும் விறலோர்
நண்ணுநடை வருகுமர நம்பெனையு நினையே
— ,, 3-152

பூமணமே புனன்மணமே பொங்களிமா மணமே
காமணமே கனிமணமே கம்மெனவே கமழு
மீமருவீ கமலைவள மேயவொரு தளியுய்
சேமகுகா வுவகைநெய்தை செய்யவெற்கு நினையே
— ,, 3-153

மூன்றெழுத்து மெம்பெருமான் முருகிருக்கை முதலிற்
றேன்றெழுத்து மீற்றெழுத்துந் துரைமுருகன் கரணம்
ஊன்றெழுத்து ளிடைகடைதா மோங்குமர னிலையங்
கான்றிளைக்குங் கோதைசொல்லிற் கமலைகலை மலையே
— ,, 3-154

கன்மநெறி காய்ந்தவர்கள் போனனிக தைத்தே
தன்மநெறி காய்ந்துகறை யண்முவினை தன்னைக்
கொன்மனசி லெள்ளளவு நீக்குமதி கொள்ளார்
சன்மமென வாகுவர்சொல் சண்முகபி ரானே

— தி.தி 3-155

சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே

— ,, 3-156

பொய்ந்நூல்வழி யொழித்துக்குரு புரக்குந்திற முரைக்கும்
மெய்ந்நூல்வழி பிடித்துத்தவ மிகுக்கும்பொறி யடக்கர்
செய்ந்நூல்வழி சிறக்கக்களி திளைத்தின்பமு தளிக்கும்
மொய்ந்நூல்புக ழயிற்கைக்குக முருக்கென்றுயர் முருக்கு

— ,, 3-157

எயிலேறிய புலியாமிதி லெளியேன்மட முடைமா
பயிலேறிய முகையார்தரு பயனுடுத லறிவாம்
வெயிலேறிய பெரியார்நடை விடலேவிழை யினுமே
மயிலேறிய முருகாவெனை மறவேலெனை மறவேல்

— ,, 3-158

புலைமாதருள் கிடுமாறவர் புணர்மாமறை யவரும்
முலைமாதருண் மறையோர்மகண் முலைபுல்லிய கலரும்
அலைமாதருள் கெவருந்திரு வமுதம்பெற விலையோ
மலைமாதருள் குமராவெனை மறவேலெனை மறவேல்

— ,, 3-159

விதிமீறிய பெயரும்புலை மிசையுந்தவ றுளரும்
பதிமீறிய பெயரும்பல பலகோதுசெய் தவரும்
திதிமீறிய கதிமேவினர் சிறியேனவை யுறினும்
மதிமீறிய குகனேயெனை மறவேலெனை மறவேல்

— ,, 3-160

ஓரைந்தையும் வென்றோர்நவி லுரையின்படி யேயிய்
ஈரைந்துகொ டேயுன்னடி யிணையேதொழு மெவரும்
ஊரைந்தினு முயர்திய்யொரு மூன்றெய்துவ ரேநார்
வாரைந்தொழின் முருகாவெனை மறவேலெனை மறவேல்

— ,, 3-161

இறைமறைமுடி வெனுமுறைகளி லிடைவருகவி படனம்
முறையொடுபணி யொருபுனிதமு முயலுநியம மிலராய்
நிறைபொருணமை யலதிலையென நினதடிமலர் பரவாக்
கறையருறுவ தவலமெனது கறைதெறுகர வயிலோய்

— ,, 3-162

மருணேவுறமெய் கருதுமறிஞர் மனமுண்டன மிடுகுருபர
கருணேயிறைவர் புதல்வபெரிய கலேஞரினிது புகழறுமுக
அருணேவளரு மருணகிரியி னமலபரம சரவணபவ
இருணேவுறவு னடியைநினேயெ னிடர்தொலேவுற வருடியருடி
— தி.தி 3-163

## வஞ்சிப்பா

தொல்காப்பியம், பிற பாக்களுக்கு அளிக்கும் முதன்மையை வஞ்சிக்கு அளிக்கவில்லேபோல் தெரிகிறது.

சீர்பற்றிக் கூறும்போது 'வஞ்சியுரிச்சீர்' எனும் வகையை வஞ்சிப்பாவுக்கே உரியதாகக் காப்பியம் வகுக்கும் (20, 21). ஆயின் வஞ்சிப்பாவின்கண் பிறசீரும் மயங்கலாம் என்ற கருத்தும் (22) அமைகின்றது. பிறசீர் விரவும்போது நேரீற்றியற்சீர் வஞ்சியின் ஈற்றில் வருதல் இல்லே (26).

வஞ்சிப்பாவில் வஞ்சிச் சீர் வரும்போது, அச்சீரின் எழுத்தெண்ணிக்கை எத்தனேயாக இருக்கவேண்டும் என்பதும் காப்பியத்தில் நினேக்கப்படுகின்றது. பெருமை ஆறெனவும் (42), சிறுமை மூன்றெனவும் (46) இயம்பப் படுகின்றது.

வஞ்சிப்பாவில் வரும் அடி இருசீராகவும் (45), முச்சீராகவும் (47) அமையும் பாங்கினது. அவ்வடிகளில் வரும் கூன், அசையாக இருக்கும் எனக் காப்பியம் வரையறுக்கும் (48).

வஞ்சிப்பா அடியின் எழுத்து வரையறை சிற்றெல்லே ஆருகவும் பேரெல்லே பன்னிரண்டாகவும் அமையுமெனக் காப்பியத்தைத் துணேக் கொண்டு (66) பேராசிரியர் கூறுகின்ருர்.

'ஆசிரிய நடைத்தே வஞ்சி' என்பதால் அகவலோடு நடையால் ஒத்தமைந்த வஞ்சி, ஈற்று நிலேயிலும் ஆசிரியத்தோடு ஒத்தே அமைகின்றது (71).

வஞ்சிக்குரிய இசை தூங்கல் (84). ஆசிரியத்திற்குரிய அகவல் வஞ்சியில் தூங்கி (செறிந்து) வருவதனுல் இப்பெயராயிற்று போலும்.

வஞ்சிப்பாவின் ஈற்றுநிலேயை யாப்பருங்கலமும் ஆய்கின்றது (90). இது காப்பியத்தின் வழி நின்றதால் அமைந்தது போலும் வஞ்சிப்பா ஆசிரியச் சுரிதகத்தான் முடியும் என்ற கருத்தைப் பிற்கால நூற்களும் இயம்புகின்றன.

வஞ்சியின் வகைகளாகக் குறளடி வஞ்சி, சிந்தடி வஞ்சி எனும் பகுப்புக்களேத் தெளிவாகத் தரும், மு. வீ. அ. சா. வஞ்சியை நான்காம் குலம் எனக் கூறும்.

தன்தளை பாதம் தனிச்சொல் சுரிதகம்
என்று இவை நான்கும் அடுக்கிய தூங்கிசை
வஞ்சி எனப் பெயர் வைக்கப் படுமே

— கா. பா 82

தூங்கல் இசையால் தனிச்சொல் சுரிதகம்
தான்பெறும் அடிதனை தழீஇ வரைவின்றாய்
எஞ்சா வகையது வஞ்சிப் பாவே

— அவி 100

பன்னிய சீர்பயின்று பத்து நிலத்தவாய்
மன்னவனைச் சேர்ந்து வனப் பெய்தி - மன்னுதலால்
நான்காம் பா என்றுரைக்கும் காமநூல் வஞ்சியை
நான்காம் குலமென்றார் நன்கு

— அ. சா 58

தன் சீருள் தூங்கல் கலியடியின் கண்டக்கால்
வஞ்சிக்கு இசையாய் வரும்

— ,, 61

தூங்கல் இசையன வஞ்சி; மற்று அவை
ஆய்ந்த தனிச்சொலோடு அகவலின் இறுமே

— யா. க 90

தனிச்சொல் வந்து
மறைதல்இல் வாரத்தினால் இறும் வஞ்சி, வஞ்சிக்கொடியே

— யா.கா 34:3,4

சிந்தும் குறளும் அடிஎன்பர், வஞ்சிக்குச் சீர் தனிச்சொல்
அந்தம் சுரிதகம் ஆசிரியத்தான் மருவும்

— வீ. சோ 119:1,2

......இசைதூங்கல், அடிகுறள்சிந்
தொடு தனிச்சொல் பெற்று அகவல் இறும் வஞ்சி

— சி. பா-செ 5:3

......அதுவே வஞ்சி யீற்றினுமாம் வெண்பா அகவல் ஈற்றால்
சுரிதகமாம்...

— சி. பா-ஒ 5

—இ. வி 740

யா. க 90 ...

வஞ்சிக்கு ஓசை வழங்கும் தூங்கலே;
தன்சீர் தன்தளை தவிர்த்து பிறபெறும்;
குறளடி சிந்தடி கொண்டு மூவடி
குறையா மூன்றன் மேல் கூறில் பெருகத்
தனிச்சொல்லும் அகவலும் தழுவலோடு இறுமே

— தொ. வி 237

தூங்கல் இசையன வஞ்சி: மற்று அவை
குறளடி சிந்தடி கொடுவரும் எனலே

— மு. வீ-யா. செ 52

இருசீரடி எனைத்தானும் வந்து
தனிச்சொல் பெற்று அகவல் சுரிதகத்தால்
வருவது குறளடிவஞ்சி ஆகும்

— ,, 53

சிந்தடி ஆகத் தனிச்சொல் பெற்றே
அகவல் சுரிதகத்தாலே முடிவது
சிந்தடி வஞ்சியாம் செப்புங்காலே

— ,, 54

தூங்கல் ஏந்திசை பிரிந்திசை அகவல்
ஆகும் என்மனார் அறிந்திசினோரே

— ,, 55

ஒன்றிய வஞ்சித் தளையான் ஒழுகுவது
ஏந்திசைத் தூங்க லெனப்படு மெனலே

— ,, 56

ஒன்றாத வஞ்சித் தளையான் வருவது
பிரிந்திசைத் தூங்கல் எனப்பெயர் பெறுமே

— ,, 57

இவ்இரு தளையும் பிறவும் விரவித்
தொடருவது அகவல் தூங்கலாம் எனலே

— ,, 58

... ... தூங்கல் இசை வஞ்சி
தெளிவுற்ற குறளடி சிந்தடியாகித் தனிச்சொற்
சேர்ந்து சுரிதகங்கள் இறும் ......

— சுவாமி 160

## வஞ்சி இனம்

பிற பாக்களைப் போன்றே வஞ்சிக்கும் மூவினம் உள.

வஞ்சித்தாழிசை, குறளடி நான்கு, ஒரு பொருள் மேல் மும்முறை அடுக்கி வருவதனால் அமைகின்றது.

இவ்வாறு மூன்றாக அடுக்காது, தனியே நான்கு குறளடி வருமாயின் அது வஞ்சித் துறையாம்.

முச்சீரடி நான்கு வருவது வஞ்சிவிருத்தம்.

முச்சீர் நாலடி ஒத்தவை வரினே
வஞ்சி விருத்தம் என்றனர் கொளலே

— கா. பா 83

ஒன்றின் நான்மை உடையதாய்க் குறளடி
வந்தன வஞ்சித் துறை எனலாகும்

— கா. பா 84

குறளடி நான்கு இவை கூடின ஆகி
முறைமையின் அவ்வகை மூன்று இணைந்து ஒன்றி
வருவன வஞ்சித் தாழிசை ஆகும்

— ,, 85

இருசீர் நாலடி மூன்றிணைந்து இறுவது
வஞ்சித் தாழிசை; தனிவரின் துறையே

— அவி 101

குறளடி நான்மையில் கோவை மூன்ருய்
வருவன வஞ்சித் தாழிசை, தனிவரின்
துறை என மொழிப துணிந்திசினேரே

— யா. க 91

சிந்தடி நான்காய் வருவது வஞ்சியது
எஞ்சா விருத்தம் என்மனுர் புலவர்

— ,, 92

குறளடி நான்கு இனமூன்று ஒருதாழிசை; கோதில் வஞ்சித்
துறை ஒருவாது தனிவருமாய் விடின்; சிந்தடி நான்கு
அறைதரு காலே அமுதே விருத்தம் ...

— யா. கா 34:1-3

துன்னும் குறளடி நான்கு வஞ்சித்துறை; சிந்தடி நான்கு
உன்னும் விருத்தம் துறை மூன்று ஒருபொருள் தாழிசையாம்

—வீ. சோ 125: 1.2

... ... ... ... இருசீர்
அறை அடி நான்கு ஒருமூன்று தாழிசை; ஆங்கு அவற்றுஒன்
ரும் துறை; முச்சீரடி நான்காம் வஞ்சி விருத்தம்

— சி. பா-செ 5

குறளடி நான்மையில் கோவை மூன்ருய்
வருவன வஞ்சித் தாழிசை ஆதலும்,
ஆங்கு அவை தனிவரின் அதன்துறை ஆதலும்,
பாங்குஅமை சிந்தடி நான்காய் நடப்பது
வஞ்சி விருத்தம் ஆதலும் மரபே

— இ. வி 741

வஞ்சித்துறை குறளடி நான்கு ஒத்ததே

— தொ. வி 242

வஞ்சித் தாழிசை வரும் குறளடி நான்கு
ஆகித் தான் மூன்ருய் அடுக்கும் ஓர்பொருளே

— ,, 246

விருத்த விகற்பம் விளக்கிய காலே
வஞ்சி சிந்தடி வரும் .. ... ...

— ,, 248:1,2

குறளடி நான்காய் ஒருபொருள்மேல் மூன்று
அடுக்கி வருவது வஞ்சித் தாழிசை

— மு. வீ-யா. செ 59

இருசீரடி நான்காய் வரல் வஞ்சித்
துறையாம் எனப் பெயர் சொல்லப்படுமே

— ,, 60

சிந்தடி நான்காய்ச் செல்வது வஞ்சி
விருத்தம் என்மனார் மெய்யுணர்ந்தோரே

— ,, 61

.........குறளடி நான்கு ஒருமூன்று
உளதுற்ற தாழிசை, அங்கு அவை ஒன்று துறை, சிந்
தொரு நான்கு விருத்தம் வஞ்சியின மூன்றின் சீரே

— சுவாமி 160

சான்றிலக்கிய நூற்கள் மூன்றும் இப் பாவிற்கும் இனங்கட்கும் பாடல்கள் தருகின்றன.

கறைவேல்விழி யிலவிதழிதழ்
நறைநாண்மல ரம்புயமுகம்
புருவஞ்சிலை யுருவம்புய
லுருவம்புரி குழலெனுமது
பொன்னங்கிரி கொங்கைத்துணை
மின்னென்றுண ரிடைகண்டிலன்
எனவாங்குக்
கற்றறி வுடையவென் னிறையினைக் கலந்து
னற்றிரு வுரைவிட நண்பா
சொற்றமிழ் மாறன் றுடரிவண் பொழிலே

— பா.பா 124

வான்றோய்கதி ரடற்றிகிரியை வலனேந்தியு
மீன்றோய்மதி மிளிர்வலம்புரி யிடனேந்தியுங்
கவுத்துவமணி வனமாலிகை கவின் மார்பினிற்
பவித்திரமுறு மலர்மாமகள் பயில்வாழ்வினன்
மகரக்குழை தழைகாதினன் மணிமௌலியன்
சிகரப்பஃ றலைசேர்வட மலைமேலுறை
செல்வனை,
அனவர தமும்வரி யளிசெறி தளையவி
ழினமலர் தூயிறைஞ் சினர்பாற்
கனவிலு முருன்கொடுங் கணிச்சி யோனே

— ,, 125

பைம்பொற்குன்றே பணையிளவனமுலை
யம்புத்துணையே யரிமதருண்கண்
குனிசிலையிரண்டே கொடுநன்புருவம்
புனிமாமதியே பழிதீர்நன்முகங்

கொடியேதளரிடை கொண்மூவேகுழ
லாடரவின்பட மாமேகடிதடங்
காந்தளந்துணைமல ரவயேகையும்
பூந்தளிரன்றே புடைபெயர்மெல்லடி
நண்பா,
படர்புகழ் மாறன் பராங்குசன்
றுடரிவண் பொழிலே தோகைய திடனே

— பா. பா. 126

## வஞ்சிப்பாவினம்

நறைமகிழ் மாற
னுறைநக ராடவர்
மறைமொழி நினைதொறு
நிறைத ளாருமே;
திருமகிழ் மாற
னருணக ராடவ
ரருடலை நினைதொறு
முருகுமென் னிறையே;
பொன்மகிழ் மாற
னன்னக ராடவர்
முன்னுரை நினைதொறு
மென்னிறை யிலவே.

— ,, 127

தண்டமிழ் மாறன்
வண்குரு கூரார்
நண்புற வாரார்
கண்டுயி லாவே

— ,, 128

நீரா நாகமா
தார மாகமே
வார மாகமா
ஞர ஞககா.

— ,, 129

சதிதக னடஞடி
திதிதி காண்ஞாஞ
ததிதா கார்கண்ட
கதிகா கிளர்கான

— ,, 130

கொந்தார் திருமகிழ் மார்பினர்
செந்தா மரையடி சேர்பவர்

தந்தா வளமுறை நாரண
ஞந்தா மந்தனே யாள்வரே

— ப.பா 131

வஞ்சிப்பாவிற்கும் இனத்திற்கும் இலக்கியச் சான்றுகள் அமைக்கும் தெளிவு புரிதற்கு எளிமையாக உள்ளது.

வையமீன்ற மறைக்கிழவனும்
கொய்துழாய்மவுலிக் குணக்கொண்டலும்
தருவார்நீழற் றூர்வேந்தனும்
வரன்முறைதாழ்ந்து வாழ்த்திசைப்ப
மைதீருணர்வின் மழமுனிவனும்
பையரவரசும் பணிந்திறைஞ்ச
இமயம்பயந்த விளங்கொடியொடும்
தமனியப்பொதுவிற் றூண்டவம்புரி
தில்லைவாணநின் றிருவடிக்கீழ்ச்
சொல்லுவதொன்றிது சொலக்கேண்மதி
கமலலோசனன் கண்படுக்கும்
அமளியைநின்மருங் காதரித்தனை
செங்கேழ்நறுநுதற் றிருமகளொடும்
அங்கவனுறைதரு மாழிச்சேக்கையைப்
புலிக்கான்முனிவரன் புதல்வனுக்கு
நலத்தகுகருணையி னயந்தளித்தனை, அவன்
அதனுல்
பாயலு மமளியு மின்றி மன்றநின்
வாயிலி னெடுநாள் வைகின னனையொடு
மத்திரு மனையவற் களித்திநின்
மெய்த்தொழி லன்றே வீடுநல்குவதே

— சி. செ. கோ 76

கடித்தாமரைக் கண்ணன்விழிக் கமலந்தர
அடித்தாமரைச் சுடர்ப்பரிதியை யளித்தருளினை - அதனுல்
புதுமலர்ப் பொழிற்றில்லை வாண
உதவியின் வரைத்தோ வடிகள்கைம் மாறே

— ,, 77

## வஞ்சியினம்

பிணியென்று பெயராமே
துணிநின்று தவஞ்செய்வீ
ரணிமன்ற லுமைபாகன்
மணிமன்று பணியீரே
என்னென்று பெயராமே
கன்னின்று தவஞ்செய்வீர்

நன்மன்ற லுமைபாகன்
பொன்மன்று பணியீரே
அரிதென்று பெயராமே
வரைநின்று தவஞ்செய்வீ
ருருமன்ற லுமைபாகன்
றிருமன்று பணியீரே

— சி.செ.கோ 78

பொன்செய் மன்றில்வாழ்
கொன்செய் கோலத்தான்
மின்செய் தாள்தொழார்
என்செய் கிற்பரே

— ,, 79

ஒன்றி னம்பர லோகமே
யொன்றி னம்பர லோகமே
சென்று மேவருந் தில்லையே
சென்று மேவருந் தில்லையே

— ,, 80

## வஞ்சியியல்

இகலம்பர மிலையென்றெவர்
சொலினும்பல துதைபேருல
குளதாலது வுளதென்றறி
உளமாதவ ருளமேவொரு
சிவனேநிறை திருவேலிறை
யவனேயெனை யணைவேளென
நினையென்னையு நினதொள்ளருள்
துனைவன்பொடு தொடராதினி-வாளா
இருக்கவோர் நீதி யேது
திருக்கிளர் குழகா செப்பி யருளே

— தி.தி 4-1

ஈராயிர மேர்நாவனும்
ஓராயிர மோங்குன்பெயர்
மாண்போதிடு வாளுேவவை
நான்பேசவு நண்ணுங்கொலை
ஏனற்பர ணேழைக்கினி
தாநட்புடை யாதீயளி-யருளால்
கயிலைக் கபாடந் திறக்கச்
செயுமற் புதவருட் சிவசே யவனே

— ,, 4-2

அறிவே-ஓங்கேதமி லோர்மகிழ்ச்சி
வீங்காரியர் விரவெனையினி
நீங்காதுற நிறைவிசாக-நாளும்

காலா யுதவங் கதலியும்
வேலா யுதமும் விளங்கெழுந் தருளே

— தி.தி 4-3

மாருநாமெனன் மதமணப்ப
வீருர் நீல மேனிகாட்டி
வருமாணவ வாரணம்போழ்
அருண்மாசிங்க மாமுருகா-வறிவு-நிமிர்வான்
என்மலம் போழ்நா ளெந்நாள்
நின்மல மலர்வாய் நீதிறந் துரையே

— ,, 4-4

மலமேவிய-வுயிர் மசகமுண்டாம்
புலமேவிடு-மெனிற் புன்கொசுகாம்
வலமேவிப-முறின் வயமாவாம்-அதனுல்
அளவினின் னடிநா னடையக்
களவினின் னுளத்தே கருதுவே லோயே

— ,, 4-5

ஆகமொன்றுயி ரருள்விழித்திடி-னரு
ளேகிநின்றிடு மிருள்விழித்திடி-னிரு:
ளாகிநின்றிடு மவிர்கலைப்படி-னது
வாகநின்றிடு மன்றூவெனு-மறை-அதனுல்
களிமுக மண்டலங் காட்டியிவ்
வெளியனைக் கோடி யென்னுளக் குகனே

— ,, 4-6

மான் பயந்தவொர் மகளும்
வானறுங்கய மகளும்
மேன்படுஞ்சும மிலைந்தென்
மேன்மிகுந்தயை மேவா
நீன்மயின்மிசை நின்பாங்·கிலகவே
வருமெழில் கண்டுநான் மகிழுமா
றருளலென் றூநீ யயில்வே லரசே

— ,, 4-7

பொன்விசும்பிறை புதல்விதன்னுளம்
இன்புறும்படி யிணையினன்மணம்
புரிவானெழில் பொலியொருபரங்
கிரிமீதுயர் கிரிமகளொடு
வாலசந்திர மௌலிமாலயன்
கோலவந்தணர் கோவிபுதருங்-குழுமு
திருமணச் சவையிற் சிறந்த தெய்வப்
பொருளெனத் திகழ்ந்த புலவ
கருணையி னென்மலங் கழீஇ யருளே

— ,, 4-8

ஒருபூரண வறிவெனச்செறி யுனேமுதலாந்
திருவாவண மெனுங்கலேவரை திகழுமண்ட
மணிபோலொளி ராயிரத்தொடு மருவிருநான்
கணியார்சிவ லிங்கமாகவு மருண்மகேச
நிலேமாகண பதியயிற்குக னிர்க்குணஞ்சால்
நலவீசுர ணுகவுநறுஞ் சாதாக்கிய
மதிலேயுறு சிவனுகவு மரியசத்தியில்
வதியோர்பொரு ளாகவுமதன் வலமிலங்கைந்
தெனுமாவண மிருக்குமேரு ரூபமாகவும்
நனவாறெனு மாவரணத்தி னல்லநிர்க்குணம்
உடையாமிய முகமூர்த்தியு மோங்குமேழில்
நடராசநிர்க் குணமூர்த்தியு நவையிலெட்டில்
உமைநாதனு மாகவுமுடி போதுமொன்பதில்
இமையோர்புக ழின்பவறிவி லிங்கமாகவும்
எணிமானச பூசைபுரியு மேமாப்பெனே
நணுமோநசை தீர்பெருந்தவர் நாயகநவி-னினேயே
நம்பெனேக் கைவிடே ஞளும்
அம்பிகை மகஞ யவிர்சே யவனே

— தி.தி 4-9

ஒந்தாரகப் பொருளுரைத்ததொவ் வாதெனப்படர்
பூந்தாமரைப் போதனேச்சிறை புகவிடுத்தருள்
ஆஞ்சீருரு வோடிருந்தய ஞர்கிருத்தியஞ்-செய்த
ஐயநின் னருணு டடியேன்
பையுளி லருட்கடல் படியநன் கருளே

— ,, 4-10

வசைகுழுமு மெனேயருட்பெரு வாரியெனிலொ
டிசையிதன்மு னெழுசீர்மொழி திருப்பிமொழித-லெந்நாள்
உனேநினே வோர்க்கு வீடு
நனியெளி திலேயோ ஞாங்க ரரசே

— ,, 4-11

## வஞ்சிப்பாவினம்

ஆறென்று மணிவேணி
வீறென்று விழிவந்தோய்
சேறென்று னடியன்றி
வேறென்று விழையேனே;
கவினென்று கனலாடி
சவியொன்று விழிவந்தோய்
துவரொன்று னடியன்றி
இவனென்று விழையேனே;
நீலொன்று நிகழ்கண்டன்

பாலொன்று விழிவந்தோய்
ஓலொன்று னடியன்றி
மேலொன்று விழையேனே

— தி.தி 4-12

பலதுன்பு பயினேய்கள்
வலிகொண்டு வருமேனும்
கலிவென்ற முருகன்கால்
மலரென்று மறவேனே;
சலமுந்து சமணர்மொய்
மலையஞ்ச வருமேனும்
கலைதந்த குமரன்கால்
மலரென்று மறவேனே;
உலகுந்தி யொழிமாறெல்
மலிசண்டன் வருமேனும்
மலருந்து மயிலன்கால்
மலரென்று மறவேனே

— ,, 4-13

வானோர் வழிபடு
கோனே குமரவுன்
தேனார் திருவடி
தானே தனிநிலை

— ,, 4-14

தீயார் தெறுகுக
மாயா மகியலை
நாயே னலமுற
வீயா விறலருள்

— ,, 4-15

செனித்த சீவருள்
மனத்தின் மாவொளி
மினுக்கும் வேலவ
எனக்கு மீயொளி

— ,, 4-16

ஓர்ப்பா ருண்ணசை
தீர்த்தாள் சேயினைப்
பார்ப்பார் பந்தனம்
ஆர்க்கா தென்றறி

— ,, 4-17

எங்கணு மிலகேண்
அங்கர வயில்வேள்
சங்கமர் தடையை
யுங்கொள வுளதோ

— ,, 4-18

புங்கவர் புகழொரு
மங்கள மழவிறை
எங்கவ ரெண்ணினும்
அங்கெழு தருமறி

— தி.தி 4-19

அள்ளா ரயிலன்
புள்ளார் புரிவன்
கள்ளார் கழலே
உள்ளா ருவகை

— ,, 4-20

எஃக னெஞ்ஞார்பூ
வெஃகல் விடாருள்
அஃக லருர்வீ
டெஃகி யிராரே

— ,, 4-21

பத்தர் குழாமும்
சித்தர் குழாமும்
சத்தி விசாகன்
வித்தை யுளாமே

— ,, 4-22

கருள்கீழ் கதிர்வேல்
முருகே முனுவோர்
ஒருபே ரொளியை
அருளா லறிவார்

— ,, 4-23

பொல்லார் பொல்லான்
நல்லார் நல்லான்
எல்லே மில்லான்
வல்வேல் வல்லான்

— ,, 4-24

மண்ணுண் மன்னன்
விண்ணுள் விண்ணன்
கண்ணுள் கண்ணெண்
கண்ணுள் கண்ணன்

— ,, 4-25

ஒருநினை வுடனேயோ
முருகனை முனிஞனீ
கருதிய களிதானே
மருவுமை மனனேகாண்

— ,, 4-26

நாரணன் ஞானியரன்
காரணர் கான்முளைதான்
ஆரண னுலடியான்
பூரண புங்கவனுல்

— தி.தி 4-27

உரைமன முள்ளடங்கா
மரைமுக மாமுருகன்
உரைமன மூக்கமுறப்
பரவுநர் பால்வருவான்

— ,, 4-28

நிதநனி நினைநல்லார்
இதயமு ளிலகுள்ளான்
நதிசுத னலிவில்லான்
மதமுளர் மனநில்லான்

— ,, 4-29

மணியனையான் மலரொளியோன்
துணியனையான் சுடரயிலோன்
பணியுடையார் பழமலமாப்
பிணியடையார் பெரிதடைவார்

— ,, 4-30

நானிலையே ஞனிலையே
வேன்முருகா வேன்முருகா
மேன்மதியாய் மேன்மதியாய்
மான்மருகா மான்மருகா

— ,, 4-31

மின்செய்யும் விட்டினை
நின்செய்கை நீட்டுமவ்
வின்செய்கை யின்றெனில்
என்செய்வ லீங்கே

— ,, 4-32

அங்கிளிநே ரதர
மங்கையர்மா மயலால்
இங்கலையே னினியாள்
சங்கரர்தாழ் தகையே

— ,, 4-33

காசுபதி கருதேன்
நாசரொடு நடவேன்
நேசமொடு நினையாய்
ஆசில்யி லரசே

— ,, 4-34

பந்தமறு படநீ
வந்ததயை மறவேன்
அந்தநிலே யளியாய்
நந்திபுகழ் நலமே

— தி.தி 4-35

மெய்த்துயர மேவி
எய்க்கவினி யேவேல்
மைக்கணெழில் வள்ளி
கைப்பிடித்த கண்ணே

— ,, 4-36

நாடாண்டிடு நயமும்
காடாண்டிடு கயமும்
ஆடாண்டவ னருள்வேள்
வீடாண்டவர் விழையார்

— ,, 4-37

வேலேந்துசெவ் வேளருள்
நூலேந்தொரு நூனமில்
சீலார்ந்தவிர் தேசினர்க்
காலாந்தகர் காய்வரே

— ,, 4-38

பூமாப்பிழை போம்படியோர்
தூமாப்பிணே தோன்றிடுமேல்
ஏமாப்பில கேண்குகவே
ளாமாப்பிளே யாண்டிடுமே

— ,, 4-39

துன்பு கண்டு தொழுபவர்
அன்ப ரல்ல ரயின்முதால்
அன்பு கண்டு னடிதொழும்
அன்ப ரென்று மன்பரே

— ,, 4-40

எரியிற் புழுவி லாமைபோல்
பரிவுப் பெரியர் பாலிரா
துரிதத் துயர்கள் சூழ்வுறூர்
தெரிதற் கரிய சேயவா

— ,, 4-41

சிறப்பு ளார்கள் செருக்கெலாம்
இறப்பி லாவு னிணைப்பதங்
குறித்து நோற்ற குறிப்பலோ
பொறிச்ச மீக புரத்தனே

— ,, 4-42

பிணிசெய் வாந்தியும் பேதியும்
அணிசெய் நின்பத வார்வமார்
குணியை யென்செயுங் கோதிலாத்
தணிகை தங்கிய சாமியே

— தி.தி 4-43

வாளு டம்பிடி வாழ்க்கைவேள்
தாள்ப ணிந்தவ ரேசதா
கோள்க டிந்தவர் கோணேவாழ்
நாள்வ ளர்ந்தவர் ஞாலமேல்

— ,, 4-44

வால மேயவ மாலவா
வால மாமுனி பாலவா
வால பாவல வேலவா
வால வேமளி மேலவா

— ,, 4-45

மதிமதி மாமா வாவா
திதிதி சேயே யோவா
மதியமு மாசே யேமா
திதிமுரு காமா சேமா

— ,, 4-46

ஒருமாத்திரை யேறுகுகை யொப்பார்
ஒருமாத்திரை யேறிடுசெய் யுன்னின்
ஒருமாத்திரை யேறிடொதி யொப்பார்
ஒருமாத்திரை யேறுதப முண்ணுர்

— ,, 4-47

துட்டர்க்கு முருகிருக்கை துணேவி
தட்டர்க்கும் படையிவற்றின் றலேமுன்
விட்டொவ்வோ ரெழுத்துமரு விடச்சேர்த்
திட்டாற்கை வகையுவகை யெனவாம்

— ,, 4-48

சுருதியொரு மாத்திரைதான் சுருங்கின்
பெருமுருக ஞயுதமாம் பெயர்த்தும்
சுருதியொரு மாத்திரைதான் சுருங்கின்
பெருருமுக ஞயுதமாம் பெயர்த்தும்

— ,, 4-49

உயர்வள்ள ஙகரநொடி யொருவின்
அயிலேய ஙடியிலணி யணியாம்
வியலுள்ள விறைவைநொடி விலகின்
நயமுள்ள வொளிமுருக ஙடமாம்

— ,, 4-50

அருவேல னணியொருபு வனமும்
பொருவேலன் வலவனுமம் புதமும்
ஒருசாரி யையுமிஙன முரைக்கின்
மருநீப வநம்பவநம் வநநம்

— தி.தி 4-51

தாதாமா வேவேமா தாதா
தாதாதா த்தாதா தாதா
மாதாசே யாயாசே தாமா
வேதாயா மீமீயா தாவே

— ,, 4-52

சமரமுதர் நாமமெது சாகா
விமலரணி பூணெதுமின் வில்லென்
குமரகுரு தாசனிறை கோயார்
அமரர்பணி சோதிமுரு கையன்

— ,, 4-53

எழுத்தரி லொழித்திட வேவுரையென்
கழுத்தினில் வளைத்திடு கலனெவனுர்
கொழுத்தவர் திருத்தலை குவிப்பதெவன்
செழிப்புயர் குகற்குள திருத்தணிகை

— ,, 4-54

பந்தக் கடமுறை பண்பீரே
சந்தக் கடமதி தந்தேயாள்
எந்தக் கடவுளு மென்கோள்போழ்
கந்தக் கடவுளை மிஞ்சாதே

— ,, 4-55

நுதியா ருடம்பிடி நூபுரவேள்
வதியோ மணைந்திரு மாய்முனரே
நிதியார் கொளுந்தகை நீளமெலாம்
மதியா ரணைந்தவர் மாநுடரே

— ,, 4-56

வாளரசு குமராவொ மங்குகா
வாளருசு கநிலாவு மங்களா
வாளசுர விபலாக மன்விபூ
வாளரவி தழிமேனி மஞ்சகா

— ,, 4-57

முருகு லாநறிய முருகு
முருகு கோடியென முருகு
முருகு மூசுலக முருகு
முருகு ருதுமன முருகு

— ,, 4-58

வேலா வீயா வீராகோ
கோலா கோதே ருராமா
மாலா வேனே மாமாகா
காலா ளாதே காகாவே

— தி.தி 4-59

பப்புப் புப்பாப் பப்புப்பூப்
பப்பப் புப்ப பாப்பாப்பை
பப்பப் புப்பூப் பாப்பாப்பிப்
பப்புப் பாப்பொப் பொப்பொப்பே

— ,, 4-60

மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே

— ,, 4-61

சூரனே யீரதி சூரா
சாரளி யீவதி தாரா
பாரரி யேறிடு பாலா
சேரளி யேகொடு சீலா

— ,, 4-62

புரச்சகத் ததிகமும் பொருவில்
பரத்திலற் பமுமனம் பதிக்குந்
தரத்தரைத் தணிந்தவ தமரென்
றுரைப்பரென் னுயிர்க்குக னுவப்போர்

— ,, 4-63

முதமறு சகத்திடை முழுதும்
பதிமன முடையரைப் பரமன்
சுதனெனு முருகனைத் தொடர்வோர்
அதமரு ளதமரென் றறைவார்

— ,, 4-64

சகத்திலும் பரத்திலுஞ் சமமாய்
அகத்தினை நிறுத்துந ரணிசால்
இகத்துமத் திமரென வெழிலோம்
முகத்திறை யடியவர் மொழிவார்

— ,, 4-65

கத்தனன் பிணிலதி கமுமா
பத்தனை யுலகிலற் பமுமாஞ்
சித்தரைக் குகனரு டிளைப்போர்
உத்தம ரெனவிதந் துரைப்பார்

— ,, 4-66

சூரிருஞ் சகமனந் தொலைத்தேர்
கூரிறை முழுதுமுள் குநரைச்
சாருமுத் தமருளுத் தமரென்
பாருர வயிலனற் பரிவோர்

— தி.தி 4-67

தனதுரை தருக்கறில் லானுன்
றனுபவ மேகமென் றவலம்
பனுமுயிர் பாழுயி ரதன்சொல்
எனையென செயுமயி லிறையே

— ,, 4-68

கண்ணிணை மூடிடு கான்மா
மண்ணெதிர் மறைவது போலே
உண்ணிலை யுளமறை விலுமென்
றெண்ணுவ தியைபயி லிறையே

— ,, 4-69

இருவிழி யிலர்க்கிரு ளொன்றே
தெரிவது போன்மனஞ் சேரா
அருளுளர்க் கெங்கணு மறிவாத்
தெரியும தேசிவ சேய்நீ

— ,, 4-70

இருபொரு ளொருபொரு ளெனவே
பிரிவினை பேசுந ரெவரும்
அருணிலை யத்துவி தமெனத்
தெரியனு பவமிலர் சேயே

— ,, 4-71

நித்தனு நித்தனை நீங்காச்
சித்தனு மொத்தது தேற்ற
அத்துவி தப்பய னுமென்
றத்தவு னற்பின ரார்வார்

— ,, 4-72

செவ்விய சேயுனை யேசேர்
இவ்வனு பவமில ரிறைநூல்
எவ்வள வுணரினு மீங்கே
அவ்வனு பவமுள ராகார்

— ,, 4-73

எந்நெறி வருநரு மிறையாம்
உன்னிறை வனுபவ முளரேல்
அன்னவ ருரியரஃ தில்லார்
அன்னிய ரெற்கயி லரசே

— ,, 4-74

வினையள வாவுயிர் மேவும்
அனுபவ மும்பல வாமே
உனையுற லவைகளி லுயர்வென்
றனகரெண் ணுவரரு ளயிலோய்

— தி.தி 4-75

மதலை போல்வரு மாவேல்
முதலை நேடொரு மோகர்
முதலை வாய்ச்சியர் மூவாத்
திதலை மார்ப்புடை தேடார்

— ,, 4-76

அளியு மூந்தொடை யான்வேல்
ஒளிர்கை யெந்தையுள் ளூரன்
களிய ணைந்தகண் ணூர்தாம்
விளியி னும்வில காதே

— ,, 4-77

கிரிக்கா னவர்மகள் கிளைத்தோள்
உரித்தோ டணைகுக னுவப்பால்
வரித்தார் மதனைய மரத்தான்
எரித்தாங் கெனதிட ரெரிப்பான்

— ,, 4-78

அருட்பாங் குளியென வரிப்பா
டிருப்போங் கறுமுக னெழிற்சூல்
தரித்தோங் கிறைதிரி தலத்தார்
எரித்தாங் கெனதிட ரெரிப்பான்

— ,, 4-79

இதய நாவுள ரெள்ளா
உதய னுபுர முள்ளான்
மதன மேவெனுண் மல்கா
விதனம் யாவையும் வெல்வான்

— ,, 4-80

துங்க வின்பருட் சோதி
கங்கை யங்கரைக் காசி
தங்கு கந்தனற் சார்பின்
இங்கு மூன்றிடெற் கீயும்

— ,, 4-81

நோவ றுபவ நூறு
தூவ ருளொரு தூவி
மேவு குருகு மீது
கோவொ டுவரு கோவே

— ,, 4-82

பூமேவெ ஞேவே போமா
ரூமாகு வேலோ யோவா
மாமேவு கோபூ மாவா
வாமா சொரூபா வாவா

— தி.தி 4-83

மனங்குறுகின் மகிமை யுண்டே
மனம்பெருகின் மகிமை யின்றே
மனந்துவளின் வதித லின்றே
எனுங்குமர னிசைக ணம்பே

— ,, 4-84

## மருட்பா

வெண்பா ஆசிரியப்பா எனும் இருபாக்களின் மருட்சியால், மயக்கத்தால் அமைந்ததால் இப்பா இப்பெயர் பெற்றது போலும். தூக்குப் பற்றிப் பேசும்போதே தொல். 'மருட்பாவலை இருசா ரல்லது தானிது என்னும் தன்மை இன்றே' என இதன் நிலையைக் குறித்தது. பாநிலையில் காப்பியத்தில் இப்பா பேசப்பட்டிலது: வெண்பாவின் பொருண்மையாகிய கைக்கிளையைப் பற்றிப் பேசுமி டத்தே (119) பெயரின்றி, இதன் வடிவம் மட்டும் குறிக்கப் பட்டது.

பிற்கால இலக்கணங்கள் மருட்பாவுக்கு வடிவும் பொருண்மை யும் வகுத்தன. காப்பியம் (161) தரும் செய்தியே இப்பொருண் மைப்பகுப்புக்கு அடிப்படையாக அமைந்திருக்க வேண்டும். வடிவ நிலை தொல்காப்பியத்தில் தரப்பட்டதை விடத் தெளிவாகவும் விளக்க மாகவும் பிற்காலத்தில் அமைக்கப்படுகின்றது. சுவாமி, மருட் பாவை ஆசிரியவகையாகவே ஆக்கி விட்டமை இங்கு நினைக்கத் தக்கது.

அ.சா, மருட்பாவுக்கு வருணமும், இனமின்மையும் குறிக்கும்:

கைக்கிளை தானே வெண்பா ஆகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே

— தொ-செ 119

வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்

— கா. பா 86

வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர நிகழ்ந்த நெடுங்குலம் போல்
ஆதிசால் பாவும் அரசர் வியன்பாவும்
ஓதியவாறு ஒன்ற மருட்பாவாய் ஓங்கிற்றே

— அ.சா 63

பண்ணும் திறமும்போல் பாவும் இனமுமாம்
வண்ண விகற்ப வகைமையால் - பண்மேல்
திறம் விளரிக்கு இல்லதுபோல் செப்பல் அகவல்
இசைமருட்கும் இல்லை இனம்

— அ.சா 65

பண்பு ஆர் புறநிலை, பாங்குஉடைக் கைக்கிளை, வாயுறை
வாழ்த்து
ஒண்பாச் செவியறிவு என்று இப்பொருள்மிசை, ஊனம் இல்லா
வெண்பா முதல் வந்து அகவல் பின்னாக விளையும் என்றால்,
வண் பால்மொழி மடவாய் மருட்பா என்னும் வையகமே

— யா. கா 35

வெள்ளை
முந்தி இறுதி அகவலது ஆகி முடியும் என்றால்
இந்து நுதன் மடவாய் மருட்பா என்று இயம்புவரே

— வீ.சோ 119

புறநிலை வாயுறை வாழ்த்துச் செவியறி கைக்கிளைகள்
பொருளாய் முன்வெண்பாப் பின்அகவல் மருட்பா

—சி.பா-ஒ 4:4

வழிபடும் தெய்வம் நின் புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தும்
ஒருதலைக் காமம் உற்ற கைக்கிளையும்,
வேம்பும் கடுவும் போல்வன வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழி நனி பயக்கும் என்று
ஓம்படைக் கிளவியின் வாய் உறுத்திடூஉம்
வாயுறை வாழ்த்தும், பொங்குதல் இன்றிப்
புரையோர் நாப்பண் நவிலுதல் கடன் எனச்
செவியறிவு உறுத்தும் செவியறிவுறூஉம்
ஆகிய பொருண்மையின் அமைந்த நால்வகை மேல்
வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா ஆகும்

— இ.வி 749

மருட்பா, வெள்ளை வந்தபின் அகவல்
ஈற்றின் மருளும் இயல்பு உடைத்து என்ப

— தொ.வி 238

புறநிலை கைக்கிளை என்று இப்பொருள்மிசை
வெண்பா முதல்வந்து அகவல் பின்வருவது
மருட்பா எனப் பெயர்வைக்கப் படுமே

— மு.வீ-யா.செ 62

மருட்பாவுக்குப் பாப்பாவினமும் சிதம்பரச் செய்யுட் கோவையுமே இலக்கியம் வகுக்கின்றன. திருவலங்கல் திரட்டின் இறுதிச் செய்யுள் மருட்பா வானமையின் இங்கு இணைக்கப் பெறுகின்றது.

வாய்ந்த மகிழ்மாறன் மால்வரைமான் கண்ணிமைக்கு
மோந்தகழு நீர்மென் முகைவாடும் - பூந்தளிர்க்
கானிலம் படர்தலுங் கண்டன
மானிட மகளே யணங்கலண் மனனே

— பா. பா 132

தேவர் பெருமான் றிருப்பாற் கடல்கடைந்தோன்
மூவ ரெனவாழ் முதல்வ னனைத்துயிர்க்குங்
காவல் புரிவானிற் காக்கவே யாவர்க்குந்
தண்ணளி புரிமகிழ் மாஅ றதியரி
ஞெண்ணி திச் செல்வம துடன்
மண்மிசை வாழி மதிநலந் தழைந்தே

— ,, 133

பொய்தீர் புலவீர்காண் மாறன் பொருளுரைதேர்ந்
தெய்தீரெய் தாது மிருந்திலீர்-மெய்யாக
வின்பமுடன் றுன்ப மிழவுபே றென்பவைதா
முன்பிழைத்த வூழான் முறைபிறழா-தென்பதுநீர்
மானிடம் பாடி மதியாது பொய்சொல்லி
யீன விளிவரவா லேற்றுண்டு-போனதுநாட்
கூற்றுவன் செய்யுங் கொடுந்தொழிலுந் தீநரகி
ஞற்றலவை கேட்டு மடங்கலீர் - பாற்கடற்
பூரணன் மலர்மகள் புரவல னகில
காரணன் வடவேங் கடவ
ஞரணன் கழலினிப் பரவுமி னயந்தே

— ,, 134

திருமால் பரனெனவே தேற்றுதற்கன் பாக
வருமா ரியன்றனையிம் மண்மேற் புலவீ
ரொருமா னிடனென் றுணரா தவனெம்
பெருமானு மென்றுற்றப் பெம்மா னருள்கூர்
பத்தர தடியிணை பரவுமின் னதுவே
யுத்தம விலக்கண முரைசான்
முத்தியை விளக்கு முயற்சியு மதுவே

— ,, 135

சான்றிலக்கியம் சமநிலை, வியனிலை மருட்பாக்களையும் தரு கின்றது.

அரசியல் கோடா தரனடியார்ப் பேணும்
முரசியல் தானைவேன் மன்னர் - பரசோன்
கழலிணை பொதுவில்காப் பாக
வழிவழி சிறந்து வாழியர் பெரிதே

— சி. செ. கோ 81

பருந்தளிக்கு முத்தலைவேற் பண்ணவற்கே யன்றி
விருந்தளிக்கும் விண்ணோர் பிறர்க்குந்-திருந்த
வலனுயர் சிறப்பின் மன்ற வாணனக்
குலமுனி புதல்வனுக் கீந்த
வலைகட லாகுமிவ் வாயிழை நோக்கே

— சி.செ.கோ 82

வம்மி னமரங்காள் மன்றுடையான் வார்கழல்கண்
டுய்ம்மி னுறுதி பிறிதில்லை-மெய்ம்மொழிமற்
றென்மொழி பிழையா தாகும்
பின்வழி நுமக்குப் பெரும்பயன் தருமே

— ,, 83

வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு-வீழ்த்த
புறநெறி யாற்று தறநெறி போற்றி
நெறிநின் றொழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கட னிதுவே

— ,, 84

வாயுறை வாழ்த்து மருட்பா

கடல்கவி மண்டிணிந்த காசினியீர் கேண்மின்
உடல்பொருள் கல்வியுத்தி யோக மரும்பூண்
திடமுடை யில்லமகார் சேர்சுற்ற நட்டார்
படைபாய்மா மொய்யென் பனவெல்லா நில்லா
எதனு லெனிற்பண் டிழைத்தவினைக் குள்ள
விதியா விளைந்த விதிகொடுதென் னுடர்
அதிதீ விரம் வருகா லன்னவரை நீயிர்
மதியா திருந்துய்ய மாட்டீர்-அதனுல்
கடிகெழு புகழ்முனி கடவுளாஞ் சேயவற்
கடிமையாய் நின்மினென் னறையைப்
பிடிமினஃ தழியாப் பெரும்பயன் றருமே

— தி.தி

## பாவும் பொருளும்

தொல். நால்வகைப் பாக்களும் முப்பொருளினும் வரும் எனவும் வாழ்த்தியல், அவையடக்கம், செவியுறை போன்ற பொருண்மை இன்ன இன்ன பாவில் வரும் எனவும் சுட்டுகின்றது. பிற்கால இலக்கணங்கள் மருட்பாவுக்கு மட்டும் பொருள்களைச் சுட்டுவது போல் தோன்றுகிறது. பாட்டியலிலும் பாவும் பொருண்மையும் பற்றிய பொதுக்கருத்து உண்டு.

அந்நிலை மருங்கின் அறம் முதலாகிய
மும் முதற்பொருட்கும் உரிய என்ப

— தொ - செ 106

வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே

— தொ-செ 109

வழிபடு தெய்வம் நின் புறங்காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ

— ,, 110

வாயுறை வாழ்த்தே அவையடக்கியலே
செவியறிவுறாஉ என அவையும் அன்ன

— ,, 111

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழி நனி பயக்கும் என்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத்தற்றே

— ,, 112

அவை அடக்கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மின் என்று
எல்லா மாந்தர்க்கும் வழி மொழிந்தன்றே

— ,, 113

செவியுறை தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன் எனச் செவியுறுத்தற்றே

— ,, 114

புறநிலை வாயுறை செவியறிவுறா உ எனத்
திறநிலை மூன்றும் திண்ணிதில் தெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப

— ,, 161

ஆய அகப்பொருள்மேல் ஆசிரியப் பாவினுள்
மேயசீர் வஞ்சியடி மேவாது-தூய
அகப்பொருள்மேல் அன்றி அருங்கலிகள் வாரா
தொகப்பெறு வஞ்சி தொடர்ந்து

— வெ.பா-செ 44

உறுகலி வஞ்சிப்பா கையறத்துக்கு ஆகா
உரைப்பதினி வாழ்த்தினுக்கு எப்பாவும் ஆமே

— சி. பா-ம 16

கலியும் வஞ்சியும் கையறம் உரைத்தற்கு
ஆகா என்ப அறிந்திசி னோரே
எவையும் வாழ்த்தினுக்கு ஆம் மேவும் பாவே

— பிர 23

அகப்பொருள் கூறும் ஆசிரியத்துள்
புகப்பெறு வஞ்சியடி பொருளன்றி
மிகக் கலிவாரா மேவும் வஞ்சி
தொகைப் பெறு தனித்துச் சொல்லப்படுமே

— இ. வீ 875

அவையடக்கியலே அரில்தபத் தெரியின்
வல்லோன் கூறினும் வகுத்தனர் கொண்மின் என்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே

— ,, 888

## வீரசோழியப் பா

வீரசோழியத்தின் செய்யுள் பற்றிய எண்ணம் தனித்தன்மை யுடையது. செய்யுளைப் 'பத்தியம்' 'கத்தியம்' என இரண்டாகப் பகுத்துப் பார்க்கும் நிலையை முன்பு நினைத்தோம். வடமொழியில் பத்யம் என்பது செய்யுளையும் கத்யம், உரைநடையையும் குறிக்கப் பயன்படுகின்றன. 'சம்பு' எனும் காவிய வகை பத்யமும் கத்யமும் கலந்தது என்பர் வடமொழிவாணர். ஆயின் மலையாள மொழியில் வழங்கும் சம்பு காவியங்களை ஆய்ந்த அம்மொழியறிஞர், கத்யம் என வேறுபடுத்தப்படும் பகுதி முழு உரைநடை, அதாவது தனித்த உரைநடை (pure prose) அல்ல என்று நிறுவுகின்றனர். உரைப் பாட்டுப் போன்று அவை ஓரளவு ஓசை நயங்கள் பொருந்தி,பத்யத் திற்குரிய கடின வரையறைகளிலிருந்து சற்றே நெகிழ்ந்து விலகி அமைகின்றன என்கின்றனர். இதனாலேயே செய்யுளைப் பத்தியம் — கத்தியம் எனப் பிரித்தல் ஓரளவேனும் பொருந்துகின்றது. பத்தியம் செய்யுளெனவும் கத்தியம் செய்யுட்போலி எனவும் கருதப்படு கின்றது எனலாம்.

தமிழ் மரபை யொட்டிப் பாவும் வகைகளும் இனங்களும் கூறிய பின் குறள், சிந்து, திரிபாதி, வெண்பா, திலதம், விருத்தம், சவலை என எழுவகையைப் பத்தியம் என அடக்குகின்றது வீ.சோ. இவற் றின் விளக்கத்தைப் பார்க்கும் போது, முறையே குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை,விருத்தம்,சவலை வெண்பா என்பனவே கருதப் பட்டன என்பது தெரிகின்றது. இவற்றில் முதல் நான்கும் வெண்பா வகையாக எல்லா இலக்கணிகளாலும் கருதப்பட்டனவே. கட்டளைக் கலித்துறையும், சவலை வெண்பாவும் பிற்கால இலக்கண வல்லுனர் சிலரால் எடுத்து மொழியப்பட்டனவே. 'விருத்தம்' என்பது பாவி னங்களான ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலிவிருத்தம், வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை போன்றவற்றை அதாவது அளவொத்த நாலடிச்செய்யுட்களை உள்ளடக்கியதாகத் தெரிகின்றது.

வடமொழி யாப்புப் படி, 'விருத்தம்' என்ற பொதுப் பகுப்பு அளவொத்த நான்கடியுடைய அனைத்துச் செய்யுளையும் குறிக்கும். அடிகளில் பயிலும் எழுத்து எண்ணிக்கையின் அடிப்படையில் விருத்தங்களைச் சந்தம் எனவும் தண்டகம் எனவும் பகுக்கின்றனர். ஓரெழுத்து முதல் இருபத்தாறெழுத்தளவுடைய அடிகளாலாய செய்யுள் சந்த விருத்தமாம் (சிற்றெல்லையை நான்கெழுத்து என்பதும் உண்டு). மேற்செல்லின் அவை தண்டக விருத்தமாம்.

வடமொழிச் செல்வாக்குக் காரணமாகப் போலும் வீ.சோ இவ் வடமொழி யாப்பமைப்புப் பற்றிய செய்திகளைத் தருகின்றது. ஆயின் அங்கு எளிமையாகத் தோன்றும் விதிகள் இங்குத் திரித்துக் கடினமாயிற்றோ எனும் ஐயம் எழுகின்றது.

தமிழ் யாப்பு மரபில் வழங்கும் எழுத்துப் பகுப்புக்கும் அசை யலகுக்கும் இடைப்பட்டமைகின்றது வடமொழியின் 'குரு' 'இலகு' பகுப்பு. நெட்டெழுத்தும், நெடிலொற்றும், குறில் ஒற்றும் குருவாம்; குறில் இலகுவாம்; செய்யுள் அல்லது செய்யுள் அடியின் ஈற்றில் அமைகின்ற குறில், இலகு நிலையிலிருந்து மாறி குரு ஆகுதலும் உண்டு:

நெடில் எழுத்து
நெடில் எழுத்து + ஒற்றெழுத்து
குறில் எழுத்து + ஒற்றெழுத்து
ஈற்றில் நிற்கும் குறில் எழுத்து } - குரு

குறில் எழுத்து — இலகு

குருவைக் குறிக்க ஒரு புள்ளியும் (அல்லது –) இலகுவைக் குறிக்க அரை வட்டமும் (∪) பயன்படுகின்றன.

சில சந்த விருத்தங்களில் அடியின் எழுத்தெண்ணிக்கை (சந்தத் தொகை) உறழ்ந்து அமையலாம்; ஈரடிகள் ஒரு நிலையிலும், மற்ற இரு அடிகள் ஒரு நிலையிலும் அமையலாம். அல்லது ஓரடியில் எண்ணிக்கை குன்றலாம். அல்லது ஓரடியில் எண்ணிக்கை கூடலாம் இம் மூன்று இயல்புடன், இலகு குரு நிலையும், சந்தத் தொகையும், நிலவளவும் இணைத்துத் தெளிவுகள் ஆறு எனக் கூறுகின்றார். இவ்விளக்கம் ஓரளவு தெளிவுகுன்றியே அமைகின்றது.

சந்தத் தொகையில் நான்கடிகளும் ஒத்திருப்பதோடு, குரு வருமிடத்துக் குருவும் அவ்வாறே இலகு வருமிடத்து இலகுவுமாக நான்கடியுள்ளும் ஒத்து அமைதல் தேவையாகின்றது. அவ்வாறன்றி ஏதேனும் ஒரு குருவுக்குப் பதில் இலகு வந்தால் உறழ்ச்சி போலும்; ஒரு குரு/லகு குறையின் கேடு, மிகின் உத்திட்டம் எனத் தோன்றுகின்றது. இவற்றை எவ்வாறு சீர்செய்து செவ்வியாக்கலாம் என்றதந்தையும் வீ.சோ தருகின்றது சந்தத்தொகை நிலவாவு முதலி

யனவும் விளக்கப்பட்டுள்ளன. இவற்றை உணர இன்னும் ஆழ்ந்த ஆய்வு தேவை.

தண்டகம், 'கட்டளை நான்கு முன்னுகிப் பெருகிடுமே' எனக் கூறப்பட்டது, பின் (135) விளக்கப்படுகின்றது. எழுத்தெண்ணிக் கைச் செவ்வி பொருந்திய அடிப்பகுதியையே 'கட்டளை' என்றூர் போலும். இத்தகு கூறுகள் நான்கும், எட்டும், பதினாறும், முப்பத்தி யிரண்டுமாகத் தண்டகம் வரும் எனத் தருகின்றூர். அமைப்பொத்த அடிப்பகுதிகள் மடங்கி மடங்கி வரும் சந்த விருத்தங்களையும், வண்ண விருத்தங்களையும் அருணகிரியார் போன்றோர் நூல்களில் காண்பதனை இங்கு நினைக்கலாம்.

இயைபு பற்றி அமுதசாகரத்தின் இரு வெண்பாக்கள் இங்கே தரப்படுகின்றன. சந்தம் தண்டகங்கட்கு இருபிரிவு இங்கே சொல்லப்படுகின்றது.

ஈரிரண்டு ஆதி இருபத்தாறு அந்தமாச்
சாரும் எழுத்தின்கண் சந்தமாம் - சீர்ஒத்த
மூவொன்பது ஆதியா முற்றின தாண்டகம் என்று
ஓதினர் தொல்லோர் எடுத்து

— அ. சா 69

சந்தமும் தாண்டகமும் தம்முள் எழுத்தலகு
வந்த முறையை வழுவாவேல் - முந்தை
அளவியலாம் என்று உரைப்பர், அவ்வாறு அன்றுகில்
அளவழியாம் என்பரால்

— ,, 70

மேவும் குறள் சிந்தொடு திரிபாதி வெண்பாத் திலதம்
மேவும் விருத்தம் சவலை என்று ஏழும்; இனியவற்றுள்
தாவும் இலக்கணம் தப்பிடில் ஆங்குஅவை தம்பெயரால்
பாவும் நிலையுடைப் போலியும் என்று அறி பத்தியமே

— வீ. சோ 126

எழுசீரடி இரண்டால் குறளாகும்; இரண்டடி ஒத்து
அழிசீர் இலாதது சிந்தாம்; அடிமூன்று தம்மில் ஒக்கில்
விழுசீர் இலாத திரிபாதி; நான்கடி மேவி வெண்பாத்
தொழுசீர் பதினைந்ததாய் நடுவே தனிச்சொல் வருமே

— ,, 127

நேர் முந்துறின் பதினறு எழுத்தாகி நிரைமுதலாம்
சீர் முந்துறின் பதினேழாய் முடிந்து செப்பாரடிகள்
ஏர்முந்து நான்கொத்து இருபது சீரால் இயன்றிடுமேல்
தேர்முந்து பேரல்குல் மாதே, அஃது திலதமன்றே

— ,, 128

அளவு ஓரடிபோல் ஒருநான்கு பேதமிலாது மெய்ப்பது
உளதேல் அஃது விருத்தம் என்றே அறி; உள்ளம்கொள்ளும்
களவே நுழைந்து கயலினும் நீண்டு கடுவடுவின்
பிளவே அனைய பெருமதர் நாட்டத்துப் பெய்வளையே
— வீ. சோ 129

இடையும் முதலும் கடையும் குறைந்தும் இடையிடையே
அடையும் அடிகுறைந்தும் வரின் நான்குஅடி அப்பெயரால்
நடைமுந்து இயன்ற சவலைஎன்று ஓதுவர்; நான்கின்மிக்க
தொடையும் திறம்புவதாய் விடல் போலி துடையிடையே
— ,, 130

ஒன்று ஆதி என்பர் ஒருசார் அவர் ஒருநான்கு முன்னும்
என்றால் இனிது சந்தத்தின் எழுத்தை இருபதின்மேல்
நன்றாய ஆறு உயர்வாம் என்று உரைப்பர்; நல்தண்டகமேல்
பின்றாத கட்டளை நான்கு முன்னாகிப் பெருகிடுமே
— ,, 131

ஏறிய நெட்டெழுத்தே நெடிலொற்றே எழில் வடநூல்
கூறிய சீர்க் குறில்ஒற்றே குருவாம்; குறிலதுவே
வேறியல் செய்கை இலகு என்றாகும்; வியன்குறிலும்
ஈறியலில் பிறிதாம் ஒருகால் என்று இயம்புவரே
— ,, 132

ஒப்பார் உறழ்ச்சியும் கேடும் உத்திட்டமும் ஒன்றிரண்டென்
அப்பால் இலகு குருச் செய்கையும் அந்தச் சந்தங்களால்
துப்பார் தொகையு நிலவளவு மென்று சொல்லி வைத்தார்
செப்பார் தெளிவுகள் ஆறையும், சீறடித் தேமொழியே
— ,, 133

ஆதியினில் குருப் பாதம்வைத்து ஆதிக்குரு அதன்கீழ்
ஓதிய சீர் இலகுத் தன்னை ஆக்கி ஒழிந்தவற்றை
மூதியன் மேற்படிக்கு ஒப்பித்து முன்புறப் பாழ்கிடக்கின்
தீதியலாக் குருக் கொண்டே மறைக்க திறப்படவே
— ,, 134

ஏறும்அடி எனைத்தாவது கெட்டதென்றால் அவ்வெண்ணைத்
தேறும்படி அசைசெய்து இலகுக்கொள்க சேரின் ஒற்றை
வேறும் உருவொன்று பெய்து அரைசெய்து வியன்குருவைத்து
ஈறு திகழும் அளவும் இயற்றுக இப்படியே
— ,, 135

காட்டிய வீடு எனைத்தாவ தென்றால் அதன் கண் எழுத்திற்
கூட்டிய ஒன்று ஆதிகொண்டது இரட்டித்துக் கோப்பியல
நாட்டிய சீர் இலகுக்களின் மேல் நண்ணிய இலக்கம்
ஈட்டி அங்கு ஒன்று இட்டு உரைக்கும் இதனை உத்திட்டம்
என்னே
— ,, 136

ஓங்கிய சந்தத்து எழுத்துக்களை வீடிரண்டு ஒருமூன்று
ஆங்கியல் நான்குஐந்தொடு ஆறுஏழு என இரண்டால் இசைத்துத்
தாங்கிய வீடொன்று ஒன்று ஈறொழித்திட்டுத் தமது அயலெண்
பாங்கில் தொகுத்து லகுக்குருப் பெய்து பகர்தொகையே

— வீ.சோ 137

தொகை நான்கிடமிட்டு எழுத்தான் முரணித் தொடரும் அரை
தகையாத வண்ண நடுவண ஆற்றித் தருங்கடையிற்
சிகையாக விட்டு எழுத்தோடு இலகுக்களுஞ் சீர்க்குருவும்
மிகையாகும் மாத்திரையும் அடைவே அறி மெல்லியலே

— ,, 138

எழுத்தளவும் இரண்டே முதலாய்க் கொண்டு இரட்டிசெய்யக்
குழுத்த இறுதித் தொகையே தொகை; குலவும் தொகையை
அழுத்த இரட்டி செய்து ஆங்கொன்று நீக்க அது உறழ்வால்
விழுத்த இயன்ற நிலத்தின் விரல் என்ப மெல்லியலே

— ,, 139

மருவு நெடில் குறில் வல்லொற்று மெல்லொற்று இடையிலொற்று என்று
உருவம் திகழ்ந்து அவை உய்க்கும் குறிகள் ஒப்பார் நிரைநேர்
துருவ மலிபுள்ளி வட்டம் விலகு என்பர் தொன்மை குன்றாத்
திருவும் அழகும் புகழும் திகழ்தரு தேமொழியே

— ,, 140

இப்படிக் கட்டளைத் துண்டம் ஒன்றுக்கியது ஈரிரண்டில்
ஒப்புடை எட்டில் பதினாறினில் முப்பத்தோரிரண்டில்
செப்பிட ஆக்குக தண்டகம் வல்லொற்று அல்லாத ஒற்றுத்
துப்புடன் உச்சாரணையினல்லான் மிகத் தோன்றரிதே

— ,, 141

## அளவு

தொல்காப்பியம் இதனைத் தனியுறுப்பாகக் கொண்டது. பிற நூற்கள் இவ்வாறு கொள்ளாது, செய்தியை மட்டும் கூறின. சுவாமி, ஆசிரியத்திற்கு ஓரடிச் சிறுமை கூறுவது தனித்தன்மை.

ஆசிரியப் பாட்டின் அளவிற்கு எல்லை
ஆயிரம் ஆகும், இழிபு மூன்று அடியே

- தொ-செ 157

நெடுவெண்பாட்டே முந்நால் அடித்தே
குறுவெண் பாட்டின் அளவு எழுசீரே

— ,, 158

அங்கதப் பாட்டு அவற்று அளவோடு ஒக்கும்

,, 159

கலிவெண் பாட்டே, கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை என்றிவை
தொகுநிலை அளவின் அடியில என்ப

— தொ-செ 160

பரிபாட்டு எல்லை
நால் ஈரைம்பது உயர்படியாக
ஐயைந்து ஆகும் இழிபு அடிக்கு எல்லை

— ,, 162

அளவியல் வகையே அனைவகைப் படுமே

— ,, 163

எழுநிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறு என மொழிப

— ,, 164

அடிநிமிர் கிளவி ஈராறு ஆகும்

— ,, 182

அடி இகந்து வரினும் கடிவரை இன்றே

— ,, 183

கிளரியல் வகையில் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே அனைவகைப்படுமே

— ,, 184

ஒரு தொடை ஈரடி வெண்பாச் சிறுமை
இரு தொடை மூன்றும் அடியின் இழிந்து
வருவன ஆசிரியம் இல்லென மொழிப
வஞ்சியும் அப்பா வழக்கின ஆகும்

— கா.பா 29

நான்காம் அடியினும் மூன்றும் தொடையினும்
தாழ்ந்து கலிப்பாத் தழுவுத லிலவே

— ,, 30

உரைப்போர் குறிப்பினை அன்றிப் பெருமை
வரைத்தித் துணையென வைத்துரை இல்லென்று
உரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே

— ,, 31

ஒன்றும் இரண்டும் மூன்றும் நான்கும்
என்றிம் முறையே பாவின் சிறுமை
தத்தங் குறிப்பின தொடையின் பெருமை

—அவி 65

ஈரடி வெண்பாச் சிறுமை; மூவடி
ஆசிரியத்தொடு வஞ்சி, எஞ்சியது
ஈரிரண்டு அடியே இழிபு எனமொழிப

— யா: க 32

வெள்ளைக்கு இரண்டடி; வஞ்சிக்கு மூன்றடி; மூன்று அகவற்கு
எள்ளப்படாக் கலிக்கு ஈரிரண்டு ஆகும் இழிபு; உரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமை, ஒண்போது அலைத்த
கள்ளக் கருநெடுங்கண் சுரிமென்குழல் காரிகையே

— யா.கா 14

வெள்ளடி இரண்டு; மூன்று ஆ
சிரியம்; வஞ்சி மூன்று; கலி நான்கு இழிபு; பெருமை
அகல் பொருள் மட்டு

— சி. பா-உ 5

ஈரடி வெண்பாச் சிறுமை; மூவடி
ஆசிரியத்தொடும் வஞ்சி; எஞ்சியது
ஒரு நான்கு ஆகும் இழிபே; பெருமை
முந்நான்கு ஆயிரம் ஆயிரம் முடிவிலது
என்று வருஉம் இயல்பினது என்ப

— இ. வி 746

வெள்ளைக்கு இரண்டடி சிறுமை ஆகும்

— மு. வீ-யா. உ 19

அகவற்கு ஒரு மூன்றடி சிறுமையே

— ,, 20

வஞ்சிப் பாவும் அவற்றோரற்றே

— ,, 21

கலிப்பாவிற்கு ஒரு நாலடி சிறுமை
ஆகும் என்மனார் அறிந்திசினோரே

— ,, 22

பெருமை, உரைப்போன் பெற்றித்து ஆகும்

— ,, 23

.............வெண்பாக் கலி வஞ்சிக்கே
சிறுமை இரண்டு, அகவல் ஒன்றும், பெருமை
பொருள் முடிவாம்

— சுவாமி 154

உதாரண முதனினைப்புக் காரிகையில் உண்டு

அறத்தாறிது வென வெள்ளைக்கு இழிபு; அகவற்கு இழிபு
குறைத்தாங்கு உரைப்பின் முதுக்குறைந்தாம்; குறையாக் கலியின்
அறத்தாறிது செல்வப்போர்ச், செங்கண் மேதி; வஞ்சிச்சிறுமை
புறத்தாழ் கரு மென்குழல் திருவே யன்ன பூங்கொடியே

— யா.கா 15

## திணை

தொல். இலக்கியங்கள் அனைத்தையும் அகம், புறம் என்ற பெரும் பிரிவுகளில் அடக்க நினைக்கின்றது போலும். செய்யுளியல் என்பது செய்யப்படுகின்ற எல்லா வகை நூல் வடிவங்களையும் உட்படுத்தும். இங்கே உறுப்பாகக் கூறும்போது திணையையும்

கூறுகின்றார். திணை ஒழுக்கத்தைக் குறிக்கும். அச்சொல்லைத் திண்+ஐ எனப் பிரித்து உளத் திண்மையே ஒழுக்கத்திற்கு அடிப் படை எனக் கூறலாம் (திண்மை உண்டாகப் பெறின்). செய்யுளும் இவ் இருதிணைகளில் அமையவேண்டும் என்று கருதித்தான் இதனை யும் உறுப்பாகக் கூறினார்போலும். இங்குக் 'கைக்கிளை முதலா எழு பெருந்திணையும்' என அகத்திணை மட்டும் கூறியது போன்று தோன்றினும், புறத்திணையும் இதனுள் அடங்கிற்று என்று உரை யாசிரியர் வழிக் கொள்ளலாம்.

கைக்கிளை முதலா எழு பெருந்திணையும்
முன் கிளந்தனவே முறைநெறி வகையின்

— தொ-செ 185

இலக்கண விளக்கம், அகத்திணையியலில் அகப்பாட்டு உறுப்பு எனத் திணை முதலிய பன்னிரண்டைத் தருகின்றது (559—583). இவையும், திணை முதலியன பற்றிய தொல்காப்பிய நூற்பாக்களும் அகப் பொருண்மையே செய்யுளில் மிகுதியாகப் பயின்றது, முதன் மையாகக் கருதப்பட்டது - என்பதனைத் தெளிவாகவே விளக்கு கின்றன. இவ் இலக்கண விளக்க நூற்பாக்கள் இயல் நிலையில் இங்குப் பொருந்தாவிடினும், செய்திநிலை யொப்புமையால் இவண் தரப்படுகின்றன.

கூறிய அகப்பொருள் ஆறுஇரு வகைத்தாய்ப்
பாட்டு உறுப்பாய் வரூஉம் பண்பிற்று என்ப
போக்குஅறு மரபின் புல்லிய நெறித்தே

— இ. வி 559

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் பயனே முன்னம்
மெய்ப்பாடு எச்சம் பொருள்வகை துறைஎன
அப்பால் ஆகும்அவ் ஆறிரு வகையே

— ,, 560

அகப்பொருள் இலக்கணங்களான இறையனார் களவியலும் (56) நம்பியகப் பொருளும் (211) இத்தகு அகப்பாட்டுறுப்பைப் பற்றி நினைந்துள்ளன.

அகத்திணையின் ஒழிபு எனும் நிலையில் பொருந்தினமையால் திணை, கைகோள் என்பனவற்றிற்கு மீண்டும் விளக்கம் தராது அமைந்து விடுகின்றது இ. வி.

*முன்னவை இரண்டும் சொன்னவையாம் அவற்று
ஒன்று அவண்வருதல் ஒன்றித் தோன்றும்

— ,, 561

---

*அதுவே கைக்கிளை ஐந்திணை ஏனைப்
பெருந்திணை எனஎழு பெற்றித் தாகும் — இ.வி 376

அளவில் இன்பத்து ஐந்திணை மருங்கின்
களவு கற்பு என இரு கைகோள் வழங்கும் — இ.வி 396

## கைகோள்

திணையின் உட்பிரிவாகிய அதன் ஒழுக்கத்தைக் கொள்ளுதலைக் கைகோள் என்று கூறி, அகத்திணைக்கு அதனைத் தருகின்றார். களவு கற்பு எனக் கைகொள்ளும் ஒழுக்கம் இரண்டென்பது தெளிவு (இ. வி 561).

காமப் புணர்ச்சியும், இடந்தலைப்பாடும்
பாங்கொடு தழாஅலும் தோழியில் புணர்வும் என்று
ஆங்கு அ நால்வகையினும் அடைந்த சார்பொடு
மறைஎன மொழிதல் மறையோர் ஆறே

— தொ-செ 186

மறை வெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்
இவை முதலாகிய இயல்நெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பு எனப்படுமே

— ,, 187

மெய்பெறு வகையே கைகோள் வகையே

— ,, 188

## கூற்று வகை

தொல். செய்யுள் இயலில், வெறும் செய்யுளின் புற அமைப்பை மட்டும் (External Structure) கருதி உறுப்புக்களைக் கூறவில்லை. ஏனைய மரபிலக்கணங்கள் புறவமைப்பைப் பற்றி மட்டுமே பேசுகின்றன. இங்குத் தொல். கூற்றுக் கூறியவர் யார், அவர்கள் என்னென்ன கூறலாம் என்பதுபற்றிக் குறிப்பிடுகின்றது.

பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியொடு
அளவியல் மரபின் அறுவகையோரும்
களவினில் கிளவிக்கு உரியர் என்ப

— ,, 189

பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொல் நெறி மரபின் கற்பிற்கு உரியர்

— ,, 190

ஊரும் அயலும் சேரியோரும்
நோய் மருங்கு அறிநரும் தந்தையும் தன்ஐயும்
கொண்டெடுத்து மொழியப் படுதல் அல்லது
கூற்று அவண் இன்மை யாப்புறத் தோன்றும்

— தொ-செ 191

கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது

— ,, 192

ஒண்தொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்டது என்ப

— ,, 193

இடைச்சுர மருங்கில் கிழவன் கிழத்தியொடு
வழக்கியல் ஆணையில் கிளத்தற்கும் உரியன்

— ,, 194

ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்து ஆங்கு உரியர் முன்னத்தின் எடுத்தே

— ,, 195

பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவியல் கிளவிக்கு உரியர் ஆகலும்
பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்
தொன்னெறி மரபின் கற்பின் கிளவிக்கு
உரியர் ஆகலும் உரிய ஆகும்

— இ. வி 562

ஊரும் அயலும் சேரி யோரும்
நோய் மருங்கு அறிநரும் தந்தையும் தன்ஐயும்
கொண்டெடுத்து மொழியப் படுவது அல்லது
கூற்று அவண் இன்மை யாப்புறத் தோன்றும்

— ,, 563

கிழவோன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது

— ,, 564

புணர்ந்து உடன்போயது உணர்ந்த பின்றை
அந்தணர் தெய்வம் அயலோர் அறிஞர்
சிந்தைநோய் அறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க்கு உரைத்தல் பண்புடைத் தாய்க்கும்
தாயொடு பாங்கி தம்முத லாரோடு

ஆயிடை உரைத்தல் சேயிழைச் செவிலிக்கும்
உரிய என்மனுர் உணர்ந்திசி னேரே

— இ.வி 565

தாயர் பாங்கியர் தலைவன் தலைவியோடு
ஏயும் என்ப கண்டோர் கூற்றே

— ,, 566

தமர்வரின் இடைச்சுரம் தன்னில் கிழத்தியோடு
அமர்தரு கிழவோன் ஆணையும் கூறும்

— ,, 567

உடன்போய் மீண்ட கொடுங்குழை அரிவை
பிரிவுழித் தலைவனெடு சுரத்து இயல்பு பேசலும்
பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச்
சொல்லலும் உரியள் சொல்லுங் காலே

— ,, 568

சாற்று அனைவரும் தலைவன் தலைவியோடு
ஏற்றன கூறுப இடம்தொறும் இடம்தொறும்

— ,, 569

நோயும் இன்பமும் இருவகை நிலையின்
காமம் கண்ணிய மரபுஇடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய
உறுப்பு உடையதுபோல் உணர்வு உடையதுபோல்
மறுத்து உரைப்பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்
சொல்லா மரபின் அவற்றெடு கெழீஇச்
செய்யா மரபின் தொழில்படுத்து அடக்கியும்
அவர் அவர் உறுபிணி தமபோல் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய ஆக
உவம வாயில் படுத்தலும் உவமம்
ஒன்று இடத்து இருவர்க்கும் உரிய பாற்கிளவி

— ,, 570

கனவும் உரித்தால் அவ்விடத் தான

— ,, 571

எம்முறை யோரும் யாரொடும் இன்றி
தம்மொடு தாமே சாற்றியும் அமைவர்

— ,, 572

## கேட்போர்

அகப் பொருண்மைக்கண் கூற்றுக்குரியார் இன்னின்னுர் எனக் கூறியது போன்றே, அக்கூற்றைக் கேட்போர் யார் யாரெனவும் சில வரையறைகள் மொழியப்படுகின்றன. இன்னுர் கூற அதனை இன்னுர் கேட்பர் என்று இயைபு காணும் நிலையிலும் இவை ஓரளவு

அமைந்துள்ளன. ஒவ்வொருவருக்குக் கூறுவோராகவும் கேட்போ ராகவும் இருக்கும் இரு தகுதியும் பொருந்துகின்றன. பேசாதனவும் கேட்காதனவும் கூட பேசுவதாகவும் கேட்பதாகவும் இலக்கியத்தில், உணர்வு வெளியீட்டுக் களனில் இயைந்தமை தெரிகின்றது.

மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்
நினையுங்காலைக் கேட்குநர் அவரே
— தொ-செ 196

பார்ப்பார் அறிவர் என்றுஇவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே
— ,, 197

பரத்தை வாயில் என இரு கூற்றும்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப் பயம் இலவே
— ,, 199

வாயில் உசாவே தம்முள் உரிய
— ,, 200

ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்பு உறுபொழுதே புள்ளே நெஞ்சே
அவை அல பிறவும் நுவலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்
— ,, 201

இறையோன் கூற்றும் இறைவி கூற்றும்
மறையோர் முதலாப் பதின்மரும் முறையான்
மறையோன் கூற்றும் அறிஞர் கூற்றும்
இறையோன் முதலா எனைவரும் கேட்ப
— இ. வி 573

## களன் (இடம்)

அகப் பொருள் நிகழ்வுக்குரிய இடம், சூழல் இங்கு நினைக்கப் படுகின்றது. ஒரு கூற்று இன்ன சூழலில் எழுந்தது, அல்லது ஒரு செயல் இன்ன இடத்து நிகழ்ந்தது என்பதைப் பாடலில் கண்டு விளங்கும் நிலை இதன் அடிப்படையாகின்றது.

ஒரு நெறிப் பட்டு ஆங்கு ஓர் இயல் முடியும்
கரும நிகழ்ச்சி இடம் என மொழிப
— தொ-செ 198

,, ,, ,,
— இ.வி 574

## காலம்

களம் என்பது முதற்பொருளின் கூறுகிய ஐந்நிலங்களையும், காலம் அதன் பிறிதொரு கூறுகிய சிறு, பெரும் பொழுதுகளையும்

குறித்தது எனக் கொள்ளவும் இடனுண்டு. இறப்பு - நிகழ்வு - எதிர்வெனும் முக்கால உணர்வு பாடலில் அமையுமாற்றை ஒரு செய்யுட் கூருகக் கொண்ட நிலை இங்குத் தெளிவுறுகின்றது.

இறப்பே நிகழ்வே எதிரது என்னும்
திறத்து இயல் மருங்கில் தெரிந்தனர் உள்ளப்
பொருள் நிகழ்வு உரைப்பது காலம் ஆகும்

— தொ-செ 202

இறப்பே நிகழ்வே எதிரது என்னும்
திறத்து இயல் மருங்கின் தெரிந்தனர் உணரப்
பொருள் நிகழ்வு உரைப்பது காலம் ஆகும்

— இ. வி 575

## பயன்

பயன் கருதியன்றி (அகப்) பாடல் எழா எனும் நிலை இருந்தது போலும். பொருள் நயந்து நிற்கும் புலவன் பாட்டும்; வரைவு வேண்டி எழுந்த தோழி கூற்றும், குறி விரும்பிக் கூறும் தலைவன் சொல்லும், வருகை விழைந்து விடுக்கும் தலைவியின் தூதும் இங்கு இணைந்தே நினைத்தற்பாலது.

இது நனி பயக்கும் இதனால் என்னும்
தொகைநிலைக் கிளவி பயன் எனப்படுமே

— தொ-செ 203

,, ,, ,, — இ. வி 576

## மெய்ப்பாடு

சொல்லில் வெளிப்படையாக மொழியாது, குறிப்பாலும் தெரிவியாது, உணர்வுகளைப் பார்ப்போர் புரிந்துகொள்ளும் வண்ணம் உடலில் வெளியிட்ட நிலை இது. பாத்திரத்தின் உணர்வுகளைப் பார்ப்பவன் — படிப்பவன் மெய்சிலிர்த்தல் நெட்டுயிர்த்தல் வாயிலாகப் பிரதிபலித்தலும் இது என்பர்.

உய்த்து உணர்வு இன்றித் தலைவரு பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு ஆகும்

— தொ-செ 204

எண்வகை இயல்நெறி பிழையாது ஆகி
முன்னுறக் கிளந்த முடிவினது அதுவே

— ,, 205

உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு அதுதான்
நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று

அப்பால் எட்டாம் அவ்வகை எட்டும்
எள்ளல் இளமை பேதைமை மடமே
இளிவே இழவே அசைவே வறுமை
மூப்பே பிணியே வருத்தம் மென்மை
புதுமை பெருமை சிறுமை ஆக்கம்
அணங்கே விலங்கே கள்வர் தம்இறையே
கல்வி தறுகண் இசைமை கொடையே
உறுப்பறை குடிகோள் அலைகொலை அவற்றொடு
செல்வம் புலனே புணர்வு விளையாட்டு எனப்
புல்லித் தோன்றும் பொருள்வகை அவற்றுள்
ஒன்று நான்கு செய்து உறழ எண்ணான்காம்
என்று கூறுப இயல்பு உணர்ந்தோரே

— இ. வி 578

ஆங்கவை ஒருபால் ஆக ஒருபால்
உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பு எனாக்
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவு எனாஅ
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவு உயிர்ப்பு எனாஅக்
கையாறு இடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகை நடுக்கு எனாஅ
இவையும் உளவே அவையலங் கடையே

— ,, 579

புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நடுநயம் மறைத்தல் சிதைவு பிறர்க்கு இன்மை
கூழை விரித்தல் காதொன்று களைதல்
ஊழ்அணி தைவரல் உடைபெயர்த்து உடுத்தல்
அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி உறுத்தல் இருவகை எடுத்தலொடு
பாராட்டு எடுத்தல் மடம்தப உரைத்தல்
ஈரம்இல் கூற்றம் ஏற்றுஅலர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇத்
தெரிந்து உடம்படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத்து ஒழிதல் கண்டவழி உவத்தல்
புறம்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையறவு உரைத்தல் எனக்
காட்சி முதல் ஆறையும் கண்ணிஒன்று ஈரிரண்டு
ஆட்சி பெறவரும் நாலாறு மெய்ப்பாடும்

அன்ன பிறவும் அகன் ஐந்திணைக் கண்
துன்னும் என்ப தெரிந்திசினோரே

— இ.வி 580

## எச்சம்

கூற்றெச்சம் குறிப்பெச்சம் என இருவகை எச்சம்பற்றிச் சொல்லதிகார எச்சவியலிலும் மொழிவர் தொல்காப்பியர்.

பாடலுக்கு வெளியே பொருள் எஞ்சி நிற்கும்நிலையே எச்சம். சொல்நிலையில் அது ஓரளவு உணர்த்தப்படலும் முழுமையாகவே மறைந்து நிற்றலும் ஆகிய இரு நிலைகள் உள.

வெளிப்படையாகக் கூறினும் பிழையின்று எனும் ஒன்றைச் செய்யுளில் கூறாது விடுவது கூற்றெச்சம் எனவும் அவ்வாறு கூறத் தகாததைக் கூறாது விடுவது குறிப்பெச்சம் எனவும் உரையாளர் சிலர் விளக்குகின்றனர்.

சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும்

— தொ-செ 206

,, ,, ,, — இ. வி 581

## முன்னம்

கூற்றுவகை முதலியவையோடு தொடர்புடைய உறுப்பாக இது அமைகின்றது. காலம், இடம் அறிந்து தான் பிறரிடம் மொழி வதற்குரிய சொற்கள் எவையோ அவற்றையே கூறுதல் இவண் பொருந்துகின்றது. உவமையாட்சியில் தலைவி எதைது கூறலாம், தோழி எவ்வெவை கூறலாம் என்ற வரையறைகள் இங்கு நினைத்துப் பார்க்கலாம்.

இவ் இடத்து இம்மொழி இவர்இவர்க்கு உரிய என்று
அவ் இடத்து அவர்அவர்க்கு உரைப்பது முன்னம்

— தொ-செ 207

,, ,, ,, — இ. வி 577

## பொருள்வகை

உரிப்பொருள் மயக்கம் இவ்வுறுப்புக்கு அடிப்படையாக அமைந்தது போலும்.

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றுஇவை இழுக்குநெறி இன்றி,
இதுவாகு இத்திணைக்கு உரிப்பொருள் எ(ன்)னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப

— தொ-செ 208

,, ,, ,, — இ. வி 582

## துறை

கருப் பொருள் நிலையில் ஏற்பட்ட மயக்கம் இங்குக் கருதப்படு கின்றது எனலாம். பிற கூறுகளையும், மரபையும் நோக்கி மயக்கம் தெளிதலின் தேவை எடுத்து மொழியப் படுகின்றது.

அவ்அம் மாக்களும் விலங்கும் அன்றிப்
பிற அவண் வரினும் திறவதின் நாடித்
தத்தம் இயலின் மரபொடு முடியின்
அத்திறம் தானே துறை எனப்படுமே

— தொ-செ 209

„ „ „ — இ. வி 583

## மாட்டு

பொருள்கோள் எனப் பிற்காலத்தார் விரித்தனவும், மொழி புணரியல்பெனத் தொல்காப்பியச் சொல்லதிகாரம் உணர்த்தியன வும், நிரனிறை சுண்ணம் முதலிய தொல்காப்பிய உவமை நிலை களும் இதனோடு தொடர்புடையனவோ என எண்ண வேண்டி யுள்ளது. தொல்காப்பிய நிலைகள் இரண்டும் சொல்லைப் பொருள் நிலையில் அமைக்கும் தன்மையையும் உவமிக்கும் இயல்பையும் கூற 'பொருள்கோள்' என்பது அவ்வாறு அமைந்த பாடலைக், கற்போன் பொருள் உணரும் வகையில், சொற்களை மாற்றி யமைத்துப் பொருளைப் புரிந்து கொள்ளுமாற்றைக் கூறியது எனலாம். மாட்டு என்பதன்கண் பிற்காலப் பொருள்கோள் அடங்கிவிடுகிறது. சொற் களைப் பொருள் புரியும்படிப் பொருத்தி மாட்டிக்கொள்வது இது. ஒழிபியல்கள் சில பொருள்கோள் எனும் பெயர்நிலையைச் சுட்டு கின்றன. மிக அருகியே வகைநிலைகள் நினைக்கப்படுகின்றன.

அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டு என மொழிப பாட்டியல் வழக்கின்

— தொசெ - 210

மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடன்நிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே

— „ 211

சொல்லாதல் சொல்லின் பொருளாதல் முன்முறைவைத்து
அவ்வகை நேர்கோள் நிரல்நிறையாம்; அவ்வவ்
இடையிட்டு எதிரும் விராய்ச்சொல் இடையிடை
இட்டன சுண்ணம், இரண்டடியாற் சொல்வர
நிற்பது அடிமொழி மாற்றல்; அது அடி
மறியாம் முழுதும் யாப்பு

— அ. சா 68

*நிரனிறை முதலிய பொருள்கோள் பகுதியும்

— யா. க 95

## வண்ணம்

தொல்காப்பியம் கூறும் செய்யுள் உறுப்புகளின் முதற்பகுப்பில் இறுதியாக அமைவது இது. சொல் நிலையில், அழகு என்பது பொருள். பெரும்பான்மையும் எழுத்துக்களின் (வர்ணம்) அடிப்படையிலேயே இதன் வகைகள் பலவும் அமைவதனுல் இப்பெயர் பெற்றதோ எனும் ஐயம் எழுதுவது இயற்கை.

வண்ணம் 20 என்பது பொதுக்கருத்து. 100 வகை வண்ணங்கள் உண்டு எனும் பெருக்க நிலை அவிநயத்தில் ஏற்பட்டுள்ளது (அவி 107).

காப்பியம், சோழியம், இ. வி, தொ. வி, மு.வீ என்பன 20 வண்ணங்களைக் கூறுகின்றன.

ஓரிரு நூறகளில், ஒழிபியல் கருத்தாக, வண்ணம் பெயர்நிலையில் அமைகின்றது.†

வண்ணம் என்றல் என்ன எனும் விளக்கம் எந்நூலிலும் தரப்படாவிடினும் வண்ண வகைகள், பொதுவான விளக்கமொன்று அமைக்கத் துணைபுரிகின்றன. ஓரெழுத்தின் பயிற்சி மிகுதி, ஒரு குறிப்பிட்ட ஓசையின் பெருக்கம், ஒரு சொல், எண், சீர் அல்லது தொடை பயின்று வரல், ஒரு பொருண்மையின் முடிவு, முடியாமை ,-என்பன வண்ணத்திற்கு அடிப்படையாயின.

பா(அ) வண்ணம் பிற வண்ணங்களினின்று சிறிதே மாறுபட்டது. பிறவனைத்தும் பாட்டிற்கே உரியனவாக இது ஒன்றும் நூலின்கண் வருகின்றது. சொற்சீரின் பயிற்சியே இவ்வண்ணத்தின் அடிப்படை. சொற்சீர் ஒன்றே சிலவோ வரும் அடி பயில்வது எனவும் பொதுவாகச் சொல்லே சீராகி அமைவது எனவும் கொள்ளல் தகும்.

தா(அ) வண்ணம் எதுகைத் தொடையின் பயிற்சிநிலை வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்டது. 'தரவு' என்ற பெயர் மாறுபாடும் சில நூற்களில் உண்டு. ஒவ்வோரடி யிடையிட்டு, அடிகளின் முதற்கண் எதுகைத் தொடை பொருந்துவது இது என்பது பொதுக் கருத்து. அத்துடன், ஒரு அடியின் கண்ணே, சீர் இடையிட்டு, பொழிப்பாகவும் ஒரூஉவாகவும் வருதல் இவ் வண்ணவியல்பு என மொழிதலும் உண்டு.

---

* யா. கா 43, 44 (அவி 106)
கலம் 95, காரிகை 44, சி. பா-ஒ 5

க,ச,ட,த,ப,ற எனும் வல்லின எழுத்துக்களின் பயிற்சி, வல்லிசை வண்ணம் எனப்படுகின்றது. இவ்வாறே மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்தும், இயைபு வண்ணம் இடையெழுத்தும் அளபெடை வண்ணம் அளபெடைகளும், நெடுஞ்சீர் வண்ணம் நெடில் எழுத்தும், குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்தும், நலிபு வண்ணம் ஆய்த எழுத்தும், சித்திர வண்ணம் குறில்நெடில் எழுத்துக்களும் பயில்வதால் ஏற்படுகின்றன.

அகப்பாட்டு - புறப்பாட்டு வண்ணங்கள் தெளிவான விளக்கம் பெற்றில. முன்னது, 'முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்று' எனவும், பின்னது 'முடிந்தது போன்று முடியாதது' எனவும் கூறப் படுவதால், இவை பொருண்மை வெளியீட்டு அடிப்படையினவோ எனும் எண்ணம் எழுகின்றது. இவற்றின் முன்னதைக் குறிப்புப் பொருள் எஞ்சி நிற்க முடிந்த பாடல் நிலை எனலாமா என்ற ஐயம் ஏற்படுகின்றது. அகப் பொருண்மையில் பாடல் அமையும்போது, அனைத்துமே வெளிப்படையாகத் தரப்படும் என எதிர்பார்க்க இயலாது. எச்சம் எனும் உறுப்பு இவ்வாறு குறிப்பாகப் புரிந்து கொள்ளும் நிலையில் எஞ்சி நிற்பனவற்றையே குறித்ததோ எனும் எண்ணம் முன்பே தரப்பட்டது.

புறப்பாட்டு வண்ணம் அகப்பாட்டு வண்ணத்திற்கு நேர் எதிராக மாறுபட்டு அமைந்த ஒன்று என்பதை விளக்கத்திலிருந்து தெரிந்துகொள்கிறோம். முடிதல் - முடியாமை என்ற பண்புகள் இங்கும் உண்டு. பாடலில் கூற்று - வேண்டுகோள் - செய்தி இவை முற்றுப் பெறினும், பயன் அல்லது செயல் தொடங்குதல், தொடர்ந்து நிகழல் எனும் நிலையில் பாடல் முடிவதோடு முடிந்து விடாமை இங்குக் கருதப்பட்டிருக்கலாமோ எனும் ஐயம் எழு கின்றது. வாழ்த்துப் பொருண்மை புறப்பாட்டு நிலையினது என்பது உண்மை. அவற்றின் வகையில், புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ, அவையடக்கியல் என்பனவற்றில் அமையும் பொருண்மை முடிகிறது; நோக்கம் நிறைவேறும் நிலை பாடல் முடியுமிடத்து முடியாதே நிற்கின்றது. இந்நிலையினையே புறப்பாட்டு வண்ணம் எனக் கொள்ளல் சாலும்.

ஒழுகு - ஏந்தல் - தூங்கிசை எனும் வண்ணங்கள், பெயர்நிலை யில் பிற்காலத்து ஓசைப் பகுப்புக்களைக் குறித்ததனால் ஓசை யடிப் படையினவோ என்ற ஐயம் எழுவது இயல்பு. அதற்கு ஓரளவு ஏற்றாற் போன்றே ஒழுகு, தூங்கிசை வண்ணங்களின் விளக்கம் அமைகின்றன. ஓசை யொழுகி வருவது ஒழுகு வண்ணமாம். பதிற் றுப் பத்துப் பாடல்கள் பெறும் வண்ணத்தில் இதுவும் ஒன்று.

தூங்கல் வண்ணம் வஞ்சியில் பயிலும் எனும் விளக்கம், வஞ்சி(ப்பாவு)க்கு உரியது இவ்வண்ணம் எனும் கருத்தைப் பிறப்பிக்கின்றது. வஞ்சிச்சீர் அல்லது வஞ்சி யடிப்பயிற்சியால் அமைந்தது போலும். ஏந்தல் அல்லது ஏந்திசை வண்ணம் சொற்பின்வருநிலையணியோடு தொடர்பு காட்டி நிற்கின்றது. ஒரு சொல் பன் முறை ஒருபாடற்கண் பயின்று வந்தமையால் ஏற்படும் ஓசையினிமை அல்லது ஒருமைப்பாடே இங்கு அடிப்படை. மு.வீ, தூங்கிசை வண்ணத்தை நிரையீற்று மூவசைச் சீரின் பயிற்சி மிகுதி எனவும் ஏந்திசை வண்ணத்தை நேரீற்று உரிச்சீரின் பயிற்சி எனவும் கூறுவது இங்கு இயைந்து நோக்கப்படவேண்டிய ஒன்று. இவ்விளக்கம் தொல்காப்பியத்திலிருந்து மாறுபடுகின்றது. ஒரூஉ வண்ணம், செந்தொடையுடன் ஒப்புமை காட்டுகின்றது. தொடையின்றியமையும் நிலையே இவ்வண்ணம் என்பது ஒருவிளக்கம். ஒருவுதல், நீங்குதல் எனப் பொருள் பெற்ற நிலையில் சீர்கள் இடையிட்டு வந்த ஒரூஉத் தொடையை இவ்வண்ணத்துடன் பொருத்துதலும் உண்டு.

எண்ணுவண்ணம் எண்ணின் பயிற்சியால் ஏற்படுகின்றது. ஒன்று முதலிய எண்கள் பயில்வதும் எண்ணிடைச் சொற்கள் பல வருவதும் நினைக்கப்படலாம் போலும். கலிப்பாவின் உறுப்பாகிய 'எண்' (அம்போதரங்கம்) பயில்வதையே இவ்வாறு காட்டினரோ என ஐயுறுமல் இருக்கவியலவில்லை. ஆயின் அதனை உறுதிப் படுத்த போதிய சான்றுகள் இல்லாமை குறை.

அகைப்பு வண்ணம் ஒழுகு வண்ணத்திற்கு எதிரான பண்புடையதாக விளக்கங்களிலிருந்து தெரியமுடிகின்றது. அங்கிருந்த ஓசையொழுக்கு இங்கின்றி, விட்டுவிட்டு இயலுநிலை யமைகின்றது.

இறுதி யிரு வண்ணங்களான உருட்டும் முடுகும் தொடர்புடையன. அராகம் பயிலும் நிலையே இரண்டிற்கும் உரியது. முன்னதில் நாற்சீரடியில் இப்பயிற்சி அமையப் பின்னதில் அந்நிலை விரிந்து நீண்ட அடிகளிலும் வருதல் குறிக்கப்படுகின்றது.

வண்ணம் தாமே நாலைந்து என்ப

— தொ-செ 212

அவை தாம்,
பாஅ வண்ணம், தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்

அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணம் என்று
ஆங்கனம் மொழிப அறிந்திசி னோரே

— தொ-செ 213

அவற்றுட் பாஅ வண்ணம்
சொற்சீர்த்து ஆகி நூற்பாற் பயிலும்

— ,, 214

தாஅ வண்ணம்
இடையிட்டு வந்த எதுகைத்து என்ப

— ,, 215

வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப்பயிலும் — ,, 216

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே — ,, 217

இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே — ,, 218

அளபெடை வண்ணம் அளபெடை பயிலும் — ,, 219

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும் — ,, 220

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும் — ,, 221

சித்திர வண்ணம்
நெடியவும் குறியவும் நேர்ந்து உடன் வருமே — ,, 222

நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும் — ,, 223

அகப்பாட்டு வண்ணம்
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே — ,, 224

புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும் — ,, 225

ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும் — ,, 226

ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும் — ,, 227

எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும் — ,, 228

அகைப்பு வண்ணம் அறுத்துஅறுத்து ஒழுகும்

— தொ-செ 229

தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்

— ,, 230

ஏந்தல் வண்ணம்
சொல்லிய சொல்லில் சொல்லியது சிறக்கும்

— ,, 231

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்

— ,, 232

முடுகு வண்ணம்
அடி இறந்து ஓடி அதனோர் அற்றே

— ,, 233

வண்ணம் தானே இவைஎன மொழிப

— ,, 234

மெல்லிசை ஏந்தல் ஒழுகு உருட்டு எண் ஒருவே முடுகு
வல்லியல் பா அகப்பாட்டு நலிவு அகைப்போடு இயைபு
சொல்லிய சித்திரம் தாவு புறப்பாட்டு அளபெடையும்
வல்லிசை தூங்கல் நெடுஞ்சீர் குறுஞ்சீர் இவை வண்ணமே

— வீ.சோ 142

வண்ணம் தானே நாலைந்து அவைதாம்
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணம் என்று
ஆங்கு என மொழிப அறிந்திசினோரே

— இ.வி 757

வண்ணம் என்ப வலி மெலி இடை ஒழுகு
எண் உருட்டு என முடுகு ஏந்தல் தூங்கல்
அகைப்புப் புறப்பாட்டு அகப்பாட்டு அளபு
பாவு நலிபு தரவு ஒரூஉக்
குறில் நெடில் சித்திரம் கூறுபாடு இருபதே

— தொ.வி 250:2-6

எதுகை முதல்அடி எல்லாம் வல்லினம்
மிகுவன வல்லிசையாம் விளம்பிடினே

— மு.வீ-யா.ஒ 22

மெல்லினம் மிகுவன மெல்லிசை ஆகும்
— மு.வீ-யா.ஒ 23

இடையினம் மிகுவன இடையிசை எனவே
— ,, 24

விரவி மூவினமும் மிகுவன ஒழுகிசை
— ,, 25

எண்ணி வருவன எண் எனப்படுமே
— ,, 26

உருட்டாம் அராகத்தொடு வருவனவே
— ,, 27

அராகமாய் வருகுவது அன்றி அடிமுதல்
ஈறும் தோன்றுமல் தொடர்ந்து எழும்பிய
அடியான் வருவன முடுகு ஆகும்மே
— ,, 28

நேர்இறு உரிச்சீர் மிகவந்து ஏந்திய
ஓசையின் வருவன ஏந்திசை ஆகும்
— ,, 29

நிரைஇறு உரிச்சீர் மிக்குத் தூங்கிய
ஓசையின் வருவன தூங்கிசை ஆகும்
— ,, 30

அறுத்துஅறுத்து இயல்வன அகைப்பு ஆகும்மே
— ,, 31

முடிந்ததுபோல முடியாது வருவன
புறப்பாட்டு என்மனர் புலமையோரே
— ,, 32

முடியாததுபோல் முடிந்து வருவன
வகைப்பாட்டு என்மனர் அறிந்திசினோரே
— ,, 33

அடிதொறும் அளபெடை எதுகையாக
வருவன அளபாம் வகுக்குங்காலே
— ,, 34

நூற்பால் உரைத்து வருவன பாவே
— ,, 35

அடிதொறும் எதுகையாக ஆய்தம்
கொடுவரல் நலிபாம் குறிக்குங் காலே
— ,, 36

ஓரடிக்கு ஓரடி மத்தியில் விட்டு அடி
எதுகை ஒன்றி இயல்வன தரவே
— ,, 37

அடிதொறும் ஒன்றுத் தொடையொடு வருவன
ஒரூஉ எனப் பெயர் உரைக்கப்படுமே
— ,, 38

குற்றெழுத்து இயைந்து வருவன குறுஞ்சீர்
ஆகும் என்மனார் அறிந்திசினோரே

— மு.வீ-யா.ஒ 39

நெட்டெழுத்து இயைந்து வருவன நெடுஞ்சீர்
ஆகும் என்மனார் அறிந்திசினோரே

— ,, 40

நெடிலும் குறிலும் நீங்காது வருவன
சித்திரம் என்மனார் தெளிந்திசினோரே

— ,, 41

## வனப்பு

வனப்பு எனும் பெயர்நிலை தொல்காப்பியத்திற்கு உரியதா என்பது ஐயமே. பேராசிரியர் நச்சினார்க்கினியர் உரைப்படி 'வனப்பியல் தானே வகுக்குங்காலை ..' எனும் நூற்பா அடி அமைவதால், ஏற்றுக் கொள்ளப் படுகின்றது. பிற்கால யாப்புக்கள் சில இப்பெயரைப் பயன்படுத்துகின்றன. பெயராட்சி பிற்காலத்ததாகவே இருக்கலாம். யாப்பருங்கலமும் வனப்பெனுது 'அம்மை முதலிய ஆயிரு நான்மையும்' எனக் கூறுவது இங்கு இணைத்து நினைத்தற்குரியது.

தொல்காப்பியம் உறுப்பு வகைகளை இருவகையாகப் பிரிக்கும் நிலை முன்பு எடுத்தியம்பப் பட்டது. பிற்பகுப்பில் அமையும் அம்மை முதலிய எட்டையுமே 'வனப்பு' என்ற பொதுப் பெயரால் குறிக்கின்றனர். அழகு எனப் பொருள்பெறும் இதற்கு விளக்கம் தருவது எளிதன்று. அழகுக்குவிளக்கம் கொடுப்பது கடினம்தானே. உறுப்புநிலைச் செவ்வியால் ஒரு இலக்கியம் அல்லது செய்யுள் பெறும் அழகு என இதனை விளக்கலாம். தொடர்நிலைச் செய்யுளின் இலக்கணம் கருதி இவை தரப்பட்டதாக உரையாசிரியர் கருதுவர். இலக்கிய வகைகளின் தனித்த ஒவ்வோர் இயல்புகளை இவை காட்டி நிற்கின்றன என்பது வெளிப்படை.

பொதுநிலையில், இவ்வனப்புள் சிலவற்றின் மொழிநடை வேறுபாடு பற்றிய குறிப்புக்கள் அவ்வவற்றின் விளக்கங்களில் அமைகின்றன. அம்மைக்குச் 'சின் மென் மொழி'யும் அழகுக்குச் 'செய்யுண் மொழியும்' தோலுக்கு 'இழுமென் மொழி' 'பரந்த மொழி' என்பனவும் புலனுக்குச் 'சேரி மொழி'யும் இழைபுக்கு ஓங்கிய மொழி'யும் உரியனவாகத் தரப்படுகின்றன. தொன்மை-விருந்து-இயைபு என்பனவற்றிற்கே இம் மொழிப் பண்பு குறிக்கப்படவில்லை. விளக்கம் தரு நிலையில் எதிர்மைப்பண்பு தெளியச் சின்மென் மொழி-பரந்த மொழி; செய்யுண் மொழி-சேரி மொழி; இழுமென் மொழி-ஓங்கிய மொழி என அமைந்தமை இன்னும்

நினைத்தற்குரியது. தொன்மையில் பழமையும் விருந்தில் புதுமையும் காட்டும் போதும் எதிர்மை தெளிகின்றது.

உரைகளில் காணும் சான்றுகள் இவ் வெட்டையும் தனித்தனி இலக்கிய வகைகளென உணரவே துணைசெய்யும். அதன்படி, அம்மை-அறவகை இலக்கியங்களையும், அழகு-தொகை வகை இலக்கியங்களையும், தோல்-பொருட்டொடர்நிலைச் செய்யுளாகிய பெருங்காப்பியங்களையும், விருந்து-முற்கூறிய யாப்புக்களன்றிப் பின்னர்ப் புதிதாக எழுந்த கோவை, உலா போன்றவற்றையும், இயைபு-ஈற்றடிப்படையில் அமைந்த காப்பியங்களையும், புலன்-கூத்திலக்கியத்தையும், இழைபு-இசை இலக்கியத்தையும் குறித்தன எனலாம்.

அமைதிப்பட்டு நிற்றலின் அம்மை எனச் சிறப்பிக்கப்படும் இவற்றின் முதல்வகை சில, மெல்லிய மொழிகளால், அடிநிமிர்பின்றி வருகின்ற தனிச் செய்யுளையோ அத்தகு பல் செய்யுட்களின் தொகுதியையோ குறிக்கின்றது. 'தாய பனுவல்' என்பதால் முப்பொருள் பற்றிய விளக்கங்களாக மட்டுமே நிற்பனவும் இலக்கிய நயம் பொருந்தி அமைவனவும் ஒன்றிக் கலந்த இயல்பு நினைக்கப் படுகின்றது. கீழ்க்கணக்கு அம்மையின் பாற்படுத்தப்படுகின்றது

செய்யுள் மொழிகளால் யாத்து அழகுறப் புனைந்து ஆக்கப் பட்ட தன்மை 'அழகு' எனப் படுகின்றது. ஆசிரியச் செய்யுளொன்றும் சங்கத் தொகை இலக்கியங்களும் இதற்குச் சான்றாகத் தரப்படுகின்றன.

தொன்மை, பழைய கதை பொருளாக உரையும் பாட்டும் இடைமிடைந்தது என்பது பொதுக் கருத்து. தலைமுறை தலைமுறையாகக் கூறப்பட்டு வரும் பழங்கதையைப் பொருண்மையாகக் கொண்டதே இத் தொன்மை எனும் வனப்பு என்பதும் உண்டு. உரை என்பதனை அறம்/நீதி என, யாப்புப் பற்றி நினைந்த போது கொண்டதுபோல் கொள்ளின் அறக் கருத்து வெளிப்பாடாக உருப்பெற்ற பழம் பொருளினையுடையது தொன்மை என ஏற்றுக் கொள்ளலாம். காப்பியங்கள் காட்டுக்களாகின்றன.

இருவகை இயல்புகள் 'தோல்' என்பதன் விளக்கத்தில் அமைகின்றன. இன்னோசை பயக்கும் (மெல்லிய)சொற்களால் விழுப்பமுடைய பொருண்மேல் தோல் வருகின்றது. அத்துடன் விரிவும் விளக்கமும் பொருந்திப் பல அடிகளாகப் பரந்து வருநிலையும் இதன்கண் அடங்குகின்றது. முன்னதற்கு கொச்சகமும் பின்னதற்கு அகவலும் யாப்பாக நினைக்கப்படல் உண்டு. இரண்டும் இணைந்த நிலையில் சிலம்பைத் தோல் எனக் காட்டுகின்றார் அடியார்க்கு நல்லார். தோலும் தொன்மை போன்றே பழைய

பொருளைப் பொருண்மையாக உடைத்து என்றும், ஆயின் அதனைப் புதுமையுடன் கூறி வேறுபடுகின்றது என்றும் உரையாளர் கருதுவர். இராமாயண பாரதக் கதைகளை இங்கு நினைக்கலாம்.

'விருந்து' என்ற வனப்பு, சொல் நிலையில் புதுமை என்ற பொருண்மையினது. காப்பியம் தரும் விளக்கமும், வகைநிலையிலும் இது புதுமை குறித்து வந்ததை நிறுவுகின்றது. தொன்மைக்கு எதிராக அமைந்ததோ என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றது. 'புதுவது கிளந்தயாப்பு' என்ற தொடரால், இவ் இலக்கிய வகையின் பொருண்மையிலும் வடிவிலும் புதுமை கருத வாய்ப்புண்டு.

இயைபு என்பது வனப்பிற்கு முன், தொடையிலும் வண்ணத்திலும் நினைக்கப்பட்ட ஒன்று. வனப்பாக அவ் இயைபுக்குத் தரும் விளக்கம் இதனைத் தொடைஇயைபுடன் இயைபுபடுத்தியே நினைக்கத்தூண்டுகின்றது. ஈற்று மெய்யெழுத்து ஒன்றேயாகிப் பல பாடல் தொடரும் இத்தன்மை, பெருங்கதை, மணிமேகலையின் 'என்' ஈற்றுக் காதை முடிவுகளோடு இணைத்து விளக்கப்படுகின்றது. பொருட் டொடராகவோ சொற்றொடராகவோ அமையும் இலக்கியச் சிறுகூறுக இது உருப்பெறுகின்றது.

'புலன்' அழகோடு மாறுபட்டு அமைகின்றது. இங்குத் தெரிந்த மொழி (சேரி மொழியாகிய பாடி மாற்றங்கள்-Dialects) பயன்பட, அழகில் செய்யுள் மொழி (Literary language) பயன்படுகின்றது. ஆழ் ஆராய்ச்சியின்றியே புரிந்து கொள்ளும் இயல்புடைய எளிமையான மக்கள் இலக்கியங்களை இங்கு நினைக்கலாம். புலன் அறிவு போன்று (sense perception) இதுவும் இயல்பாக, கடினமற்று இருப்பதனால் இப்பெயர் பெற்றதுபோலும்.

இழைபு எனும் எட்டாம் வனப்புவகை நூற்பா நிலையிலேயே புரிந்து கொள்ளக் கடினமாகவே அமைந்துள்ளது. எழுத்து, அடி, மொழிநிலை, ஆகிய மூவியல்புகள் பற்றிய வரையறை இவண் கருதப் படுகின்றது. வல்லொற்றுக்கள் விரவாது, ஐயடி வகைகளும் பயின்று சிறந்த மொழியமைப்புடன் வரல் எதிர்பார்க்கப் படுகின்றது. முன் நூற்பாக்கருத்துடன் இணைத்துப் புரிதல் எளிமையும் சுட்டப்படுகின்றது. 'ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடுக்காது' என்பதனைப் பின் வரும் அடிக்கு அடையாக்கி, மெய், குற்றிகர உகரங்களை எண்ணாது அமைந்த ஐவகையடி என இணைத்தலும் உண்டு.

இவ் வனப்புக்கள், பிற்கால இலக்கணங்களில்கூடத் தொடரப் படாது வீழ்ந்தமைக்கு இவற்றைத் தெளிவாகப் புரிந்து தெரிந்து கொள்ள இயலாமையே காரணமாயிற்று எனலாம்.

## அட்டவணை

| உரை | அம்மை | அழகு | தொன்மை | தோல் | விருந்து | இயைபு | புலன் | இழைபு |
|---|---|---|---|---|---|---|---|---|
| இளம் பூரணர் | | | இராம சரிதமும், பாண்டவ சரிதமும் | | | | | |
| பேராசிரியர் | பதினெண் கீழ்க்கணக்கு கார்நாற்பது, களவழி நாற்பது | நெடுந் தொகை முதலாய தொகை எட்டும் | பெருந் தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை | பொருட்டொடர் நிலை | முத்தொளாயிரம், கலம்பகம், அந்தாதிச் செய்யுள் | மணிமேகலை, கொங்குவேளிரால்செய்யப்பட்ட தொடர்நிலை 'ன்'ஈற்றன, | விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுள் | இசைப் பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன |
| நச்சினார்க் கினியர் | ,, ஆசாரக் கோவை | ,, | ,, சிலப்பதிகாரம் | சிந்தாமணி முதலிய தேசிகப்பா | முத்தொளாயிரம், கலம்பகம், புதிய இலக்கியங்கள் | மணிமேகலை, உதயணன் கதை, அந்தாதிச் சொற்றொடர் | விளக்கத்தார் கூத்து | ,, |
| உரையிலிருந்து தெரிய வரும் செய்தி | அறநூல் வகைகள் | தொகை, அகநூல் வகைகள் | இதிகாச வகைகள் Primitive Epics or Epics of Recitation | மகா காவியங்கள் | பிரபந்த வகைகள் | காப்பிய வகை | கூத்திலக்கியம் | இசை இலக்கியம் |

வனப்பியல் தானே வகுக்குங் காலை
சின்மென் மொழியால் தாய பனுவலோடு
அம்மை தானே அடிநிமிர்பு இன்றே

— தொ-செ 235

செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகு எனப்படுமே

— ,, 236

தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே

— ,, 237

இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்
தோல் என மொழிப தொன்மொழிப் புலவர்

— ,, 238

விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே

— ,, 239

ஞகாரை முதலா ளகாரை யீற்றுப்
புள்ளி இறுதி இயைபு எனப்படுமே

— ,, 240

சேரி மொழியால் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன் எனமொழிப புலன் உணர்ந்தோரே

— ,, 241

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஓங்கிய மொழியான் ஆங்ஙனம் ஒழுகின்
இயைபின் இலக்கணம் இயைந்தது ஆகும்

— ,, 242

அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயையே புலனே இழை எனப்
பொருந்திய எட்டும் வனப்பு; அவை எட்டனுள்
அம்மை தானே அடிநிமிர்பு இன்றிச்
சின்மென் மொழியால் சீர்புனைந்து யாத்தலும்
செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகு எனப்படுதலும்;
தொன்மை தானே சொல்லுங்காலை
உரையொடு புணர்ந்த பழைமை மேற்று ஆகலும்;
இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந்து ஒழுகினும்
அன்னவை இரண்டும் தோல்என அறைதலும்;

விருந்து தானே பொருந்தக் கூறின்
புதுவது புனைந்த யாப்பின்மேற்று ஆகலும்
ஞணநம னயரல வழள வென்னும்
புள்ளி இறுதி இயைபு எனப் புகறலும்;
தெரிந்த மொழியால் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன் எனப் படுதலும்; புலன் நன்கு உணர்ந்தோர்
ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது
குறளடி முதலா ஐந்தடி காறும்
ஓங்கிய சொல்லால் ஆங்கனம் மொழியின்
இழைபு எனப்படுதலும் எய்தும் என்ப

— இ. வி 754

தொல்காப்பியத்தை யடிப்படையாக்கிப் பிற யாப்புக்களை இணை யடியாக்கித் தொகையை அமைக்கும் போது வனப்பே இறுதி உறுப் பாக இயல்கின்றது ஆயின் காப்பியம் தவிரப் பிற நூற்களின் ஒழி புப்பகுதிக் கருத்துக்கள் சிலவற்றை உறுப்புப் போன்றே தொகை யாகத் தரத் தேவையாகின்றது. இக் கருத்துக்களில் சில காப்பியர் கையாண்டனவே.

கூன், வகையுளி என்பனவற்றைத் தனி உறுப்பு என முழுநிலை யில் கொள்ள இயலாவிடினும் அவற்றை இணையுறுப்பு என இணைத்துக் கொள்ளலாம்.

சொல்விகாரங்கள் ஆறு, எழுத்துருப் பெறாத குறிப்பிசையை அசையலகுட் படுத்தல், ஒப்புமை பற்றிச் சிறிதே வேறுபட்டன வற்றையும் இலக்கணத்திலுட்படுத்துதல் பொருளடிப்படையில் புகுந்த வாழ்த்து, வசை, புனைந்துரைகள் எல்லாம் ஒழிபியல் கருத் தாக இணைகின்றன.

நல்யாப்புப் புனைவுக்கு நீக்கப்பட வேண்டிய இழுக்குகள் இவை யிவை என்ற உணர்வுடன் அமைக்கப்பட்டன ஆனந்தம் பற்றிய கருத்துக்கள். இது உறுப்பு அல்லாவிடினும் இலக்கணக் கூறாக இங்கு இணைகின்றது.

## கூன்

கூன் பற்றிய கருத்து தொல்காப்பியத்தில், அடிபற்றிக் கூறு மிடத்து வந்தது. வஞ்சிப்பாவில், அதாவது வஞ்சியடிகளில் அசையே கூனாகவரும் எனவும், நாற்சீரடியாலான ஏனைய பாக் களில் சீர் கூனாக வரும் எனவும் தொல். கூறும். பிற்கால இலக் கணங்களில், ஒழிபியற் பகுதியில் இக்கூன் பற்றிய செய்திகளமை யும். கூனைத் தனிச்சொல் என்றும் குறித்துள்ளனர் இலக்கணிகள்,

கூன் என்பது, இயல்பாக அமையும் அடிக்குமுன், மிகுதியாக நிற்கும் சொல் ஆகும். அது அசையோ சீரோ ஆகலாம். முதலில் மட்டுமின்றி அடியின் இடையிலும் இறுதியிலும் கூட இக்கூன் வரலாம் என்ற கருத்து பிற்காலத்து ஏற்பட்டது.

அசை கூனாகும் அவ்வயி னான

— தொ-செ 48

சீர் கூனாதல் நேரடிக்கு உரித்தே

— ,, 49

உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின ஆகியும்
எழுவாய் இடமாய் அடிப்பொருள் எல்லாம்
தழுவ நடப்பது தாம் தனிச்சொல்லே

— கா. பா 87

வஞ்சி மருங்கின் இறுதியும் ஆமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே

— ,, 88

தனியே அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்
அஃது இறுதியும் வஞ்சியுள் நடக்கும்† என்ப

— அவி 105

அடிமுதல் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப

— யா. க 94

பொருளோடு அடிமுதல் நிற்பது கூன்; அதுவே பொருந்தி
இருள் சேர்விலா வஞ்சி ஈற்றினும் நிற்கும்

— யா. கா 43:1,2

பாமுதல் நிற்பது கூன்; வஞ்சி யீற்றினும் பாதத்துள்ளும்
ஆம் ... ... ...

— வீ. சோ 120:1,2

வரு தனிச்சொல் கூன் பொருளோடு அடிமுன் வரும் அதுவே
வஞ்சி ஈற்றினுமாம்

— சி. பா-ஒ 5

அடிமுதல் பொருள்உற வருவது கூன்; அஃது
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப

— இ. வி 751

அடிமுதற்கண் பாப்பொருளைத் தழுவித்
தனியே நிற்பது கூனும்; அக்கூன்
வஞ்சியுள் இடை கடை முதலினும் வருமே

— முத்து வீ-யா. ஒ 21

---

† இயலும் என்ற பாட வேறுபாடு உண்டு

## வகையுளி

காப்பியர், அசை எனும் உறுப்பை விளக்கி முடிந்தபின், சீரை விளக்கப் புகுமுன் இரண்டிற்கும் பொதுவான ஒரு விதியைத் தந்தார். அசை, சீர் பகுப்புக்கள், இசையுணர்வுடன் அமைக்கப்பட வேண்டும் என்ற அவ் எண்ணத்தினை இளம்பூரணர் 'வகையுளி' என்ற பெயருடன் விளக்கினர். பிற்கால இலக்கணிகள் இச்சொல்லை யெடுத்து ஆளினும், அ. சா, இ. வி மட்டுமே விளக்கம் அமைக்கின்றன.

அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே

— தொ-செ 11

எழுத்தல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்து
ஒழுக்கலும் அடியொடு தளை சிதையாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே

— அவி 104

அருள்நோக்கும் நீரார் அசைசீர் அடிக்கண்
பொருள் நோக்காது ஓசையே நோக்கி-மருள் நீக்கிக்
கூம்பவும் கூம்பாது அலரவும் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு

— அ. சா 67

அசையும் சீரும் அடியும் எல்லாம்
இசைய வருபொருள் இயைபு நோக்காது
ஓசையே குறிக்கொண்டு ஒடுங்கவும் விரியவும்
அலகிடல் வகையுளி ஆகும் என்ப

— இ.வி 752

பிற இணையுறுப்புக்களை நினைக்கும்போது, ஒப்பு என்பது தொல், கலம், வீ.சோ, இ. வி என்பனவற்றில் விரிக்கப்பட வாழ்த்து, வசை, குறிப்பிசை, புனைந்துரை என்பன இலக்கண விளக்கத்தில் மட்டுமே ஓரளவேனும் விளக்கப்பட்டன. கலம், காரிகை முதலியவற்றின் ஒழிபு நூற்பாக்கள் பெயர் சுட்டுவதுடன், அமைந்துவிட்டமையால் அவையும்இங்கேயே இணைக்கப்படுகின்றன.

செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவ உளவெனினும் வந்தவற்று இயலால்
திரிவின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே

— தொ-செ 243

ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கு அடி வரினும் அப்பாற் படுமே

— அவி 102

தத்தம் பாவினத்து ஒப்பினும் குறையினும்
ஒன்றொன்று ஒவ்வா வேற்றுமை வகையால்
பாத்தம் வண்ணம் ஏலா வாகில்
பண்போல் விகற்பம் பாவினத்தாகும்

— அவி108

மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவும் கொளலே

— யா. க 93

நிரல்நிறை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
எழுத்து அல் இசையை அசைபெறுத்து இயற்றலும்
வழுக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்
அம்மை முதலிய ஆயிரு நான்மையும்
வண்ணமும் பிறவும் மரபுளி வழாமைத்
திண்ணிதின் நடாத்தல் தெள்ளியோர் கடனே

— யா. க 95

இனி ஒழிந்த
மருள் தீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசை வனப்புப்
பொருள்கோள் குறிப்பிசை ஒப்பும் குறிக்கொள்
பொலங்கொடியே

— யா. கா 43:2-4

இன்னும் வரினும் அடக்குக போலி என்று ஏற்ப, முன்னூல்
பன்னும் அவர்க்கும் உடம்பாடு என அறி பைந்தொடியே

— வீ.சோ 125

வேறும் அடியால் இசையால் கலையால்
சூழ் எழுத்து எண்ணால் வகுத்த வகுப்பால் காரணத்தால்
பெருகியிடும் கால வழக்கால் பலவாம் செய்யுள்
பெயர் எழுத்து முதல் எட்டு வகை விரிவும் குவிவும்
பரவு வகையுளி விகாரம் வண்ணம் மற்றும்
பலவும் அடங்காது அடக்கிப் பகருவர் சான்றோரே

— சி. பா-ஒ 5

வாழ்த்து மெய்வாழ்த்து இருபுற வாழ்த்து எனப்
போற்றல் வேண்டும் வசையும் அவ்வகைத்தே

— இ. வி 753

எழுத்து அல் இசையென அசைசீராக
நிறைக்கப்படுதல் குறிப்பிசை என்ப

— இ. வி 755

ஒப்பு எனப்படுவது ஓதிய செய்யுளுள்
தப்பினும் ஒருபுடை சார்த்தி மற்று அவற்றையும்
செப்பிய பாவொடு சேர்த்தனர் கொளலே

— ,, 756

உரைக்கப்படும் பொருட்கு ஒத்தவை எல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை; அவை தாம்
பெரிதினைச் சுருக்கலும் சிறிதினைப் பெருக்கலும்
என இரண்டாகும் என்மனார் புலவர்

—இ.வி 758

ஆர்வனப்பு வகையுளியாம் முதுசொல் வசை வாழ்த்து
அம்மானை முதல் ஒப்பால் வருங்காலச் செயுளே

— சுவாமி 161

## ஆனந்தம்

ஆனந்தம் எனும் சொல், குற்றம், பிழை, இழுக்கு எனும் உணர்வுடன் இங்குக் கையாளப்பட்டுள்ளது. பாடலின்கண் வரலாகா இழுக்குகள் கீழ்வரும் அவி, வெ. பா, இ. வி, மு. வீ நூற்பாக்களில் விரிக்கப்படுகின்றன. பிற்காலப் பாட்டியல் உணர்வுடன் இதனைச் சார்த்திப் பார்க்கும்போது, பாடல் மட்டுமன்று, பாடியோனும், பாடப் பட்டோனும் கூட இதனால் இழுக்கடைவர் என்பது தெரிகின்றது.

முன்னிலை நெடிலு மாவு மாவும்
னம்மிகப் புணரு மியங்குதிணையான

— அவி 103

துணிதற்கு அரிது பொருள் என்றும் சோர்வு
பணிவுற்ற சொல்மேல் பகுத்தும்-அணிபொருட்டால்
மற்றும் உண்டென்றும் உரைப்போர் வழிச்சொல்லின்
இற்றன்றே பாவின் இழுக்கு

— வெ. பா-பொ 6

உறுபுகழ் ஆக்கிய உரவோர் கூறிய
அறுவகையான் உறும் ஆனந்தம் தாம்
இயனெறி திரிந்த எழுத் தானந்தமும்
சொல்முறை வழீஇய சொல் ஆனந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருள் ஆனந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பானந்தமும்
தூக்குநிலை திரிந்த தூக்கானந்தமும்
தொடையியல் திரிந்த தொடையானந்தமும்
நடையறி புலவர் நவைஇவை என்ப

— இ. வி 887

நிறுவிய பொருளுக்கு இறுதியைத் தருவது
அறிய வேண்டா ஆனந்தம்; அதுதான்
இயற்பெயர் சார்த்தி எழுத்து அளபு எழினே
இயற்பாடு இல்லா எழுத்தானந்தமும்
அப்பெயர் மருங்கின் மங்கலம் அல்லாத்

தொழில்சொல் புணர்ப்பிற் சொல்லானந்தமும்
என இரண்டாகும்; இவை புணராமல்
நினைவதை யாப்புஎன நிகழ்த்துவர் புலவர்

— இ.வி 759

யாப்பினுள் எழுத்து சொல் பொருள் யாப்பு அணிக்
குற்றமும் ஐவகை, குறிக்கும் ஆனந்தமும்
வாராது உரைப்பது வழுவில ஆகும்

— மு. வீ-யா. ஒ 42

எழுத்துக் குற்றம் எழுத்து இலக்கணத்தில்
வழுத்திய முறையின் மாறுபட்டு
வருவதாம் என வழுத்தப்படுமே

— ,. 43

ஏனைய குற்றமும் இவற்றோரற்றே

— ,, 44

ஆனந்தம் ஐவகை அறையுங்காலை
எழுத்தின்நிலை பிறழ்ந்தன எழுத்தானந்தம்

— ,, 45

சொல்ஆனந்தம் சொல்நிலை பிறழ்ந்தன

— ,, 46

பொருள்நிலை பிறழ்வன பொருள் ஆனந்தம்

— ,, 47

யாப்பின் நிலை பிறழ்வன யாப்பானந்தம்

— .. 48

அணிநிலை பிறழ்ந்து வருவன அணி ஆ
னந்தம் ஆம் என நவிலப்படுமே

— ,, 49

# பாட்டியல்

பாட்டியல் என்பது பாட்டின் இயல்பைக் கூறும் நூல் (பாட்டிலக்கணம்) அல்லது நூற்பகுதி எனப் பொருள்படும். பாட்டு என்ற சொல் இங்குப் 'பா' வாலாகிய இலக்கியத்தையும் குறித்து நிற்கின்றது எனக் கொள்ளலாம்.

பாட்டியல் செய்யுளியலிலிருந்து மாறுபட்டு அமைவதுஎன்பது யாவரும் அறிந்ததே. யாப்புக் கண்ணோட்டத்தில் ஏற்பட்ட பிற்கால மாறுபாடு என இதனைக் குறிக்கலாம்,

பாட்டியலைப் பொதுவாக இருகூறாகப் பிரிக்கலாம். ஒன்று தனிப் பாடலின் அல்லது இலக்கியத்தின் முதற்பாடலின் முதல்மொழியில் நினைக்கப்படவேண்டிய பத்துப் பொருத்தங்களைப் பற்றியது. இதனுடன் சார்த்தி, பாக்களுக்கு நிலம், நிறம், கடவுள், சாதி, மலர் முதலியன வகுக்கப்படலையும் நினைக்கலாம். இவற்றைப் பெரும்பாலும் ஒழிபியல் கருத்தாகவே நூலாசிரியர் தருகின்றனர்.

இரண்டாம் பகுதி, சிற்றிலக்கியம், காப்பியம், தொகைகள் முதலிய இலக்கியங்களின் இயல்பைக் கூறுகின்றது.

எனவே, ஒரு பகுப்பு பொதுவாகப் பாவையும், மறு பகுப்பு, தனி இலக்கிய வகையையும் ஆய்கின்றது எனத் தெளியலாம்.

## பொருத்தம்

பாட்டின் முதன்மொழியில் பொருத்தவேண்டிய தன்மைகள் பொருத்தம் எனப்படும். பன்னிருபாட்டியல் பன்னிரு பொருத்தங்களை நினைக்கின்றது. எழுத்துப்பற்றி வரும் ஒன்பது பொருத்தங்களை முதலியலிலும், சொல்-சீர் பற்றி வரும் மூன்றைச் சொல்லியலிலும் தருகின்றது. பிற இலக்கணங்களில் இந்நிலை இல்லை. பன்னிரு பாட்டியல் முழுநிலையில் பொருத்தம் என்ற பெயர்க்குறிப்பைத் தரவில்லை; சில நிலைகளாகவே சுட்டுகின்றது: பிற்காலப் பாட்டியல்கள் இச்சொல்லை முழுமையாகக் கையாண்டன.

சமய எண்ணங்கள் மிகுந்த பிற்காலத்தில் எழுத்துக்களையும் அந்தக் கோணத்தில் பார்க்கின்ற உணர்வு ஏற்பட்டது. இது அறிவியலோடு பொருந்தும் என்று கூறுவதில்லை. பிரம்மன், விஷ்ணு சிவன்-இவர்கள் இன்னின்ன எழுத்துக்களைத் தோற்றுவித்தார்கள் என்பதும், நால்வருணங்களில் எழுத்துக்களை நோக்குதலும், அமுதவெழுத்து நஞ்செழுத்தெனப் பார்த்தாலும் எல்லாம் ஏற்றுக் கொள்ளத்தக்கன என்று கூறுவதற்கில்லை. இருப்பினும், பாக்களை மங்கலத்துடன் தொடங்குதல் வேண்டும் என்ற நோக்கம் காரண மாக இந்நிலையைப் பத்து (12) வகைப் பொருத்தமாகப் பகுத்து நோக்கினர் என்று தோன்றுகிறது.

| ப. பா | | வெ.பா | ந.பா | சி.பா | இ வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | பிறப்பு | | | | | | | |
| 2. | வருணம் | 7 | 7 | 7 | 4 | 7 | சாதி 7 | 7 |
| 3. | கதி | 9 | 9 | 9 | 9 | 9 | 9 | 9 |
| 4. | உண்டி | 6 | 6 | 6 | 5 | 6 | 6 | 6 |
| 5. | பால் | 5 | 5 | 5 | 3 | 5 | 5 | 5 |
| 6. | தானம் | 4 | 4 | 4 | 6 | 4 | 4 | 4 |
| 7. | கன்னல் | | | | | | | |
| 8. | புள் | | | | | | | |
| 9. | நாள் | 8 | 8 | 8 | 8 | 8 | 8 | 8 |
| 10. | கணம் | 10 | 10 | 10 | 10 | 10 | 10 | 10 |
| 11. | மங்கலம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| 12. | பெயர் | | | | | | | |
| | சொல் | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 |
| | எழுத்து | 3 | 3 | 3 | அக்கரம் 7 | 3 | 3 | 3 |

ஏத்திய ஒத்துஇயல் எழுத்துஇயல் இயம்பின்
பிறப்பும் வருணமும் சிறப்பாம் கதியும்
இருவகை உண்டியும் மூவகைப் பாலும்
பொருவில்தானமும் கன்னலும் புள்ளும்
நயம் பெறுநாளும் இயம்புதல் கடனே

— ப. பா-எ 2

நவையறு சீர்க்கணம் மங்கலச்சொல் பெயர்
இவையொரு நாளுக்கு இயம்புதல் சொல்லியல்

—ப. பா-சொ 1

தொகுத்து உரைத்த மங்கலம் சொல் எழுத்துத் தானம்
வகுத்தபால் உண்டி வருணம்-பகுத்த நாள்
தப்பாக்கதி கணம் என்று ஈரைந்தின் தன்மையினைச்
செப்புவதாம் முன்மொழியின் சீர்

வெ. பா-மொ 2

மங்கலம் சொல் எழுத்து எண்ணியதானம் வரும்இருபால்
பொங்கிய உண்டி வருணம் பகுத்திடும்நாள் பொருத்தம்
தங்கிய நாற்கதி எண்கணம் என்று தமிழ்தெரிந்தோர்
இங்கு இவை பத்தும் முதன்மொழியாம் என்று இயம்புவரே

—ந.பா-பொ 1

பகர்செய்யுள் மங்கலம் சொல் எழுத்து தானம்
பால் உண்டி வருணம் நாள் கதியே என்று
புகரில் கணம் எனப்பத்தும் பிறங்கு கேள்விப்
புலவர் புகழ் முன்மொழிக்குப் புகல்வர் செம்பொன்
சிகர கிரி எனப் பணைத்துப் புடைத்து விம்மித்
திரண்டு எழுந்து வளர்ந்து இளகிச் செறிந்த கொங்கைத்
தகரமலர்க் குழல் கருங்கண் குமுதச் செவ்வாய்ச்
சரிவளைக்கைக் கொடி என்னத் தயங்கும் மாதே

- சி.பா-பொ 1

மங்கலம் சொல் பால் வருணம் உண்டி
தானம் அக்கரம் நாள் தப்பாக்கதி கணம்
ஆன ஈரைந்தும் அம் முதற்சீர்க்குப்
பொருத்தம் என்னத் தெரிந்தனர் புலவர்

— இ.வி 770

முதன்மொழிப் பொருத்தம் தந்திடுங் காலை
மங்கலம் சொல் எழுத்துத் தானம் பால் உணக்
கங்கில் வருணம் நாள் கதி கணம் ஈரைந்தே

— தொ.வி 284

துகளறு மங்கலம் சொல்லுடன் எழுத்து
தானம் பால் உணச் சாதி நாள் கதி
கணம் ஒருபத்தும் முன்காணுவ பொருத்தம்

- மு. வீ-யா.ஒ 65

......இனிப் பொருத்தம் கூறுதும் மங்கையரே

— சுவாமி 172

மங்கலம் சொல் எழுத்துத் தானம் பாலோடு உண்டி
வருணம் நாள் கதி கணம் பத்தாம் செய்யுட் பொருத்தம்

— ,, 173

## பிறப்பு

இன்ன இன்ன எழுத்து இவ்விவ் இறைவனால் பிறப்பிக்கப் பட்டது என்பது இப்பகுதியில் வரும் செய்தி. இதனைப் 'பொருத்தம்'

என்று கொள்வதற்கில்லை. பன்னிரு பாட்டியல் இதனைத் தனிப் பகுப்பாகத் தர, பிற பாட்டியல்கள் வருணத்துடன் இணைத்துப் பேசுகின்றன. தொ.வி.மு.வீ ஆகியன இதை அங்கும் பேசவில்லை.

சில எழுத்துக்களின் பிறப்புப்பற்றிய கருத்தில் வெண்பாப் பாட்டியல் முதலியன பன்னிரு பாட்டியலிலிருந்து மாறுபடுகின்றன.

சிறப்புடை எழுத்தின் பிறப்பு இனிது உரைப்பின்
முந்நான்கு உயிரும் முதல்வன் படைத்தான்

— ப.பா-எ 3

கண்ணுதல் திருமால் கதிர்வேல்முருகன்
விண்ணவர்தலைவன் வெங்கதிர் வெண்மதி
நிதிக்கோன் கூற்றுவன் நெடுநீர்வருணன்
என்னும் கடவுளர் ஈரிரண்டாக
மன்னிய ஒற்றுவகை வேறு படைத்தனர்

— ,, 4

... ... ...நண்பால்

அரன் அரிசேய் மால் கதிர் கூற்று ஆய்மழை பொன் மெய்க்கும்
பிரமன் படைப்பு உயிர்க்குப் பேசு

— வெ. பா-மொ 11:2-4

விதியவன் முந்நான்கு உயிர்தரச், செய்ய விரிசடைமேல்
நதியவன் நாரணன் சேய் இந்திரன் ஞாலஞ்சூழவரும்
கதியவன் சோமன் தருமன் வருணன் கனகநிதிப்
பதியவன் என்று இவர் மூவாறு உடம்பும் படைத்தனரே

— ந.பா-பொ 11

ஓதிமன் தன்படைப்பு உயிரே, அரன் மால் செவ்வேள்
உம்பர்கோன் பரிதி மதி மறலி நீர்க்கோன்
காதல் அளகேசன் முதல் இவ்விரண்டாய்க்
கம்முதல் மூவாறு ஒற்றும் கருதிச் செய்தார்

— சி. பா-பொ 5: 3, 4

பன்னீர் உயிரும் முன் அயன் படைத்தனன்,
மன்னிய அரன் அரி மயிலோன் புனிதன்
ஞாயிறு திங்கள் நடுவன் வருணன்
ஏயும் நிதிக்கோன் இரண்டிரண்டாகப்
படைத்தனர் ஈரொன்பான் ஒற்றையுமே

—இ. வி 778

... ... உயிர் சிவன், மெய் அயன் மால் செவ்வேள் விண்
இறை கதிர் இந்திரன் வருணன் நிதிக்கோன் ஈரிரண்டாய்
இயற்றினராம்...

— சுவாமி 175

| எழுத்து | ப.பா | வெ.பா | ந.பா | வி.பா | இ.வி | சுவாமி |
|---|---|---|---|---|---|---|
| 12 உயிர் | முதல்வன் | பிரமன் | விதியவன் | ஓதிமன் | அயன் | சிவன் |
| கங | கண்ணுதல் | அரன் | விரிசடை மேல் நதி யவன் | அரன் | அரன் | அயன் |
| சஞ | திருமால் | அரி | நாரணன் | மால் | அரி | மால் |
| டண | முருகன் | சேய் | சேய் | செவ் வேள் | மயி லோன் | செவ் வேள் |
| தந | விண்ணவர் தலைவன் | மால் | இந்திரன் | உம்பர் கோன் | புனிதன் | விண் இறை |
| பம | வெங்கதிர் | கதிர் | ஞாலஞ்சூழ வரும் கதியவன் | பரிதி | ஞாயிறு | கதிர் |
| யர | வெண்மதி | (கதிர்) | சோமன் | மதி | திங்கள் | (கதிர்) |
| லவ | நிதிக் கோன் | கூற்று | தருமன் | மறலி | நடுவன் | இந்தி ரன் |
| ழள | கூற்றுவன் | மழை | வருணன் | நீர்க் கோன் | வரு ணன் | வரு ணன் |
| றன | வருணன் | பொன் | கனகநிதி புதியவன் | அளகே சன் | நிதிக் கோன் | நிதிக் கோன் |

## வருணம்

எழுத்துக்கு வருணம் வகுப்பது தேவையற்ற ஒன்றே. நால் வகை வருணத்தாரைப் புகழ்ந்து பாடும்போதும் அவ்வவர்க்குரிய எழுத்தை முதன்மொழியிற் கொண்டு பாடுக என்ற இக்கருத்து வருணாச்ரதர்மக் கோட்பாட்டின் பொற்காலத்தில் தோன்றிய ஒன்றாக இருக்கலாம். இன்ன இறைவன் படைத்த எழுத்து இன்ன வருணத்தினது எனும்போது, உயர் வருணத்தோர் ஆதிக்கத்தில் சமயமும் ஆட்பட்டிருந்தது என்பதும் தெளிகின்றது. தமிழின் சிறப்பெழுத்தாகிய ழகரத்தைச் சூத்திரசாதி எனக் கூறுவது, வட மொழிச் செல்வாக்கைக் காட்டுகிறதோ?

மக்கட் சாதி நான்கிற்கும் வகுத்த
தத்தஞ் சாதி எழுத்தே அவரவர்க்கு
வைத்துமுன் எடுப்பின் அதுமாண் புடைத்தே
மயங்கினும் வரையார் பயன்பட வரினே

—இ.கா 1

| ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|
| **(1) அந்தணர் சாதி** | | | | | | | |
| | (மறையோர்) | (மாமறையோர்) | (திருமறையோர்) | | (கைசிகர்) | | (ஐயர்) |
| திசைமுகன் | 12 உயிர் | அயன் | 12 உயிர் | 12 உயிர் | 12 உயிர் | 12 உயிர் | உயிர் |
| ஈசன் | கங | அரன் | கங | கங | கங | கங | க |
| நாரணன் | சஞ | மால் | சஞ | சஞ | சஞ | சஞ | முதல் |
| அறுமுகன் | டண | சேய் | டண | டண | டண | டண | ஆறு |
| **(2) மன்னவர் சாதி** | | | | | | | |
| | (அரசர்) | (காவலர்) | (வேந்தர்) | (அரசர்) | | | (அரசர்) |
| இந்திரன் | தந | இந்திரன் | தந | தந | தந | தந | |
| வெங்கதிர் | பம | காலையன் | பம | பம | பம | பம | |
| சந்திரன் | யர | சந்திரன் | யர | யர | யர | யர | |
| **(3) வணிகர் சாதி** | | | | | | | |
| | | | | | | | (வசியர்) |
| நிதிக்கோன் | லவ | நிதிசாலையன் | லவ | வல | லவ | லவ | லவ |
| வருணன் | றன | அந்தகன் | றன | றன | றன | றன | றன |
| **(4) சூத்திர சாதி** | | | | | | | |
| | | (வேளாளர்) | | (வளமையர்) | | (பின்னவர்) | (உழவர்) |
| கூற்றுவன் | மூள | வேலையன் | மூள | மூள | மூள | மூள | பிற |

நறுமலர்த் திசைமுகன் ஈசன் நாரணன்
அறுமுகன் படைத்தன அந்தணர் சாதி

— ப. பா-எ 5

இந்திரன் வெங்கதிர் சந்திரன் படைத்தன
துன்னரும் சிறப்பின் மன்னவர் சாதி

— ,, 6

திருமிகு நிதிக்கோன் வருணன் படைத்தன
அணிமிகு சிறப்பின் வணிகர் சாதி;

— ,, 7

கூற்றுவன் படைத்தன கூற்றன இரண்டும்
ஏத்திய மரபின் சூத்திர சாதி

— ,, 8

ஒற்றுமைக்காலையும் வேற்றுமைக் காலையும்
பிறவியும் வருணமும் பெறும் எனமொழிப

— ,, 9

உயிர்மெய் போல ஒற்றும் இம் முறைபெறும்

— ப.பா-எ 10

உயிர்மெய் வழக்கம் மெய்வழக்காகும்
வேற்றுமைக் கண்ணே என்றார் பிறரும்

— ,, 11

நால்வகை வருணத்தோர்க்கும் நால்வகை
இயம்பும் எழுத்தை இயம்புவர் முதன்மொழி
மற்றவை மயங்கினும் வரையார் ஆண்டே

— ,, 12

ஒழியா உயிர் அனைத்தும் ஒற்று முதல் ஆறும்
அழியா மறையோர்க்காம் என்பார் - மொழியும்
அடைவே ஓராறும் அரசர்க்காம் என்பர்
படையாத சாதிகளின் பண்பு

—வெ.பா-மொ 10

பண்பார் வணிகர்க்காம் பாங்கில் லவறனக்கள்
மண்பாவும் சூத்திரர்க்காம் மற்றையவை

— ,, 11:1,2

காலையன் சந்திரன் இந்திரன் கண்டன காவலர்க்கு
மால் அயன் சேய் அரன் கண்டன மாமறையோர்க்கு நிதி
சாலையன் அந்தகன் கண்டன ஆகும் வணிகருக்கு,
வேலையன் கண்டன வேளாளருக்கு விலக்கு அல்லவே

— ந பா-பொ 12

தீதில் உயிர் ஈராறும் முதல்ஒற்று ஆறும்
திருமறையோர்க்கு, அடைவே ஓராறு வேந்தர்க்கு
ஏதில் லவறனக்கள் வணிகர்க்காம், மற்றை
எழுத்து உளவை சூத்திரர்க்காம் இயன்ற சாதி

— சி.பா-பொ 5:1,2

பன்னீர் உயிரும் முன் ஒற்று ஆறும்
மன்னிய அந்தணர் வருணம் ஆகும்

— இ வி 774

தநபமயர எனச் சாற்றிய ஆறும்,
மனமகிழ் அரசர் வருணம் ஆகும்

— ,, 775

லவறன என்னும் நான்கு புள்ளியும்
இவர்தரு வணிகர்க்கு எய்தும் என்ப

— ,, 776

ழள எனும் இரண்டும் வளமையர்க்கு ஆகும்

— ,, 777

வருணப் பொருத்தமே, வரும் உயிர் அடங்கலும்
கம்முதல் ஆறும் கைசிகர்க்கு ஆகும்

தம்முதல் ஆறும் தகும் மன்னவர்க்கே
லவறன வணிகர்க்காம், ழளச் சூத்திரர்க்கே
இம்முறை நஞ்செழுத்து இயலினும் இழுக்கா

— தொ. வி 291

வரும்உயிர் அடங்கலும் வல்லினப் புள்ளியும்
அந்தணர்க்காம்; தநயரபமப் புள்ளி
மன்னவர்க்காம்; லவறன வணிகர்க்காம்
பின்னவர்க்காம் ழளப் பேசுங்காலே

—மு. வீ-யா.ஒ 72

...உயிர் கமுதல் ஆறு ஐயர், முதல்
உறும் அரசர், லவறன வசியர், பிறவே
உழவர், ஐயர் அரக்கையர் தாழ்ந்ததற்கு உயர்வு மாமே

— சுவாமி 175

கதி

ஏன் எழுத்துக்கட்குக் கதி வகுத்தனர் என்பதும் புரியாத புதிரே. செய்யுளில் தேவர்-மக்கள் கதி எழுத்துக்களே நிலைபெறலாம் என்பதும் பாட்டியல் கருத்து. இவற்றால் நன்மை விளையும் என நம்பினர் போலும்.

கதி எனப்படுபவை காண்டக விரிப்பின்
தேவர் மக்கள் நரகர் விலங்கென
மேவிய கதிகள் ஈரிரண்டு ஆகும்

— இ.கா 2

விலங்கும் நரகும் விலங்கின என்ப

— ,, 3

வானவர் மக்கள் நரகர் விலங்குஎன
ஊனம் இல் கதியே ஒருநான்கு ஆகும்

— ப. பா-எ 13

அவற்றுள்
உயிர்க்குறில் வல்லினம் ஈற்றெழுத்து ஒழியப்
பயிர்ப்பு உறு வானவர் கதிஎனப் படுமே

— ,, 14

மக்கள் கதியே நெட்டுயிர் நான்கொடு
மிக்க சிறப்பின ஙஞண நமவே

— ,, 15

ஓஔ இரண்டும் யரல றழ எனத்
தொக்கன ஐந்தும் விலங்கின் கதியே

— ,, 16

ஒழிந்தன ஐஔ ஆய்த எழுத்தும்
கழிந்தன வளனவும் நரகர் கதியே

— ,, 17

மன்னுவர் தேவர் மக்கள் செய்யுளுள்
மன்னூர் விலங்கொடு நரகர் கதியே

— ப.பா-எ 18

வேண்டும் குறில் வன்மை ஈறொழித்தால் விண்ணோர்க்காம்
ஆண்ட நெடில் முதல் நான்கு அந்தம் ஒழித்து-ஈண்டிய
மென்மையாம் மக்கட்கு இவை இரண்டு மெய்க் கதிக்கு
நன்மையாம் முதன்மொழிக்கு நாட்டு

— வெ. பா-மொ 19

நாட்டிய ஒஓ யரலழ நல்வன்மைக்கு
ஈட்டிய அந்தம் இவை விலங்காம்-காட்டாது
ஒழித்த நரகர்க்கு என்று ஓதினர் இன்ன
எழுத்து ஆகா ஆதி இடை

— ,, 20

வல்லினம் குற்றெழுத்து ஈறுஇன்றியே வரின் வானோர்கதி
மெல்லினம் ஈறுஇன்றிமேவும் நெடில் முதல் நான்கும் வந்தால்
சொல்லினர் மக்கள் கதி எனச், சொன்ன மொழி முதற்கண்
புல்லும் எனின் அவை எல்லாப் புலவரும் போற்றுவரே

— ந. பா-பொ 20

பன்னொன்று பத்துஉயிர் யம்முதல் மூன்று பன்னேழ் பதினைந்து
என்னும் அளவையே விலங்கின் கதி. இயம்பா எழுத்துத்
தன்னை நரக கதியென்று சாற்றுவர் தாம் உணர்ந்தோர்
முன்னை மொழிக்கண் வரத்தகா என்று மொழிவர்களே

— ,, 21

ஈறில் வன்மை குறில் இமையோர்க்காம்
கூறு நெடில்முதல் நான்கும் மென்மை
அந்தம் ஒன்றொழித்து அல்லன மக்கள்
முந்தும் கதிஇவை முதன்மொழிக்கு ஆகும்

— இ. வி 798

ஒஓ யரல ழற எனும் ஏழும்
தொக்க விலங்கின் சூழ்கதி, ஏனைய
நரகர் கதி, இவை நவை எனப் புகல்வர்

— ,, 799

கதியின் பொருத்த விதியைக் கூறில்
ஒவ்வொழி குறிலே, றவ்வொழி வலியே
செவ்விதாகும் தேவர் கதியே
னவ்வொழி மெலியே, நெடில்முதல்நான்கும்
வவ்வில் அஃதாகும் மக்கள் கதியே
ஒஓ யரல ழறவும் விலங்கின் கதியே
னவளஐஔவும் நரகர் கதியே

— தொ: வி 293

அஇஉஎ வொடு கசடதப வாம்
ஒன்பதும் தேவர் கதியாம், ஆஈ
ஊஏஙஞணநம வரம் ஒன்பது
மாந்தர் கதி, ஒஓ யரலழற
விலங்கின் கதி, ஐ ஔ வொடு வளன
ஐந்தும் நரகர் கதியாம் இவற்றுள்
முன்னவை நல்லன பின்னவை தீயன

— மு.வீ-யா.ஒ 75

ஏமவலி குறில் ஈறுஇல் சுரகதி, ஆ ஈ ஊ ஏ
இறின் மெலியும் நரகதி முதற்சீர்க்கு இசைவாம்
காமமிருக கதி யரலளற, பிறவே நரக
கதி ஆகா, இவற்று உயிர் முன் மெய்யொடு இல் குறுமே

—சுவாமி 176

| ப.பா | வெ.பா | ந.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|
| 1. வானவர் (விண்ணோர்) | (வானோர்) | | (இமையோர்) | (தேவர்) | (தேவர்) | (சுரகதி) |
| அஇஉ எ கசட தப | √ | | √ | √ | √ | √ |
| 2. மக்கள் | | | | | | (நரகதி) |
| ஆஈஊ ஏ ஙஞண நம | √ | | √ | √ | √ | √ |
| 3. விலங்கு | | | | | | (மிருககதி) |
| ஒஓ யரலறழ | √ | √ | √ | √ | √ | யரலளற |
| 4. நரகர் | | | | | | (நரககதி) |
| ஐ ஔ ஃ வளன | ஒழிந்தன | ஒழிந்தன | ஏனைய | ஐ ஔ னவள | √ | பிற |

## உணவு

உணவில் அமுதமும் நஞ்சும் உண்டு. எழுத்திலும் இருப்பதாக நினைக்கின்றனர். அறம் வைத்துப் பாடிய நந்திக் கலம்பகக் காலத் தாக்கம் இங்கே தென்படுகின்றது.

நஞ்செழுத்து பெயரருகே வருமாயின், சாவும் அச்சமும் ஏற்படும் எனப் ப.பா கூறுகின்றது. எனவே இவை நீக்கப்படல் வேண்டும்.

அமுதெழுத்தைக் கூறும் போது, சிறப்பாகத் தசாங்கம் (தசாங்கத்தயல்) என்ற சிற்றிலக்கிய வகையில் அமுதம் பொருந்தவேண்டும் என்று நினைக்கின்றனர். அரசனைப் புகழும் தசாங்கத்தின்கண் மறந்தும் நஞ்செழுத்தைப் பெய்து யாக்கலாகாது என்பது கருதிப் போலும் இது.

நஞ்சாம் ஒற்றொடு நடந்த உயிர்களும்
வஞ்சமில் புலவர் மறுத்திலர் என்ப

— இ.கா 4

இருவகை உண்டியென்று எடுத்தன அல்ல
தாமே நிற்பினும் தோமில என்ப

— ,, 5

நஞ்சும் அமுதமாம் மங்கலம் புகினே

— ,, 6

அமுதெழுத்து என்ற ஆதிஉயிர் நான்கொடும்
புணர்ந்த மெய்யை உணர்ந்து அமுதென்ப

— ,,

மெய்யாம் அமுதின் மேவிய உயிரும்
பொய்தீர் புலவர் பொருந்தின என்ப

— ,, 8

உணவே அமுதம் விடமும் ஆகும்

— அவி 119

அமுது என விடம்என வரும் இருவகையும்
உணவு எனப் புலவர் உரைத்தனர் உளரே

— ப.பா-எ 19

உயிர்க்குறில் நான்கொடு கசதபநமவ
மயக்கற அமுத எழுத்தாகும் என்ப

— ,, 20

இவ்வுயிர் மெய்யோடு இயைந்தன கொளலே

— ,, 21

அஔ இரண்டும் யரல மூன்றும்
தாவில் இவ் இருவகைக் கூட்டத்து இயைந்தவும்
அளவும் ஆய்தமும் ஐவகைக் குறுக்கமும்
உளமலி புலவர் உரைத்தனர் நஞ்சுஎன்று
அவை ஒருபெயர் மருங்கு அணைய நிற்பின்
நவையுறு துஞ்சலும் நடுக்கமும் செய்யும்

— ,, 22

இருவகைக் கூட்டத்து இயைந்த மேற்கூறிய
ஆகார ஓகாரத்தொடு யரலக்கள்
என்னும் ஒற்ருெடும் இயைந்த உயிர்அளபெடை

— ப.பா-எ 23

ஐவகைக் குறுக்கமும் அறையுங்காலை
இகர உகர ஐகார ஔகார
மகரம் என்னும் இவற்றின் குறுக்கம்

— ,, 24

மதித்த கசதநப மவ்வோடு வவ்வும்
உதித்து அமைந்த நால் குற்றுயிரும் - துதித்து அமுது என்று
ஆதி மொழிக்கும் தசாங்கத்து அயலுக்கும்
தீதிலவே என்ருர் தெரிந்து

— வெ.பா-மொ 8

தெரிந்த யரல மேல் சேர்ந்த ஆ ஓவும்
புரிந்தவற்று ஒற்று ஆய்தப்புள்ளி - விரிந்த
அளவொடு கால் மாத்திரையும் ஆம் என்று அறிந்தோர்
உளவென்ருர் நஞ்சு என்று ஒழி

— ,, 9

கூறும் அளபும் மகரக் குறுக்கமும் யரலவின்
ஏறும் ஆ ஓவும் யரல ஒற்ருேடும் ஏழ் நெட்டெழுத்தும்
வேறுள ஆய்தமும் நஞ்சு எழுத்தாகும்; வெற்பு ஆதி பத்தின்
ஈறும் முதலும் இயலப் பெறு என்பர் ஏந்திழையே

— ந.பா-பொ 9

அறிவோர் அமுதெழுத்து ஆம் என்று அறைவர் தசாங்கத்து அயல்
குறில் முதல் நான்கும் கசதநபமவக் குற்றளவும்
உறுவன ஆயின் உலகோர் புகழ்நன்மை எய்தும் என்பர்
சிறுமுறுவல் செங்குமுதத் துவர்வாய்த் திருந்திழையே

— ,, 10

உரிய கசதநபமவ ஏழோடு ஆதி
உயிர்க் குறில் நான்கு இவை அமுதம் ஆதிச்சீர்க்கும்
அரிய தசாங்கத்து அயற்கும் நலமது ஆகும்
அமுதமொழிக்கு அல்லாத எழுத்தும் கால்மாத்
திரையளவு அஃகேனமுடன் மூன்று நஞ்சாய்ச்
செப்பும் எழுத்து இவை எல்லாம் தீதாம் அன்றே

— சி.பா-பொ 4:2-4

கசதப நமவ ஏழொடும் அகரம்
இகரம் உகரம் எகரம் நான்கும்
அமுத எழுத்து என்று அறைந்தனர்புலவர்

— இ.வி 779

யரலள என்னும் எழுத்தினை ஊர்ந்த
ஆவும் ஓவும் அந்நாற் புள்ளியும்
ஆய்தமும் மஃகான் குறுக்கமும் அளபும்
எய்தா நஞ்சு என்று இகழ்ந்தனர் புலவர்

— இ.வி 780

இத்திறம் தசாங்கத்து அயற்கும் ஒக்கும்

— ,, 781

மலை நதி நாடு ஊர் வனைதார் இவுளி
கொலைமத களிறு கொடி முரசு ஆணை
இவையே தசாங்கம் என்மனூர் புலவர்

— ,, 782

| ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|
| (1) அமுது | | | | | | | |
| அ இ உ எ | அ இ உ எ | அஇஉஎ | அஇஉஎ | அஇஉஎ | அஇஉஎ | அஇஉஎ | ஐஔள ஓஅல்லாத உயிர் |
| கசதப ந | கசதநப மவ | கசதநப மவ | கசதந பமவ | கசதப நமவ | கசதந பமவ | கசதந பமவ | கசதந பமவ(7] |
| இவ்வுயிர் மெய் | | | | | | | |
| (2) நஞ்சு | | | | | | | |
| ஆஓ | யாயோ ராரோ | அளபு மகரக் குறுக்கம் | அல்லாத எழுத்து | ய்ர்ல்ள் யாயோ | யாயோ ராரோ | யாயே ராரோ | |
| ய்ர்ல் | லாலோ | யாயோ | ¼மாத்திரை | ராரோ | லாலோ | லாலோ | ¼ மாத்திரை |
| அளபு | ய்ர்ல் | ராரோ | அஃகேனம் | லாலோ | ய்ர்ல் | ய்ர்ல் | அஃகேனம் |
| ஆய்தம் | ஆய்தம் | லாலோ | கு.உ | ளாளோ | அளபெடை | அளபெடை | அளபு ஞை |
| ஐவகைக் குறுக்கம் | அளவு | ஆஈஊஏ ஐஓஔ | | | | | |
| | ¼மாத்திரை | | கு.இ | ஆய்தம் மஃகான் குறுக்கம் | மக்குறள் ஆய்தம் | மக்குறள் ஆய்தம் | வெற்று ஆய்தம் |
| (இ,உ,ஐ, ஔ,ம்) யாயோ ராரோ லாலோ | | ஆய்தம் | | அளபு | | | |

உணவுஎண்,
அஇஉஎ கசதநபமவ என்று
அமுத எழுத்து ஆகி, ஆதிச் சீர்க்கும்
தசாங்கத்து அயற்கும் தகுவன என்ப
யா யோ ராரோ லாலோ அவற்று ஒற்றும்
அளபெடை மக் குறள் ஆய்தம் நஞ்செழுத்தே

—தொ.வி 290

அஇஉஎ கசதந பமவவும்
அமுத எழுத்து; யா யோ ராரோ லாலோ
அவற்றின் ஒற்றும் அளபெடை மக்குறள்
ஆய்தமும் நஞ்சு எழுத்தாம்; முதல் ஆம்; பின்
ஆகா என்மனார் அறிந்திசினோரே

— மு. வீ. யா-ஒ 71

அறி இஐஒஔஓ அல் உயிர் கசதநபமவ ஏழ்
அமுதம்; அம்முதலவும் கான்மாத்திரை அஃகேனம்
செறி அளபு நஞ்சு; ஞண வெற்று ஆய்தம் அமுதில்
சேர்த்திடார் ... ...

— சுவாமி 175

பால்

ஆண், பெண், அலி என எழுத்தையும் மூன்ருகப் பகுத்துள்ளனர். இப்பகுப்பில் கருத்து வேறுபாடு அமைந்தமையால் போலும் தொன்னூல் விளக்கம் இருவேறு கருத்துக்களையும் இயம்புகின்றது.

அலியெழுத்து முதலில் வரலாகாது. அவ்வப் பாலரைப் புகழும் போது அதற்குரிய எழுத்தால் ஆரம்பித்தல் வேண்டும். எழுத்துக்கள் மயங்கியும் வரலாம் எனப் புறனடையும் அமைகின்றது.

ஆண்பால் பெண்பால் அலி என நின்ற
மூன்றே பால்என மொழிந்தனர் புலவர்

— ப.பா-எ 25

இருவகை ஐங்குறில் ஆண்பால் என்ப

— ,, 26

நெடில் ஏழ் இருவகை பெண்பால் என்ப

— ,, 27

ஒற்றும் ஆய்தமும் அலி எனப்படுமே

— ,, 28

அவ்வவ் எழுத்தே அப்பாற்கு உரிய
விரவினும் வரையார் அலிஎழுத்து ஒழித்தே

— ,, 29

எண்ணும் குறில் ஆண்; இயைந்த நெடில்எல்லாம்
பெண்ணகும்; ஒற்று ஆய்தம் பேடாகும் - பெண்ணிேனடு

ஆண்புணர்ச்சிக்கு அவ்வவ் எழுத்தே, மயங்கினும் ஆம்;
மாண்பில் பேடு என்றூர் மதித்து

—வெ.பா-மொ 9

குற்றெழுத்து ஆடூஉ மகடூஉ நெடில் நல்ல என்று கொள்வர்
மற்று எழுத்தாம் உயிர்மெய்க் குறில் ஆண், நெடில்
அவ்வகையே;
ஒற்றெழுத்து ஆய்தம் அலிஎன்று பாட்டின்முன் ஓத ஒட்டார்;
பொன்தொடிச் சிற்றிடைப் போர்வேல் நயனப் புணர் முலையே

—ந.பா-பொ 7

மருவு குறில் ஆண், நெடில் பெண், அவர் இவர்க்கா
மயங்கினுமாம்; வரலாகா பேடு, ஒற்று ஆய்தம்

— சி.பா-பொ 4:1

ஆடூஉக் குறில்; நெடிலாகும் மகடூஉப்
பேடு ஒற்று ஆய்தம்; பெண் ஆண் புகழ்ச்சிக்கு
அவ் எழுத்து மயங்கினும் அமையும் என்ப

— இ. வி 773

பால் எனக்,
குறில் ஆண், நெடில் பெண், மற்று உயிர் ஆண், உயிர்
மெய்பெண் என்மரும் உளரே அவைதம்
பாவியல் கெடினுமாம்; மற்றவை அலியே

—தொ.வி 289

குறில்ஆண் நெடில்பெண்ணும்; தனிநிலை மெய்
அலியாம்; பெண்ணிேடு ஆண்பால் புணர்ச்சிக்கு
அவ்வவ் எழுத்தாம்; மயங்கினும் வழுவே

— மு.வீ-யா.ஒ 70

சார் குறில் ஆண் நெடிற்பெண் இவை உறழ்ச்சியும்
பால்அறியே

—சுவாமி 174

| ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண் 5 குறில் உயிரும் உயிர் மெய்யும் | குறில் | (ஆடூஉ) குற்றெழுத்து உயிர் மெய் | குறில் | (ஆடூஉ) குறில் | (1) குறில் (2) உயிர் | குறில் | குறில் |
| பெண் 7 நெடில் உயிரும் உயிர் மெய்யும் | நெடில் | (மகடூஉ) நெடில் | நெடில் | (மகடூஉ) நெடில் | (1) நெடில் (2) உயிர் மெய் | நெடில் | நெடில் |
| அலி ஒற்று ஆய்தம் | (பேடு) ஒற்று ஆய்தம் | ஒற்று ஆய்தம் | (பேடு) ஒற்று ஆய்தம் | (பேடு) ஒற்று ஆய்தம் | பிற | தனிநிலை மெய் | |

## தானம்

குறிலை அடிப்படையாக்கி எழுத்துக்களை ஐந்துவகைத் தான மாக வகுக்கின்றனர் பாட்டியலார். பாலன், குமாரன், அரசன், மூப்பு, மரணம் என்று ஐந்தாகவும் அவற்றை மீண்டும் நட்பு, உதாசீனம், பகை என மூன்ருகவும் பகுக்கின்றனர்.

இவ்வாறு பகுப்பதன் அடிப்படை நோக்கம் ஒன்று உண்டு. பாட்டுடைத் தலைவன் பெயரின் முதலெழுத்தைப் பாலனாகக் கொண்டு, நட்பு எழுத்தான குமரன் அல்லது அரசன் எழுத்தால் பாடலை ஆரம்பிக்க வேண்டும் என்பது நோக்கம். அது நன்மை பயக்கும் என்பது கருத்து.

மூப்பும் மரணமும் மொழிந்த காலை
நிலையில் குலைதல் செல்வம் நீங்குதல்
கொலையில் பிணியில் கூட்டுதல் ஆகும்

— இ.கா 41

குறில் ஐந்துடன் நெடில் கூட்டி, நின்ற
ஐஔ இரண்டும் இஉ அடக்கிப்
பால குமார அரசு மூப்பு
மரணம் என்று ஐவகைத் தானம் வகுத்தனர்

— ப.பா-எ 31

நட்பே உதாசீனம் பகை என்னும்
ஒப்புடைக் குறிப்பின் ஒருமூன்று ஆகும்

— ,, 31

பால குமார அரச என்னும்
மூவகைத் தானமும் நட்பு எனப்படுமே

— ,, 32

ஒழிந்த இரண்டும் உதாசீனம் பகை

— ,, 33

பாட்டுடைத் தலைவன் இயற்பெயர் முன்எழுத்துப்
பாலனாக நால்வகை எழுத்தும்
வட்டமாய், முறையின் இயலும் என்ப

— ,, 34

குறில் ஐந்தும் தம்நெடில் கொண்டு இஉஐஔ சேர்ந்து
அறி பாலன் ஆதியா ஐந்தும் - இறைவன் பேர்
முன் எழுத்துப் பாலனில் வைத்து எண்ணி மூப்பே மரணம்
என்னும் இவை தீது என்றே எண்

— வெ.பா-மொ 6

குறில் ஐந்தும் தம்நெடில் கூட்டி ஐஔ எஒக் கொண்டு
அடைவே
முறைமையில் பாலன் குமரன் அரசன் மூப்பே மரணம்

இறையவன் தன் பெயர்தான் பாலனும் என எண்ணி,வந்த
நெறிமையின் மூப்பும் மரணமும் பாடிடல் நீக்குவரே
—ந. பா-பொ 6

ஊனம் இலா அஆவும் இஈஐயும்
உஊவும் எஏயும் ஒஓஔவும்
தானம். இதை வகையாம் அந்தாதி தன்னில்
தலைவன் பேர் முதல் எழுத்தில் பாலன், ஆதி
மேல் நிரை எண்ணில் பால குமார ராசர்
வேண்டிடும்; வேண்டா விருத்தம் மரணம்தானே
—சி.பா-பொ 3 : 2-4

குற்றெழுத்து ஐந்தும் ஒத்த நெட்டெழுத்தொடும்
ஐஔ என்னும் ஆயீரெழுத்தை
இஉ என்னும் இரண்டொடுஞ் சேர்த்திப்
பால குமார இராச விருத்தம்
மரணம் என்ன வகுத்து, இறைவன் பெயர்
முதல் எழுத்தினை முதற் பொருத்தமதாக
முதற்சீர் இடத்து முதற்கண் நின்ற
எழுத்தொடு தாக்கியிட, முதன் மூன்றும்
விழுத்தகு மூப்பும் மரணமும் விலக்கே
— இ.வி 783

தானமே
குறில் நெடில் தம்முன் நினைந்து இஉவ்வுடன்
ஐஔவும் சேர்புழி ஐந்தாம்; அவற்றுள்
தலைமகன் இயற்பெயர் தானம் முதலாப்
பாலன் குமாரன் இராசன் மூப்பு
மரணம் முறை எண்ணி, வரும் முதல் எழுத்தின்
தானம்; ஈற்று இரண்டு எனில் தவிர்க என்ப
—தொ.வி 288

அஆ இஈஐயும் உஊ
ஔவும் எஏ ஒஓ என்று இவை
பாலன் குமாரன் இராசன் மூப்பு
மரணம் முறையே ஐந்தும் எண்ணுக;
மூப்பும் மரணமும் முதல்சீர்க்கு ஆகா
— மு. வீ-யா.ஒ 69

... அ ஆ ஐ ஔ
இங்கிவையே பால, இஈகுமார, உஊராச,
எஏய விருத்தம், ஒஓ மரணம், மன்பேரர் அதி
தங்குவது தான் முன்மூன்றும், பின் இரண்டு ஆகா
—சுவாமி 174

**கன்னல்**

கன்னல் என்பது நாழிகை. ஒவ்வொரு குறிலெழுத்திற்கும் ஆறு நாழிகை உரியது. இவற்றிற்குத் திசையும், இறைவனும் வகுக்கின்றது ப.பா.

| | சோமன் | |
|---|---|---|
| | எ | |
| | திசை | |
| வருணன் | முகன் | பரிதி |
| உ | ஒ | அ |
| | இயமன் | |
| | இ | |

இவற்றில் முதல் மூன்றுமே-அ, இ, உ-கொள்ளற்குரியன. இந் நாழிகை பற்றிய கருத்து இந்திர காளியத்திலும் உண்டு.

அவரவர் பெயர்முதல் எழுத்து வந்து உதிப்ப
அவரவர் பாடின் ஆக்கம் தருமே

—இ.கா 9

குணபால் பரிதி தென்பால் இயமன்
குடபால் வருணன் வடபால் சோமன்
திசைமுகன் நடுவாம் தெய்வநிலைகளில்
குறில் ஐந்து அமைத்து முதல்மூன்றும் கொள்க என
நெறி அறி புலமை அறிஞர் நேர்ந்தனரே

— ப. பா-எ 35

உரைத்த குறில்ஐந்து, ஒரோ ஒன்றாக
அருக்கனோடு ஆகும் அவ்வாறு நாழிகை

— ,, 36

அகரம் தானே அருக்கனோடு உதிப்ப,
இகரம் இன்புற எய்தி இருக்கும்,
உகரம் நடக்கும், எகரம் உறங்கும்,
ஒகரம் துஞ்சும் என்று உரைத்தனர் புலவர்

— ,, 37

இராப்பொழுதிற்கும் இவ்வகை கொள்க

— ,, 38

## புள்

ப.பா மட்டும் கூறும் புள், இன்ன எழுத்திற்கு இன்ன பறவை பொருந்தும் என வகுக்கின்றது. இதனையும் குறிலைந்தையும் அடிப்படையாகக் கொண்டே தந்துள்ளது.

இதன் தேவையும் நினைத்தற்குரியது. பொருத்தம்-விருத்தம் பகை-பலன் ஒன்றும் கூறாதே விட்டுவிடுகின்றார்.

ஐவகைக் குறிலும் அகரம் முதலாக
வல்லூறு ஆந்தை வலியன் குருகே
மெல்இயல் மயில் என விளம்பினர்; இவற்றின்
பொருத்தமும் விருத்தமும் பகையும் பலனும்
விரித்து இனிது எண்ணி மேவினர் கொளலே

—ப.பா-எ 39

**நாள்**

எழுத்துக்கட்கு-அதாவது மொழிமுதல் வரும் எழுத்துக் கட்கு உரியதாக 27 நாட்களையும் பகுத்து அமைப்பது இது. மணமக்கட்கு நாட்பொருத்தம் பார்க்கப்படுவதுபோன்று, பாட்டுடைத் தலைவனுக்கும் பாடலின் முதலெழுத்திற்கும் நாள் அடிப் படையில் பொருத்தம் அமைய வேண்டும் என எதிர்பார்த்தனர் போலும்!

இருபத்தேழை மூன்று சம பகுப்புக்களாக்கி, ஒவ்வொரு பகுப் பிலும் 1, 3, 5, 7 என்பனவற்றையும் அட்டமி, வைனசியத்தை யும்(?) நீக்கி 2, 4, 6, 8, 9 என்பனவற்றைக் கொள்ளல் சாலும் என்பது குறிக்கப்படுகின்றது. இவை செல்வம் பயக்கும்.

மூன்றும் ஒன்பதின் மூன்றெழுத்து ஏழும்
பொருந்தும் என்று புகலுவர் புலவர்
— இ.கா 40

மொழிக்கு முதலா ஆகிய எழுத்துக்கு
ஓதிய நாள்வகை இயற்றுதல் கடனே
— ப. பா-எ 40

உயிர் முதல் நான்கும் செயிர்தபு கார்த்திகை
ஐந்தும் மூன்றும் அவற்றின் அடைவே
வந்த பூராடம் உத்திராடம்மே
— ,, 41

ககர வருக்க வகைநாள் விரிப்பின்
நான்கும் இரண்டும் மூன்றும் மூன்றும்
ஓணம் ஆதிரை புனர்பூசம் பூசம்
— ,, 42

சகரம் நான்கு ஐந்து ஒருமூன்று இவற்றின்
வகைநாள் இரேவதி முதல் மூன்று என்ப
— ,, 43

ஞகர வருக்கத்து ஒருமூன்று அவிட்டம்
— ,, 44

தகர வருக்கத்து இரண்டு ஏழ் மூன்றற்கு
வகைநாள் சோதி விசாகம் சதயம்
— ,, 45

நகரத்து ஆறும் அநுடத்து அடைவே
ஏனை ஆறும் கேட்டை பூரட்டாதி
— ,, 46

பத்திய பகரத்து ஒருநான்கு இரண்டுஆறு
உத்திரம் அத்தம் சித்திரை ஆகும்
— ,, 47

மகரத்து ஆறும் மூன்றும் மூன்றும்
மகம் ஆயிலியம் பூரம் ஆகும்
— ,, 48

யாவே உத்திரட்டாதி ஏனை
யூயோ மூலம் என்று ஊர்ந்திசினோரே

— ப.பா-எ 49

ஒருநான்கு உரோகணி வகரம், அவ்வகை
மற்றை நான்கும் மகசிரம் ஆகும்

— ,, 50

மூவகையாய்ச் செய்து ஒன்று மூன்று ஐந்து ஏழ்
அட்டம ராசி வைநாசியத்தால்
விட்டனர் பின்னர் மேவினர் கொளலே

— ,, 51

இரண்டு, ஈரிரண்டு, ஆறு, எட்டு, ஒன்பான் எனத்
திரண்ட நாளே செல்வம் புகுதரும்

— ,, 52

பேசும் உயிர் அடைவே நான்கு ஆரல்; பின் ஐந்தும்
மாசிலாப் பூராடம்; மற்றுஒருமூன்று-ஆசிலாப்
பேர் உத்திராடமாங் என்று பெரிதுணர்ந்தோர்
பாரித்தார் நாளின் பரிசு

— வெ.பா-மொ 12

பரிசுடைய கவ்வரியின் நான்கு இரண்டு மூன்றும்
தெரிவுடைய மூன்று அடைவே செப்பில்-பிரிவுடைய
ஓணமே ஆதிரையே ஒண்புநர் பூசம் பூசம்
பேணி உரைத்தார் பிரித்து

— ,, 13

பிறிந்த சகரத்து நான்குஐந்து பின் மூன்று
அறிந்த கலம் முதல் மூன்றுகும்-செறிந்த
ஞகரத்து ஒருமூன்று நன்கு உணர்ந்தோர் ஆய்ந்த
புகர்தீர் அவிட்டமாம் போற்று

— ,, 14

போற்றும் தகரம் இரண்டு ஏழ் மூன்றும்-பொய்தீர்ந்தோர்
சாற்றுவர் சோதி முறம் சதயம்-வேற்று அனுடம்
கேட்டை பூரட்டாதி கேண் நகரத்து ஓர் ஆறும்
வாட்டம் இலா மும்மூன்றும் வந்து

— ,, 15

வந்த பகரத்து நான்கு இரண்டு ஆறு உத்திரம் தொட்டு
அந்தம் இலாமூன்று ஆகும் அவ் அடைவே-வந்து அதற்பின்
ஆறுமகம் மூன்றுடன் மூன்று ஆயிலியம் பூரமாம்
மாறில் மகரத்தின் மாட்டு

— ,, 16

மாட்டும் யகரத்துள் யா உத்திரட்டாதி
சுட்டிய யூகார யோகாரங்கள்-காட்டிய

மூலம்; வகரத்து ஒருநான்கு ரோகணி, மான்
தோலாத நான்கு எனவே சொல்

— வெ.பா-மொ 17

சொல்லிய நாள் மூஒன்பதாகத் துணிந்து ஒன்று
புல்லிய மூன்று ஐந்து ஏழ் பொருந்தாவாம்-அல்லனவுற்று
அட்டம ராசி வயிஞசியம் இவையும்
விட்டு ஒழித்தல் நன்று எனவே வேண்டு

— ,,18

அகரம் முதல் நான்கும் கார்த்திகை; மற்று அவற்றின் அடைவே
உகரம் முதல் ஐந்தும் பூராடமாம் என ஓதுவர் காண்
ஒரம் முதல் மூன்றும் ஓர்உத்திராடம், உயிர் மெய்யினில்
ககரம் முதல் நான்கும் ஓணம் என்று ஓதுவர் கற்றவரே

— ந. பா-பொ 13

ஏனைக் குகரம் முதல் இரண்டும் திருவாதிரையாம்
ஆன அவற்றின் அடைவு ஒருமூன்றும் புனர்பூசமாய்ப்
போனபின், நின்றன மூன்று எழுத்தும் பூசம் என்ப பொய்யா
வானக் கருங்குழல் வம்புஆர் வனமுலை வாணுதலே

— ,, 14

ஏய்ந்த சகரம் முதல் நாலெழுத்தும் இரேவதியாம்
ஆய்ந்த சுகரம் முதல் ஐந்து எழுத்தும் அசுபதியாம்
பாய்ந்த சொகரம் முதல் மூன்று எழுத்தும் பரணி என்பர்
வேய்ந்த ஞகர ஞொகர ஞாஆன அவிட்டம் மின்னே

— ,, 15

ஓதும் தகர உயிர்மெய் இரண்டு ஏழு மூன்று அடைவே
சோதி விசாகம் சதயமுமாம், மென்தொடர் நகர
ஆதியில் ஆறும் அனுடம், அல்லாதன ஆறுஎழுத்தும்
ஏதமில் கேட்டை பூரட்டாதியான இருவகையே

— ,, 16

சொல்லும் பகரத்துள் உத்தர நாள்முதல் மூன்று பற்றிச்
செல்லும் ஒருநான்கு இரண்டு ஆறு சென்றபின், மவ்வருக்கம்
புல்லும் மகம் இருமூன்று மூன்று ஆயிலியம்; புயலும்
அல்லும் பொருங்குழல் அல்லாதன பூரம் ஆயினவே

— ,, 17

யகரத்துள் யாஉத்திரட்டாதியாம் என்று அறைவர், இன்னும்
பகர்வுற்ற மூலம் யூகார யோகாரத்தின்பால் படுமால்;
வகரத்து ஒருநான்கு ரோகிணி ஏனை மகயிரமாம்;
சிகரப் பணை முலைச் சிற்றிடைப் பேரல்குல் தேமொழியே

— ,, 18

மொழிந்த அந்நாட்களை மூஒன்பது ஆக்கி அவற்றின் முன்னர்
இழிந்தன ஒன்று மூன்று ஐந்து ஏழ்; இரண்டு நால் ஆறு
எட்டு ஒன்பான்
அழிந்தன அல்லன; அட்டமராசி வைநாசிகமும்
கழிந்தன; நின்றன தாம் இயல்பாகக் கருதுவரே

— ந.பா-பொ 19

கருதும் உயிர் அடைவே நான்கு ஐந்து மூன்று
கார்த்திகையே பூராடம் உத்திராடம்;
உரைதரு கவ்வரியின் நான்கு இரண்டு மூன்று
மூன்று ஓணம் ஆதிரையே புனர்தம் பூசம்;
இருமைகொள் சவ்வரியின் நான்கு ஐந்து மூன்று
இரேவதி அச்வனி பரணி; ஞகரம் மூன்றும்
வரும் அவிட்டம் சகரம் இரண்டு ஏழு மூன்று
வளர்சோதி விசாகமே சதயம் மன்னும்

— சி. பா-பொ 6

சதிதிகழ் நவ்வினில் ஆறும் மூன்றும் மூன்றும்
தரும் அனுடம் கேட்டையே பூரட்டாதி
திதமிகு பவ்வரியின் நான்கு இரண்டோடு ஆறுஉத்
திரம் முதல் மூன்றும்; மவ்வில் ஆறும் மூன்றும்
இதமுடன் மூன்றும் மகம் ஆயிலியம் பூரம்
இயா உத்திரட்டாதி யூயோ மூலம்
உதவிய வம்முதல் நான்கும் ஒழிந்த நான்கும்
உரோகணியாம் மிருகசீரிடமாம் பேர்நாள்

— ,, 7

பேர்நாள் உற்பவநாள் ஆதல் மூஒன்பான்
பிரித்து ஒன்று மூன்று ஐந்து ஏழு ஆகாது; எட்டாம்
கூர் இராசியும் வயிஞசிகமும் ஆகா...

— ,, 8:1,2

ஆவிமுதல் நான்கு ஆரல்; அப்பால்
மேவிய ஐந்தும் வியன் பூராடம்

— இ.வி 785

மற்றைய மூன்றும் உத்திராடம்மே

— ,, 786

ககர வருக்கத்து ஒருநான்கும் இரண்டும்
திகழ் திருவோணம்; திருவாதிரையாம்;
பிற்பால் மூன்றும், மூன்றும் பேசில்
பொற்புஉறு புனர்தம் பூசம் ஆகும்

— ,, 787

சகர வருக்கம் தனில் முதல் நான்கும்
புகலும் காலைப் புருடநாள்; மேல்
ஐந்து மூன்று அச்சுவினி பரணி

— ,, 788

உற்ற ஞகரத்து ஒரு மூன்றினையும்
மற்றை அவிட்டமாம் எனப் பகர்வர்

— இ. வி 789

மன்னிய தகரத்து இரண்டு ஏழ் மூன்று
தன்இயல் சோதி விசாகம் சதயம்

— ,, 790

ஆங்கு உறு நகரத்து ஆறும் மூன்றும் மூன்றும்
ஓங்கும்பனை துளங்கொளி புரட்டாதி

— ,, 791

நல்பகரத்தின் நான்கு இரண்டு ஆறு
முற்படும் உத்திரம் தொட்டு மூன்றே

— ,, 792

ஆறு மூன்று மூன்றும் மகரத்தில்
தேறும் மகம் கட்செவி ஒண்பூரம்

— ,, 793

உற்ற யா ஒன்றும் உத்திரட்டாதி
யூயோ இரண்டும் ஏயும் மூலம்

— ,, 794

எடுத்த வகரத்து இருநான்கிற்கும்
அடுத்த ரோகணி மான்தலை ஆகும்

— ,, 795

இறைவன் பெயர் முதல் எழுத்தை நோக்கி
உறும் நாளினை மூஒன்பது ஆக்கி
ஒன்று மூன்று ஐந்து ஏழு, ஒருமுத்திறத்தினும்
ஒன்று வண்ணம் உரை முதற்சீர்க்கே

— ,,796

எட்டாம் இராசியும் வைநாசிகமும்
விட்டு முதற்சீர் விளம்புதல் மரபே

— ,, 797

நாளின் பொருத்தம் நவிலுங் காலை
நான்கும்ஐந்தும் மூன்றுமாய்ப் பிரி உயிர்
கார்த்திகை பூராடம் உத்திராடம்மே;
கவ்வரி நான்கு இரண்டு, இருமுறை மூன்று இவை
ஓணம் ஆதிரை, முறை இரு பூசமே;
சவ்வரி நான்கு ஐந்தும் தகும் கடைமூன்று என
அவ்வவை இரேவதி அசுவதி பரணியே;
ஞவ்வரி ஞாஞேஞொவ்வாம் அவிட்டமே
தவ்வரி இரண்டு ஏழு தன்கடை மூன்று
சோதி விசாகம் தூயோன் இச் சதையமே;
நவ்வரி ஆறு, நண்ணும் இருமூன்றும்
பொற்பனை கேட்டை பூரட்டாதியே;
பவ்வரி நான்கும், பின்பகர் இரண்டுஆறு
என உத்திரம் அத்தம் ஒளிசித்திரையே;

மவ்வரி ஆறும் மற்று இருமூன்றும்
மகம் ஆயிலியம் மகந்தொடர் பூரமே;
யயா உத்திரட்டாதி யூயோ மூலமே
வவ்வரி நந்நான்கு ரோகணி இந்திரன்
அவ்வவ் எழுத்திற்கு அவ்வவை குறித்தபின்
நாள் மூஒன்பதா, நாயகன் இயற்பெயர்
நாள்முதல் மங்கலம் நவில் சொல் ஈரு
எண்ணி, இரண்டு நான்கு ஆறு எட்டு ஒன்பது ஆம்
அன்றி ஒன்று மூன்று ஐந்து ஏழ் ஆகா

— தொ. வி 292

ஆவி நான்கு ஐந்தொடு நான்கும் ஆய்ப் பிரிவது
கார்த்திகை பூராடம் உத்திராடமாம்; மெய்யில்
ககரம் நான்கு இரண்டு மூன்று மூன்று இவை
ஓணம் ஆதிரை இருபூசமாம் முறையே;
சகரம் நான்கு ஐந்து மூன்று இரேபதி அச்சுவினி
பரணி; ஞஞாஞேஞொ அவிட்டம்; ஏனைய
தகரம் இரண்டு எழு தான்கடை மூன்று
சோதி விசாகமே தூயவான் சதயம்;
நவ்வரி ஆறுடன் நாடும் மும்மூன்றும்
அனுடம் கேட்டையாய் பூரட்டாதி;
பகரம் நான்கு இரண்டொடும் ஆறு உத்திராடம்
அத்தம் சித்திரை; மவ் ஆறெடு மூன்று
மூன்று மகம் ஆயிலியம் பூரம்;
யய்யா உத்திரட்டாதி; யுய்யோ
மூலம்; வவாவிவீ உரோகணி; வெவேவைவெள
மிருக சீரிரம் என விளம்பினர் புலவர்

—மு. வீ-யா. ஒ 73

நாயகன் முற்பெயர் ஆதி எழுத்தின் நாள்
முதற்கொண்டு ஒன்பது ஒன்பதாக
மங்கலச் சொல் முதலெழுத்தின் நாள் அளவும்
எண்ணி, இரண்டும் நான்கும் ஆறும்
எட்டும் ஒன்பதும் காணின் நல்லவாம்
ஒன்றும் மூன்றும் ஐந்தும் ஏழும்
காணில் தீங்கு எனக் கருதப்படுமே

— ,, 74

ஆ முதன்மை உற்பவநாள் பேர் நாண மத்திமம்
ஆம்அவை மூஒன்பான் ஆக்கி ஒன்று மூன்று ஐந்து ஏழ்
தாமும் எட்டாம் இராசி வைநாசியமு மாகாவாம்
சாரும் இருதலை பொருந்தில் உத்தமோத்தமம் ஆம்

—சுவாமி 176

| எழுத்து | ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ |
|---|---|---|---|---|---|---|---|
| அஆஇஈ | கார்த்திகை | ஆரல் | X | X | ஆரல் | X | X |
| உஊஎஏஐ | பூராடம் | X | X | X | X | X | X |
| ஒஓஔ | உத்திராடம் | X | X | X | X | X | X |
| ககாகிகீ | ஓணம் | X | X | X | திருவோணம் | X | X |
| குகூ | ஆதிரை | X | திருவாதிரை | X | திருவாதிரை | X | X |
| கெகேகை | புனர்பூசம் | X | X | புனர்தம் | புனர்தம் | X | X |
| கொகோ கௌ | பூசம் | X | X | X | X | X | X |
| சசாசிசீ | இரேவதி | கலம் | X | புருடன் | புருடன் | X | இரேபதி |
| சுசூசெ சேசை | அசுவதி | X | அசுபதி | அச்வனி | அச்சுவினி | X | அச்சுவினி |
| சொசோ சௌ | பரணி | X | X | X | X | X | X |
| ஞஞா ஞொ | அவிட்டம் | X | X | X | X | ஞஞா ஞேஞொ X | ஞஞா ஞேஞொ X |
| ததா | சோதி | X | X | X | X | X | X |
| திதீதுதூ தெதே தை | விசாகம் | முறம் | X | X | X | X | X |
| தொதோ தௌ | சதயம் | X | X | X | X | X | X |
| நநாநிநீ நுநூ | அநுடம் | X | X | X | பனை | பொற்பனை | X |
| நெநேநை | கேட்டை | X | X | X | துளங்கொளி | X | X |
| நொநோ நௌ | பூரட்டாதி | X | X | X | புரட்டாதி | X | X |
| பபாபிபீ | உத்திரம் | X | X | X | X | உத்திராடம் | |
| புபூ | அத்தம் | X | X | X | X | X | X |
| பெபேபை பொபோ பௌ | சித்திரை | X | X | X | X | X | X |
| மமாமிமீ முமூ | மகம் | X | X | X | X | X | X |
| மெமேமை | ஆயிலியம் | X | X | X | கட்செவி | X | X |
| மொமோ மௌ | பூரம் | X | X | X | X | X | X |
| யா | உத்திரட்டாதி | X | X | X | X | யயா X | ய யா X |
| யூயோ | மூலம் | X | X | X | X | X | யூயோ |
| வவாவிவீ | உரோகணி | X | X | X | X | X | X |
| வுவூவேவை | மகசிரம் | மான் தோல் | மக்யிரம் | மிருகசீரிடம் | மான் தலை | இந்திரன் | மிருகசீரிரம் |

**கணம்**

வடமொழியில் கணம் என்ற சொல் சீரோடு ஒப்புமையுடைய ஒரு யாப்புக் கூறினைக் குறித்து வருகின்றது.

பாட்டியலில் கணம் என்பது சீர்ப்பொருத்தத்தையே பேசுகின்றது. பாடலின் முதற்சீராகப் பொருந்தும் தகுதி ஓரசை-ஈரசை-நாலசைச் சீர்களுக்கு அளிக்கப்படவில்லை. மூவசையால் வரும் எட்டுச் சீர்களின் கணப் பொருத்தம் ஆயப்படுகின்றது. நேர்-நேர்-நேர், நிரை-நேர்-நேர் என்ற இரு வெண்சீரும் நிரை-நிரை-நிரை, நேர்-நிரை-நிரை என்ற இரு வஞ்சிச் சீரும் முதற் சீராகக் கொள்ளுதற்குரியன எனச் சில நூற்கள் விதந்து ஓதுகின்றன. இவை முறையே வாழ்நாள், புகழ், திரு, 'கதிர்ப் பெருக்கம்' என்பன பயக்கும். பிற நான்கு. சீர்களைக் கொள்ளத்தகாதன என்று விலக்குவதற்குக் காரணம், அவை நோய், கேடு, இடுக்கண், சாவு என்பன அளிக்கும்.

கணப் பொருத்தத்தில், புறநடையாக, நிரையீற்றியற்சீர் மங்கலம் பொருந்திவரின் முதற்சீராகக் கொள்ளப்படும் என்ற கருத்து பன்னிரு பாட்டியலில் அமைகின்றது. இயற்சீர் அனைத்தும் கொள்ளலாம் எனும் எண்ணம் சுவாமிநாதத்தில் புகுந்துவிடுகின்றது.

சிதம்பரப் பாட்டியல், வடமொழி யாப்பு மரபைப் பின்பற்றிப் போலும் இக் கணங்கட்கு ந, ப, த, வ, ச, ர, ம, ய, என ஓரெழுத்துப் பெயர் அளிக்கின்றது. சுவாமி சிறிது மாறுபாடுகின்றது. கின்றது.

சில இலக்கணங்கள் இச்சீருக்கு நாட்பகுப்பும் அமைக்கின்றன:

முற்பாட்டு எடுப்பின் முதல் ஈரசைச் சொல்
சொற்பால் மங்கலச் சொல்லொடு தோன்றி
நிற்பினும் கொள்ளார் நெறியுணர்ந் தோரே

— இ.கா 10

நன்மை செய் கடவுள் நாடின் அவற்றிற்குத்
தொன்னெறி மரபின் இன்மை யானே
நாலசைச் சீரும் மேலோர் ஒழித்தனர்

— ,, 11

அவைதாம்
நீரே நிலனே வானே நீள்மதி
சீர் இயமானன் செந்தீத் தெறுகதிர்
காற்று எனக் கிளந்த கூற்றன என்ப

— ,, 12

நேர் முதலாகி நிரையிணை பின்வரின்
நீர்க்கணம் என்ப நெறி உணர்ந்தோரே

— ,, 1

நிரை மூன்று இயைந்தது நிலன் எனத் தகுமே

— இ.கா 14

முந்து நிரை இணைந்து நேர் இறு மூவசை
அந்தரகணம் என்று அறிதல் வேண்டும்

— ,, 15

முதல் நிரையாகி இணைநேர் வழிவரின்
அது மதிக்கணம் என்று அறிந்தனர் கொளலே

— ,, 16

நேரசை மூன்று இயமானன் கணமே

— ,, 17

நேர் நடுவாகி நிரை இருபாலும்
சேரும் ஆயின் செந்தீக் கணமே

— ,, 18

நிரை நடுவாகி நேர் இருபால் வரின்
அலர் கதிர்க் கணம் என்று அறிந்தனர் கொளலே

— ,, 19

ஈறு நிரை ஆகி இணைநேர் முன் வரின்
மாறி வந்த மாருத கணமே

— ,, 20

நிலனும் மதியும் நீரும் இயமானனும்
நலம் மிகும் முதல் வரின், பிற நான்கும் பகை

— ,, 21

யாவர் செய்யுட்கும் இனமொடு புணரும்
மூவசைச் சீரே முதல் நிற்பனவே

— ,, 22

அவைதாம்
பெருக்கம் செய்தலின் வாழ்நாள் பயத்தலின்
தருக்கிய சீர்த்தி தன்னைத் தருதலின்
மிகுதிரு ஆக்கலின் வேந்தர்க்கும் பிறர்க்கும்
தகும் எனப் பகரினும் தகாது மற்றச்
சீர்க்கு உரிய நாளொடு செய்யுள் செய்யும்
பொருபடைக் குரிசில் நாள் பொருந்தாக் கடையே

— ,, 23

அவைதாம்
தேயம் போக்குதல் செல்வத்து விளிதல்
சூனியம் ஆதல் சுழல்நோய் உறுதல்
ஊனம் பயக்கும் என்று உரைத்தனர் ஆயினும்
ஆதி அமுதெழுத்து ஆகிய சீர்கட்கு
ஓதிய தெய்வத்திற்கு உரித்தாக
ஓதிய நாளொடு பாடப்படுமே

— ,, 24

எல்லாக் கணமும் நாள்நலம் இல எனில்
பொல்லாங்கு தரும் எனப் புகல வேண்டுமே

— இ.கா 25

நேரசை யாகவும் நிரையசை யாகவும்
சீர்பெற எடுத்தல் சில விடத்து உளதே

— ,, 42

எண்வகைக் குறியில் இயலும் அச் சீர்களுள்
வருணற்கு உரிய நாளே சதையம்
இயமானற்கு உரிய நாளே பரணி
சந்திரன் வந்த நாளே மகயிரம்
பூமிதேவி நாள் கேட்டை யாகும்
எஞ்சிய சீர் ஈரிரண்டின் உள்ளும்
வஞ்சமில் மாருத நாளே சோதி
எரிநாள் கார்த்திகை அந்தரம் அதனுக்கு
உரிய நாளே ஓணம் ஆகும்
சூரியன் நாளே புனர் பூசம்மே

— ,, 43

நவையறு சீர்க்கணம் மங்கலச்சொல் பெயர்
இவை ஒருநாளுக்கு இயம்புதல் சொல்லியல்

— ப.பா-சொ 1

ஈரசைச் சீரே மூவசைச் சீரே
நாலசைச் சீரே ஓரசைச் சீர் என
சீர்வகை நான்கும் தெரிந்தனர் புலவர்

— ,, 2

ஈரசை அகவல்; மூவசை நான்கு
நேர் இறில் வெள்ளை; நிரை இறில் வஞ்சி
நாலசை பொது மற்று ஓரசைச் சீரே

— ,, 3

மூவசை எண்சீர் கணம் என மொழிந்தனர்;
ஈரசை நாலசை ஓரசை ஒழித்தே

— ,, 4

நீடு இயமானன் திங்கள் நிலம் நீர்
சூரியன் வானம் அங்கி காற்று என
இயம்பினர் தெய்வம் நலம்பெறு புலவர்

— ,, 5

நேரசை மூன்று இயமானன், அதற்குச்
சீர்புனை நாளே பரணி; வாழ்நாள்
மற்றது பயக்கும் என்று உய்த்து உரைத்தனரே

— ,, 6

நிரைநேர் நேர் அது நீள்மதி அதற்கு
வருநாள் மகசிரம் மலி புகழ் ஆகும்

— ,, 7

நிரையசை மூன்று நிலக்கணம் அதற்குத்
தருநாள் கேட்டை; திருமிகத் தருமே

— ப.பா-சொ 8

நீர்க்கணம் நேர்நிரைநிரை; நாள் சதயம்
பார்க் கதிர்ப் பெருக்கம் பார்க்கும் என்ப

— ,, 9

கண்ணிய நேர்நிரைநேர் வரின் கடுங்கதிர்;
நண்ணிய நோய்தரும்; நாள் புனர்பூசம்

— ,, 10

நிரைநிரைநேர் தாம் வரின் அது வானம்;
பெருகிய கேடு அதுதரும்; நாள் ஓணம்

— ,, 11

நெருப்பின் கணம் நிரைநேர்நிரை; கார்த்திகை
விருப்புறு நாள்; அது இடுக்கண் செய்யும்

— ,, 12

காட்டிய நேர்நேர்நிரை வரின் காற்று; அது
நாட்டறை போக்கும்; நாள் சோதி ஆகும்

— ,, 13

நிற்பன தீக்கணம் நான்கு; அவை நீக்கி
நற்கணம் நான்கு அவை நாட்டினர் கொளலே

— ,, 14

மங்கலம் அமைந்த சொல்லொடு பொருந்திய
ஈரசை நான்கினுள் நேரீறு ஒழித்து
நிரையீற்று இயற்சீர் முதற்கண் நிற்பினும்
வரையார், மூவசை வாராக் காலே

— ,, 15

ஆதி இடை இறுதி முற்றும் நேரா நிரை என்று
ஓதுவர் நீர் தீ மாகம் ஒண்சுவர்க்கம்-தீதிலோர்
சொற்றூர் மதி பரிதி கால் நிலமாம். நீர்மதியும்
முற்றுகியலா முதன் மொழிக்கு

— வெ.பா-மொ 21

முன்மொழி யாகலான் மூவசைச்சீர் அல்லன
நன்மைசால் தெய்வம் நவிலாமை-முன்மொழிக்கு
ஈட்டிய தொன்மை இலக்கணங்கள் இவ்வகையே
காட்டும் அகலக் கவிக்கு

— ,, 22

நேரசை மூன்று இயமானன்; நிரைப்பின்பு நேரிரண்டு
சேர்வனதிங்கள்; நிரையசை மூன்றும் செழுநிலமாம்
நேரசைப் பின்பு நிரை இரண்டாய் வரின் நீர்க்கணமாம்
தேரிய அல்குல் திருவே இவை நல்ல சீர்க்கணமே

— ந.பா-பொ 22

நிரை இரண்டாய்ப் பின்பு நேர் இறின் அந்தரம்; நேர் இரண்டாய்
நிரை இறின் மாருதம்; நேர் நடுவாகி நிரை இருபால்
விரைதரு கோதை, வெந்தீக் கணம்; நேர் இரண்டின் நடுவே
நிரைவருமாயின் பருதி; இந்நாற்கணம் நீக்கினரே

— ந பா-பொ 23

வான் இலகு நேர்; குருவே நிரையாம்; வெண்சீர்
வரில் நபதவ கண நாள் பரணி மும்மீன்
ஊனமிகு புனர்பூசம் பூசம்; வாணாள்
உற்ற புகழ் சூனியநோய் பலன்கள் ஆகும்
தேன் அனையாய் வஞ்சிச்சீர் அடைவே நான்கும்
திகழ் சரமய கண நாள் சோதி ஆரல்
தானமுறு கேட்டை சதயம்தான்; கேடு
சாவு திரு மகிழ்ச்சி பலன் தரத் தொடங்கும்

— சி.பா-பொ 9

துறக்கம் மதி வான் பரிதி, காய்ச்சீர் முன்னுஞ்
சுழல்காற்று தீ நிலம் நீர் கனிச்சீர்ப் பின்னும்
நிறுத்து கணம் இவ்விரண்டாம்; அகவற் சீரின்
நேரிறு வெள்ளைச்சீர்; நிரை வஞ்சிச்சீர்
சிறப்புடை இவ்விரண்டுமாம் கணப்பேர்; மற்றும்
திகழ் இயற்சீர் அயன் திருக் கோக் கருடன் முன்னும்
வெறுத்த பின்னும் ஆம்என்ப இறைவன்; நாட்டு
மேவு கண நாட்பொருத்தம் வேண்டு மாதோ

— ,, 10

ஆதியும் இடையும் இறுதியும் முற்றும்
ஓதிய நேரும் நிரையும் முற்றிடின்
நீர் தீ மாகம் நிகரில் சுவர்க்கம்
மாமதி பரிதி வாயு பூ கணம்
ஆம் முற்றுதியா முதற் சீர்க்கே

— இ. வி 800

நேரீற்று இயற்சீர் வெண்சீர் முன்னும்
நிரையீற்று இயற்சீர் கனிச்சீர்ப் பின்னும்
தேருங்காலைச் சிறப்புறும்; அவையே
அயன் திருக் கோக் கருடன் கணம் என்னப்
பயின்றிடும், இயற்சீர் பரிசு உரைத்திடவே

— ,, 802

கூறிய இலக்கணம் குறைபாடு இன்றித்
தேறிய மூவசைச் சீர் முதலாக
அகலக் கவிதான் அமையும் என்ப

— ,, 804

கணம் இயல் பொருத்தமே கணம் எனும் சீரின்உள்
முன்னேர் இந்திரன்; முன்நிரை நிலனே
நிரைநேர்நேர் மதி, நேர்நிரைநிரை நீர்
இந்நாற்கணம் நன்றும் இவை முதற்சீர்க்கே
இரு விளங்காய் முறை அந்தரம் சூரியன்;
இரு மாங்கனி முறை வாயு தீ; இவை
வரும் முதற்சீர்க்கு வழுக்கணம் என்ப

— தொ.வி 294

தேமாங்காய் இந்திர கணம்; புளிமாங்
காய் சந்திர கணம்; கருவிளமென்கனி
நிலக்கணம்; கூவிளங்கனி நீர்க்கணம்; இவை
ஆகும்; கருவிளங்காய் அந்தர கணம்;
கூவிளங்காய் இரவிக் கணம்; தேமாங்
கனி கால்கணம்; புளிமாங்கனி தீக்கணம்

— மு.வீ-யா.ஒ 76

இலகு நேர் குரு நிரை நப்பதச கணம் வெண்சீர்
இப்பலன் வாணாள் புகழ் சூனியம் நோயாம், வஞ்சி
அலகிடு சீரே சரமய கணம் இதின்பலன் கேடு
அழிவு திரு மகிழ்ச்சியாம், சுவற்கம் மதி வான்
மலர்பருதி வெண்சீர் முன்வரின், வளி அனல் பார் புனலே
வஞ்சிச்சீர், பின் பொருந்தும், பிற ஆகா இயற்சீர்
நல பிரமன் திரு அரசன் கருடன், முழுவதுமாம்
நவின்றதில் காணு விதி உத்தியின் அமைத்துக் கொளலே

— சுவாமி 177

| கணம் | ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|
| நேர் நேர் நேர் | இயமானன்<br>பரணி | சுவர்க்கம் | இயமானன் | துறக்கம்<br>பரணி | சுவர்க்கம் | இந்திரன் | இந்திரன் | சுவற்கம் |
| நிரைநேர்நேர் | நீள்மதி<br>மகசிரம் | மதி | திங்கள் | ந<br>மதி<br>மும்மீன் | மாமதி | மதி | சந்திரன் | ந<br>மதி |
| நிரைநிரைநிரை | நிலம்<br>கேட்டை | நிலம் | நிலம் | ப<br>நிலம்<br>கேட்டை | பூ | நிலன் | நிலம் | ப<br>பார் |
| நேர்நிரைநிரை | நீர்<br>சதயம் | நீர் | நீர் | ம<br>நீர்<br>சதயம் | நீர் | நீர் | நீர் | ம<br>புனல் |
| நேர்நிரைநேர் | கடுங்கதிர்<br>புனர்பூசம் | பரிதி | பருதி | ய<br>பரிதி<br>புனர்பூசம் | பரிதி | சூரியன் | இரவி | ய<br>பருதி |
| நிரைநிரைநேர் | வானம்<br>ஓணம் | மாகம் | அந்தரம் | த<br>வான்<br>பூசம் | மாகம் | அந்தரம் | அந்தரம் | த<br>வான் |
| நிரைநேர்நிரை | நெருப்பு<br>கார்த்திகை | தீ | தீ | வ<br>தீ<br>ஆரல் | தீ | தீ | தீ | ச<br>அனல் |
| நேர்நேர்நிரை | காற்று<br>சோதி | கால் | மாருதம் | ர<br>காற்று<br>சோதி<br>ச | வாயு | வாயு | கால் | ர<br>வளி<br>ச |

## மங்கலம்†

மங்கலம் அல்லது மங்கலப் பொருத்தம் என்பது செய்யுள் முதன்மொழியிடத்து மங்கலச் சொல் நிற்பது.

வெ.பா முதலியன, மங்கலச் சொற்களை மட்டும் மங்கலப் பொருத்தத்தின் கண் கூற, ப.பா. மங்கலப்பொருத்தம், எழுத்துப் பொருத்தம், சொற்பொருத்தம் என்ற மூன்றையும் மங்கலம் என அடக்கியது.

மங்கலச் சொற்களைத் தொகுக்கும்போது, அனைத்து நூற்களுக்கும் பொதுவானவையும், சிலவற்றிற்கே சிறப்பானவையும் உள. ஒரே பொருளைக் குறிக்கும் பல சொல் - பரியாயச் சொல்-பயில்வதும் நினைத்தற்குரியது.

மங்கலச் சொல், செய்யுள் முதன்மொழியாகத் தானே நிற்பதோடு, அடையடுத்து நிற்பதும் உண்டு. இத்தன்மை சி. பா,இ.வி என்பனவற்றில் கூறப்படுகின்றது.

அதோடு, முதன் மொழியில் மட்டுமின்றிச் செய்யுளின் இடையிலும் கடையிலும் மங்கலம் வந்தாலும் போதும் என்ற நிலையும் ஏற்பட்டுள்ளது (சி.பா 27, இ.வி 801).

வரையறுத்த பாட்டியலின் மங்கலம் பற்றிய செய்தி பிற நூற்களிலிருந்து வேறுபட்டுள்ளது; இன்னின்ன மங்கலச் சொல் இன்னயின்ன முதலெழுத்தையுடைய பெயருக்கு முன் வரல் வேண்டும் என வரையறுக்கின்றது. பிரபந்த தீபிகையும் இக்கருத்தைப் பின்பற்றி, எழுத்தை யடிப்படையாக்கி, உரிய சொற்களை வகுக்கின்றது.

பத்துப் பொருத்தங்களிலும் மங்கலமே தலையாயது. மங்கலம் இருப்பின், பிற பொருத்தங்கள் அமையாவிடினும் வழுவில எனக் கொள்ளப்படும்.

முதன்மொழியாக மங்கலம் வரும் போது, அது ஒரே பொருளுடைய சொல்லாக அமைவதோடு, திரிதல் தோன்றல் முதலிய விகாரமும், வகையுளியும் பெறாது வரல் வேண்டும்.

மங்கலம் சிதையின் அது தலைமகற்குத் தீமை தரும்.

உயிரொடு புணரா மென்மையும் இடையும்
செயிரிற் றீமையும் செப்பத் தகுமே

— இ.கா 26

ஓதிய மெய்யொடு புணராது உயிரெழுத்து
ஆதி நிற்பின் ஆனந்தம்மே

— ,, 27

† மங்கலச் சொற்கள்—இளவேனில்-தொகுதி 2, 1973.பக்கம் 156

உடம்பு பிரிவு உயிர் சாதல் தானே

— இ.கா 28

பொன் பூ திரு மணி புனல் ஆரணம் கடல்
செங்கதிர் திகிரி தேர் பரி எழுத்தே
மாநிலம் கங்கை மலை புகழ் அமுதம்
கார் புயல் உலகம் களிறே அருந்ததி
பார் மதி நாள் சீர் ஞெண்டுடன் என்ன
எண்ணிய சொல்லே அவையல் பிறவும்
கண்ணிய மங்கலச் சொல் எனக் காட்டினர்

— ப.பா-சொ 16

செப்பிய உடம்பொடு சேராது உயிர் முதல்
நிற்பன மக்கட்கு ஆம் எனின் நேர்ந்திலர்
மற்றவை கடவுளர் முனிவர்க்கு ஆமே

— ,, 17

மூன்று ஐந்து ஏழு ஒன்பான் எழுத்து ஆன்ற
ஒற்றுடன் எண்ணி முன் சொற்ற முறையின்
பல்பொருள் படவரூஉம் சொல்லால் அகற்றி
ஒருபொருட்டு ஆகி வருமொழி பற்றித்
திரிதல் ஒழியத் திருந்திச் சொல்லினுள்
தெரிவோர் வகையுளி மறுத்து நட்டது
மங்கலச் சொல் என வகுத்தனர் புலவர்

— ,, 18

சொல்லிய மரபின் மங்கலம் சிதைத்துப்
புல்லுதல் குற்றம் பொருள் தலைமகற்கே

— ,, 20

தொடுகழல் வேந்தன் துஞ்சுதோரும்
வடுவறு பரிசில் வழங்கா தோரும்
கெடுதல் வேண்டிச் சிதைத்தலும் உரித்தே

— ,, 21

சீர் எழுத்துப் பொன் பூ திரு மணி நீர் திங்கள் சொல்
கார் பரிதி யானை கடல் உலகம் - தேர் மலை மா
கங்கை நிலம் பிறவும் காண்தகைய முன்மொழிக்கு
மங்கலமாம் சொல்லின் வகை

— வெ.பா-மொ 3

திரு மணி பூ திங்கள் ஆரணம் சொல் சீர் எழுத்துப்
பொன் தேர்
வருபுனல் கார் புயல் மா நிலம் கங்கை மலை உலகம்
பரி கடல் யானை பருதி அமுதம் புகழ் முதற்சீர்க்கு
உரிய நன் மங்கலம் சொல்லென்று நாவலர் ஓதினரே

— ந.பா-பொ 2

கங்கையும் மானும் கடுக்கையும் திங்களும் காப்புடைய
துங்கன் முகில்நிற வண்ணனும் வேலையில் தொல்கதிரும்
ஐங்கரத்து அற்புதன் தன்னையும் ஆறு முகத்தனையும்
பங்கயத் தோனையும் கூறுக பாவில் பரிவுடனே

—ந.பா-பொ 3

மாமணி தேர் புகழ் அமுதம் எழுத்துக் கங்கை
மதி பரிதி களிறு பரி உலகம் சீர் நாள்
பூ மலை கார் திருக் கடல் நீர் பழனம் பார் சொல்
பொன் திகிரி பிறவும் முதன்மொழிச் சீர்க்கு ஆகும்

—சி.பா-பொ 2:1,2

ஆவது மங்கலத் தேற்ற பரியாயச் சொல்
அடைகொடுத்து முதற்சீருக்கு அடுத்த செய்யுள்
மேவு தலை இடை கடை மங்கலச் சொல்வைத்து
விதி எழுத்து பால் வருணம் மயங்கும் என்ப
வாவும் ஒரு நற்கதியால் முன்னோர் நூலின்
மங்கலத்தால் நஞ்சுசில அமுதம் ஆகும்
தூஅமுதமெனிற் கதியில் பழுது போமேல்
தொடர் கலப்பா மரபினது தொடக்கஞ் செல்வாம்

—சி.பா-பொ 11

சீர் பொன் பூ மணி திங்கள் பரிதி
கார் திரு எழுத்து கங்கை யானை
கடல் நிலை மா உலகம் சொல் நீர்த் தேர்
அமுதம் புகழ் நிலம் ஆரணம் கடவுள்
திகிரி பிறவும் செப்பு மங்கலமே

—இ.வி 771

தானமும் நாளும் கணமும் தவறு
ஊனம் உற்றிடின் அடை உறுதலும், உறுங்கால்
பரியாயச்சொல் பகர்தலும் மங்கலக்கு
உரிய மற்று அது நடுவுறும் இறுதியினும்

—,, 801

மங்கலப் பொருத்தமே கங்கை மலை நிலம்
கார் புயல் பொன் மணி கடல் சொல் கரி பரி
சீர் புகழ் எழுத்து அலர் திங்கள் தினகரன்
தேர் வயல் அமுதம் திரு உலகு ஆரணம்
நீர் பிறவரும் முதனிலைச் சொல்லியல்பே

—தொ.வி 285

அவற்றுள்,
மங்கலம் கார் புயன் மா மணி வாருதி
ஆரணம் உலகு அலர் அமுதம் தேர் வயல்
திங்கள் பொன் எழுத்து திவாகரன் கரி பரி
கங்கை நிலம் திருக் காட்டிய பிறவும்

ஆகும் என்மனார் அறிந்திசினோரே

—மு.வீ-யா.ஒ 66

கங்கை பரி உலகம் சீர் பருதி சசி தார் கார்
கடல் புகழ் மா மலை திரு நீர் எழுத்து அமுதம் பழனம்
சங்கம் மணி பார் தேர் சொல் தாமரை பொன் ஆணை
சந்தனம் கற்பகம் நிதி பால் அழகு அன்னம் திகரி
திங்கள் பூ நாளும் முதன்மொழிக்காம், நல் அடையும்
திரிசொலுமாம் நூற்கு இசை முன் பின் இடை மங்கலமே

—சுவாமி 173

| ப.பா | வெ.பா | ந.பா | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|
| பொன் 1 | 3 | 9 | 24 | 2 | 6 | 13 | 24 |
| பூ 2 | 4 | 3 | 15 | 3 | | | 34 |
| திரு 3 | 5 | 1 | 18 | 8 | 21 | 20 | 13 |
| மணி 4 | 6 | 2 | 2 | 4 | 7 | 4 | 19 |
| புனல் 5 | | 11 | | | | | |
| ஆரணம் 6 | | 5 | | 22 | 23 | 6 | |
| கடல் 7 | 13 | 20 | 19 | 12 | 8 | | 9 |
| செங்கதிர் 8 | | | | | | | |
| திகிரி 9 | | | 25 | 24 | | | திகரி 32 |
| தேர் 10 | 15 | 10 | 3 | 18 | 18 | 10 | 21 |
| பரி 11 | | 19 | 11 | | 11 | 17 | 2 |
| எழுத்து 12 | 2 | 8 | 6 | 9 | 14 | 14 | 15 |
| மா 13 | 17 | 14 | 1 | 14 | | 3 | 11 |
| நிலம் 14 | 19 | 15 | | 21 | 3 | 19 | |
| கங்கை 15 | 18 | 16 | 7 | 10 | 1 | 18 | 1 |
| மலை 16 | 16 | 17 | 16 | | 2 | | 12 |
| புகழ் 17 | | 24 | 4 | 20 | 13 | | 10 |
| அமுதம் 18 | | 23 | 5 | 19 | 20 | அமுதம் 9 | 16 |
| கார் 19 | 10 | 12 | 17 | 7 | 4 | 1 | |
| புயல் 20 | | 13 | | | 5 | புயன் 2 | |
| உலகம் 21 | 14 | 18 | 12 | 15 | உலகு 22 | உலகு 7 | 3 |
| களிறு 22 | | | 10 | | | | |

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
|---|---|---|---|---|---|---|---|
| அருந்ததி 23 | | | | | | | |
| பார் 24 | | | 22 | | | | 20 |
| மதி 25 | | | 8 | | | | |
| நாள் 26 | | | 14 | | | | 35 |
| சீர் 27 | 1 | 7 | 13 | 1 | 12 | | 4 |
| ஞெண்டு 28 | | | | | | | |
| | நீர் 7 | | 20 | 17 | 24 | | 14 |
| | திங்கள் 8 | 4 | | 5 | 16 | 12 | 33 |
| | சொல் 9 | 6 | 23 | 16 | 9 | | 22 |
| | பரிதி 11 | பருதி 22 | 9 | 6 | | | பருதி 5 |
| | யானை 12 | 21 | 11 | | | | ஆனை 25 |
| | | பழனம் 21 | | | | | 17 |
| | | | நிலை 13 | | | | |
| | | | கடவுள் 23 | | | | |
| | | | | கரி 10 | | 16 | |
| | | | | அலர் 15 | | 8 | |
| | | | | தினகரன் 17 | | | |
| | | | | வயல் 19 | | 11 | |
| | | | | | வாருதி 5 | | |
| | | | | | திவாகரன் 15 | | |
| | | | | | | சசி 6 | |
| | | | | | | தார் 7 | |
| | | | | | | சங்கம் 18 | |
| | | | | | | தாமரை 23 | |
| | | | | | | சந்தனம் 26 | |
| | | | | | | கற்பகம் 27 | |
| | | | | | | நிதி 28 | |
| | | | | | | பால் 9 | |
| | | | | | | அழகு 23 | |
| | | | | | | அன்னம் 31 | |

## மங்கலமும் எழுத்தும்

### எழுத்துக்கள்

| | சொல் | வரையறுத்த பாட்டியல் | பிரபந்த தீபிகை |
|---|---|---|---|
| 1. | சீர் | க,கா,கி,கீ,சொ,சோ,ந நா, நி,நீ,யா,வ,வா,வி,வீ | க,கா,கி,கீ,சொ,சோ தொ, தோ, நி,நீ,ய,யா |
| 2. | எழுத்து | நு,நூ,யூ | |
| 3. | பொன் | கு,கூ,சௌ.து,தூ,தெ,தே, நெ,நே,பு,பூ,மெ,மே,மொ, மோ,மௌ | உ,ஊ,எ,ஏ,ஐ; பு,பூ சு,சூ,செ,சே,சை- சாதரூபம் (1) |
| 4. | பூ | கௌ,சை,ம,மா,மி,மீ,மு,மூ வை,வௌ, | அ,ஆ, ப,பா,பி,பீ,ம.மா,மி,மீ |
| 5. | திரு | கொ,கோ | த,தா, து,தூ-செல்வம் (2) |
| 6. | திங்கள் | ,, ,, | |
| 7. | மணி | கெ,கே | அ,ஆ,கெ,கே,கை, நெ, நே,நை. |
| 8. | நீர் | கை,சி,சீ,தி,தீ,தை, நொ,நோ,பை | ஓ,ஓ,ஔ,தி,தீ |
| 9. | சொல் | ஔ,சு,சூ,செ,சே,தௌ, நௌ | கு,கூ,நு,நூ,பு,பூ |
| 10. | கங்கை | அ,ஆ,ஒ,ஓ,த,தா,தொ தோ,யோ | கொ,கோ-சானவி (3) |
| 11. | வாரணம் | ஞெ,ஞொ | |
| 12. | குஞ்சரம் | இ,ஈ,ஞா | சி,சீ-வேழம் (4) |
| 13. | உலகு(கம்) | ப,பா | ந,நா,நி,நீ,நு,நூ |
| 14. | பார் | ச,சா,பெ,பே,பொ,போ, வெ,வே | ச,சா,பு,பூ,பெ,பே,மு, மூ,ப,பா,பி,பீ- தரணி (5) யு,யோ-புவி (6) |
| 15. | தேர் | உ,ஊ,எ,ஏ,ஐ,நை,மை | ப,பா,பி,பீ,வ,வா |
| 16. | முந்நீர் | | அ,ஆ,இ,ஈ |
| 17. | கடல் | | அ,ஆ |
| 18. | கார் | | அ,ஆ,ஒ.ஓ,ஔ,கொ, கோ |
| 19. | நேமி | | உ,ஊ,எ,ஏ,ஐ |
| 20. | ஆழி | | ஒ,ஓ,ஔ,ஞ,ஞா |
| 21. | வேலை | | கி,கீ,து,தூ,தெ,தே, தை |
| 22. | அணி | | ச,சா,வெ,வே, வை,வௌ |

| | | |
|---|---|---|
| 23. | சுதை | ச,சா |
| 24. | பூவை | சு,சூ,செ,சே,சை |
| 25. | அமுதம் | ஞு,ஞா,நெ,நே,நை, நொ,நோ |
| 26. | திகிரி | த,தா |
| 27. | மதி | தொ,தோ, வெ, வே வை,வௌ |
| 28. | தரு | பெ,பே,சி,சீ |
| 29. | பிறை | மெ,மே,மை,மொ மோ |
| 30. | பங்கசை | வ,வா |
| 31. | பதுமை | வி,வீ |

மங்கலச் சொற்களுக்கேற்ற எழுத்துக்கள் இவையிவை என வ.பா வகுக்க, இன்னின்ன எழுத்துக்கேற்ற சொல் அல்லது சொற்கள் இவையிவை யெனப் பி.தீ வகுக்கின்றது. முன்னதிலும் பின்னதில் சொற் பெருக்கம் உண்டு.

பிரபந்த தீபிகையின் கீழ் எழுத்துக்களைத் தொகுக்கும்போது, சில எழுத்துக்கட்கு நேரே பரியாயச் சொல்லை வேறுபத்தியுள் ளோம். அவற்றைத் தனித்த சொற்களாகக்கொண்டு தொகுப்பினும் அமையும் (31+6—37):

வருகின்ற மங்கலச் சொல்லினுள் சீர் கொள்க வாய்ந்த கக்கா
அருகு ஒன்று கிக்கீ சொச்சோக்கள் நந்நாவொடு அடுத்த நிந்நீ
தருகின்ற யாவொடு வவ்வா விவ்வீப்பெயர் தங்களுக்கு
முருகு ஒன்று எழுத்து நுந் நூ யூப் பெயர்க்கு மொழிய நன்றே
— வ.பா 4

மொழி பொன் குக்கூவும் சௌகாரம் துத்தூவும் முரணி தெத்தே
அழிவில் நெந்நேயொடு புப்பூ மெம்மேயொடு அகன்ற மொம்மோ
வழுவில் மௌகாரப் பெயர்க்கு உரை; பூக்கொண்டு இசைக்க கௌ சை
வழிகொள் மம்மா மிம்மீ மும்மூ வைகார வௌகாரங் கட்கே
— ,, 5

வௌவும் திருத், திங்கள் என்சொற்கள் கொக்கோ வரும் பெயர்க்காம்
செவ்வுண் மணிச்சொல் கெக்கேப் பெயர்க்காம் செழுநீர்ச் சொல் கையோடு
இவ்வுண் சிச்சீயொடு தித்தீத்தை நெந்நோவுடன் இசையக்
கௌவும் பைகாரப் பெயர்க்கு நன்று ஆம்படி கட்டுரையே
— ,, 6

கட்டுரை சொற்கொள் ஔகாரம் சுச்சூக்கள் செச்சேக்கள்
தௌ நௌ
ஒட்டுரை பேர்க்கு இனிதாம் கங்கை அஆஒஓக்கள் தத்தா
விட்டுஉரை தொத்தோ விழையோப் பெயர்க்கு உயர்
யானையின் பேர்ப்
பட்டுரை வாரணம் கொண்டு ஞெஞ் ஞொப்பெயர் பாடுகவே
— வ.பா 7

பாடுயர் குஞ்சரம் இஈயும் ஞாவும் பகர் பெயர்க்காம்
நீடு உலகங்கொடு பப்பாப் பெயர்க்கு நிரந்து உரைக்க;
பீடுறு பார் கொடு சச்சாப் பெப்பே யொடு ஒளிர்ந்த
பொப்போ
நாடு வெவ்வே முதல் நண்ணிய பேர்க்கு நயந்துரையே
— ,, 8

உரைதரு தேர்கொடு உஊஎ ஏஐ உவந்த நைமை
விரைதரு பேர்கட்கு நேரே விளம்புக மேவு தண்ணீர்த்
திரைதரு வேலையுடனே செஞ்சேலையுஞ் சேர என்று
வரைதரு மஞ்சனந் தோய்ந்து அரிசிந்திய வாள்விழியே
— ,, 9

அரியதமிழ் பத்துப் பொருத்தங் களைத்தெரிந்
தபிதான மாம்பொருத்தம்
அகரமுத லன்கிற்கு முந்நீர தாகுமே
அஆ விரண்டினுக்கும்
அருமணி கடல்கா ருடன்பூவு மெய்துமே
யாம்உஊ முதலைந்தினுக்
கானபொன் னேமியும் ஒகரமுதல் மூன்றுக்கு
மாழிநீர் கார்பொருந்தும்
தருககா வுஞ்சீர் கிகீக்குறுஞ் சீர்வேலை
தானேகு கூச்சொலாகும்
சாருமணி கெக்கேகை கொக்கோ விரண்டிற்குஞ்
சானவி யுடன்காருமாம்
சகரமொடு சகரவா காரமணி பால்சுதை
தருவேழ மேசிசீக்குச்
சாத்திய சுசூமுத லைந்துக் குறும்பூவை
சாதரு பஞ்சீர்சொசோ
தெரிஞஞா வுக்கமுத மாழீததாவைத்
திருத்திகிரி யேபொருந்தும்
திதீயெனுஞ் சொல்லுக்குநீரே துதூவைந்து
செல்வமும் வேலைத்தொதோ
சீர்மதி நநாமுத லாறுமுல கெய்துமே
சீர்நிநீ யாதியாகுஞ்

சேருமே நுந்நூச் சொல் நெந்நேநை யமுதமணி
சிந்துநொந் நோவமுதமாம்
பரவுபம் முதனுன்கு பூத்தரணி தேர்புபூ
பார்பொன்சொல் பெப்பேயுறும்
பார்தருவு மகரமுத ஞுன்குபூ மும்மூப்பு
பாரும்மெ மேமைபிறையாம்
பகர்மொமோ பிறையயா சீர்யுயோ புவிவவா
பங்கசை தேர்விவீக்குப்
பதுமைபின் ஞுன்கிற்கு மதியணி யெனத்தேர்ந்த
பாவலர்க ளுரைசெய்வரே

— பி.தீ 3

## பெயர்

பாட்டுடைத் தலைவற்குரிய எண்வகைப் பெயருள் சிறப்பு,இயற் பெயர்க்குப் பொருத்தமாகப் பாடலின் முதற் சொல் அமைதல் வேண்டும் என்பது இங்கே கருதப்படுகின்றது.

இப்பொருத்தமும் பன்னிருபாட்டியலுக்கே உரியதாம். தானப் பொருத்தம், தலைவன் பெயருக்கும் எழுத்துக்குமிடையே அமைவ தால், பெயருக்கு விளக்கம் தரலும் எப்பெயர் என அறிவுறுத்தலும் தேவையாயிற்று போலும்.

எண்வகைப் பெயரும் நண்ணுதல் செப்பின்
குலம் குடி கோத்திரம் நலம் பெறு குணமே
மனமே ஆணை மன்னிய சிறப்பே
இயற்பெயர் என்று இவை தம்முள் இயன்ற
சிறப்பு இயற்பெயர் எனும் இரு திறத்திற்கும்
மயக்கற மொழிமுதல் எடுக்கும் சொல்லுடன்
பொருத்தம் கொள்வர் கருத்து உணர்ந்தோரே

— ப.பா-சொ 22

பார்ப்பார் அரசர் வணிகர் வேளாளர் எனப்
பாற்படு நாற்பெயர் குலப்பெயர் ஆகும்

— ,, 23

குடிப்பெயர் ஆவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றிப்
போல்வன பிறவும் பொருத்தம் கொளலே

— ,, 24

கோத்திரப் பெயரே கூறுங்காலைத்
தாதைக் குடிப்பெயரைத் தக்கவற் றியற்றல்

— ,, 25

குணப்பெயர் ஏனைப் புலவோர் கொடுப்பத்
தணப்பில ஆகித் தழுவும் பெயரே

— ,, 26

மனப்பெயர் ஆவன தனக்குத் தானே
எனக்கு இது வேண்டும்என்று எய்தும் பெயரே

— ப.பா-சொ 27

ஆணைப்பெயரே வலியோர் அஞ்சப்
பேணி உலகம் பேசும் பெயரே

— ,, 28

சிறப்புப் பெயரே தெரியுங் காலைச்
சிறப்புடை வேந்தன் கொடுக்கும் பெயரே

— ,, 29

சாதியில் உள்ளோர் தமக்குத் தாமே
நீதிகொள் சிறப்பு இயற்பெயர் கொளற்குரியர்

— ,, 30

முடியுடை வேந்தன் முற்குலத்தோர்க்கு அல்லது
பட்டமும் பூவும் பூணும் ஆழியும்
நட்டமில் நலமலி சிறப்புப் பெயரும்
கொடாஅன் என மொழிப குலமொழிப் புலவர்

— ,, 31

வினைசெயல் மருங்கின் மிக்கோரும் பெறுப

— ,, 32

## சொல்

பன்னிரு பாட்டியலில் மங்கலத்தின் கீழே வந்த சிறப்புச் செய்திகளான சொல், எழுத்துப்பற்றிய கருத்துக்கள், பிற்கால இலக்கணங்களில் தனித்துப் பிரிந்து இருவேறு பொருத்தங்களாயின, எனவே,

பல்பொருள் படவருஉம் சொல்லால் அகற்றி
ஒருபொருட் டாகி வருமொழி பற்றித்
திரிதல் ஒழியத் திருந்திச் சொல்லினுள்
தெரிவோர் வகையுளி மறுத்து நட்டது

— ப.பா-70

என்ற பன்னிரு பாட்டியல் கருத்து, இயைபு பற்றி இங்கே நினைத்தற் பாலது.

சொற்பொருத்தத்தைப் பாட்டியலார் விளக்கும்போது, இன்ன சொல் வரல் வேண்டும் எனக் கூறுது, இத்தகைய சொல் வரலாகாது என எதிர்மறையில் இயம்புகின்றனர். சி.பா இதனை ஆனந்தம் எனக் குறிக்கிறது.

தசாங்கத்தைப் பாடும்போது, அதனை ஒருசீராக உரைக்க வேண்டுமேயன்றிப் பிளவுபடக் கூறலாகாது. அதோடு, அதன் அயலில் கொலைச் சொல்லோ பொருளோ சார்ந்து வரலாகாது—இச் சிறப்பிலக்கணங்கள், ந.பா, இ. வி-இல் இடம் பெறுகின்றன.

வகையுளி சேர்தல் வனப்பு இன்றாய் நிற்றல்
தொகையார் பொருள் பலவாத் தோன்றல்-தகையில்
பொருளின்மை, ஈறுதிரிதலே போல்வ
தரு முதற்சீர்ச் சொற்காகுந் தப்பு

— வெ. பா-மொ 4

பொருள் தெரியாமை, சிறப்பின்றி நிற்றல், பொருள் பலவாய்
வருமொழி யாதல், வகையுளி சேர்தல், வருஞ்சீருடன்
முரிதரும் ஈறு உடைத்து ஆதல்; எடுத்த அச்சீர் செய்யுமேல்
சரிவளையாய் அவைதாம் அமையாவென்று சாற்றுவரே

— ந.பா-பொ 4

நாம வகையுளி சேர்தல், பொருளது இன்மை
நலமிலதாய் வைத்தல் பலபொருளாய்த் தோன்ற
லாம் இனிய சொல்லீறு திரிதல் போலும்
ஆதிமொழிக்கு ஆகா ஆனந்தம் ஆமே

— சி. பா-பொ 2: 3, 4

விழுப்பொருள் தோன்றல், வேறுபல பொருளின்
ஒழுக்கல், வகையுளி உறுதல், ஈறு
திரிதல் இன்றிச் செய்வது சொல்லே

— இ: வி 772

சொல்லின் பொருத்தம் சொல்லுங்காலை
அரிது உணர் சொல்லும், அரும் திரிசொல்லும்
திரிபு உடை சீரும் தீதாம் முதற்கே

— தொ. வி 286

சீர் நனி சிதைதல், சிறப்பின்றாய் நிற்றல்
ஈறு திரிதல், இரும் பொருள் இன்மை
பலபொருள் பயத்தல் முதலிய பிறவும்
முதற்சீர் மொழிக்கு ஆகா என மொழிப

— மு. வீ-யா. ஒ 67

மங்கலச் சொல் பொருள் இன்மை, நலம் இன்மை, நாம
வகையுளி, பல்பொருள் தோன்றல், சொல்லீறு திரிதல்
அங்கவை ஆகா... ...

— சுவாமி 174

மலை ஆறு நாடு ஊர் மலர்த்தார் வயப்பரி வார்மதத்த
கொலையார் களிறு கொடி முரசு ஆணை குலவுபத்தும்
தலையான நூலோர் தசாங்கமதென்ப தமதுஅயலே
கொலையான சொல்பொருள் தோன்றிடில் ஆனந்தம் கூறுவரே

— ந. பா- பொ 24

உன்னும் தசாங்கம் ஒருசீர் அதனுள் உரைப்பது அன்றிப்
பின் நின்ற சீரொடு சேர்ந்து பிளவுபடின் பிழையாம்
இன்னும் அவைதாம் புணர்மொழி ஆயின் இயல்புபெறும்
மின்னும் வெளியும் துடியும் நிகரிடை மெல்லியலே

— ,, 25

உற்ற தசாங்கத்தினை ஒரு சீரான்
முற்ற உரைத்தல்; முறை பிரிந்து இசைப்பின்
பிழையாம்; புணர்மொழிப் பெயர் ஈற்றில் தொகின்
வழுவாகா என வகுத்தனர் புலவர்

— இ. வி 803

## எழுத்து

சொற்பொருத்தம் போன்றே எழுத்துப் பொருத்தமும் பன்னிரு பாட்டியலின் மங்கலப் பொருத்தத்திலிருந்து வளர்ந்தது என்பது தெளிவு. மங்கலச் சொல்லால் வரும் முதற்சீரில் இத்தனை எழுத்து வரவேண்டும் என்ற வரையறையே இங்குக் கூறப்படுவது.

ஒற்றோடு சேர்த்து, எழுத்துக்களின் எண்ணிக்கை சமநிலை-அதாவது இரட்டை எண் ஆயின் அது தீமைபயக்கும். எனவே விலக்கப்படல் வேண்டும். வியனிலை-ஒற்றை எண் ஆயின் அது சிறப்பு:

மூன்றைந் தேழொன் பானெழுத் தான்ற
ஒற்றுடன் எண்ணிமுன் சொற்ற முறையின்

—ப. பா 70

என்பதும்

முன்னிலை எழுத்தின் வியநிலை நலனே
சமநிலை யாயின் முதல்வற் கூனம்

— ,, 71

என்பதும் பன்னிரு பாட்டியல்.

இவ்விடத்து, நவநீதப் பாட்டியலில்மட்டுமுள்ள கருத்து ஒன்றும் கூறவேண்டியுள்ளது. பாட்டுடைத்தலைவன் இயற்பெயர் முதலெழுத்துமுதலாக அவனைப் பாடும் பிரபந்தச் செய்யுளின் முதலெழுத்துவரை எண்ணும்போது, சமநிலையாக வரின் நன்றெனவும் வியனிலையாயின் தீதெனவும் கூறப்படுகின்றது.எழுத்தெண்ணிக்கையடிப் படையில் அதனை இங்கே இணைக்கலாம்.

முன்நிலை எழுத்தின் வியநிலை நலனே
சமநிலை ஆயின் முதல்வற்கு ஊனம்

— ப. பா-சொ 19

தப்பாத மூன்று ஐந்து ஏழ் ஒன்பான் தவறிலை என்று
ஒப்பா முதற்சீர்க்கு உரைசெய்வர்- செப்புங்கால்
தண்டாத நான்கு ஆறு எட்டு ஆகா, தவிர்க என்று
கொண்டார் எழுத்தின் குறி

—வெ. பா-மொ 5

மூன்று ஐந்து ஏழ் ஒன்பது எழுத்தாம் வியனிலையாய் முதற்சீர்
தோன்றிடின் நன்று; இரண்டு ஈரிரண்டு ஆறு எட்டெழுத்துத்
தொன்னூல்

சான்றவர் கொள்ளார் சமநிலையாம் என்று; தாழ்குழையை
மான் தரு கோல மதர்விழி ஒட்டிய வாணுதலே

— ந. பா-பொ 5

சாற்றும் தலைவன் இயற்பெயருக்குத் தகும் வகையே
தோற்றும் வியன் வரில் ஆனந்தம்ஆகும், சொல்லா எழுத்தாம்
ஏற்ற எழுத்து வரினும் இசைந்தது இயற்பெயர்க்கே
ஆற்றும் பொருத்தம் அனைத்தும் சமநிலையாம் என்பரே

— ,, 8

ஆன எழுத்து ஒன்பது ஏழு ஐந்து மூன்றும்
ஆகாது எட்டு ஆறு நான்கு ஆதிச் சீர்க்கே ..

— சி. பா-பொ 3:1

எண்ணின் மூன்று ஐந்து ஏழ் ஒன்பான் முதல்
நண்ணும் அக்கரம்; நால் ஆறு எட்டு உரு

—இ. வி 784

எழுத்தின் பொருத்தமே எழுவாய்ச் சீர்க்கண் மூன்று
ஐந்து ஏழ் ஒன்பது வியநிலை நன்றும்
இரண்டு நான்கு ஆறு எட்டுச் சமநிலை வழுவாம்

—தொ. வி 287

ஐந்தொடு மூன்று ஏழு ஆறொடு மூன்றும்
ஆகும்; நால் ஆறு எட்டு எழுத்து ஆகாவே

— மு. வீ-யா.ஒ 68

...மூன்று ஐந்து ஏழு ஒன்பான் ஆகும்
ஆறு எட்டு நால் ஆகா எழுத்து...

— சுவாமி 174

## முடிபு

இயலின் முடிவில் வரும் சிலகருத்துக்கள் இவை. பொருத்தத் தொடர்புடையன ஆதலின் இங்கு இணைக்கப் பெறுகின்றன.

திருமங்கை நின்றகலாள் தெவ்வுநோய் நீங்கும்
தருமங்கள் நீங்கலாச் சார்வார்-இருநிலத்து
மன்னர் உள்ளார் தாழும்தாள் வச்சணந்தி மாமுனிவன்
இன்னருளால் நோக்கும் இடம்

— வெ.பா-மொ 23

வாளா உரைப்பில் தொன்னூ லோர்வகுத்த வருணம் உண்டி
கேளார்ந்த நல்ல கதிகணம் ஆய்ந்து உரை கேழ் கிளரத்
தாளார் கமலமு நீலமும் போன்று தருக்கி முட்டி
நீளா மதர்த் தரிசிந்திய வாட்கண் நிரை வளையே

— வ. பா 10

விரித்த பாமகட்கும் வேட்கும் இறைக்கும்
பொருத்தம் ஈரைந்தும் போற்றல் வேண்டும்

—இ. வி 769

## பிரபந்தச் செய்யுள் இலக்கியம்

பாட்டியல் நூற்கள், இலக்கியங்கட்கும் இலக்கணம் வகுத்துச் செல்கின்றன. அவ்வக் காலத்தில் பயின்று வழங்கிய இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு இவ் இலக்கண வகுப்பு அமைவதால், நூற்களுக்கிடையே இலக்கியத்தின் எண்ணிக்கையிலும் பொருள்-யாப்பு விளக்கங்களிலும் வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. பாட்டியல் நூற்களிலேயே, இப் பிரபந்தச் செய்யுள் இலக்கியங்களின் இலக்கணம் கூறும் பகுதியே சிறப்புடையது; பயனுடையது. பிற பகுதிகள் பெரும்பாலும் ஆழ்ந்து தெளிந்த விழுமிய கருத்துக்கள் இன்றி, கற்போருக்குச் சலிப்பும் புலவனுக்குத் தடைக் கல்லும் ஆக அமையுமேயன்றி இலக்கிய நயங்காணத் துணைபுரியுமெனத் தோன்றவில்லை.

இங்குக் கூறும் செய்யுள் இலக்கியத்தை இரண்டாகப் பகுக்கலாம். தொடர்நிலைச் செய்யுள், தனிநிலைச் செய்யுள் என.

> பாங்கார் தொடர்நிலைப்பாப் பல்பாதஞ் சேர்தனிப்பா
> ஈங்ககலப் பாக்களிரண்டாகும் ...
>
> —வெ.பா-செ 5

> வித்தார கவியை விளம்புங் காலை
> யத்திறந் தொடர்நிலை யடிபல நடக்குந்
> தனிப்பா வென்னத் தானிரண்டாகும்
>
> —இ.வி 767

ப.பா மூன்றாகப் பகுக்கின்றது.

> ஒன்றேயாகியும், ஒன்றுபல வாகியும்
> பலவொன் றாகியும் பாற்படும் இனமே
>
> —ப.பா 86

இதுவும் முற்கூறிய தொடர்நிலை-தனிநிலை என்பதில் அடங்கும் தன்மைத்து.

இவ்விருவகைப் பகுப்பிற்கும் தெளிவான அடிப்படைகள் தராவிடினும் பன்னிரு பாட்டியலும் இலக்கண விளக்கமும் சான்றுகள் தருவதால் ஓரளவு விளக்கம் அமைகின்றது.

தொடர்நிலை இலக்கியவகை எண்ணிறந்தன என்பதையும் பாட்டியல் சுட்டுகின்றன.

> ... ... .. ஆங்குத்
> தொடர்நிலைப்பா வின்விகற்பஞ் சூழ்வளையாய் சொல்விற்
> கடையிலவே யென்றுரைத்தார் கண்டு
>
> —வெ. பா-செ 5

> அவற்றுள்,
> தொடர்நிலை விகற்பம் கடையில என்ப
>
> —இ.வி 768

இதனுல் எண்ணிக்கையில் மிகுதியும் குறைவும் அமைந்ததற்கு அமைதி காணலாம்.

பா.பா, இவி, பி.தீ, சுவாமி என்பன, :தனித்தனியே இலக்கிய வகைகளை ஆயும்முன், தாம் நுவலவிருக்கும் வகைகளைத் தொகுத்துத் தருகின்றன. ஆயின் தொகை நூற்பாவில் கூறும் முறையில்தான் எல்லா நூற்களிலும் பின் விளக்கப்படுகின்றன எனக் கூறுவதற்கில்லை.

இவற்றிற்கமையும் விளக்கமும், இவற்றை அமைக்கும் முறைமையும் நூற்களுக்கிடையே அமையும் கருத்து வேறுபாடு களைக் காட்டுகின்றன.

பிரபந்தங்கள் 96 என்ற வரையறைநிலை இந்நூற்களில் கைக் கொள்ளப்படவில்லை. எண்ணிக்கை மிக்கும் குறைந்தும் அமைகின் றது. ஒரு நூலில் கூறப்பட்டன மற்றொன்றில் விரிவடைகின்றன; வகைகள் பெருகுகின்றன. இந்நிலையை அட்டவணை விளக்குகின் றது. பிரபந்த மரபியல் மட்டுமே பிரபந்தம் தொண்ணூற்ருறு என்ற எண்ணிக்கையையேனும் தருகின்றது.

வெள்ளை அகவல் துள்ளுகலி வஞ்சி
என்னும் நாற்பா இவற்றுடன் இயல்மருள்
தாழிசை துறை விருத்தங்கள் என்றிவற்றின்
சூழ்வகை இனம்பல சொல்லுதல் இனவியல்

—ப.பா-இ 1

ஒன்றே ஆகியும் ஒன்று பலஆகியும்
பல ஒன்று ஆகியும் பாற்படும் இனமே

— ,, 2

அவற்றுள்,
ஒன்றே ஆகிய இனம் எனப்பட்டன
உலா ஆற்றுப்படை வகைமடல் முதலாயின

— ,, 3

ஒன்று பலவாகிய இனம் அந்தாதி
கோவை காப்பியம் ஆதியாக் கூறுவன

— ,, 4

பல ஒன்ருகிய இனம் எனப்பட்டன
கலித்தொகை குறுந்தொகை நெடுந்தொகை முதலாயின

— ,, 5

பல ஒன்ருகிய இனம் எனப்பட்டன
கலம்பகம் மும்மணிக் கோவை முதலாயின

— ,, 6

மேதகு சாதகம் பிள்ளைப் பாட்டே
கோதில் வேந்தன் குடைமங்கலமே

ஓதிய ஒருபோகு அமைந்த கலம்பகம்
உலாவே சின்னப்பூவே பரணி
பழுதில் மடல் மறம் பல்சந்தமாலை
இணைமணிமாலை இரட்டைமணிமாலை
மும்மணிமாலை நான்மணிமாலை
கலம்பகமாலை மும்மணிக்கோவை
அருங்கலி ஒலியே யானைத்தொழிலே
வருக்கமாலை நாமமாலை
திருக்கிளர் இன்னிசை சிலைபரி கரியே
எழில்புனை வாள்குடை தொழில்புனை வேல்கோல்
அழிவில் நாடு ஊர் ஐம்படை விருத்தம்
நாழிகைக்கவியே நவமணிமாலை
கைக்கிளை அரிபிறப்பு அட்டமங்கலமே
இல்லற வெள்ளை எழில்புனை தாரகை
செந்தமிழ் தாண்டகம் துகளறு பதிகம்
சீர் மெய்க்கீர்த்தி செருக்கள வழியே
மறக்கள வஞ்சி செருக்கள வஞ்சி
யாற்றுப்படைவகை கண்படை துயிலெடை
விளக்கு நிலையே வெஞ்சினக் கடாநிலை
எண்ணி யாண்டே கண்ணிய பறைநிலை
அரும்பொருள் நிறுத்த அந்தாதித் தொகை
புறநிலை வாயுறை செவியறிவுறாவே
பாதம் ஆதி பனை முலை நயனம்
குற்றமில் உழத்தி குறத்திப் பாட்டே
ஒருபா ஒருபஃது இருபா இருபஃது
கோவை கணக்கே தொடர்நிலைப் பாட்டே
கடைநிலை கையறுநிலை எனக்கருதி
இடன் அறிபுலவர் இயம்பினர் இனமே

—ப.பா-இ 15

வானவர் ஏத்தும் மறையோர் முதலிய
மக்களின் னோர்க்குத் தக்க தன்மையில்
பிள்ளைக் கவி முதல் புராணம் ஈருகத்
தொண்ணூற் றுறெனும் தொகையதான
முற்பகர் இயல்பை முன்னுறப் பாடும்
பிரபந்த மரபியலது பிரபந்த மரபியலே

— பிர 1

பிள்ளைக்கவி மேல்கொள்ளும் கலம்பகம்
பன்மணிமாலை மும்மணிக் கோவை
அகப்பொருட்கோவை தொகைப்படு செய்யுள்
இணைமணிமாலை இரட்டைமணிமாலை
மும்மணிமாலை நான்மணிமாலை

இருபா இருபஃது ஒருபா ஒருபஃது
ஒலியந்தாதி மலிபுகழ் இன்னிசை
வருக்க மாலை திருத்தகு கைக்கிளை
மங்கல வள்ளை மற்றை யிரட்டை
நற்கீர்த்தி நேரிசை மெய்க்கீர்த்தி மாலை
காப்பு மாலை வேனில் மாலை
பல்சந்த மாலை அங்க மாலை
வசந்த மாலை நவமணி மாலை
பரணி தசாங்கப் பத்து இரு பகுதிய
பதிற்றந்தாதி நூற்றந்தாதி
அட்ட மங்கலம் அலங்காரப் பஞ்சகம்
ஊசல் சின்னப்பூ ஒருபொருள்மேல்
பேசும் சதகம் பிற எண்ணுலும்
கூறுதல் ஐந்திணைக் கோவை யுற்ற
நாழிகை வெண்பா நானூற்பதனோடு
யாழின் மொழி விழி இணைமுலைப் பத்து
வில் வாள் வேல் கோல் வேழம் குதிரை
நாடு ஊர் கொடையை நயந்த விருத்தம்
மாப்பெரும் புலவர் சொல் காப்பியம் என்னப்
பெயர் பெறுந் தொடர்நிலை பிறவுமன்ன

— இ.வி 805

வளமடல் உலாமடல் உலா அனுராக
மாலை மெய்க்கீர்த்தி புகழ்ச்சிமாலை
நாமமாலை தாரகைமாலை
உற்பவமாலை தானைமாலை
வரலாற்று வஞ்சி செருக்கள வஞ்சி
பலபொருள் வஞ்சி நிலைபெறு குழமகன்
பாதாதி கேசம் கேசாதி பாதம்
உவாத் தொழில் கூத்தர் முதலோர் தம்மை
யாற்றுப்படுத்தல் தூதாகும் இருதிணை
போற்று மஞ்சரி எனப் புலவர் நிலைபெறச்
சாற்றப்படும் அத்தனிநிலைச் செய்யுள்

— ,, 855

சாதகம் பிள்ளைக் கவிப்பரணி கோவையர
சன்விருந் தந்தொகைநிலை
சாருமைத் திணையெண் டருஞ்செய்யு ளங்கமொடு
தானையநு ராகநாமம்
தாரகை யிரட்டைமணி பன்மணி புகழ்ச்சிபல
சந்தமெய்க் கீர்த்திகாப்புத்

தண்டகந் தும்பையிணை மணிவேனின் மும்மணிவ
சந்தமுற் பவநான்மணி
ஓதுநவ மணிவீர வெட்சியுட னேவாகை
யுழிஞைமணி நொச்சிகாஞ்சி
யுயர்வருக் கம்பெரு மகிழ்ச்சிநா ளெடுபதிற்
றெலியலந் தாதிதூதோ
டுலவலங் காரபஞ் சகமும்வா யுறைவாழ்த்
துலாவள மடற்கைக்கிளை
யூர்பெயர்கொ ணேரிசையோ டின்னிசை குறத்தியொ
டுழத்திப்பாட் டுக்குழமகன்
பாதாதி கேசவர லாற்றுச் செருக்களம்
படுவஞ்சி பெருமங்கலம்
பதிகமுஞ் செவியறிவுற்றூஉ வொடூர் கடிகைவெண்
பாவட்ட மங்கலமுநாற்
பதுசதக மெழுகூற் றிருக்கைசின் னப்புவொரு
பாவொருப திருபாவிரு
பதுதசாங் கப்பத்து நயனப்ப யோதரப்
பத்துத் தசாங்கத்தயற்
காதுமாற் றுப்படை விருத்தலக் கணமூசல்
காப்பிய மிரண்டுபவனி
காதல்வா தோரணம் வெற்றிக் கரந்தைமஞ்
சரிகலம் பகம்விளக்குக்
கண்படை புறங்கையறு துயிலெடைக் கடையெனுங்
கருதுநிலை யாறெடுமுது
காஞ்சிமங் கலவெள்ளை தாண்டக மிரண்டோடு
கண்டபுற நிலைவாழ்த்துளே

— பி. தீ 4

ஆதியி னிலக்கணக் கடலெனும் பலநூல்க
ளாராய்ந் துணர்ந்த வதனை
யாசிரிய மெனும் விருத்தத்தினுற் கூறுதும்

— ,, 5

... ... இவ் இரு செய்யுளிலே
மன்னுவது பிரபந்தம் அளவிலவாம், இவையே
மலை நதி நாடு ஊர் தார் மாக் களிறு கொடி முரசம்
பன்னு செங்கோல் எனும் தசாங்கம் பொருந்திப் பொருத்தம்
பார்த்துப் பாகத்தொடு சொல்வன சில சொல்லுவமே

— சுவாமி 164

வன்பில் பிள்ளைக்கவி அகத்திற் கோவை புறக்கோவை
வருக்கத்திற் கோவை உலாவொடு பவனிக் காதல்
இன்பமடல் வளமடலே அனுராக மாலை
இசைவிரக மாலை உலாமடல் சதகம் பதிகம்

அன்பு இரட்டைமணி மும்மணி நான்மணியிற் கோவை
அந்தாதி மாலை அலங்கார பஞ்சமம் தான்
முன்பு வெண்பாக் கலித்துறையே விருத்தத்து அந்தாதி
மொழி பதிற்றுப் பத்தாம் அந்தாதி கலம்பகமே
— சுவாமி 165

கலந்திடு பன்மணிமாலை பரணி திக்கு விசயம்
காதல் வண்ணம் பஞ்சரத்தினம் நவரத்தினம் ஏசல்
இலங்குகுறம் மறம் பள்ளு நாடகங்கள் பிறவும்
ஏற்று பிரபந்தமதாம் இவை அலது புலவோர்
துலங்கு மதி யூகத்தால் அகம் புறமாம் பொருளின்
துறையின் ஒன்று பல பலபாட்டு ஓர்பாட்டின் இசைப்பார்
வலன்கலியே பாலை முல்லை காஞ்சி வஞ்சி கடிக
மாலை விலாசம் தூது மஞ்சரிப்பேர் மொழியே
— ,, 166

## சாதகம்

ஒரு குழந்தை பிறந்தால் அதற்கு 'ஜாதகம்' எழுதுதல் நம் மிடையே உள்ள பழக்கம். அம்மரபு இலக்கியமாக ஏற்றம் பெற்ற மையே பிற்காலத்துச் சாதகம் எனவோர் இலக்கியம் தோன்ற ஏது வாயிற்று போலும்.

தலைமகனின் சாதகத்தைக் கணித்தல் சாதகம். ப.பா.மு.வீ,பி.தி மட்டுமே சாதகம் என்பதனைப் பேசுகின்றன.

யுகம், சகாப்தம், ஆண்டு, ஞாயிறு, பக்கம், வாரம், இராசி என்பன குறிக்கப்படுகின்றன.

போற்றிய சாதகம் சாற்றுங் காலைப்
பற்றிய கலியுகத்து உற்ற யாண்டில்
திருந்திய சகாத்தமும் ஆண்டும் பொருந்திய
ஞாயிறும் பக்கமும் மேய வாரமும்
இராசியும் மன்னுற மொழிதற்கு உரிய
— ப.பா-இ 16

ஓரை திதிநிலை யோகம் நாண்மீன்நிலை
வாரங் கரணநிலை வரு கிரக
நிலை ஏழு அவயவ நிலையையும் உணர்வுற்று
அவற்றை அமைத்தவற்றுல் தலைமகனுக்கு
அடைவன அறைதல் சாதகம் என மொழிப
— மு. வீ-யா.ஒ 77

அலகுறு சகாப்த மாண்டு
தேதியுடு வோரையுந் திங்களுஞ் சாதகன்
றிசைசித்ர மபகாரமுந்
திரமான க்ரகநிலே யறிந்துசொல் சாதகம்...

— பி.தீ 5

## பிள்ளேப் பாட்டு

பிள்ளேக் கவி எனவும் பெயர்பெறும் இதனே இலக்கிய ஆசிரியர் பிள்ளேத் தமிழ் எனவே குறிப்பர்.

தான் வழிபடும் இறையையோ வளம்பெறும் வள்ளலேயோ குழந்தையாகப் பாவித்துக் குழந்தைப் பருவங்கள் பத்தில்வைத்துப் போற்றுவது இப் பாட்டின் பொருண்மை. கொச்சகக்கலி, கலிவெண் பாட்டு என்பன யாப்பாகக் குறிக்கப்படல் இந்திரகாளியத்தின் புதுமை.

குழந்தையின் மூன்றும் மாதம் முதல் 21 மாதமளவும் பாடப் படல் பெரும் பான்மை. ஆண்மகவுக்கு 3,5,7 ஆண்டும் அருகி 12 ஆண்டும் சிறப்பிக்கப் பெறுதல் உண்டு. பெண்மகவுக்குக் காமன் நோன்பு குறிக்கப்படின் 12 ஆண்டு விரிக்கப்படும். ஆணுக்குப் பதினாறாண்டும் பெண்ணுக்குப் பூப்புப் பருவமும் எல்லேயாதலும் உண்டு.

பொதுநிலேயில், பாடப்படும் குழவிப் பருவங்கள் பத்து. அவை, காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம் வாரானே (வருகை) அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்பன. இவற் றில் ஒருசில தம்முறை மாறி அமைதலும் உண்டு.

பெண்பாற் பிள்ளேக் கவிக்குக் குழவிப்பருவ வேறுபாடு உண்மை சுட்டப்படுகின்றது. மேற்கூறிய (ஆண்பாற்) பருவ நிலே களில் ஈற்றில் நிற்கும் மூன்றும் நீக்கப்படுகின்றன. பதிலாகக் கழங்கு, அம்மனே, ஊசல், இணேபெறல் இயல்பு. அருகி, சிற்றில் இழைத்தல், சிறுசோருக்கல், குழமகன், காமன் நோன்பு என்பன தொடர்புறுகின்றன.

தலேமக்களுக்குத்தக பாடல் எண்ணிக்கையில் வேறுபாடு அமையும் என்ற கருத்து பிரபந்த மரபியலின்கண் காணப்படுகின் றது. பிற இலக்கணங்கள், கலம்பகம் பற்றி மொழியும்போது மட்டுமே இத்தகு கருத்தினே இயம்பும். எனவே இது இந்நூல் தரும் புது இணேவாகும்.

தோற்றம் முதல் யாண்டு ஈரெட்டு அளவும்
ஆற்றல் சான்ற ஆண்பாற்கு உரிய

— இ.கா 29

காப்பு முதலாகிய யாப்புவகை எல்லாம்
பூப்பு நிகழ்வளவும் பெண்பாற்கு உரிய

— இ.கா 30

அவைதாம், பிள்ளையைப் பாடலில் பிள்ளைப்பாட்டாய்
பிறப்பே ஓகை காப்பே வளர்ச்சி
அச்சமுறுத்தலுடன் செங்கீரை
தால் சப்பாணி முத்தம் வாரானை
அம்புலி சிற்றில் குழமகன் ஊசல்
என்றனர் பிறவும் தொன்னெறி மரபின்
தத்தம் தொழிற்குத் தகுவன புகறல்
எத்திறத் தோர்க்கும் உரிய என்ப
கொச்சகக் கலியொடு நெடுவெண்பாட்டே

— ,, 31

நெடுவெண் பாட்டின் முந்நான்கு இறவாது
தொழிலொடு குறித்துத் தோன்றும் செய்யுள்
ஒன்று மூன்று ஐந்து ஏழ் ஒன்பான் பதினொன்று
என்று இவை இவற்றின் இகந்தன இழுக்கே

— ,, 32

பிறப்பே ஓகை பேணுறு வளர்ச்சி
சிறைப்பட அச்சமுறுத்தலொடு நான்கும்
ஆராயுங்கால் ஐந்து மூன்று இடையாய்
ஓரேழ் ஒருபொருட்கு உயர்ச்சி இழிபு ஒன்றே

— ,, 33

பிள்ளைப் பாட்டே தெள்ளிதின் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே

— ப.பா-இ 17

காப்பொடு செங்கீரை, தால், சப்பாணி
யாப்புறு முத்தம், வருக என்றல் முதல்
அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத்து அளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்

— ,, 18

தந்தை தாயே பாட்டன் பாட்டி
முந்துற உரைத்தல் முறைமை என்ப

— ,, 19

திருந்திய பெண்மகவு ஆயின் விரும்பிய
பின்னர் மூன்றும் மன்னு நீக்கென்றனர்

— ,, 20

சிற்றில் இழைத்தல் சிறுசோறு ருக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்

ஆண்டு ஈராறதில் எழிற்காமன் நோன்பொடு
வேண்டுதல் தானுள விளம்பினர் புலவர்

— ப.பா-இ 21

திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரர் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங் கடவுளரே

— ,, 22

காப்பின் முதல் எடுக்கும் கடவுள் தானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்

— ,, 23

அவன்தான்
காவல் கிழவன் ஆகலானும்
பூவின் கிழத்தியைப் புணர்தலானும்
முடியும் கடகமும் மொய் பூந்தாரும்
குழையும் நூலும் குருமணிப் பூணும்
அணியும் செம்மல் ஆகலானும்
முன்னுற மொழிதற்கு உரியன் என்ப

— ,, 24

விரிசடைக் கடவுளும் வேய்த்தோள் எழுவரும்
அருளொடு காக்க என்று அறையுங் காலைக்
கொலையும் கொடுமையும் கூறுூர் ஆகிப்
பெயரும் சின்னமும் பிறவும் தோன்றக்
கங்கை திங்கள் கடுக்கை யாலை
மங்கல மழுவொடு மலைமகள் என்றிவை
விளங்கக் கூறல் விளம்பிய மரபே

— ,, 25

அகவல் விருத்தமும் கட்டளை ஒலியும்
கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே

— ,, 26

பிள்ளைப் பாட்டே நெடுவெண்பாட்டு எனத்
தெள்ளிதில் செப்பும் புலவரும் உளரே

— ,, 27

முதற்கண் எடுக்கும் அகவல் விருத்தம்
எழுத்தின் பகுதி எண்ணினர் கொளலே

— ,, 28

நீணெறி உவகை ஆண்மகவிற்கு ஏழ்
ஐம்மூ ஆண்டே அவர்முதல் சாற்றல்

— ,, 29

பொங்கு கதிர் இளம்பிறை புலியின் சிறுபறழ்
குஞ்சரக் குழவி கோளரிக் குருளை
அடல் இளவிடையே ஆறிரண்டு ஆண்டின்
இடைநிகழ் உவமை என்மனுர் புலவர்

—ப.பா-இ 30

பெண் மகவிற்குப் பேசும் இடத்து
மானின் கன்று மயிலின் பிள்ளை
தேனின் இன்பத் தெள்ளாத் தேறல்
கரும்பின் இளமுளை கல்லாக் கிள்ளை
இளந்தளிர் வல்லி என்றிவை எல்லாம்
பெய்வளை மகளிர்க்கு எய்திய உவமை

— ,, 31

கண்டுஉரைக்கில் பிள்ளைக்கவி தெய்வம்காக்க எனக்
கொண்டு உரைக்கும் தேவர் கொலைஅகற்றி-ஒண்தொடியாய்
சுற்றத்து அளவா, வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை

— வெ.பா-செ 6

முறைதரு மூன்று ஆதி மூவேழு ஈரும் திங்கள்
அறைக நிலம் பத்தும், ஆண்டு ஐந்து ஏழ் - இறைவளையார்க்கு
அந்தம் சிறு பறையே யாதியாம் மூன்று ஒழித்துத்
தந்தநிலம் ஓரேழும் சாற்று

— ,, 7

சாற்றரிய காப்புத் தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை - போற்றரிய
அம்புலியே ஆய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்பு சிறுதேரொடும் பத்து

— ,, 8

பூவின்திருவைப் புணர்தலின் பொன்முடி பூண் கடகம்
மேவப்படுதலின் வெண்சங்கம் ஆழி விரும்புதலின்
காவல்கடவுளைக் கார்முகில் வண்ணனைக் காசினியோர்
பாவுக்கு முன்னே பகருவர் காப்பாய்ப், பணிமொழியே

— ந.பா-செ 1

விரிசடைப் பிஞ்ஞகன் வேய்த்தோள் எழுவர் முன்காக்க என்ன
அருள்பெறக் கூறின் அவரவர் செய்யும் கொலைஅகற்றி
உரிய நற்கங்கை உமையாள் மதி ஊர்விடை கடுக்கை
விரை மலர்த்தார் மற்றும் மங்கலமாக விளம்பினரே

— ,, 2

பதினொரு மூவரும் பங்கயத் தோனும் பகவதியும்
நிதிமுதலோனும் பருதியுஞ் சாத்தனும் நீளமரர்க்கு
அதிபதிதானும் அறுமுகத்து ஐங்கரத்து அற்புதனும்
மதிபுனை வேணி வடுகனுங் காவல்செய் வானவரே

— ,, 3

முன்தந்த காப்புச் செங்கீரை தால் சப்பாணி முத்தத்தோடு
மற்றந்த வாரானை அம்புலி வாய்ந்த சிறுபறையே
சிற்றில் சிதைத்தல் சிறுதேர் உருட்டுதல் சேர்ந்த பத்தும்
சுற்றத்து அளவும் கவிக்கு எல்லையாக் கொண்டு சொல்லுவரே
— ந.பா-செ 4

மூன்று முதல் இருபத்தொரு திங்கள் முடிவளவாய்த்
தோன்றும் நிலைபத்தும் சொல்லுவர் தோகையர் தங்களுக்கும்
ஆன்ற புகழ்ச்சிக்கும் அவ்வகையாம் என்பர் ஐந்துஏழென
ஏன்ற நல்லியாண்டின் அகவரை தானும் இயம்புவரே
— ,, 5

சொன்ன சிறுபறையே முதல் மூன்றும் சுருங்கிவரும்
மன்ன விருத்தம் வகுத்த ஈர்எண்கலை வண்ணச் செய்யுள்
அன்னவை ஓரைம்பதில் அஃகாது எல்லை அறைவர் கற்றோர்
பொன்னும் மணியும் நற்போகமும் ஈன்ற புணர்முலையே
— ,, 6

சிறுபறையே முதல் மூன்றும் தெரியில் அப்பேதையர்க்குப்
பெறுவன அல்ல; இளையனே ஆயினும் வேந்தன் பெருன்
மறுவின் முடிசூடில்; பிள்ளைக்கவி காப்புமாலை முன்னே
அறிபவர் ஒன்பதும் பன்னொன்றுமாக அறைவர்களே
— ,, 7

செறி கொலை நீக்கித் தெய்வம் காப்பெனத்
தொகை யளவு வரையும் இசைவகுப் பகவல்
விருத்தந் தன்னல் வினவுமுறை காப்புச்
சாற்று செங்கீரை தால் சப்பாணி
வழங்கு முத்தம் வாரானை அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் பத்தும்;
ஈற்றில் மூன்றொழித்து ஏந்திழை யார் தமக்கு
உறுகழங்கு அம்மானை ஊசல் அமைய
மூன்று முதல் இருபத் தொன்றனுள் ஒற்றைப்
பெறுமதி கொளலாம் பிள்ளைக் கவியே
— பிர 2

இமையவர் வேதியர் இயல்புடை வைசியர்
சூத்திரர் என்னச் சொற்ற ஐவருக்கு
முறையே நூறு முதல் அறுபான் வரை
கணிக்கும் பிள்ளைக் கவியின் தொகையே
— ,, 3

துறுகொலை நீக்கித் தெய்வக் காப்பாய்ச் சுற்றத்
தொகை அளவு வகுப்பு அகவல் விருத்தந் தன்னல்
முறை காப்புச் செங்கீரை தால் சப்பாணி
முத்தம் வாரானை அம்புலியி னேடு

சிறுபறை சிற்றில் சிறுதேர் இவை; பின்மூன்றும்
தெரிவையர்க்குப் பெறு; கழங்கு அம்மானை ஊசல்
பெறும்; மூன்று முதல் இருபத்தொன்றுள் ஒற்றை
பெறு திங்கள்தனில் பிள்ளைக் கவியைக் கொள்ளே

— சி.பா-ம 1

கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால் சப்பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்னப்
பெறுமுறை ஆண்பால் பிள்ளைப் பாட்டே

— இ.வி 806

அவற்றுள்
பின்னைய மூன்றும் பேதையர்க்கு ஆகா
ஆடும் கழங்கு அம்மானை ஊசல்
பாடும் கவியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத்தாற் கிளையளவாம்

— ,, 807

மங்கலம் பொலியும் செங்கண் மாலே
சங்கு சக்கரம் தரித்தலானும்
காவல் கடவுள் ஆதலானும்
பூவினள் புணர்தலானும் முன்கூறிக்
கங்கையும் பிறையும் கடுக்கையும் புனை உமை
பங்கன் என்று இறைவனைப் பகர்ந்து முறையே
முழுதுலகு ஈன்ற பழுதறும் இமயப்
பருப்பதச் செல்வியை விருப்புற உரைத்து
நாமகள் கொழுநன் மாமுகில் ஊர்தி
ஒற்றைக் கொம்பன் வெற்றிவேலன்
எழுவர் மங்கையர் இந்திரை வாணி
உருத்திரர் அருக்கர் மருத்துவர் வசுக்கள்
பூப்புனை ஊர்தியின் பொலிவோர் அனைவரும்
காப்பதாகக் காப்புக் கூறல்

— ,, 808

மூன்று முதல் மூவேழு திங்களின்
ஒற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே

— ,, 809

மூன்று ஐந்து ஏழாம் ஆண்டினும் ஆகும்

— ,, 810

ஒன்பது பதினொன்று என்பது காப்பே

— ,, 811

பிள்ளைக் கவியின் பெற்றியைக் கூறச்
சுற்ற வகுப்பொடு தெய்வங் கொலைகாப்ப
ஒற்றைப்பட மூன்று ஆதி மூவேழு
ஈருய் மதியினும் ஐந்து ஏழு ஆண்டினும்
காப்புச் செங்கீரை தால் சப்பாணி
முத்தம் வாரானை அம்புலி சிறுபறை
சிற்றில் சிறுதேர் ஆடவர்க்கே; கடை
மூன்ருழித்து அரிவையர்க்காம்; கழங்கு அம்மானை
ஊசல் என்று இவை அவ்இருபாற்குப்
பத்து உறுப்பாய் ஒவ்வொன்று விருத்தம்
பப்பத்தாகப் பாடல் என்ப

— தொ.வி 257

தீதில் காப்பே செங்கீரை தாலே
சப்பாணி முத்தம் வாரானை அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் இவற்றை
முறையே அகவல் விருத்தத்தாலே
பப்பத்தாகப் பாடுவது ஆண்பால்
பிள்ளைக்கவி; இவ் உறுப்பினில் கடைமூன்று
ஒழித்துக் கழங்கு அம்மனை ஊசல் என்று இவை
கூட்டி முற்கூறியவாறு உரைப்பதுவே
பெண்பாற் பிள்ளைக் கவி எனப்படுமே

— மு. வீ-யா.ஒ 78

செப்பு பிள்ளைக் கவிக்கு
மாதமிரு திங்களிற் காப்பைந்து செங்கீரை
மாதமே ழிற்ருலமாம்
வரைநவஞ் சப்பாணி முத்தமோ பன்னொன்று
வாரானை சம்வற்சர
மோதுமொன் றரைவருட மிந்திரண் டிற்சிற்றி
லொளிபறை முழக்கன்மூன்றி
லூரிரத நாலிலாண் பால்கழங் கம்மானை
யூசல்பெண் பாலாகுமே

— பி.தீ 5

மொழி பொருளில் காப்பு முதல் சிறுதேர் மட்டு ஆண்பின்
மூன்றில் கழங்கு அம்மனை ஊஞ்சல் பேணும் கிளைச்சீர்
வகுப்போடு
அழிவின் அகவலின் விருத்தத்து அறைதல் பிள்ளைக்கவியாம்

—சுவாமி 167

## குடைவெண்பாட்டு

தொல். பாடாண் திணையில் (36) 'நடைமிகுத் தேத்திய குடை நிழன் மரபும்' எனக் கொற்றவனின் வெண்கொற்றக் குடையைப்

புகழ்ந்து பாடும் தன்மையினைச் சுட்டியது. அவ்வாறு புகழ்ந்தேத் துதல் தனி இலக்கியமாக அமைகின்ற நிலை பன்னிருபாட்டியலின் 'குடைவெண்பாட்டு' என்பதால் தெரிகின்றது.

இந்திரகாளியமும், பன்னிரு பாட்டியலும் மட்டுமே கூறும் இவ்விலக்கிய இயல்பு தெளிவாக விளக்கப்பட்டுள்ளதா என்பது ஐயமே.

பத்து வெண்பாக்களால் இவ்வகை அமைகின்றது. நேரசை யில் தொடங்கி, குடை என்னும் அசையுடன் முடியும் இப் பாடல் களின் முதல் மூன்று அடியும் தம்முள் எழுத்தெண்ணிக்கையில் அளவொத்து (கட்டளை) அமைதல் தேவை. வெண்பாக்களின் முதலிரு அடிகள் கொற்றக் குடையின் தொழிலைப் பற்றிப் பேச, இறுதியிரண்டு அடிகளும் அதன் தனித்தன்மையைப் போற்றி யரசனைப் புகழ்ந்து அமையும் போலும். இவ்விரு அடியும் இறை வனைப் புகழும் என இ.கா விதந்து கூறுகின்றது.

கட்டளையாக இருத்தல் வேண்டும் என்ற இலக்கணம் அமைந்த காரணத்தால் அதனை விளக்கச் சில நூற்பாக்கள் இணைகின்றன. தொடைபற்றிய இடை நூற்பாவும், குடையின் பண்பினைப்பாடும் கூறுகளெனக் கருதும் படித் தருகின்ற சிலவடிகளும் போதிய விளக்கமின்றியே யமைகின்றன.

அதுவே, குடைச்சொல் சிந்தடி ஈற்றில்வைத்து அந்தக்
குடைச்சொல் ஆதிக் குறளகத்து அடக்கி
ஈற்றயல் அடியினும் ஈற்றினும் இறைவனைப்
போற்றிப் புகழ்ந்து புகறல் வேண்டும்

இ.கா 34

முன்னர் அடியிலும் குடைத்தொழில் இயம்பியும்
பின்னர் அடியில் தனிநிலை இரட்டியும்
கொற்றவன் புகழ்ந்து குடைஎன முடிக்கும்
நற்றிற நேரசைக் குடைவெண்பாட்டே

— ப.பா-இ 32

ஒட்டிய குடைப்பொருள் உரைக்கும் நேரசை
கட்டளை ஆகுதல் கடன் என மொழிப

— ,, 33

கட்டளை என்பது கருதும் காலை
ஈற்றடி ஒழிய ஏனை மூன்று அடியும்
பாற்படும் எழுத்தின் பகுதி ஒப்பதுவே

— ,, 34

இதற்கே ஆம் எழுத்து எண்ணுங் காலை
குற்றியல் உகரமும் குற்றியல் இகரமும்
ஒற்றும் ஒழித்து, உயிர் உயிர்மெய்யுங் கொளலே

— ,, 35

மோனையும் எதுகையும் தொடை என மொழிப

— ப.பா-இ 36

சாற்றிய மாறுரைத்தல் தனிமை மிகுதி சமம்
போற்றும் உடன்பாடு புலன்உண்மை—ஏற்றும்
தலைப்பாடு பாதி தருகொடை பத்து
நிலைப்பாடு நேரசையா நேர்

— ,, 37

## தேவபாணி

யாப்பமைப்பால் ஒருபோகாகவும், நுவல்பொருளால் தேவ பாணியாகவும் அமையும் இவ் விலக்கியவகை பன்னிருபாட்டியலில் மட்டுமே சுட்டப்படுகின்றது.

தொல்காப்பியம் கலிப்பாவை விளக்கும்போது, ஒத்தாழிசை எனும் முதல்வகையில் முன்னிலையில் தேவரைப் பரவுதல் பற்றி நூற்பா வகுத்தது (138). அப்பா(டல்) நிலை, இலக்கிய நிலையாக இங்கு உருப்பெற்றது எனத் துணியலாம்.

தேவ பாணி என்பதனைத் 'தேவப் பிரணவம்' எனும் வடமொழிச் சொல் திரிபு எனக் குறிக்கின்றார். முன்னிலை, படர்க்கை ஆகிய இருநிலையில் நெடியோனைப் பாடி அமைவது இது. சிவபெருமான் செவ்வேள் என்போரும் நன்னெறி நின்ற அரசனும் பாடப்படற் குரியரே.

அறுவகை யுறுப்பாலான கலி, இப்பொருள் பற்றி அமையும் போது, உறுப்புமிகுதி பற்றி, வண்ணக (அராகம்) ஒருபோகு எனவும், அம்போதரங்க ஒருபோகு (எண்) எனவும்; கலியுறுப்புக்கள் கலந்தும் மயங்கியும் கொச்சகங்கள் அடுக்கியும் வருமியல்பால் கொச்சக ஒருபோகெனவும் வகைப்பட்டு அமைகின்றது.

ஒருபோகு என்பது தனியிலக்கியமாகவும் தேவபாணி என்பது தனியிலக்கியமாகவும் கொள்ளுதற்கும் இடமுண்டு.

சிலம்பின் உரை தேவபாணி என்பதற்குச் சில விளக்கங்கள் அமைக்கின்றது. 'தேவபாணி செந்துறை விகற்பங்களுள் ஒன்று. மாயோனைப் பரவிவரும் தேவபாணி முத்தமிழிலும் மூவேறுபட்ட நிலைகளில் அமைகின்றது. இயற்றமிழில் கொச்சக ஒரு போகாய் வரும். இசைத் தமிழில் 'முகநிலை கொச்சகம் முரி' யென அமையும். நாடகத் தமிழில் மூவடி முக்கால் வெண்பாவில், பெருந் தேவபாணி பலதேவரையும் சிறு தேவபாணி வருணப் பூதரையும் துதித்து அமையும், என.

தன்மை முன்னிலை படர்க்கையுள் தன்மை,
ஒழித்து இருவகையுள் ஒன்றுற் கடவுள்
பழிச்சும் ஒருபோகு இருமூன்று உறுப்பும்
அமைந்து ஒருங்கு இயலும், நயம்திகழ் கலியுள்

வண்ணகம் போதினும் எண்ணே போதினும்
ஓதிய உறுப்பால் பேர் புகன்றனரே

—ப.பா-இ 38

வரன்முறை பிறழ உறுப்பு மயங்கி
மிக்கும் குறைந்தும் வருவது கொச்சக
ஒருபோகாம் என உரைத்தனர் புலவர்

— ,, 39

கொச்சகத் தன்மையின் கொச்சகம் என்ப

— ,, 40

தேவப் பிரணவம் எனும் வடமொழியைத்
தேவபாணி எனத் திரித்து வழங்கினரே

— ,, 41

தேவபாணி தெரியுங்காலை
மாசறு துழாய்முடி மலைந்த சென்னி
நீர்நிலம் அளந்த நெடியோன் மேற்றே

— ,, 42

சுடர் கதிர்த் திங்கள் சூடியோற்கும்
படர்திரைப் பனிக்கடல் மா தடிந்தோற்கும்
உரிய காலமும் உளஎன மொழிப

— ,, 43

வேந்தன் வேண்டு நெறி செய்தாலும்
வாய்ந்த மதியும் மரபும் வாழ்த்தலும்
விதிஎன மொழிப மெய்ந்நெறிப் புலவர்

— ,, 44

## கலம்பகம்

தொல்காப்பிய விருந்தில் அடக்கும் பல இலக்கியங்களில் இதுவும் ஒன்று. இப்பெயர் நிலைக்குப் பாட்டியல்கள் நேரடிக் காரணம் கூறிற்றில. பல உறுப்புக்கள் கலப்பதால் கலம்பகம் எனப்பட்டது என்பதுண்டு. பல்வகைப் பா, பாவகை, பாவினங்கள் இடைமிடைந்து வர இப்பெயர் கொண்டது என்பதும் ஏற்புடைத்தே. பல பூக்கள் கலந்து நெருங்கிய மாலையைக் கலம்பகம் எனல் திவ்யப் பிரபந்தத்திலும் நச்சரின் பெரும்பாணாற்றுப் படை உரையிலும் காணலாம்.

பாட்டியல்கள் இவ்விலக்கியத்திற்கு இலக்கணம் வகுக்கும் போது, பொருண்மை நிலை யுறுப்புக்களையும், செய்யுள் வகைகளையும் இணைத்துத் தருகின்றன. இன்ன செய்யுளால் தொடங்கி, இவ்விவ் உறுப்புப் பெற்று, இன்னின்ன செய்யுட்கள் விரவி வருவது—என்பதே அந்நூற்பாக்கள் அமைப்பு. அவ்விதம் கூறும் போது மடக்கு அல்லது வெண்டுறை போன்ற செய்யுள் வகையையும் உறுப்புக்களுடனேயே இணைத்து விடுவதும் உண்டு

(தொ. வி 258; பா. பா 45). அந்தாதியாகக் கலம்பகச் செய்யுட்கள் வரும் எனும் கருந்து வெ. பா, ந. பா என்பனவற்றில் குறிக்கப்பட்டிலது; பிற தருகின்றன. மண்டலித்து வரும் தன்மை இ.வி. பாட்டியலில் மட்டுமே சுட்டப்பட்டது.

பாட்டியற் கொள்கைப்படி,† கலம்பகத்தில் வரும் செய்யுட்கள் ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், ஒருபோகு, கலித்தாழிசை, கலித்துறை, கலிப்பா, கலிவிருத்தம், மருட்பா, யமகம் (மடக்கு), வகுப்பகவல் விருத்தம், வஞ்சித்துறை, வஞ்சிப்பா, வஞ்சி விருத்தம், வெண்டுறை, வெண்பா என்பன. தொ. வி, பி. தீ என்பன முறையே 'ஐம்பாவும் துறையும் விருத்தமும்' எனவும் 'ஐவகைப் பாவும் இனமும்' எனவும் தொகுத்துக் கூறுகின்றன. கலம்பகத்தின் முதற்கண் ஒருபோகு, வெண்பா, கலித்துறை எனும் செய்யுட்கள் வரவேண்டும் என்பது அனைத்து நூலிலும் சிறப்பாக எடுத்து மொழியப்படுகின்றது. கலம்பகம் என்ற பெயர்நிலையால் (கலம்-12, பகம் அதன் பாதியாகிய 6) இவ்விலக்கியத்தில் 18 உறுப்புக்கள் உள எனக்கூறுவர்; இருத்தல் வேண்டும் என எதிர்பார்ப்பர். ஆயின் இலக்கணமாயினும், இலக்கியமாயினும் இவ் எதிர்பார்ப்பு முற்றிலும் நிறைவேறியது எனக் கூறுதற்கில்லை. பதினெட்டுத் தவிர வேறு சில உறுப்புக்களும் அமைத்துப் பாடுதல் இயல்பாகக் காணப்படுகின்றது (அட்டவணை பார்க்க).

பாடல் எண்ணிக்கையில், தலைவன் தகுதிக்கேற்ப வேறுபாடு அமைகின்றது. தலைவன் தேவனாயின் நூறு பாடலும், முனிவராயின் தொண்ணுற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சுத் தொழிலில் ஈடுபட்டோர்க்கு எழுபதும், வணிகருக்கு ஐம்பதும் வேளாளர்க்கு முப்பதும் ஆக அமையும். காவலனின் ஏவலுக்குட்பட்ட அரசியல் தொழிலர்க்குப் பாடல் எண்பது எனவும், இரு நிதியுடையோர்க்கு எழுபது எனவும் பிறர்க்கு ஐம்பதும் முப்பதும் எனவும் கூறுவதுண்டு (ந.பா-செ 10).

சொல்லிய கலம்பகம் சொல்லில், ஒருபோகு
முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே
அம்மனை ஊசல் யமகம் களிமறம்
சித்துக் காலம் மதங்கி வண்டே
கொண்டல் மருள்சம்பிரதம் வெண்டுறை
தவசு வஞ்சித் துறையே இன்னிசை
புறமேய் அகவல் விருத்தம் எனவரும்
செய்யுட் கலந்துடன் எய்திய அந்தம்
ஆதியாக வரும் எனமொழிப

— ப.பா-இ 45

† கலம்பக யாப்பு, ஆய்வுக் கோவை 2, 1974. பக்கம் 38—44.

# கலம்பக உறுப்புக்கள்

| ப.பா | வெ.பா | த.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வீ | பி.தீ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 ஒருபோகு | | 1 | | | 1 | | 3 | 1 |
| 2 வெண்பா | | 2 | | | 2 | | 1 | 2 |
| 3 கலித்துறை | | 3 | | | 3 | | 2 | 3 |
| 4 புயம் | 1 | 4 | 1 | 1 | 4 | 1 | 4வகுப்பு | 4 புயவகுப்பு |
| 5 அம்மனை | 4 | 5 | 4அம்மானை | 4 | 6அம்மானை | 6 | 6 | 8அம்மானை |
| 6 ஊசல் | 9 | 6 பொன்னூசல் | 10 | 18 | 21 | 16 | 17 | 12 |
| 7 யமகம் | 11மடக்கு | 7இயமகம் | 9மடக்கு | 19 மடக்கு | 22மடக்கு | 8மடக்கு | | |
| 8 களி | 10 | 16 | 8 | 7 | 14 | | 14 | 16 |
| 9 மறம் | 13 | 8 | 7 | 9 | 12 | 14 | 12 | 6 |
| 10 சித்து | 8 | 10 | 13 | 16 | 15 | 10 | 16 | 21 |
| 11 காலம் | 14 | 14 | 5 | 5 | 7 | 4 | 7 | 7 |
| 12 மதங்கி | 6மதங்கு | 15 | 3மதங்கு | 3மதங்கு | 5மதங்கு | 17 மதங்கம் | 5மதங்கம் | 5 மதங்கம் |
| 13 வண்டு | 3 | | 11 | 13 | 19 | 5 | 20அளி | 15 |
| 14 கொண்டல் | 18கார் | 12 | | 11 | 9 கார் | | 9 | 9 கார் |
| 15 மருள் | | | | 20 மருட்பா | 23 | | | |
| 16 சம்பிரதம் | 17 | 17 | 15 | 8 | 8 | 13 | 8 | 14 |
| 17 வெண்டுறை | | | | | | | | |
| 18 தவசு | | 2தவம் | 2தவம் | 2தவம் | 10தவம் | 3தவம் | 10தவம் | 13 தவம் |
| 19 வஞ்சித்துறை | | | | | | | | |
| 20 இன்னிசை | | | | | | | | |
| 21 அகல்விருத்தம் | | | | | | | | |
| 5 பாண் | | | 17 | 60 | 13 | 8 பாணன் | 13 | 11 |
| 7 கைக்கிளை | | 11 | 18 | 15 | 17 | 2 | 18 | 20 |
| 12 ஊர் | | | 12 | | | | | |
| 15 தழை | | | 16 | 14 | 20 | 12 | 21 | 17 |
| 16 இரங்கல் | | | 14 இரங்குதல் | 17 | 16 | 11 | 15 | 19 |
| 19 தூது | | 13 | 19 | 12 | 18 | 15 | 19 | 18 |
| | | 9குறம் | 6 | 6 | 11 | 9 | 11 | 10 |
| | | | | | | 7 காற்று | | |

# கலம்பக யாப்பு

| யாப்பு | ப.பா | வெ.பா. | ந.பா | பிர | சி.பா | இ.வி | தொ.வி | மு.வி | பி.தீ | சுவாமி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வெண்பா | X | X | X | X | X | X | X | X | X | X |
| வெண்டுறை | X | X | X | X | X | X | | X | | |
| ஆசிரியப்பா | | X | X | X | X | X | | X | | |
| ஆசிரிய விருத்தம் | X | X | X | X | X | X | | X | | |
| வகுப்பகவல் விருத்தம் | | | X | | | | | | | |
| கலிப்பா | | | | | | | | X | | |
| ஒருபோகு | X | X | X | X | | X | X | X | X | X |
| கலித்துறை | X | X | X | X | | X | X | X | X | X |
| கலியினம் | | X | | X | X | X | | | | |
| தாழிசை | | | | | | | | X | | |
| விருத்தம் | | | | | | | | X | | |
| வண்ணகம் | | | | X | | | | | | |
| வஞ்சிப்பா | | | | X | | X | | X | | |
| வஞ்சித் துறை | X | X | X | X | X | X | | | | |
| வஞ்சி விருத்தம் | | X | X | | X | X | | | | |
| மருட்பா மருள் | | X | X | X | X | X | | X | | |
| மடக்கு யமகம் | | | | | X | X | X | X | | |
| அந்தாதி | X | | | X | X | X | X | X | X | |
| மண்டிலம் | | | | | | X | | | | |

தேவர்க்கும் முனிவர்க்கும் காவல் அரசர்க்கும்
நூறு தொண்ணூற்றைந்து தொண்ணூறே
ஒப்பில் எழுபது அமைச்சியலோர்க்குச்
செப்பிய வணிகர்க் கைம்பது முப்பது
வேளாளர்க்கென விளம்பினர் செய்யுள்

—ப.பா-இ 46

வைக்கும் புயம் தவம் வண்டு அம்மனை பாண்மதங்கு
கைக்கிளை சித்து ஊசல் களிமடக்கு ஊர் - மிக்கமறம்
காலம் தழைஇரங்கல் சம்பிரதம் கார்தூது
கோலுங் கலம்பகத்தின் கூறு

— வெ.பா-செ 10

கூறும் ஒருபோகு வெண்பாக் கலித்துறைகள்
மாறின் முதல் உறுப்பாம் மன்விருத்தம் - வேறுஅகவல்
வஞ்சித்துறை விருத்தம் வான்துறை வெண்பா மருட்பா
எஞ்சாக் கலியினம் கொண்டு ஈட்டு

— வெ.பா-செ 11

ஈசர்க்கு நூறு; இழிபு ஐந்து ஐயர்க்கு; இகல் அரசர்க்கு
ஆசற்ற தொண்ணூறு; அமைச்சருக்காம் - ஏசா
எழுபான்; ஐம்பான் வணிகர்க்கு; ஏனையோர்க்கு ஆறைந்து
இழிபிற் கலம்பகப் பாட்டு ஈண்டு

— ,, 12

மூலம் ஒருபோகு வெண்பாக் கலித்துறை முன்னுறுப்பாய்
ஏலும் புயத்தோடு அம்மனை பொன்னூசல் இயமகம் விற்
கோல மறம்குறம் சித்து நற்கைக்கிளை கொண்டல்தூது
காலம் மதங்கி களிசம்பிரதம் கலம்பகமே

—ந.பா-செ 8

சொன்ன கலம்பகம் தொக்கஅச்செய்யுள், துடியை வென்ற
மின்னிடை, வெண்டுறை வெண்பா வகுப்பு அகவல் விருத்தம்
இன்னிசை ஆசிரியம் ஆசிரியவிருத்தம் எல்லாம்
மன்னு மருட்பா வஞ்சித்துறை வஞ்சிவிருத்தம் என்னே

— ,, 9

தேவர்க்கு நூறு; முனிவர்க்கு இழிபுஐந்து; சேண்நிலத்தைக்
காவற்குரிய அரசர்க்குத் தொண்ணூறு; காவலரால்
ஏவல்தொழிலவற்கு எண்பது; எழுபது இருநிதியம்
மேவப்படுமவர்க்கு; ஐம்பதுமுப்பது மிக்கவர்க்கே

— ,, 10

ஆர் புயம் தவம் மதங்கு அம்மானை காலம்
குறம் மறம் களி மடக்கு ஊசல் வண்டு ஊர்
சித்து இரங்குதல் சம்பிரதம் தழை பாண்
கைக்கிளை தூது இவை கலம்பகக் கூற்றே

—பிர 4

வெண்பாக் கலித்துறை வேண்டியவற் றென்றால்
வண்ணக முன்னுற வருமுவ லுறுப்பு
வினவில் ஒருபோகு வெண்பாக் கலித்துறை
அகவல் விருத்த மாயும் வேறகவல்
வெண்பாக் கலித்துறை ஆசிரியம் வஞ்சித்துறை
மருட்பா வெண்டுறை வஞ்சி கலியினம்
இவற்றை அந்தாதித்து இயம்பிய கூற்றாற்
கலந்து பாடுவது கலம்பகம் என்ப

— ,, 5

நூறுதேவர், தொண்ணூற் றைந்து
பார்ப்பார்க்கு, அரசர் தொண்ணூறு, அமைச்சர்க்கு
எழுபஃது, ஐம்பான் வைசியர்க்கு, ஆறைந்து
சூத்திரற்கு என்ப இதன் இயல்புணர்ந் தோரே

— பிர 6

கொண்டபுயம் தவம்மதங்கு அம்மானை காலம்
குறம்களி சம்பிரதம்மறம் பாண்கார் தூது
வண்டு தழை கைக்கிளை சித்து இரங்கல் ஊசல்
மடக்கு மருட்பா அகவல்விருத்தம் வெண்பா
வெண்டுறை வஞ்சித்துறை ஆசிரியம் வஞ்சி
விருத்தப்பாக் கலியினம் அந்தாதி யாகக்
கண்டவை முன், ஆதி ஒருபோகு, வெண்பாக்
கலித்துறை நேர்கூறல் கலம்பகம் ஆமன்றே

—சி.பா-ம 2

அன்புறு தேவர்க்கு நூறு; இழிபுஐந்து ஐயர்க்கு
அரசர்க்குத் தொண்ணூறு; வணிகர்க்கு ஐம்பான்
இன்புறு முப்பான் உழவர்க்கு; அமைச்சி னுள்ளோர்க்கு
எழுபது எனும்...

— ,,3:1-2

ஒருபோகு வெண்பாக் கலித்துறை உறமுன்
ஒருபுயம் மதங்கு அம்மானை காலம்
சம்பிரதம் கார்தவம் குறம் மறம் பாண்
களிசித்து இரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழை மேற்கொண்டு எழும் ஊசல்
மடக்கு மருட்பா வஞ்சிவிருத்தம்
அகவல் கலியினம் அகவல் விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்துறை மருவி
இடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்று
அந்தாதி மண்டலித்தாம் கலம்பகமே

— இ. வி 812

அதுவே

இமையவர்க்கு ஒருநூறு; இழிபுஐந்து ஐயர்க்கு
அமைதரும் அரசர்க்கு ஆகும் தொண்ணூறு
அமைச்சருக்கு எழுபான்; வணிகருக்கு ஐம்பான்
அமைத்தனர் பின்னவர்தமக்கு ஆறைந்தே

— ,, 813

கலம்பகத்துள் புயம் கைக்கிளை தவமே
காலம் வண்டு அம்மானை காற்றுப் பாணன்
குறம் சித்து இரங்கல் குளிர்தழை சம்பிரதம்
மறம் தூது ஊசல் மதங்கம் மடக்குஎன

விரவி, மூவாறும் வேண்டும் உறுப்பா
ஒருபோகு வெண்பாவுடன் கலித்துறை இவை
நிரையே முதற்கண் நின்று, பின்கலந்த ஐம்
பாத், துறை விருத்தம் அந்தாதி வருமே
வந்தால் ஈசர்க்கு வருநூறு; முனிமெய்யர்க்கு
ஐந்துஅஃகும் அரசர்க்காம் தொண்ணூறும்
அமைச்சர்க்கு எழுபதும்; ஐம்பதும் வணிகர்க்கு
அமைந்த; ஏனையோர்க்கு ஆறைந்து அளவே

— தொ.வி 258

வெண்பாக் கலித்துறையோடு ஒருபோகு
முதற் கலி மூன்று உறுப்பாக மொழிந்து
வாகு வகுப்பு மதங்கம் அம்மனை
காலம் சம்பிரதம் கார்தவம் குறம்மறம்
பாண்களி இரங்கல் சித்து ஊசல் கைக்கிளை
தூது அளி தழை இவை தோன்ற, மடக்கு
மருட்பா அகவல் வஞ்சி கலிப்பா
அகவல் விருத்தமொடு கலித்தாழிசை
கலிவிருத்தம் துறை காமரு வெண்டுறை
விரவி அந்தாதியாய் விளம்புங்காலைத்
தேவர்க்கு நூறு; அந்தணர்க்கு ஐந்தொழித்தல்
அரசர்க்குத் தொண்ணூறு; ஐம்பது வைசியர்க்கு
ஆறைந்து சூத்திரர்க்காகப் பகர்தல்
கலம்பகம் என்மனூர் கற்று உணர்ந்தோரே

—மு.வீ-யா.ஒ 80

அரிய வொரு போகுவெண் பாக்கலித் துறையுமன்
　　பாய்க்கலி யுறுப்பினுலே
யம்புய வகுப்புமா தங்கமற முங்கால
　　மம்மானை கார்குறம்பா
ணுடுமூ சற்றவஞ் சம்பிரதம் வண்டுகளி
　　யலர்தழைத் தூ திரங்க
லானகைக் கிளைசித்து வென்றுவகை யீரொன்ப
　　தாமுறுப் புக்களியைய
வருமருட் பாக்கலிப் பாக்கலி விருத்தம்
　　மடக்குக் கலித்தாழிசை
மன்னுமா சிரியம்வி ருத்தமா சிரியமும்
　　வஞ்சித்து றைவெண்டுறை
வஞ்சிச் செயுள்வஞ்சி யாம்விருத் தங்களுமி
　　வற்றுளு மிடையிடையினின்

மருவுவெண் பாக்கலித் துறைவிரவி யந்தாதி
வரன்முறைத் தொடையதாக
வுரியதே வர்க்குநூ றந்தணர்க் குத்தொணூ
றுடனேந்து மரசருக்கே
யுற்றிடுந் தொண்ணூறு வணிகருக் கைம்பதா
யுரைசதுர்த் தர்க்குமுப்பா
ஞேதுவர் கலம்பகத் துரியதா

—பி.தீ 7

தகும் கலிப்பா வெள்ளை கலித்துறை பாடிப் பின்னர்த்
தோய்ந்த பாவினம் முழுதும் பலதுறையும் வகுப்பும்
சொற்றொடரம் கலம்பகம்...
ஏய்ந்த நூறு அமரர் தொண்ணூறு ஐயர் எண்பான் அரசர்
எழுபது அமைச்சு அறுபது இப்பர் ஐம்பது சூத்திரர்க்கே
— சுவாமி 170

## உலா

தொல்காப்பியர் பாடாண்திணையில்
ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான (1029)

என விளக்கும் பகுதியின் வளர்ச்சி உலா இலக்கியமாக உருப் பெற்றது என்பது பொதுக் கருத்து.

தலைவன் ஒருவன் உலாவருதலும் அதனைக் கண்டு எழுபருவ மகளிரும் மனம் இழத்தலும் இதன் பாடுபொருளாக அமை கின்றன. உலகம் காக்கும் இறைவனின் திருவுருவோ, உலகம் போற்றும் ஒரு பெருமகனோ, அரசனோ, கரி, பரி, தேர் முதலியவற் றுள் யாதானும் ஒன்றின் மீது ஏறி, உடன் வருவோர் சூழ, மங்கல இசைக்கருவிகள் முழங்க, வீதியில் உலாவருவது முதனிலையில் காட்டப்படுகின்றது. தலைவனது குடிப்பிறப்பும், அவன் நீதிமுறை யும், மரபும், பொருளீட்டும் திறமும், ஈகையும் கூறி, உலாச் செல்வ தற்காக அவன் நீராடுதலையும், அணிகள் அணிவதையும், நகர மாந்தர் அவனை எதிர்கொள்வதையும், அவன் யாதானுமொரு வாகன மொன்றில் ஏறிச் செல்லுதலும் இங்குப் பொருந்துகின்றன. தொடர்ந்து வரும் பின்னிலைகள் ஏழும் அவ்வப் பருவப் பெண்டிரின் தன்மையினைக் கூறி, உணர்வு நெகிழ்வுகளை எடுத்து இயம்பு கின்றன அவிநயம் ஆண்பாற் பருவம் ஏழு கூறல் புதுமை.

இந்நூல் கலிவெண்பா யாப்பில் அமைகின்றது. இது (நேரசை) நேரிசைக் கலிவெண்பாவாக இருத்தல் வேண்டும் என்ற கருத்தும் உண்டு.

மகளிர்ப்பருவங்கள் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என ஏழு. இவர்க்கு உரியன வாகச் சிற்றில், பாவை, கழங்கு, அம்மனை ஆகிய விளையாட்டுக்களும் ஊசல், பைங்கிளி, யாழ்மீட்டல், புனலாட்டு பொழில் விளையாட்டு முதலியனவும் காட்டப்படும். இவர்கட்கு வயது, ஐந்து, ஏழு, பதினொன்று, பதின்மூன்று, பத்தொன்பது, இருபத்தைந்து, முப் பத்தொன்று, நாற்பது எனப் பொருத்திக் காண்பர். பாடல் தலை வனும் ஆண் மகனது வயது நாற்பத்தெட்டளவும் அமையலாம் எனப் பன்னிருபாட்டியல் இயம்பும்.

காட்டிய முறையே நாட்டிய ஆண்பாற்கு
எல்லையும் பெயரும் இயல்புற ஆய்ந்து
சொல்லிய தொன்னெறிப் புலவரும் உளரே

— அவி 121

பாலன் யாண்டே ஏழென மொழிப

— ,, 122

மீளி யாண்டே பத்து இயை காறும்

— ,, 123

மறவோன் யாண்டே பதினான்கு ஆகும்

— ,, 124

திறலோன் யாண்டே பதினைந்து ஆகும்

— ,, 125

பதினாறு எல்லை காளைக்கு யாண்டே

— ,, 126

அத்திறம் இறந்த முப்பதின் காறும்
விடலைக்கு ஆகும், மிகினே முதுமகன்

— ,, 127

முதனிலை பின்எழு நிலை உலா வெண்கலி

— ப. பா-இ 47

பேதை முதலா எழுவகை மகளிர், கண்டு
ஓங்கிய வகைநிலைக்கு உரியான் ஒருவனைக்
காதல் செய்தலின் வரும் கலிவெண்பாட்டே

— ,, 48

குடிநெறி மரபு கொளல் கொடை விடியல்
நன்னீராடல் நல்லணி அணிதல்
தொன்னகர் எதிர்கொளல் நன்னெடு வீதியின்
மதகளிறு ஊர்தல் முதனிலை ஆகும்

— ,, 49

ஆதிநிலையே குழாங்கொளல் என்றெடுத்து
ஓதிய புலவரும் உளர் என மொழிப

— ,, 50

ஏழு நிலையும் இயம்புங் காலைப்
பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம்பெண் எனப்
பாற்படு மகளிர் பருவத்து ஆதல்
நோக்கி உரைப்பது நுண்ணியோர் கடனே

— ப.பா-இ 51

நீடிய நாற்பத்தெட்டின் அளவும்
ஆடவர்க்கு உலாப்புறம் உரித்து என மொழிப.

— ,, 52

சிற்றில் பாவை கழங்கு அம்மனையே
பொற்புஉறும் ஊசல் பைங்கிளி யாழே
பைம்புனலாட்டே பொழில் விளையாட்டே
நன்மது நுகர்தல் இன்ன பிறவும்
அவரவர்க்கு உரிய ஆகும் என்ப

— ,, 53

வேந்தர் கடவுளர் விதிநூல்வழி உணர்
மாந்தர் கலிவெண்பாவிற்கு உரியர்

— ,, 54

பகருங்கால் ஐந்துஏழ் பதினொன்று பன்மூன்று
அகலாத பத்தொன்பான் ஐயைந்து - இகலாத
முப்பத்தொன்று ஈரிருபான் பேதை முதலோர்க்குச்
செப்புவர் ஆண்டு எல்லைத் திறம்

— வெ.பா-செ 26

திறந்தெரிந்த பேதைமுதல் எழுவர், செய்கை
மறந்து அயர வந்தான் மறுகு என்று - அறைந்த கலி
வெண்பா உலாவாம் ...

— ,, 27

தெருவினில் பேதைமுதல் எழுவோர்கள் திறத்து வகை
ஒருவனை ஏத்தும் கலிவெண்பா தூ துலா ...

— ந. பா-செ 20

பேதை முதல் எழுவோர்க்குப் பிராயங்கள் பேசிடுங்கால்
ஆதியில் ஐந்து ஏழ்பதினொன்று பன்மூன்று பத்தொன்பதே
மீது இருபத்தைந்து முப்பத்தொன்று ஆகிய நாற்பது என்
ஓதுவர் தொன்னூற் பருணிதர் எல்லாம் உணர்ந்து கொண்டே

21

தேவர் மக்களிற் சிறந்தோன் செவிலியர்
பாங்கினும் கையினும் பொலியப் பவனிவரு
குழமகன், குலம் முதலிய அடையாளம்
குறிப்பிற் கலிவெண்பாவிற் கழறி
அவனைத் தெரு வயின் ஏழ் பருவத்துக்
கண்டோர் உவக்கக் கவின்தரும் வயது ஏழ்
பேதை, பன்னொன்று பெதும்பை, பன்மூன்று

மங்கை, பத்தொன்பான் மடந்தை, ஐயைந்து
அரிவை, முப்பஃது தெரிவை, நாற்பான்
பேரிளம்பெண் எனும் பெண் முதலானோர்
தொழ உலாப் போந்தது உலா

— பிர 14

குழமகனை அடையாளம் கலிவெண்பாவாற்
கூறி, அவன் மறுகு அணையக் காதல்கூர் ஏழ்
எழிற்பேதை பதினொன்று பெதும்பை பன்மூன்று
இயன்மங்கை பத்தொன்பான் மடந்தை ஐயைந்து
அழகுஅரிவை முப்பஃதோர் தெரிவை நாற்பான்
ஆம் வயது பேரிளம்பெண் முதலாய் உள்ளோர்
தொழ உலாப் போந்தது உலா ...

—சி. பா-ம 10

குழமகனைக் கலிவெண்பாக் கொண்டு
விழை தொல்குடி முதல் விளங்க உரைத்தாங்கு
இழை புனை நல்லார் இவர்மணி மறுகின்
மற்றவன் பவனிவர ஏழ்பருவம்
உற்ற மானார் தொழப் போந்தது உலாவாம்

— இ. வி 858

ஐந்து முதல் ஏழாண்டும் பேதை

— ,, 859

எட்டுமுதல் நான்காண்டும் பெதும்பை

— ,, 860

ஆறிரண்டு ஒன்றே ஆகும் மங்கை

— ,, 861

பதினான்கு ஆதி பத்தொன்பான் காறும்
எதிர்தரும் மடந்தை; மேல்ஆறும் அரிவை

— ,, 862

ஆறு தலையிட்ட இருபதின்மேல் ஓர்
ஆறும் தெரிவை; எண்ணைந்து பேரிளம்பெண் என்று
ஓரும் பருவத்தோர்க்கு உரைத்தனரே

— ,, 863

உலா என மலை நதி உயர்நாடு ஊர்மலை
குலாவிய பரிகரி கொடி முரசு உயர்கோல்
இயைந்த தசாங்கமும் ஏழ் பருவத்தார்'
வியந்து தொழுதலும் வேண்டு உறுப்பாய் அக்
கலிவெண்பாவால் குலமகற் புகழ்தலே

—தொ.வி 260

இளமைப் பருவத் தலைமகன் குலனும்
குடியும் பிறப்பு மங்கலம் பரம்பரை
இவற்றான் இன்னான் என்பது தோன்ற

மாதர் நெருங்கிய வீதியிடத்து அவன்
பவனி வரப் பேதை முதலிய ஏழு
பருவப் பெண்களும் பார்த்து வணங்க
உலா வந்ததாக உன்னி நேரசைக்
கலிவெண்பாவால் கழறுவது உலாவே

— மு.வீ-யா.ஒ 124

மிக்க இளமைப் பருவமாய்
உற்ற தலைமகனைப் பிறப்பும் பரம்பரை
உறுங் குலம் இன்னான் என்பதாய்
உயர் தலைமையாய் மாதர் புடைசூழவே பருவம்
உள பெண்கள் கண்டுதொழவே
மத்த கயமீது பரி சிவிகைமீதும் பவனி
வரு தலைவனைத் துதித்து
மாநேரிசைக் கலியின் வெண்பாவினால் கூறல்
வரும் உலாவாகுமன்றே

— பி. தீ 19

எழும் இறைவன் சீரும் அவன் பவனியும் கண்டு ஏத்தும்
ஏழ் மடவார் பருவமும் பாடுதல் உலா இயல்பே

— சுவாமி 167

## சின்னப்பூ

அரசனுக்குரிய தசாங்கங்கள் இவ் இலக்கியத்திற்கும் அடிப்படையாக அமைகின்றன. மலை, யாறு, நாடு, ஊர், பரி, களிறு, கொடி, முரசு, தார், பெயர் என்பன அவை. வெண்பா அல்லது வெண்பாவினத்தில் இது அமைகின்றது. முதல் ஈரடிகளில் அரசனது அச்சின்னத்தின் தொழிலைப் புகழ்ந்தும், பின் இரு அடிகளில் தலைவனின் இயற்பெயர் சார்த்தி யமைத்தும் இவ்வகையை யாக்கின்றனர். அரசச் சின்னங்கள் பற்றியது ஆனமையால் சின்னப் பூ எனப் பெயர் பெற்றது. ஒவ்வொரு சின்னமும் மூன்று, ஏழு அல்லது பத்துப் பாடல் பெறும்.

தசாங்கங்கள் எவை எனத் தனி நூற்பாவில் இங்கேயே தொகுத்துத்தருவதால், அங்கத்திற்கொன்றாகப் பத்துப் பாடல் பாடுவது தசாங்கம் என எண்ணலாம். இரண்டின் ஒப்புமை மிகுதி காரணமாகப் பன்னிரு பாட்டியல் தசாங்கம் எனத் தனியிலக்கியம் வகுக்கவில்லை போலும். அல்லது சின்னப்பூவிற்கு விளக்கம் கூறும் முகமாகத் தசாங்கத்தையும் (தசாங்கப்பத்தையும்) சுட்டியது எனலாம்.

மலையும் யாறும் நாடும் ஊரும்
பரியும் களிறும் கொடியும் முரசும்

தாரும் பெயரும் எனத் தெரிபத்தும்
சொல்லும் எல்லையின், முதல் குறட்கண்ணே
சின்னத் தொழிலை மன்ன வைத்துப்
பின்னர்க் குறளுட் பாட்டுடைத் தலைவர்
இயற்பெயர் வைத்து அவர்க்கு உரிமை தோன்றும்
செயல்பெற வைப்பது சின்னம் அதுவே
ஆதிப் பாவின் அதன் இனம் வரும்

— ப.பா-இ 55

மலையே யாறே நாடே ஊரே
பறையே பரியே களிறே தாரே
பெயரே கொடியே என்றிவை தசாங்கம்

— ,, 56

பத்தே ஏழே மூன்றே சின்னம்

— ,, 57

நேரும் தசாங்கத்தை நேரிசை வெண்பாவால்
ஈரைம்பது தொண்ணூறு ஈண்டெழுபான்-ஓரைம்பான்
தேர்ந்துரைக்கிற் சின்னப்பூ

—வெ. பா-செ 20

நேரும் தசாங்கத்தை நேரிசை வெண்பாவின் ஈரைம்பது
சேர ஓர் தொண்ணூறு எழுபதோடு ஐம்பது செப்பிடுங்கால்
ஆரியர் சின்னப்பூ என்றே உரைப்பர்... ...

— ந. பா-செ 15

... ... அவற்றைத்
தொண்ணூறு எழுபஃது ஐம்பான் வெள்ளையில்
அமைவுற மொழிதலாகும் சின்னப்பூ

— பிர 9

... ... ... தசாங்கம் தன்னை
வெண்பாவால் தொண்ணூறு ஏழ்பஃது முப்பான்
இத்தகைமை மொழிவது சின்னப்பூ வாகும்

சி. பா- ம 5:2, 3

மிக்க நேரிசை வெண்பா அதனால்
தக்க தசாங்கம் தன்னை நூறு
தொண்ணூறு எழுபது ஐம்பது முப்பஃது
எண்ணப் பாடில் சின்னப் பூவே

—இ. வி 846

சின்னப்பூ எனத் தெளி நேரிசை வெண்பா
நூறு தொண்ணூறு எழுபது ஐம்பது ஆறைந்துமாய்ப்
பாடித் தசாங்கம் பற்றிப் புகழ்வதே

—தொ. வி 263

நேரிசை வெண்பாவாலே நிருபன்
சின்னமாம் தசாங்கத்தினைச் சிறப்பித்து
விரித்து ஐம்பது தொண்ணூறு எழுபது முப்பது

நூறு எனும் எண்பட எடுத்துரைப்பது
சின்னப்பூ எனச் செப்பினர் புலவர்

—மு. வீ-யா.ஒ 164

## பரணி

கொச்சக அடிகள் இரண்டு, அல்லது தாழிசை என்னும் வடிவ அமைப்பு இவ்விலக்கியத்தின் சிறப்புக் கூறாகப் பொருந்துகின்றது, வஞ்சி சூடிப் பொருது, உழிஞை பூண்டு முற்றுகை யிட்டுத் தும்பை யணிந்து போர் மேற்சென்று மன்னன் மாற்றரசனது படையை வென்ற நிலையில் அவனுக்குப் பாடப்படுவது பரணி. யானை பல வற்றைப் போரில் வெல்வது பெரும்பேறு எனும் நிலையில், எழுநூறு, ஆயிரம் யானைகளை வென்ற நிலை அரசர்க்குச் சார்த்திக் காட்டப்படு கின்றது.

பரணி, பல காட்சிகள் அல்லது பகுதிகளுடன் அமைகின்றது: தேவர் வாழ்த்து, கடைநிலை, பாலை, காளிகோவில், கன்னியை ஏத்தல், அலகை விநோதம், களநிலை, நிமித்தம் என இது நீண்டு செல்கின்றது. புறப்பொருண்மையுடன் அமைந்த சில இலக்கியங் களில் இதுவும் ஒன்று.

பன்னிருபாட்டியல் தந்த பரணி யாப்புக்கும் பிற்காலப் பாட்டி யல் கூறும் யாப்புக்கும் சில சொல்நிலை வேறுபாடுகள் உள்ளன, நேரடி (4 சீர்) முதல் நீண்ட அடிகளாலாகிய தாழிசை என நவ நீதப் பாட்டியலும், சிதம்பரப் பாட்டியலும், இலக்கண விளக்கப் பாட்டியலும் எளிமையாகக் கூறுகின்றன. பல தாழிசைகள் வருவ தால் பஃறாழிசை எனத் தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், பிர பந்த தீபிகை என்பன இயம்புகின்றன. இருசீர் முச்சீரடிகளாலான தாழிசை கூடாது எனும் கருத்தும் அமைந்துள்ளது.

மயக்குஅறு கொச்சகத்து ஈரடி இயன்று
நயப்புஉறு தாழிசை உறுப்பில் பொதிந்து
வஞ்சி மலைந்த உழிஞை முற்றித்
தும்பையிற் சென்ற தொடுகழல் மன்னனை
வெம்பு சின மாற்றான் தானை வெங்களத்தில்
குருதிப் பேராறு பெருகுஞ் செங்களத்து
ஒருதனி ஏத்தும் பரணியது பண்பே

— ப. பா-இ 58

தேவர் வாழ்த்தே கடைநிலை பாலை
மேவி அமரும் காளி கோயில்
கன்னியை ஏத்தல் அலகை விநோதம்
களநிலை நிமித்தம் பசியே ஓகை
பெருந்தேவி பீடம் அழகுற இருக்க

அமர்நிலை நிமித்தம் அவள்பதம் பழிச்சா
மன்னவன் வாகை மாலையும் அளவு
மரபு இனிது உரைத்தல் மறக்களம் காண்டல்
செருமிகு களத்திடை அடுகூழ் வார்த்தல்
பரவுதல் இன்ன வருவன பிறவும்
தொடர்நிலையாகச் சொல்லுதல் கடனே

— ப.பா-இ 59

யானை சாய்த்த அடுகளத்து அல்லது
யாவரும் பெறுஅர் பரணிப் பாட்டே

— ,, 60

ஏழ் தலைப்பெய்த நூறுடை இபமே
அடுகளத்து அட்டால் பாடுதல் கடனே

— ,, 61

மூண்ட அமர்க்களத்து மூரிக் களிறுஅட்ட
ஆண்டகையைப் பரணி ஆய்ந்துரைக்க-ஈண்டிய
நேரடியே ஆதியா நீண்ட கலித்தாழிசை
ஈரடி கொண்டு ஆதியுடன் ஈறு

—வெ. பா-செ 38

ஈறில் வணக்கம் கடைநிலம்பேய் என்பனவும்
வீறுசால் ஐயைக்கு மெய்ப்பேய்கள்-கூறித்
திறப்படச் சொல்லினவும் செப்பின் பிறவும்
புறப்பொருள் நூல்கொண்டு புகல்

—,, 39

புறநடை சேர் குரவைப் பொருண்மேல் இங்கு இருவர் மன்னர்
திறனுடை யானைப்படை செற்று வென்ற ஒருவன் செய்கை
நெறிபடு நேரடியே முதல் நீண்டன ஈரடியாய்ப்
பெறலருந் தாழிசையால் பரணிப்பெயர் பேசுவரே

— ந. பா-செ 31

மற்றுஅது, வானவர் வாழ்த்துக் கடைவாழ்த்துப் பாலைநிலப்
பெற்றி பிறைமுடிசூடு இறையோன் பெருந்தேவி மகிழ்ந்து
உற்றுறை கோயில், அவளை உரைத்தல் அலகைக் குழாம்
சுற்றிய வண்ணம் அவைதம் பசியைப் பின்சொல்லுதலே

— ,, 32

ஆங்குக் கனாத் துன்னிமித்தம் வகையறிவித்திடவே
பாங்கிற் பணிமொழி பைம்பொன் முடிமன்னர் தம்பகையார்
தீங்கிற் செருச்செய்து ஒருவன் திறல் வாகை சென்னிவைத்தல்
ஈங்கு உற்றிட வேறொரு பேய் உவகை இசைத்திடலே

— ,, 33

உண்டாம் உவகைதனை அவரான் மகிழ்ந்து ஓலக்கத்தில்
கொண்டாடல், கூறிய பேயினைக் கூவிக் கொலைக்களந் தான்

கண்டு ஆர்ப்பு உறல் களம்வாழ்த்துதல் கைம்மலே
வெண்மருப்புத்
தண்டால், உலந்தவர்தம் பல்தரளம் தடுக்குதலே
— ந.பா-செ 34

முடியடுப்பில் தோல்வயிற்றுக் குழிசியில் மொய் குருதி
நெடு உலேஏற்றி, நிணம்பெய்து கோப நெருப்பு எரித்துத்
தொடியுடைத் தோட்டுடுப்பில் துழாய்ப் பேய் ஊட்ட
அம்மை உண்டு அங்கு
அடுதிறல் மன்னனே மன்னூழி வாழ அருளுதலே
— ,, 35

இன்னும் அப்பேய்கள் இயற்றிய கூழ் பசிதீர உண்டு
துன்னி நின்று ஆடுதல் சூழும் கவந்தங்கள் தாம் ஆடுதல்
மன்னும் புறப்பொருள் நூலோர் உரை வழுவா வகையே
முன்னும் மொழிந்த படியே புணர்த்திக்கொள் மொய்குழலே
— ,, 36

படைபுக்கு ஆயிரம் பகடுஅற ஒன்னூர்
போரில் எதிர்ந்து பொரும் அரசனுக்குக்
கடவுள்வாழ்த்து கடைதிறப்பு பாலே
நிலம் காளிகோட்டம் நிலேயிய கழுது
காளிக்குப் பேய்சொலல் அப்பேய்க்குக் காளி
சொலல் அதனல் தலேவன் கீர்த்தி அருளுதல்
அவன் செலல் புறப்பொருள் தோன்ற ஆற்பரித்துப்
போராடல் பொருகளம் விரும்பல் இவற்றை
நாற்சீர் ஆதியின் நண்ணும் ஈரடியின்
ஏருது பரணி இயம்புதல் நெறியே
— பிர 19

படைபுக்கு ஆயிரம் வேழம் எதிர் ஆர்போரில்
படப்போர் செய்தானுக்குக் கடவுள் வாழ்த்துக்
கடைதிறப்புப் பாலேநிலம் காளிகோட்டம்
கழுதுநிலே காளிக்குப் பேய்ச் சொல் பேய்க்குத்
தொடர்காளி சொலல் அதனல் தலேவன் கீர்த்தி
சொல்லல் அவன் சேறல் புறப்பொருள் தோன்றப் போ
ரடுதல் களம்விரும்பல் இவை நாற்சீர் ஆதி
அடி இரண்டில் ஏருமல் பரணி பாடே
— சி.பா-ம 14

ஆனே ஆயிரம் அமரிடை வென்ற
மானவனுக்கு வகுப்பது பரணி
— இ.வி 838

கடவுள் வாழ்த்துக் கடைதிறப்பு உரைத்தல்
கடும்பாலே கூறல் கொடுங்காளி கோட்டம்
கடிகணம்உரைத்தல் காளிக் கது சொலல்

அடுபேய்க்கு அவள்சொலல் அதனுல் தலைவன்
வண்புகழ் உரைத்தல் எண்புறத் திணையுற
வீட்டல் அடுகளம் வேட்டல் இவைமேல்
அளவடி முதலா அடி இரண்டாக
உளமகிழ் பரணி உரைக்கப் படுமே

— இ.வி 839

பரணிக்கு ஆயிரம் பகடு கொன்ற
தெரிவருந் தலைவனைத் தேவவாழ்த்து ஆதி
கடைதிறப்பும் கனல்காய் நிலம் பாலையும்
புடையில் காளி பொலிந்த கோயிலும்
பேயோடு காளி, பேய்கள் காளியோடு
ஓயில உரைத்தலில் ஓர்ந்து அவன்கீர்த்தி
புகறலும் அவன்வழி புறப்பொருள் தோன்றவும்
மிகவெஞ்சமரும் விரும்பலும் என்று இவை
அளவடி முதற் பலவடியான் ஈரடி
உள பஃருழிசை உரைப்பது நெறியே

— தொ.வி 259

போர்முகத்து ஆயிரம் புகர்முகக் களிற்றைக்
கொன்றவனைத் தலைமகனுகக் கொண்டு
கடவுள் வாழ்த்துக் கடைதிறப்புப் பாலை
காளிகோயிலும் பேயொடு காளியும்
காளியொடு பேய்களும் உரைக்கத் தான் அகம்
சாற்றக் கருதிய தலைவன் சீர்த்தி
புலப்பட அவன்வழியாகப் புறப்பொருள்
தோன்றப் போர்த்தொழில் தொடங்க விரும்பல்
என்று இவையெல்லாம் இருசீர் முச்சீர்
அடியொழித்து ஏனைய அடிகொடு ஈரடிப்
பஃருழிசையாற் பாடுவது பரணி

— மு.வீ- யா.ஒ 79

வெம்போர் முகத்து ஆயிரம் யானையைக் கொன்ற
வீரனைத் தலைவனுக
வேண்டிப் புகழ்ந்து பின் கடவுளரை வாழ்த்தலும்
மேல்இளைஞர் கடைதிறப்பு
வண்பாலையில் காளி கோயிலிற் காளிகள்
வண் பேய்களோடு ஆடியும்
மற்றுமொரு கூளிபேய் சொற்கருது தலைவனுல்
மாருத கீர்த்தி பொங்கப்
பண்பாய வன்வழிப் பிறர் பொருள்கள் தோன்றவும் உ
ப்ாயமாஞ் சமரம் விரும்

பலும் அவன் வென்றியைக் கருதி யிருசீரடிப்
 பாவும் முச்சீரடியுமிற்
செம் பாகமாக நாற்சீர் முதல் அமைந்திடச்
 சீருற்ற அடியிரண்டாய்
செப்பு பஃறுழிசையின் ஓரோரு கவிதையாய்ச்
 செப்பிடிற் பரணியாமே

— பி.தீ 6

திரமுறு கொச்சகப் பாவில் இரண்டடி ஏருமல்
 சேர்காப்புக் கடைதிறப்புப் பாலைச்சீர் காளி
அருமனைச்சீர் பேய்நிலை பேய்மொழி காளிமொழியே
 அரசன்சீர் எழுச்சி பொரல் அடுதல் களம் வேட்டல்
மருவு புறப்பொருள் சிறப்ப ஒருதினத்து ஆயிரம்மா
 வதைத்தவர்க்குப் பாடுதலே பரணி...

— சுவாமி 174

## மடல்

மடல், இன்பமடல், வளமடல் எனவும் பிற்காலப் பாட்டியல் இலக்கணங்களில் சுட்டப்படுகின்றது. அகப்பொருண்மையில் எழுந்த இப்பாடல். அறம், பொருள், வீடு என்பனவற்றினும் இன்பமே சிறந்தது எனும் கொள்கைச் சார்புடன் அமைகின்றது.

தலைவி யொருத்தியைத் தனியிடத்துக் கண்டபின் அவள் பாலுற்ற அன்பு காரணமாக அவளைப் பெற விழைந்து, அவளுருவைக் கிழியில் எழுதி, கரும்பனை மடலாலாகிய ஊர்தி யூர்ந்து செல்வது இங்குப் பொருண்மையாகின்றது. மரபு பற்றித், தலைவி மடல் ஏறல் இல்லை என்பதும், மரபு மாறுபாடு பற்றித் தலைவன் கடவுளாயின் தலைவி மடலேறுவாள் என்பதும் அமைகின்றன.

தனிச்சொல் இல்லாக் கலிவெண்பா-அதாவது இன்னிசைக் கலி வெண்பாவாலாயது இந்நூல். அடிகள் தலைவன் பெயருக்கேற்ப ஒரே எதுகை பெறுகின்றன. மு. வீ, பி. தீ என்பன ஈரடி எதுகை பெறும் என்று விதந்தோதுகின்றன. உலாவும், மடலும் கலி வெண்பா யாப்பில் அமையும் நிலையில் ஒப்புமை பெறுவதையே தொ. வி, 'மடல் என்பது உலாப்போல் வழங்கினும்' எனச்சுட்டு கின்றது போலும். உலாமடல் எனச் சில பாட்டியல் தனிவகை அமைப்பது இங்கு நினைத்தற்குரியது.

சுவாமி, இன்பமடலையும் வளமடலையும் இரு தனி நிலையின தாகக் (stage) காட்டுகின்றது.

அறம் பொருள் வீடு திறம் பெரிதழித்துச்
சிறந்த வேட்கை செவ்விதிற் பராஅய்ப்
பாட்டுடைத் தலைவன் இயற்பெயர்க்கு எதுகை

நாட்டிய வெண்கலிப் பாவதாகித்
தனிச்சொல் ஒரீஇத் தனியிடத்து ஒருத்தியைக்
கண்டபின் அந்த ஒண்தொடி ஏத்தல்
மற்றவள் வடிவை உற்றகிழி எழுதிக்
காமம் கவற்றக் கரும்பனை மடல்மா
ஏறுவர் ஆடவர் என்றனர் புலவர்

— ப.பா-இ 62

மடன்மாப் பெண்டிர் ஏறுர்; ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங்காலே

— ,, 63

உற்ற அறம் பொருள் வீடு எள்ளி, உயர்த்து இன்பம்
பொற்றொடி காதற் பொருட்டாகப்-பெற்றி
உரைத்த கலிவெண்பா மடல், இறைவன் ஒண்பேர்
நிரைத்த எதுகை நிறுத்து

— வெ.பா-செ 28

பொருள் அறம் வீடு பழித்து இன்பமே பொருளாக்கி நல்லார்
அருள்பெறு வேட்கை மடல் மிக ஊர்தலின்,
பாட்டுடையோர்க்கு
உரிதரு பேரில் பெயருக்கு இசைந்த எதுகையினல்
வரு கலிவெண்பாத் தனை மடலாக வகுத்தனரே

—ந.பா-செ 22

......தலைவன் பேர்க்கு
உற்ற தொடை எதுகை ஒன்றில் இன்பத்தை
உயர்த்தொரு தலையாய் ஓங்கிய காமத்து
இசைப்பதாகும் இன்ப மடலே

— பிர 14

......தலைவன் பேர்க்குத்
தொடை எதுகை ஒன்றில் இன்ப மடலாய்ச் சொல்லே

— சி.பா-ம 10

அறம்பொருள் வீடு எனும் அம் முக்கூற்றின்
திறம் கடிந்து, அரிவையர் திறத்து உறும் இன்பம்
பயன் எனக் கலிவெண்பாவால் தலைவன்
பெயர் எதுகையினில் பேசுதல் வளமடல்

— இ.வி 856

மடல் என்பது உலாப்போல் வழங்கினும் கண்ட
மடவார் மயலும் வரும் தலைமகன் பெயர்ப்
பட மாரு எதுகையும் பகர்தல் உரித்தே

— தொ.வி 261

அறம் பொருள் இன்பம் ஆகிய பயனை
எள்ளி, மகடூஉக் காம இன்பத்தைப்
பயன் எனக் கொண்டு பாட்டுடைத் தலைமகன்

இயற்பெயர்க்கு எதுகை இயல்பு நாடிப்
பகர்ந்து, அவ்வெதுகைப் படத் தனிக்கிளவி
யின்றி, இன்னிசைக் கலிவெண்பாவால்
தலைமகள் இரந்து குறை பெறுது
மடலேறுவதாய் ஈரடி எதுகை
வரப் பாடுவது வளமடல் ஆகும்

— மு.வீ-யா.ஒ 126

......அறம் பொருள் இன்பங்கள்
இம்மூன்று கூறும் பயன்
எள்ளி மங்கையர் திறத்துறு காமவின்பமதை
யே பயன்கொண்டே தலை
வனை யியற்பேரினைத் தக்கதே எதுகையாய்
வர நாட்டியுந் தனிச்சொல்
மறுத்து இன்னிசைக் கலியின் வெண்பாவினுல் தலை
மகன் இரந்தே குறைபெருது
அனைவர் அறி மடலூர்வதென்ன ஈரடியெதுகை
யாகவே அறை வளமடலை...... ..

— பி.தீ 20

...அவை மிக்கது இன்ப மடலாம்
உயரும் ஆண்பாலவர் அவ்வாறு இரங்கல் வளமடலாம்

— சுவாமி 168

## மறம்

புறத்திணைக் கூறுகளான மகட்பாற் காஞ்சியும், மகள் மறுத்து மொழிதலும், துறை நிலையிலிருந்து வளர்ந்து, கலம்பகத்தில் உறுப்பாகப் பொருந்தி, இங்குத் தனியிலக்கியமாக வளர்கின்றன.

தகுதியுயர்வு காரணமாகப் பேரரசன், குறுநில மன்னன் அல்லது வீரனெருவனின் மகளை மணமுடிப்பான் விரும்பிக் கேட்க, அந்நிலை தன் வீரத்திற்குத் தக்கது அன்மையால் மறுத்து மொழியும் வீர மொழியாக இவ்விலக்கியம் அமைகின்றது. சுவாமி, பெயர் நிலையில் மட்டுமே இவ் இலக்கிய வகையைக் குறிக்கின்றது.

பெருநில வேந்தன் மகட்பால் வேண்டி
ஒருபெருந் தூதன் உரைத்த மொழி கேட்டுக்
குறுநில மறவன் வெஞ்சினம் திருகி
மாற்றம் மிகஉரைப்பது மறம் என மொழிப

— ப.பா-இ 64

## பல்சந்த மாலை

பத்து முதல் நூறுபாடலால் அமைவது இவ்இலக்கியம்.பன்னிரு பாட்டியல் இவ்விலக்கியம் பற்றிக் கூறும் கருத்து, பிற பாட்டியற் கருத்திலிருந்து ஓரளவு மாறுபடுகின்றது. கலம்பகத்தோடு இவ் இலக்கியத்திற்கு ஒப்புமை காட்டுகின்றது அது. கலம்பகம் போன்று பல உறுப்புக்கள் பெறாது, அதன் யாப்பு நிலையைக் கொண்டு அமைவது என்பது அதன் விளக்கம்.

அகவல் விருத்தம் அல்லது வகுப்பால் வருவது எனச் சி. பா நவிலும். பிற, ஒவ்வொரு பத்தும் ஒரு வண்ணமாய் - சந்தமாய் வருவது என இயம்பும்.

சொன்ன கலம்பக உறுப்புவகை நீக்கி
மன்னிய பத்துமுதல் நூறு அளவா
வந்த மரபின் வரூஉம் செய்யுள் முதலா
வந்தது பல்சந்தமாலை ஆகும்

— ப.பா-இ 65

பத்துஆதி நூறுஅந்தம் பல்சந்த மாலையாம்

— வெ. பா-செ 9:1

பத்துஆதி நூறுஅந்தம் பல்சந்த மாலை

—ந.பா-செ 13:1

அகவல் விருத்தம் வகுப்பு இவை ஒன்றில்
பத்து முதலா நூறு வரை பல்
சந்தம் மேவர அந்தாதித்துச்
சாற்றுவது பல்சந்த மாலை என்ப

— பிர 12

அகவல் விருத்தம் வகுப்புஆதல் பத்து ஆதி
அந்தம் நூறு ஆகும் பல்சந்த மாலை...

— சி.பா-ம 8:1

பத்து முதலா பப்பத்து ஈறு
வைத்த வண்ணவகை பத்துஆகப்
பல்சந்தமாலை பகரப்படுமே

— இ.வி 834

பலசந்தமாலை பப்பத்து ஒருசந்தம்
சில அந்தாதியாய்ச் செப்பு மனவிருத்தமே

— தொ.வி 275

பப்பத்தாகப் பலசந்தத்தொடு
ஈரைம்பான் பாட்டு இயல்வது அது பல
சந்தமாலையாம் சாற்றுங்காலே

— மு.வீ-யா.ஒ 93

மகிழ்வுறும் செய்யுள் பப்பத்தாக ஒவ்வொரு
வகைக்கும் ஓர்சந்தமாகி
வர நூறு செய்யுளாய்ச் சொல்வதே பலசந்த
மாலையாய்ச் சொல்வார்களே

— பி.தீ 11

## இணைமணிமாலை

இவ்விலக்கிய வகைக்குப் பொருண்மை எல்லை கூறப்படவில்லை. யாப்பு நிலையிலும் பாடல் எண்ணிக்கை யடிப்படையிலும் அமைந்தது எனலாம்.

அந்தாதித் தொடர்புடன் நூறு பாடல்கள், வெண்பா யாப்பும் கலித்துறை யாப்புமாக மாறிமாறியமைவது என்பது பொதுநிலை. கலித்துறைக்குப் பதிலாக வெண்பாவுடன் அகவல் அமைவது மற்றொரு தனிநிலை. இவ் அகவல், அகவல் விருத்தமாக அமைய வேண்டும் என்பது பிறிதொரு நிலையாகும்.

இணைமணிமாலை தணிவில் அந்தாதியாய்
மறையவர் பாவும் வணிகர்தம் பாவின்
துறையும் இயைந்து ஈரைம்பது வருமே

— ப.பா-இ 66

..... வெண்பா அகவல்
.......-ஏய்ந்தசீர்
வெண்பா கலித்துறையா மேவிய நான்கான் நூறு
ஒண்பா இணைமணியாம் ஓர்

— வெ.பா-செ 17

வருபா இரண்டு இரண்டாத் தம்முள் மாறின்றி நூறு வரின்
பெருமான் விழியாய் இணைமணிமாலை புகல்வர்களே

— ந.பா-செ 2

வெண்பா தொகை முதற்பாக் கலித்துறை நன்கு
இணைய இயம்புவது இணைமணி மாலை

— பிர 8

...நூறு வெள்ளை அகவல் பாவால்
பின்னர் கலித்துறையது இணைமணிமாலைப் பேர்
பேசு......

— சி.பா-ம 4:1, 2

வெண்பா அகவல் வெண்பாக் கலித்துறை
பண்பான் ஈரைம்பது அந்தாதி
இயலின் வகுப்பது இணைமணிமாலை

—இ.வி 818

இணைமணிமாலை இணைவெண்பாக் கலித்துறை
அகவல் மனவிருத்தம் தொடர்நூறு இயம்பலே

— தொ.வி 282:1-2

வெண்பா அகவல் வெண்பாக் கலித்துறை
இரண்டிரண்டாக இணைத்து வெண்பா
அகவல் இணைமணிமாலை வெண்பாக்
கலித்துறை இணைமணிமாலை யாகும்

— மு.வீ-யா.ஒ 89

... முறையினால் வெண்
பாவும் அகவலும் வெள்ளையும் கலித்துறையுடன்
பகுத்தே யிரண்டிரண்டாய்
நண்பாய் இணைத்து வெண்பா அகவன் மணிமாலை
நவிலும் எழில் வெண்பாவுடன்
நற்கலித்துறை இணைமணிமாலை யென்னவே
நவில்நூறு நூறதாக;
வெண்பாவலர்க்கு இயையுறுஞ் சிறப்பாகவும்
எய்தும் அந்தாதியால் சொற்கு
இசைந்த தொடையோ நாலதாகவும் பண்புடன்
இயம்பல் இணைமணிமாலையே

— பி.தீ 10

## இரட்டைமணிமாலை

முன்மொழிந்த இணைமணிமாலை போன்றே இரட்டைமணி மாலைக்கும் பொருள் வரையறை இல்லை. பாடலெண்ணிக்கையில் மட்டும் அதனின்று மாறியமைகின்றது.

வெண்பாவில் தொடங்கி கலித்துறை தொடர அவ்வாறே இணை கலந்து இருபது பாடலால் அமைகின்றது; வெண்பாவும் கலித் துறையுமாக அமைவதும் உண்டு. வெண்பாவும் விருத்தமும் இயைந்து வருவதும் தெரிகின்றது. இவ்விருத்தம் அகவல் விருத் தம் போலும்.

இங்கும், இணைமணிமாலை போன்றே, உள்ளமையும் யாப்பு வேறுபாட்டால் வகை வேறுபாடு அமைகின்றது.

வெண்பா முதலாகக் கலித்துறை பின்வரும்
இந்த இருபது இரட்டை மணிமாலை

— ப. பா-இ 67

... ... வெண்பா அகவல்
ஆய்ந்த இரட்டைமணி இருபான் ...

—வெ. பா-செ 17:1,2

பெற்றசீர் மன்விருத்தம் வெண்பாப் பெயர்ந்து இருபான்
மற்றை இரட்டை மணிமாலையாம்

— ,, 36:1,2

... ... ... ... இரட்டை மணி
தருபா இருபது வெண்பா கலித்துறை தாமிவையாம்...

— ந. பா-செ 12:1, 2

கருதும் வெண்பாக் கலித்துறை விரவி
இருபது வழுத்துவது இரட்டை மணிமாலை

— பிர 8

மணி இருபான் வெள்ளைக் கலித்துறை யிரட்டை
மன்மாலை ... ...

— சி. பா-ம 4;1

இருபது வெண்பாக் கலித்துறை இயையின்
வருவது இரட்டைமணிமாலை யாகும்

— இ. வி 819

வெண்பா விருத்தம் வியப்புற இருபஃது
எண்பட உரைப்பதும் இரட்டைமணிமாலை

— ,, 829

இரட்டை மாலையாம் இணைந்த பப்பத்தாய்
வெண்பா கலித்துறை விரவிப் பாடலே

— தொ. வி 278

இருபஃது அந்தாதித்து வெண்பாவும்
கட்டளைக் கலித்துறையும் கலந்து உரைத்தல்
இரட்டைமணிமாலை என்மனார் புலவர்

— மு. வீ-யா.ஒ 88

வெண்பாக் கலித்துறையும் இருபது அந்தாதியாய்
மேவு தொடையாய் வருவதின்
மிக்க ஆசிரியவ் விருத்தம் ஒருபத்து நேர்
வெண்பாவும் ஒருபத்துடன்
பண்பாய் உரைப்பதது இரட்டை மணிமாலையாய்ப்
பாடுவது

— பி. தீ 10

ஒத்த வெள்ளை கலித்துறையும் பின் அகவலும் பின்
உறும் அகவல் விருத்தமும் சேர்ந்து அடைவின்
மாலையுமாம்

— சுவாமி 169

## மும்மணிமாலை

மூவகைச் செய்யுளமைப்புக்கள் முறையாகக் கலத்தல் காரண மாகப் படைக்கப்பட்ட இலக்கியம் இது. வெண்பா, கலித்துறை, அகவல் விருத்தம் என்பன பயிலும் யாப்புக்கள். அகவல் விருத்த மன்றி அகவலே வருவதும் உண்டு போலும். முப்பது பாடல்கள் இங்கு அந்தாதியாய் அமைகின்றன.

மிகுத்த வெள்ளை கலித்துறை அகவல்
விருத்தம் மும்மணி விளம்பும் அந்தாதி

— ப. பா-இ 68

மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
முன்னிய முப்பான் மும்மணிமாலை

— வெ. பா-செ 16

... ... மும்மணிமாலை சொல்லின்
அந் நான்மறைப்பாக் கலித்துறை ஆசிரியம்

— ந. பா-செ 11:2,3

வெண்பாக் கலித்துறை அகவற்பா மூன்று
அந்தாதித்து முப்பஃது இயம்பின்
மும்மணி மாலை ...

— பிர 10

... ... ... ... வெள்ளை
நற்கலியின் துறை அகவல் அந்தாதித்த
நடை முப்பான் மும்மணிமாலைப் பேர்

— சி. பா-ம 6:2,3

வெண்பாக் கலித்துறை அகவல் அந்தாதிப்
பண்பால் முப்பது பகரின் மும்மணி
மாலை என்று வகுத்தனர் புலவர்

— இ. வி 820

மும்மணிமாலையாம் முறைமாறி வெள்ளை
கலித்துறை அகவல் கதிபெறும் செய்யுளே

—தொ. வி 281:3, 4

ஆதிப்பா கலித்துறையும் அகவலும்
அந்தாதித்து ஆறைந்து இயம்புவது
மும்மணி மாலையாம் மொழியுங் காலே

—மு. வீ-யா.ஒ 106

பகரும் வெண்பாக் கலித்துறை அகவல் முப்பதும்
பன்னுதொடை அந்தாதியாய்ப்
பாடல் மும்மணிமாலை ...

— பி. தீ 14

## நான்மணிமாலை

மும்மணிமாலையில் மூவித யாப்பு முப்பது பாடலில் அந்தாதியுடன் அமைவது போன்று இங்கு நால்வகை யாப்பு நாற்பது பாடலில் இணைகின்றன. வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம் என்பன அவை. குறுகிய, செவ்விய அமைப்புப் பற்றியும் இனிமை குறித்தும் கலித்துறையும் அனைத்து விருத்தமும் வெண்பா, அகவல் ஆகிய பாநிலைத் தகுதியுடன் ஒன்றி நிற்கும் சிறப்புப் பெறுகின்றன போலும். வெண்பா-கலித்துறை-விருத்தம்-அகவல் என முறை மாறியும் அமைதல் உண்மை தெரிகின்றது.

வெண்பாக் கலித்துறை அகவல் விருத்தம்
நண்பாய் வருவது நான்மணி மாலை

—ப. பா-இ 69

அகவலும் அகவல்விருத்தமும் நாற்பது
அகவலை முன்வைத்து அறைவது கடனே

— ,, 70

மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
... ... ... ... மன்விருத்தம்
நாட்டிய நாற்பது நான்மணிமாலையாம்
ஈட்டிய அந்தாதியாய் ஏய்ந்து

—வெ.பா-செ 16

அந் நான்மறைப்பாக் கலித்துறை ஆசிரியம் விருத்தம்
இந் நால்வகைச் செய்யுள் நாற்பது நான்மணிமாலை என்னே

— ந. பா-செ 11:2,3

... ... இம் முப்பதின் மேல்வர
ஆசிரியம் பத்து அந்தாதித்து
நவில்வ தாகும் நான்மணி மாலையே

— பிர 10

... ... ... ... வெள்ளை
நற்கலியின்துறை அகவல் அந்தாதித்த
நடை ... ... ... மேலோர்
எற்கம்இல் ஆசிரிய விருத்தத்தைக் கூட்டில்
ஒருநாற்பான் நான்மணிமாலைக்கு என்று ஓதே

— சி. பா-ம 6

வெண்பாக் கலித்துறை விருத்தம் அகவல்
பின்பேசும் அந்தாதியின் நாற்பது பெறின்
நான்மணிமாலையாம் என நவில்வர்

— இ.வி 821

நான்மணிமாலையே நாற்பது அந்தாதியாய்த்
தான்மணிக் கொத்தன தந்தன் மன விருத்தமே

— தொ.வி 272

அந்தாதித்து வெண்பாக் கலித்துறை
விருத்தமும் அகவலும் விரவி நாற்பது
நவில்வது நான்மணிமாலை யாகும்

— மு. வீ-யா.ஒ 91

நிகரில் வெண்பா கலித்துறை விருத்தம் அகவல்
நேரும் அந்தாதித் தொடை
நிலைபெறவே எண்ணஞ்சு செய்யுளாய்ச் சீருற
நிகழ்த்தல் நான்மணிமாலையாம்

— பி.தீ 11

## கலம்பகமாலை

'பன்மணிமாலை' என்பதும் இதன் மற்றொரு பெயர் எனத் தெரிகின்றது. ப. பா கலம்பகமாலைக்குக் கூறும் இலக்கணமும், பிற பாட்டியற் பகுதிகள் பன்மணிமாலைக்குத் தரும் விளக்கமும், பி. தீ, 'பன்மணிமாலையாம்; சொல்லுவர் இதுவே கலம்பக மாலை ஆகுமே, என நவில்வதும் இக்கருத்துக்கு அரண் செய்கின்றன.

கலம்பகத்தோடு இவ்விலக்கியத்திற்குப் பண்பு நிலையில் தொடர்பு உண்மை இதன் பெயராலேயே விளங்குகின்றது.

கலம்பகத்தின் ஒருபோகு அம்மனை ஆகிய உறுப்புக்கள் நீங்கின் இது ஆகும் எனும் ப. பா. கருத்து கலம்பகத்தின் சிதைவே இதுவோ எனும் எண்ணத்தினை ஏற்படுத்தும். பல்சந்த மாலைக்கும் இத்தகைய ஒரு கலம்பக ஒப்புமை, ஒப்புமை இன்மை காட்டப்பட்டமை நினைத்தற்குரியது.

ஒருபோகு, அம்மனையுடன் ஊசலையும் ஒழித்தல் வேண்டும் எனும் நிலை ப. பா தவிரப் பிற பாட்டியற் செய்திகளில் அமைகின்றது.

ஒருபோகுடன் அம்மனை நனிநீக்கி
வெள்ளை முதலா எல்லா உறுப்பும்
தள்ளா இயலது கலம்பக மாலை

— ப.பா-இ 71

...அம்மானை - கூர்ந்தொருபோகு
ஊசல் ஒழித்தால்கலம்பகப்பா ஒண்மாலை
பேசிய பன்மணியாம் பின்பு

— வெ.பா-செ 18

...கூறும் கலம்பகத்தின்
ஆட்டிய அம்மனை ஊசல் ஒருபோகும் அற்று வந்தால்
பாட்டியல் பன்மணிமாலை என்று ஓதுவர் பாவலரே

— ந.பா-செ 14

அறைந்த கலம்பகத்து அம்மனை ஊசல்
ஒருபோகு என்பன ஒழியச் சிறப்பித்து
அந்தாதித்து நூறு அறைவது பன்மணி
மாலை என்ப...

— பிர 7

...கலம்பகத்து அம்மானை ஊசல்
முன்பு ஒருபோகு ஒழித்தது பன்மணிமாலைப் பேர்
மொழி ... ... ...

— இ.பா-ம 3:2,3

அவற்றுள்,
ஒருபோகு அம்மானை ஊசல் இன்றி
வருவது பன்மணிமாலை யாகும்

—இ.வி 814

பன்மணிமாலை பன்னிற் கலம்பகத்து
ஒருபோகு அம்மானை ஊசல் இவை நீத்து
அகவல் ... ... ...

— தொ.வி 280

முற்கூறிய கலம்பகத்துள் வரும் ஒரு
போகும் அம்மனை ஊசலும் போக்கி
ஏனைய உறுப்புக்கள் எல்லாம் அமையப்
பாடுவது தான் பன்மணிமாலை

— மு.வீ-யா.ஒ 94

அலகுறு கலம்பகத்துள் வரும் ஒருபோகு
அம்மானை ஊசல் மூன்றும்
அன்றி மேற்சொல்லிய உறுப்பமைத்து அவ்வாறு
அரற்றல் பன்மணி மலையாம்
சொலுவர் இதுவே கலம்பகமாலை ஆகுமே

— பி.தீ 12

கலம்பகம் சில் குறை பன்மணிமாலை

— சுவாமி 170

## மும்மணிக்கோவை

மும்மணி மாலையிலிருந்து மிகச் சிறிதே மாறுபாட்டுடன் அமைகின்றது இது. இரண்டிற்கும் மூப்பது பாடல் அந்தாதியாக அமைவதும் மூவகைச் செய்யுள் வடிவங்கள் முறையே பொருந்துவதும் ஒப்புமைக் கூறுகள். மும்மணி மாலையில் வெண்பா - கலித்துறை - அகவல் அல்லது அகவல் விருத்தம் எனும் முறையில் மூவகை யாப்பும் வர, மும்மணிக்கோவையில் பெரும்பான்மை ஆசிரியம் - வெண்பா - கலித்துறை (கட்டளைக் கலித்துறை) எனும் அமைப்பு தொடர்ந்து வருகின்றது. ப. பா கருத்துப்படி, வெண்பாவும் அகவலும் நேரிசையாகி, கலித்துறை பின் தொடர வரும் இவ் விலக்கியம்.

வெள்ளையும் அகவலும் நேரிசை ஆகக்
கலித்துறை வர அந்தாதி ஆகி
முறைமையின் இயல்வது மும்மணிக் கோவை

—ப.பா-இ 72

... ... ... ஆண்டகவல்
முன்முறையே வெண்பா கலித்துறைய அந்தாதி
மும்மணிக் கோவைக்கு முதல்

— வெ.பா-செ 13

முன் ஆசிரியம் பின்வெண்பாக் கலித்துறை முப்பதென்று
சொன்னுர்கள் மும்மணிக் கோவைக்கு...

— ந.பா-செ11:1, 2

அகவல் வெண்பாக் கலித்துறையின்
முப்பது விரவின் மும்மணிக் கோவை

— பிர 8

... அகவல் வெள்ளை கலித்துறை முப்பாணுற்
சொன்னது மும்மணிக் கோவை ... ...

— சி.பா-ம 4:2,3

அகவல் வெண்பா அசையெண் கலித்துறை
தொகை முப்பது பெறச் சொற்ருெடர் நிலையில்
கூறுதல் மும்மணிக் கோவை யாகும்

— இ.வி 815

மும்மணிக் கோவையே முப்பது அந்தாதியாய்
அகவல் வெள்ளை கலித்துறை முறைவரும்...

—தொ.வி 281:1,2

அகவல் வெண்பாக் கட்டளைக் கலித்துறையும்
முறையே தொகைபெற முப்பது அடுக்கி
அந்தாதித் தொடையாகச் செய்வது
மும்மணிக்கோவை யாம் மொழியுங்காலே

— மு.வீ-யா.ஒ 84

நேரும் ஆசிரியமும் வெண்பாவும் நேரசை
நிரையசை யெழுத்தும் எண்ணி
நீள் கலித்துறையுடன் முப்பது அந்தாதியின்
நெறிபெறத் தொடையதாக
நிலைபெற உரைப்பதே மும்மணிக் கோவையாய்
நீணிலத்து உரைசெய்வரே

—பி.தீ 7

பத்து வெண்பா பத்து அகவல் பாடலும் பின் கலிப்பாப்
பத்து உறலும்......அடைவே
.........மும்மணியிற் கோவை

— சுவாமி 169

## கலியந்தாதி

முப்பது கட்டளைச் செய்யுட்கள் அந்தாதியாக வருவது கலியந்தாதியாகும். கட்டளைச் செய்யுளே யன்றி வெண்கலியும் வரலாம் என்பதும் ப.பா தரும் குறிப்பு.

கட்டளைச் செய்யுள் என்பது தனிவிளக்கம் பெறவேண்டியவொன்று. எனவே இலக்கிய வகைக்கு இலக்கணம் கூறும்போது, செய்யுள் அமைப்பையும் விளக்கி விடுகின்றது பாட்டியல்; நான்கு

அல்லது எட்டுக் கலைகளையுடைய அடிகள் நான்கால் ($4 \times 4$, $8 \times 4$) இச் செய்யுள் அமைகின்றது. குறில், நெடில், வலி, மெலி, இடை எழுத்துக்கள் ஒன்றனையொன்று அடுத்து, தொடர்ந்து வரும் நிலையில் கலைகளுள்ளும், அடிகள் தம்முள்ளும் ஓர் அமைப்பு ஒப்புமை அமைவதாலேயே, இச் செய்யுள் 'கட்டளை' எனப் பெயர் பெற்றது. குறிலெழுத்து வந்த விடத்து, தொடர்ந்து வரும் கலைகளிலும் அடிகளிலும் குறிலேவர, அவ்வாறே பிறவெழுத்திற்கும் ஒன்றிவர, இவ் வடிவ ஒருமைப்பாடு ஏற்படுகின்றது.

வல்லின மெல்லின இடையின எழுத்துப்
புல்லி மருங்கு போகாது ஒன்றிக்
குறில் எனில் குறிலே நெடில் எனில் நெடிலே
பொருந்தி நாற்கலை கொண்டுஓர் அடியாய்த்
திருந்தும் இவ்வகை நான்குஅடி ஆகியும்
ஒரொலி ஆகியும் எண்ணான்கு ஆகிய
கலையொடு பொருந்தியும் குறிலும் நெடிலும்
முறைமுதல் வரினும் அவ்வெழுத்து ஆகியும்
இப்பரிசு இயன்ற முப்பது கட்டளை
மிக்கது கலிஅந்தாதி ஆகும்

— ப.பா-இ 73

வெண்கலியும் சில சிறுபான்மை வருமே

— ,, 74

## ஒலியந்தாதி

இவ்வகை, கலியந்தாதியினின்று மிகச் சிறிதளவே மாறுபடுகின்றது. இங்கும் 30 கட்டளைச் செய்யுள் வருகின்றன. ஆயின் கலைகளின் எண்ணிக்கை வேறுபடுகின்றது.

16 கலைகளாலாகிய அடி நான்குடைய செய்யுட்கள் இவ்விலக்கியத்தை ஆக்குகின்றன. எட்டுக்கலையாலும் இது வரலாம் எனும் போது ஒலியந்தாதியுடன் இணைப்புத் தெரிகின்றது. அவ்வாறு வரும் நிலையில் ஒலியமைப்பே வேறுபாடு காட்டுகின்றது போலும். கலியந்தாதியில் ஓரொலியும், ஒலியந்தாதியில் ஈரொலியும் அமைவதனைக் காட்டும் ப. பா கருத்து இவண் நினைத்தற்குரியது.

பி.தீ, மு.வீ. என்பன இவ்விலக்கியத்திற்கு வேறு பிற யாப்பு நிலைகளும் உரியன எனக்காட்டுகின்றன. வெண்பா, அகவல், கலித்துறை என்பன பத்துப்பத்தாக அந்தாதித்து வரும் நிலையும் இதற்குரியது எனல் அது.

தத்தம் இனத்தின் ஒப்புமுறை பிறழாது
நாலடி ஈரெண் கலை ஒருமுப்பது

கோலியது ஒலியந்தாதி ஆகும்

—ப.பா-இ 75

ஈரொலி ஆகிய எண்ணுன்கு கலை எனச்
சீரியற் புலவர் செப்பினர் கொளலே

— ,, 76

வண்ணகம் என்பது ஒலி எனப்படுமே

— ,, 77

ஈண்டிய முப்பதாய் ஈரெண் கலை வண்ணம்
மூண்டது ஒலியந்தாதி முப்பதாம் ...

— வெ.பா-செ 13:1,2

ஈட்டிய ஈரெண்கலை வண்ணச் செய்யுள்
இயந்த முப்பான்
கூட்டிய நீடு ஒலியந்தாதி ...

—ந.பா-செ 14

வகுப்பின் ஈரெண் வண்ணச் செய்யுளுள்
ஓங்கிய முப்பான் ஒலியந்தாதி

— பிர 8

... ... வகுப்பு முப்பான்
சூழ் ஒலியந்தாதி ...

— சி.பா-ம 4:3

ஈண்டிய வண்ணம் ஈரெண்கலை முப்பான்
ஆண்டது ஒலியந்தாதி ஆகும்

—இ.வி 824

பதினுறுகலை ஓரடியாக வைத்து
நாலடிக்கு அறுபானுலு கலை வகுத்துப்
பலசந்தமாக வணம் கலைவைப்பும்
வழுவாது அந்தாதித்து முப்பது செய்யுள்
பாடுவது, எட்டுக் கலையானும் வரப்பெறும்,
அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை
பப்பத்தாக அந்தாதித்துப்
பாடுவதுமாம் ஒலியந்தாதி

—மு.வீ-யா-ஒ 121

முறையின் ஈரெண்கலையையும்
முடிய ஓரடியதாய் இங்ஙன் நாலடியின்
முடிதல் எண்ணென் கலையதாய்
அடிகள் பலசந்தமாய் வண்ணமுங் கலைவைப்பும்
அந்தாதி தவருமலே
அலகு முப்பது செய்யுள் பாடுதுஞ் சிறுபான்மை
ஆகும் எட்டுக்கலை எனுந்

தொடர்புறும் அன்றி வெண்பா அகவலுங் கலித்
துறையான இம்மூன்றையுஞ்
சோர்வில் பப்பத்தாக வந்தாதியாகவுஞ்
சொல் ஒலியந்தாதியே

—பி.தீ 18

## யானைத் தொழில்

அரசனது யானையைச் சிறப்பித்து வஞ்சிப் பாவில் அமையும் இலக்கியம் இது. ஆசிரிய அடியாலும் வரலாம் என்ற கொள்கையும் உண்டு. யானைக்குரிய நிலம், நிறைவு, அது தோன்றிய தேயம், அதன் எழுவகை உறுப்பும் நிலந்தீண்டுமாறு, குலம், வாழும் யாண்டு, கொலைத் தொழில் செய்யும் உறுப்புச் சிறப்பு, நடை மாண்பு, நன்மை செய்தல்-தீமை புரிதல்-முந்தைய நன்மை தீமைகளை நினைவில் கொள்ளுதல் போன்ற உணர்வு நிலைகள் என்பன பொருண்மைக் கூறுகள். அரசனது ஏவல்களை நிறைவேற்றல், தன்னையுடையோரைப் பேணல், அடுத்தவரைக் கொல்லல் போன்ற தொழில்களும் சிறப்பிக்கப்பெறுகின்றன. இதன் வளர்ச்சி நிலையே வாதோரண மஞ்சரியோ எனும் ஐயம் ஏற்படுகின்றது.

மூவகை நிலனும் மூவகை நிறைவும்
பல்வகைத் தேயமும் எழுவகை உறுப்பு
அங்கமும் வருணமும் யாண்டும் ஐவகைக்
கொலையும் இருவகை நடையும் ஐவகை
உணர்வும் உடையோர்ப் பேணலும் உளப்பட
நண்ணிய வேளாண் பாவின் நலம்பெற
எண்ணி உரைப்பது யானைத் தொழிலே

— ப.பா-இ 78

கிரிசரம் வனசரம் நதிசரம் என்றிவை
நிலைபெறு நிலனென நிறுத்திசி னோரே

— ,, 79

உயரமும் நீளமும் சுற்றும் அளவினிற்
குறையாது இயல்வது நிறைவு எனப்படுமே

— ,, 80

பல்வகைத் தேயம் கொல்களிறு பிறக்கும்
பல்வகைத் தேயமாம் என்மனார் புலவர்

— ,, 81

பாதம்நாலும் கையும் வாலதியும்
கோசமும் நிலன்உறத் தீண்டுதல் குறியே

— ,, 82

குலம் எனப்படுவது பலவகை வருணமும்
நலன்உற உரைக்கும் நலத்தது என்ப

— ,, 83

நலம்மிகு வாழ்நாள் பொலிவுற இயம்புதல்
யாண்டு என மொழிப இயல்நெறிப் புலவர்

— ப.பா-இ 84

கையும் முற்கூறும் கடிய பிற்கூறும்
கூர்ங்கேடு இரண்டும் கொலைத்தொகைவகையே

— ,, 85

முன்னர் ஊன்றிய காற்குறி தன்னில்
பின்னர்ப் பதம் இடுவது தோரணம் என்ப

— ,, 86

பிறழ இடுவது வக்கிரம் அதுவே
சாரிகை விகற்பமும் ஆகும் என்ப

— ,, 87

நன்மை இயற்றலும் தீமை இயற்றலும்
பற்றிய நன்மை தீமை நினைத்தலும்
கயக்கறு காலம் நினைத்தலும் புலனே

— ,, 88

வழுவாது உடையோர் ஏவல் இயற்றல்
உடையோர்ப் பேணல் என்மனுர் புலவர்

— ,, 89

மேல் நண்ணிய என்றதனுல் ஆசிரிய அடியால்
பாடுவாரும் உளர்

— ,, 90

இசைந்த நிலம்குலம் ஒத்த எழிலோடு
அசைந்த பிராயத்து அளவும் இசைந்தமதம்
துன்ன வஞ்சி வீடுயிர்கோன் மன்னன் தொடர்ந்து அணைத்தல்
சொன்ன வஞ்சி யானைத்தொழில்

— வெ.பா-செ 33

பிறந்த நிலம்குலம் ஒக்கம் அளவு பிராயம்எழில்
சிறந்தமாக் கோபக் கிரமத்தில் விட்ட கதிர்சினத்தால்
இறந்து உயிர்கோடல்செயக்கண்டு இறை கந்தினிற் பிணித்தல்
உறைந்திடும் வஞ்சி உரமுடை யானைத் தனித்தொழிலே

— ந.பா-செ 24

பொரு மதக் களிற்றைப் பொருநர் எதிர்கண்டு
அமரிற் சேர்த்தல் ஆனைத்தொழில் இவை
முந்திய பாவின் மொழிவது ஆமே

—பிர 18

பாய்ந்திடும் மதத்து ஆனைத்தொழில் நேர்கொல்லும்
படைக் களிற்றைக் கண்டு அரசன் பற்றிச் சேர்தல்

—சி.பா-ம 13;4

நிலம் எழில் உயரம் நேர்ந்த வயது
குலம் அளவு இலக்கணம் மும்மதம் கோடல்
அடுத்திடில் கோறல் கண்டு அரசனை அறிதல்
தொடுத்தல் வஞ்சி யானைத் தொழிலாம்

—இ.வி 872

## வருக்க மாலை

மொழிமுதலாக அமையும் எழுத்துக்களை எண்வகையாக அகவற்பாவில் அடிமுதல் வைத்து இயற்றப்படும் இலக்கியம் இது. உயிரெழுத்தும், க, ச, த, ந, ப, ம,வ ஆகியனவுமாகிய எண் வகையில் வகைக் கொரு அகவற்பாவாக அடிக்கொரு எழுத்தாக அமையும் இவ் வருக்க மாலை. இன எழுத்துக்கள் மாலையாக இணைக்கப் படலால் இப்பெயர் ஏற்பட்டது.

ப.பா,இ.வி, மு.வீ,பி.தீ என்பன சிறு கருத்துமாறு பாட்டைத் தருகின்றன. ஒரு எழுத்துக்கு ஒரு செய்யுள் என்பதும், அகவற்பா என விதந்தோதாமையுமே அவை.

மொழிமுதல் ஆகிய எழுத்துக்கு எல்லாம்
வருக்கம் உரைப்பது வருக்க மாலை

—ப.பா-இ 91

... ... ... பொற்றொடியாய்
மன்அகவல் எட்டாய் வருக்க எழுத்தான் வருமேல்
முன்வருக்க மாலை மொழி

—வெ.பா-செ 36

மொழிமுதல் உயிர்மெய் வருக்கத் தொகை போற்றி
அகவலாற் புகல்வது வருக்க மாலை

—பிர 10

வற்க உயிர் கசதநபமவ எட்டின் சூழ்
மருவு அகவல் வரின் வருக்கமாலை

—சி.பா-ம 6:2

வருக்கத்தினைச் சொலல் வருக்க மாலை

—இ.வி 826

வருக்க மாலையாம் வருக்க எழுத்து என
உயிரோடு கசதநபமவ என எண்
வரிமுதல் வந்து வரும் எண் அகவலே

—தொ.வி 267

முதலாம் வருக்க எழுத்தினுக்கு ஒவ்வொரு
செய்யுள் அணிபெறச் செப்புவது; அதுதான்
வருக்க மாலையாம் வழுத்துங்காலே

—மு.வீ-யா.ஒ 98

செப்பும் மொழிக்கு முதலாம்
பெலமிகும் வருக்கத்து எழுத்திற்கு ஒவ்வோர் செயுள்
பேசுவது வர்க்க மாலை

—பி. தீ 12

## நாமமாலை

ஆடவனைப் புகழும் இலக்கியம் இது. வஞ்சிப் பாவில், அகவல் கலியடிகள் மயங்கிவர இவ் வகை அமையும். பெண்ணை ஏத்தும் புகழ்ச்சி மாலைக்கு இணையாக இது வந்தமை தெரிகின்றது.

மைந்தர்க்கு ஆயின் வஞ்சிப் பல்வகை
நேர்ந்த அடிமயக்கம் நாம மாலை

—ப. பா-இ 92

புரிந்த மயக்கஅடி வஞ்சியால் பொய்தீர்
(திருந்து இழையார் சீர்பேர் சிறக்கத்-தெரிந்துரைத்தான்
மன்னும் புகழ்ச்சி நன் மாலையாம்) மைந்தர்க்காம்
பின் நாமமாலைப் பேர் பெற்று

—வெ. பா-செ 35

பாதம் பலமயங்கும் வஞ்சி ஆடவரைப் பரவி
ஓதும் அது நாமமாலை

—ந. பா-செ 23

... ... இப்படி ஆடவற்கு
நயந்து பாடுவது நாம மாலை

—பிர 13

... ... ... வஞ்சி
பேசு குணப் பேரடுக்கி (மடவார்க்கு ஓதில்
பெரும்புகழ்ச்சி மாலை) அப்படி ஆண்பாற்கு
மாசு அகல உரைக்கில் அது நாமமாலை...

—சி. பா-ம 9: 3, 4

மயக்க அடிபெறு வஞ்சிப் பாவால்
(வியத்தகு நல்லார் விழுச்சீர் உரைத்தல்
புகழ்ச்சி மாலை) புருடர்க்கு உரைப்பின்
நாமமாலையாம் என நவில்வர்

—இ. வி 866

... ... ... வஞ்சி பாட
நாம மாலையாம் நம்பிகட் புகழ்தலே

—தொ. வி 269

அகவலடி கலியடியும் மயங்கிய
வஞ்சியால் புருடனை வாழ்த்திப் புகழ்வது
நாம மாலையாம் நாடுங்காலே

—மு. வீ-யா. ஒ 92

அகவல் அடியும் கலியினடி மயங்கிய வஞ்சி
யான அப்பாவினாலே
ஆண்மகனையே புகழ்ந்தே கருத்தளவினில்
அரற்றுவது நாமமாலை ... ...

—பி. தீ 11

## இன்னிசைத் தொகை

தொண்ணூறு அல்லது எழுபது இன்னிசைச் செய்யுட்கள் இணைந்து அமைவது இவ் இலக்கிய வகை,

தொண்ணூறேனும் எழுபதேனும்
இன்னிசை தொடுப்பின் இன்னிசைத் தொகையே

– ப. பா-இ 93

## விருத்த இலக்கணம்

அரசனது அங்கங்கள் ஒன்பது இங்குப் பாடற் பொருண்மையாகின்றன. அரசனது குடை, வாள், வேல், செங்கோல், வில் அவன் படைப்பகுதியான பரி, யானை, நாட்டுப் பகுதிகளான ஊர், நாடு இவற்றின் மேல், ஒரு அங்கத்திற்குப் பத்தாகத் தொண்ணூறு பாடல் அமையும்போது இவ் இலக்கியவகை உருவாகின்றது. இங்கு ஆசிரிய விருத்த யாப்புப் பயன்படுத்தப்படுகின்றது. இ. வி, குடையைக் கூறுது கொடையை இணைக்கின்றது;

இலக்கணம் கூறுநிலை நோக்கும்போது, ஒவ்வொரு அங்கத்தையும் சிறப்பிக்கும் பத்துப் பாடலும் தனித்த இலக்கிய நிலை பெறும் பெற்றியன போலும் என்ற எண்ணம் எழுகின்றது.

பரிசிலை யானை வாள்குடை வேல்செங்
கோலொடு நாடுஊர் வேண்டினர் புலவர்

– ப. பா-இ 94

நிலையார் குடை செங்கோல் ஊர்நாடு நீள்வேல்
கொலையார் களிறு குதிரை–சிலைவாள்
இவற்றின்மேல் மன்விருத்தம் ஈரைந்தாய் வந்தால்
அவற்றின்பேர் நாட்டல் அறிவு

—வெ. பா-செ 21

ஆனை குதிரை எழில்வேல் வில்வாள்குடை கோல் இவற்றின்
ஈனமில் நாடு நகரத் திறமென்பர் மேவியல்பால்
ஆனதிறத்து ஆசிரியம் ஈரைந்து வந்தால்...

—ந. பா-செ 16: 1-3

எழிற்குடை செங்கோல் நாடு ஊர் சிலைவாள்
அணிவேல் பரி தந்தி இவற்றைத் தனியே
அகவல் விருத்தம் ஈரைந்தின் மேவ
உரைக்கில் அவ்வவ் விருத்த மாகும்

—பிர 9

எழில்குடை செங்கோல் நாடுஊர் வில்வாள் வேல் மா
அத்தி தனித்தனி அகவல்விருத்தம் பத்தால்
அறை விருத்த இலக்கணமாம் அமுதச் சொல்லாய்
—சி.பா-ம 5:3, 4

வில்வாள் வேல்செங்கோல் மதமாபரி
நாடுஊர் கொடையை நயந்த பப்பத்து
விருத்தம் ஒன்பதும் விளங்கும் அப்பெயரான்
—இ. வி 853

விருத்த இலக்கணம் விளம்புங் காலைக்
குடைஊர் நாடுகோல் பரிகரி வில்வடி
வாள்வேல் ஒன்பான் வகுப்பு மனவிருத்தம்
ஈரைந்து அவ்வவற்று இயற்பெயர் கொள்ளுமே
—தொ. வி 273

வில்வாளொடு வேல் செங்கோல் யானை
குதிரை நாடுஊர் குடை இவ்ஒன்பதும்
பப்பத்து அகவல் விருத்தத்தாலே
ஒன்பது வகையுற உரைப்பது விருத்த
இலக்கணம் என்மனுர் இயல்பு உணர்ந்தோரே
—மு. வீ-யா.ஒ 165

## ஐம்படை விருத்தம்

ஐவகைப் படைகளைப் (ஆசிரிய விருத்தத்தால்) பாடுவது இது. சக்கரம், தனு, வாள், சங்கு, தண்டு எனும் இவை திருமாலின் படைகளாம்.

சக்கரம் தனுவாள் சங்கொடு தண்டு இவை
ஐம்படை விருத்தம் ஆகும்
— ப.பா-இ 95

## நாழிகை வெண்பா

வெண்பா யாப்பில், ஒரு நாளின் நாழிகைக் (கன்னல்) கூறுகள் பொருளாக வருவது இது. பகல் பொழுதின் முப்பது நாழிகைகளை நான்கு யாமமாக, யாமமொன்றுக்கு முறையே எட்டு-ஏழு-ஏழு-எட்டு என நாழிகைக் கணக்கிட்டு, 30 செய்யுட்களில் இலக்கியம் ஆக்கப் பெறுகின்றது. மன்னன் அல்லது கடவுளரை முன்னிலைப்படுத்தி எழுகின்றது இது. ப.பா தவிரப் பிற பாட்டியல்கள் 32 வெண்பாக்கள் இவ் வகையில் அமையுமெனவும், கடிகை வெண்பா என்ற பெயர் வேறுபாட்டையும் கூறுகின்றன.

ஈரிரண்டு யாமத்து இயன்ற நாழிகைச்
சீர்திகழ் வெண்பாப் பாடுநர் யாவரும்

இருநான்கு ஏழேழ் இருநான்கு ஆமெனக்
கன்னல் முப்பதும் எண்ணினர் இனிதே

—ப. பா-இ 96

மன்னர் கடவுளர் முன்னிலை ஆக
அன்ன கடிகை என்னும் இயல்பில்
தொகுநெறி அன்னவை நேரிசை வெண்பா

— ,, 97

முதல்யாமம் ஏழளவும்பாடி எட்டாவதில் யாமம்
ஒன்று என்றும், இரண்டாம் யாமம் ஆறளவும்பாடி
ஏழில்யாமம் இரண்டு என்றும், மூன்றும் யாமம்
ஆறளவும் பாடி ஏழில் யாமம் மூன்று என்றும், நான்
காம் யாமம் ஏழளவும் பாடி எட்டில் யாமம் நான்கு
என்றும் பாடின் முப்பது வெண்பா ஆம்

— ,, 98

... ... ... —போங்கடிகை
தேவர்க்குங் காவலர்க்குந் தேர்ந்துரைக்க வெண்பாவை
மேவிய நாலெட்டாக வேய்ந்து

—வெ.பா-செ 23

... ... ... அவ்வானவர்க்கும்
அரசர்தமக்கும் அறிய உரைத்த கடிகைகளை
உரை செய்யுள் முப்பத்திரண்டு வெண்பாவென ஓதுவரே

— ந.பா-செ 29

ஈசர்க்கு எண்ணான்கு
திருந்து நாழிகையில் சிறப்பின் வெண்பாவால்
நவில்வது ஆகும் நாழிகை வெண்பா

— பிர 18

ஏய்ந்திடு நாழிகை வெண்பா மன்னர்க்கு ஈசர்க்கு
எய்திய நாழிகை வெண்பா நாலெட்டாய்ச் சொல்

— சி.பா-ம 13:2

தேவர் அரசர் திறன் நேரிசையான்
மேவும் கடிகையின் மேற் சென்று அதனை
நாலெட்டு உறச்சொலல் நாழிகை வெண்பா

— இ.வி 850

அமரரிடத்தும் அரசரிடத்தும்
நடக்குங் காரியம் நாழிகை அளவில்
தோன்றி ஒழுகுவதாக முப்பானோடு
இரண்டு நேரிசை வெண்பா இயம்பல்
கடிகை வெண்பா எனக் கருதினர் புலவர்

—மு. வீ-யா.ஒ 163

## நவமணிமாலை

ஒன்பது செய்யுட்களமைந்த இலக்கிய மாலை இது. பாவும் இனமும் இங்குப் பயிலலாம். வெண்பாவில் ஆரம்பிந்து, அந் தாதித் தொடை யிணைவுடன் இது வரல் வேண்டும் என்பது பாட்டியல்.

பாவே இனமே என்றிவை இரண்டு
மேவிய வகையது நவமணிமாலை

—ப.பா-இ 99

வேய்ந்த விருத்தங்கள் (எட்டு அட்ட மங்கலமாம்)
வாய்ந்தன் ஒன்பான் மணிமாலை

—வெ பா-செ 24:1,2

... ... .. மற்று ஒன்பது அவை
நறைவளர் கோதை நவமணி மாலை ...

—ந.பா-செ 27:2,3

விருத்தம் ஒன்று அந்தாதித்து ஒன்பது வழங்கல்
நவமணி மாலை ...

—பிர 11

... ... இப்படி ஒன்பானும்
ஏத்து நவமணி மாலை...

—சி.பா-ம 7:3

வெண்பா முதலா வேறோர் ஒன்பது
நண்பாக் கூறல் நவமணி மாலை

—இ.வி 837

நவமணிமாலை அந்நடைய என்ப

—தொ. வி 274:3

அந்தாதித்து வெண்பா ஆதிய
பாவும் பாவினமும் ஆகா ஒன்பது
செய்யுள் அணிபெறச் செப்புவது அதுதான்
நவமணிமாலையாம் நாடுங்காலே

—மு.வீ-யா.ஒ 90

பகரும் வெண்பா முதல் வேறுபடு பாவும் அப்
பாவினமதாய் ஒன்பதாய்ப்
பண்பு பொருளுறு செய்யுள் அந்தாதி யாகவே
பாடல் நவமணி மாலையாம் ...

—பி.தீ 11

## கைக்கிளை மாலை

கைக்கிளைப் பொருண்மையுடன் அமைவது இது. ஒருதலை யன்பு பற்றி இரங்கலே பாடப்படும் என்பது தெரிகின்றது. அன்பு கொண்டதால் பல்லோராலும், பல சூழலாலும் ஏற்பட்ட துன்பம்,

மருட்பாவாலும் அருகி ஆசிரியம் வஞ்சி இவையல்லாத பாவானும் இனத்தானும், மிக அருகி ஆசிரியப் பாவாலும் இனத்தாலும்பாடப் படும் எனப் பன்னிருபாட்டியல் கூறுகின்றது. 25 விருத்தங்களில் ஒருதலையன்பைப் பாடுவது இவ் விலக்கியம் எனவும் ஐந்தே விருத் தத்தால் ஆவது எனவும், நான்கு வெண்பா பெறுவது எனவும், முப்பத்திரண்டு வெண்பா உடையது எனவும் பல கருத்து மாறு பாடுகள் காணப்படுகின்றன.

இரங்க வருவது மயங்கிய ஒருதலை
இயைந்த நெறியது கைக்கிளை மாலை

—ப.பா-இ 100

தாயர் சேரியர் ஆயர் தீங்குழல்
தென்றல் சேமணி அன்றில் திங்கள்
வேலை வீணை மாலை கங்குல்
காமன் ஐங்கணை கண்வளர் கனவு என
எஞ்சிய நன்னிற வேனில் குயிலே
கொஞ்சிய கிள்ளை கொய்தளிர்ச் சேக்கை
பயில்தரு நன்னலம் பாங்கர் பாங்கியர்
இயன்ற பருவரல் என்மனார் புலவர்

— ,, 101

முல்லை அசோகு மாந்தளிர் தாமரை
அல்லி நீலம் ஐங்கணை ஆகும்

— ,, 102

மயங்கிய என்றதனால் ஓர் இனப்படுத்திப் பாடுவாரும் உளர். பாடும்பொழுது மருட்பாவால் பாடப்படும்; அல்லாதவழி ஆசிரியமும் வஞ்சியும் ஒழிய அல்லாத பாவானும் இனத்தானும் பாடப்படும். சிறுபான்மை ஆசிரியப் பாவானும் இனத்தானும் பாடப்படும் எனக் கொள்க

— ,, 103

... ... மற்று உரைப்பின் - ஏய்ந்த
ஒருதலைக் காமம் உரைப்பவை ஐயைந்தாய்
வருவிருத்தம் கைக்கிளையா மன்

—வெ.பா-செ 15

... ... பகர்ந்த
நண்பால் ஒருதலைக்காமம் நவின்ற விருத்தம் வந்தால்
பெண்பால் வரின் அவை கைக்கிளையாம் என்று பேசுவரே

— ந.பா-செ 17

காமம் ஒரு தலையது கைக்கிளை மாலை

—பிர 13

வருங்காமம் ஒருதலை கைக்கிளையது ஆகும்

—சி.பா-ம 9:4

ஒருதலைக் காமம் ஓரைந்து விருத்தம்
கருத உரைத்தல் கைக்கிளை ஆகும்

—இ.வி 827

ஐந்து விருத்தத்தாலே ஒருதலைக்
காமத்தைக் கூறுவது கைக்கிளை

– மு.வீ-யா.ஒ 148

அன்றியும் வெண்பா ஆறைந் திரண்டு
பாடுவது அதன்பாற்படும் என மொழிப

— ,, 149

ஐவிருத்தம் வெள்ளைநாலெனில் கைக்கிளைக்கு
அறை ஒருதலைக் காமமே

— பி.தீ 20

## உற்பவ மாலை

தசப்பிராதுற்பவம் என்ற பெயர் வேறுபாடு பழைய பாட்டியல்களில் அமைகின்றது. திருமால் பிறப்புக்கள் பத்தினையும் பாடிப் பரவி, பாட்டுடைத் தலைவனைக் காக்கும்படி, பத்து அகவல் விருத்தத்தில் கூறுதல் இவ்விலக்கியமாம்.

சேலே ஆமை ஏனம் சிங்கம்
கோல வாமனன் மூவகை இராமர்
கரியவன் கற்கி எனவரு கடவுளர்
புரிதரு தோற்றம் தெரிதரப் பராஅய்ப்
பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி
இனமொழி நாட்டி அகவல் விருத்தம்
ஒருபது இயற்றுதல் ஆழியோன் பிறப்பே

— ப.பா-இ 104

... ... ஆய்ந்து அங்கு
இசைத்திடுவர் மால்பிறப்பால் ஈரைந்து வாழ்த்துத்
தசப்பிரா துற்பவமாந் தந்து

—வெ.பா-செ 24:2-4

... ... பத்தான் வரினே
குறைவில் அது தசங்கூறில்தசப்பிராதுற்பவமே

—ந.பா-செ 27:3,4

பகர் தெசப்பிரா துற்பவம் பத்தான
அரி பிறப்பு ஆசிரிய விருத்தம் பத்தால்
வாழ் கென வழுத்துதல்

—பிர 18

ஆய்ந்த தசப்பிராதுற்பவம் பத்தான
அரிபிறப்பு ஆசிரிய விருத்தத்தால் வாழ்த்தில்

—இ.பா-ம 13:1

அரிபிறப்பு ஒருபதும் அகவல் விருத்தத்து
உரியிற் புகறல் உற்பவ மாலை

—இ.வி 868

அரிபிறப்பு ஈரைந்தனையும் ஆசிரிய
விருத்தத்தால் விளம்புவது உற்பவமாலை

— மு.வீ-யா.ஒ 104

உயர் மால்பிறப்பு ஆசிரிய விருத்தத்தால்
உரைத்தல் உற்பவ மாலையே

—பி.தீ 13

## அட்டமங்கலம்

எட்டு விருத்தங்களால், ஒருவனைக் காக்கும்படி இறைவனை ஏத்துதல் இவ் இலக்கியத்தை ஆக்குகின்றது. அந்தாதித் தொடை பெறல் இதன் ஒரு பண்பு.

ஒருவனைக் காக்க என்று இறைவனை ஏத்திய
எண்வகை அகவல் விருத்தம் புணர்த்தல்
நண்ணிய அட்டமங்கலம் என்ப

—ப.பா-இ 105

வேய்ந்த விருத்தங்கள் எட்டு அட்டமங்கலமாம்

—வெ.பா-செ 24:1

இறைவனை ஏத்திய எட்டு ஆசிரிய விருத்தம் வண்ணம்
மறைமுதலோர் அட்டமங்கலம் என்ப

—ந.பா-செ 27:1,2

விரும்பும் எட்டு மனவிருத்தம் தோறும்
தெய்வம் காப்பாய்ச் சிறந்த சுபகரத்து
அந்தாதித்து இயம்பல் அட்டமங்கலமாம்

—பிர 11

... ... ... எட்டுக்
குலவகவல் விருத்தம் உறுதெய்வங் காப்பாம்
ஈது அட்டமங்கலம் ... ... ...

—சி.பா-ம 7:2,3

கடவுள் காக்க எனக் கவி இருநான்கு
அடைவுற அகவல் விருத்தம் அதனால்
வகுப்பது அட்ட மங்கலம் ஆகும்

—இ.வி 843

அட்டமங்கலம் எட்டு மன விருத்தம்
கவிதொறும் தெய்வம் காப்பவென்று உரைப்பது

— தொ.வி 274:1,2

கடவுளைப்பாடி அக் கடவுள்தானே
காக்கவென்று அகவல் விருத்தம் இருநான்கு
அந்தாதித்து அறைகுவது அட்டமங்கலமே

—மு.வீ-யா.ஒ 86

அரிய கடவுளர்மீது பாடி அக்கடவுளே
அனுதினம் காக்க எனவும்
தாவில் ஆசிரியவ் விருத்தம் எட்டு அந்தாதி
சாற்று அட்டமங்கலந்தான்

—பி.தீ 9

## இல்லற வெள்ளை

கலை வண்ணமும் வெண்பாவுமாக ஒன்பது செய்யுள் வருவது இது. கலை வண்ணத்திற்குப் பதில் ஒன்பது சந்தச் செய்யுள் ஒன்பது வெண்பாவுடன் வருவதும் உண்டு. ஒரே வெண்கலிப்பாவால் ஆவதும் உண்டு எனத் தெரிகின்றது.

கலைதரு வண்ணமும் வெள்ளையும் ஒன்பான்
நிலைபெறப் புணர்ப்பின் அஃது இல்லற வெள்ளை

—ப.பா-இ 106

இதனுள், கலைதரு வண்ணம் என்றதனல் வெண்கலிப்பா
ஒன்ருனும் பாடுவாரும் உளர்.நிலைபெற என்றதனுல்
சந்தவகை
ஒன்பதும் வெண்பா ஒன்பதுமாகப் பாடுவாரும் உளர்

— ,, 107

## மங்கல வெள்ளை

மங்கல வள்ளை எனவும் குறிக்கப் பெறுகின்றது. கற்புடை மங்கையை, வகுப்பு, வெண்பாக்களால் ஒன்பது பாடலில் புகழ்தல் எனவும் ஒன்பது வகுப்பு, ஒன்பது வெண்பா எனப் பதினெட்டுச் செய்யுட்களில் பாடுதல் எனவும் பாட்டியல்கள் சுட்டுகின்றன.

சந்தமும் வெள்ளையும் தருவன கற்புடை
மங்கல வெள்ளை வருவன ஒன்பான்

—ப.பா-இ 108

கோது இலாக் கற்பின் குலமகளை-நீதிசேர்
மங்கலவள்ளை வகுப்பொடு வெண்பாவால்
இங்காம் ஒன்பான் என்று இசை

—வெ.பா-செ 32

மாசில் குலமகளை வகுப்பு வெண்பாவினுல்
வருபொருள் உரைத்தலாய் ஒன்ப தொன்ப
தாகப் பாடின் மங்கல வெள்ளை

—பிர 13

மாசில் குலமகளுக்கு வகுப்பு வெண்பா
வருபொருள் ஒன்பான் ஒன்பானகப் பாடில்
தேசுயர் மங்கல வள்ளை ...

- சி.பா-ம 9:1,2

ஒன்பது வெண்பா வகுப்பால் உயர்குல
மங்கையைப் பாடுதல் மங்கல வள்ளை

—இ.வி 828

மேற்குலத்தில் பிறந்த மின்னளை வெண்பா
ஒன்பதாலும் வகுப்பு ஒன்பதினாலும்
வழுத்துவது மங்கல வள்ளை ஆகும்

—மு.வீ-யா.ஒ 150

... ... உயர்குலப் பெண்ணினை
ஒன்பது வகுப்பின் வெண்பா
ஒன்பது செயுட் செய்வதாகும் மங்கல வள்ளை

— பி. தீ 26

## தாரகை மாலை

இத் தலைப்பில் மூன்று வேறுபட்ட பொருண்மைகள் அமைந்துள்ளன. இத்தகு மயக்கத்திற்கு அடிப்படைக் காரணம் புரியவில்லை

ப.பா கருத்துப்படி, இரு பொருளுடைய (சிலேடை போலும்) இருபத்தேழு செய்யுட்களால் இவ் இலக்கியம் அமைதல் வேண்டும்.

சந்தப் பாடல்களால் கற்புடைப் பெண்டிரின் குணங்களைப் பாடுவது இதன் பண்பு என்பது இன்னொரு கருத்து.

தூசிப் படையணியை இவ்வாறே புகழ்ந்து பாடுவதும் தாரகை மாலையின் பொருண்மையாகத் தரப்படுகின்றது.

இரண்டு பொருள்புணர் இருபத்தெழுவகைச்
சீரிய பாட்டே தாரகை மாலை

—ப.பா-இ 109

ஓது சந்தத்தால் உரைத்தல் ஒண் தாரகை மாலை

— வெ.பா-செ 32:1

தாரகை இருபத் தேழையும் தகைபெறச்
சொல்லணி வகுப்பில் தூசி அணிதக
வழுத்துதல் தாரகை மாலை என்ப

—பிர 17

... ... ... தூசி
அணிவகுப்பில் தாரகைமாலையைச் சொல் ஆய்ந்தே

—சி.பா-ம 12:4

வகுப்பால் கற்புடை மகளிர்க்கு உள்ள
தகைத்திறம் கூறுதல் தாரகை மாலை

—இ.வி 867

அருந்ததிக் கற்பின் அரிவையர்க்கு உள்ள
இயற்கைக் குணங்களை வகுப்பால் இயம்புதல்
தாரகை மாலையாம் சாற்றுங் காலே

—மு.வீ-யா-ஒ 103

வெகு தூசியின் படையின் அணியைப் புகழ்ந்திடும்
வெகு வகுப்பாம் முறையினை

உரை அருந்ததி கற்பின் மாதர்கள் குணங்களை
ஓதல் தாரகை மாலையாம் ...

— பி.தீ 13

## செந்தமிழ் மாலை

27 பாடல்களாலமைவது இம்மாலை. பொருண்மையில் வரையறை தரப்படவில்லை. யாப்புப் பற்றிய கருத்தில் வேறுபாடுகள் உள்ளமை தெரிகிறது.

எப்பொருளேனும் இருபத்தெழு வகை
செப்பிய நெறியது செந்தமிழ் மாலை

—ப.பா-இ 110

பாவானும் இனத்தானும் பாடுவாரும் உளர். நான்கு முதற்பாவா
ஞதல், ஒருபாவின் இனத்தாஞதல் பாடுக என்பாரும் உளர்

— ,, 111

## தாண்டகம்

தாண்டகச் செய்யுள் இருவகையாக அமைகின்றது. நான்கடிச் செய்யுளில் அடிதோறும் அறுசீர் வருவது குறுந்தாண்டகம். எண் சீர் பயில்வது நெடுந்தாண்டகம். இவ்விலக்கியப் பொருண்மை இறைவர் புகழாம்.

வீ.சோ புகுத்திய புதுமரபிற்கேற்ப மு.வீ தாண்டகம் பற்றிக் கூறுகிறது. அடியின்கண் பயிலும் எழுத்தெண்ணிக்கை வைத்துச் சந்தமும் தாண்டகமும் கணக்கிடல் இது. 27 எழுத்துக்கு மேல் அடிதோறும் வரும் நிலை இதற்குரியது. நான்கடியிலும் எண்ணிக்கை ஒத்திருப்பது அளவியல் தாண்டகம். ஒவ்வாதிருப்பது அளவழித் தாண்டகம்.

மூவிரண்டேனும் இருநான்கேனும்
சீர்வகை நாட்டிச் செய்யுளின் ஆடவர்
கடவுளர்ப் புகழ்வன தாண்டகம் அவற்றுள்
அறுசீர் குறியது நெடியது எண்சீராம்

— ப.பா-இ 112

இருபத்தேழு எழுத்து ஆதியாக
உயர்ந்த எழுத்து அடியினவாய் எழுத்தும்
குருவும் இலகுவும் ஒத்து வந்தன
அளவியல் தாண்டகம் எனவும் அக்கரம்
ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வந்தன
அளவழித் தாண்டகம் எனவும் பெயர்பெறும்

— மு.வீ-யா.ஒ 154

## பதிகம்

பத்துச் செய்யுளால் பதிகம் வருகின்றது. எப்பொருள் மேலும் வரலாம் எனத் தெரிகின்றது. இருபது பாடலும் வரும் நிலை பன்னிரு பாட்டியலில் சுட்டப்படுகின்றது. யாப்புக்கள் என, ஆசிரியத்துறை, ஆசிரிய விருத்தம், கலியின் விருத்தம், எட்டடி வெண்பா என்பன குறிக்கப்பட்டுள்ளன:

ஆசிரியத் துறை அதனது விருத்தம்
கலியின் விருத்தம் அவற்றின் நான்குஅடி
எட்டின் காறும் உயர்ந்த வெண்பா
மிசைவைத்து ஈரைந்து நாலைந்து என்னப்
பாட்டு வரத் தொடுப்பது பதிகம் ஆகும்

— ப.பா-இ 113

கோதில் ஓர் பொருளைக் குறித்து ஐயிரண்டு
பாஎடுத்து உரைப்பது பதிகம் ஆகும்

— மு.வீ-யா.ஒ 115

ஒருபொருள்தனைக் குறித்துப் பன்செய்யுள் பதிகம்

— பி.தீ 26

பப்பத்தாய் எத்துறையும் பாடல் பதிகமதே

— சுவாமி 168

## மெய்க்கீர்த்தி

மெய்க்கீர்த்தி எனவும் மெய்க்கீர்த்தி மாலை எனவும் இருவகை இலக்கியம் இருப்பது பாட்டியல்களை நோக்கத் தெரிகின்றது. இலக்கண விளக்கப் பாட்டியல் இருவகைப் பெயரிலும் ஓரளவு ஒப்புமையுடைய விளக்கத்தைத் தருகின்றது. பின்னெழுந்த, பி.தீ, மு.வீ, என்ற பாட்டியல் பகுதிகள், மெய்க்கீர்த்தி மாலை என்ற பெயரில் மட்டுமே தந்தன.

சொற்சீரடியால் அரசனது மெய்ப்புகழைத் தருவது இது. குலமரபும் வரலாறும் கூறி, அரசியோடு ஆண்டு பல வாழ்கென வாழ்த்தி யமைகின்றது. இடைக்கால வரலாற்றுச் செய்திகளை மெய்க்கீர்த்திகளாகக் கல்வெட்டுக்கள் தருவது இங்கு நினைத்தற்குரியது.

இ.வி தனிநிலைச் செய்யுளின் கீழ் 'மெய்க்கீர்த்தி மாலை'யையும் (865), தொடர்நிலைச் செய்யுளின் கீழ் 'மெய்க்கீர்த்தி'யையும் (831) கூறுகின்றது. நூற்பாக்களைப் பார்க்கும்போது, அரசனின் செயலால் ஏற்பட்ட புகழை அவனை முன்னிலைப் படுத்திக் கூறல் மெய்க்கீர்த்தி எனவும் அவ்வாறன்றி இயல்பாக எடுத்து மொழிதல் மெய்க்கீர்த்தி மாலையெனவும் நினைக்கத் தோன்றுகின்றது.

சீர்நான்கு ஆதி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத்து அவன் வரலாறு சொல்லியும்
அவனுடன் வாழ்க எனச் சொல்லியும் மற்றுஅவன்
இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டு எனத்
திறப்பட உரைப்பது சீர்மெய்க்கீர்த்தி

— ப.பா-இ 114

தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீர் அடியால்
எழில்அரசர் செய்தி இசைப்பர் ... ...

— வெ.பா-செ 34:1,2

சிறந்த மெய்க்கீர்த்தி அரசர்செயல் சொற்றனவாய்ச் செய்யுள்
அறைந்ததோர் சொற்சீர் அடியாம் ...

— ந.பா-செ 28:1,2

வஞ்சிப் பாவிற் கிரீட வேந்தர்
மெய்க்கீர்த்தியை வகுத்து மெய்ம்மையிலுள்ள
கீர்த்தி யுரைப்பது மெய்க்கீர்த்தி வஞ்சி

— பிர 13

... ... ... வேந்தர்க்கு உண்மை
திகழ் கீர்த்தி உரைப்பது மெய்க்கீர்த்தி...

— சி.பா-ம 9:2

சொற்சீர் அடியால் தொழிற்படு புகழை
வேந்தர்பால் கூறின் மெய்க்கீர்த்தி யாகும்

—இ.வி 831

சொற்சீர் அடியான் தொழிற்படு கீர்த்தியை
பொற்புற மொழிதல் மெய்க்கீர்த்தி மாலை

— ,, 865

சொற்சீரடிஎனும் கட்டுரைத் தொடர்பால்
குலமுறை ஆற்றிய கீர்த்தியைக் கூறல்
மெய்க்கீர்த்தி மாலையாம் விளம்புங்காலே

—மு.வீ-யா.ஒ 99

மருவு சொற்சீரடி எனும் கட்டுரைச் செய்யுள்
மரபு வழியில் செய்திடு
மற்புயன் கீர்த்தியை விரித்தெடுத்து ஓதலே
வளரும் மெய்க்கீர்த்தி மாலை

— பி.தீ 13

## மறக்களவழி

நேரிசை, இன்னிசை, பஃறொடை வெண்பா வகைகளில் அமைகின்றது இவ் இலக்கியம். தலைவன் செயலைப் புகழ்வதே அடிப்படை. மறக்களவழி என்பதால் போர்க்களத்தில் வீரச் செயல் புரிந்ததைப் புகழ்தல் எனக் கொள்ளலாம்.

தலைவன் செய்த நிலைபெறுபுகழ் புனை
நேரிசை வெண்பா இன்னிசை வெண்பாப்
பஃறொடை வெண்பா மறக்களவழியே

—ப.பா-இ 115

## மறக்கள வஞ்சி

மறக்கள வழி, மறக்கள வஞ்சி என்பன பொருளால் ஒன்று பட்டு, யாப்பால் மட்டுமே மாறுபடும் இலக்கியவகைகள் போலும்.

மறக்கள வஞ்சி, பெயருக்கேற்ப வஞ்சிப்பா வடிவில் வருகின்றது. குறள், சிந்து, அளவடிகள், அகவல் அடி என்பன விரவும் வஞ்சிப்பா என்பது விதந்து ஓதப்படுகிறது.

குறள்சிந்து அளவடி அகவல் அடிவிராஅய்
வஞ்சிச் செய்யுளின் மன்னர் மறக்களம்
எஞ்சாது உரைப்பது மறக்கள வஞ்சி

— ப.பா-இ 116

## செருக்கள வஞ்சி

முன்னிரு வகைகளோடு சார்ந்த பொருண்மையே இங்கும் உண்டு. போர்க்களத்தை, போர்ச் செய்திகளைப் பாடுவதே அடிப்படை. பத்து (வகை) விருத்தங்களால் பாடுவது என்பது ப.பா கருத்து. வெ.பா, தொ.வி என்பன வஞ்சிப்பாவையே செய்யுள் வடிவாகத் தருகின்றன.

விருத்தவகை பத்தான் விளம்பும் அதனைச்
செருக்களம் எனவே செப்பினர் புலவர்

—ப.பா-இ 117

மொய்யின் திறம் வஞ்சிப் பாவின் முடித்துரைத்தல்
செய்யின் செருக்கள வஞ்சியாம் ...

— வெ.பா-செ 37:1,2

செருக்கள வஞ்சி செருக்களம் கூறல்

— பிர 18

வாய்ந்த செருக்கள வஞ்சி களத்தைக் கூறல்

—சி.பா-ம 13:3

செருக்களங் கூறில் செருக்கள வஞ்சி

- இ.வி 869:5

செருக்கள வஞ்சியாம் செருமுகத்து ஆயவை
சுருக்கிய வஞ்சி தொடுத்துப் பாடலே

— தொ.வி 270

போர்க்களத்து இறந்த புரவி நால்வாய்
மக்கள் உடலையும் வாயசம் கழுகு
பேய்நாய் பசாசம் பிடுங்கிப் பருகிக்
களித்துப் பாடிய சிறப்பைக் காட்டல்
செருக்கள வஞ்சியாம் செப்புங்காலே

— மு.வீ-யா.ஓ 112

சமரத்தில் அறுபட்ட மனிதனுடல் பரியுடல்
தந்தியுடலங்கள் தனையும்
தசையிரத்தம் கூளிபேய் பிசாசம் கழுகு
சம்பு நாய் காகம் முதலா
எமதெமது எனத் தின்னும் ஆரபாரத்தெக்
களித்திருக்கப் பூதமும்
இசைபாடி யாடி இங்ஙனம் அருந்தச் சிறப்பு
எய்திட உரைப்பததுவே
அமர் செருக்கள வஞ்சியாகும் பரந்தலை
அணிசிறப்புச் செய்யுளாம்

—பி.தீ 16

## ஆற்றுப்படை

தொல்காப்பியப் புறப்பொருட்பகுதியில் பாடாண்திணை ஆற்றுப் படை பற்றிய தொடக்கக் குறிப்பைத் தருகின்றது. சங்கப் பத்துப் பாட்டின் ஆற்றுப்படைப்பாடல்கள் இலக்கிய வளர்ச்சியில் இதனிலையைத் தெளிவுறுத்தின. சங்க ஆற்றுப்படைகளையே அடிப்படை யாக்கிப் பாட்டியல்கள் இவ் இலக்கணம் வகுத்துள்ளன எனத் தோன்றுகின்றது.

புரவலனிடம் பரிசு பெற்று மீளும் இரவலன், எதிர்ப்பட்ட பிறிதோர் இரவலனிடம் தான் பெற்ற சிறப்பை எடுத்துக்கூறி, அவனை அப் புரவலனிடம் வழிப்படுத்துவதே பொருண்மை. புலவர், பாணர், பொருநர், விறலியர், கூத்தர் போன்றோர் ஆற்றுப் படுத்தப் படலாம். புரவலன் இறைவனாகவும் இருக்கலாம் எனத் தெரிகின்றது. தலைவனது புகழும், கொடையும், ஆட்சிச் சிறப்பும் எல்லாம் பேசப்படும்.

அகவல் பாவில் இவ் விலக்கியவகை யாக்கப்படுகின்றது.

புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
இரவலன் வெயில்தெறும் இருங்கானத்திடை
வறுமையுடன் வரூஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டு, அப்
புரவலன் நாடுஊர் பெயர்கொடை பராஅய்
அங்குநீ செல்கஎன விடுப்பது ஆற்றுப்படை

— ப.பா-இ 118

ஓங்கிய அதுதான் அகவலின் வருமே

— ,, 119

புலவர் ஆற்றுப்படை புத்தேட்கும் உரித்தே

— ,, 120

ஒன்றும் அகவலால் ஒண்புலவர் யாழ்ப்பாணர்
குன்றுத சீர்ப்பொருநர் கூத்தரே - என்றுஇவரை

ஆங்குஒருவன் ஆற்றுப் படுத்த பரிசு அறைந்தால்
பாங்காய ஆற்றுப்படை

— வெ.பா-செ 30

... ... புலவர்கள் வாழ்த்தும் நலம்
நிறைந்த பொருநரைப் பாணரைக் கூத்தரை நீள்நிதியம்
பெறும்படி ஆற்றுப்படுப்பன ஆசிரியம் பெறுமே

— ந.பா-செ 28

புலவர் பாணர் கூத்தர் பொருநர் என்று
ஓது நால்வருள் ஒருவரை அகவலால்
அங்கொரு தன்மை ஆற்றுப் படுத்துப்
பகர்வது ஆற்றுப் படையென மொழிப

—பிர 12

புகழ் அகவலால் புலவர் பாணர் கூத்தர்
பொருநர் முதல் அவருரையால் எதிர்ப்பாடாகப்
பகருமது ஆற்றுப்படையாம்...

— சி.பா-ம 8:2,3

அரசர் பாவால் ஆற்றுப்படை மேல்
உரைசெய்தவை என்று ஓர்ந்தனர் கொளலே

— இ.வி 873

ஆற்றுப்படை என்ப ஆற்றெதிர்ப் படுத்திய
புலவர் பாணர் பொருநர் கூத்தர்
பலபுகழ் அகவற் பாவொடு பாடலே

— தொ.வி 266

அகவற் பாவால் விறலி பாணர்
கூத்தர் பொருநர் நால்வருள் ஒருவர்
பரிசிற்குப் போவாரைப் பரிசு
பெற்று வருவார் ஆற்றிடைக் கண்டு
தலைவன் கீர்த்தியும் கொடையும் கொற்றமும்
அறைவது ஆற்றுப் படையாகும்மே

— மு.வீ-யா.ஒ 129

... ... ... அகவலால்
உயர் விறலி பாணர் கூத்தர்
பல பொருநர் இந்நால்வரில் ஒருவர் பரிசு உதவு
பரிசினுக்கு ஏகுவாரைப்
பரிசுஉற்று வருவோர்கள் ஆற்றினிடையே கண்டு
பரிசுதவு தலைவன் கொடை
நிலைகீர்த்தி கொற்றமுஞ் சாற்றல் ஆற்றுப்படை

— பி.தீ 21

## கண்படை

மு.வீ, பி.தீ என்பன கண்படைநிலை என்ற பெயரைத் தருகின்றன. இவற்றின் கருத்து, ப.பா கருத்திலிருந்து நுண்ணிதாக வேறுபட்டு அமைகின்றமை தெரிகின்றது.

அரசனும், அரசியல் தலைவர்களும் அரசவைக் கண் நெடிது தங்கிய வழி, மருத்துவர் மந்திரி முதலியவர்கள் அவரைத் துயில் கொள்ளும்படி வேண்டுதலே பொருண்மை. அரசனை வாழ்த்தி அரசியரோடு இனிமையாகத் துயில்கொள்க என அமையும் என்பது ப.பா.

காலை பகல் மாலை யாழ்முறை அறத்தியல்
அமைச்சியல் அரசியல் ஏனை இயல்இசை
நாடகத்து இயலோடு நான்மறை
முறையே எய்தினை ஊழி வாழி
இனிய மகளிரோடு இன்பத் துயில்கொள்க என்று
இங்ஙனம் உரைப்பது கண்படை ஆகும்

— ப.பா-இ 121

அரசரும் அரசர்தமைப் போல்வாரும்
அவைக்கண் நெடிது நாளாக வைகிய
வழி, மருத்துவரும் மந்திரிமாரும்
முதலியோர் தமக்குக் கண்துயில் கோடலைக்
கருதி உரைப்பது கண்படை நிலையே

— மு.வீ-யா.ஒ 130

வேந்தரும் வேந்தரைப் போல்வாரும் அவையின்கண்
மிகநெடிது வைகியவழி
விறன் மருத்துவர் அமைச்சரும் முதலியோருக்கு
விழிதுயில் கொளும் இடமதைச்
சார்ந்து கருதிக் கூறல் கண்படையின் நிலையதாம்

— பி. தீ 22

## துயிலெடைநிலை

பள்ளியெழுச்சியென நாயன்மாரும் ஆழ்வாரும் இயற்றிய பாசுரங்கள் துயிலெழுப்புதலையே குறித்தன.

இங்கு அரசனைத் துயிலெழுப்புதல் பொருண்மையாகின்றது. அரண்மனையில், விடியலிலேயே திறைகொண்டு வந்த மன்னரும் திறை தராமையால் சிறைப்பட்ட மன்னரும் ஏத்தி நிற்றலைக் கூறி அவன் சொற் கேட்க அவர் விழைதலைச் சுட்டி அரசனை துயிலெழும்படி விளம்புதல் என்பது ஒருநிலை.

பாசறைக் கண் படைபலம் பற்றி நற்றுயில் பூண்ட மன்னனை, நன்மைகூற வந்த தூதர் 'எழுக' எனக் கூறல் பிறிதொரு நிலை.

கண்படை மன்னவர் முன்னர்த் தண்பத
விடியல் எல்லை இயல்புறச் சொல்லித்
தந்த திறையரும் தாராத் திறையரும்

ஏத்தி நின்மொழி கேட்டு இனிதுஇயங்க
வேண்டினர் இத்துயில் எழுகஎன விளம்பின்
அதுவே மன்னவர் துயிலெடை நிலையே

—ப.பா-இ 122

தானை வலியினுல் பாசறை
தனில் ஒரு மனக்கவலையன்றித் துயின்ற அர
சர்க்கு நற்புகழ் கொடுத்தல்
நேர்ந்து கருதிய தூதர் துயில் எடுப்புதலாய
நிகழ்த்தல் துயிலெடைநிலையதாம்.

— பி.தீ 22

## விளக்கு நிலை

மன்னருக்குரிய விளக்கைப் புகழ்ந்து பாடுவது இது. வேலும் அதன் தலையும் போல இணைந்து கோலும் விளக்கும் ஓங்குக என வாழ்த்தும் நிலை இங்கு அமைகின்றது.

துளக்கம்இல் மன்னர்க்குஆம் விளக்கு உரைப்பது
விளக்குநிலை என வேண்டினர் புலவர்

— ப.பா-இ 123

வேலும் வேல்தலையும் விலங்காது ஓங்கிய
வாறுபோல் காலொடு விளக்கும் ஒன்றுபட்டு
ஓங்குமாறு ஓங்குவதாக உரைப்பது
விளக்குநிலை என விளம்பப் படுமே

— மு.வீ-யா.ஒ 136

மூட்டு தசை புட்குதவு வேலும் அவ்வேல்தலையும்
ஒன்றாக ஓங்குவதுபோல்
ஊன்று கோலொடு விளக்கு ஒன்றுபட்டு ஓங்குமாறு
ஓங்குதல் விளக்குநிலையாம்

— பி.தீ 23

## கடாநிலை

கொற்றவைக்குக் கடாப் பலி கொடுத்தலைப் பேசுவது இவ் இலக்கியம்.

கொற்றவை தனக்குக் கொற்றவர் எறியும்
கடாநிலை உரைப்பது கடாநிலை ஆகும்

— ப.பா-இ 124

## யாண்டுநிலை

பல்லாண்டு பாடுவது இவ் இலக்கியத்தின் நோக்கம் போலும். பன்னிருபாட்டியலில் மட்டுமே இவ்விலக்கியம் பற்றிய குறிப்பு உண்டு.

பெரும்பான்மை நேரிசை வெண்பாவாலும் சிறுபான்மை அனைத்துப் பாவானும் மன்னன் பல்லாண்டு வாழவேண்டும் என

ஏத்தும் நிலை இங்கு உண்டு. ஆழ்வார் பாசுரத்தின் பல்லாண்டு இங்கு நினைத்தற்குரியது.

வையக மன்னவன் மன்னுக பல்யாண்டு
எய்துக என்பது யாண்டுநிலை ஆகும்

— ப.பா-இ 125

இது, பெரும்பான்மை நேரிசை வெண்பாவாற் பாடப்
பெறும், சிறுபான்மை எல்லாப் பாவானும் பாடப் பெறும்

— ,, 126

## பறைநிலை

பறையறைதலுடன் இணைந்து வரல்பற்றி இவ் இலக்கியம் இப்பெயர் பெற்றிருக்கலாம். நாட்டுக் காவலனாகிய அரசனின் இனிய வாழ்வும் நாடு நகரத்தின் நலமும் வேண்டிக் கடவுளரைக் கேட்டல் நோக்கமும் நெறியுமாக அமைகின்றது. இறைவர்க்கு விழா எடுக்கும் போதும் முடிசூட்டு விழா முடிவின்போதும் இந்நிலை ஏற்படுகின்றது. வஞ்சியாப்பில் வரல் மரபு எனத் தெரிகின்றது.

காவலர் இனிதுஉறத் தேவர்காத்து அளிக்கென
கடவுளர் விழவினும் கதிர்முடி விழவினும்
நாடும் நகரமும் நலம்பெற இயம்பி
வருநெறி வஞ்சி வழங்கப் பற்றிய
மொழிவரத் தொடுப்பது பறைநிலை ஆகும்

— ,, 127

## அந்தாதித்தொகை

ப.பா ஒழியப் பிற பாட்டியல்கள் 'அந்தாதி' என்ற பெயரையே தருகின்றன. அந்தாதியாக நூறுபாடல் வெண்பாவிலேனும் கலித்துறையிலேனும் ஏதேனும் பொருள்பற்றி அமைகின்றன. சீர் அந்தாதி அமைதல் வேண்டும் என்ற எதிர்பார்ப்பு வெண்பாப் பாட்டியலில் தெரிகின்றது.

வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளில்
பண்பாய் உரைப்பது அந்தாதித் தொகையே

— ,, 128

ஒத்தாய வெண்பா ஒருநூறு - ஒத்தசீர்
அந்தாதி ஆகும்; கலித்துறையும் அவ்வகையே
வந்தால் அதன்பேர் அவை

— வெ.பா-செ 9:2-4

... ... அந்தாதி, வெண்பா
வைத்தார்கள், நூறு கலித்துறை தன்னையும்

— ந.பா-செ 13:1,2

... கலித்துறை மன்னிய
வெள்ளை நூறு அந்தாதித்து வருவது
தனித்தனி அந்தாதி

— பிர 7

... வெள்ளை நூறு கலித்துறை நூறுதல்
நன்கு உறில் அந்தாதி ... ... ...

— சி.பா-ம 3:3,4

ஆர்ந்த வெள்ளை கலித்துறையே விருத்தமும் தான் தனியே
அந்தாதித்திடில் அப்பேர் அந்தாதி

— சுவாமி 170

## மருட்பா

பாநிலையால் அமைவது இவ் இலக்கிய வகை. தொல்காப்பியம் கூறிய பொருண்மைகளே தொடர்ந்து பாட்டியல்களில் தரப்படுகின்றன. புறநிலை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்பனவற்றுடன் கைக்கிளை, அவையடக்கம் என்பனவும் பொருண்மையாகின்றன.

புறநிலை வாயுறை செவியறிவுறூஉ எனத்
திறமையின் மருட்பாச் செய்யுளின் வருமே

— ப. பா-இ 129

புறநிலை வாயுறை வாழ்த்துப் புவியில் ஒருவன் செவி
யறிவே யுறுத்தல் அகப்புறக் கைக்கிளை ஆனஇந்த
நெறியில் பொருள்களை அன்றி மருட்பா நிகழ்த்தலினல்
அறிய இந்நாற்செய்யுள் அல்லாத பாவினும் ஆம் என்பரே

- ந.பா-செ 30

பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன் என அவையடக்கியற் பொருளும்
மருட்பாவால் உரைப்பது செவியறிவுறூஉவே.

— மு.வீ-யா.ஒ 157

கடுவும் வேம்பும் கடுப்பன ஆகிய
வெஞ்சொல் தாங்க மேவாது ஆயினும்
பின்னர்ப் பெரிதும் பயன்தரும் என்ன
மெய்ப்பொருள் உற மருட்பாவால் விளம்புதல்
வாயுறை வாழ்த்து என வைக்கப்படுமே

— ,, 158

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமோடு ஒருகாற்கொருகால்
சிறந்து பொலிவாய் என மருட்பாவால்
புகல்வது புறநிலை வாழ்த்து எனப்படுமே

— ,, 159

## பாதாதி கேசம் - கேசாதி பாதம்

உடலின் 32 உறுப்புக்களையும் வருணித்தல் அடிப்படைப் பண்பாக அமைகின்றது. அடியில் ஆரம்பித்துக் கூந்தலில் முடிவது பாதாதி கேசம்; மாறி வருவது கேசாதி பாதம். இவ் இலக்கியம் கலிவெண்பாவில் வருதல் வேண்டும்.

அகஅடி உகிரே விரல் புறஅடியே
பரடே கழலே கணைத்தாள் முழந்தாள்
குறங்கே அல்குல் கொப்பூழ் வயிறுஅதன்
வரையே இடையே மயிரின் ஒழுங்கே
முலை உகிர் விரலே முன்கை அகங்கை
தோள்இணை கழுத்தே முகம் நகை செவ்வாய்
மூக்கே கண்ணே காது புருவம்
நுதல் எனும் ஆறைந்து உறுப்புடன் இரண்டும்
பாதம் ஆதியா வேண்டுதல் புணர்ப்பின் அஃது
ஓதிய பாதமாதியாம் என்ப

— ப.பா-இ 130

... ... ... உறுப்பமைந்த
பாதாதி கேசமுங் கேசாதி பாதமுமா
ஓதுங் கலிவெண்பா ஒன்று

— வெ.பா-செ 29

கடிதல் இல்லாக் கலிவெண்பாப் பகரும் அவயவங்கள்
முடிவது கேசம் அக்கேசம் முதல் அடிஈறும் வந்தாற்
படிதிகழ் பாதாதி கேசமுங் கேசாதி பாதமுமாம்

—ந.பா-செ 18:1-3

பாதாதி கேசம் கேசாதி பாதம்
எண்ணான்கு உறுப்பும் ஏற்க வருணித்துக்
கலிவெண்பாவால் கட்டுரை செய்வது

— பிர 12

... ... ... கலிவெண்பாவால்
பாதாதி கேசம் கேசாதி பாதம்
மகிழ உரைத்திடில் அந்தப் பேராம்

— சி.பா-ம 8:3,4

அடிமுதல் முடியளவாக இன்சொல்
படர்வுறு கலிவெண்பாவால் கூறல்
பாதாதி கேசம், கேசாதி பாதம்
ஓதின் அப்பெயரான் உரைக்கப் படுமே

— இ.வி 871

கால்முதல் முடிவரை கலிவெண்பாவால்
பாடுவது பாதாதி கேசம்
ஆகும் என்மனார் அறிந்திசினோரே

— மு. வீ-யா.ஒ 145

கலிவெண்பாவால் முடிமுதற் கால்வரை
கிளத்தல் கேசாதி பாதம் ஆகும்

— மு.வீ.யா.ஒ 146

உற்ற அடிமுடிவரை கலியின் வெண்பாவினால்
ஓதல் பாதாதி கேசம்;
ஒளிரும் முடி அடிவரைக் கலிவெண்பாவால்
உரைத்தல் கேசாதிபாதம்

— பி.தீ 24

## நயனப் பத்து - பயோதரப் பத்து

ஆசிரிய விருத்தம் பத்து கண்ணைப் பற்றியோ அன்றி நகிலைப் பற்றியோ வரின் இவ் இரு இலக்கியங்கள் உருவாகும். பாதாதி அல்லது கேசாதி பாடும் நிலையைத் தொடர்ந்து போலும் தனியுறுப் புக்களைப் பாடும் தனி இலக்கிய நிலை தோன்றியது.

கலித்துறையாலும் இவ் இலக்கிய வகைகள் வடிவம் பெறலாம் என்பதும் தெரிகின்றது. பெண்மையைச் சிறப்பிக்காது, பெண்ணின் அங்கங்களைப் பாடும் ஒரு இடைக்கால நிலையே இங்கெல்லாம் தெரிகின்றது.

பணைமுலை நயனம் பாங்காம் அகவல்
விருத்தம் பத்துஎன விளம்பினர் புலவர்

— ப. பா-இ 131

தந்துரைத்த மன்விருத்தம் சார்ந்த கலித்துறைதான்
அந்தமுறும் கண்முலைமேல் ஐயிரண்டாய்-வந்தால்
நயன பயோதரப் பத்தாம் என்று நன்னூல்
பயனுணர்ந்தார் முன்பு பகர்

— வெ. பா-செ 25

அரசர் விருத்தம் கலித்துறை ஈரைந்து கண்முலைமேல்
பரசின் நயனம் பயோதரஞ் சேர்ந்த விருத்தம் என்ப

— ந. பா-செ 25:1, 2

... இணைந்து
மன்னு பயோதரம் அம்பகம் இவற்றை
ஆசிரிய விருத்தம் கலித்துறை யொன்றின்
ஏற்க வருணித்து ஈரைந்து சொல்வது
அப்பெயர்ப் பத்தென அறைந்தனர் புலவர்

— பிர 8

பயோதரம் கண் உரைத்திடில் அப்பேர்ப் பத்தாமால்

— சி. பா-ம 4:4

பணைமுலை நயனத்தினைப் பப்பத்தா
அணைவுறப் புகறல் அப்பத்தாகும்

— இ. வி 852

பார்வையைப் பத்துப் பாட்டால் உரைப்பது
நயனப் பத்து என நவிலப்படுமே

— மு.வீ-யா.ஒ 143

பருமுலை பத்துப் பாவால் அறைவது
பயோதரப் பத்தெனப் பகரப் படுமே

— ,, 144

நாட்டந்தனைத் தசச் செய்யுளாற் கூறல்நய
னப் பத்தெனப் புகலுவார்
நனிமுலையைத் தசச் செய்யுளாற் கூறுவது
நற்பயோதரப் பத்திதே

— பி.தீ 23

## உழத்திப் பாட்டு

பிற்காலப் பள்ளுக்கு இது முன்னோடி என்பார். புரவலன் வாழ்த்தும், உழத்தியின் தொழில் வன்மைப் பொருண்மையும் இங்கு இணைகின்றன. பத்துப் பாடலே அளவு. ப.பா தரும் இவ்விளக்கத்திற்குப் பின் சுவாமி நாதமே 'பள்ளு நாடகம்' எனப் பெயர் நிலையிலேனும் இவ் இலக்கியத்தைக் குறிப்பிட்டது.

புரவலர்கூறி அவன்வாழிய என்று
அகல்வயல் தொழிலை ஒருமை உணர்ந்தனள்
எனவரும் ஈரைந்து உழத்திப் பாட்டே

—ப.பா-இ 132

## குறத்திப் பாட்டு

பிற்காலக் குறமும், குறவஞ்சியும் குறத்திப் பாட்டோடு பெரும்பான்மையும் தொடர்புடையன வல்ல. பத்துப் பாடல்களில் முக்காலமும் உணர்ந்த குறத்தி கூறுவது இவ் இலக்கிய நிலையாம். குறம் எனும் பெயர் நிலை மட்டும் சுவாமி நாதத்தில் உண்டு.

இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலமும்
திறப்பட உரைப்பது குறத்திப் பாட்டே

— ப.பா-இ 133

குறத்திப் பாட்டும் அதனோரற்றே

— ,, 134

## ஒருபா ஒருபஃது

பத்துப் பாடலில் இவ் விலக்கியம் வருகின்றது. வெண்பா அல்லது அகவற்பாவால் ஆகின்றது. கலித்துறையாலும் அமைய லாம் என்பதும் அந்தாதி பெறவேண்டும் என்பதும் பிற்காலக் கருத்துக்கள்.

வெள்ளை ஆதல் அகவல் ஆதல்
தள்ளா ஒருபது ஒருபா ஒருபஃது

— ப.பா-இ 135

ஓர்ந்து அகவல் வெண்பா கலித்துறை என்று ஒன்றினால்
ஆர்ந்த ஒருபா ஒருபது...

—வெ.பா-செ 18:1,2

...ஓர் பாவின் அந்தாதித்து
ஈரைந்தாகச் சொல்வது ஒருபா ஒருபதாகும்

—பிர 11

... ... ... எப்பாட்டேனும்
தீதில் ஒருபான் ஒருபா ஒருபஃது என்ப
செப்பு (இவைகள் நான்கையும்) அந்தாதி தன்னால்

—சி.பா-ம 7:3,4

அகவல் வெண்பாக் கலித்துறை அதுகொண்டு
ஒருபா ஒருபஃது உறின் அப்பெயராம்

—இ.வி 823

ஒருபா ஒருபதாம் உரைப்பரும் வெண்பா
அகவல் கலித்துறை அவற்றுள் ஒன்றால்
பத்தெனப் பாடிப் பகுத்த செய்யுளே

— தொ.வி 264

அகவல் வெண்பாக் கலித்துறை ஆகிய
இவற்றுள் ஒன்றினால் அந்தாதித் தொடையாய்
ஒருபஃது உரைப்பது ஒருபா ஒருபது

—மு.வீ-யா.ஒ 127

கலித் துறையினாலும் நேர் வெண்பாவினால் அகவல்
ஆயினும் ஒவ்வொன்றினைக்
கணித்து ஒன்று பப்பத்தின் அந்தாதி யாகவே
கழறும் ஒருபா ஒருபஃது ....

— பி.தீ 21

## இருபா இருபஃது

இருவகை யாப்பு இணைந்து இருபது பாடல் வருவது இது. அகவலும் வெண்பாவும் அந்தாதித் தொடையுடன் மயங்குகின்றன.

வெள்ளை அகவல் பின்னர் முறை வைத்து
எள்ளாது இயல்வது இருபா இருபஃது

— ப.பா-இ 136

ஏய்ந்த இருபா இருபது வெண்பா அகவல்...

— வெ.பா-செ 17:1

இருபா இருபது வெண்பா அகவல் ...

—ந.பா-செ 11:2

வெள்ளை முன் அகவல் பின் விரவின் இருபான்
இயம்புவது இருபா இருபஃது

— பிர 8

... .. வெள்ளை அகவற்பாவால்
பன்னும் இருபா இருபது, இவை அந்தாதி

—சி.பா-ம 4:3,4

ஒருபது வெண்பா ஒருபஃது அகவல்
இருபது வரின் இருபா இருபஃதே

— இ.வி 822

இருபா இருபதாம் இணைந்த நாலைந்தாய்
வெள்ளை அகவல் விரவிப் பாடலே

— தொ.வி 265

அகவல் வெண்பாவும் அந்தாதித் தொடையாய்
இருபது இணைந்துவர எடுத்துரைப்பது
இருபா இருபஃது என்மனார் புலவர்

— மு. வீ-யா.ஒ 128

ஒலி யகவல் பத்து வெண்பாப் பத்தும் அந்தாதி
யுற்ற தொடை யிருபான் நினைந்து
ஓதும் இருபாவிருபஃதாகும்...

— பி. தீ 21

## கோவை

அகப் பொருண்மையில் நானூறு கலித்துறைச் செய்யுட்கள் இங்கு வருகின்றன. களவு கற்பு என்பன ஐந்திணைப் பொருத்தத் துடன் காட்சித் தொடர்புடன் அமைவதால் நாடகப் பாங்கு வெளிப் படுகின்றது. அகப் பாட்டுக்குரிய உறுப்பாகக் கூறப்படுவன பன் னிரண்டும்-திணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், முன்னம், பொருள், துறை, பயன், மெய்ப்பாடு, எச்சம்-வருதல் வேண்டும் என்பது குறிக்கப்படுகின்றது.

அகப்பொருட் கோவை என அடையுடன் பெயர் பெறும் இது, தொல்காப்பியப் பொருளதிகார வளர்ச்சி, தனி அகப்பொருள் நூல் உருவாகிய படி நிலை, இவற்றைச் சார்ந்து அமைந்தது போலும்.

மு.வீ யாப்புப் பற்றி ஒரு மாறுபட்ட கருத்தை இங்குக் கூறு வது எத்துணைப் பொருத்தம் எனத் தெரியவில்லை. அகவல், வெண்பா, கலி, வஞ்சி ஆகிய யாப்புக்கள் தொடர்ந்து அமையும் இவ் இலக்கியம் என்பதே அக் கருத்து.

கோவை என்பது கூறுங் காலை
மேவிய களவு கற்புஎனும் கிளவி
ஐந்திணை திரியா அகப்பொருள் தழீஇ
முந்திய கலித்துறை நானூறு என்ப

— ப.பா-இ 137

ஆய்ந்த கலித்துறைதான் நானூறு அகப்பொருண்மேல்
வாய்ந்த நற்கோவையாம்...

— வெ.பா-செ 15:1,2

பொருளதிகாரத் திறத்தைப் புகன்று கலித்துறைகள்
வருவது நானூறு கோவை என்ருகும்...

—ந.பா-செ 29:1,2

தூண்டும் அகப்பொருள் துறை வளர்ந்து அமையக்
கருதி நானூறு கலித்துறை யாகக்
காதல் அன்புறு காந்திருவ மணத்திற்
கொடிச்சியும் ஊரனும் குலவுநெறி நடப்பது
அகப் பொருட் கோவையாம் என மொழிப

— பிர 7

... கலித்துறை நானூருய்
நடப்பது அகப்பொருட்கோவை நாமமன்னே

—சி. பா-ம 3:4

முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்புஎனும் வரைவு உடைத்தாகி
நலன் உறு கலித்துறை நானூறு ஆக
ஆறிரண்டு உறுப்பும் ஊறின்றி விளங்கக்
கூறுவது அகப்பொருட் கோவை யாகும்

— இ. வி 816

கோவையே அகப்பொருட் கூறுபாடு இசைப்பட
நாவலர் கலித்துறை நானூறு உரைத்தலே

— தொ. வி 277

முதல் கரு உரிப்பொருள் ஒருமூன்றும்
அடைந்து கைக்கிளை அன்புடைக் காமப்
பகுதியவாங் களவொழுக்கமுங் கற்பும்
இயம்புதலே எல்லையாகக் கட்டளைக்
கலித்துறை நானூற்ருல் திணைமுதலாத்
துறை ஈருகச் சொல்லப்பட்டும்
ஈராறு அகப்பாட்டு உறுப்பும் இயையக்
கூறுவது அகப்பொருட் கோவையாம்; மற்றிஃது
அகவல் வெண்பாக் கலி அடுக்கி அவ்வண்ண
வஞ்சியி னுலும் வழுத்தப் படுமே

— மு.வீ-யா.ஒ 81

இருவகைப் பட்ட முதற்பொருளுடன் பன்னுன்கு
எனுங் கருப்பொருளும் அதுவும்
ஈரைந்து உரிப்பொருள் பொருந்து கைக்கிளையாதி
இயைவுற்ற அன்புடைத்தாய்ப்
பெருகு காமப் பகுதியாம் களவொழுக்கமும்
பெண் கற்பொழுக்கத்தினும்

பேதமன்றிக் கட்டளைக் கலித்துறையினைப்
பெறும் ஓர் நானூற்றுற்றிணை
உரிய கைக்கிளை முதல் துறையிறுதியா மொழி
யுற்ற ஈராறு அகப் பாட்டு
உறுப்பும் வழுவின்றிச் சிறப்புடன் ஒதலும்
உறும் அகப்பொருட் கோவையாம் ...

— பி. தீ 8

அகம் புறமும் தனித்தனி முற்றுரைத்தல் அவ்வக் கோவை

— சுவாமி 167

## கணக்கு

அற நூற்களாகிய கீழ்க் கணக்கும் சங்கத் தொகையும் பாட்டு மாகிய மேற்கணக்குமே இப் ப.பா பகுப்புக்குக் காரணம் போலும்.

மேல் கீழ்க் கணக்கென இருவகைக் கணக்கே

— ப.பா-இ 138

அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந்து ஆதி பதிற்றைம்பது ஈறு
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு எனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே

— ,, 139

## தொடர்நிலை

தொடர்நிலைச் செய்யுள் எனப் ப.பா கூறுவதனைப் பிற்காலப் பாட்டியல் காப்பியம் எனவும் பெருங்காப்பியம் எனவும் புராணம் எனவும் விரிக்கின்றன.

வித்திலிருந்து முளையும் கொடியும் வளர்வதுபோன்று தலைவன் வளர்ச்சி நிலைகாட்டித் தொடர்ச் செய்யுளாக அமைவது. வெண்பா, விருத்தம், அகவல், ஒரே எதுகையுடன் அமையும் கொச்சகச் செய்யுள் எனப் பல யாப்பில் பல செய்யுட்கள் தொடர்ந்து வருகின்றன.

தலை, இடை, கடை என இதன்கண் முப்பகுப்பு அமைக் கின்றது, ப.பா ஆயின் தலைவகை மட்டுமேவிளக்கம் பெறுகின்றது. அறம் பொருள் இன்பம் வீடு என்பனவும் (தலைவன்) வெற்றியும், இருப்பும் அனைத்தும் பொருந்தி வருகின்றது, தலை.

தண்டியலங்காரம் கூறும் பெருங்காப்பிய இலக்கணத்தை அடியொற்றியே பிற பாட்டியற் பகுதிகளும் செல்கின்றன. ந.பா, பிறவற்றிலிருந்து வேறுபட்டுக் 'காவியம்' என்ற பெயரையும் தருகின்றது. இ.வி, அணி பற்றிய இயலில் இப் பொருண்மையைக்

கையாண்டு விட்டதால், இங்குச் சுட்டிச் செல்வதுடன் அமைந்து விடுகின்றது.

(பெருங்) காப்பிய உறுப்புக்கள் சில இன்றிச், சில குன்றி வருவதும் காப்பியம் என்பது தொடர்ந்து கூறப்படும் பொதுக் கருத்து. இதனை ஒரு கொள்கை வேறுபாடாக, விதிவிலக்காகக் கொள்ளலாம்.

புராணம் என்பதும் மேற்கூறிய இவற்றோடு தொடர்புற்றே அமைகின்றது. காப்பியப் பொருண்மையே காரிகை (கட்டளைக் கலித்துறை) யாப்பில் அமைந்தால் அது புராணம் ஆய்விடும் போலும் என்ற கருத்து வெண்பாப் பாட்டியலை நோக்க ஏற்படுகின்றது. தொ.வி, புராணம் பற்றி நினைப்பது கருத்திற் கொள்ளத் தக்கது.

வித்தெண் துளிகொடி தலைவனொடு மேவி
ஒத்த வெள்ளைவிருத்தம் அகவல்
வைத்த ஒருதொடை கொச்சக உறுப்பு
நடைபெற வருவது தொடர்நிலை என்ப

— ப. பா-இ 140

தொடர்நிலைச் செய்யுள் பாட்டுப் பல்தொடுத்துத்
தலைஇடைகடை என நுவலப்படுமே

— ,, 141

அவற்றுள்
தலை எனப்படுபவை மலைவின்றாகி
அறம் பொருள் இன்பம் வீடு எனும் இவற்றின்
திறம் தெரி மரபின் நீங்காதாகி
வென்றிகொள் இருக்கை என்றிவை அனைத்தும்
சந்தி ஆகத் தந்துநிலை பெறுமே

— ,, 142

புகரில் வணக்கம் பொருப்பு அறமே ஆதி
பகர்தல் கடல்கோள் பருவம்-நிகர்இல்
தலைவனைக் கூறல் தபநனிந்து தோற்றம்
சிலைமணந்தோர் போரின் செயல்

— வெ.பா-செ 40

செயலார் முடிசூடல் சீர்ப்புதல்வர்ப் பேறோடு
அயலார் பொழில் புனல் புக்கு ஆடல்-இயலும் ஊண்
மந்திரத் தூதாடல் வரும்இகல் விக்கிரமம்
சந்து செலவும் பிறவும் சார்ந்து

— ,, 41

சார்சுவையே பாவம் விளக்கி இனத்தொடு பாக்
கூர் உரையே பாடையே கொண்டு இலம்பகம்-நேர் சருக்கம்

நீப்பில் பரிச்சேதம் நேர்ந்து வருமேல் பெருங்
காப்பியம் என்று கருது

— வெ.பா-செ 42

கருது சில குன்றினும் அக் காப்பியம் ஆம் என்பர்
பெரிது அறமே ஆதி பிழைத்து-வருவதுதான்
காப்பியம் ஆகும், குலவரவு காரிகை
யாப்பிற் புராணமே யாம்

— ,, 43

முன்னம் வணக்கம் அறம்முதல் நான்கின் திறம்உரைத்தல்
தன்னிகர் இல்லாத் தலைவனைக் கூறல்; தசாங்கங்களை
வன்னித்தல் வாய்ந்தபருவம் இருசுடர்த் தோற்றங்கள்தாம்
இன்னன கூறல் பெருங்காப்பியத்துக்கு இலக்கணமே

—ந.பா-செ 37

பொன்முடி சூடல் பொழில் விளையாட்டல் புனல் ஆடுதல்
நன்மணம் செய்தல் நறவூண் களிப்பு கலவிதுனி
மன்னும் புதல்வர்ப் பெறுதல் நன்மந்திரம் தூது செல்லல்
இன்னிகல் வென்றிவகை சந்திகூறல் இக்காப்பியமே

— ,, 38

விருப்பம் தரும்சுவை, பாவவிகற்பம் மிகு பாக்களால்
உரைத்த இனத்தால் உரையோடு உடன்பட மெல்லவந்து
சருக்கம் இலம்பகமாம் பரிச்சேதம் என்னும் பெயரே
தெரித்து வருவது செப்பிய காவியம் தேமொழியே

— ,, 39

நெறியறிந்து அவ்வாறு இயற்றியவாறு நிலைநிற்றலும்
பெறும் பெயர் என்பது, பேசும் அறம்முதல் நான்கினும்தாம்
குறைய வரினும் முற்கூறிய காவியம் கோகனகச்
செறிமலர் அல்லிப் பொகுட்டினில் வாழும் திருந்திழையே

— ,, 40

பெருங் காப்பிய நிலை பேசுங் காலைப்
பாடு நெறி வணக்கம் பாத வாழ்த்து இவற்றென்று
ஏற்புடைத்து ஆகி முன்வர இயன்று
நாற்பொருள் நயக்கும் நடைநெறித்து ஆகி
தன்னிகர் இல்லாத் தலைவன் மலை கடல்
நாடு நகர் பருவம் நீடும் இருசுடர்த்
தோற்றம் என்று இனைய தொகுதியிற் புனைந்து பெண்
வேட்டல் முடிகவித்தல் பூம்பொழில் நுகர்தல்
புனலாடல் கள்ளுண்டல் மகிழ ஊடல்
புதல்வரைப் பெறுதல் கலவியிற் களித்தல்
இன்ன செய்கையின் நன்னடைத்து ஆகி

மந்திரம் தூதுசெலல் போர் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றவர் புனையும் பெற்றியது ஆமே

— பிர 20

கூறும் அதில் சில குறைபாடு எனினும்
பெருங்காப்பியத்தில் பிறிதென ஆகா
அறம் பொருள் இன்பம் வீடு அவற்றின் மேலாம் அவ்
அறம் முதல் நான்கினும் ஆக்கப் பெறுவது
காப்பியம், புராணமாய்க் கருதப் பெறுமே

— ,, 21

பாடுநெறி வணக்கம் வாழ்த்து ஒன்று நாலாய்ப்
பகர்பொருள் முன்வரவு இறைவன் வெற்பு வேலை
நாடு நகர் பொருள்பருவம் இருசுடர் பெண்வேட்டல்
நண்ணல் முடி பொழில்புனல் ஆடல் கள் உண்டல்
கூடுமகிழ் ஊடல் துனி புதல்வர்ப் பேறு
கூறிடுமந்திரம் தூதுசெலல் போர் வென்றி
நீடுசந்தித் தொடர்ச்சி சுவை பாவம் தோன்ற
நிகழ்த்தியம்பல் முதல் பெருங்காப்பியத்துக்கு அம்மா

—சி. பா-ம 15

அறையும் இதில் சில குறைபாடு எனினும் குன்றாது,
அறம் பொருள் இன்பம் வீட்டில் குறைபாடாகப்
பெறுவது காப்பியம் ஆகும் புராணம் ஆகும்

— ,, 16

காப்பியம் இரண்டு மேற்புகன்றனவே

— இ. வி 854

தொடர்நிலைப், பொருளினுஞ் சொல்லினு மாகும்
பொருட்டொடர்நிலை தற் பொருடரத் தானே
பற்பல பாட்டாய்ப் பயனிற் றொடருஞ்
சொற்றொடர் நிலையெனிற் றாக்கந் தாதியே

— தொ.வி 254

பொருட்டொடர் நிலையே புகலிற் காப்பியம்
பெருங்காப்பிய மெனப் பிரிவிரண் டவற்றுள்
காப்பிய மறமுதற் நான்கிற் குறைநவும்
புராணம் பற்கதை புனைநவு மென்ப

— ,, 255

பெருங்காப்பியநிலை பேசுங்காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்று
ஏற்புடைத்து ஆக, முன்வர வியன்று

நாற்பொருட் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிகர் இல்லாத் தலைவனை உடைத்தாய்
மலை கடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர் தோற்றம் என்று இனையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல் விளையாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியில் புலத்தல் கலவியில் களித்தல் என்று
இன்னன புனைந்த நன்னடைத்து ஆகி
மந்திரம் தூது செலவு இகல் வென்றி
சந்தியில் தொடர்ந்து, சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய என்ப
கூறிய உறுப்பிற் சிலகுறைந்து இயலினும்
வேறுபாடு இன்றுஎன விளம்பினர் புலவர்

— தொ.வி 256

துய்ய பொருட்டொடர்நிலை சொற்றொடர்நிலை என்று
இரண்டாம்
தொடர்நிலை, சொற்றொடர்நிலை அந்தாதி அடுத்ததுவே
— சுவாமி 162

அடுத்த பொருட்டொடர் பெருங்காப்பியம் சிறுகாப்பியமாய்
அறைவர் அதின் வரும்பொருள் வாழ்த்து இணையிலி
இறை வணக்கம்
உடைத்தாய் நாற்பொருட் பயத்தாய் மலை வாரி நதி நாடு
ஊர் பருவம் சுடர்த்தோற்றம் மணம் கலவி புலவி
முடிச்சூட்டு மகப்பேறு கனிபொழில் ஆடுதல் நீர்
மூழ்கல் போர் சயம் அமைச்சு தூதுடைத்தாய்ச் சந்தி
படப்படல உறுப்புடைத்தாய்ச் சுவை பாவம் பொருத்தப்
பாடுவதுதான் பெருங்காப்பியம் எனச் சொல்லுவரே
— ,, 163

சொன்னவற்றிற் குறையினுமாம், அறம் ஆதி நான்காய்ச்
சொலும் பயனில் குறைதல் சிறுகாப்பியமாம், அவைதாம்
உன்னும் ஒருவகைப் பாட்டில் பலவகையாம் பாட்டின்
உரைபாடை தழுவலுமாம், இவ்விரு செய்யுளிலே
மன்னுவது பிரபந்தம் அளவிலவாம்...
— ,, 164

## பாட்டு

'கணக்கு' என வகை யொன்று கூறியவர் 'பாட்டு' எனப் பகுப்புத் தருதல் எத்துணை தேவை என்பது ஆய்வுக் குரியது. சங்க இலக்கியப் பத்துப் பாட்டே இவ் இலக்கணத்திற்கு அடிப் படையாக அமைகின்றது. ஆசிரியப்பாவில் நூறு முதல் ஆயிரம் அடியளவும் வரும் பத்துப் பாடலின் தொகுதியே இவ்வகையை உருவாக்குகின்றது.

இன்னொன்றும் இங்கு நினைக்கலாம். ப.பா, இனவியல் 141-ஆம் நூற்பாவில் 'பாட்டுப் பல தொடுத்து வருதல் தொடர்நிலை' என நினைத்தமையால் அதனை விளக்கி, இதுவும் தொடர்நிலை எனத் தர எண்ணினரோ என இயைபு காணலாம். மணிமேகலைக் காப்பியத்தின் முப்பது காதைகளை, அதன் பதிகம், 'ஆறைம் பாட்டு' எனக் குறிப்பது, இங்கு இணைந்தே நினைத்தற்குரியது. அவ்வாறாயின் இப்பாட்டுத் தொடர்நிலையின் 'இடை' (ப.பா-இ 141) எனல் பொருந்தும்.

நூறடிச் சிறுமை நூற்றப்பத்து அளவே
ஏறிய அடியின் ஈரைம்பாட்டுத்
தொடுப்பது பத்துப் பாட்டெனப் படுமே

— ப.பா-இ 143

அதுவே,
அகவலின் வரும்என அறைகுநர் புலவர்

— ,, 144

## கடைநிலை

'கடைநிலை' என்ற பெயரில் இருபொருண்மை நிலைகள் உள்ளன. ப.பா தரும் கருத்தும், பிற்கால மு. வீ, பி. தீ என்பன கூறும் செய்தியும் மாறுபடுகின்றன.

பரிசில் பெறாத இரவலன் புரவலனை வெறுத்து வாயிலில் நின்று மொழிவது ப.பா தரும் விளக்கம். முனிவர், பெரியோர் வெகு தூரத்திலிருந்து வந்து இறைவனின் வாயில் காப்போனிடம் 'தம் வரவுணர்த்தி வா' எனல் பிற்காலக் கருத்து.

கடைநிலை என்பது காணுங் காலைப்
பரிசில் உழப்பும் குரிசிலை முனிந்தோர்
கடையகத்து இயம்பும் காட்சித்து என்ப

— ப.பா-இ 145

பெரியோர் சேணிடை வருதலால் பிறந்த
வருத்தம் தீர வாயில் காக்கின்றோற்கு
என்வரவினை இறைக்கு இயம்புதி நீ எனக்
கடைக்கண் நின்று உரைப்பது கடைநிலை ஆகும்

— மு.வீ-யா.ஒ 138

தவமுனிவர் சேணிடை வருதலால் பிறர் வருத்
தம்திர வாயில்காப்போய்
தலைவர்க்கென் வரவிசை யெனக் கடைக்கண்ணின்று
சாத்தெனச் சொல் கடைநிலை...

— பி.தீ 25

## கையறுநிலை

கையற்று உரைத்தலால் இப்பெயர் பெற்றது. புரவலன் பிரிவு - இறப்பு காரணமாகத் துயருற்றுச் செயலற்ற இரவலன் - பாவலன் தன் துன்பத்தை மொழிதல் இதன்கண் அமைகின்றது.

கணவனொடு மனைவி ஒருங்கிறத்தலால் ஆயத்தாரும் பரிசிலரும் துன்புற்றுரைத்தல் என்பது பிற்கால வளர்ச்சி நிலையாகத் தெரிகின்றது. உடன்கட்டை ஏறும் பழக்கம் நிலவிய ஒரு காலத் தோய்வு இங்கு வெளிப்படுகின்றது.

பாப் பொருண்மைப்பற்றிச் செய்யுளியலில் நினைந்தபோது, இன்ன பாவுக்கு இன்ன பொருள் அல்லது இன்ன பொருளுக்கு இன்ன பா என்ற அமைப்பினைக் கண்டோம். இங்கும், கையறவுப் பொருண்மை, கலி, வஞ்சிப்பாக்களில் வரல் ஆகாது என்ற ஒரு விலக்குவரையறை அமைக்கப்படுகின்றது.

புறப் பொருள் துறைப் பகுதியாக இருந்துத் தனியிலக்கியமாக கையறு நிலை வளர்ந்துள்ளது. சங்கத் தொகையாகிய புறநானூறு தரும் கையறுநிலைப் பாடல்களை இங்கு நினைக்கலாம்.

வலங்கெழு வேந்தர் வான்புகக் கவிஞர்
கலங்கித் தொடுப்பது கையறுநிலையே

— ப.பா-இ 146

கலியே வஞ்சியிற் கையறவு உரையார்

— ,, 147

... ... ... மொழியுங்கால்
கையறம் ஓதார் கலிவஞ்சி என்றுஇவற்றுல்
பொய்தீர்ந்த நூலோர் புரிந்து

— வெ.பா-செ 34

கணவனொடு மனைவி கழிந்துழி அவர்கள்
பட்ட அழிவுப் பாக்கியம் எல்லாம்
பிறருக்கு எடுத்து அறிவுறுத்தித் தாமும்
இறந்துபடாது ஒழிந்த ஆயத்தாரும்
வேண்டுவன பெறும் விறலியர் குழாமும்
தனிப்படர் உழந்த செயலறு நிலையை
நிகழ்த்துவது கையறுநிலை ஆகும்மே

— மு.வீ-யா.ஒ 139

அவனியின் கணவனேடு இல்லாள் கழிந்துழி
அவர் கடப்பட்ட வழுவின்
அப்பொருளெலாம் பிறர்க் கறிவுறுத்தித் தானும்
அப்போது இறந்தேபடாது
எவர் தாமொழிந்த ஆயத்தார்களும் பரி
சில்பெறும் விறலியோரும்
செயல் தனிப்படர் உழந்திடு செயலினறுநிலை
செப்பிடுங் கையறுநிலை

—பி.தீ 25

## ஊர் இன்னிசை - பெயர் இன்னிசை

இன்னிசை வெண்பாவால் யாக்கப்படுவதால் இவ் இரு இலக்கியங்களும் 'இன்னிசை' எனப் பெயர் பெற்றன. இவை முறையே பாட்டுடைத் தலைவனின் ஊரையும் பெயரையும் சிறப்பிக்கச் செய்யப்படுகின்றன.

90, 70 அல்லது 50 பாடல்கள் இவ் இலக்கியங்களில் அமையும் பாங்கின.

முதல்வன் ஊரின் பேரான் மொழிவன வெண்பா
அதனைத் தொண்ணூறு எழுபான் ஐம்பான் — மதர்விழியாய்
இன்னிசை வெண்பாவிற்கும் ஒக்கும் ; இயற்பெயர்
அன்னவற்றுற் கட்டுரைத்தார் ஆய்ந்து

—வெ. பா-செ 14

இறைவன் பெயர் ஊரினை இன்னிசையான்
முறையில் தொண்ணூறு எழுபான் ஐம்பான்
அறையின் அப்பெயர் ஆகும் என்ப

—இ.வி 825

பாட்டுடைத் தலைமகன் பெயரைச் சார
இன்னிசை வெண்பா எழுபானிருபஃது
ஏனும் எழுபானேனும் ஐம்பஃது
ஏனும் உரைப்பது பெயர் இன்னிசையே

— மு. வீ-யா.ஒ 131

பாட்டுடைத் தலைமகன் ஊரைச் சார
இன்னிசை வெண்பா எழுபானிருபஃது
ஏனும் எழுபானேனும் ஐம்பஃது
ஏனும் இயம்புவது ஊர்இன்னிசையே

— ,, 132

நிலைப் பாட்டுடைத் தலைவன் நாமமது சார இன்
னிசை வெள்ளை தொண்ணூறேனுஞ்
சேர்ந்து எழுபதேனும் அலதது ஐம்பதேனுஞ்
சிறக்கவுரை பெயரின்னிசை;

செம் பாட்டுடைத் தலைவன் ஊரை முன் செய்யுட்டொகை
செப்பல் ஊரின்னிசையதே

—பி.தீ 22

## ஊர் நேரிசை - பெயர்நேரிசை

வெ.பா தவிரப் பிற நூற்கள் அனைத்தும் 'ஊர், பெயர் இன்னிசை'க்கே முதலிடம் அளித்தன.

முன்கூறிய இருவகையும் இவையும் நுவலும் பொருண்மையால் ஒத்து அமையினும் பயன் கொள்ளும் பாவகையால் வேறுபடுகின்றன. இங்கும் வெண்பா எண்ணிக்கை 90, 70 அல்லது 50 என அமைதல் வேண்டும்.

முதல்வன் ஊரின் பேரான் மொழிவன வெண்பா
... ... ... இயற்பெயர்
அன்னவற்றுற் கட்டுரைத்தார் ஆய்ந்து...

— வெ.பா-செ 14

இன்னிசை போல இறைவன் பெயர்ஊர்
தன்னின் இயல்வது தான் நேரிசையே

—இ.வி 830

பாட்டுடைத் தலைமகன் பெயரைச் சார
நேரிசை வெண்பாத் தொண்ணூறேனும்
எழுபதேனும் ஐம்பதேனும்
அறைவது பெயர் நேரிசையாகும்மே

— மு.வீ-யா.ஒ 133

ஊரைச் சார உரைப்பது நேரிசை

— ,, 134

பாட்டுடைத் தலைவனொடு பெயர்சார நேரிசை
வெண்பாவினல் தொண்ணூறும்
பத்தேழெனும் ஐம்பதேனும் சிறப்புடன்
பாடுவது பெயர் நேரிசை;
மீட்டும் அத்தலைவன் ஊர்சார முன்தொகை தொடை
விளம்பல் ஊர்நேரிசையதாம்...

—பி.தீ 23

## தசாங்கம்

அரசர்க்குரிய பத்து உறுப்புக்கள் தசாங்கம் எனப்படுகின்றன. மலை, ஆறு, நாடு, ஊர், தார், மா, களிறு, கொடி, முரசம், கோல் எனும் அவற்றைப் பத்து வெண்பாக்களால் பாடலால் இது தசாங்கப்பத்து எனவும் குறிக்கப் பெறுகின்றது. நேரிசை வெண்பா யாப்பாக அமைதல் வேண்டும் என்பது தெளிவாக்கப் படுகின்றது. நஞ்செழுத்து வரலாகாது என்பதும் பெறப் படுகின்றது.

ப. பா சின்னப்பூவை விளக்க வந்த விடத்து (ப.பா-இ 55), தசாங்கங்களைக் குறித்தபோது, கோலுக்குப் பதிலாகப் 'பெயர்' என உரைப்பது இவண் உன்னற்குரியது.

புல்லும் மலை யாறு நாடுஊர் புனைதார்மா
கொல்லுங் களிறு கொடிமுரசம்—வல்லகோல்
என்றுஇவை நஞ்செழுத்தோடு ஏலா வகைஉரைப்ப
நின்ற தசாங்கம் என நேர்

— வெ.பா-செ 19

நேருந் தசாங்கத்தை நேரிசை வெண்பாவால்
... ... ... ஈரைந்தாற் செப்பினர்
நேர்ந்த தசாங்க நிலை

— ,, 20

நேருந் தசாங்கத்தை நேரிசை வெண்பா...
... ... ... அவையொருபான்
சாரில் தசாங்கம் எனஉரையா நிற்பர் சான்றவரே

—ந.பா-செ 15

வெள்ளை பத்தில் தசாங்கத்தைப் புகழ்ந்து
பகர்தல் தசாங்கப் பத்தாம்

— பிர 9

பத்து இயல் வெண்பாவின் மலை நதி நாடு ஊர்தார்
பரிகளிறு கொடி முரசு செங்கோல் பாடின்
மெத்து தசாங்கப் பத்தாம்... ...

—சி.பா—ம 5:1,2

நேரிசை வெண்பாவான் நிருபன் பெறு
தசாங்கத்தினைச் சொலல் தசாங்கப் பத்தாம்

—இ.வி 840

தலைவன் படைத்த தசாங்கம், நேரிசை
வெண்பாவாக ஈரைந்து விளம்புதல்
தசாங்கப்பத்து எனச் சாற்றப்படுமே

—மு.வீ-யா.ஒ 140

பவனமுறு அரசனுக் குற்றிடு தசாங்கமும்
பாடு நேரிசை வெள்ளையால்
பத்துச் செயுட் கூறலதுவே தசாங்கமுறு
பத்தென உரைப்பார்களே

— பி.தீ 25

## ஊர் வெண்பா

ஊர் நேரிசை, ஊர் இன்னிசை என இரு தனி இலக்கியவகை இருக்க, ஊர் வெண்பா எனத் தனியிலக்கியம் ஒன்றின் தேவை ஆய்விற்குரியது. அங்குத் தலைவன் ஊரைச் சிறப்பித்தல் என்றது தனித்தன்மை; இங்குத் தலைவனோடு சார்த்தாது, ஊரைச்

சிறப்பிப்பதே நோக்கமாக, அடிப்படையாக அமைகின்றது எனலாம்.

பத்து வெண்பாவில் ஓர் ஊரினைச் சிறப்பித்தல் இது. தலபுராணம் போன்று இது தலச்சிறப்பாக அமைகின்றது எனல் பொருந்தும்.

அறிந்திடில் ஊர்வெண்பா ஐயிரண்டாம்
— வெ.பா-செ 22:1

ஊனமில் வெள்ளை பத்து ஊர்வெண்பாவாக உரைப்பார்களே
— ந.பா-செ 16:4

வெண்பாவால் சிறப்பித்து ஊர் ஒருபான்
பா விரித்துரைப்பது ஊர்வெண்பா ஆகும்
— மு.வீ-யா.ஒ 135

வெண்பாவினுல் ஊர்சிறக்க ஈரைந்து செயுள்
விள்ளும் ஊர்வெண்பாவதாம்...
— பி.தீ 23

## அலங்கார பஞ்சகம்

ஐவகை யாப்பமைப்புடைய செய்யுளின் பயிற்சியால் உருவாகிய அழகிய இலக்கியம் என்பதனைப் பெயர் உணர்த்துகின்றது.

ஐந்து செய்யுளால் ஆனது எனவும் (இ.வி) இருபத்தைந்து படாலானது எனவும் (தொ.வி) நூறு பாட்டால் ஆனது எனவும் (பி.தீ) வேறுபட்ட கருத்துக்கள் உள. செய்யுட்களிடையேயும் அந்தாதித் தொடர்பு வேண்டும் என்ற உணர்வும் (மு.வீ) உண்டு.

வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், வண்ணம் என்பனவே ஐவகை என்பது பொதுவான கருத்து. வஞ்சி விருத்தம் எனச் சி.பா வேறுபடுகின்றது. வெண்பா, கலித்துறை, ஆசிரியம் ஆசிரியவிருத்தம் ஆகிய ஒவ்வொன்றிற்கும் ஐந்தைந்து பாடலாக வருவது எனும் தொ.வி கருத்து மிகவும் மாறுபடுகின்றது. மு.வீ, பி.தீ என்பன முறைவைப்பைச் சுட்டுகின்றன.

வெள்ளை
... ... ...
செறிந்த கலித்துறை சீர்மன்பா—அறைந்த
கலங்காத மன்விருத்தம் காண்டகைய வண்ணம்
அலங்கார பஞ்சகம் என்றூர்
— வெ.பா-செ 22

வெண்பாக் கலித்துறை வேறு ஆசிரியம் விருத்தம் வண்ணம்
பண்பால் வருவ அலங்கார பஞ்சகம் ஆம்..
— ந.பா-செ 17

ஆதிப்பாக் கலித்துறை ஆசிரியம் வஞ்சி
மனவிருத் தத்தோடு வண்ணம் இசைய ஈர்
ஐந்தின் அலங்காரத்து அந்தாதித்துப்
பாடுவது அலங்கார பஞ்சக மென்ப

— பிர 14

ஓதும் வெள்ளை கலித்துறை ஆசிரியம் வஞ்சி
உறுவிருத்தம் வகுப்புஐந்தால் உரைக்கில் அம்ம
கோதில் அலங்கார பஞ்சகப்பேர்

— சி.பா-ம 7

வெள்ளை கலித்துறை அகவல் விருத்தம்
எள்ளலில் வண்ணம் இவை ஓரைந்தும்
அலங்கார பஞ்சகம் ஆகும் என்பன

— இ.வி 844

அலங்கார பஞ்சகம் அந் நால்வகைப்பாக்
கலந்து அவ்வைந்தாய்க் கதிபெறப் பாடலே

— தொ.வி 282

வெண்பா அகவல் கலித்துறை அகவல்
விருத்தம் சந்தவிருத்தம் இவ்வகையே
மாறிமாறி அந்தாதித் தொடையாய்ப்
பாடுவது அலங்கார பஞ்சகம் ஆகும்

— மு.வீ-யா.ஒ 147

அத்தக ஆசிரிய விருத்தங் கலித்துறை
அகவல் சந்த விருத்தமும்
ஆம் வெள்ளையும் மாறி அந்தாதி செயுள் நூறு
அலங்கார பஞ்சகம்மே

— பி.தீ 24

எத்திறத்தும் இனம் பாவினம் மாறி ஐம்பான் கவிதை
இயம்புவதே அலங்கார பஞ்சமம் என்றுரே

— சுவாமி 169

### ஊசல்

ஊசல் பாட்டாக உருப்பெறும் இலக்கியம் இது. 'ஆடாமோ ஊசல்' 'ஆடீர் ஊசல்' என்ற தொடர்களின் பயிற்சி அமையும் என்பது மு. வீ தரும் குறிப்பு.

ஆசிரிய விருத்தம், கலித்தாழிசை யாப்புக்கள் இவ்விலக்கியப் புறவுருவாக அமைகின்றன.

பிள்ளைத் தமிழ் பற்றிப் பேசும்போது கூறுவன போன்றே இங்கும் 'சுற்றத்தளவு' 'கிளையளவு' எனும் தொடர்கள் பாட்டியற் பகுதிகளில் கையாளப் பெறுகின்றன. இவை போதிய விளக்கம் பெறல் வேண்டும்.

சிலம்பின் வாழ்த்துக் கதையின் ஊசற் பாடல்களும், கலம்பக உறுப்பாக வரும் ஊசலும், மக்களிடையே இன்றும் நிலவும் ஊசலாட்டமும், இவ்இலக்கிய உருவாக்கத்திற்குத் துணைநின்றன எனலாம். நாட்டுப்புற இலக்கிய இயைபுடன் ஒரு நாயகனைப் புகழும் நோக்கமும் இணைந்து இந்நிலையமைகின்றது.

வண்ணகம் (தொ.வி) தாழிசை (இ.வி) என்ற சொற்களால் இரண்டோ பலவோ அடிகள் தம்முள் அளவொத்து அமையும் கலிப்பா உறுப்பான தாழிசையிலும் இவ் இலக்கியம் வரலாம் என்பது பெறப்படுகின்றது.

ஆங்க விருத்தத்தால் அறைந்த கலித்தாழிசையால்
ஓங்கிய சுற்றத்து அளவாய் ஊசலாம் .....

— வெ.பா-செ 23

வரன்முறை சுற்றத்து அளவாம் பொன்னூசல் வடிவுதுற்றே
உரைசெய் கலித்தாழிசையே பொன்னூசல் என்று ஓதுவரே

— ந.பா-செ 25

ஆசிரிய விருத்தம் கலித் தாழிசையில்
ஒன்று ஒன்பான் தாழிசை போக்கிற்
சுற்றத் துளவிற் சொல்வது ஊசல்

—பிர 10

சொல் கலித்தாழிசை அகவல்விருத்தம் ஆதல்
சுற்றமுடன் தாழிசையாய்ச் சொல்வது ஊசல்

—சி.பா-ம 6

அகவல் விருத்தம் கலித்தாழிசையால்
பொலிதரு கிளையொடும் புகலுவது ஊசல்

—இ.வி 845

ஊசல் என்ப ஊசலாய்க் கிளையளவு
ஆசிரிய விருத்தமாகப் பாடலும்
தன்னொலி வருங் கலித்தாழிசைப் பாடலும்
வண்ணகம் முதற்கண் வரினும் இயல்பே

— தொ.வி 276

அகவல் விருத்தத்தான் ஆகுதல் கலித்
தாழிசையானுன் ஆகுதல் சுற்றத்
தோடும் பொலிக, ஆடீர் ஊசல்
ஆடாமோ ஊசல் ஊசலாகும்

—மு. வீ-யா.ஒ 161

## குழமகன்

இளமையுடைய தலைவன், அதாவது ஒரு குழந்தை தலைவனாக அமைவது இவ் இலக்கியம். 'குழவி மருங்கினும் கிழவதாகும்' என்ற தொல்காப்பிய நூற்பாவைப் பிள்ளைப்பாட்டிற்குரிய ஆதார

மாகக், கருவாக, வித்தாகக் காட்டுவதனைப் போன்று இங்கும் காட்டலாம் எனத் தோன்றுகின்றது.

வெ. பா கூறும் கருத்து ஓரளவு பிற பாட்டியல் தரும் 'குழமகன்' இலக்கியம் பற்றிய கொள்கையிலிருந்து வேறுபடுகின்றது.

கலிவெண்பாவால் அமையும் உலா இலக்கியத்தோடு இதற்கு ஒப்புமையுண்டு; குழந்தைத் தலைவன் உலா வரலே வேறுபாடு என வெ. பா உணர்த்துகின்றது.

உயர்குலப் பெண்டிர்கையில் தவழும் அரசக் குழவியினைப் பாடல் 'குழமகன்' எனும் இலக்கியப் பொருண்மையாம். கலிவெண்பாவாலேயே இவ் இலக்கிய வகை அமைகின்றது.

திறந்தெரிந்த பேதைமுதல் எழுவர் செய்கை
மறந்தயர வந்தான் மறுகென்று-அறைந்தகலி
வெண்பா (உலாவாம்) குழமகன்மேல் மேவில்அவ்
வொண்பாக் குழமகனும் முற்று

—வெ. பா-செ 27

... ... ... ஒண்தொடியாய்
மருமலர்க் கையில் குழமகன் மேல்வைத்த மன்னவர்க்குத்
தரு கலிவெண்பாக் குழமகன் ஆமென்று சாற்றுகவே

—ந. பா-செ 20

கலிவெண்பாவால் கையினிற் கண்ட
குழமகனைச் சொலின் குழமகனாகும்

—இ. வி 870

கலிவெண்பாவால் காரிகையார் கரம்
கண்ட இளைமைத் தன்மையை உடைய
குழமகன் தன்னைப் புகழ்ந்து கூறுவது
குழமகனும் எனக் குறிக்கப்படுமே

—மு.வீ-யா.ஒ 153

ஓதல் கலிவெண்பாவினால்
உயர்பெண்கள் தங்கையிற்கண்ட இளமைதன்மை
யுடைய குழமகனைப் புகழ்ந்து
ஓதல் குழமகனாகும்... ... ...

—பி. தீ 26

## அங்கமாலை

கேசாதிபாதம், பாதாதிகேசம் ஆகிய இலக்கிய வகைகள் இங்கு இணைந்து நோக்கத் தக்கன. உடலுறுப்புக்களைப் பாடலே இவ் இலக்கியங்களனைத்தின் அடிப்படைப் பொருண்மையாகும்.

வெண்பா விருத்தம் யாப்பாக அமைதல் அங்கமாலையைப் பிற வற்றிலிருந்து வேறுபடுத்துகின்றது. கலிவெண்பாவால் வரும் எனும் உணர்வைத் தொ. வி தருவதும் வெண்பாவால் வரலாம் எனும் கருத்தை மு. வீ, பி. தீ குறிப்பதும் உன்னத்தக்கன.

இருபாலரின் உறுப்பும் இவ்வாறு தொடர்ந்து பாடப் படலாம் எனத் தெரிகின்றது. நயனப்பத்து, பயோதரப் பத்து என்பன இதினின்று கிளைத்துத் தனியிலக்கியம் ஆனவை போலும்.

அப்பர் சுவாமிகளின் அங்க மாலை, உடலுறுப்புக்கள் இறை வனைப்பாடிப் பணியவே அமைந்தன எனும் கருத்துடன் தனித்து அமைந்தமை இவண் நினைத்தற்குரித்து.

நிறுத்த வெளிவிருத்தம் நீடுறுப்பில் வந்தால்
குறித்து அங்கமாலையாக் கொள்க ..
—வெ. பா-செ 29

மடிதல்இல் வெண்பா விருத்தம்பல அங்கமாலை என்னே
— ந. பா-செ 18: 4

அகங்கால் உகிர்விரல் மீகால் பரடு கணைமுழந்தாள்
மிகுங்கால் நிதம்பமும் உந்திஉதரம் அரைமுலையும்
நகம் சார்விரல் அங்கை முன்கை தோள் கண்டம் முகம் நகைவாய்
நகும் காது இதழ் மூக்குக் கண்புருவம் நெற்றி தாழ்குழலே
— ,, 19

அவ்வப் பெயரின் அங்க வகையை
விளம்பி யொழுங்கின் வெளிவிருத்தத்தால்
வழுத்துவது அங்கமாலை யாமே
—பிர 12

... ... ... ...அந்த
வகை உரைக்கின் வெளிவிருத்தத்து அங்கமாலை
—சி.பா-ம 8:4

மிக்க உறுப்பை வெண்பா விருத்தம்
தொக்க ஒருமுறையால் தொடர்வுறப் பாடுதல்
அங்கமாலையாம் எனப் பகர்வர்
—இ. வி 835

அங்கமாலையே அங்க வகுப்பெலாம்
பாதாதி கேசமும் கேசாதி பாதமும்
கலிவெண்பா வாதல் வெளிவிருத்தம் ஆதல்
வலிதெனப் புகழ்ந்து வகுத்த செய்யுளே
—தொ. வி 262

ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
மிக எடுத்துரைக்கும் மெய் அவயவத்தை

வெண்பா ஆயினும் வெளிவிருத்தத்தின்
ஆயினும் கேசாதிபாதம்
பாதாதிகேசம் ஆகப் பாடுவது
அங்கமாலையாம் ஆயுங்காலே

— மு. வீ-யா.ஒ 85

மேவும் ஆண்மகனுடன் பெண்மகட்கு உரியதாய்
வெண்பாவினுல் ஆயினும்
வெளி விருத்தத்தினுல் ஆயினும் வழுவற
விளம்பு பாதாதிகேசம்
ஆவதாய்க் கேசாதிபாதம் வரைத் தொடர்புற
அரற்றுவது அங்கமாலை

— பி.தீ 9

## தானை மாலை

தானை, படை எனும் பொருளில் கையாளப்படுகின்றது. பொதுவாகப் படையின் சிறப்பினை எடுத்துக் கூறுவது எனவும், சிறப்பாக முன்னணிப்படையாகிய தூசிப்படையின் தன்மையினைப் போற்றிக் கூறுவது எனவும் இரு நிலைகள் அமைவது தெரிகின்றது.

அகவலோசையினின்று வழுவாத செவ்விய ஆசிரியப்பாவில் இது பாடப்படுகின்றது.

படைத்திறம் சொல்லின் பகர்தானை...

—வெ.பா-செ 31:1

தானையை விரித்தல் தானை மாலை

—பிர 17

... ... ... ...தானை
அகலம் உரைப்பது தானைமாலை

—சி.பா-ம 12:3,4

ஆசற உணர்ந்த அரசர் பாவால்
தூசிப் படையைச் சொல்வது தானை
மாலையாகும்... ... ... ...

—இ. வி 869: 1-3

மாலையே அகவலால் வழங்கும்: அவற்றுள்
தானை (போர் வெற்றி தனித்தனி) புகழ்வது
தானை (வஞ்சி வாகை என மூன்றும்)

—தொ. வி 268

அகவல் ஓசையில் பிறழாது அகவலின் முனர்
எடுத்துச் செல்லுங் கொடிப்படை இயம்பல்
தானை மாலைப்பெயர் தழுவுவாம் எனலே

—மு. வீ-யா.ஒ 105

அகவலின் ஓசை பிறழாத ஆசிரியமாய்
அதன் முனர் எடுத்துச் செலும்

ஆடிய கொடிப் படையினைப் புகழ்ந்து உரைசெய்வது
ஆகுமே தானைமாலை

— பி.தீ 14

## வஞ்சி மாலை

வஞ்சி எனவும், வஞ்சிமாலை எனவும் போர்க்கெழு வஞ்சியென வும் பல பெயர் நிலைகள் அமைகின்றன. வஞ்சிப் பூப் புனைந்து, போருக்கு எழும் நிலையே இவ் இலக்கியப் பொருண்மையாகும்.

இவ் வஞ்சி மாலையும் அகவலாலேயே யாக்கப்படுகின்றது.

... ... ... வஞ்சி
எடுத்து மேற்சேறல் இயம்பின் ...

—வெ. பா-செ 31

... ... மற்று எப்பொருளும்
நீதியினுல் சொல்லின் அப்பெயரால் வஞ்சி நேர்ந்தனவே

—ந. பா-செ 23

மாற்ருர் பால் செலல் வஞ்சி ...

—சி. பா-ம 12: 1

மாலையே அகவலால் வழங்கும்; அவற்றுள்
(தானை) போர் (வெற்றி தனித்தனி) புகழ்வது
(தானை) வஞ்சி (வாகை என மூன்ரும்)

—தொ. வி 268

போர்க்கு எழும் மன்னவர் வஞ்சிப் பூத்தொடை
அணிந்து புறப்படும் அடுபடை எழுச்சிச்
சிறப்ப அகவலினுல் செப்புதல் போர்க்கெழு
வஞ்சி எனப் பெயர் வைக்கப்படுமே

—மு. வீ-யா. ஒ 110

வேற்றுமைப் பகைவர்மேல் போர்குறித்து ஏகுவது
வேந்தர் பூ வஞ்சி மாலை
வேய்ந்து எழுபடைச் சிறப்பு ஆசிரிய வகையினுல்
விள்ளல் போர்க்கெழு வஞ்சியாம்

—பி. தீ 15

## வாகை மாலை

வெற்றியை உரைத்தலே இங்குப் பொருண்மை. ஆசிரியப் பாவால் இதுவும் யாக்கப்படுகின்றது.

... ... ... அடுத்து அமைந்த
வெற்றியுரை வாகையாம் வேந்தன்பா ஒன்றினுல்
உற்றுரைத்து மாலைப்பேர் ஓது

—வெ. பா-செ 31

... ... ... வென்று
புகழ் படைத்தல் வாகை; அது மாலைப் பேரால்
போற்றுவது மாலையுமாப் புகல்வர்

— சி.பா-ம 21

மாலையே அகவலால் வழங்கும்; அவற்றுள்
(தானை போர்) வெற்றி தனித்தனி புகழ்வது
(தானை வஞ்சி) வாகை என (மூன்றும்)

— தொ.வி 268

மாற்றரை வென்று வாகை சூடுவதை
அகவலினால் அறைவது வாகைமாலை

— மு.வீ-யா ஒ 117

பொருபகையை வென்ற வாகைமாலை யணிவதைப்
புகழ்வது ஆசிரிய கவியா
வரும் வாகைமாலையாம் ...

—பி. தீ 17

## புகழ்ச்சி மாலை

பெண்டிரைப் புகழ்ந்து அமையும் இவ்இலக்கியம், ஆடவரைப் புகழ்ந்தெழுந்த நாம மாலைக்கு இணையாக ஏற்பட்டது போலும். பெண்டிரின் சீர்மையைக் கூறும் இதன் வடிவம் அகவல், கலியடிகள் மயங்கி இயன்ற வஞ்சிப்பாவாம். பெருமகிழ்ச்சி மாலை என ஒரு தனி யிலக்கியத்தைச் சில பாட்டியல் தருகின்றன. பொருண்மையால் இவ் இரண்டும் ஒப்புமையுடையன.

புரிந்த மயக்கஅடி வஞ்சியால் பொய்தீர்
திருந்து இழையார் சீர்பேர் சிறக்கத்-தெரிந்து உரைத்தான்
மன்னும் புகழ்ச்சி நன்மாலையாம் ...

— வெ.பா-செ 35

பாதம் பல மயங்கும் வஞ்சி ...
... ... உரைத்த அச் செய்யுளினால்
மாதரை ஏத்தில் புகழ்ச்சி நன்மாலை

— ந. பா-செ 23

... ... ... வஞ்சி
பேசு குணப் பேர் அடுக்கி மடவார்க்கு ஓதில்
பெரும் புகழ்ச்சி மாலை ...

—சி.பா-ம 9

மயக்க அடிபெறு வஞ்சிப் பாவால்
வியத்தகு நல்லார் விழுச்சீர் உரைத்தல்
புகழ்ச்சிமாலை ...

—இ. வி 866

புகழ்ச்சி மாலையாம் பூங்குழலாரை
இகழ்ச்சியில் குலம் இயை வஞ்சி பாடல்

—தொ.வி 269

அகவல்அடி கலியடியும் மயங்கிய
வஞ்சியின் அரிவையர் மாண்பை உரைப்பது
புகழ்ச்சி மாலையின் பொருள் ஆகும்மே

— மு.வீ-யா.ஒ 96

சிலது அகவல் அடியுடன் கலியடி மயங்கி வஞ்
சிப்பாவினுல் மாதர்கள்
சீர்மையைக் கூறல் புகழ்ச்சியில் மாலையாம்

—பி.தீ 12

## வரலாற்று வஞ்சி

வஞ்சி வரலாறு எனவும் குறிக்கப் பெறும் இதன் விளக்கம் கருத்து வேறுபாட்டுடன் அமைகின்றது.

அரசரின் குலவழி—வரல் ஆறு வஞ்சிப்பாவில் உரைப்பது இவ் இலக்கியப் பொருண்மை என்ற கருத்துக் காணப்படுகின்றது. தானையின் இயல்புரைப்பது என்பதுவும் உண்டு. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கும் பொருந்துமாறு பாடல் எனும் நிலையினையும் காண்கிறோம்.

... ... தையால்!
வழிஉரைத்தல் வஞ்சி வரலாறும் ...

—வெ.பா-செ 37

வரலாற்று வஞ்சி பல வரலாறு ஓதல்

— பிர 18

,, ,, ,,

—சி.பா-ம 13

... வரலாற்று வஞ்சி
ஞாலமேல் தானை நடப்பது சொல்லின்

— இ.வி 869

வரலாற்று வஞ்சியாம் வல்அறம் முதல் நான்கும்
வருமாறு உரைத்து வஞ்சி பாடலே

—தொ. வி 271

விழுமிய குலமுறை பிறப்பு மேம்பாட்டின்
பல சிறப்பு இசையையும் வஞ்சிப்பாவால்
வழுத்தல் வரலாற்று வஞ்சியாம் என்ப

—மு.வீ-யா.ஒ 111

பார்த்து நற்குலமுறை பிறப்பு மேம்பாட்டுடன்
பலசிறப்புங் கீர்த்தியும்
புதிய வஞ்சிப்பாவினுல் தொகுத்தே புலவர்
புகரின் வரலாற்றுவஞ்சி

—பி.தீ 15

## தொகை வெண்பா

நவநீதப் பாட்டியல் மட்டுமே கூறும் இவ்வகை, பயிலும் பாவகையாலும் வரும் பாடல் எண்ணிக்கையாலும் உருப்பெற்றுள்ளது. ஏதேனும் ஒரு பொருண்மேல் ஐம்பது, எழுபது அல்லது தொண்ணூறு வெண்பாக்கள் வரல் தெரிகின்றது.

... ... மற்ற வெண்பா
ஒத்தான ஐம்பது எழுபது தொண்ணூறும் பேர் பெற்றதாய்
இத் தாரணியிற் புலவர் எல்லாரும் இயம்புவரே

— ந.பா-செ 13

## தூது

தமிழ் மொழியில் மட்டுமன்றிப் பல மொழிகளிலும் பரந்து வழங்கும் இலக்கிய வகை இது. 'சந்தேசம்' எனும் பெயரில் வழங்குகின்றது.

புறப்பொருளில் வரும் தூதிலிருந்து மாறுபட்டு, அகப் பொருட்கே உரியதாய் வரும் இது, தனி யிலக்கியவகையாக இடைக் காலத்தில் உருப்பெற்று மிகுதியான வளர்ச்சிபெற்றுள்ளது.

கலிவெண்பாவினல், காதலுற்ற ஆடவனோ பெண்ணோ உயர் திணை அஃறிணைப் பொருள் ஒன்றனை அன்புற்றோர்பால் செய்தி கூறும் முகமாக அனுப்புதல் இத் தூது இலக்கியமாம்.

... ... கலிவெண்பா தூது

— ந.பா-செ 20

இருதிணையுடன் அமை அயலை உரைத்துத்
தூது செல விடுவது தூது, இவை கலிவெண்
பாவினல் விரித்துப் பகர்வது மரபே

—பிர 15

இருதிணையை விடல் தூது ...

—சி.பா-ம 11

பாயிறருங் கலிவெண்பாவினுலே
உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூதுஎனப்
பாட்டியல் புலவர் நாட்டினர் தெளிந்தே

—இ.வி 874

ஆணும் பெண்ணும் அவரவர் காதல்
பாணன் முதலிய உயர்திணையோடும்
கிள்ளை முதலிய அஃறிணையோடும்
சொல்லித், தூதுபோய் வா என்னக்
கலிவெண்பாவால் அறைவது தூது

—மு.வீ-யா.ஒ 151

## அரசன் விருத்தம்

அரசனைச் சார்ந்து வரும் பலஇலக்கியங்களில் இதுவும் ஒன்று. பொருண்மைப் பரப்புப் பற்றிய கருத்தில் பாட்டியல்களுக்கிடையே சிறு வேறுபாடு அமைகின்றது. மலை, நீர், நாடு, நிலம் ஆகிய வற்றின் வருணனையும், அரசனின் தோள் மங்கலம், வாள் மங் கலம் ஆகியனவும் பத்துக் கலித்துறை, முப்பது விருத்தம், கலித் தாழிசை ஆகியவற்றில் அடங்கி வருகின்றன.

அரசன் விருத்தம், கலித்துறை ஈரைந்து அகன்மலைமேல்
விரவிய நாடு நகர்ச்சிறப்பாய விருத்தம் முப்பான்
உரைசெய் கலித்தாழிசையும் வாண்மங்கலம் ஓதுவது
புரவலராயவர்க்கு ஆம் என்று உரைப்பர் புலவர்களே
— ந.பா-செ 26

கலித்துறை பத்தும் கலித்தாழிசையும்
விருத்தம் முப்பதும் வெற்பு நீர் நாடு
வருணனையொடு நிலவருணனைதாமும்
வாள்மங்கலமும் தோள்மங்கலமும்
அறைகுவது அரசன் விருத்தம் ஆகும்
— மு.வீ-யா.ஒ 142

பத்துக் கலித்துறையும் முப்பது விருத்தமும்
பகர் கலித்தாழிசையுமாய்ப்
பகர் நாடு மலை கடல் நிலவருணனை நீடு
பரவு தோள் வாள்மங்கலம்
பெற்றிடப் பாடி முடிவேந்தர்க்கு உரைப்பதாய்ப்
பேசல் அரசன் விருத்தம் ...
—பி.தி 24

## உலா மடல்

கனவில் கண்டு இன்புற்ற மாதைப் பெறுவதற்காக மடலேறத் துணிதல் பொருண்மையாகக் கலிவெண்பாவில் இயலுகின்றது இவ் இலக்கியம்.

தருண நன் மாதை ஓர் தலைவன் கண்டு
உறுப்பு நலன் உவந்து உட்குறிப்பு உரைத்தும்
கனவினில் சேர்ந்தும் காமுற இணையான்
துணிவன் மடல்எனச் சொல்லுவது உலாமடல்
—பிர 15

சொன்ன மாதரைக் கண்டு கனவில் சேர்ந்தோன்
துணிவன் மடல் என்றது உலாமடல் ...
—சி.பா-ம 11

கனவின் ஒருத்தியைக் கண்டு புணர்ந்தோன்
நனவின் அவள் பொருட்டாக நானே
ஊர்வேன் மடல்என்று உரைப்பது உலாமடல்

— இ. வி 857

கனவில் ஒருத்தியைக் கண்டு கலவி
இன்பம் நுகர்ந்தோன் விழித்த பின் அவள்
பொருட்டு மடலூர்வேன் என்பது கலிவெண்
பாவான் முடிப்பது உலா மடல் ஆகும்

— மு.வீ-யா.ஒ 125

கனவின் ஒருமாதினைக் கண்டு அணைந்து இன்பங்
கலந்து பின் விழித்து மாதைக்
காணுமல் அவள் பொருட்டாக மடலூர்வதைக்
கலிவெள்ளையால் அரற்ற
லினை உலாமடலாம் ...

— பி.தீ 20

... ... கனவினிற் சேர்
மங்கையரான் மடல்கூற்று உலாமடல் வெண்பாவாம்

— சுவாமி 168

## அனுராக மாலை

முன் இலக்கியத்துடன் தொடர்புற்று அமைகின்றது இது. தலைவன், கனவில், தலைவியைக் கண்டு இன்பம் துய்த்த செய்தியினைத் தன் இன்னுயிர்ப் பாங்கனுக்கு எடுத்து மொழிதல் இங்குப் பொருண்மையாகின்றது. முற்கூறிய இலக்கியம் போன்றே இதுவும் கலிவெண்பாவால் அமைகின்றது. அது நேரிசையாக இருத்தல் வேண்டும் என்பது சிறப்பாகக் குறிக்கப்படுகின்றது.

பாங்கற்குப் புணர்ந்த கனவினுல் தனது
இன்னல் வருணித்தல் அனுராக மாலை

— பிர 15

... ... ...பாங்கற்குள்
இன்னல் உரைத்திடுதல் அனுராக மாலை

- சி. பா-ம 11

கனவின் ஒருத்தியைக் கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து
இனிதில் புணர்ந்ததை இன்னுயிர்ப் பாங்கற்கு
நனவின் உரைத்தல் அனுராக மாலை

— இ. வி 864

கனவில் ஒருத்தியைக் கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து
இனிமையுறப் புணர்ந்ததைத் தன் இன்னுயிர்ப்
பாங்கற்குத் தலைமகன் பகர்ந்ததாக
நேரிசைக் கலிவெண்பாவான் நிகழ்த்துவது
அனுராக மாலையாம் ஆயுங்காலே

மு.வீ-யா.ஒ 87

தலைவன் ஒரு மங்கையைக் கனவில் கண்டு மயல்
 தரும் அவட்கு இனிமையுறவே
காவின் புணர்ந்ததைத் தன்னுயிர்ப் பாங்கனைக்
 கருதியே நேரசை யெனும்
கலிவெள்ளையால் கூறல் அனுராகமாலையாய்க்
 கவிஞர்கள் உரைப்பார்களே

— பி. தீ 9

உற்றது உரைப்பு அனுராக மாலை

—சுவாமி 168

## மாலை

இதன்கண் பல வகைகள் அமைகின்றன எனலாம். பல செய்யுட்கள் தொடர்ந்து வரல் காரணமாகவும், பல அடிகள் தொடர்ந்த பாவுருக்கொண்ட இலக்கியமானமையாலும், மலர்ப் பெயரால் அமைந்தமையாலும் 'மாலை' எனும் பெயரில் பல இலக்கியங்கள் காணப்படுகின்றன. பொருளாலும் வடிவாலும் வேறுபடும் இவை, பெயர்நிலையால் ஒரு கூறு ஒப்புமைகாட்டி நிற்கின்றனவே யன்றி வேறல்ல.

எப்பொருள் மேலும் வஞ்சிப் பாவால் வரும் மாலைகள் உள.

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகியவற்றினைத் தனிப் பொருண்மையாக்கி, வெண்பா அல்லது கலித்துறை யாப்பில், முப்பது, நாற்பது, எழுபது, தொண்ணூறு, நூறு செய்யுட்கள் வருவதும் உண்டு. இம் மாலைகள் பொருளாலும் எண்ணாலும் பெயர் பெறுகின்றன. ஐந்திணை ஐம்பது, ஏர் எழுபது போன்றன இங்கு நினைத்தற்குரியன. 'நானாற்பது' என வொரு தனியிலக்கியவகை பற்றிப் பாட்டியல் பேசுவதும் இங்கு இணைத்தே எண்ணற்பாலது.

மூன்றும் வகையாகப், புறப் பொருள் துறைகள் தனித்தனியிலக்கியமாக வளர்ந்து உருவாகிய மாலைகளை நினைக்கலாம். வஞ்சி மாலை, வாகைமாலை போன்றுள்ள இலங்கியங்கள் பற்றிய பாட்டியற் செய்திகளை ஏற்கெனவே கண்டோம். போர்க்கெழு வஞ்சியும், வரலாற்று வஞ்சியும், தானைமாலையும் குறித்து எண்ணினோம். இதுபோன்றே, வெட்சி, கரந்தை, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை ஆகியனவும் தனித் தனி யிலக்கியமாக உருப் பெற்றுள்ளன. பூச்சூடிப் போருக்குச் சென்றமையால் அதனைப் பாடும் இலக்கியப் பெயர்கள் 'மாலை' எனும் கூறுடன் அமைதல் பொருந்தும். வீரவெட்சிமாலை, கரந்தை மஞ்சரி எனும் பெயர் மாறுபாடுகள் பி. தீ போன்றவற்றில் உண்டு.

... ... ...மற்று
மொழியுரைத்தல் தன்பெயரா மூண்டு

—வெ.பா-செ 37

கருது பொருள் இடம் காலம் தொழிலின்
முப்பான் நாற்பான் எழுபான் தொண்ணூறு
நூருன் வெண்பாக் கலித்துறை யிதனுல்
மன்னும் அவ் எண்ணுல் மாலை மஞ்சரி
காஞ்சிமாலை முல்லைக்கலி சதகம் என்று
இயலும் செய்யுட்கு ஏற்ற பெயரே

—பிர 16

வெட்சி நிரை கொள்ளல், தவிர்தல் கரந்தை
மாற்ருர் பாற்செலல் வஞ்சி, ஊன்றல்
காஞ்சி, மதிலைக் காத்தல் நொச்சி,
சுற்றல் உழிஞை, தும்பை பொருதல்,
வென்று மிகுபுகழ் விளைத்தல் வாகை,
தானையை விரித்தல் தானை மாலை,
இவை ஒன்பதும்
எப்பாட்டாலும் முப்பஃது இயம்பின்
அப்பெயர் வர்க்கத்து அவ்வம் மாலை

— ,, 17

பன்னு பொருள் இடம் காலம் தொழில் முப்பான் நாற்
பான் எழுபான் தொண்ணூறு நூருல் வெண்பா
மன்னு கலித்துறை யாதல் புகலப் பேரான்
மாலையுமாம் எண்ணுலும் மருவும் பேராம்

— சி.பா-ம 11

மகிழ்நிரை கொள்வது வெட்சி, கரந்தை மீட்டல்;
மாற்ருர் பாற் செலல் வஞ்சி, ஊன்றல் காஞ்சி;
பகர்மதிலைக் காக்கும்அது நொச்சி; சுற்றிப்
படைவளைத்தல் உழிஞை; பொரல் தும்பை; வென்று
புகழ்படைத்தல் வாகை; அது மாலைப் பேரால்
போற்றுவது மாலையுமாப் புகல்வர்

—,, 12

விரித்து ஒருபொருளை விளம்பின் அப்பெயராம்

— இ.வி. 869

ஆனிரை கவர்ந்து வருபவன் வெற்றி
விளம்புதல் வீர வெட்சிமாலை

—மு.வீ-யா.ஒ 108

தழுவார் கொண்ட தம்நிரை மீட்போர்
கரந்தை புனைந்து கனன்று உலவையிற் செலீஇ
மீட்பதைக் கூறல் வெற்றிக் கரந்தை

— ,, 109

காஞ்சி புனைந்து கருதார் ஊர்ப்புறம்
ஊன்றலை உரைப்பது காஞ்சிமாலை

— மு.வீ-யா.ஒ 113

கோலிய மாற்றார் கோடல் இன்றி
நொச்சி வேய்ந்து அகல்எயில் நோக்குந் திறனை
வழுத்துதல் நொச்சிமாலையாகும்

— ,, 114

மாற்றார் ஊர்ப்புறம் வளைதர உழிஞை
வனைந்து காலாள் வளைப்பது கூறல்
உழிஞை மாலையாம் உணருங் காலே

— ,, 115

தும்பை வேய்ந்து ஒனாரொடு சூழ்ந்து பொருவது
சொல்வது தும்பை மாலையாகும்

— ,, 116

மிகு சுத்த வீரன் மாற்றார் புரஞ்சென்று பசு
வேட்டு நிரை கவருதற்கு
வெட்சியின் மாலை சூடியவண்ணம் ஏகிய
மீட்டு ஆவின் நிரைகவர்ந்தே
இகல் துறந்து ஊர்வருதலைவன்மேல் பாவினுக்கு
இயை தசாங்கம் பொருந்த
இசை வெற்றியைக் கருதியே பாடல் அது வீரம்
எனும் வெட்சி மாலையாமே

— பி. தி 14

மாற்றலர்கள் கொண்டநிரை மீட்போர், கரந்தைபூ
மாலை சூடிப் போகி மீள்
வகையினை விரித்தோதன் வெற்றிக் கரந்தையின்
மஞ்சரி யெனக் கூறுவர்...

— ,, 15

அலர் காஞ்சி மாலைசூடிப் பகைவர் ஊர்ப்புறத்
ததின் ஊன்றல் காஞ்சிமாலை;
கமையாய்ப் புறத்தகத் துன்றி வலிபேசிடுங்
கள்ளர்கட் கோடலின்றிக்
கந்த நொச்சியின் மாலை சூடித் தன்மதில் காத்தல்
கழறல் நொச்சியின் மாலையே ...

— ,, 16

மருவலர்கள் ஊர்ப்புறம் சூழவே உழிஞைப்பூ
மாலை சூடித் தானையான்
மதியினை யூர் வளைந்தாலென வளைப்பதை
வழுத்தலே உழிஞைமாலை;

பொருது மாற்றலரோடு தும்பை மாலிகை வேய்ந்து
பொருதுவது தும்பைமாலை ...

— பி.தீ 17

## தொகைச் செய்யுள்

இலக்கியங்களைத் தொகைநிலை-தொடர்நிலை எனப் பகுக்கும் இயல்பால், இது தொகைநிலையில் அடங்கல் வேண்டும். தொடர்நிலைச் செய்யுளின் இலக்கணம் கூறுமிடத்து, இதுவும் ஒரு வகையாக அடங்கல் பொருத்தமின்று.

சங்க எட்டுத் தொகையில் உட்படுகின்ற நெடுந்தொகை (அகநானூறு), குறுந்தொகை, கலித்தொகை எனும் தொகை இலக்கியங்களே இத்தகைய விளக்கத்திற்கு அடிப்படையாக அமைந்திருக்கின்றன என்பது தெளிவு.

நெடுந்தொகை குறுந்தொகை கலித்தொகை என்னப்
படும் தொகைச் செய்யுள் பற்பல ஆகும்

—இ. வி 817

நெடிலடிப் பாவால் தொகுத்தது நெடுந்தொகை
குறளடிப் பாவால் தொகுத்தது குறுந்தொகை
கலியில் தொகுத்தது கலித்தொகை போல்வன
தொகைநிலைச் செய்யுளெனச் சொலப்படுமே

—மு. வீ-யா.ஒ 120

நெடிலடிச் செய்யுள் தொகுத்தது நெடுந்தொகையும்,
நேர் குறிலடிச் செய்யுளால்
நிரவித் தொகுத்தது குறுந்தொகை, கலிப்பாவின்
நேர் தொகுத் தொகையுமாய்
முடிவதே போல்வன தொகைநிலைச் செய்யுளாம்

—பி. தீ 18

## காப்புமாலை

நூலுக்கு முன் அமையும் காப்புப் பாடல்களை இங்கு நினைக்கலாம். புறநிலை வாழ்த்திலிருந்து பிரிந்த தனிக்கூறு எனவும் கருதலாம். 'காக்க' என இறையை வேண்டுவதே அடிப்படை.

காப்பு மூன்று ஐந்து ஏழ் காப்புமாலையாம்

—இ. வி 832

கடவுள் காத்தலாக ஒருமூன்று
ஐந்து ஏழானும் அறைவது காப்பு
மாலையெனப் பெயர் வைக்கப்படுமே

—மு.வீ-யா.ஒ 100

அரிய தெய்வங் காத்தலாக மூன்று ஐந்து ஏழின்
அறை செயுள் காப்புமாலை ...

—பி. தீ 13

## வேனில் மாலை

பெரும் பொழுதுகளில் ஒன்றான வேனிற் காலத்தைப் பாடுவது பொருண்மை. வேனில் என்பதால் இள, முதுவேனில்கள் இணைக்கப் பெறுகின்றன.

வேனிலைப் பாடுதல் வேனில் மாலை

— இ.வி 833

வேனிலொடு முதிர்வேனிலும் புனைந்து
விளம்புதல் வேனில் மாலையாகும்

—மு.வீ-யா.ஒ 101

அருவேனில் முதுவேனிலைச் சிறப்பித்து ஓதல்
ஆகுமே வேனில்மாலை ...

— பி.தீ 13

## வசந்தமாலை

வேனிலுக்கு மாலை அமைந்து விட்டதால், 'வசந்தம்' என்பது காலத்தைக் குறிக்காது, தென்றலைக் குறிக்கின்றது எனக் கொள்ள இடம் உண்டு. இன்பத்திற்குரிய பொழுதான (இள) வேனில் பாடப் படல் போன்றே இன்பம் பயக்கும் இளந்தென்றலும் பாப் பொருண் மையாகின்றது.

வசந்த வருணனை வசந்த மாலை

—இ.வி 836

தென்றலைப் புகழ்ந்து செப்புதல் வசந்த
மாலை எனப் பெயர் வைக்கப்படுமே

—மு. வீ-யா.ஒ 102

விரவு இளந்தென்றலை வருணித்து உரைப்பதே
மேலாம் வசந்தமாலை ...

— பி.தீ 13

## பதிற்றந்தாதி

அந்தாதி என்பது இலக்கியக் கூறாகவும் இலக்கிய வகையா கவும் அமைகின்றது. கலம்பகம், நான்மணிமாலை, மும்மணிக் கோவை போன்ற இலக்கியங்களில், செய்யுட்கள் தம்முள் அந்தாதித் தொடர்புற்று அமைகின்றன. ஒலியந்தாதி கலியந்தாதி போன்றன இவ்வமைப்பாலும் பெயர் பெற்றன. ஏதேனும் ஒரு குறிப்பிட்டயாப்பில் பல பாடல்கள் அந்தாதித் தொடர்புடன் அமைந்து தனியிலக்கியம் உருவாக்கலாம்.

வெண்பாவிலோ அன்றிக் கலித்துறையிலோ பத்துப் பாடல் அந்தாதித்து வருவதே பதிற்றந்தாதி. இதே நிலை நூறு பாடலுக்கு வளரும்போது, நூற்றந்தாதி எனப் பெயர் கொடுக்கின்றனர்.

வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந்தாதி

— இ.வி 841

ஈரைந்து வெண்பாக் கலித்துறை ஈரைந்து
அரும்பொருள் புலப்பட அந்தாதித்துப்
பாடுவன பதிற்றந்தாதி யாகும்

—மு.வீ-யா.ஒ 122

பத்து வெண்பாக் கலித்துறை பத்துடன் பொருள்
பற்றிடுந் தன்மைதோன்றப்
பலசிறப்புற்ற அந்தாதியாய்ப் பாடுவது
பண் பதிற்றந்தாதியாம் ...

—பி.தீ 19

## நூற்றந்தாதி

அந்தாதித் தொடர்புடன் வெண்பா அல்லது கலித்துறை யாப்பில் நூறு செய்யுட்கள் வருவது இது. பதின்பத்தந்தாதி என்ற பெயர்நிலையைச் சுவாமிநாதம் அமைத்துப் பத்துப் பாடலுக்கு ஒரு சந்தம் என இலக்கணம் வகுக்கின்றது.

நூறு வெண்பா நூறு கலித்துறை
கூறுதல் நூற்றந்தாதிக் கோளே

—இ.வி 842

... வெள்ளை அருங்கலித்துறை என்று
அவை செறி நூறு அந்தாதியாய் வருமே

—தொ.வி 280

வெண்பா நூற்றினுலேனும் கலித்துறை
நூற்றினுலேனும் அந்தாதித்து உரைப்பது
நூற்றந்தாதியாம் நுவலுங்காலே

—மு.வீ-யா.ஒ 123

வெற்றி வெண்பா நூறினுலும் கலித்துறையின்
விண்டுவந் நூறதேனும்
வினவி அந்தாதித்து உரைத்தல் நூற்றந்தாதி

—பி.தீ 19

நூறு, சார்ந்து பப்பத்து ஓர் இசையாம் பதின்பத்து அந்தாதி

— சுவாமி 170

## சதகம்

'நூறு' எனப் பொருள் தருவது சதம் என்ற சொல். ஏதேனும் ஒருபொருள்மேல் நூறு செய்யுள் இவ் இலக்கியத்தை உருவாக்கும். சதக இலக்கியங்கள் இதினின்றும் வேறுபட்டன.

விளையும் ஒருபொருள்மேல் ஒருநூறு
தழைய உரைத்தல் சதகம் என்ப

— இ.வி 847

அகப்பொருள் ஒன்றன்மேலாதல் புறப்பொருள்
ஒன்றன்மேலாதல் கற்பித்து ஒருநூறு
செய்யுள் உரைப்பது சதகமாம் என்ப

— மு.வீ-யா.ஒ 156

பயிலும் ஓர் பாட்டாய் நூறு உரைப்பதுதான் சதகம்

— சுவாமி 168

## எண் செய்யுள்

பாடல் தலைவனின் ஊரினையோ அன்றிப் பெயரினையோ சிறப்பித்துப் பத்துமுதல் ஆயிரம் பாடல் பாடுவது எண் செய்யுள். பாடப்பெறும் செய்யுள் எண்ணிக்கையால் இலக்கியம் குறிக்கப்படல் இங்கு இயல்பு ஆனமையால் இப்பெயர் தரப்படுகின்றது.

ஊரையும் பெயரையும் வெண்பாவாலும், நேரிசை இன்னிசை வெண்பாக்களாலும் இயம்பும் இலக்கியவகைகள் வேறு இருப்பதால் இப்பெயர் தரப்பட்டிருக்கலாம். ஈங்கோய்மலை எழுபது என்பதை இவண் நினைக்கலாம்.

ஊரையும் பெயரையும் உவந்து எண்ணாலே
சீரிதிற் பாடல் எண்செய்யுள் ஆகும்

—இ.வி 848

பாட்டுடைத் தலைவன் ஊரும் பெயரும்
பத்துமுதல் ஆயிரம் அளவும் பாடி
எண்ணால் பெயர்பெறல் எண்செய்யுள் ஆகும்

— மு.வீ-யா.ஒ 119

ஓர்த்திடும் பாட்டுடைத் தலைவன் ஊர்ப் பெயரினை
எடுத்தும் எண்ணால் பெயர்பெற
ஈரைந்து கவிமுதல் ஆயிரம்வரை சொல்லல்
எண்செய்யுள் ஆகுமன்றே

— பி.தீ 15

## ஐந்திணைச் செய்யுள்

இலக்கணங்களும் பழந்தமிழ் இலக்கியங்களும் ஐந்திணை உணர்வினைக் குறித்ததும், உணர்வுடன் அமைந்ததும் மிகத் தெளிவு. குறிஞ்சி முதலிய ஐந்து திணையையும், அவற்றின் உரிப்பொருள் தெரிந்து தோன்றும் வண்ணம் பாடுகின்ற இது ஐந்திணைப்பா எனவும் குறிக்கப்படுகின்றது. வெண்பா, வஞ்சி, கலி, வ(ண்)ணம், அகவல் ஆகியனவற்றைப் பி.தீ யாப்பாகக் காட்டுகின்றது.

ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியனவற்றை இங்கு நினைக்கலாம்.

உரிப்பொருள் தோன்ற ஓரைந் திணையும்
தெரிப்பது ஐந்திணைச் செய்யுளாகும்

—இ.வி 849

புணர்தல் முதலிய ஐந்து உரிப்பொருளும்
அணிபெறக் குறிஞ்சி முதலிய ஐந்திணை
யினையும் இயம்புவது ஐந்திணைப் பாவே

— மு.வீ-யா.ஒ 82

வரு புணர்தல் முதல் ஐந்துரிப்பொருள் ப்ரகாசிக்க
வரையாதி யையைந்திணை
வகுத்துச் சிறப்பித்தல் ஐந்திணைச் செய்யுள் வெள்ளை
வஞ்சி கலிவணம் அகவலே

— பி.தீ 8

## நானாற்பது

நாற்பது வெண்பாக்களால் அமைவதால் இவ் இலக்கியவகை இப்பெயர் பெற்றிருத்தல் வேண்டும். இதனைத் தனியாக நினையாது எண் செய்யுள், தொகை வெண்பா போன்றவற்றோடு சார்த்தி வைத்திருக்கலாம். காலம், இடம், பொருள் கருதி வரும் என்பதால் 'மாலை'யில் கூட அடக்கியிருத்தல் இயலும்.

இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது என நான்கு நூற்கள் நிலவியமையே, நானாற்பது என இலக்கண விளக்கம் கூறுவதற்கு அடிப்படை போலும்.

காலம் இடம் பொருள் கருதி நாற்பயன்
சால உரைத்தல் நானாற்பதுவே

— இ.வி 851

இடம்பொருள் காலம் இவற்றின் ஒன்றனை
வெண்பா நாற்பதால் விளம்பல் நாற்பது

— மு.வீ-யா.ஒ 152

உற்றிடும் காலம் இடமும்
பொருளும் ஆகிய இவற்றுள்ளில் ஒவ்வொன்றினைப்
பொருத்தி நாற்பது வெள்ளையாற்
புகல்வதே நாற்பதாம்...

—பி.தீ 26

## மணிமாலை

இருபா இருபஃது இரட்டைமணிமாலை, இணைமணிமாலை என்பவைகளுடன் மும்மணிமாலை, நான்மணி மாலைகள் பற்றிய செய்திகள் 'மணிமாலை' எனும் தனியிலக்கிய வகையின் தேவை பற்றிய ஐயத்தை எழுப்புகின்றன.

வெண்பா, கலித்துறை என யாப்பு நிலையில் மணிமாலை, இரட்டை மணிமாலை, இணைமணி மாலைகளினின்றும் வேறுபடாத போதும், பயிலும் செய்யுள் எண்ணிக்கையில் மாறுபடுகின்றது. இருபது வெண்பாவும் நாற்பது கலித்துறையும் இணைந்து இந் நூலை ஆக்குகின்றன. பாடப்படும் பொருண்மைக்கு வரையறை கருதப்படவில்லை.

மணிமாலை வெண்பாவகை நாலைந்துடன்
இணையாய்க் கலித்துறை இரட்டைப் பாடலே

—தொ. வி 279

எப்பொருள் மேலும் வெண்பா இருபதும்
கலித்துறை நாற்பதும் கலந்து வருவது
மணிமாலையாகும் வழுத்துங் காலே

— மு.வீ-யா.ஒ 95

சொல்லும் எப்பொருளின் மேலும்
தூய வெண்பா இருபஃது நாற்பதுகலித்
துறை விரவின் மணிமாலையாம்

— பி.தி 12

## வருக்கக் கோவை

அகரம் முதலாகிய மொழி முதலில் வரும் எழுத்துக்களால் ஆரம்பிக்கும் கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களின் கோவையாக அமைகின்றது வருக்கக்கோவை. செய்யுட்கள் 'காரிகை'யாக அமைவதோடு இலக்கியத்தின் பொருண்மையும் மாதரைப் பாடுவதாக அமைகின்றது.

... ... உயிரும் மெய் வருக்கத்து
அடைவில் வருபொருள் துறையில் கலித்துறை
அகப்பொருள் அமைய உலகெலாம் மதிப்ப
வழுத்தும் இயல்பது வருக்கக் கோவை

—பிர 7

அகரம் முதலாகியவாம் அக்கர
வருக்க மொழிக்கு முதல்வரும் எழுத்து
முறையே கட்டளைக் கலித்துறை ஆக
வழுத்துவது, அதுவே வருக்கக்கோவை

—மு.வீ-யா.ஒ 83

... ... ... அகரம் முதல்
உறும் எழுத்துக்கள் தம்மில்
உயிர் முதன்மொழிக்கு உரிய அக்கரத்து ஆதியாய்
உயர் காரிகைத் துறையினுல்

நெரிசுரிக் குழன்மாதர் காட்சி முதலாய்க் கூறின்
நிலை வருக்கக் கோவையாம்...

— பி. தீ 7

வழுவில் அகப்பொருளின் ஏற்பன அகராதியதாய்
வருக்கம் பாடுதல் வருக்கக் கோவை, கலித்துறையாம்

— சுவாமி 167

## பெருமகிழ்ச்சிமாலை

புகழ்ச்சி மாலை எனும் இலக்கிய வகையோடு ஒப்புமைகாட்டி நிற்கின்றது, பெருமகிழ்ச்சிமாலை. பெண்ணைப் புகழ்வது புகழ்ச்சி மாலையின் பொருளாக அமைந்தது. தலைவி யொருத்தியின்எழில், குணம், ஆக்கம், சிறப்பு இவற்றை எடுத்து மொழிதல் பெருமகிழ்ச்சி மாலையின் பொருண்மையாம்.

குணப்பெயர் அடுக்கிக் கொம்பு அனையார்க்கு
வஞ்சியின் அகம் மிக மகிழ உரைப்பது
பெருமகிழ்ச்சி மாலை ...

— பிர 13

தெரிவை எழில் குணம் ஆக்கம் சிறப்பை உரைப்பது
பெருமகிழ்ச்சிமாலை எனப் பெயர்பெறுமே

—மு.வீ-யா.ஒ 97

பெறு தலைவி அழகு குணம் ஆக்கம் சிறப்பு ஓதல்
பெருமகிழ்ச்சியின் மாலையே

—பி.தீ 12

## தண்டகமாலை

முன்னூறு வெண்பாவில் இவ் இலக்கியம் உருப்பெறுகின்றது எனும் செய்தி மட்டுமே கிடைக்கின்றது.

வெண்பாவான் முன்னூறு விரிப்பது
தண்டக மாலையாம் சாற்றுங்காலே

—மு.வீ-யா.ஒ 107

... ... ...வெண்பா முந்நூறுகவி
பாடல் தண்டக மாலையாம்...

—பி.தீ 14

## வாதோரண மஞ்சரி

முத்துவீரியமும், பிரபந்த தீபமுமே இவ் விலக்கிய வகையைக் குறிக்கின்றன. தோரண மஞ்சரி எனவும் இது பெயர் பெறுகின்றது. வஞ்சிப்பாவால் வரும் இப்பிரபந்தம் யானையொடு பொருது வென்றவரைப் போற்றி யமைகின்றது. கொல் யானையை அடக்கல், பொரும் யானையை அடக்கல் மதம் கொண்டோடும் யானையை அடக்கல் என்பன கருதப்படுகின்றன.

யானை வயப்படுத்தி அடக்கினவருக்கும்
எதிர் பொரும் யானையை ஈர வெட்டி
அடக்கின வருக்கும், அதட்டிப் பிடித்துச்
சேர்த்தவர்க்கும் வீரச் சிறப்பை
வஞ்சியாற் பாடுவதது வாதோரண
மஞ்சரி எனப்பெயர் வைக்கப்படுமே

— மு.வீ-யா.ஒ 118

... ...கொலைபுரி களிற்றினை
யடக்கினவருக்கும் எதிராய்
அடல்புரி களிற்றைச் சிதைத்து அடக்கினவர்க்கும்
அமைதல் விட்டு ஓடு களிறை
உரமுடன் பற்றிப்பிடித்து அடக்கினவர்க்கும்
உறும் வீரமும் சிறப்பும்
ஓது வஞ்சிப்பாவினுல் சொல்வர் தோரணத்து
உலவு மஞ்சரியாகுமே

—பி. தீ 17

## புறநிலை

புறநிலை வாழ்த்துப் பொருண்மையே இங்கு அமைகின்றது. பாப்பொருண்மை பற்றி நினைக்குமிடத்துக் காப்பியரும் இதனைக் குறித்து விளக்கினுர். தனி யிலக்கிய வளர்ச்சிநிலை இங்கே காணப் படுகின்றது.

'நீ வழிபடும் இறைவனே நின்னருகு நின்று நின்னைக் காப் பாற்ற நின் வழி, தலைமுறைகள் சிறப்பதாக' என வேண்டுவதே புறநிலை வாழ்த்தாம்.

நீ வணங்கு ஒருவன் நினைப் பாதுகாப்ப
நின்னுடைய வழி வழி நீளுவதாக
என இயம்புவது புறநிலை என்ப

—மு.வீ-யா.ஒ 137

நீ வணங்குந் தெய்வமே
நினைப் பாதுகாப்ப நின் வழிவழியும் மிகுவதாய்
நிகழ்த்தல் புறநிலையாகுமே

— பி தீ 21

## தசாங்கத்து அயல்

தசாங்கப்பத்து எனும் இலக்கிய வகையோடு ஓரளவு ஒத்து அமைகின்றது இது. பத்துவெண்பாவால் அரச உறுப்புப் பத்தினைப் பாடல் தசாங்கப்பத்து. ஆசிரிய விருத்தம் பத்தாலோ, ஆசிரியம்

ஈரேழாலோ அறைதல் தசாங்கத்தயல். பொருண்மையால் அன்றிப் பாவடிவால் ஏற்பட்ட வகை மாறுபாடு இங்கு அமைகின்றது.

அரசன் தசாங்கம் ஆசிரிய விருத்தம்
ஐயிரண்டு அறைவது தசாங்கத்து அயலே

—மு.வீ-யா.ஒ 141

பெறும் அன்பன் அங்கத்தை ஆசிரியம் ஈரேழு
பேசல் தசாங்கத்தயல் ..

— பி தீ 24

## பவனிக்காதல்

முத்துவீரியம், சுவாமிநாதம் என்பன மொழியும் இவ் இலக்கிய வகை ஓரளவு தனித்த இயல்புடையது. இது உலாவோடு சில சார்பு காட்டி வருகின்றது. உலாவரும் தலைவனைக்கண்டு, பல பருவ மகளிரும் காமுற்று வருந்தலை உலா, புலவர் கூற்றாகத் தருகிறது. இப் பவனிக் காதல், உலாவரும் தலைவனைக் கண்டு அன்புற்று வருந்திய தலைவியின் நேரடிக் கூற்றாக அமைகின்றது.

காமரும் உலாவல் காட்சியாலே
அடைந்த காமம் மிக்கால் அவற்றைப்
பிறரொடும் எடுத்துப் பேசி வருந்துதல்
பவனிக் காதலாம் பகருங்காலே

— மு.வீ-யா.ஒ 160

இயல் உலாவினில் ஆசை பிறரொடு சொற்று இரங்கல்
இவை பவனிக் காதல்

— சுவாமி 168

## எழுகூற்றிருக்கை

மிறைக் கவியில் ஒன்றாக யாப்பருங்கலத்திலேயே இப்பெயர் தரப்படுகின்றது. விருத்தியுரை யதனை விளக்குகின்றது. சம்பந்தர் தேவாரம் ஒரு திருவெழுகூற்றிருக்கையைத் தருகின்றது. இடைக் கால இலக்கிய வளர்ச்சியில் இது தனியிலக்கியப் பெருமையுற்றது எனலாம்.

ஒன்றுமுதல் ஏழுவரையுள்ள எண்கள் கூடியும் குறைந்தும் (பெரும்பாலும் இணைக்குறள் ஆசிரியப்பாவில்) வருவது இது. நாட்டு மக்கள் வாழ்வின் விளையாட்டிலிருந்து இது வளர்ந்துள்ளது.

கோதில் ஏழறை ஆக்கிக் குறுமக்கள்
முன்நின்றும் புக்கும் போந்தும் விளையாடும்
பெற்றியால் வழுவாமை, ஒன்று

முதல் ஏழீருய் முறையானே
இயம்புவது எழுகூற்றிருக்கை ஆகும்

—மு.வீ-யா.ஒ 162

## முதுகாஞ்சி

காஞ்சித் திணையின் இத்துறை நிலையாமை பற்றி யமைவது. தனி யிலக்கியமாக வளர்ந்துள்ளது. மார்க்கண்டேயனுர் காஞ்சி போன்ற இழந்த நூற்கள் இதற்குச் சான்ருகலாம்.

இளமை கழிந்து அறிவுமிக்கோர், இளமை
கழியாத அறிவின் மாக்கள் தமக்கு
மொழியப் படுவது முதுகாஞ்சி ஆகும்

— மு.வீ-யா.ஒ 166

## இயன்மொழி

இதுவும் ஒரு புறத்துறையின் வளர்ச்சியே. இயல்பு கூறி வாழ்த்தும் இயல்பான வாழ்த்து எனல் போதரும்.

குடியின் இயல்பும், குண இயல்பும், பாடல் தலைவன் இயல்பும், அவனது இயல்பான முடிவும் உயர்புலவன் வாயிலாக வரும் அரச வாழ்த்து இது.

இக்குடிப் பிறந்தோர்க்கு எல்லாம் இக்குணம்
இயல்பு என்றும், நீயும் அவற்றை உடையை
என்றும், இன்னோர் போல் நீயும் இயல்பாக
வீயென்றும், உயர்ந்தோர் எடுத்து மற்றுஅவனை
வாழ்த்துவதாக வழுத்தல் இயன்மொழி
வாழ்த்தாம் என்ன வழுத்தினர் புலவர்

—மு.வீ-யா.ஒ 167

## புறக்கோவை

சுவாமி நாதத்திற்கு மட்டும் உரியதாகச் சில இலக்கிய வகைகள் அமைகின்றன. அவற்றில் இதுவும் ஒன்று. அகச் செய்திகள் தொடர்ந்து அகப் பொருட் கோவை நூற்கள் அமைந்தது போன்று புறச் செய்திகள் தொடர்ந்து அமையும் வாய்ப்புக் கருதி இவ் இலக்கிய வகை ஏற்பட்டிருக்க வேண்டும்.

... புறமும்! தனித்தனி முற்றுரைத்தல் அவ்வக் கோவை

- சுவாமி 167

## விரகமாலை

உலா, பவனிக் காதல், இன்பமடல், வளமடல், அனுராக மாலை என்ற தொடர்ச்சியில் விரகமாலையையும் அமைக்கின்றது சுவாமி நாதம்.

... யாரொடும் தம்
மயல் உரைத்தலே விரக மாலை ...

—சுவாமி 168

## இரட்டை மணிக்கோவை-நான்மணிக் கோவை

மும்மணிக் கோவையை மட்டும் பிற பாட்டிலக்கண நூற்கள் கூற அதே அமைப்பு முறையைப் பின்பற்றி இரட்டைமணி, நான் மணிக் கோவைகளை அமைக்கின்றது சுவாமி.

பத்து வெண்பாப் பத்து அகவல் பாடலும் பின் கலிப்பாப்
பத்து உறலும் பின் வஞ்சி பத்து உறலும் அடைவே
நத்து இரட்டைமணிக் கோவை மும்மணியிற் கோவை
நான்மணிக் கோவையும் அவை நேர் கலப்பது
அந்தாதியுமாம்

– சுவாமி 169

## திக்கு விசையம்

பரணியைத் தொடர்ந்து இவ்வகையைப் பேசுகின்றது சுவாமி நாதம். அரசனின் வெற்றியை ஈரடிக் கொச்சகத்தில் (தாழிசை)பாடுவது இது.

... ... அப் பாவினிலே
குரிசில் வெற்றி பாடுதலே திக்குவிசையந்தான்

—சுவாமி 171

## காதல்

இடைக் காலத்து மிகுதியாகப் பயின்ற கூளப்பநாயக்கன் காதல் போன்ற இலக்கியங்கள் இதற்கு இலக்கணம் வகுக்க வாய்ப் பளித்திருக்கலாம்.

கொண்ட மயல் ஈரடிக் கண்ணியில் இசை காதலுக்கே

—சுவாமி 171

## வண்ணம்

எட்டுக்கலைகளால் ஆகிய வண்ணச் செய்யுட்கள் வருவதால் இவ்இலக்கியம் இப்பெயர் பெறுகின்றது. கலியந்தாதி, ஒலியந்தாதி என்ற இலக்கிய வகைகளோடு செய்யுளமைப்பால் ஒப்புமையுடையது இவ் இலக்கியம்.

தலைவனுக்கு நாற்கலையும் பொருட்கு உறை நாற்கலையும்
சந்தம் இட்டு மும்மூன்று துள்ளலும் தொங்கலுமாம்
கலைகள் எட்டாம் வண்ணம் ...

— சுவாமி 172

## பஞ்சரத்தினம்

இலக்கிய வகைகளைத் தொகுத்துக் கூறும் சுவாமிநாதப் பகுதி, பஞ்சரத்தினம், நவரத்தினம், ஏசல் என்ற வகைகளையும் தரு கின்றது. உட்பகுதியில் இவை விளக்கப்படாது, பொது இயல்பு நிலையில் எடுத்தியம்பப்படுகின்றது.

... ... அல்லாற் பஞ்சரத்தினம் முதலாய்க்
கண்டவை பாவினம் சிலதும் பதம் தரு சிந்துகளே
பலவுமதாய்ப் பத்துஅங்கம் கலவி மையல் தூது
பவனி கதை சாதிகம் வாதாடல் கொம்மை குரவை
புலவி முதற்காப்பியம் போல் உரைபாடை தழுவிப்
புகல்வதுவாம் ...

— சுவாமி 172

## புறநடை

புதியன புகுதலுக்கு வாய்ப்பாகவும், உள்ளடக்கப்படா பல இலக்கியங்களையும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகவும் புறநடை நூற் பாக்கள் அமைகின்றது.

மற்றவை வல்ல இனம்பிறிது ஒன்றினும்
அத்தகு மரபின் அடக்கினர் கொளலே

—ப.பா-இ 148

பாப்பொருள் அளவுஆதி பலபெயர் உளபிற

— தொ.வி 283

## ஒழிபு

செய்யுளுடனும் பாட்டுடனும் தொடர்புற்று, ஆயின் ஓரளவே ஒட்டியதால் தனித்து நிற்கும் கருத்துக்கள் சில யாப்பு, பாட்டியல் நூற்களில் அமைந்துள்ளன. பாட்டியலில் இப்பகுதி சிறிது மிக்கு வருகின்றது. பொருத்தமும் இலக்கிய வகையும் தவிர வரும் அச் செய்திகள் இங்குத் தொடர்புபடுத்தித் தரப்படுகின்றன.

யாப்பருங்கல இறுதி நூற்பா 'ஆசிரியன்' இயல்பு கூறும் முக மாகச் செய்யுள் பற்றிய பல செய்திகளைத் தொகுத்துத் தருகின் றது. இப்பகுதி, செய்யுளியலுக்கு ஒழிபாகவும் பாட்டியலுக்கு முன்னிணைப்பாகவும் அமைந்து இணைப்புப் பாலமாகின்றது. செய் யுளியற்றுவதற்கு ஐந்திலக்கண அறிவும் தேவையானமையாலும், இலக்கியம் என நினைக்கும் போது இயல் இசை நாடகமாகிய மூவுணர்வும் இன்றியமையாததானமையாலும், அவையனைத்தும் இங்கு இணைக்கப் பெறுகின்றன. தமிழ் மரபுக்கு அப்பாற்பட்டு, வடவியல்பு கலந்த நிலையில் தோன்றிய மிறைக் கவிகளும் தொகுத் திணைக்கப் படுகின்றன.

யாப்பிலக்கணம் அல்லது யாப்புக் கல்வி என்பது வெறும் வடி வமைப்போடு உறுப்பு, பா என்ற தன்மையோடு அமைந்திட வில்லை-அமைதல் இயலாது என்ற கருத்து யாப்பருங்கல ஆசிரிய ருக்கு இருந்தமை இங்குவெளிப்படுகின்றது.

ஆலமரமாகப் பரந்த செய்யுள் இலக்கியத்தினைத் தாங்கும் விழுதுகள் பலவிருக்க, அடிமரமாகிய யாப்பியலை மட்டும் நூல் உணர்த்துகின்றது என்ற எண்ணத்துடன், ஒழிபில் பிறவிழுதுகளைச் சுட்டி யமைக்கின்றார் எனல் பொருந்தும்.

இ.வி, பாட்டியலின் ஆரம்பத்தில் தரும் நூற்பா, செய்யுளிய லில் கூறாது எஞ்சிய இலக்கணம் அனைத்தும் பாட்டியல் தரும்என்ற உணர்வுடன் அமைகின்றது. இதன்கண் குறிக்கப்படும் உரை நூல் முதலியன பற்றிய செய்திகள் தொல்காப்பியத்தில் செய்யுளி யலின்கண் தரப்பட்டனவாம். எனவே செய்யுளியல், பாட்டியல் என வேறுபடுத்தி எத்துணை யழுத்தமான எல்லைக்கோடு வரைந்தா லும், எல்லை நீக்கமும் மயக்கமும் இயல்பாகவே ஏற்பட்டு விடுகின் றன. எனவே இங்குத் தரப்படும் ஒழிபுச் செய்திகள் இரு இயலுக் கும் உரிய பொது ஒழிபாம். உதிரிச் செய்திகளாகத் தோன்றினும் தொடர்புற்று அமையும் நிலைகள் சுட்டத்தக்கன.

மாலைமாற்றே சக்கரம் சுழிகுளம்
ஏகபாதம் எழுகூற்றிருக்கை
காதை கரப்பே கரந்துறை பாட்டே
தூசம் கொளலே ஆவணாற்றி
கூடசதுர்த்தம் கோமூத்திரியே
ஓர் எழுத்து இனத்தால் உயர்ந்த பாட்டே
பாத மயக்கே பாவின் புணர்ப்பே
ஒற்றுப் பெயர்த்தல் ஒருபொருட்பாட்டே
சித்திரப் பாவே விசித்திரப் பாவே
விகற்ப நடைய வினாவுத்தரமே
சருப்பதோ பத்திரம் சார்ந்த எழுத்து
வருத்தனம் மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே
உருவகம் ஆதி விரவு இயல் ஈறு
வரும் அலங்காரமும் வாழ்த்தும் வசையும்
கவியே கமகன் வாதி வாக்கி என்று
அவர்கள் தன்மையும் அவையினது அமைதியும்
பாடுதல் மரபும் தாரணைப் பகுதியும்
ஆனந்தம் முதலிய ஊனமும் செய்யுளும்

விளம்பனத்து இயற்கையும் நரம்பின் விகற்பமும்
பண்ணும் திறமும் பாலேயும் கூடமும்
எண்ணிய திணேயும் இருதுவும் காலமும்
எண்வகை மணமும் எழுத்தும் சொல்லும்
செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும்
தந்திர உத்தியும் தருக்கமும் நடமும்
முந்துநூல் முடிந்த முறைமையின் வழாஅமை
வந்தன பிறவும் வயின் அறிந்து உரைப்போன்
அந்தம் இல் கேள்வி ஆசிரியன்னே

—யா. க 96

எஞ்சிய இலக்கணம் எல்லாம் சொல்லின்
மாத்திரை முதலா யாத்தினிது அமைத்த
பாட்டின் இயலும் நூலின் இயலும்
உரையின் இயலும் பிசியின் இயலும்
முதுசொல் இயலும் மந்திர இயலும்
குறிப்புரை இயலொடு திறப்படு மரபும்
வருணத்து இயலும் புலவர் இயலும்
அவையின் இயலும் அகலக் கவியைக்
கொடுப்போர் இயலும் கொள்வோர் இயலோடு
அடுத்த ஈரேழும் பிறவுமாம் என்ப

— இ.வி 761

## ஆசிரியன்

அந்தமில் கேள்வி ஆசிரியனைப் பற்றிய யா. க கருத்தைத் தொடர்ந்து வந்த பாட்டியல் இலக்கணங்களும் ஏறக்குறையத் தருகின்றன. அனைத்தும் அறிந்தவனே ஆசிரியனாகும் இயல்பைப் பெற்றுள்ளான்; புலவன் எனப்படுகின்றான்.

இடைக்காலச் சமுதாயத் தாக்கத்தால் போலும் குலமும், இறை யுணர்வும் நினைக்கப்படுகின்றன. வயது வரையறையும் குறிக்கப் படுகின்றது.

ஐந்திலக்கண அறிவும் முத்தமிழ் உணர்வுமே அடிப்படையாக அமைகின்றன. நாற்கவி, நாற்பொருள் குறித்த கல்வியும் தேவை எனத் தெரிகின்றது.

நல்லாசிரியன் போன்றே, ஆசிரியன் ஆகத் தகாதோர் பற்றிய கருத்தும் நவநீதப் பாட்டியலில் வருகின்றது. விதி விலக்காகக், கீழ்க் குலத்தோராயினும் முக்காலமும் உணர்ந்த செந்நாப் புலவர் இலக்கிய ஆசிரியராகத் தக்கோர் என்ற எண்ணமும் தரப்படு கின்றது.

இழுக்குஇலா நாற்குலத்தோர் எப்பொருளும் தேர்ந்தோர்
ஒழுக்குஅறம் தெய்வம் உடையோர் - விழுக்கவிகள்

ஈரிரண்டும் முத்தமிழும் வல்லோரே எஞ்ஞான்றும்
சீரார் கவி உரைப்போர் சென்று

—வெ.பா-பொ 7

சென்ற இருபான் தொடங்கிச் சேரும் எழுபானளவும்
நின்ற பருவத்து உறுப்புநீங்காதோர்-ஒன்றில்
அகலாப் பிணியில்லோர் அன்றே பாக்கொண்டு
புகலப் பெறுவார் புகழ்ந்து

—,, 8

இயல்இசை நாடகம் மெய்யே உணர்ந்தோர்கள், எப்பொருளும்
மயல்அற வாய்ந்தோர் வருணங்கள் நான்கினும் வந்து உதித்தோர்
உயர்நெறி நின்றோர் அவையை உற்றோர் ஒருதெய்வத்தையே
முயல்தரு சித்தத்தர் செய்யுள்முன் பாட மொழிந்தவரே

— ந.பா-மொ 29

இருபதிற்று ஆண்டினில் ஏறி எழுபதில் ஏறலின்றி
வரு பருவத்தவர் வன்பிணி இல்லவர் மற்றுறுப்பில்
ஒரு குறைவற்றவர் நாற்கவி வல்லவர் ஓங்குஅறத்தின்
பரிசுடையாளர்கள் செய்யுளின் பாடல் பகர்பவரே

— ,, 30

மூன்று தமிழின் முறை உணராதவர், நாற்குலத்தில்
சான்றவர் அல்லவர் தாழ்ந்த உறுப்பினர் தாம்பிணியில்
தோன்றும் துயரத்தர் தெய்வம் தொழாதவர் தூய்மை இல்லோர்
ஆன்றவர் பாடிடில் ஆனந்தமாம் என்று அறைவர்களே

— ,, 31

இறப்பு நிகழ்வு எதிர்ஆன முக்காலத்தில் எப்பொருளும்
திறத்துணர்ந்தோர் சாவுவாழ்வும் உரைக்கும் செந்நாப்புலவர்
அறத்துறை நீங்கா அருளினர், நான்கு வருணத்தினும்
பிறப்பு இழிந்தோர் என்னினும் அவர் பாடிற் பெருநலனே

— ,, 32

பாடுமுறை செய்யுட் பாவின் விகற்பின்
தெளிந்து நூற்புலமையும் செப்பும் ஒருவன்
பாடவல்ல பாவலன் தகு நலம் குணம்
தெய்வம் கொள்கை மேம்பாட்டு ஒழுக்கம்
செல்வம் மேன்மை உளனாய் உட்புறம்
அழகும் சமயநூல் பிறநூல் அறிந்து
உவக்கும் பிறபாடை நூல் இலக்கண நூல்
தேர்ந்து விரைவிற் பாடு நாவினனாய்
உறுகண் உறுப்பில் குறைவு நோய் இலனாய்

நாற்பொருள் உணர்ந்து நற்கலைக்கு ஞானியாய்ச்
செப்பும் நான்கும் புலமைத் திறனே

—பிர 28 (29)

பாடுமுறை தொடர்செய்யுள் தெரிக்க வல்ல
    பாவலன் நற்குணம் குலம் சீரொழுக்கம் மேன்மை
நீடமுதுசமய நூல் பிறநூல் மற்று
    நிகழ்த்து நூல்இலக்கண நாற்கவி உள்ளானும்
நாடுஉறுப்பில் குறைவிலனும் நோய்இலானும்
    நாற்பொருளும் உணர்ந்து கலைதெளிந்து முப்பான்
கூடும்வயது இகந்து எழுபான் வயதில் ஏறாக்
    குறியுடையனாகில் அவன் கவிதை கொள்ளே

—சி.பா-ம 17

கற்கப் படுவோர் கடப்பாடு எய்தி
நற்கவி நான்கொடு முத்தமிழ் நடைதெரிந்து
இருபான் வயது தொடங்கி எழுபான்
வயதின் ஏறா மாட்சிமை உள்ளோன்
அகலக் கவிசொலும் ஆற்றலோனே

—இ.வி 938

ஆசு மதுரம் சித்ர வித்தார நாற்கவியின்
    ஆன வெண்பா முதல் இனம்
ஆகிய வினைப்பதம் ஒலிப்பதம் பெயர்வினை
    ஆரும் உயர்திணை யஃறிணை
மாசிலா ஒருமை தன்மை பன்மை முன்னிலை
    மாட்சி யளபெடை காலமும்
வளமுறும் உயிர்ச்சந்தி மெய்ச்சந்தி பகுபதம்
    வரும் ஆரியம் தேசிகம்
தேசுமிகு வல்லிடை மெல்லினம் குறில்நெடிற்
    சீரான உயிர்மெய்களுஞ்
செப்பு குற்றியலுகர மாகிய குறுக்கஞ்
    சிறந்திடுந் தலைவி தலைவன்
பேசரிய நவரதம் விருத்திபாகம் ரீதி
    பின்பு பொருளணி யக்கரப்
பிறப்பு வினைமுற்று பெயர்முற்றோடும் அறிந்து வகை
    பேசுவர்கள் புலவோர்களே

— பி.தீ 2

## புலவர்

கவி, கமகன், வாதி, வாக்கி எனப் பொதுவாகப் புலவர்களைப் பார்த்தல் பாட்டியல் பண்பாக அமைகின்றது.

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய கவிதையை இயற்றுவோர் கவியெனப் படுகின்றனர். கல்வியாலன்றி அறிவால்

கூறுவோன் கமகன்; மேற்கோள் எடுத்துக்காட்டு முதலியன தந்து நிறுவுபவன் வாதி; அறம் முதல் நாற் பொருளும் சொல்லாற்றலால் விளங்கத் தருவோன் வாக்கியாம். இவர்கள் ஒழிய, சோரகவி, சா(ர்)த்துக்கவி, பிள்ளைக்கவி, வெள்ளைக் கவி என உண்மைப் புலமை இல்லாதோர் பகுக்கப்படுகின்றனர்.

கவி கமகன் வாதியே வாக்கி எனக் காசில்
புவியின்மேல் நால்வர் புலவர்-கவிகள்தாம்
ஆசு மதுரமே சித்திரம் வித்தாரம் எனப்
பேசுவார் நால்வர்க்கும் பேர்

—வெ.பா-செ 1

நிறைமதியால் கல்வியால் நீள்கலைகள் கல்லாது
அறையும் அவன் கமகன் ஆகும்-முறை மேற்கோள்
புல்லும் எடுத்துக் காட்டு ஏது புகலும் அவன்
நல்வாதி என்றே நவில்

— ,, 46

நவிலும் அறம்முதல் நான்கும் மயங்காமல்
புவியதனில் கேட்டோர் புகழக்-கவிப் பனுவல்
குன்றாத சொல்லால் தெளிவுபெறக் கூறுவோன்
நன்றாய வாக்கி என்றார்

— ,, 47

ஆரொருவன் பாக்களை ஆங்கு ஒருவனுக்கு அளிப்போன்
சோரகவி சார்த்து ஒலியில் சொல்லும் அவன்-சீர்இலாப்
பிள்ளைக்கவி சிறந்த பின்மொழிக்காம் புன்மொழிக்காம்
வெள்ளைக் கவி அவனின் வேறு

— ,, 48

வாய்ந்த கவி கமகன் வாதி வாக்கி வகை வனப்பும்
ஆய்ந்த வல் ஆசு மதுரமும் சித்திர வித்தாரமுமே
ஏய்ந்த வகை நான்கும் கள்ளக்கவி முதல் ஈரிரண்டும்
தேய்ந்த பிறைநுதற் சேயிழையாய் இன்று தேர்ந்துகொள்ளே

—ந.பா-மொ 19

அவற்றுள்
ஆசு முதல் நாற்பாவும் அவனியில் மெச்சப்
பா இனம் கொண்டு பாடுவோன் கவியே
நாட்டிய அரும்பொருள் செம்பொருள் நடையாக்
காட்டியே விபகரிப்போன் கமகன்
ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டிய
தன்மையில் நன்கே தன்கோள் நிறீஇ
வாதில் பிறர்கோள் மறுப்பவன் வாதி
அறம் முதல் நாற் பொருள் பயனும் அத் திறத்தில்

கேட்கவே திறம்படப் பாடுவோன் வாக்கியென்று
இசைக்கும்மன் நாற்புலமையோன் இயல்பே

— பிர 30

கவியே கமகன் வாதி வாக்கி எனப்
புவிமேல் சொல்லும் புலவர் நால்வர்

— இ.வி 929

ஆசு மதுரம் சித்திரம் அகலம்
பாவகை பாடுவோன் கவிஎனப்படுமே

— ,, 930

நிறைந்த கல்வியான் நிறைந்த அறிவான்
அறிந்த ஒருபொருள் அதனை விவரிக்க
வல்லவன் கமகன் சொல்லுங் காலை

— ,, 931

ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறர்கோள் மறுக்கும்
வன்பு உடையோனே வாதி ஆவான்

— ,, 932

அறம் பொருள் இன்பம் வீடு எனநான்கும்
திறம்பாது இவரச் செஞ்சொல் கொண்டு அருள்
நோக்கி உரைப்போன் வாக்கி ஆவான்

— ,, 933

ஒருவன் பா வேறொருவற்கு உரைத்து
வருமவன் சோரகவி மற்று ஒருவன்
பாவிசைக்கு ஒப்ப மேவி உரைப்போன்
சாத்துக் கவிஎனப் பாத்தனர் புலவர்

— ,, 934

முன்னோர் பாடிய யாப்பினுட் கிடந்த
சின்மொழி கொண்டு செய்யுள் செய்யும்
தன்மையன் பிள்ளைக் கவி, பின்மொழியால்
கரைவோன் வெள்ளைக் கவியாம் என்க

— ,, 935

என்பது,
கவியே, கமகன், வாதி, வாக்கி என்று
இவை ஒருநான்கும் புலமைக்கு இயல்பே

— மு. வீ-யா.ஒ 60

ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
கண்டு பாடுவோன் கவியாகும்மே

— ,, 61

ஞாபகம் செம்பொருள் நடையின் எப்பொருளும்
அறைகுவோன் கமகனும் வழுத்துங்காலே

— ,, 62

ஏது மேற்கோளும் எடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்போன்
வாதியாம் என வைக்கப்படுமே

— மு.வீ-யா.ஒ 63

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கும்
கேட்போர் வேட்ப இனியன கிளத்தும்
ஆற்றல் உடையோன் வாக்கியாம் எனலே

— ,, 64

## பாட்டு

இ.வி. பாட்டியலில் பாட்டு என்பதனை விளக்கும் முகமாக ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நாற்கவி வகைகளைச் சுட்டுகின்றது. சில நூற்கள் பா என்ற நிலையிலும் கவி எனும் உணர்விலும் இந் நால்வகையையும் குறிக்கின்றன.

இந் நால் வகைகளை இயற்றத் தெரிந்த புலவனே கவி எனும் நிலையில் நால்வகைக் கவிகள் அமைந்து, அவர்களும் இப் பெயரா லேயே குறிக்கப்படுதலும் உண்டு.

இந் நால் வகைக் கவிதைகளுள், சித்திர கவி என்பது யா.க தந்த மிறைக் கவியோடு ஒப்புமையுடையது. இவை பற்றிய விரி செய்தி, பெரும்பாலும் அணியிலக்கண நூற்களில் தான் வருகின்றது. திருவெழுகூற்றிருக்கைக்கு முத்துவீரியம் யாப்பதிகாரத் தில் விளக்கம் தருவது தனித்தன்மை.

வித்தாரகவி அல்லது அகலக் கவி என வருவதே பாட்டியல் நூற்களின் பெரும் பகுதியை நிறைக்கும் பிரபந்தச் செய்யுள் இலக் கணமாக விரிகின்றது. தனிப்பா, தொடர்நிலைச் செய்யுள், தொகை நிலை எனப் பல பகுதிகளாக அடங்குகின்றது.

கவிகள்தாம்
ஆசு மதுரமே சித்திரம் வித்தாரம் எனப்
பேசுவார் நால்வர்க்கும் பேர்

—வெ.பா-செ 1

பேர் எழுத்தில் சொல்லில் பொருளில் பெருங்கவியில்
சீர் அலங்காரத்தில் தெரிந்து ஒருவன்-நேர்கொடுத்த
உள்ளுறைக்கு அப்போது உரைப்பதனை ஆசு என்றார்
எள்ளாத நூலோர் எடுத்து

— ,, 2

எடுத்த பொருளினோடு ஓசை இனிதாய்
அடுத்தவை செஞ்சொல்லாய் அணியும்-தொடுத்த
தொடையும் விளங்க அவை துதிப்பச் சொல்லின்
இடம் உடைய மாமதுர யாப்பு

— ,, 3

யாப்புடைய மாலைமாற்று ஆதியா ஏனையவும்
வாய்ப்புடைய சொல்லின் வகுத்தமைத்து-நீப்புஇலா
வண்ணமும் தொன்னூல் மரபு வழுவாமல்
பன்னுவது சித்திரத்தின் பா

— வெ.பா-செ 4

பாங்கார் தொடர்நிலைப் பாப் பல்பதம் சேர் தனிப்பா
ஈங்கு அகலப் பாக்கள் இரண்டாகும்-ஆங்குத்
தொடர்நிலைப்பாவின் விகற்பம் சூழ்வளையாய் சொல்லின்
கடையிலவே என்றுரைத்தார் கண்டு

— ,, 5

ஆய்ந்த வல் ஆசு மதுரமும் சித்திர வித்தாரமுமே

— ந.பா-மொ 19

அவற்றுள்,
பாட்டு எனப்படுவது பைந்தமிழ் நாட்டகத்து
யாப்புறச் செய் பாவுறுப்பு எழுந்து இசைக்கும்

— இ.வி 762

ஆசு மதுரம் சித்திரம் அகலம் என்று
ஓசையெழும் பாட்டு ஒருநால் வகைத்தே

— ,, 763

எழுத்துச் சொற்பொருள் அணி யாப்பு இவையின்
விழுத்தக ஒருவன் விளம்பிய உள்ளுறை
அப்பொழுது உரைப்பது ஆசு கவியே

— ,, 764

சொல்லும் பொருளும் சுவைபட நிறீஇச்
செல்வுழித் தொடையும் விகற்பமும் செறீஇ
உள்ளத் துள்ளே கொள்ளும் அமுதுஎனத்
தன்மை உவமை பின்வரு பெற்றியின்
உருவகம் முதல் உற்று ஓசை பொலியப்
பாடுதல் மதுர கவி எனப்படுமே

— ,, 765

சித்திர கவி மேல் செப்பியது ஆகும்

— ,, 766

வித்தார கவியை விளம்பும் காலை
அத்திறந் தொடர்நிலை அடிபல நடக்கும்
தனிப்பா என்னத் தான் இரண்டாகும்

— ,, 767

அவற்றுள்,
தொடர்நிலை விகற்பம் கடையில என்ப

— ,, 768

ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
ஏசில் கவி நான்கு இவை என்பவற்றுள்
எடுத்த பொருளில் தொடுத்த இன்பத்தில்

அடுத்த பொழுதில் பாடுவது ஆசே,
உடைப் பொருட் பொலிவும், உரிச்சொற் செல்வமும்
தொடைப்பொலி விகற்பமும் தொடரணிச் சிறப்பும்
இசைபெற ஓசையும் இயலப் பாடி
வசையில் வருங்கவி மதுரம் ஆமே;
கோ மூத்திரி முதல் கூறிய மிறைகவி
சித்திரம் என்பர், சிறுபான்மை அவையெனப்
பத்திர முதல் நுண் பத்தியிற் பாடிச்
சித்திரம் போல்வன சித்திர கவியே;
தொடர்நிலை தொகைநிலை தொடுத்த பல்பாவும்
தொடை பலவாகத் தொடுத்த ஒருபாவும்
வித்தாரக் கவிஎன விளம்பினர் புலவர்

— தொ. வி 299

ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம்
ஆகும் நாற்கவி அறையுங் காலே

— மு.வீ-யா.ஒ 55

அவற்றுள்,
பொருள் அடி பா அணி முதலிய கொடுத்துப்
பாடு எனப் பாடுவோனே ஆசுகவியே

— ,, 56

தொடையும் தொடையின் விகற்பமும் செறியச்
சொற்சுவை பொருட்சுவை தோன்ற உருவகம்
ஆதிய அணிகளோடு அணிபெறப் பாடுவோன்
மதுர கவி என வழுத்தப்படுமே

— ,, 57

ஏகபாதம் எழுகூற்றிருக்கை
காதைகரப்புக் கரந்துறைச் செய்யுள்
கூட சதுக்கம் கோமூத்திரி முதல்
தெரிந்து பாடுவோன் சித்திரக் கவியே

— ,, 58

மறங் கலிவெண்பா மடலூர்தல் இயலசை
பாசண்டத்துறை பன்மணிமாலை
தசாங்கம் மும்மணிக்கோவை கிரீடை
இவை முதலிய விரித்து இசைத்துப் பாடுவோன்
வித்தாரக் கவியாம் விளம்பிடினே

— ,, 59

## செய்யுள்

தொ. வி, தனியியல்புடன் செய்யுளை அணுகி நோக்குகின்றது. முத்தகம், குளகம், தொகை நிலை, தொடர்நிலை என்பது இவண் அமையும் பகுப்புக்கள். அணியிலக்கண நூல் முத்தகம், குளகம்

பற்றி நினைந்ததுண்டு. தொகைநிலை, தொடர்நிலை குறித்த எண்ணங்கள் பாட்டியலில் பரந்து காணப்படுகின்றன.

வினை முடிபை மனத்தில் கொண்டு முத்தகம், குளகம் ஆகிய வகைகள் ஏற்படுகின்றன. பல பாடல்களால் ஆகும் ஒரு நூல் எனும் நிலையில் தொகை நிலையும், சொல் தொடர்போ பொருள் தொடர்போ காரணமாகப் பல செய்யுள் ஒரு நூலாதல் எனும் அடிப்படையில் தொடர் நிலையும் நூற்பாகுபாடுகளாம்.

தொன்னூல் விளக்கத்தைப் பின்பற்றிப் போலும் சுவாமி நாதமும் இதே கருத்துக்களை யாப்பதிகாரத்தில் அமைக்கின்றது.

செய்யுள் தெரிவுற முத்தகம், குளகம்,
தொகை, தொடர்நிலை எனத் தொகுதி நான்கு; அவற்றுள்
முத்தகம் தனித்துஆய் முடியும் செய்யுளே

— தொ.வி 251

குளகம், ஒருவினை கொளும் பலபாட்டே

— ,, 252

தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவன் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருள் இடம் காலம் தொழில் என நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டியது ஆகும்

— ,, 253

தொடர்நிலைப் பொருளினும் சொல்லினும் ஆகும்;
பொருள் தொடர்நிலை தற்பொருள் தரத் தானே
பற்பல பாட்டாய்ப் பயனில் தொடரும்;
சொற்றொடர்நிலை எனில் தூக்கு அந்தாதியே

— ,, 254

பொருட்டொடர்நிலையே புகலிற் காப்பியம்
பெருங்காப்பியம் எனப் பிரிவு இரண்டு அவற்றுள்
காப்பியம் அறம்முதல் நான்கிற் குறைநவும்
புராணம் பற்கதை புனைநவும் என்ப

— ,, 255

செய்யுள் முடிவு இரண்டாம், முத்தகம் குளகம் என ஓர்
செய்யுளின் முத்தகம் இறும் பலபாட்டின் இறும் குளகம்
எய்து இரண்டால் தொகைநிலையாய்த் தொடர்நிலையாய்ச் செய்யுள்
இரண்டு அணிக்காம்; அவற்றினிலே தொகை ஒருவன் உரையும்
ஐயர் பல்லோர் உரையும் இடம் தொழில் காலம் பொருள் பாட்டு
அளவு பிறவாலும் பேரிட்டு முடிப்பனவாம்;

துய்ய பொருட்டொடர்நிலை, சொற்றொடர்நிலைஎன்று இரண்டாம்
தொடர்நிலை; சொற்றொடர்நிலை அந்தாதி அடுத்ததுவே
— சுவாமி 162

அடுத்த பொருட்டொடர் பெருங்காப்பியம் சிறுகாப்பியமாய்
அறைவர் ... ... ...
— ,, 163

## பாகம்

வைதருப்பம், கடவும் ஆகிய நெறிகளே பாகம் எனப்படுகின்றன. பெரும்பாலும் அணியிலக்கணப் பகுதியில் அமைக்கப்படும் இச்செய்தி சுவாமிநாதத்தில் யாப்பதிகார இறுதியில் அமைந்து, தொடர்ந்து வரும் அணியதிகாரத்தோடு இணைப்பு உருவாக்குகின்றது. கவுடம் வடநெறி எனவும் வைதருப்பம் தமிழ் நெறி எனவும் இவர் கருதுகிறார் போலும்.

அமைத்த நற் பொருத்தவிதி, இனிப் பாகம் என்பது
அவ் இரு செய்யுளில் கவுடம் வைதருப்பம் எனவாங்
குமைத்த வண்ணம் வகுப்பு மிறைக்கவி ஒவ்வோரினமே
கூர்ந்த செறிவெழுத்துடன் சொற் செறிவு, வழி மோனை
சிமிழ்த்த வழியெதுகை திரிவொடு மடக்கு முதலாய்ச்
செம்மையின்றிச் சொற்கு அரிதாம் கவுடம்;
இவ்வா றன்றித்
தமிழ்த் திறத்தில் அமிழ்தம் போற் செவிக்கு இனிமை காட்டும்
தனி மதுர பாகம் என்பர் வைதருப்பம் தனையே
— சுவாமி 178

## பாவும் சாதியும் பிறவும்

இன்ன பாவுக்கு இன்ன சாதி எனப் பகுத்துப் பார்க்கும் எண்ணம் இடைக் காலத்து ஏற்பட்ட ஒன்று. பாட்டியல்களும் பிற்கால யாப்பிலக்கணங்களும் இக்கருத்தைத் தோற்றுவித்து வளர்த்தியுள்ளன எனத் தோன்றுகின்றது. இலக்கணத்தில் இத்தகு எண்ணம் நுழைந்தமை, அக்காலச் சமுதாயத்தில் வருணப் பாகுபாட்டிற்கு இருந்த உயர்வையும் அது பிறவற்றில் செலுத்திய செல்வாக்கையும் காட்டுகின்றது.

சாதிப் பகுப்போடு நின்று விடாது, இன்ன பாவுக்கு இன்ன கடவுளர், இன்னின்ன நாட்கள், இவையிவை ஓரை, இன்ன விரை, இன்ன மலர், இன்ன நிறம், இன்ன நிலம் என்ற நிலைகளும் பகுத்துத் தரல் இப்பாட்டியற் பண்பாக அமைகின்றது.

நாற்பாவின் இனங்களும் சார்பு பற்றி இப்பண்புகளைப் பெறுகின்றன. ஆயின் இருபா இணைவான மருட்பாவுக்கு இப் பெற்றி

யில்லை. நாற்பாவிலும் விருத்தத்திலும் மங்கலம் கருதப்படுகின்றது. அந்தந்தச் சாதியினரை அவரவர்க் குரிய பாவால் புனைவதே சிறப்பு.

வெள்ளை அகவல் விருத்தம் கலியே
வஞ்சி என்றிவை மங்கலப் பாவே

— அவி 120

அந்தணர் சாதி ஆகிய வெள்ளைக்குச்
சந்திரன் தன்னொடு தகைமிகு வியாழன்
கடவுளர்; கார்த்திகை முதல் ஏழ் நாளாம்
மீனம், கடகம், தேளே ஓரை
சந்தனம் விரை; பூ அந்தண் மல்லிகை
வெண்மதி நிறனே வண்ணம்; நிலனே
முல்லை என்னச் சொல்லினர் புலவர்

— ப.பா-இ 7

காவலர் சாதி ஆகிய அகவற்கு
ஆகிய கடவுளர் செங்கதிர் செவ்வாய்
நாளே மகம் முதல் நாள்ஏழ் ஆகும்
சிங்கம் தனுவே மேடம் ஓரை
செஞ்சந்தனம் விரை; கழுநீர் பூவே
செந்நிறம் நிறனே; நன்னிலம் குறிஞ்சி

— ,, 8

நெடுநிலைக் கலியே வணிகர் சாதி
கடவுளர் சனி புதன்; கருதிய நாளே
அநுடம் முதல் ஆறே; ஓரை துலாம் குடம்
மிதுனம்; சந்தனம் விரை; பூச் சண்பகம்
பொன்னிறம் நிறனே; நன்னிலம் நெய்தல்

— ,, 9

எஞ்சிய வேளாண் சாதி வஞ்சி
நாளே அவிட்டம் முதல் ஏழ்நாளாம்
இடபம் கன்னி மகரம் ஓரை
சார்ந்த விரையே தண்ணறுங் கலவை
ஏந்திய போதே இன்நறு நீலம்
நீலம் நிறனே நெடுநிலம் மருதம்

— ,, 10

நால்வகைப் பாவிற்கு மேலோர் வகுத்த
இனங்களும் பெறும் என நினைத்தனர் கொளலே

— ,, 11

நால் வகைப் பாவும் நால்வகைக் குலத்தின்
பால்வகைப் படுமே முதலன இரண்டின்
புணர்ச்சி மருட்பாப், பொருந்தா வருணம்

— ,, 2

அந்தச் சாதிக்கு அந்தப் பாவே
தந்தனர் புலவர் தவிர்ந்தனர் வரையார்

— ப.பா-இ 13

வெள்ளையும் அகவலும் விருத்தமும் கலியும்
வஞ்சியும் எஞ்சா மங்கலம் பொருந்தும்

— ,, 14

வேறுமறை யோர்ஆதி நாற்சாதி வெள்ளைமுதல்
கூறுநிலை, முல்லை குறிஞ்சியே-மாறு
மருதநிலம் நெய்தல், நிறம் வான்மையே செம்மை
கருதரிய பொன்மையே கார்

— வெ.பா-பொ 1

கார்த்திகை மாசிபனை குன்றுஆதி காட்டுகநாள்
மூத்த இராசி நான்மூன்றினையும்-நீர்த்தசீர்
மேதினிமேல் ஆசிரியம் வஞ்சிகலி வெள்ளைஎன
ஓதியமேடு ஆதியால் ஓட்டு

— ,, 2

ஓட்டுமதி பொன்வெள்ளை, ஒண்கதிரோன் சேய்அகவல்
காட்டிய மால் காரி கலிக்காகும்-ஈட்டும்
புகர்பாம்பு வஞ்சிக்காம் பூவிரையோடு ஆடை
பகர்நிறத்தால் கொள்கஅணி பாட்டு

— ,, 3

வேதியன் வேந்தன் வணிகன் வேளாளன் எனமுறையே
ஓதுவர் வெண்பா அகவல் கலிவஞ்சி ஓது, அவற்றின்
பேதமும் அவ்வகை யானே வரும்என்ப; பெய்தகட்டால்
தாது அலரும் குழல் தாமரைச் செய்ய சரிவளையே

—ந.பா-மொ 14

வெண்பா முதல் நாற்பாவும் அவ்வவற்றோடு
ஒத்து நடைபெறும் ஒருமூன்று இனமும்
மறையவர் முதல் நான்மரபின் வந்தோர்க்குப்
பா மரபு என்ப அறிந்திசினோரே

— பிர 24

முல்லை குறிஞ்சி மூசு மருதம்
நெய்தல் என்ன எய்தும் நானிலமும்
திகழும் வெண்மையும் செம்மையும் பொன்மையும்
கருமையும் ஆகக் கருதும் நானிறமும்
அறுமீன் கொடு நுகம் அனுடம் அவிட்டம்
என்னும் நான்கும் என்று இன்னவை முறையே
வெண்பா முதலா மேவு நாற்பாவும்
கொள்ளும் மரபாம் குறிக்குங்காலே

— ,, 25

ஆசிரியம் வஞ்சி கலி வெண்பா என்று
இம்முறையாய் வைத்து இயம்புங் காலை
மீனம் கடகம் தேளே என்றும்
சிங்கம் தனுவே மேடம் என்றும்
இடபம் கன்னி மகரம் என்றும்
துலாம் குடம் மிதுனம் ஓரை என்றும்
ஒட்டி ராசிமரபு ஓர்தல் நெறியே

— பிர 26

மதிகுரு வெள்ளை, செங்கதிர் செவ்வாய்
இன் அகவல், புகர்வஞ்சி, புந்தி சனி கலியே
கோளமை நாற்பாவும் கொள்ளும் மரபே

— ,, 27

மறையோர் மன்னர் வணிகர் சூத்திரர்க்கு
முறையான் வெள்ளை முதல்நான்கு எய்தும்

—இ. வி 877

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்
வெள்ளை முதற்பாவினுக்கு உரியனவே

— ,, 878

வெண்மை செம்மை கருமை பொன்மை
உண்மை நிறம் பா ஒருநான்கினுக்கே

— ,, 879

கார்த்திகை முதலாக் கட்செவி காறும்
சீர்த்தகு வெண்பாச் சிறந்த நாளே

— ,, 880

மகம்முதல் விசாகம் வரை அகவற்கும்
பனை முதல் புள் வரைப் பகர்ந்திடு கலிக்கும்
சதயம்முதல் சோறளவும் வஞ்சிக்கும்
உரிய என்ப உணர்ந்திசினோரே

— ,, 881

கற்கடகம் தேள் மீனம் மூன்றும்
முற்படு பாவினிற் படும் இராசி
மேடமும் சிங்கமும் வேணுவும் அகவல்
பாடுறும், மிதுனமும் துலையும் கும்பமும்
கலிக்கு உரித்தாகும், இடபமும் கன்னியும்
ஒலிப்படு மகரமும் வஞ்சிக்கு உரிய

— ,, 882

திங்கள் வியாழம் செங்கதிர் செவ்வாய்
புந்திகன் மந்தன் புகர்பெறும் பாந்தள்
வெள்ளை முதல் நான்கினுக்கும் இரண்டிரண்டு
எள்ளா வகையால் கொள்ளும் கோளே

— ,, 883

பூவும் சாந்தும் கலையும் மணியும்
பாவுறு நிறம் எனப் பாத்தனர் கொளலே

— இ.வி 884

சாதி நிலம் நிறம் தகுநாள் இராசி கோள்
ஓதினர் ஆறும் ஒவ்வொரு பாவிற்கே
வெண்பா முதற்குலம், முல்லை, வெண்மை
கார்த்திகை முதல் ஏழும், கடகம் விரிச்சிகம்
அயிலை, மதி குரு வழங்கும் இயல்பே

— தொ. வி 295

அகவற்கு அரசர் அருங்குலம், குறிஞ்சி
குருதி, மகம் முதற் கொண்டு ஏழு மேடம்
அரிதனுச், செவ்வாய் ஆதவன் இயல்பே

— ,, 296

கலிக்கே வணிகம், கழனி, பொன்மை
குலாம் பனை முதல் ஆறும், குடமொடு மிதுனம்
துலாம், புதன் சனி எனத் தொக்கு இவை ஏற்கும்

— ,, 297

வஞ்சிக்கு ஈறது இயல் வருணம், நெய்தல்
அஞ்சனம், அவிட்டம் ஆதி ஏழும்
விடைபெண் கலைபுகர் விட தரம் இயலுமே

— ,, 298

வெண்பா முதல் வஞ்சிப்பா இறுதி
நான்கு பாவினுக்கு நாளும் கிரகமும்
நிலனும் குலனும் நிறமும் இராசியும்
ஆகிய இருமூன்று இலக்கணப் பகுதி
குறித்தார் முற்றுணர் குரவர் என்ப

—மு.வீ-யா.ஒ 50

அவற்றுள்,
வெண்பா வெண்ணிறம், விருச்சிகம் கார்த்திகை
முதலிய எழுநாள் முற்படு விருச்சிக
மீனம் இராசி, விப்பிர குலம், மதி
குருவே கிரகம் குழுமிய முல்லை
இருநிலம் மற்று அதன் இயல்பு என மொழிப

— ,, 51

அகவல் செந்நிறம்; அரைய குலம்; மகம்
பூரம் முதலிய எழுநாள், மேடம்
சிங்க இராசி, வெங்கதிர் செவ்வாய்
கிரகம், குறிஞ்சி நிலன் ஆகும்மே

—,, 52

கலி பொன் நிறம்; குலம் காமரு வணிகம்
அகணி நெடுநிலம், அனுடம் முதலியு

ஆறுநாள்; மிதுனம் கும்பம் துலாமும்
இராசி; புதன் சனி கிரகம் என்று இயம்புப

— மு.வீ-யா.ஒ 53

வஞ்சி நிறம் கறுப்பு; வாருதி நெய்தல்
நிலம்; கடைக் குலம்; அவிட்டம் முதல் ஏழு
நாள்; இடபம் கனி மகரம் இராசி
வெள்ளி யிராகு கிரகம் என்ப

— ,, 54

## கவிதைப் பெண்

பதினாறும் நூற்றாண்டிலக்கணமாகக் கருதப்படும் பிரபந்தமரபியல் கவிதையைப் பெண்ணாக உருவகிக்கின்றது. கவிதை உருவாதல் எனும் தொடக்கம் முதல் அரங்கேறிப் பரிசில் பெறும் நிலையாகிய நிறைவு வரையுள்ள பல படிநிலைகள் கருத்தோற்றம் முதல் திருமணம் வரையுள்ள மனித வாழ்வுக் கூறுகளை வைத்து விளக்கப் படுகின்றன. இந்நிலை பிற இலக்கணங்களில் இல்லாத ஒன்று.

மொழியின் மதுரம் கனிந்த பொருட்கவி
சொல் வாய் யோனி சூதகம் இலக்கியம்
வாய்ந்த நா இலிங்கம் மனம் வாக்குழைகல்
கலவி கரணம் கருதுவ வேட்கை
விந்து இலக்கணம் மேவல் நிறுவுதல்
கருப்பம் அக் கவியிற் காட்டு முச்சீரிற்
சேர்ந்த எழுத்தே சேயாய் முற்றி
ஓங்கிடு சீரென ஒண்சுவை கலந்து
சிறந்த முச்சீரிற் பிறந்து வளர்தலால்
தமிழ்க் குலப் பெண் எனச் சாற்றல் தகுமே

—பிர 32

தந்தை புலவன், தாயவள் தரித்திரம்
அக்கவிப் பொருளை அணியாய் விரித்து
வசனிக்கக் கேட்போர் மாதவர் ஆகும்
சந்தப் பொருளைச் சபையினோர் உளங்கொளச்
சதிரிற் படிப்போன் தமையன் ஆகும்
பொலிந்த குழுவிற் புகழ்ந்து கொள்வோர்
உறவின் முறை என்று ஓதல் ஆகும்
இன்பம் உற்று அதனை எழிலுடன் கேட்டுப்
பரிசு கொடுப்போன் பர்த்தா ஆமே

— ,, 33

## நூற்பெயர்

செய்யுள் குறித்தும், இலக்கியங்கள் பற்றியும் பேசும்போது, அந் நூற்கள் பெயர்பெறும் அடிப்படையொன்று உண்டு என்பதும்

சுட்டப்படுகின்றது. பொதுவாக எந்நூலுக்கும் இவ் அடிப்படையில் பெயர் அமைகின்றது எனலாம். இ.வி, அகலக் கவிக்கே இப் பெயரிடும் முறை உரியது என நினைக்கின்றது.

பொருள், இடம், காலம், தொழில், அளவு (எல்லை), உறுப்பு, பா (பாட்டு), எண், தன்மை, மிகுதி, செய்தோன், செய்வித்தோன் எனும் காரண அடிப்படையிலும் இடுகுறியாலும் பெயர் அளிக்கப் படுகின்றது. இலக்கிய, நூல் வகைகளை நோக்கும்போது, இவற்றில் சில காரணங்கள் இணைந்து, இணையடிப் படையிலும் பெயர் கள் அமையலாம் எனத் தெரிகின்றது.

பாப் பாவினம் - பொருள்
ஈங்கோய்மலை எழுபது - இடம் (+எண்)
கார் நாற்பது - காலம் (+எண்)
களவழி நாற்பது - தொழில் (+எண்)
குறுந்தொகை, நெடுந்தொகை } - அளவு
பன்னிருபாட்டியல் - உறுப்பு
வெண்பாப் பாட்டியல் - பா (+பொருள்)
பதிற்றுப்பத்து - எண்
யாப்பருங்கலம் - (பொருள்+) தன்மை
வரையறுத்தபாட்டியல் - தன்மை
தொல்காப்பியம் - செய்தோன்
வீரசோழியம் - செய்வித்தோன்

தொடர்ந்த பெயர்கள் தொழில்அளவு காலம்
இடம்பொருள் பா உறுப்போடு எல்லை-நுடங்குஇடையாய்
பாடினன் பாடுவித்தான் பாடப்படு பொருளான்
நீடும் பிறவும் நிறைந்து

— வெ.பா-செ 45

பாட்டுப்பொருள் இடம்காலம் தொழில் பாட்டளவின் எண்ணின்
நாட்டித் தொகுத்தவும் செய்தவன் செய்வித்தவன் தம்பேர்
மூட்டித் தொகுத்தவும் ஆகி, முதல்நூல் மொழிந்த நெறி
கேட்டுத் தெரிந்துகொள் கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழியே

— ந.பா-செ 41

ஆசில் முதல்நூல் பொருளோடு அளவு
தன்மை மிகுதியே செய்வித்தோன் கருத்தன்
இடுகுறி இவற்றால் எய்தும் பெயரே

— பிர 22

பேசின், முதல்நூல் பொருளோடு அளவு தன்மை.
செறிமிகுதி செய்வித்தோன் கருத்தனும்
திகழும் இடுகுறியானும் நூற்குப் பேராம்

— சி.பா-ம 16

பொருள் இடம் காலம் தொழில் உறுப்பு எல்லை
செய்தோன் செய்வித்தோன் பெயராலே
எய்தும் அகலக்கவிக்கு இடும் பெயரே

—இ.வி 876

## எதுகைச் சிறப்பு

பாட்டிலக்கியத்தில். பழைய மரபுப் படி, அக இலக்கியங்கள் தலைவன்—தலைவி பெயர் சுட்டாதே அமைதல் வேண்டும். ஆயின் இடைக்கால நிலையில் பார்ப்போமாயின் பாட்டுடைத் தலைவன்—கிளவித் தலைவன் என்பன அமைந்து, தலைவன் பெயர் சுட்டிய இலக்கியங்கள் இயல்கின்றன. உலா போன்ற சில இலக்கியங்களில் பாடல் தலைவன் பெயர் அமைத்தல் ஒரு தேவையாக, ஒரு தனிக் கூறுக வருகின்றது. தலைவனின் இயற்பெயர். ஊர்ப்பெயர் இவற்றிற்கு ஏற்ப எதுகை யமைப்பது இலக்கியத்திற்கே சிறப்பாகக் கருதப்படுகின்றது என்பதனைக் கீழ்வரும் பகுதிகளும் உணர்த்துகின்றன.

பாட்டுடையோன் ஊர்ப்பேர் இயற்பேர் பட எதுகை
நாட்டிடினும் அப்பேர் நவில்அடியின்-காட்டுமுதல்
சேர்ந்த அனுவாகச் சீர்முன் இயற்றிடினும்
வாய்சிறப்பு என்கை வழக்கு

—வெ. பா-பொ 4

சாற்றும் தலைவன் இயற்பெயர் ஊர்க்குத் தக எதுகை
தோற்றினும் அப்பெயர் சொல்லும்அப் பாகங்கள் துன்னும் அச்சீர்
ஏற்ற எழுத்து வரினும் இயைந்தது இயற்பெயர்க்கே
ஆற்றும் பொருத்தம் அனைத்தும் பொருந்துதலாம் சிறப்பே

—ந.பா-மொ 15

தலைவன் பேர்ஊர் சாதித்து எதுகையின்
நிலையுறல் அனுவின் இறுத்தல் சிறப்பே

— இ.வி 885

## வழுவுறுப்பு

செய்யுள் வழு பற்றிய எண்ணம் யாப்பு—பாட்டியல்களுக்கு மட்டுமே உரிய தொன்றன்று. வழு—வழாநிலை—வழுவமைதிகள் ஐந்திலக்கணத்திற்கும் மொழிக்கும் பொதுவானவை. 'இவ்விவ் வாறு அமைதல் வேண்டும்' என்பது இலக்கணமாதல் போன்று 'இன்னின்னவாறு அமைதல் ஆகாது' என்பதும் இலக்கணம் ஆகின்றது. ஒன்று ஏற்கவேண்டிய விதி; மற்றொன்று நீக்க வேண்டிய வழு.

வடவெழுத்து இலக்கியத்தில் பயிலக்கூடாது எனும் உணர்வு அமைகின்றது. வழக்கும் மரபும் கருத்தில் கொண்டு, முன்னையோர் உரைத்தமை போற்றி அதற்கேற்பச் சொல் பயிலல் வேண்டும் எனும் தன்மையும் அமைகின்றது. மயக்கமின்மை, சிறந்த பொருள் நவிலல், இன்பப் பயன் என்பனவும் கருதப்பட வேண்டியனவாம்.

யாப்புப் பாட்டியல்களில் வரும் ஆனந்தம் எனும் இலக்கியக் கூறு பற்றிய எண்ணங்கள் இங்கும் இணையத்தக்கன.

வழக்குள் மரபியலுள் நேர்ந்து வழுவாது
இழுக்கி வடஎழுத்தை இன்பம்-வழுக்காது
முன்னையோர் பாட்டில் பயின்ற மொழியன்றே
சொன்ன உறுப்பின் துணிபு

— வெ.பா-பொ 5

தெற்ற வழக்கொடு தேர்ந்து உணர்வார்க்கு இன்பம் செய்தல் அன்றிப்
பற்றின் வடநூல் எழுத்துக்களே பழையோர் உரையின்
மற்றுஇவை இல்லையென்று ஓதல் உடன்படல் மரபு இயலாப்
பெற்றியுடைச்சொல் பழித்த, உறுப்பு என்று பேசுவரே

—ந. பா-மொ 16

தெளிந்த வழக்கொடு சிறந்த பொருள் படூஉம்
இன்பம் ஒரீஇ வடஎழுத்தே மிக்கு
முதிர்சொல் புணர்க்காது எதிர்சொல் புணர்த்து
மாலுறச் செய்தல் வழுவாம் என்ப

— இ.வி 886

அவை

இலக்கியம் அரங்கேறுதல், இலக்கிய அரங்கேற்றம் என்பதனொடு சார்த்திக் காணும்போது அவையின் தேவை ஏற்படுகின்றது. இலக்கியம் இயற்றுபவன் ஒரு பக்கமும் அதனைச் சுவைப்பவன் மறுபக்கமுமாக இணையும் போதே இலக்கியம் சிறக்கின்றது. இலக்கியத்தின் தரம் எவ்வாறு இயற்றுபவனைப் பொறுத்து இருக்கின்றதோ அவ்வாறே அதன் சிறப்பு உணர்பவனைப் பொறுத்தும் அமைகின்றது. இன்றைய நிலையில் நாம் திறனாய்வாளனுக்குக் கொடுக்கும் உயர்வை அன்றைய நிலையில் அவையோர்க்கு அளிக்கலாம். அவை சிறந்ததாய், நிறை மாந்தரை யுடையதாய் இருந்தால் இலக்கியத்தின் நிறை—குறைகளை நடுவுநிலையில் ஆய்ந்து தெளிந்து திறனுணரும் பாங்கு பொருந்தும். அவை தீயதாய், அறிவுக் குறையுடையோரால் நிகழும் ஆயின், இலக்கியத்தின் சீரும் சிறப்பும்வெளிப்பட வாய்ப்பின்றிப் போகும். பொன்னின் தன்மையை உணரும் கட்டளைக் கல்போன்று இலக்கிய இயல்பை அறியும் உரைகல்லாக அவை அமைதல் வேண்டும்.

புகழும் தருமநெறி நின்றோர்பொய் காமம்
இகழும் சினம் செற்றம் இல்லோர்-நிகழ்கலைகள்
எல்லாம் உணர்ந்தோர் இருந்த இடமன்றோ
நல்லாய் அவைக்கு நலம்

— வெ.பா-பொ 9

நலனடக்கம் செம்மை நடுவுநிலை ஞானம்
குலன் என்று இவை உடையோர் கோதில்-புலனில்லோர்
சென்று மொழிந்தனவும் கேட்போர் செறிந்த இடம்
அன்றோ நிறைந்த அவை

— ,, 10

அவையின் திறம் அறியார் ஆய்ந்துஅமர்ந்து சொல்லார்
நவைஇன்றித் தாம்உரையார் நாணார்-சுவை உணரார்
ஆய கலைதெரியார் அஞ்சார் அவரன்றோ
தீய அவையோர் செருக்கு

— ,, 11

அறம்திறம்பா நல்லறிவோர் அறுபத்து நாற்கலையும்
திறம் தெரிந்தோர் சினம் செற்றம் பொய் காமம்
சிதைக்கும்சித்தம்
மறந்து ஒருகாலும் ஒருபாற் படாதவர் மற்றுங் குற்றம்
துறந்தவர் தாங்களும் நல்லவையாம் என்று சொல்லுவரே

—ந.பா-மொ 20

பாங்காய் ஒருதிறம் பற்றுதவர் பல்கலைப் பொருளும்
ஆங்கே உணர்ந்தோர் அடக்கம் உடையர் அவரவர்கள்
தாம்காதலித்து மொழிவன கேட்போர் தருமநெறி
நீங்காத நாவர் இருந்திடு கூட்டம் நிறையவையே

— ,, 21

சொற்றபடி சொல்தாம் பெய்பவர் சொல்லும்
நற்சொல்லினையும்
குற்றம் இலதென்று குலாவி உரைப்பவர் கூறும் பரிசு
உற்றது உணர்ந்தோர் ஒருபாற்படுபவர் பொய்யுரைப்போர்
செற்றம் சினத்தொடு சேர்ந்தோர்இருப்பது தீயவையே

— ,, 22

பாடவம் பேசிப் பலகால் நகைசெய்து பாங்குரைத்து
நாடகம் காட்டி ஓர்நாயகம் இன்றி நவிலும் நன்னூல்
ஏடகம் நோக்காது இகலே பெருக்கி அறத்தை விட்டுக்
கூடகம் செய்து பொய்கூறு இருக்கும் குறையவையே

— ,, 23

ஆறுட் பகைசெற்று அருங்கலை யோர்ந்து
பாரில் கீர்த்தி படைத்தோர் வைகுதல்
நல்லவை, அடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லும் நன்மை யுடையோர் தொகைஇ

வல்லார் மொழியினும் வல்லுநர் ஆக்கிக்
கேட்போர் உறைஅவை நிறையவை ஆகும்

—இ. வி 936

## மரபு

தொல்காப்பியரின் மரபியல் செய்திகளை இ.வி, பாட்டியலின் இறுதிப் பகுதியில் அடக்குகின்றது. பெரும்பாலும் காப்பியத்தையே அடியொற்றி யமைந்த இ.வி, பொருளதிகாரத்தின் ஒன்பது இயல் களில் காப்பியம் கூறியதைத் தன் ஐந்து இயல்களில் அடக்கு கின்றது. மெய்ப் பாட்டுச் செய்திகளை அகத்திணையியலின் ஒழி பாகத் தருகின்றது; மரபியல் செய்திகளைப் பாட்டியலில் உட்படுத்து கின்றது.

மரபுக்கு விளக்கமும், இளமைப் பெயரும், ஒன்றுமுதல் ஆறறிவுயிர்களும், ஆண்பெயரும், புல் மர வகையுறுப்புக்களும் பிற யாப்புப் பாட்டியலில் இன்மைபற்றி யிங்குச் சேர்த்துத் தரப் படுகின்றன.

வழக்கு மரபும் செய்யுள் மரபும் என்று
இழுக்கில் மரபு ஓர்இருவகைத்து ஆகும்

—இ. வி 908

அவற்றுள்,
வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கண் ஆகலான

— ,,909

பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும்
குழவியும் என்றுஇவை இளமைப் பெயரே

— ,, 910

சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங்காலை அவைஅல இலவே

— ,, 911

ஒன்றறிவதுவே உற்றறிவ துவே
இரண்டறிவதுவே அதனொடு நாவே
மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
ஆறறிவதுவே அவற்றொடு மனன் என
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே

— ,, 912

புல்லும் மரனும் முரளும் நந்தும்
சிதலும் எறும்பும் ஞெண்டும் தும்பியும்
மாவும் மக்களும் மேவும் அவ்அறிவே

— இ.வி 913

அக்கிளைப் பிறப்பும் அவ்அறிவு உறும் என்ப

— ,, 914

ஒருசார் விலங்கும் அதுஎன மொழிப

— ,, 915

ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் உம்பலும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயர் என மொழிப

—,, 916

பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே

— ,, 917

புறக் காழனவே புல் என மொழிப

— ,, 918

அகக் காழனவே மரம் என மொழிப

— ,, 919

தோடே மடலே ஓலை என்று
ஏடே இதழே பாளை என்று
ஈர்க்கே குலைஎன நேர்ந்தன பிறவும்
புல்லொடு வரும் எனச் சொல்லினர் புலவர்

— ,, 920

இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனை உள்ளுறுத்த அனையவை எல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி என்ப

— ,, 921

காயே பழமே தோலே செதிளே
வீழோடு ஒன்றுங்கு அவையும் அன்ன

— ,, 922

## உவமை

உவமை ஆட்சியிலும் சில மரபுகள் பின்பற்றப் படல் தேவை
உவமை ஆட்சியிலும் சில மரபுகள் பின்பற்றப் படல் தேவை. பெண்டிரின் எனும் உணர்வு நவநீதப் பாட்டியலில் அமைகின்றது.

இளமைப் பருவத்திற்கேற்ற உவமைகளும், அரிவை முதலியவர்க்குத் திருவை உவமித்தலும் சுட்டப்படுகின்றன. அரசனைப் 12முதல் 16 வயதுவரை முருகனுடன் உவமிக்கலாம். அரசரில்லாதோர் அரசனுக உவமிக்கத் தக்கவராம்.

மானின் இளங்கன்று மஞ்ஞையின் பிள்ளை மதிக்குழவி
தேனின் அமுதம் தெள்ளா நறவம் செழுங் கற்பகப் பூங்
கான்நிற நீர்வல்லி கல்லாத கிள்ளை கரும்பின் முளை
ஊன்நிற வேற்கண் மடவார்க்கு இயைந்த உறுப்புக்களே
— ந.பா-மொ 17

முருகன் உவமை முந்நான்கு முதல் எண்ணிரண்டு வரை
அரசர்க்கு உரித்து, அவர் தம்மோடு உவமை அல்லார்க்கு உரித்துத்
திருவோடு உவமை அரிவை முதலிய சேயிழையார்
பருவத்து உரித்துஎன்ன ஓதுவர் தொன்னூல் பருணிதரே
— ,, 18

## நால்வருணம்

தொல்காப்பிய மரபியல் செய்திகள் பற்றிய உணர்வு பாட்டியல் தரும் வருணக் கேட்பாடினைப் புரிந்து கொள்ளத் துணை நிற்கின்றது. நால் வகை வருணத்தார்பற்றிய குறிப்பு (1570—1584) அங்கு அமைவது பொருத்தம் என நினைந்தால், பாட்டியலிலும் அதன் வரவினை ஏற்கலாம்.

இலக்கிய மாந்தர் எனும் நிலையில் பொருள் வெளியீட்டிற்குத் துணையாக இச்செய்திகள் அமையலாம் எனும் எண்ணத்துடன் இவை தரப்படுகின்றன போலும். அவர்களைப்பற்றிய குறிப்புக்கள் மரபு பிறழா வண்ணம் அமைதல் தேவை எனும் நிலையில் இவை பொருந்துகின்றன எனலாம்.

இ.வி, தொல்காப்பியத்தைப் பின்பற்றிப் பொதுவாகத் தலைமைக் குணத்திற்கேற்பச் சொல்லும் பாராட்டுரை அவரவர் தொழிற்கேற்ப அமையும் எனக் கூறுவதையும் இங்கு நினைக்கலாம்.

தலைமைக் குணச்சொலும் தத்தமக்கு உரியதோர்
நிலைமைக்கு ஏற்ப நிகழ்த்துக என்ப
— இ.வி 923

நால்வகை வருணத்தார் பற்றிய செய்திகள் முறையே தரப்படுகின்றன.

### அந்தணர்

குன்றுநூல் அங்கைமறை கோவணம்கோல் முத்தீயும்
நன்றாய வேள்வி நளினமும் — அன்றிக்

குடைசமிதை குண்டிகைபுல் கோத்திரம் என்றின்ன
உடையாரை அந்தணர் என்று உன்னு

— வெ.பா-பொ 12

உன்னல் அரன்கழலை ஓங்கியசீர் அங்கிஅயன்
என்ன உவமித்தல் இவரென்றே - நன்மறைகள்
ஓதலே ஓதுவித்தல் வேட்டலே வேட்பித்தல்
ஈதல் இரத்தல் என்று ஏத்து

— ,, 13

கோல்குடை கோவணம் நான்மறை முத்தீக் குசை தருப்பை
மால்கழல் வாழ்த்தல் இரண்டு பிறப்பு மணை சமிதை
தோல் ஐந்து வேள்வி கரகம் அரவிந்தம் தொல்கோத்திரம்
நூல் இருமூன்று அங்கம் அந்தணர்க்கு ஓதுவர் நூலவரே

— ந.பா-மொ 5

ஈதலும் வேட்டலும் ஓதலும் வேதம் இயற்றுவிப்பார்
ஆதலும் அங்கி அயனோடு உவமை அவர் எனவே
ஓதலும் பூசுரர் என்றலும் நான்மறையோர்க்கு உரிய
போதினும் வெற்பினும் நாவினும் மேவும் புனையிழையே

— ,, 6

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய

— இ.வி 924

அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே

— ,, 928

அரசர்

ஏத்திய பூவைநிலை எல்லோன் கழல் வாழ்த்தல்
காத்தல் முடிசூட்டல் களம்வேட்டல் - தீத்தொழில்கள்
வெண்குடை செங்கோல் கவரி வெற்றியரியாசனமும்
மண்குலவு மன்னர் வளம்

— வெ.பா-பொ 14

வளர்த்தல் குடிகமையம் சதுரங்கம் வாய்மை
விளைத்தல் பொருள்நெறியா மெய்ந்நூல் - அளத்தலே
உம்பர் உவமை உரைகோள் இவையுடையார்
இம்பர் உலகுக்கு இறை

— ,, 15

பூவைநிலை பகலோன் கழல்போற்றல் புனைதல்முடி
தேவர் உவமை சிங்காசனம் செங்கோல் குடைகவரி
காவல் நிகழ்த்தல் எரிவேட்டல் ஓதல் கடல்அமுதம்
மேவல் அடுகளம் வேட்டல் பண்பாயின வேந்தர்கட்கே

— நா.பா-மொ 7

விளங்கிய நூல்கற்றல் வேதநெறிநின்று அறுசமயம்
உளங்கொண்டு போற்றல் அமைச்சர் உரைகொளல்
ஓர்ந்து குடி

தளர்ந்தன தாங்கல் முறைமை கெடாது தனம் பெருக்கல்
அளந்து பெரும்படை சேர்த்தல் அரசர்க்கு அடுத்தனவே
— ந.பா-மொ 8

தானைத் தலைவரை ஏவல்பெற்றூரைத் தனிவெண்குடைக்
கோனை அடுத்த பகைவரைக் கூறலும் கோற்றொழிலால்
ஏனைக் குறுநில மன்னவர் தங்களை மன்னர்என்ன
மானப் புகழ்தலும் செய்யுள்மொழியின் மரபு என்பரே
,, 13

படையும் குடையும் கொடியும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய
— இ. வி 925

வணிகர்

இறையஞ்சாது ஏர்உழல்வித்து ஈதல் புரிந்து
மறைகொண்டு அழல்வளர்த்து வாய்மை-பொறையுடைமை
என்று இவையும் காத்து நிரையோம்பல் என்பவே
குன்றா வணிகர் குணம்
— வெ.பா-பொ 16

குணம்கோடாக் காத்தல் கொழுநிதிக்கோன் தன்னை
வணங்கல் அவன்புகழே வாழ்த்தல்-அணங்கார்
இடத்துஏகி வாணிகத்தால் ஈட்டல் எரிவேட்டல்
படைத்தோர் வணிகர் என்பார்
— ,, 17

இருபிறப்பு ஓதல் எரிவேட்டல் ஈதல் இருநிதியம்
வருதிறத்தான் நல்ல வாணிபம் செய்தல் நிரைவளர்த்தல்
பெருநிதிக்கோன் கழல்பேணல் அவன்என்று பேச நிற்றல்
உரிமை தப்பா வணிகர்க்கு இயல்பாம் என்பர் ஒண்ணுதலே
— ந.பா-மொ 9

உறுவது கோடல் வருபயன் தூக்கல் உழவின் தொழில்
இறுவது அஞ்சாமை இடரில்தெளிதரல் ஈட்டுதற்கு
நெறிபல போதல் முனிவுஇலன் ஆதல் நிரைவளையாய்
குறி எனலாகும் குலவணிகர்க்குக் குவலயத்தே
— ,, 10

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை
— இ. வி 926

வேளாளர்

பார்திகழும் மூவர் பணித்த பணி ஒழுகல்
ஏர் உழுதல் ஈதல் பிழைபாமை-பார்புகழ க்

கோட்டம் இலாமை ஒருமைக்குணம் பிறவும்
காட்டினூர் சூத்திரர்தம் கண்

— வெ.பா-பொ 18

திருந்திய நல்லறம் தீராத செல்வம் ஒழுக்கம் மேன்மை
வருந்திய சுற்றத்தை ஆற்றுதல் மன்னர்க்கு இறை இறுத்தல்
பொருந்திய ஒற்றுமை கோடல் புகழும்வினை தொடங்கல்
விருந்து புறந்தரல் வேளாண்குடிக்கு விளம்புவரே

— ந.பா-மொ 11

வாணிபம் செய்தல் உபகாரம் ஆசாரம் வாய்ந்த செயல்
பேணி உழுதல் இருபிறப்பாளர் நெறிவழுவா
ஆணை வழிநிற்றல் ஆனிரை போற்றல் அகன்ற அல்குல்
பூண்முலையாய் இவை வேளாண் குடிக்குப் புகன்றனரே

— ,, 12

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லைஎன மொழிப பிறவகை நிகழ்ச்சி

— இ.வி 927

## நூல்

காப்பியரின் மரபியலின் இறுதிப்பகுதி, நூல், உரை, குற்றம், உத்தி பற்றிய செய்திகளைத் தருகின்றது. செய்யுள் உறுப்பாகிய யாப்பினையும், அளவினையும் விரித்தபோது நூல், உரை என்பன வற்றிற்குத் தந்த விளக்கத்தினின்றும் மரபியற் பகுதியின் செய்தி சிறிது வேறுபட்டது. இ.வி, நூற்பற்றிய எல்லாக் குறிப்புக்களை யும் இணைத்துப் பாட்டியலில் தந்துவிடுகின்றது. வெ.பா, ந.பா ஆகியன நூல் பற்றிய கருத்துக்களைப் பொதுவியலில் உரைவகை, உத்தி முதலியவற்றுடன் தொகுத்துத் தருகின்றன. காப்பியம், இ.வி கூறியன தொகையின் செய்யுளியல் பகுதியில் தரப்பட்டதால், வெ.பா, ந.பா கூறுவன மட்டும் இங்குத் தரப்படு கின்றன.

பயன்நான்காய் மூவகைத்தாய் பன்மூன்று உரைத்தாய்
இயல்உடைத்தாய் மூவாமல் ஏழு-செயன்மதத்தாய்ப்
பத்தாய்க் குணம், குற்றம் பத்துஒழிந்து எண்ணான்காம்
உத்தியது நூல் என்று உரை

— வெ.பா-பொ 23

உரைத்த நதி சீயமோடு ஒண்பருந்து தேரை
நிரைத்த தொழில் சூத்திரத்தில் நின்று-விரைக்குழலாய்
செம்பொருள் ஞாபகமாம் செய்தி நியதியாம்
கம்பமிலா நூலின் கருத்து

— ,, 24

கருத்து எச்சம் நுட்பம் பொழிப்பு அகலம் காட்டி
உரைத்த உதாரணமும் உண்டேல்-விருத்தியாம்

பூண்ட கருத்தும் பொழிப்பும் உதாரணமும்
காண்டிகை என்று ஓதல் கடன்

— வெ.பா-பொ 25

முதல்வழி சார்பு என மூவகைத் தந்திரம் சூத்திரமும்
உதவு விருத்தி உயர் தருமம் முதல் நான்கு ஏழ்வரை
மதவிகற்பம் பத்துக் குற்றத்துத் தீர்ந்து பத்துக் குணத்தின்
நுதலும் பதின்மூன்றுள் முப்பத்திரண்டுள நூல்நெறியே

— ந.பா-மொ 4

## பாயிரம்

பொதுப் பாயிரம், சிறப்புப் பாயிரம் என இருவகைப் பாயிரங்கள் உள.

பாயிரத்தில் கடவுள் வாழ்த்து அமைதல் பண்டைய இலக்கண இலக்கியங்களில் காணப்படவில்லை. பாட்டியலார் பாயிரம் பற்றி நினைக்கும்போது, தெய்வ வணக்கத்தினையும் சுட்டுகின்றனர். ந பா, இக் கூறு அதிகாரத்தின் முன் அமையும் என்கின்றது; வெ.பா,சிறப்புப் பாயிரத்தின் கூறாக இதனைத் தருகின்றது.

கடவுள் வணக்கம் இன்றியும் அமையலாம் எனும் கொள்கையும் இவண் காணப்படுகின்றது.

### பொதுப் பாயிரம்

பெயரார் நூல்ஈவோன் இயல்பு ஈயும் பெற்றி
அயராது கொள்வோன் அளவும்-அயர்வின்றிக்
கோடல்மரபு ஈரிரண்டும் கூறல் பொதுப்பாயிரமாம்
பாடல்சால் நூலின் பயன்

—வெ.பா-பொ 22

ஈவார் இயல்பு இவை ஈகை முறைமை இவை உணர்தல்
ஆவார் திறம்இவை கேளாய் அலாதியிந் நாற்பகுதி
தாவாது உரைத்தல் பொதுப் பாயிரம் தனிவானவரை
ஓவாது இறைஞ்சி அதிகாரம் முன்னர் உரைப்பார்களே

—ந.பா-மொ 1

### சிறப்புப் பாயிரம்

கண்ணுய தெய்வம் இறைஞ்சிக் கருதுநூல்
பண்ண அதிகாரம் பாரித்தல்-எண்ணும்
மதியோர் சிறப்பென்பர் வானவரை வாழ்த்தா
அதிகாரமும் சிறப்பு என்று ஆக்கு

—வெ.பா-பொ 19

ஆக்கியோன் பேர்வழியே எல்லை யாப்புஅந்நூல்
போக்கிடம் சொல்வோர் நுதலிற்றூய பயன்-தாக்கியஇவ்

எட்டினுடும் காலம் களம் காரணம் இயம்பப்
பட்டாலும் அப்பெயரே பன்னு

—வெ.பா-பொ 20

பன்னிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
துன்னும் பயன்அளவும் சொல்லினும்-முன்னைச்
சிறப்பாம் அவற்றுள் சில ஏறினும்
பெறப்படுமாம் முன்னைப் பெயர்

— ,, 21

செய்தான் செயப்பட்டது செய்பொருள் அதுசெய்திறத்தோடு
எய்தும்பயன் இன்னதன்வழி எல்லை எனவொரெட்டும்
ஐயமில் காலம் அவைகாரணமாகப் பத்தொடு ஒன்றும்
மெய்தெரியில் சிறப்புப் பாயிரம் என்ன வேண்டுவரே

—ந.பா-மொ 2

நூற்பெயர் நூல்செய்த ஆசிரியன் பெயர் நூல்விளங்கித்
தோற்றிடச் செய்தற்குக் காரணம் யாப்புத் தொன்னூலின்
வழி
பாற்படும் எல்லை அறிதற்பயன் இவையும் சிறப்பின்
மேற்படு பாயிரம் என்று ஆசிரியர்கள் வேண்டுவரே

— ,, 3

பாயிரம் பொதுச்சிறப்பென இருபாற்றே

—இ. வி 889

## பா புனையும் நல்நேரம்

'கன்னல்' எனும் தலைப்பில் எழுத்தியலின்கீழ் ப.பா சில செய்திகளைத் தருகின்றது. நாழிகையும் எழுத்தும் தொடர்புற்றமையும் இப்பகுதியோடு ஓரளவு ஒப்புமை காட்டி இ.வி, வெ.பா, தரும் சில குறிப்புக்கள் அமைகின்றன. நாழிகையினை அறுவகையாகப் பகுத்து, உயிரெழுத்துக்கள் இவ்விரண்டுடன் பொருத்துகின்றனர். ப. பா, எழுத்தை அடிப்படையாக்கி, முதல் மூவகையால் புனையும் செய்யுள் சிறக்கும் என்கின்றது. இ.வி, முதல் மூன்று வகை நாழிகையாகிய நல்நேரத்தில் புனையப்படும் செய்யுள் சிறக்கும் என்கின்றது. வெ.பா, இந் நாழிகைகளை, இவ் வெழுத்தால் தொடங்கும் இலக்கியங்களை அரங்கேற்றகுரிய நல்நேரம் என நினைக்கிறது.

கடனும் அகர ஆகாரம் கதிரோன்
உடனாய் எழுங்கடிகை ஓராறு-இடனாகி
ஏனை உயிர்க் கூறும் இவ்வகையால் வந்துதித்தால்
ஆன முதல்மூன்றும் அழகு

—வெ பா-பொ 26

அகரமும் இகரமும் உகரமும் எகரமும்
ஒகரமும் இனத்தோடு உதிக்கும் ஐ ஔவும்

உதயம் தொடங்கி ஓர் ஆறுறு ஆக
விதம்உறும் கடிகை எண்ணும் நண்பகலின்
முதல்ஒரு மூன்று நன்முகூர்த்தமாக
அகலக் கவி புனைந்து இன்புறல் கடனே

— இ.வி 937

## நாமகளை ஏற்றல்

நன்னேரம் நோக்கி அரங்கேற்றல் வேண்டும் எனும் கருத்தினைத் தொடர்ந்து, அவ்வாறு இயற்றுவதற்கு முன் நாமகளை, அறிவுக்கு அரசியாகிய கலைமகளை ஏற்றுதல் வேண்டும் என்பது குறிக்கப்படுகின்றது.

சாந்தின் மெழுகித் தரளத் திரள் பரப்பிக்
காந்தி மணி கனகம் கண்ணுறீஇ-வாய்ந்தலர்ந்த
தாமமும் நாற்றி விளக்கிற்குச் சால் தவிசில்
நாமகளை ஏற்றுவித்தல் நன்கு

—வெ. பா-பொ 29

நல்ல இடம் மெழுகி விளக்கேற்றி நறுமலர் தூய்
நெல்லும் பரப்பித் தன்மேல் விதானித்து நிறைகுடமும்
பல்வகையான பிரப்பும் கொணர்ந்து பயன் அறிய
வல்லவர் கூடிக் கலைமகள் பாதம் வணங்குவரே

— ந. பா·மொ 34

## அரங்கேற்றம்

ந.பா, விரிவாகப் பல படி நிலைகளில், பாடலை அவையோர் முன் அரங்கேற்றி இசைவுபெறலைச் சுட்டுகின்றது. வெற்றியும் தோல்வியும் குறிக்கப்படுகின்றன. அவையோர் சுட்டிய வழுக்களை நீக்கி நூலையமைத்தல் இயல்பு எனவும் கூறப்படுகின்றது. இ.கா, அவி என்பன சில செய்திகளை, ஓலை யியல்பு,அவைபுகுநெறி போன்றவற்றைத் தருகின்றன.

ஓலைய திலக்கணம் உரைக்குங் காலை
நாலாறு விரற்றுனம் நான் மறை யோர்க்குப்
பார்த்திபர் தமக்குப் பதிற்றிரட்டி விரலே
வணிகர்க் கெண்ணிரு விரலே
சூத்திரர்க் கிராறு விரலே
இப்பரிசே பாட்டு எழுதவும் படுமே

— இ.கா 44

தூக்கியல் வகை யோலையைச்
செவித்திறங் கொள்ளாது தெரியுங் காலைத்
தானே நம்பி மகனே மாணி
ஆசான் என்றவரில் ஒருவர் இழுக்கிலைக்

குற்றம் வகுத்து உடன்படாமற் சொல்லின்
வென்றியும் பெறுமே

— அவி 129

அவை புகுநெறியே ஆயுங் காலை
வாயினி லுரைத்துக் கூடிப் புகுங்காலை
இருவரும் புகாஅ ரொருவர் முன்புகிற்
புக்கவன் றலையு முய்த்தெனு முண்மையின்
இருவருங் கூடி யொருங்குடன் பட்ட
தெரிவுட னுணர்ந்தார் செப்பின ரென்ப

— ,, 130

குற்றம் இல்லா ஓலைதன்னில் குலவு வெண்பா மன்னனைச்
சொற்றதோர் பாவால் அரசரைப் பேசிப் பொருள்திறத்தின்
உற்றவை என்றுஒன்று தன்னால் உரைப்பவன் தன்னைச்
சொல்லி
மற்றவன் தன்னையும் பின்னே உரைத்தல் மரபு என்பவே

—ந. பா-பொ 24

கதம்படல் இன்றிக் கருதிய மோற்கோளும் எய்துவிக்கும்
மதம்படக் கூறி எடுத்துக்காட்டு ஏற்றி அளவைநெறி
விதண்டை வாதம் சற்பம் என்னும் இவற்றின்மேலோர்
உரைத்த
மதங்க நெறி சொல்ல வல்லவர் வாதினில் வல்லவரே

— ,, 25

பொருளல்ல கூறல் புனருத்தி தோன்றுதல் புன்சொற்களால்
மருள வழங்கல் வழுப்படச் சொல்லுதல் மற்று ஒன்றினைத்
தெருள உரைத்தல் பயனில சொல்லுதல் செய்யில்தொன்னூல்
தெரிபவர் எல்லாம் அவன் தொலைந்தான் என்று செப்புவரே

— ,, 26

கோணத்து இருப்பினும் கோபம் பெருக்கினும் குற்றம்என்று
நாணத்தகும் அவை நாவில் பயிலினும் நாடி நன்னூல்
ஆணைப் படியன்றி அல்லவை சொல்லினும் ஆங்கிருந்தோன்
காணப் பொய்கூறினும் தோல்வி என்று ஓதுவர்

— ,, 27

நல்லவைக் கண்ணும் நிறையவைக் கண்ணும் நயந்து ஒருவன்
சொல்லிய வாதினில் தோற்றலும், தான் தொலைவல்ல என்ப
வெல்லுவன் என்னின் மிகச்சிறப்பு எய்தி விளங்கும் என்ப
அல்லவை தன்னின்முன் வெல்லினும் ஆகும் அவர்க்கு
இழுக்கே

— ,, 28

புகழ்ந்த நன்னாளில் புகன்ற முகூர்த்தத்தில் புள் பொருந்தின்
திகழ்ந்த நன்மங்கலம் சொல்முதல் யாவும் தெரிந்துகொண்டு

பகர்ந்தவர் செய்யுளைப் பல்கலை வல்லோர் தமக்கு உணர்த்தி
இகழ்ந்தன நீக்கி முறையே வகுத்தல் இயல்பு என்பரே
— ந.பா-மொ 33

## பாடலை வாங்குதல்

பவலன் புனைந்த பாவிலக்கியத்தைப் பெறும் நிலையிலும் சில பழக்க வழக்கங்கள் அமைகின்றன. பாடல் தலைவன், பாவலனுக்கு உரிய வரிசைகளையும், பரிசுகளையும், உயர்வையும் அளித்தல், பாவலனுக்கிருந்த மதிப்பையும், பாடப்பெறலின் சிறப்பையும் உணர வாய்ப்பாகின்றது:

ஆங்குத் தலைவன் பலபடியானும் அலங்கரித்துப்
பாங்கிற் பெருந்தவப் பாட்டியற் பாட்டினை நன்குணர்ந்து
பூங் கற்பகம் போல் நவமணி யாடைகள் பொன்பொழிந்து
வாங்கிக் கவிமுறை வந்தனை செய்க மரபென்னவே
— ந.பா-மொ 35

செய்யுள் கொளும் இடம் சித்திரத் துகிலின்
அரத்த விதானத்து அலங்கல் நாற்றித்
தோரணம் கதலித் துவசம் உயர்த்திப்
பூரண கும்பம் பொன்முளைப் பாலிகை
வெண்பொரித் தீபம் மிளிர்தர அமைத்துப்
பல்லியம் இயம்பப் பாவையர் ஆடப்
பாணரும் மகளிரும் ப்ல்லாண்டு இசைதர
அந்தணர் நசைதர வாழ்த்த ஒண்பூ
மலராடை புனைந்து ஒரு தவிசின் மேவி
எதிராய் வேறுமோர் தவிசின் இருந்து
மங்கலப் பாடல் ஏற்று உளம் மகிழப்
பொன் புவி வத்திரம் பூண்பன பிறவும்
உதவி ஏழடி புலவனுடன் போய்
மீள்வது கடன் என விளம்பினர் மேலோர்
—பிர 31

கொள்ளும் இடம் விதானித்துத் தொடையல் நாற்றிக்
கொடி கதலி தோரணம் பாலிகை நீர்க்கும்பம்
துள்ளுபொரி விளக்குஒளிர முரசுஇயம்பத்
தோகையர் பல்லாண்டு இசைப்ப மறையோர் வாழ்த்த
வெள்ளை மலர் துகில்புனைந்து தவிசின் மேவி
வேறும்ஒரு தவிசுஇருத்திச் செய்யுள் கேட்டே
உள்ளமகிழ் பொன்புவி பூண்ஆடை மற்றும்
முதவி ஏழடி புலவனுடன் போய் மீளே
—சி.பா-ம 18

செயிர்தீர் புலவன் செய்த செய்யுளை
உயர்தரு மன்றின் ஒளிமணி விளக்கொடு

மங்கலம் பொலிய மறையோர் வாழ்த்தத்
தொங்கல் கமழத் தூரியம் இயம்ப
அஞ்சொல் மாதர் செஞ்சொல் வாழ்த்தெடுக்க
வெண்துகில் புனைந்து வேறு தவிசிட்டு
எண்திசை பரவத் தண்தமிழ் கொண்டு
தண்ணடை மதாணி தமனியம் களிறு
பண்ணமை இரதம் பாய்பரி உதவி
ஏழடி பின்போய் மீள்வது மூவர்
வாழ் தமிழ் நாடர்க்கு வகுத்தனர் புலவர்

— இ.வி 939

## பாடலும் நன்மை தீமையும்

அங்கதப் பாடலும், அறம் பாடுதலும், மந்திரச் செய்யுளும் பயின்ற காலத்தில், ஆக்கும் ஆற்றலும், அழிக்கும் ஆற்றலும் மொழிவழியாகப் பாவழியாகப் பாவலனுக்கு உண்டு என்ற நம்பிக்கையும் இருந்தது. பாட்டியல்களும் அமுதெழுத்து, நஞ்செழுத்து, மங்கலம், ஆனந்தம் ஆகியவற்றைக் கூறுவதால் இக்கருத்தின் தொடர்ச்சியை உணர முடிகின்றது.

பாடலின் தீமை பாடப்பட்டோனை அழிக்கின்றது; நன்மை அவனுக்கு நலன் நல்குகின்றது. பாவலன் தேவர்க்குத் தீது மொழிந்தால், அத்தீமை அவனையே தாக்கும் எனும் கருத்தும் நிலவியது.

அழகாக முன்மொழிக்கண் ஆராய்ந்தனவும்
அழகாகச் சொல்லினவும் அன்றி - அழகாகச்
செய்யுட்கு உரைத்தனவும் எல்லாம் செயிர்தீரச்
செய்யின் நன்று, அன்றுயின் தீது

— வெ.பா-பொ 27

தீதிலா நூல்உரைத்த தீதிலாச் செய்யுளைத்
தீதிலோர் நல்லவையிற் சேர்த்ததற்பின் - ஆதிசொல்
பாவிற்கு இயைய உரைக்கில் பலபொருளும்
தாவில் பொருளோடும் சார்ந்து

— ,, 28

பரவிய பாவலர் பாக்கொண்டவர்க்குப் பரிசில் திறம்
வரிசையின் நல்காது ஒழியின் ஆனந்தமாம் மற்றவர்கட்கு
உரைசெய்த எல்லாம் வசையாய் உயர்ந்தோர் விரும்பல் இன்றித்
தரையினில் நிற்கும் பெரும்பழியாம் என்று சாற்றுவரே

— ந.பா-மொ 36

இறப்ப உயர இறப்ப இழிய இசைக்கும் செய்யுள்

திறத்தன யாவையும் தீது என்று உரைப்பர்; செப்பாது ஒழிந்த
புறத்து உளவாயினும் தொன்னூல் நெறிமேல் புகலப்படும்
நிறத்தில் குவளையும் காவியும் போலும் நெடுங்கண்ணியே
— ந.பா-மொ 37

கொள்ளான் பனுவலைக் கொள்வோன் தனக்குப்
பெயர் முதல் அவற்றைப் பெயர்த்தும் அழித்து
மீட்டு ஒரு பேரின் விரைந்ததிற் சேர்த்தி
மொழிந்த வழுக்களான் முன்மொழி எடுத்து
வைத்தவன் இயற்பெயர் தோறும் மான
செய்யுட் பெயர்த்துச் செந்நூல் சுற்றி
அதன்மிசைச் செம்மலர் அணிவுறச் சாற்றிக்
கவர்த்த தெருப்புறத்துங் காளி கோட்டத்தினும்
உவர்ப்புறு மயானத்தும் எருக்கம் சிரித்துப்
பாம்புஉறை புற்றினும் பாழ்மனை இறப்பினும்
ஆங்கு அவன்தனை நினைந்து அகம் நொந்து சுடினே
ஈராறு திங்களில் இறுதி ஆவன்
இங்ஙனம் இயற்ருது இதயம் நொந்து கொண்டு
இருக்கினும் கிளையொடும் இறுதி ஆவன் என்று
ஓதினது அகத்தியர் உண்மைநூல் நெறியே

— பிர 34

எழுத்து முதலிய இலக்கணம் ஐந்தினும்
மங்கலம் முதலாய் வகுத்த முன் மொழியினும்
சான்ருேர் விதித்த தன்மையின் வழுவாது
தொடையின் முறையில் நிற்கக் கேட்கச்
செல்வமும் சீர்த்தியும் சிறக்கும் வாழ்நாள்
தரும் மகப்பேற்ருெடு தருமம் உடைத்தாய்
மனத்துயர் நோயின்றி தருமமும் நீடும்
வழுவுறத் தொகுக்கும் அக்கவி கேட்கில்
செல்வம் அகலும் தீரா நோய் உறும்
சுற்றமும் புகழும் சூனியம் ஆகும்
கால மிருத்தும் கடுகி வந்திடும்
சகத்தவர்க்கு ஈதன்றித் தேவர்க்கு என்னில்
தப்பாது இப் பலன் கவி சாற்றினவற்கே

— ,, 35

உடம்படச் செய்யான் செய்யுள் பிறர்பால் கூறில்
உற்ற திரு அவனிடைப் போய் ஒதுங்கும், அன்றித்
திடம்பெறச் செய்யுள் வரைந்து செம்பூச் சூட்டித்
தெருவு மயானம் புற்றுக் காளிகோட்டத்து

இடந்தனில் அங்குஅவன் தன்னை நினைந்து சுட்டால்
ஈராறு திங்கள்தனில் இறுதி ஆவான்
தொடர்ந்து செயாது உளம்நொந்தால் சுற்றத்தோடும்
தொலைவன் இஃது உண்மை அகத்தியன் தன் சொல்லே
— சி.பா-ம 19

அகத்தியன் சொல் எழுத்துமுதல் குற்றம் செய்யுட்கு
அடையாமல் தொடைகொண்டால் அடையும் செல்வம்
அகத்துயர்நோய் அகலும் அகலாது சுற்றம்
வாணும் அதிகம் வழிமரபு நீடும்
தொகைக் குற்றம் பாட்டுஉறின் செல்வம்போம் நோய்ஆம்
சுற்றம் அறும் மரணம் உறும் சோரும் காலும்
சகத்தவர்க்கு ஈதன்றியே தேவர்க்கு ஆகில்
தப்பாது இப்பலன் கவிதை சாற்றினர்க்கே
— ,, 20

முன்மொழிக்கு என்று மெழிந்தவும், பெயர்ப்பால்
நன்மை தருஉம் நயனும் ஆராய்ந்து
ஒண்மையிற் புலவன் உரைத்த கவியை
வண்மையிற் புனைந்தோர் வான்புகழ் உருவான்
மாமதி பரிதியாம் எனச் சிறந்து
மன்னி வீற்றிருப்பார் இந்நிலத்து உயர்ந்தே
—இ.வி 940

பன்முகம் கொண்டு பரந்த பொருளைச்
சொன்முகத்தான் அவை துணைமை எய்தக்
கூறற்கு அரிய ஆயினும் கூறிய
பொருளொடும் இனத்தொடும் தெருளுற அமைத்துச்
சொல்ல வல்லுநர் எல்லையின் விளங்கிக்
கலைமகளொடும் திருநிலை பெற வாழ்வர்
மலைமகள் ஒருபால் மணந்தான் எனவே
—,, 941

## புறநடை

சில புற நடைகள் நவநீதப் பாட்டியலில் நினைக்கப்படுகின்றன.

சக்கரமே முதல் சித்திரச் செய்யுள் தசாங்கங்களை
அக்கரக் கூறுபடுப்பினும் ஆனந்தம் அல்லவற்றின்
இக்குணம் இல்லாமையான் சொன்ன இவையும் அன்றி
மிக்குள யாவும் இமையோர்க்கு இலக்கு விலக்கிலவே
—ந. பா-செ 42

பாவானவை இசை தம்மில் பயிறல் அப்பாவினத்தில்
தாவாத வெண்செந்துறை சந்தம் தாண்டகம் தாம்அனைத்தும்

மேவாத வல்லவினைப் பாத் தமிழ்வெற்பின் வேதமுனி
நாவார் தமிழ்நடைக்கே புணர்த்திக் கொள்க நன்னுதலே

— ந.பா-செ 43

## பாட்டியல் முடிபு

நன்கு உணர்ந்தோர் ஆய்ந்த தமிழ்நூலின் நன்னெறியை
முன்பு உணர்ந்து பாட்டியல்நூல் முற்றுணர்ந்து-பின்பு
உணரும்
நல்லார்முன் நல்லாய் நலமார் கவியுரைக்க
வல்லாதல் அன்றே மதி

—வெ. பா-பொ 30

# பிற்சேர்க்கை

## அறுவகை இலக்கணம் - ஏழாம் இலக்கணம்

அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம் என்ற இரு நூலை இயற்றியவர் முருகதாச சுவாமிகள் என்றும் திருப்புகழ் சுவாமிகள் என்றும் விளங்குகின்ற தண்டபாணி சுவாமிகள் ஆவர். இவர் வண்ணத் தியல்பு எனும் நூலின் ஆசிரியரும் ஆவர். சென்னையில் அஷ்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்களால் அறுவகை இலக்கணம் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதன் ஆண்டு முதலியன தெளிய இயலவில்லை (விஜய ஸ்ரீ கடகரவி).

அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம் ஆகிய இரண்டன் கண்ணும் யாப்புப் பற்றிய செய்திகள் உள.

எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற ஐந்திலக்கணங்களுடன் 'புலமை யிலக்கண'மும் தருவதே அறுவகை இலக்கணம் என்ற நூல். 786 நூற்பாக்கள் இதன் கண் உள்ளன; பொதுப் பாயிரம், சிறப்புப் பாயிரம் என்பனவும் உள. இதன் நான்காவது பகுதி, 'யாப்பிலக்கணம்' என்று அமைகின்றது. கடவுள் வாழ்த்துப் போன்ற கருத்துக்களுடன் இயலிசைத் தமிழியல்பு (49) நாடகத் தமிழியல்பு (9), வண்ண வியல்பு (28), மோனையியல்பு (12), எதுகை யியல்பு (8), நாற்கவி யியல்பு (7), பனுவலியல்பு (21) என ஏழு உட்பகுப்புக்களையும் 134 நூற்பாக்களையும் உடையது. இத்தகு பகுப்புக்கள் பிற யாப்பிலக்கணங்களில் இன்மை, இவரது புதியது நயத்தலுக்குச் சான்றாகின்றது. மரபு பற்றி யிலக்கணம் கூறாது, தானுணர்ந்த வண்ணம்-விரும்பிய வண்ணம் இவற்றைத் தருகின்றார். முத்தமிழ் யாப்பு மொழிய வேண்டும் என்ற விழைவு வெளிப்படுகின்றது.

ஏழாமிலக்கணம், கலத்திற்குக் காரிகை இயன்றது போல அறுவகையிலக்கணத்திற்கு ஒரு புறநடையாகவே எழுந்துள்ளது. முதன்மையாவன மட்டும் கூறும் இதன் தன்மையினைப் பாயிரத்தில் உணர்த்துகின்றார்.

இதன் கண் 318 நூற்பாக்கள் உள இவை யொழிய, பாயிரம் ஏழு பாடல்களையும் நூலிறுதி ஒரு வெண்பாவையும் தருகின்றது. புணர்ப்பியல்பு, சொன்னிலையியல்பு, பெயர்ச்சொல்லியல்பு, விபத்தியியல்பு, ஒற்றுமையியல்பு, வினைச்சொல்லியல்பு, இடைச்சொல்லியல்பு, உரிச்சொல்லியல்பு, பொருளியல்பு, யாப்பியல்பு, அணியியல்பு, புலமையியல்பு, தவவியல்பு என்பன இதன் பகுதிகள். புணர்ச்சிக்கும், சொல் பற்றிய செய்திகட்குமே பெரும் பகுதியமைய, பொருள் (9), யாப்பு (16), அணி (16), புலமை (14), தவம் (7) ஆகியன மிகச் சில நூற்பாக்களுடன் அமைவது சிந்திப்பதற்குரியது. தவவியல்பும் இணைந்ததால் தான் (அறுவகை இலக்கணம்) ஏழாமிலக்கணம் ஆயிற்றோ என்பது ஓர் ஐயம்.

## அறுவகை யிலக்கணம்

### பொதுப் பாயிரம்

#### நூற்காப்பு

ஐந்தேயி லக்கணமென் றுயிரம்பேர் கூறல்கண்டுஞ்
செந்தேனென் றறுவிதஞ் செப்புவிப்ப-செந்தேகத்
துள்ளும் புறம்பு மொளிரு மொருபொருட்சீர்
விள்ளுங் குருபாத மே

1

#### அதிகாரியிலக்கணம்

பொன்னோங்கற் கோவும் பொதியைப் பிரானும் புகழ்முருகோ
னன்னோன்பு நோற்கும் பயனே புலமை நலமெனத்தேர்ந்
தென்னேக்கித் தெண்ட னிடுவாருக் காமிவ் விலக்கணநூன்
முன்னோர் மொழியைப் பெருக்கிக் குறுக்கி மொழிவதன்றே

2.

#### நூற்றன்மை

கடலின்மீன் பெயர்நுளையர் வாய்மொழி யெனல்கடுக்குந்
திடநிலாவிய செழுந்தமிழ்ப் புலவரைச் சேர்வார்
புடவிமேற்கொளு மறுவகை யிலக்கணப் புதுநூல்
படவராவுறழ் சமணரைப் புகழ்ந்துளார் பகையே

3

வகையுந் துணையும்

எழுத்துச் சொற்பொரு ளியாப்பணி யெனத்திக ழிவற்றுட
னிவைதம்மாற்
பழுத்து மாமணங் கமழ்தரு புலமையும் பகர்வது குறித்
துள்ளேன்
வழுத்து மங்கல மறியநீ யென்னது வாக்கில்வந் தருளின்னே
கொழுத்து லாவிய வரியுடற் பூரமேற் கொண்டுள குலமாதே
4

நுவன்ற காரணம்

செந்தமிழ் கிரியோன் றினந்தொறும் வழிபடுங்
கந்தனைக் கதிர்வேற் கரத்துடன் மயின்மேற்
கருதிய தவமுங் கருணையிற் சிறந்த
சுருதியிற் பழகிய தொண்டர்தந் துணைத்தாண்
மலர்தரு துகண்முதல் வயங்கு மாண் பொருள்
சிலபெறுந் தெளிவுஞ் சீரிய புலவோர்
கவிக்கட லமிழ்துணுங் களிப்புங் கதிர்முற்
குவித்தகை யுடன்றெழுங் குழுவின ருறவும்
புன்றலைச் சமணரைப் புலைத்தொழிற் புத்தரை
வென்றகங் குளிர்சீர் விரும்பும் பகையு
முறுவ தாற்றிகழ் துணிவொன்று
லறுவகை யிலக்கண மறையலுற் றனமே
5

நூற்பயன்

முதிர்தமிழ் முனிக்கொரு துணைபோல்வார்
முருகவிழ் கடுக்கைய னுறவாவார்
விதிர்தரு மயிற்குக னருள்சேர்வார்
வினையெனு மிருட்பிணி யறவாழ்வார்
கதிர்நடு விழுப்பொரு ளதைநேர்வார்
கலிமுழு தொழித்தக மகிழ்கூர்வா
ரதிர்தொனி யணிக்கவி தருசீரா
ரறுவகை யிலக்கண மறிவோரே
6

## சிறப்புப் பாயிரம்

தன்பெயரு நூற்பெயரும்

மன்னுபுகழ் நெல்லைநகர் வாழ்முருக தாசனெனப்
பன்னுதண்ட பாணிப் பரதேசி-யுன்னுங்
குறுமுனிவன் றன்னருளாற் கூறுமிந்த நூற்பே
ரறுவகை யிலக்கணமே யாம்
7

### அரங்கும் கொள்வாரும்

ஆறு வகையென் றிலக்கணம் பாடி யரியதமிழ்த்
தேறுநர் போற்றுரு மாமலைக் கோயின்முற் செப்பியதால்
வீறு சமய நெறியாறு டையமெய் வேதமொழி
கூறு மவர்களெல் லாமிகழா துகைக் கொள்வதுண்டே

8

### மறுத்தற் கரியவர்

மூவிரண் டெழுத்தே மொழியும் பண்பா
லத்தொகை யிலக்கண மமைவுறப் பாடிப்
பூமலர்ச் சோலைப் பொதியமால் வரைக்கோன்
றொண்டர் மெய்ப்புக ழிடைதுலங்க வைத்தமை
வம்பென மற்றையர் மறுப்பினும் வடிவேற்
சண்முக னடியவர் தமக்கா மன்றே

9

### அருமையுஞ் செய்யுட் டொகையும்

தவராசர் புவிராச ரெனப் பெயர்மாத் திரம்புனைந்தத்
தன்மை கொள்ளார்க்
கவமானம் பெருக்கியந்தப் பெயர்க்குரிய குணங்கொள்வார்க்
கழியாக் கீர்த்தி
சிவலோக மட்டுநிற்கச் செய்யவல்ல கவிராசர் செல்வ மாகு
நவநூலொன் றெழுநூற்றெண் பத்தாறு சூத்திரத்தா
னவின்றிட் டோமே

10

### தன்மை

எண்ணரிய கவிப்புலவர்க் கினிய தாமிவ்
விலக்கணநூற் பகுப்பாறு மியம்பு முன்னம்
வண்ணமுதற் பலபாடல் கடலி லாற்றில்
வாவியிற்செந் தீயிலிட்டேன் மற்றும் பன்னூல்
விண்ணறிய மண்ணறிய வுலகத் தூடு
விளங்கவைத்தே னலங்கருதி வேந்தர் போல்வார்
தண்ணளியில் லாத்துறவோர் கெடுபாட் டுள்ளார்
தன்மையெல்லா மறிந்தறிந்துஞ் சலிப்புற் றேனே

11

### ஆக்கியோன் றுணிவு

வேற்றுமையு மல்வழியும் பொருந்தாது தன்னமையும்
விளங்குஞ் செஞ்சொற்
சாற்றுமொளி வழியுமல்கு மாறுவகை யிலக்கணத்தைத்
தாழ்வென் போர்கள்

கூற்றுவன்றென் புலத்தேகிக் கொடியநர கிடையமிழ்ந்து குலைவாரன்றி
மாற்றுரைத்தற் கரியசெம்பொன் வரையனைய குகனருட்சீர் மருவிடாரே
12

## 4 யாப்பிலக்கணம்

### இயலிசைத் தமிழியல்பு

காப்புறு பச்சிலைக் கடவுளைக் காவியம்
பூப்புனை கையுடைப் பூவையைப் புதுத்தினை
மாப்பிசைந் தருளிய வள்ளியை வாழ்த்தி
யாப்பிலக் கணஞ்சிறி தியம்புகின் றனமே
1

சொல்லின் சார்பியல் பதனிற் சொற்றுள
வாய்பாட் டசைநிலை யுணர்வார் மகிழ்வுற
முத்தமிழி யாப்பு மொழிகுது முறையே
2

அரும்பொருள் விரிப்பதற் கான சூத்திரப்பா
நிழல்பூ வீற்றுள நான்கசைச் சொற்க
ளிணைந்து மொவ்வோ ரிடத்தே நலஞ்சீ
ரீற்றுள வைந்தசைச் சொற்கள் வந்து
மோரடி யாகு மொருபாட் டித்தனை
யடியெனு மளவுறு மோனையு மெதுகையும்
பிறழு மோரிடத்திற் பிறங்கினும் பிறங்கு
நடுவரு மோனை நலமா மன்றே
3

ஈரசை மூன்றசை கலந்து நன்னுன்கா
வருவது சூத்திரமென்பா ரஃதிதற்
கய லலவென்பது மக்கரத்தியல்பு
பகரிலதன் புணர்ச்சி நிலைமாறு படலும்
பழமை யாமெனும் பாவலர் பலரே
4

நூற்பா வென்ன நுவல்கையிற் றேன்றி
யிரண்டாப் பிரிக்கிற் சீர்நல மென்னும்
வாய்பா டுறுமைந் தசைச்சொ லின்றியு
நான்காப் பிரிக்கிற் காய்கனி யின்றியு
மோனை வழாஅது மடியொன் றாகி

யீரடிக் கொவ்வோ ரெதுகைத் தாகி
யிரட்டிய தொகையடி யாகி முடிவது
நேரிசை யகவற் பாவென னெறியே

5

ஈற்றுறு மடிக்கு முந்திய வடியிலீ
ரசைகுறை வாகிய வேற்றுமை யொன்றே
யணைவுறு நேரிசை யகவற் பாவே
நிலைமண் டிலமென நிகழ்த்துமகவலே

6

இருவகை யகவலு மெதுகை மாறி
யொற்றைத் தொகைபடு மடியின தாகி
மோனை கெட்டடங்கன மெதுகை நின்று
வரினுங் கொள்வது வண்டமி ழியல்பே

7

அகவலிற் சூத்திரச் சீர்வந் தொன்றினுஞ்
சொற்சுவை யுளதெனிற் றூயோர் தள்ளா
ராயினு மினிதென் றறைவது கடையே

8

நூற்பா வென்பது சூத்திரப் பாவே
யாசிரியப்பா வென்ப தகவலே

9

கனிச்சீ ரிரட்டிய வோரடி யுடைத்தாய்
மோனையு மெதுகையு மாசிரியப்பா
முறையிற் கொடுநடந் தீரசைத் தனிச்சொற்
காட்டிப் பின்னிலை மண்டில வகவற்
கடைச்சீ ரிரண்டுங் கவின்றரல் வஞ்சிப்
பாவெனல் பல்லோர் பகர்ந்த முறையே

10

தனிச்சீ ராதிய தணவினும் வஞ்சிப்
பாவெனு மாற்றம் பழுதுபடாதே

11

அகவற் பாசுரத் தடியினும் வஞ்சிப்
பாவடிக் குறைதலிற் குறளடி யெனுமொழி
கூட்டிச் சிற்சிலர் கூறலு முளவே

12

ஈற்றி னேர்வரு மூன்றசைச் சொற்களு
மீரசை யோரசை யாவும் வெண்பாக்
குரியன வாமென் றுரைத்தன ருணர்ந்தோர்

13

வெண்பா வீற்றேவருவ தோரசைச்சொல்
லவ்வயின் வராதது மூன்றசைச் சொல்லே

14

உரியமூன் றசைச் சொல்லொடும் பின்னிரை
யாய வீரசைச் சொல்லொடு நேர்வரும்
பின்னேருள விரண்டசைச் சொல்லோடு
நிரைவரும் வெண்பா நிலையுணர் காலே

15

நாளென மலரென முடித்த வெண்பாக்க
ளுத்தமப் பகுதி யென்பதுங் காசெனப்
பிறப்பென முடிப்பன வேனை யென்று
முணரும் பாவல னூற்று ளொருவனே

16

உரியசொன் ளுன்கா லோரடி யமைத்தல்
வெதுகையில் வேறடி முச்சொலிற் காட்டி
மூன்றுஞ் சொற்றெறு மோனையொடு முடிக்கிற்
குறள்வெண் பாவெனக் கூறின ருயர்ந்தோர்

17

குறள்வெண்பா விரண்டணைவது சவலை
வெண்பா வாமென விளம்பினர் சிலரே

18

சவலைவெண்பாவின் முற்பகுதியி னீற்றிலவ்
வெதுகைத் தனிச்சொலொன் றிசைவுறி னேரிசை
வெண்பா வாமென நிகழ்த்திடன் மிகையே

19

மூன்றடி நன்னாற் சீரின வாகி
யீற்றடி முச்சீ ராக வியற்றிட
லின்னிசை வெண்பா வென்பது முறையே

20

நேரிசை வெண்பா வேணமட் டடுக்கி
யிடைதொறுந் தனிச்சொ லிசைவுறப் பொருத்தல்
பஃறொடை வெண்பா வாகு மிதனைக்
கலிவெண் பாவெனக் கழறுந ருளரே

21

இன்னுஞ் சிற்சில வெண்பா வுளவென்
றுரைப்பினு மிவ்வித மைந்துள் ளூறுமே

22

தளைப்பிழை யின்றிப் பொருளொடு திகழுறும்
வெண்பா மோனையு மெதுகையும் பிறழினுந்
தவிரினு மொப்புவர் தக்கோ ராயினு
மதுரங் குன்றிடு மென்பது வழக்கே

23

குறிற்றனி வருமசை சீரீற் றன்றி
வாரா வியற்கையுங் குற்றிய லிகரங்
கொள்ளலுந் தள்ளலு மாதிய பிறவு

மறிவா ரியாம்பக ரடுக்கு முறைகொடு
முடிவியல் பிடைவர மொழியா ரவர்தம்
வெண்பா வியற்கை விரித்திடற் கரிதத
னீற்றடி மோனை யெழிலிசை விவற்ருற்
றண்ணுமை போலத் தயங்கு மன்றே

24

இன்னிசை வெண்பா வீற்றடியு நாற்சீ
ராகித் தளையுமம் முறையே நிற்பது
கலிப்பா வாமெனக் கழறினர் கற்ருேர்

25

நேரெனத் தொடுத்தலு மேயென முடித்தலுங்
கலிப்பாக் கணியா நிரையென வெடுத்தலு
மாலோ கொல்லென லாதியின் முடித்தலு
மேனையென் றியம்பின ரெண்ணில் பல் புலவோர்

26

தளைபிறழ்ந் துள்ள கலிப்பாத் தானே
கொச்சகக் கலிப்பா வென்றுஞ் சிலராற்
கொச்சக மென்றுங் கூறப் படுமே

27

நேரிசை வெண்பாத் தனிச்சொல் வரைகொடவ்
வெதுகை விட்டேனு மூன்றகவ லடியிசைத்
தவற்றி னடுவடியீற்றி லீரசை
குறைக்கின் மருட்பா வென்று கொள்வாரே

28

இரண்டு நாலைந் தெனுமடி யீற்றிற்
றன்பெயர் குலவத் தக்கவம் மானை
யைந்தடி கலிப்பாப் போலு மதனிடை
சொல்லலு மறுத்தலும் விடையுந் தானே
கூறினர் பற்பலர் குவலயத் திடத்தே

29

அம்மானை யீற்றின் விடைமொழி யதனுள்
ளிருபொருட் காட்டிடன் மிகையா முப்பொரு
ளுற்பொருண் மொழியினு மிசைவுறி னலமே

30

கலிப்பா வரையரை யாகக் கூட்டியு
மெதுகை யின்றித் தனித்தனி சேர்த்துங்
காதை யம்மானை கழறினர் சிலரே

31

கொச்சகச் சீர்கொடு கூறுமம் மானை
யிழிவின தாகு மென்றிசைப்பது துணிவே

32

ஈரசை மூன்றசைச் சொற்கண் மிக்கணைந்து
மொவ்வோ ரீற்றிற் றேமாந் தண்பூப்
புளிமாந் தண்பூப் புணர்ந்து மைஞ்சீ
ராவ தோரடியாய் நாலடி யுடைத்தா
யீற்றி லேயென முடிவது கட்டளைக்
கலித்துறை யாமெனக் கழறுதன் முறையே

33

நேரெனத் துவக்கலு நிரையென வெடுத்தலு
மாய கட்டளைக் கலித்துறைக் கிடைவரு
மெய்தவி ரெழுத்தின் றொகைபதி னாறு
மவற்றொடொன் றணுகலு மாமெனப் பகரினுஞ்
சுவையறி வில்லாத் துகளுறு மனத்தினர்
நெடில்குறி லமைவுறு நிலைபிறழ் வதனாற்
கீழ்மை தோய்வுறக் கிளத்தலு முளவே

34

காய்வரு மூன்றசை கலந்தைந் தாகியு
மீற்றுச் சீர்கனி யாகியும் வருமடி
கலிநி லைத்துறைக் கென்றனர் கற்றோர்

35

கட்டளைக் கலித்துறை கலிநிலைத் துறையெனு
மிவற்றின் மோனைக் கீற்றுச் சீரிசை
வென்றுபல் புலவோ ரியம்பின ரன்றே

36

ஈரசைச்சீர் மூன்றி ரண்டிசைந் தோரடி
வருவன வஞ்சி விருத்த மாமே

37

நாற்சீ ரோரடி யாங்கவி சிற்சில
கலிவிருத்தங்களெனக் கவின்றருபாவே

38

ஈரசைச் சொற்களைந் தோரடியாய்
வருங்கலி விருத்தமு மாநிலத் துளவே

39

கலிவிருத்தஞ் சிலவிரட்டித் தெண்சீர்
விருத்தங் கட்டளைக் கலிப்பாச் சிறுநிலைத்
தாழிசை வருமெனச் சாற்றிடத் தகுமே

40

ஈற்றி லோரசை யீரசை நிற்கும்
பேதம் பற்றியுங் காய்ச்சீர் விரவியு
மறுசீ ரெழுசீர் விருத்தப் பகுதியுஞ்
சிற்சில தாழிசைப் பகுதியும் வருமே

41

எழுசீ ரெண்சீ ரிரட்டிய விருத்தப்
பகுதியுந் தாழிசைப் பகுதியு முளவே

42

ஐஞ்சீர் மேல்வரும் விருத்தம் பலவு
மாசிரியங் களென் றறைவார் பலரே

43

ஈரடி பேதித் திசையு நாலடிப்பா
வேற்றெலி யாமென விளம்பினர் சிலரே

44

அடிதொடை கூடியுங் குறைந்தும் பிறழ்ந்தும்
வருவன வெண்டுறை யாமென் றவற்றிற்
கியைந்ததோர் பெயரே யிட்டனர் புலவோர்

45

கொச்சகத் தடிசில விரட்டித் தணைந்தபின்
குறிலே நிரைபடுஞ் சிலசீர் தோய்ந்து
முற்படு பகுதியே மறுத்துந் தோன்றியு
மிருசீர் முச்சீர் நாற்சீர்ப் பாவொன்
றென்றே நின்று பின்றனிச் சொல்லுற்றும்
பின்னிலே மண்டில வகவலா முடிக்கு
மஃதையு மொரு நூலணிமுகத் தமைத்தற்
கொப்பிய மனுத்திரள் வேறொரு விதமாத்
திரித்திது கொங்கணி மங்கணிப் பாட்டென்
றியம்பினு மாமா மென்னு மாதலிற்
சுவைமிகத் தொடுப்பவை யனைத்து நலமே 46

பாநிலே தெரிதற் பொருட்டே பற்பல
நூல்களும் பார்க்கு நுண்ணியர்க் கியாம்பகர்
சகத்திர தீபமும் வருடப் பதிகமு
மென்னுந்துணை நூலினிய நற்றுணையே 47

யாப்பியற் றுணைக்கொண் டினியபாப் பகர்தலிற்
றாய்தா மிலக்கியந் துணைக்கொள னலமா
மதனிலே பிறழ்ந்துங் கிடக்கு மாதலிற்
புலவர்தந் துணையே பொருவினற் றுணையே 48

இயலிசை யென்னுமிரு வகைத் தமிழுக்
காமா றிந்த மட்டடக்கிக் கூறின
நாடகத்தமிழ் நிலே நவிலுதுஞ் சிறிதே 49

### நாடகத் தமிழியல்பு

பல்லவத் திருபங் கநுபல்லவமு
மதனிரு பங்காஞ் சரணமுந் தாளம்

பிழையா தமைத்ததிற் பேரின்பஞ் சொலிற்
கீர்த்தனை யென்றுமற் றேனையைக் கிளத்திற்
பதமெனவுஞ் சொலல் பாவலர் வழக்கே 1

அநுபல் லவமுஞ் சரணமு மளவிற்
கூடினுந் தாளங் குழம்பா தியாவரு
மறிவுறும் பொருளமைந் தவிர் தரி னலமே 2

பல்லவம் போன்றே யநு பல்லவமு
மொன்றல தொன்றுது சரண மொன்றன்றி
மூன்றும் வரன்மிகை யைந்தே மொன்பது
பதினென் றென்றினும் பல்லவத் தலையி
லவற்றி னீரென்று மழகாற் றிகழ்பவே 3

இருவகைப் பல்லவ மின்றி யாடலுக்
கிசைவுறத் தனித்தனி யீரடி நான்கடி
காட்டியோர் பொருளைக் கருதிக் கூறித்
தொகுப்பது சிந்தெனச் சொல்வது வழக்கே 4

வீணையிற் றேர்ந்தோன் விளம்பு மாற்றந்
தழீஇக்கொள ளுடகத் தமிழினுக் கழகே
யாயினும் பொருட்சுவை யழியினு மியலிசைச்
சொன்மிகப் புணரினுஞ் சோர்வு படுமே 5

வண்ணச் சீர்கொடு வயங்கு நாடகத்
திசைத்தமிழ்ச் சொற்கள் வந்திசையினுந் தகுமே 6

புலமைக் காளெனப் போதன் பொறித்த
தலையினற் கியாப்பியல் பதனைச் சாற்றிடல்
பாய்தொழிற் புலிக்கது பயிற்றல் போலு
மல்லாற் குரைசெய லத்தொழி லெருமைக்
கிசைத்திட லொப்பா மெனத்தெளிந் தனமே 7

இயன் முதலாகிய பகுதியை யடுக்கி
முத்தமிழ்ப் பாமாலையின் மொழிந்தனமே 8

களிறே புரையுங் களிப்புடைக் கவிஞர்க்
கரியே றன்னார்க் காவி யாய
சந்த நிலையவர் தாண்மலர் வணங்கி
வண்ணத் தியல்பெனு நூலிடை வகுத்துக்
கூறின மாதலி னிங்ஙனங் குறுக்கிச்
சிறிது கூறுதுந் தெளிவார் பொருட்டே 9

வண்ண வியல்பு

வல்லினம் பற்றித் தத்தவு முன்பின்
னீடலும் பிறக்கு மெல்லினம் புணர்ந்து
தந்தவு நீட்சியுந் தன்னவும் பயக்கு
மிடையினந் தய்ய வியங்கச் செய்யுந்
தனவும் பெருக்கமும் பொதுப்பட வருமே 1

தத்தவுந் தன்னவுந் தய்யவுந் தனவு
நால்வகைக் குலமென நவிலத் தகுமே 2

இருவகைச் சந்தமும் பிறழுஞ் சிற்சில
வைத்தாங் குலமென் றறைவது துணிவே 3

தத்தவுந் தந்தவுந் தாத்தவுந் தாந்தவு
மாண் பாலாமென் றறைவது முறையே 4

தன்னவுந் தய்யவுந் தனவுந் தானவும்
பெண் பாலாமெனப் பேசிடத்தகுமே 5

தனவுந் தய்யவுந் தன்னவும் பிறழ்வன
வனைத்து மலிப்பாலா மெனன் முறையே 6

தத்தா வெனவர லாதியைப் பெருக்கிக்
குசக்குல முதலிய கூறலும் பிறழ்ச்சியி
னீட்சி பற்றிக் கன்மர மாதிய
முதிரலி வகுத்தலு முறையே யாயினும்
பயனின்மை கருதிப் பகர்ந்தில மன்றே 7

எவ்வழி யெவரெவ ரியம்பும் வண்ணமு
மாறு சமயமு மவற்றின் புறம்பும்
வீறு பொதுநெறி விளக்கமும் போன்றே
ரெண்வகைத் தாகி யிலங்குறு மெனத்தேர்ந்
தியம்புநர்க் கருட்பேற் றிச்சையுண் டாமே 8

தன்னவுந் தய்யவுந் தனவெனத் தொனிதரு
சந்திவேற் றுமையிடை மெய்க்கெலா மதனதன்
வருக்கத் துயிர்மெய்தான் வர வொண்ணுத
திம்முறை யந்நூலி னத்தைச் சுட்டிடல்
போற்சிலர் மயங்கப் புகன்றத தன்றே 9

இருவகை வண்ண மொன்றுடொன் றிசைவுறு
மிடத்தைச் சந்தியென் றியம்புவர் பெரியோர் 10

மெல்லின மெய்யீற் றுள்ள வண்ணத்தொடு
வல்லினத் துயிர்மெய் முதலுள வண்ணம்
பொருந்தி லிரண்டரைச் சந்த மெனலா
மிரண்டேயா மென்றிசைப்பார் சிலரது
குத்தலென் றுரைக்குங் குற்ற மாமே 11

ஈற்றி லிடையின வொற்றுறும் வண்ணச்
சொல்லொடு வேறினத் தொற்றுப் புணர்ந்துமவ்
வண்ணந் தோன்றும் வாரா தொழியினுங்
குத்தற் குற்றமென் றுரைப்பது குணமே 12

தத்தன வெனலுந் தந்தத்த வெனலுந்
தனத்தா வென்றிட லாதிய பிறவுந்
தொடர்ச்சி யியல்பெனச் சொல்வது முறையே 13

தத்தவிற் றுத்தவுந் தந்தவிற் றுந்தவுந்
தனவிற் றுனவும் பிறந்தவாறு
தன்ன தய்யவில் வருமென மருளா
தம்முறை தோற்றலுந் தானச் சந்தந்
தானெனத் துணிவுறத் தகுந்தகுந் தகுமே 14

ஒவ்வோர் வண்ணமுஞ் சிற்சில சொற்கொளு
மவற்றுட் டனவிற் சுருக்கமுந் தானவிற்
பெருக்கமு மில்லெனப் பேசத்தகுமே 15

தனவுந் தானவு மெளிதினு மெளியன
தத்தவுந் தந்தவு மெளியன தாத்தவுந்
தாந்தவும் வலியன தய்யவுந் தன்னவும்
வலிதினும் வலியன வென்பது வழக்கே 16

துறைபகர் வண்ணப்பாவின் முற்பகுதியை
யாண்கலை யென்று மற்றேனையைப் பெண்கலை
யென்று முலகோ ரியம்பிடன் மிகையே 17

அடிகளி னீற்றுக் குழிப்புச் சிதைவுறத்
தொடுத்தன் மிகைபடும் வாய்பா டாயினுந்
திருந்தக் கூறிடல் சிறப்பினுட் சிறப்பே 18

கொடுந்தமிழ்ப் புணர்ச்சி வண்ண மாயினும்
பொருட்சுவை யாதிய நலம்பல பொருந்திற்
றமிழ்க்கடற் குளிப்பவர் தழுவல் சற்றுளதே 19

மதுரங் குன்றிக் கிடப்பினும் வைத்துள
குழிப்புப் பிறழா வண்ணங் குளறிடி
லஃதுணர் புலவர் சற்றக மகிழ்வாரே 20

ஆகா வளபெடையணையினுமம்முறை
துள்ள ரேூறுந் துலக்க வல்லானே
லஃதுமோர் வியப்பென் றறைவார் சிலரே

21

அந்நூ லொப்பாக் குற்ற நான்கினுக்கு
ளிந்நூன் மூன்றிசைந் திருப்பதென் னென்பா
ருற்று நோக்கு முணர்வுறுதவரே

22

ஓசையுங் கனமு முலவா வூக்கமுந்
தொண்டுந் தோய்வுறீஇத் துலங்கிய வண்ண
மந்நூலொப்பிடலாய குற்றங்களு
மில்லா துறு மெனி லேற்றத் தேற்றமே

23

இம்முறை யாவுமுன் னெடுத்துக் காட்டிய
நூற்பொரு ளுணர்ந்துள நுண்ணியர்க் குவகையு
மற்றையர்க் குலவா மயக்கமுந் தருமே

24

கருணைக் கடலெனச் சத்திவே லென்ன
வென்றி மழுவெனத் துவக்கியோர் மூன்று
வண்ண மிவற்றினுக் கிலக்கிய மென்றே
கருதிக் கூறின மற்றும் பற்பல
வண்ணமும் வகுப்பும் விருத்தமும் பகர்ந்துள
மவைகளுந் துணையா மறிய வேண்டுநர்க்கே

25

எட்டுப் பதினு றெண்ணுன் கெட்டெட்
டென்னுநாற் பகுதியிற் கலைவகுத் தொருநா
லெதுகையு மோனையு மிலங்கக் காட்டி
யொருபொருட் புகழே யுரைப்பது வகுப்பே

26

இயலிசை நாடக மென்னும் பகுதியி
லணிகெடல் குதித்த லாதிய குற்றந்
தெரியுங் கண்கொடு திகழ்பொது வண்ணக்
குழிப்பின் புணர்ச்சி யுணர்வது குணமே

27

தமிழ்க்கவி யனைத்தினுந் தலையென் றுள்ள
வண்ண வியல்பினை வகுத்தன மோனை
யியல்பினைச் சுருக்கி யியம்புகின் றனமே

28

மோனையியல்பு

அகரக் குறினெடி லையௌ வென்னு
நான்குமோர் மோனை நன்குணர் வார்க்கே
1

இகரமு மெகரமு மிவற்றி னெடில்களு
மியகர யாகாரமு மிசையு மோனைக்கே
2

உகரமு மொகரமும் யொகரமு நெடில்களு
மொருவகை மோனையென் றுரைப்பா ருணர்ந்தோர்
3

உயிர்ப்பொறி மோனையி னெழுங்கு பற்றி
யுயிர்மெய்ப் பொறிகளு மொளிர்தரு மாதலி
னவற்றின் வருக்கத் தொன்றே டொன்று
பொருந்தலுண் டம்முறை புகலுது மன்றே
4

சகரமுந் தகரமு மவற்றின் பிறவு
முறைமையிற் பிறழ்வது மோனை மரபே
5

மகர வகர வருக்கமு மியல்பிற்
றொடர்வது மோனையின் றென்மை யாமே
6

அகரமு மியகரமு மணைவது நகரமும்
ரகரமும் லகரமுந் தொடர்வது நாடகத்
தமிழிற் காமெனச் சாற்றுநர் சிலரே
7

உயிரெழுத் ததனையே யொற்றின் புணர்ப்பா
லுயிர்மெய் யாக்கி யுரைக்கு மோனையு
மொருசொன் னடுவுறு முயிர்மெய் மோனையு
நிலையிடந் தவறி நிற்குங் கூழை
மோனையி னலமா மாயினு மவற்றைக்
கள்ளமோனை களெனக் கழறத் தகுமே
8

உறுமிடத் துற்றர சொக்கு மோனை
யொன்றே நலமென வுன்னுநர் சிலரே
9

மோனை யில்லா முத்தமிழ்ப் பாட்டு
நாண மில்லா நங்கை யொப்பாமே
10

தவறிய மோனைத் தமிழ்க்கவி கலவிக்
கிசைந்தபின் னூடு மேந்திழைக் கொப்பே
11

ஓரசை தொட்டைந் தசைவரை யுள்ள
சொற்களின் கலப்பாற் றுலங்குபல் பாடலின்

மோனைபோய் நிற்கு மிடமெலா மொழியா
தடக்கி யெதுகைசற் றறைகுது மன்றே

12

எதுகை யியல்பு

சிங்க மென்றெழும் பாட்டடி தொறுமெதுகை
தங்கம் பொங்க மென்றமைவது போல்வன
சிதையாத் தொடையெனச் செப்புவர் தெளிந்தோர்

1

கொற்றியுஞ் செற்றமுங் கற்றையும் போல்வன
சிதைவுறு தொடையெனச் செப்பினர் சிறந்தோர்

2

பார்த்திபன் காய்த்தமா வன்ன பிறவு
மோசைத் தொடையென் றுரைத்தனருணர்ந்தோர்

3

பாலுக்குக் கூழுக் கெனப்பகர் பிறவு
மினத்தொடை யாகுமென் றியம்பினர் சிலரே

4

சீருற்ற நீருற்ற வெனமிக்கு வருவன
வலங்காரத் தொடையா மெனத் தகுமே

5

ஆடும்பரி வேலணி பாடும்பணி யேபணி
யெனவர லியாவும் வண்ண வெதுகையே

6

இவ்வகை யெதுகையி லியாது மில்லெனிற்
செவ்விய கவிகளுஞ் சீரழி வுறுமே

7

எவ்வகைக் கவிகளு நால்வகைத் தாமெனக்
கூறுமம் முறையின் குறிப்புரைக் குதுமே

8

நாற்கவி யியல்பு

பட்டினத் தடிக ளாதிய பாவலர்
கழுமர மெரிவுறக் கழறிய தாதிய
வாசு கவியின மாமெனத் தகுமே

1

குளிர் பொழிற் பாண்டிக் குலசேகரன்பக
ரம்பிகை மாலை யாதிய மதுரமே

2

கொங்குவாழ் மன்னன் கொடுத்த கொடுவா
ளருணையூர்ப் புரவல னரண்மனை சேரத்
திகழ்ந்த நூலாதிய சித்திர கவியே

3

ஓராயிரமுத னூறுயிரம் வரை
செய்யுட் டொகையுடைத் தாகிப் பலபொரு
ளறையும் பனுவல்க ளனைத்தும் வித்தார
மென்பது மகவற் பஃறொடை வெண்பா
வெண்ணுன் கெண்ணென் கலையுடை வகுப்பிவை
யாதிய தாமென் றறைவது மியல்பே 4

ஆசு கவியி னமைதியு மதுரக்
கவியின் கனிவுங் கரட்டு முரட்டுச்
சித்திர கவியின் றிரிவு மாறுட்டமும்
வித்தாரக்கவி விளக்கமும் புலவோர்
சேர்க்கை யிற்றேறிடி னன்றித் தெரியா
வாயினு மியலிசை யறிவா னவ்வயி
னிருநூ லெம்மதென் றெடுத்துக் காட்டலின்
முதனூ லினிதென மொழிவதுந் தகுமே 5

உரைப்பொருண் மிகலா லொன்றொடொன் றணைவுறு
தொந்தக் கவிகளைக் குளக மென்றும்
பொருளெழு மிடந்தனை யெழுவா யென்று
முற்றுறு மிடந்தனைப் பயனிலை யென்றுங்
குறித்ததைச் செயப்படு பொருளா மென்றுந்
தன்செயல் கூறிடற் றன்மை யென்றும்
வினவக் கூறிடன் முன்னிலை யென்றும்
பிறநிலை பேசுதல் படர்க்கை யென்று
மறைவன வாதிய வறிவது கடனே 6

பாசுரத் தியல்பிவண் பகர்ந்தமட் டடக்கிப்
பனுவ லியல்பினைப் பகருதுஞ் சிறிதே 7

பனுவலியல்பு

சொற்கட லமிழ்தெனத் துலங்குந் தூய
பனுவ லியல்பினைப் பகுக்கினூ லென்றும்
பிரபந்த மென்றும் பேசு மிருபாற்
றுணொடு பெண்போன் றவிர்தரு மவியெனக்
கலந்துஞ் சிற்சில கவின்றரு மவற்றைப்
புராணங் காவிய மென்பார் புலவோர் 1

நூல்பிரபந்தங் காவிய மெனநுவன்
மூவகைப் பனுவற் பிரிவை நோக்கின்

மனுத்திரள் போன்றே வயங்கு மாதலிற்
பெயர்குண முழுமையும் பேசரி தாயினு
மொருவா றிந்நூற் பொருட்டுரைக் குதுமே

2

அறம்பொரு ளின்பம் வீட்டு நெறியெனு
நான்கும் பனுவற் றொகைக்கெலாந் தாயுந்
தந்தையுங் குருவுந் தனிப்பெருங் கடவுளு
மாமெனுந் துணிவுற லறவோர்க் கழகே

3

இலக்கண மிலக்கியஞ் சோதிட நீதி
வயித்தியஞ் சிற்ப மாதிய வகுக்கும்
பனுவ லியாவு நூலெனப் படுபவே

4

தெய்வ மறையன் செழும்பொன் கொடுப்போன்
சுவைதெரிந் துவப்போ னுதியர்த் துதித்த
பனுவல்க ளியாவும் பிரபந்த மாமே

5

வரைநதி நகர்நா டாதியின் வளமுந்
தெய்வச் செயலுந் திறன்மிகு போருஞ்
செங்கோற் சிறப்புஞ் சீரியர் தன்மையு
மனையன போலு மமைவெலாம் பெருக்கிக்
கழறுதல் புராணமுங் காவியமு மாமே

6

பனுவலின் முகத்துத் திலகம் போல்வது
பாயிர மாமெனப் பகரத் தருமே

7

பனுவற் காரன் பகர்பொதுப் பாயிரந்
தெய்வக் காப்புங் கொள்வார் செயலு
நுவன்ற காரணமும் பயனொடு பிறவுமே

8

ஆக்கியோன் றுணிந்தோ னல்லா னென்னிற்
காதுறக் கேட்டுக் களித்தோன் கழறுஞ்
சிறப்புப் பாயிரந் திகழ்தரு பனுவற்
செய்தோன் பெயருஞ் சேர்த்த நல்லரங்கு
மதன்புக ழாதியு மாமெனத் தகுமே

9

பாயிரத் துறுவதிற் பனுவன் முகத்துறு
நுண்ணியர் வணக்க நூறு பங்கினிதே

10

இழிநூல் பாயிரத் தாலுயர் வெய்தா
தேனை யஃதிலதா விழிவுறு தெனினுந்

தெய்வத் துதியொடு செப்புநூற் பெயர்மட்
டாயினும் பகர்ந்திட லழகா மன்றே

11

கொலைபுலை மறுத்திட னூற்குங் கொற்றம்
பெருங்கொடை யெனுமிவை பிரபந்தத் தினுக்குங்
கடவுளுந் தொண்டருங் காவியத் தினுக்கு
முரிய மெய்ப்பொருளென வுரைத்தன ருணர்ந்தோர்

12

நூல்களின் பகுதிகட் கதிகார மென்று
மியல்பென்று முருவக மென்றும் பின்னு
மிசைந்த வாறும் பெயரிட்டனர் புலவோர்

13

தசாங்கம் பவனி தூதிவை முதலாப்
பிரபந்தப் பொருட்பிரிவு பல்விதமே

14

காண்டஞ் சருக்கம் படலங் கதிமுதற்
காவியப் பகுதியுங் கணக்கறும் பாற்றே

15

பைந்தமிழ்ப் புலவோர் பகரும் பனுவற்
றெண்ணூற்றறெனச் சொல்வார் சொல்லினு
மிலகரி முதற்கொடு நொண்டி யீறாகிய
வேறுபல் விதங்களும் விளங்குகின் றனவா
லியாமுஞ் சிலவித மியம்ப நாணுதுமே

16

மழலையங் குழவிகள் வயிறு நொந்தீன்ற
தாயிடும் பெயரே தலைமிசைக் கொளல்போன்
றருந்தமிழ்ப் பனுவலு மாக்கியோ னமைத்த
பெயர் பொறுத் துலகிற் பிறங்கிடன் முறையே

17

ஒருபெயர்க் குரியா ருலகினிற் பலராற்
பனுவலு மங்ஙனம் பகர்வது முறையே

18

மற்றையர்க் காகாப் பெயர்புனை மாந்தரிற்
சிற்சில பனுவ றிகழ்பவு முளவே

19

ஒன்றற் கொருவ னுரைத்ததோர் பனுவலை
வேறுமோர் புலவன் விளம்புத லிழிவே

20

யாப்பிலக் கணத்தினை யிம்மட்டடக்கி
மாற்றோ ரிலக்கணம் வகுக்க நாடுதுமே

21

## ஏழாமிலக்கணம்

### பாயிரம்

ஆழாழி யுண்டோ னடியார் பதம்போற்றி
யேழா மிலக்கணநூ லியான் பாடத்-தாழாச்
சமையங்க ளாறிரண்டுந் தாளிணையிற் றங்குஞ்
சுமையெனக்கொண் டுள்ளோன் றுணை

1

வண்ண விலக்கணஞ் சொன்னபின் னுறு வகையதுசொற்
றெண்ணருஞ் சீர்திக ழேழா மிலக்கண மீதுரைக்கத்
தண்ணளிப் பாரதி யுங்கண நாதனுஞ் சண்முகனுங்
கண்ணனு மீசனு மெல்லோனு மற்றெுன்றுங் காப்பெமக்கே

2

எஃகவேன் முருகன் முப்பத் திரண்டிலக் கணத்தோன் வாணி
யஃகலி லெல்லோன் சேட னகத்திய னநும னன்னூர்
வெஃகவை யொன்ப துள்ளார் வியன்கொளா றுரைத்தேழ் சொல்வேன்
கஃகஃகென் காகம் போலுங் கவிஞருக் கினியா தன்றே

3

கவிராசர் குலநடுங்கக் காதறுத்துச் செயங்கொடு சக்கரவர்த் திப்பேர்
புவிமீது நிறுத்தியவ னருணகிரி நாதனைமுன் புகழ்ந்த பாட்டி
லவியாத கவிக்கடலே ழாகுமென்று னிலக்கணமு மவ்வா றுமென்
றிவிசேட நூலுரைக்கே னெனையசைக்கும் பொருளறிவார்க் கினிதா மன்றே

4

கார்முகில்போன் றிலக்கியங்கள் பொழிந்து தேருக்
கவிப்புலவ ரிலக்கணத்தாற் கலங்கி வாடி
யோர்முறையோ ருரைகார னுரைப்ப மற்று
மொருமுறைவே றொருவனெடுத் துரைப்பக் கேட்பீர்
கூர்முதிர்வேற் குகனடியார்க் கடிமை பூண்ட
குணத்தினாற் சமரசச்சீர் கொண்டு வாழ்வேன்
றேர் முதன்மை யாவனமட் டிதனிற் சொல்வேன்
தெய்வபல மிருந்தாலுந் தெளிதற் பாற்றே

5

வரைப வாகிய பொறியுரு வொலிமுனும்
வகைக ளியாவையு மறுவகை யியன்முனூ
லுரைசெய் தாலுமி தனிலினி நுவலுமா
றுணரு மாவிரி விலதரு குறுமதூ
டிரையு நீதிக ளிதனிடை குறுகுமா
லிவையொர் பாவல னிருவிழி யனையவா

மரைய ஞர்மொழி நிறமறி கிலர்கொளார்
மதுர வாணித னுறவினர் புனைவரே 6

எழுத்து நிலையு மினியசொற் றகையும்
வழுத்துபல் பொருளு மாண்புனை யாப்பு
மான்ற வணியு மருந்திறற் புலமையுந்
தோன்றமுன் னொருநூல் சொற்சுவை யறியாப்
புல்லியர் நடுங்கப் புகலருந் தவத்து
நல்லியற் புலவோர் நலமுறப் பகர்ந்தே
னிந்நா ளொருவ னெனதவா விற்குஞ்
செந்நா வலர்புகழ் செழுந்தமிழ்ச் சுவைக்குந்
தவநிலை வேடஞ் சார்பூ ணுதிய
விவரமியா வினுக்கு மேம்படு துணையாய்
வேற்படைப் பூசை விரும்புறும் வலத்தோட்
பாற்பணைத் தொருதோள் பலத்தொடு முளைத்தாங்
கியானிசைத் தியானு மெண்ணரும் பலவா
நானிலம் புனறீ நள்ளுறு பனுவற்
றொகையிடை பிறர்க்குத் தோன்று தவற்றின்
வகைவிரித் துரைக்கும் வாயொடு நிலாஅய்ச்
சொற்றவந் நூலிற் சுருங்கிய பயனைக்
கற்றவர் வியப்பக் கழறுகென் றிரந்தா
னந்தமா தவன்ற னணித்தலை சுமக்குங்
கந்தசா மிப்பெயர்க் கனத்தையு மதித்தீண்
டேழா மிலக்கண மெனும் பெயர்த் திருநா
லூழா லருளா லுணர்வா லுரைக்குந்
தன்மை நேர்ந்தது தமிழ்ப்பெருங் கலைக்கோர்
நன்மை யென்றே நவில்வர் நாவலரே 7

யாப்பியல்பு

இயல்வலார் பலரோடி யாமுஞ் சொற்றுள
வீரசைப் புணர்ப்பா லெண்ணில் பல்கவியும்
பிறக்கு மென்பது பெருந்துணி வாமே 1

ஓசைநிலை தேர்ந்துரைக்கும் பாவலர்க்
கெவ்வகைக் கவியு மெளிதினில் வருமே 2

ஒண்டகைப் புலமைக் குரியா னெனினும்
வெண்டளை யறிவது மிகுபெருங் கடனே 3

இளமைப் புலவோர்க் கிசையாதிகலி
முதியோர் சிலர்க்கு முன்னுமுன் னுதவல்
வெண்பாப் போலும் வேறென் றின்றே

4

சுத்தம் பொலிந்து தோமற வொழுகலின்
வெண்பா விற்கிணை வேதியப் பெண்ணே

5

கட்டளைக் கலித்துறை கட்டுங் காவலும்
போலன வமைதலிற் புரவலர் மகளே

6

வெண்பாக் கட்டளைக் கலித்துறை யென்னு
மிவற்றின் றளையிடை யேக தேசம்
வண்ணப் பாவிற் றய்ய தன்னவே
தனவாஞ் சொல்லி னேர்நேர் நிரையா
வருமவை யுணரா மருண்மனப் புலவோர்
வல்லொற் றொருவியும் வகுப்பார் பிழையே

7

வெண்டளை பிழையா மேம்படு கலிப்பா
வக்குலமே யென்றறையத் தகுமே

8

சீரினளவிற் றிகழ்பல விருத்தமுந்
தாழிசைப் பகுதியும் வணிகச்சாதியே

9

மூன்றசைச் சீரே முற்றும் வந்து
குலவுவ வாய கொச்சகக் கலிப்பாச்
சூத்திரச் சாதிச் சுரிகுழற் கிணையே

10

பரத மின்றிப் பகர்கைக் கிசையாப்
பதஞ் சிந்தாதிய பாணப் பெண்ணே

11

வண்ணத் தியல்புட னறுவகை யிலக்கணஞ்
சொற்றுள தாய தூதிலே வண்ணங்
கற்புடை மகளென பொதுவிற் கவினுமே

12

எதுகையு மோனையு மளவு மின்றிப்
பிழைபடும் பாடல் பீடழி மகளே

13

இனையசில் கவிகளி லிசையுடனசையைப்
பிரித்துங் கூட்டியும் பிறழ்தர வமைத்தும்
படுத்தும் பன்னூல் பழய மாதவத்து
வள்ளிய புலவன் வகுத்தறி வானே

14

பழய யாப்பெனினும் பண்பில தாயிற்
களையவும் புதிய கட்டே யாயினு
மினிய தாயி னேற்கவுந் துணியுங்
கல்வி யாளரென் கண்ணனை யாரே 15

யாப்பியல் புணரினு மெடுத்த வண்ணம்
பாடுமா றருள்வது பாரதி கடனே 16

## வண்ணத் தியல்பு

தண்டபாணி சுவாமிகள் இயற்றிய வண்ணம் பற்றிய இந்நூல் நூறு நூற்பாக்களாலானது. நூலின் முன் பொதுப்பாயிரம், நூன் மாட்சி முதலியனவும் ஆகப்பத்துப் பாடல் அமைகின்றன. நூல் முடிவில், அவையடக்கப் பொருண்மைச் செய்யுள் ஒன்றும் காணப் படுகின்றது.

இந்நூலின் முதற்பதிப்பு 1867-ஆம் ஆண்டு, முத்தமிழ் ஆராய்ச்சிக் கூடம்வழி வந்துள்ளது. தற்போது இந்நூல் பேரூர் சாந்தலிங்க அடிகளார் திருமடத்தாலும் வெளியிடப்பட்டுள்ளது.

தொகை வகை இலக்கணங்களுக்குப்பின் ஒவ்வொரு சந்தமும் தனித்தனியே சான்றுடன் விளக்கப்படுகின்றன. இறுதிப்பகுதி பிறழ்ச்சி இயல்பு முதல் புலமை யியல்பு வரைக் கூறியமைகின்றது. இவ்வகையில் இது முதன்மையான நூலாக அமைகின்றது,

### பொதுப்பாயிரம்

#### நூற்காப்பு

கொற்றவைவேற் செங்கையுள்ள கோமானே பல்லோருஞ்
சொற்ற முதுநூற் றெருகுப்பாய, நற்றமிழ்ச்சீர்
வண்ணத்தியல்பை வருத்துரைக்க நாயடியே
னெண்ணத்தி லீவந் திரு 1

#### அதிகாரியிலக்கணம்

சந்தன மால்வரைக் கோன்சொன்ன நூற்றுணைச்
சார்புடையார்
செந்தமிழ்ப் பாடலின் சீருணர்ந் துண்மைச் செயலைநம்பிச்
சுந்தரச் சண்முகப் பெம்மானைப் போற்று மெய்த்
தொண்டர் மட்டி
லெந்தமக்கோர் தஞ்சமாகிய வண்ணத்தியல்பு நன்றே 2

### கற்ரோர் தன்மை

ஆயிரங் காலமகங்குவிந்து கற்ருலும்
பாயிரமுந் தீர்வரிய பன்னுதமிழ்த் தென்னூல்கண்
மாயிருஞ்சீர் தந்தருளும் வண்ணத் தியல்பு முற்றும்
போயிருந்த் நெஞ்சகத் தோர்புந்தியிடத் துள்ளனவே

3

### அனுமானக் குறிப்பு

விமலதேசி கனருட் பேறில்லாதார் தமிழ்ச் சுவைத்தேன்
விருப்பந்தேரார்
சமணர் நூலுரித்துடையாரனையவர்க் கெல்லாமி கலாந்
தக்கோர்க் கஞ்சு
மெமதுதாரகமான சூத்திர நூறுடைய வண்ணத்தியல்பின்
சீர்கண்
டமரர் சேகரப்பனுவலாகு மென்போர் மூன்று சங்கத்தவர்
தாமன்றே
4

### அவையடக்கம்

கந்த வேளருட்கட்புல மீந்ததா
மிந்த வண்ணத்தியல் பொரு நூற்றையுஞ்
செந்தமிழ்ப் புலமைத் திறற் சீருளார்
மைந்தர் நாளும் வழுத்துவதுண்மையே

5

### நூற்காரணமும் பெயரும்பயனும்

எழுத்துச் சொற்பொருளியாப்பணி யிவற்றை
வழுத்து மாண்புடை வல்லோ ரியாருந்
தொகுத்துக் கூறலிற் றுவக்குறும் பலர்க்கும்
வகுத்துக் காட்டென வடிவேற் செவ்வே
ளன்பர் கூட்ட மகலாக் குருபரன்
றன்பதக் கமலந் தணவா நெஞ்சகத்
துள்ளிருந் தொலிக்கு முரைதேர் சிறியேன்
வெள்ளிய வுணர்வால் விதிக்கு நூற்பெயர்
வண்ணத் தியல்பாம் வளர்தமிழ்ப் புலவர்க்
கெண்ணமுற் றுதவ, லிதன்பய னுமே

6

### ஆக்கியோன் பேற்றம்

மெய்த்தவர்க் கரசின் வெண்மைக் குருவை
விட்புலத்ததிபன்வின் மற்றவை
னுத்தமக் கொலைஞன் வண்மைப்பரவ
னெப்பில் பொற்பலகை மின்னப் பகரும்

வித்தகப் புனிதன் விண்ணிற்புகமெய்
விட்டெழிற் கிளிய தென்னத்திகழ் மன்
முத்தமிழ்ப் புலவன் வண்ணத் தியல்பு
மொய்த்தருட் கவிஞர் நண்ணப் பெறுமே

7

நூன்மாட்சி

குன்றைப் பிளந்தெறியுங் கொற்றவைவேற் கோனறிய
நன்றைக் கருதிநிற்கு நாவலவர்க் கென்றைக்கு
மாளாப் புகழ்கொடுக்கும் வண்ணத் தியல் பெனுநூற்
கேளாச் செவியனைத்துங் கீழ்

1

நூற்பிறப்பிடம்

பல்லோர்க்கு மின்பங் கொடுத்துங் கொடாத பருவமுற்று,
நல்லோர்க்கு நன்மை தரும் புலவோர் சந்த நற்றமிழ்ச்சீர்ச்
சொல்லோர்க்குத் தாயக மாகி நெல் வேலியிற் றெல்லுலகோ
ரெல்லோர்க்கும் வண்மை தரத்தோன்றும் வண்ணத்
தியல்புயர்வே

2

காலமுமரங்கு மேற்றேரும்

ஐஞ்ஞிறம் பொலிவ வாயமுத் தமிழ்க்கு
மணித்தே யாகி யவிர்நலம் புனைதரு
வண்ணத் தியல்பு நூல் வாரியிற் பொருநைப்
புனலிற் கனலிற் புக்குள பன்னூற்
பகுதி தோன்றுமுற் பரங்கிரிக் கடவு
ளவையகத் தேறி யளப்பருங் கோடி
வானவில் லியங்க மற்பொரு திரைநீர்ப்
பெருங்கட லுடீஇய பெய்வளை தலைவயி
னொலிதரப் புரிந்த தொள்ளிய செங்கோல்
வழுதிநாட் டருந்தமிழ் வாணர்
நன்னலந் தேறு நலத்தோர் தவமே

3

நூல்

முதலாவது தொகை யிலக்கணம்

உயிர்வகை யீரா றெற்றீ றொன்பா
னிவற்றின் புணர்ச்சி யிருநூற்றீ ரெட்
டாய்த மொன்றிவ ணுய நால்வகை
யெழுத்தும் பல்வகை யெதுகைச் சொல்லும்
பன்னரும் பொருளும் பழிப்பிலி யாப்பும்
வாய்பாட்டணியும்
வழுவறவுணர்ந்தோ

ரேவலின் முயல்வோ ரெழிற்றவ நோற்போர்
முருகவேளே முதலெனத் தெளிந்தோர்
மலயமால் வரை வந்தனம் புரிவோ
ரனையவர் தமக்கே யழுக்கிலா தமைந்து
குலவுசீர் வண்ணங் குணிக்கிலெண் வகைத்தே

1

அருந்தமிழ்ச் சந்தத்தையு மௌவு
மீற்றிற் குறளாயிடையினு முதலினுங்
குறிலொ டொற் றெனவுங் குலாஅய்ச்சிறிது
நெடிலெனலின்றி நிகழுமன்றே

2

இடையின தொற்றேடுறழு மாய்தமே

3

இரண்டாவது வகை யிலக்கணம்

தத்தவுந் தாத்தவுந் தந்தவுந் தாந்தவுந்
தனவுந் தானவுந் தன்னவுந் தய்யவுந்
தத்தாவென் பதினீடலு மடங்கு
மெண்வகைச் சந்தமென்பார் பெரியோர்

4

அளவிற் கெண்வகைத் தாகிய வண்ணப்
புணர்ப்பிற் றேன்றிப் பொலிவவாய
குழிப்பின் றெகைக்குக் கோடியுஞ் சிறிதே

5

வண்ணக் குழிப்பால் வழங்குஞ் செய்யுள்
வாதித்திகலிய வண்டமிழ்ப் புலவர்
தம்முயர் வொளிர்வான் றக்கோர் மாட்டுப்
பாடலு முழுதுணர் பண்ணவனருட்பே
றெய்தப் பகரலு மிழுக்கிலா வழக்கே

6

வண்ணத்தளவில் வடமொழி மரூஉச்சொற்
புல்லினு மதுரப் பொலிவு குன்றலுங்
குழிப்புச்சிதைவுங் கொடுந்தமிழ்ப் புணர்ப்பு
மளபெடைச் சேர்க்கையு மாகாவன்றே

7

தத்தச் சந்தம்

இருவகைக் குறிலினும் வல்லினத்தொற்றே
டவ்வுயிர் மெய்க்குறி லொன்றிற்றத்தவே

8

குறிலொடு வல்லொற்றவ் வுயிர்மெய்க்குறி
லிசைந்து மற்றிருவகை யொற்றென் றடுப்பினுந்
தத்தவா மெனச் சாற்றுத லியல்பே

9

குறிலோ டிடை யினத் தொற்றும் வல்லொற்று
மவ்வினத் துயிர் மெய்க்குறிலுந் தத்தவே

10

குறிலுடனிடையின மெய்யும் வல்லின
மெய்யு மவ்வுயிர் மெய்க்குறி லொன்று
மெல்லினத் திடையினத் தொற்றினி லொன்றுந்
தத்தவா மெனச் சாற்றுவர் புலவோர்

11

பத்தியென்பது மொற்றருஞ் சிட்டனு
நெய்த் தென் றுரைப்பதுமெய்ச் சொலுங் கர்த்தனுந்
தத்தவென்றி யங்குஞ் சந்தத்து தாரணம்

12

தத்தாச்சந்தம்

குறிலொடு வல்லினத் தொற்றிசைந்தவ்வினத்
துயிர்மெய் நெடில்வரிற் றத்தா வாகுமே

13

குறிலொடு வல்லொற்றவ்வுயிர் மெய்நெடிற்
புணர்ப்பின் மற்றிருவகை யொற்றுென்றடுப்பினுந்
தத்தா வென்றே சாற்றுவர் பெரியோர்

14

குற்றெழுத்ததன் பினிடை யினத் தொற்றும்
வல்லின மெய்யுமவ் வினத்துயிர்மெய்
நெடிலுஞ் சேரினுந் தத்தா வாகுமே

15

எவ்வகைக் குறிலொடு மிடையினத் தொற்றும்
வல்லினத் தொற்றேடுயிர் மெய் நெடிலு
மிடையின மெல்லினத் தொற்றிலொன்றுந்
தத்தா வென்றே சாற்றுதல் வழக்கே

16

அத்தா வென்பதுங் கற்று ரென்பதுந்
தொட்டா னென்பதும் பொய்க்கோ வென்பது
நெய்க்கோ லென்பது மெய்க்கோ னென்பதுந்
தத்தா வென்னுஞ் சந்தத் துதாரணம்

17

தாத்தச்சந்தம்

நெடிலுடன் வல்லினத் தொற்றே டுயிர் மெய்க்
குறில்வரிற் சந்தந் தாத்தவாகுமே

18

நெடிலும் வல்லினத் தொற்று மவ் வுயிர் மெய்க்
குறிலு மற்றிருவகை யொற்றி லொன்றுஞ்
சாரினுஞ் சந்தந் தாத்த வாகுமே

19

நெடிலோடிடையின மெய்யும் வல்லொற்றோ
டுயிர் மெய்க்குறிலு மொன்றினுந் தாத்தவே

20

நெட்டெழுத் திடையினத் தொற்றும் வல்லினமெய்
யவ்வினத்துயிர் மெய்க்குறின் மற்றிரு வகை
மெய்யிலொன்றிவற்றின் விளக்கமுந்தாத்தவே

21

காற்றும் பாட்டருங் கூத்தனும் பார்ப்புந்
தூர்த்தனுங் காழ்த்தலுந் தாத்தவி னுதாரணம்

22

தாத்தாச்சந்தம்

நெடிலுடன் வல்லினத் தொற்று மவ்வினத்
துயிர்மெய் நெடிலுந் தாத்தா வாகுமே

23

நெடிலும் வல்லொற்று மவ் வினத் துயிர்மெய்
நீட்சியு மற்றிரு வகைத்தாமெய்யினி
லொன்றும் புணர்தலுத் தாத்தா வாகுமே

24

நெடிலுடனிடையின மெய்யும் வல்லொற்று
மவ்வினத் துயிர்மெய் நீட்சியும் புணர்ந்த
பதமுந் தாத்தா வென்றிடப் படுமே

25

நீடலு மிடையினத் தொற்றும் வல்லின
மெய்யொ டுயிர்மெய் நெடிலுமற் றிருவகை
யொற்றி லொன்றுந் தாத்தா வாகுமே

26

சாத்தா வாற்றூர் மாற்றூன் வேய்ப்பூ
வாய்த்தோர் சீர்க்கோனெனு மூவிரண்டுந்
தாத்தா வென்னுஞ் சந்தத்து தாரணம்

27

தந்தச்சந்தம்

குறிலு மெல்லினத் தொற்றும் வல்லினத்
துயிர்மெய்க் குறிலு மொன்றிடிற்றந்தவே

28

குறளுமெல்லின மெய்யும் வல்லுயிர்மெய்க்
குறிலு மற்றிருவகை யொற்றிலொன்றுந்
தந்தவா மெனச் சாற்றுதன் முறையே

29

குற்றெழுத் திடையினத் தொற்று மெல்லினமெய்
வல்லினத் துயிர்மெய்க் குறிலுந்தந்தவே

30

குறிலோடிடையின மெய்யுமெல் லொற்றும்
வல்லினத்துயிர் மெய்க்குறளு மற்றிருவகை
யொற்றி லொன்றுஞ் சேரினுந் தந்தவே

31

மஞ்சுங் கொண்கருங் கந்தனு மொய்ம்பு
மொய்ம்பரு மொய்ம்பனுந் தந்தவென்றேதுஞ்
சந்தத்து தாரணமா மெனத்தகுமே

32

தந்தாச்சந்தம்

குற்றெழுத்தோடு மெல்லின மெய்யும்
வல்லினத்துயிர் மெய் நெடிலுஞ்சேரிற்
றந்தா வென்பது தண்டமிழ் வழக்கே

33

குறிலு மெல்லினத் தொற்றும் வல்லுயிர்மெய்
நெடிலு மற்றிருவகை யொற்றி லொன்றுஞ்
சேரினுந்தந்தா வென்பது சிறப்பே

34

குறளோடிடையின மெய்யுமெல் லொற்றும்
வல்லினத் துயிர் மெய்நீட்சியும் புணரிற்
றந்தா வாமெனச் சாற்றுதன் முறையே

35

குறிலுடனிடையினத் தொற்று மெல்லின
மெய்யும் வல்லினத் துயிர்மெய் நெடிலு
மற்றிரு வகைத்தா மொற்றினத் தொன்றுஞ்
சாரினுந் தந்தா வென்பது தானே

35

அந்தோ வென்பதுந் தங்கா ரென்பதும்
வந்தே னென்பது மொய்ம்பா வென்பது
மொய்ம்போ ரென்பது மொய்ம்போ னென்பதுந்
தந்தாவென்னுஞ் சந்தத்து தாரணம்

37

தாந்தச்சந்தம்

நெடிலொடு மெல்லினத் தொற்றும் வல்லினத்
துயிர்மெய்க் குறளு மொன்றிடிற் றாந்தவே

38

நெட்டெழுத்தோடு மெல்லினத் தொற்றும்
வல்லினத்துயிர் மெய்க்குறிலு மற்றிருவகை
யொற்றினத் தொன்றுஞ் சேரிற்றாந்தவே

39

நெடிலோடிடையினத் தொற்று மெல்லினத்து
மெய்யும் வல்லினத்துயிர் மெய்க்குறிலும்
புணரிற்ருந்தவென்றுரைப்பார் புலவோர்

40

நீட்சியு மிடையின மெய்யுமெல் லொற்றும்
வல்லினத் துயிர்மெய்க் குறளு மற்றிருவகை
யொற்றி லொன்றும் புணரினுந் தாந்தவே

41

வேந்தும் வேந்தரும் பாங்கனும் பாய்ந்துஞ்
சார்ங்கருஞ் சார்ங்கமுந்தாந்தச் சந்தத்
துதாரணமா மென்றுரைப்பார் பெரியோர்

42

*தாந்தாச்சந்தம்*

நெடிலொடு மெல்லினத் தொற்றும் வல்லினத்
துயிர்மெய் நீட்சியுந் தாந்தா வாகுமே

43

நீடலுமெல்லின மெய்யும் வல்லுயிர் மெய்
நெடிலு மற்றிருவகை யொற்றினத் தொன்றுந்
தாந்தா வாமெனச் சாற்றுதலியல்பே

44

நெட்டெழுத்திடையினத் தொற்று மெல்லினமெய்
வல்லினத்துயிர் மெய் நெடிலுந்தாந்தா
வாமெனப் பகர்வதருந் தமிழ் வழக்கே

45

நெடிலோடிடையின மெய்யுமெல்லொற்றும்
வல்லினத்துயிர் மெய் நீட்சியு மேனைய
வொற்றினத் தொன்றுந் தாந்தா வாகுமே

46

சேந்தா வென்பதும் வாங்கா ரென்பது
நான்ரு னென்பது நேர்ந்தோ வென்பதுஞ்
சார்ந்தோ ரென்பது மாய்ந்தா னென்பதுந்
தாந்தா வென்னுஞ் சந்தத்து தாரணம்

47

*தனச்சந்தம்*

குறிலிரண் டிசையிற்றன வெனப்படுமே

48

குற்றெழுத் திரண்டு மெல்லினத் திடையினத்
தொற்றெழுத் தொன்றுந் தன வெனப்படுமே

49

குருவுந் தவருஞ் சுதனுந்தன வென்
ருேதுஞ் சந்தத்து தாரண மாமே

50

தனுச்சந்தம்

குறினெடிற் புணரிற்றனு வெனப்படுமே 51

குறிலொடு நெடிலிற் றிடையின மெல்லினத்
தொற்ருென்றடுப் பினுந்தனு வெனப்படுமே 52

குகா வென்றுரைப்பதுஞ் சிருரென்று ரைப்பதுங்
கவானென்று ரைப்பதுந் தனுவெனுஞ் சந்தத்
துதாரணம் மென்று ரைப்பார் பெரியோர் 53

தானச்சந்தம்

நீட்சியுங் குறிலுந் தானவாகுமே 54

நெடிலுங் குறிலு மிடையின மெல்லினத்
தொற்றென லொன்றுந் தானச் சந்தமே 55

நெடிலோ டிடையின மெய்யுங் குறிலுந்
தானவா மெனச் சாற்றுதன் முறையே 56

நெடிலுடனிடையின வொற்றுங் குறிலும்
வல்லினந்த வரிருவகைத்தா மெய்களி
லொன்றும் புணரினுந் தானவாகுமே 57

நெடிலு மெல்லினத் தொற்றுமவ் வினத்தோ
டிடையின மென்னு மிவற்ருேருயிர் மெய்க்
குறிலுஞ் சேர்ந்து குலவினுந் தானவே 58

நீடலு மெல்லின மெய்யுமவ் வினத்தோ
டிடையினத் தோருயிர் மெய்க்குறி லெழுத்துங்
கூறினத் தொற்றினி லொன்றுந் தானவே 59

காதுஞ் சூதரும் பாதமுங் கேள்வியுஞ்
சார்கணுங் கூர்முளு மான்மியுந் தேன்வியு
மாண்மனுங் கூன்விலு மான்மரு மாண்வினுந்
தானச் சந்தத்து தாரண மாமே 60

தானுச்சந்தம்

இணை நெடிற்ருனு வென்றிடப் படுமே 61

நெடிலிணைந் திடையின மெல்லினத் தொற்ருென்
றடுப்பினுந் தானுவா மெனல் வழக்கே 62

நீட்சியு மிடையினத் தொற்று நீடலுந்
தானு வென்றே சாற்றுவர் பெரியோர்

63

இடையினத் தொற்றி னிருபாலிரு நெடிற்
புணர்ப்பா யீற்றிற் புகலின மெல்லினத்
தொற்றென்ற டுப்பினுந் தானுவாகுமே

64

நெடிலு மெல்லொற்று மெல்லினத் திடையினத்
துயிர் மெய்நீட்சி யுந்தானு வாகுமே

65

நெடிலொடு மெல்லொற்றவ் வினத்திடை யினத்
துயிர் மெய்நீட்சியி லொன்றவ் வீரினத்
தொற்றென்றணை யினுந்தானு வென்பதே

66

தாதா வென்பதும் போகா ரென்பது
மேவா னென்பது மோர்பூ வென்பதுங்
கூர்வே லென்பதுஞ் சேர்மா னென்பதுங்
கேண்மோ வென்பது மான்வா வென்பது
மாண்மா னென்பதுங் கூன்வா ளென்பதும்
வான்மே லென்பதுந் தேன் வீணென்பதுந்
தானுச் சந்தத்து தாரண மாமே

67

தன்னச்சந்தம்

குறிலொடு மெல்லொற்றவ் வினத்திடையினத்
தோருயிர் மெய்க்குறிற் சேரிற்றன்னவே

68

குறளொடு மெல்லினத் தொற்று மவ்வினத்தோ
டிடையினத் துயிர் மெய்க்குறி லெழுத்தொன்று
மவற்றேரொற்றும் புணரினுந் தன்னவே

69

கண்ணி யென்பது மென்வி யென்பது
மண்ண னென்பதும் பொன்வி லென்பது
முன்ன ரென்பது மென்வென் னென்பதுந்
தன்னச் சந்தத்து தாரணமாமே

70

தன்னுச்சந்தம்

குறளொடு மெல் லொற்றவ் வினத்திடையினத்
துயிர்மெய் நெடி லொன்றுறிற்றன்னுவே

71

குறிலு மெல்லொற்றுமவ் வினத்திடையினத்
துயிர் மெய் நீட்சியு மவற்ரூ றொற்றுஞ்
சேரினுந் தன்ஞ வென்பதுதிறமே 72

அண்ணுவென்பது மன்வா வென்பது
முன்னே னென்பது மன்ஞேரென்பதும்
பொன்வே லென்பதுந் தண்வா னென்பதுந்
தன்ஞச் சந்தத்து தாரணமாமே 73

தய்யச்சந்தம்

குறிலோடிடை யினத்தொற்றுமவ் வினத்தொடு
வல்லினத்துயிர் மெய்க் குறளிலொன்றுஞ்
சாரிற்றய்ய வென்று ரைப் பார்தக்கோர் 74

குறிலுடனிடையின மெய்யுமவ்வினத்தொடு
வல்லினத்துயிர் மெய்க்குறளி லொன்று
மிடையின மெல்லினத் தொற்றி லொன்றும்
புணரினுந் தய்ய வென்றுரைப்பார் புலவோர் 75

வள்ளியுஞ் செய்தியும் வள்ளலும் செய்தலு
மெய்யனுஞ் செய்கணுந்தய்யச் சந்தத்
துதாரண மாமென்றுரைப்பது முறையே 76

தய்யாச்சந்தம்

குற்றெழுத் திடையினத் தொற்றவ் வினத்தொடு
வல்லினத்துயிர் மெய்நெடிலொன் ருென்றிற்
றய்யா வென்றே சாற்றிடத் தகுமே 77

குறளோ டிடையினத் தொற்றுமவ் வினத்தொடு
வல்லினத்துயிர் மெய்நீட்சி யிலொன்று
மிடையின மெல்லினத் தொற்றினி லொன்றுந்
தய்யாவென்றே சாற்றுவ ருணர்ந்தோர் 78

மெய்யே யென்பது நொய் தோவென்பதுந்
தள்ளாரென்பதுஞ் செய்தாரென்பதும்
வல்லோனென்பது மொல்கேனென்பதுந்
தய்யாச் சந்தத்துதாரண மாமே 79

*பிறழ்ச்சியியல்பு*

குறிலுடனிடையினத் தொற்று மெல்லினத்
துயிர்மெய்யெழுத்து மொன்றினு மஃதோ
டவற்றினோ ரொற்றணு கிற்றுயினுந்
தன்னவுந் தய்யவும் பிறழுமன்றே

80

பொய்மை யென்பதும் வர்மமென்பது
மெய்ம்மெய் `யென்பதுந் தன்னவுந் தய்யவும்
பிறழ்வதினு தாரணமென்பார் பெரியோர்

81

*மெலித்தலியல்பு*

தன்னவுந் தய்யவுஞ் சாற்றுஞ் சொற்களி
லொற்றின்பின் வருமுயிர்மெய் வேறேற்
சந்திவேற்றுமை யிற்றன வெனப் படுமே

82

*தொடர்ச்சியியல்பு*

சொற்களிற் குறினெடி லொன்றினு மஃதோ
டிடையின மெல்லினத் தொற்றென் றடுப்பினு
மவற்றினுக் குறிய வண்ணத்தீற்றினு
முறையே னகரக் குறினெடி லுறுமே

83

*மதிப்பியல்பு*

மூவினத் தெழுத்தினு முழுமையைக் குறிக்கு ஞ்
சந்திக டோறுந் தணவுவ தணந்து
சேர்ப்பவை சேர்ப்பது சிறந்தோர் வழக்கே

84

*புணர்ச்சியியல்பு*

சில்வகைச் சந்தப் புணர்ப்போர் துள்ளலே

85

பல்வகைத் துள்ளற் புணர்ப்போர் குழிப்பே

86

குழிப்பொரு மூன்று கூடிய பின்னர்
தொங்கற் றுழிசைத் துள்ளலொன் றிசைக்கிற்
கலை யொன்று மெனக்கழறுவர் புலவோர்

87

என் கலைப் புணர்ப்போர் வண்ணப் பாவே

88

## சிறப்பியல்பு

கலைதொறு முற்பிற் குழிப்போர் மோனை
யுடைத் தாக் கூறுதலுத்தமர் வழக்கே 89

இருகலையடி யொன் றென்பதுமவற்றின்
மோனை யொன்றுமொழிவது மொருநா
லெதுகைத்தாவது மிருபகுப் பாதலும்
வண்ணப் பாவின் வழக்கெனத் தகுமே 90

முந்திய பகுப்பின் கலையோர் நான்கிற்
றலைவன்றன் புகழ் மூன்றிற் கூறிமற்
றென்றினல்லன்னவன் வரை நாட்டணி சொற்
றேனையகலை நான் கிடத்தும் பல்வகைத்
துறையிலொன்றைத் துகளறக் கூறல்
வண்ணப் பாவின் வழக்கெனத் தகுமே 91

## தழூஉமியல்பு

தொங்கற் றுழிசைத் துள்ளலோ ரெட்டுந்
துறையொடு பாவாத் துலங்கா தாயினுந்
தண்டமிழ்ப் புலவோர் தள்ளாரன்றே 92

தமது வேட்கையுந் தன்மையும் விரும்புந்
தெய்வச் சீருஞ் செந்தமிழ்க் கழகாம்
வண்ணப்பாவா வழங்கலு முறையே 93

ஏனையபல்பா வினங் கடம்மையும்
வண்ணத்துறையால் வழூத்தலு மியல்பே 94

## புலமையியல்பு

வண்ணந்தேரார் வண்டமிழ்ப் பெருஞ்சீர்
மநுநூல் கல்லா மன்னர்கைக் கோலுஞ்
சத்திய மில்லார் தவமும் போலுமே 95

எவ்வகைப் புலமைத் திறலோரேனும்
வண்ணங் கூறும் வலியொன்றிலரேற்
கள்வரிற் கலங்குங் கருத்தினோரே 96

வண்ணச் செந்தமிழ் வளமையோர்ந்தோர்

நால்வகைப் புலவர்தம்மு ளோறே

97

உடுவினத்தர சென மதியைக் கூறலுங்
கவியினத்தரசென வண்ணச் செந்தமி
ழுதனைக் கூறலும் புரையு மன்றே

98

வண்ணப் பாவலர்வளர் புகழ்ப் பேற்றை
யன்னவர் தாமே யறிவர் மன்னோ

99

பொறியோரைந்தும் புத்தியுளடங்கலி
னைவகை யிலக்கண மனைத்துஞ் செந்தமிழ்
வண்ணச் சீருள் வயங்கு மன்றே

100

பெருந்தன்மை

இந்நூற்பா நூற்றுளி யம்பாதன மேலோர்
தந்நூ லுரைக்கிற் றணவாதே — யெந்நூலுங்
கொற்றவை வேற் செங்கைக் குருநாதன் றன்னருளே
சொற்றதெனத் தேர்ந்தவர்வாய்ச் சொல்

## பொருத்த விளக்கம்

இவ் இலக்கண நூலை இயற்றியவர் நாகூர் தர்கா மகா வித்துவான் ஸ்ரீலஸ்ரீ குலாம் காதிறு நாவலர் ஆவர். இந்நூல் ஆ. கா பிச்சை யிபுறுகீம் புலவரது சிறப்புப்பாயிரம், உரைகளுடன், 1900-ஆம் ஆண்டில் காரைக்காலில் கா. செ. செய்யிதிபுறுகீமால் அச்சிடப்பட்டது என்ற செய்தி தெரிகின்றது. 1880-இல் நூல் இயற்றி அரங்கேற்றப் பட்டமையைச் சிறப்புப் பாயிரம் தெரிவிக்கின்றது.

பாட்டியலின் பகுதியான பொருத்தத்தை நுவல் பொருளாகக் கொண்டுள்ளது. பத்துப் பொருத்தமும் நூற்பா யாப்பில் யாக்கப் பட்டுள்ளன. மொத்தத்தில் நூல் 91 நூற்பாக்களும், ஒரு தற் சிறப்புப் பாயிரமும் உரையாசிரியரின் சிறப்புப் பாயிரமுமாகிய இரு ஆசிரியங்களும் உடையது.

இருபதுக்கு மேற்பட்ட கவிதை, வசன, இலக்கண நூற்கள் எழுதிய இவரை, புதல்வர் மு. செவத்த மரைக்காயர் கீழ் வருமாறு புகழ்கின்றார்.

அருத்த விளக்கமுறும் பல நூற்களுக் காதரவாம்
விருத்த விளக்கமும் வெண்பா விளக்கமும் வீண்படவிப்
பொருத்த விளக்கம் புனைந்து தந்தானலம் பொங்குபுகழ்
நருத்த விளக்கம் பெறு குலாம் காதிறு நாவலனே.

## சிறப்புப் பாயிரம்

வெள்ளைத் தாமரை யள்ளிதழ்த் தவிசில்
வீற்றமர் கலைமகட் போற்றரும் புலவர்க்குத்
தீங்கவி பாடுந் திறத்தி னுங்க
நாட்டிய பல்வகைப் பாட்டியல் வழியே
வேங்கடங் குமரி மேல்கடல் கீழ்கட
லீங்குநடுப் பட்ட வோங்குதமிழ்க் கவியின்
பொருத்தம் பத்துந் திருத்தநூற் பாவிற்
செய்யுள்வழுத் தீரிய வைவகை யியலோ
டிலக்கிய முணர்ந்தார் மலக்கறக் கேட்பத்
துளக்குறு பொருத்த விளக்கமென் பெயரான்
முரசுமுழங் கிரும்படை யரசினர் யாண்டு
பதினெண் ணூற்றினெண் பதுபுகு மதனிடை
யிந்நூ லியற்றி யெந்நூ றேர்ந்த
வலமுறு சிராமலைப் புலவரவைக் களத்தின்
மாற்றரும் புகழ்சா லுயரரங் கேற்றினன்
முன்னூ லொருங்கு பின்னூ லுணர்ந்து
பன்னூ லியற்றிய தொன்னூற் புலவன்
கனைகட லரவத்துத் தனைநிகர் நாகூர்க்
காவலர் புகழ்குலாம் காதிறு
நாவல னென்ன நவிலா சிரியனே

### தற்சிறப்புப் பாயிரம்

உலகமும் பிறவு முடைமையிற் புரக்குங்
கலகமி லொருமுதற் கடவு ளாவன
திருத்தகு வல்லவற் றெழுது
பொருத்த விளக்கம் புகலுதும் யாமே

### நூல்

பொருத்தந் தாமே புனைந்துரை நூன்முத
விருந்துமுன் மொழிய வென்மனுர் புலவர் 1

அவைதாம்,
மங்கலஞ் சொல்லே யெழுத்தே தானம்
பாலுணு வருணம் பகுக்கு நாளே
கதியே கணமே யென்றிக் கூறிய
வொருபஃ தென்மனு ருணர்ந்திசி னோரே 2

மங்கலம்

சீரும் பொன்னுந் திருவு மணியு
நீருஞ் சொல்லு நிலமு மெழுத்துங்
காரும் பரிதியுங் கடலும் யானையுந்
தேரும் கங்கையுந் திங்களு மலையும்
பூவு முலகமும் புகழும் பிறவுந்
தோமின் மங்கலச் சொல்லா கும்மே 3

இங்கிவற் றென்றுமுற் சொல்லென வியைதன்
மங்கலப் பொருத்த மென்மனார் புலவர் 4

மங்கல மல்லது மங்கல வழுவே 5

வரிற்பரி யாயமு மான மில்லை 6

தலைபெற வமைத்த மங்கல மொழிமுன்
னடைபெறு மடைமொழி நண்ணலு முரித்தே 7

சொல்

வகையுளி யுண்மையும் வனப்புளொன் றின்மையுந்
தொகையார் பலபொரு டோற்றச் சொல்லும்
பொருளின் மொழியு மீற்று விகாரமு
மங்கல மாயினும் வழுவா கும்மே 8

வல்லன வவற்றுளொன் றில்லது
செ... ...ன் பொருத்த மென்மனார் புலவர் 9

முதன்மொழிக் குரியது மூவகைச் சீரே 10

எழுத்து

நயனிலை யக்கர நண்ணுழி வியனிலை
சமனிலை யெனவிரு தன்மைய வாகும் 11

மூன்றைந் தேழே யொன்பா னுக
வொற்று முளப்பட வொன்றுதல் வியனிலை 12

இருத்த னுன்கே யிருமுன் றெட்டாச்
சமனிலை யென்மனார் தகைமை யோரே 13

வியனிலை நண்ணுதல் வியனிலை யாகும் 14

சமனிலை வராதெனச் சாற்றினர் புலவர் 15

**தானம்**

குறினெடி லிரண்டா இஉஐ ஔக்கொள
வறிதரப் பகுப்புழித் தான மைந்தே 16

அவைதாம்
பாலன் குமர னரசன் மூப்பு
மரண மென்மனுர் மாணு மோரே 17

பாட்டுடைத் தலைவ னியற்பெயர் முதற்கண்
ணுட்டிய வக்கரம் பால னுக்கிப்
போற்றிய மங்கலப் பொருத்தச் சொல்லிற்
காட்டிய முதலக் கரம்வரு காறு
மெண்ணுழிப் பாலனுங் குமரனு மரசனு
நண்ணுழி நன்மை யென்மனுர் புலவர் 18

மூப்பு மரணமுந் தீதென மொழிப 19

**பால்**

குற்றெழுத் தனைத்து மாணின் பால 20

பெண்ணின் பால நெட்டெழுத் தொருங்கே 21

ஆய்தமும் புள்ளியு மலியெனப் படுமே 22

ஆவியீ ராறு மடங்கன் மெய்யு
மாண் பெண்ணென்ன வறைநரு முளரே 23

ஆடூஉ மகடூஉக் கவ்வவக் கரமே
பாடுங் காற்கொள லென்மனுர் புலவர் 24

மயங்கினும் வழாஅ மரபிற் ருகும் 25

அலியக் கரமுதன் மொழிக்கமை யாது 26

**உணு**

அஇ உஎ கசதந பமவமெய்
யமுதெழுத் தென்மனு ரறிந்திசி னேரே 27

ஆஓ வேறிய யரலவும் யரலவு
முயிரொற் றென்ன வோதிய புலுதமு
மஃகா னுய்தக் குறுக்கமு மன்றே
நஞ்செழுத் தென்ன நாட்டினர் புலவர் 28

அமுதெழுத் தனைத்து மாதிச் சீர்க்குந்
தசாங்கத் தயற்குந் தகுவன வாமே 29

நஞ்செழுத் தெல்லா நவின்றவுக் காகா 30

முற்சீ ரமைந்த மங்கல மொழியி
னச்செழுத் துறினு நாட்டினர் கொளலே 31

அடையமங் கலத்து ளமுதமா நஞ்சே 32

வருணம்

முந்நான் கச்சு முதலொற் றுறு
மந்நான் கோத்தி னந்தணர்க்குரிய 33

நடுநிலே யாறு நல்லரை யர்க்க 34

லவ றன வொற்று நான்குவணி கர்க்கே 35

ஒழிந்தன விரண்டுஞ் சூத்திரர்க் குரிய 36

நாள்

அ ஆ இ ஈ நான்குங் கார்த்திகை 37

உ ஊ எ ஏ ஐ பூரா டம்மே 38

ஒ ஓ ஔவே யுத்திரா டம்மே 39

கவ்வருக் கத்திற் கண்டமுன் ஞன்குஞ்
செவ்விதி னுணருந் திருவோ ணம்மே 40

கு கூ விரண்டுந் திருவா திரையே 41

கெ கே கையே புனர்பூ சம்மே 42

கொ கோ கௌவே பூச மாகும் 43

சவ்வருக் கத்திற் சாற்றுமுன் ஞன்கு
மிவ்வுல கத்த ரிரேவதி யென்ப 44

சு சூ செ சே சையச் சுவினி யாகும் 45

சொ சோ சௌ மூன்றும் பரணிக் குரிய 46

ஞு ஞா ஞெ மூன்று மவிட்ட மாகும் 47

தவ்வுந் தாவுஞ் சோதி யாகும் 48

தி தீ து தூ
தெ தே தையே செப்பும் விசாகம் 49

தொ தோ தௌ மூன்றுஞ் சொல்லுழிச் சதையம் 50

நந்நா நிந்நீ நுந்நூ வாறு
மந்நூ லுணர்ந்தா ரநுட மென்ப 51

நெ நே நை மூன்று நேருங் கேட்டை 52

நொ நோ நௌ மூன்றும் பூரட்டாதி 53

பல்வருக் கத்திற் படுமுத னன்கு
முத்திர மென்மனு ருணர்ந்திசி னோரே 54

புவ்வும் பூவும் பொருந்து மத்தம் 55

அவற்று ளொழிந்தன வனைத்துஞ் சித்திரை 56

மம்முத லாறு மகமா கும்மே 57

மெமேமை மூன்று மாயிலி யம்மே 58

ஒழிந்தன மூன்றும் பூர மாகும் 59

ஆவூர் யவ்வே யுத்திரட் டாதி 60

யு யூ யோவே மூல மாகும் 61

வவ்வருக் கத்து வருமுத னன்கு
முரோகணி யென்மனு ருணரு மோரே 62

வெவே வை வௌ மிருக சீரிடம் 63

பாட்டுடைத் தலைவ னியற்பெயர் முதலெழுத்
தாதி யாக வாங்குறக் கிளந்த
விருபா னேழென் றெண்ணு நாட்களை
மூவொன் பானு முறையிற் பகுப்புழி
யொன்று மூன்றைந் தேழுறி னகா
திரண்டு நான்கா றெட்டா கும்மே 64

ஈற்றுக் கூற்றின் மூன்றைந் தேழும்
போற்ற லென்மனுர் புலமை யோரே

65

வைநா சிகமும் வராதென மொழிப

66

கதி

குறிலினும் வலியினுங் கொளுங்கடை யொழிந்தவை
விண்ணேர் கதியென விளம்பினர் கொளலே

67

நெடின்முத லுன்கு மீறழி மெலியு
மக்கட் கென்மனுர் மாணு மோரே

68

ஓகரமு மோவும் யரலழ மெய்யும்
றஃகான் புள்ளியும் விலங்கின வென்மனுர்

69

ஐயு மௌவும் வளன மூன்று
நரகர்க் கென்ன நவின்றிசி னேரே

70

தெய்வமு மக்களுஞ் செய்யுண் முதன் மொழிக்
கெய்துத னன்மை யென்மனுர் புலவர்

71

விலங்கு நரகரும் வேண்டிலர் வழுவே

72

மங்கலச் சொன்முத லெழுத்தெனில் வழாது

73

கணம்

தேமாங் காயே யிந்திர கணமே

74

இறுநிரை கருவிள நிலக்கண மென்ப

75

முதனிரை மாங்காய் சந்திர கணமே

76

நேர்தலை விளங்கனி நீர்க்கண மென்ப

77

காய்கடைக் கருவிள மந்தர கணமே

78

கூவிளங் காயே சூரிய கணமே

79

தேமாங் கனியே வாயுக் கணமே

80

புளிமாங் கனியே தீக்கண மாகும்

81

இந்திர கணமே பெருக்கஞ் செய்யும்

82

நிலக்கணத் தானே மலர்த்திரு விளங்கும்

83

சந்திர கணமே வாணு டருமே

84

நீர்க்கண மதுவே சீர்சிறப் பருளும்

85

அந்தர கணமே வாணுட் குன்றும்

86

சூரிய கணமே வீரிய மகற்றும்

87

வாயுக் கணமே செல்வ மழிக்கும்

88

தீயின் கணமே நோயை விளேக்கும்

89

ஆற்றலி னிவ்வீ ரைந்து பொருத்தமும்
போற்றின ராகலிற் போற்றுத லென்ப

90

வராவெனிற் சிலவு மான மில்லே

91

## யாப்பொளி

தமிழ்ப் பேராசிரியர் ஆர்.சீநிவாச ராகவாசாரிய சிரேமணி அவர்களால் எழுதப்பட்ட இந் நூல் 1957-ஆம் ஆண்டு திருவேங்கடவன் கீழ்த்திசைக் கலே ஆராய்ச்சிக் கழகம் வழி வெளிவந்துள்ளது. யாப்புப் பற்றியது இந்நூல்.

யாப்பருங்கலக் காரிகை போன்றன நுவலும் இலக்கணம் எளியனவாக இல்லாமையும், 'யுத்தி வாதத்திற்கு உகந்த சில கட்டுப்பாடுகள் இன்றியும், யுத்தி வாதத்திற்கு ஒவ்வாத சில கட்டுப் பாடுகளுடன் கூடியும்' இருப்பதனல், 'எளிய முறையில், பொருள்ற்ற சில பழைய நியமங்களே நீக்கிப் புதிய சில நியமங்களேப் புகுத்தி' இந்நூல் இயற்றியதாக ஆசிரியர் முன்னுரையில் குறிப் பிடுகின்ருர்.

வண்ணத்தியல்பின் இறுதியில் சில சான்றுப் பாடல்கள் தனியே தரப்படல் போன்றும், பாப்பாவினம், சிதம்பர செய்யுட் கோவை பல்சந்தப் பரிமளம் போன்றன சான்றிலக்கியம் அமைக்குமாறும் யாப் பொளி ஆசிரியரும்,

'திருவேங் கடவன் திருவிளே யாடல்கள்
அமைந்த வடமொழி ஆகிய புராணக்
கதைகளேத் தொடர்புறக் கவின்தமிழ்ப் பாவாற்
செய்து மேற்கோள்களாய்ச் சிறப்புற அமைத்து'

அளிக்கின்ருர். நூலாசிரியரே விளக்க உரையும் கண்டுள்ளார், இந் நூலுக்கு, கோ. பாலசுந்தர நாயகர் சிறப்புப் பாயிரம் இயற்றி யுள்ளார்.

**இதன்கண், கடவுள் வாழ்த்து உட்பட 185 நூற்பாக்கள் உள. உறுப்பியல் (59), செய்யுளியல் (106), ஒழிபியல் (19) என நூல் மூன்றுபகுப்புடன் அமைகின்றது.**

**ஆசிரியர் தாம் பல புதுமைகளை மொழிந்துள்ளதாகக் கூறினும் இந்நூல் புதிய யாப்புப் புரட்சி ஒன்றும் செய்துவிடவில்லை.**

## உறுப்பியல்

எழுத்ததிகாரம்

மலர்மக ளுறையும் மார்பனை மாயம்
வலவனை வணங்கி விரிப்ப னியாப்பே

எழுத்தசை சீர்தளை யடிதொடை யென்னும்
விழுமிய வுறுப்போ டிசையும் பொருளும்
பிறவும் வழுவறப் பெற்றதி யாப்பே — 1

உயிர், மெய்; உயிர்மெய் குறில்நெடில் அளபெடை
இஉஐ ஔக் குறுமை ஆய்தம்
வன்மை மென்மை யிடைமை மக்குறில்
என்பன வாமெழுத் தென்றனர் உரவோர் — 2

அ ஆ இ ஈ உ ஊ எஏ
ஐ ஒ ஓ ஔ பன்னிரு வுயிரே — 3

கஙச ஞடண தநப மயர
லவழ ளறன பதினெண் மெய்யாம் — 4

இருநூற் றுப்பதி னாறுயிர் மெய்யே — 5

அ இ உ எ ஒக் குறில் ஐந்தே — 6

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில் — 7

குற்றிய லிகரம் முப்பதி னேழாம் — 8

குற்றிய லுகரம் முப்பதின்மூன்றும் — 9

ஐகான் குறுமை மூன்று வகைத்தாம் — 10

ஔகான் குறுமை யொன்றே யாகும் — 11

மாத்திரை மிகுத லள்பெடை யாகும் 12

தனிநிலை முதல்நிலை இடைநிலை ஈறென
உயிரள பெடையிரு பத்தெட் டாகும் 13

ஒற்றள பெடைநாற் பதினிரு வகையாம் 14

கசட தபற வல்லின மாறே 15

ஙஞண நமன மெல்லின மாறே 16

யரல வழள இடையின மாறே 17

மகரக் குறுக்கம் மூன்று வகைத்தாம் 18

குறிலோ(டு) ஐஔக் குறுக்கம் ஒற்றள(பு)
ஒருமாத் திரை; நெடி லிருமாத் திரையாம்;
உயிரள பெடைமும் மாத்திரை யாகும்;
மெய்முற் றுய்தம் இஉக் குறிலரை;
மக்குறில் ஆய்தக் குறில்கா லாகும் 19

மாத்திரை கொண்டே சீரல கிடுவர் 20

அளபெழ லில்லா வாய்தமும் மெய்யும்
அலகு பெறாவென் றறைந்தன ருரவோர் 21

தளைசீர் வண்ணம் சிதைவ தாயின்
உயிரள பெடையிக ரகக்குறி லுக்குறில்
அலகு பெறுவென் றறிதல் வேண்டும் 22

அசையதிகாரம்

அசைந்திசை கொள்ளும் தனித்ததோ ருயிரோ
இரட்டை யுயிரோ வசையா மென்பர்
ஒருயி ருடையது நேரசை யாகும்;
ஈருயி ருடையது நிரையசை யாகும் 23

குறில்ஒற் றடுகுறில் நெடில்ஒற் றடுநெடில்
எனவிந் நான்கும் நேரசையாகும்;
அஅன் ஆஆன் என்பன காட்டாம் 24

குறிலிணை ஒற்றடு குறிலிணை அற்றே
குறில்நெடில் ஒற்றடு குறில்நெடில் நான்கும்
நிரையசை உறுபயன் விராவு வான்ஆல்

25

சீரதிகாரம்

அசையே தனித்தும் சேர்ந்தும் சீராம்
ஓரசை யீரசை மூவசை நாலசைச்
சீரென அச்சீர் நான்கா கும்மே

26

நேர்நிரை தனித்த தோரசைச் சீராம்

27

நேர்நிரை மேல்நேர் நேர்நிரை மேல்நிரை
ஈரசைச் சீர்நான் ககவற் குரிய

28

நான்கீ ரசைமேல் நேரோ கனியோ
சேரின் அவையே மூவசை யாகும்;
நேரிறு மூவசை நான்கும் வெண்சீர்;
நிரையிறு மூவசை நான்கும் வஞ்சி

29

ஈரசைச் சீர்மேல் ஈரசை யேறின்
நாலசை யாகு மென்பர் பெரியோர்;
எண்மூ வசைமேல் நேரோ கனியோ
சேரின் நாலசை யென்பது மோர்முறை;
நாலசை பதினா றும்பொது வாகும்

30

தளையதிகாரம்

சீரொடு சீர்சேர் தல்தளை யாகும்

31

நேரொன் றுசிரி யம்மா முன்நேர்
நாள்முன் நேரு மவ்வியல் பினதாம்

32

நிரையொன் றுசிரி யம்விள முன்நிரை;
மலர்முன் நிரையும் அவ்வியல் பினதாம்

33

தேமா புளிமா முன்நிரை சேரின்
நேர்நிரை யியற்சீர் வெண்டளை யாகும்;
நாள்முன் நிரையும் அவ்வியல் பினதாம்

34

கூவிளம் கருவிளம் முன்நேர் சேரின்
நிரைநேர் இயற்சீர் வெண்டளை யாகும்;

மலர்முன் நேரும் அவ்வியல் பினதாம் 35

காய்முன் நேர்வெண் சீர்வெண் டளையாம்
பூமுன் நேரும் அவ்வியல் பினதாம் 36

காய்முன் நிரைக லித்தளை யாகும்;
பூமுன் நிரையும் அவ்வியல் பினதாம் 37

கனிமுன் நிரையொன் றியவஞ் சித்தளை;
நிழல்முன் நிரையும் அவ்வியல் பினதாம் 38

கனிமுன் நேரொன் றுவஞ் சித்தளை;
நிழல்முன் நேரும் அவ்வியல் பினதாம் 39

அடியதிகாரம்

தளையா லாகித் தொடையொ டிலங்கி
அடியெனப் பெறுவ தடியென் றோர்க;
குறளடி சிந்தடி யளவடி நெடிலடி
கழிநெடி லடியென் றஃதை வகையாம்;
குறளடி யிருசீர் சிந்தடி முச்சீர்
அளவடி நாற்சீர் நெடிலடி யைஞ்சீர்
கழிநெடி லடியறு சீர்முத லனவாம்;
குறளடி யொருதளை சிந்தடி யிருதளை
யளவடி முத்தளை நெடிலடி நாற்றளை
கழிநெடி லடியைந் தளைமுத லியவாம்;
எனலுமிவ் வடியின் இலக்கண மாகும் 40

தொடையதிகாரம்

எழுத்தின் தொடுப்பு முறையே தொடையாம்.
மோனை யெதுகை யியைபள பெடைமுரண்
எனவிது வைந்து வகைத்தா மென்பர்;
ஐந்தும் முறையே அடிஇணை பொழிப்பு
ஒரூஉ கூழை கீழ்க்கது வாய்மேற்
கதுவாய் முற்றென வெட்டா கும்மே 41

பலவடி பொதிமுதற் சீர்முத லெழுத்தோ
பலவா மொவ்வோ ரடியின் சீர்கள்
முதலெழுத் தோநன் கொன்றல்மோனை 42

அடிமுதற் சீர்களில் ஐந்தும் அடியாம் 43

முதலிரு சீரோன் றுதலிணை யாகும்

44

முதலும் மூன்றும் இணைதல் பொழிப்பாம்

45

ஒன்றும் நான்கும் ஒன்றுதலே ஒரூஉ

46

ஒன்றி ரண்டுமூன் றிணைதல் கூழை

47

ஒன்றி ரண்டு நான்காம் சீர்கள்
ஒன்று தலேகீழ்க் கதுவா யாகும்

48

ஒன்று மூன்று நான்காம் சீர்கள்
ஒன்று தலே மேற்கதுவா யாகும்

49

நான்கு சீர்களு மொன்றுதல் முற்றும்

50

பலவடி முதற்சீர் முதல் முடிவல்லா
அடிதொறும் பலசீர் முதல் முடிவல்லாச்
சில வெழுத் தொன்றல் எதுகை யென்பர்

51

பலவடி முதற்சீ ரிறுதி யெழுத்தோ
அடிதொறும் பலசீ ரிறுதி யெழுத்தோ
அமைய வியைத லியைபா மென்பர்

52

பலவடி பொதிமுற் சீர்முத லெழுத்தோ
அடிதொறும் பலசீர் அமைமுத லெழுத்தோ
அளபெழல் அளபெடைத் தொடையா மென்பர்

53

பலவடி பொதிமுதற் சீர்களி லேயோ
அடிதொறு மமைபல சீர்களி லேயோ
அமையும் சொற்கள் பொருளின் வழியா
முரண வமைதல் முரண்தொடை யாகும்

54

அந்தாதித்தொடை அந்தம் முதலஃ
தசைசீ ரடிபா முதலிய வற்றும்

55

வந்த சொல் வருவ திரட்டைத் தொடையாம்

56

தொடைபெற லின்மை செந்தொடை யாகும்

57

தன்னோ டினத்தோ டொன்றுத லாகும்

58

அஆ இ ஒள இஈ எஏ
உஊ ஒஓ ஞநமவ தசவென்
பனவின வட்சர மென்பர் பெரியோர் 59

## செய்யுளியல்

அடிமுத லெழுத்து மாத்திரை யொத்து
எழுத்தசை முதலன முறையி னமைந்து
விழுமிய விசையும் பொருளும் பிறவும்
வழுவறப் பெற்று விளங்கும் செய்யுள் 1

பாப்பா வினமெனச் செய்யு ளிரண்டாம் 2

எழுத்தும் அசையும் சீரும் பிறவும்
இசையுட னமைதல் இசையா கும்மே 3

அகவல் செப்பல் துள்ளல் தூங்கல்
எனவிசை நான்கென முன்னோர் சொன்னார் 4

தாழிசை துறை விருத்த மல்லாச்
செய்யுள் வகையே பாவா கும்மே;
சீர்தளை யடிபிற நியமம் பெற்றிது
சீருற விளங்கு மென்பர் பெரியோர் 5

ஆசிரி யப்பா வெண்பா கலிப்பா
வஞ்சிப் பாவெனப் பாநால் வகையாம் 6

பாவி னிலக்கணம் முற்றும் உருமல்
நேர்ந்து பெற்று விளங்கும் செய்யுள்
பாவின மென்பர் பாவின மறிவார் 7

தாழிசை துறை விருத்தம் மூன்றும்
நால்வகைப் பாவினினமா மென்பர் 8

விருத்தம் துறையல் பாவி னமாய்
தாழ்ந்த விசைபொருந் திய செய்யுள்
தாழிசை யென்பர் தெரு ளுடையார் 9

ஆசிரி யம்வெண் கலி வஞ்சித்
தாழிசை யென்றது நான்கு வகை 10

எருத்தடி சீர்குறை அடிநான் கோ
எருத்திற் றடிகுறை அடிநான் கோ

நெடில்அல் லதுகுற ளடிநான் கோ
துறையா மென்றனர் தெளிவுள் ளோர்

11

ஆசிரி யம்வெண் கலி வஞ்சித்
துறையென் றது நால் வகையாகும்

12

குறள்நெடி லல்லா வடி நான்காய்
அடிநான் கிலும்சீ ரொப்பு ளதாய்
பிரிந்திசை கொள்தனிச் சொல்லி லதாய்
உளதேல் நான்கடி யிலுமு ளதாய்
விளங்கும் செய்யுள் விருத்த மாம்

13

ஆசிரி யம்வெளி கலி வஞ்சி
விருத்த மென்றது நான்கு வகை

14

ஆசிரி யத்தளை யளவடி பெறுமஃ
தாசிரி யப்பா வென்றன ரறிஞர்
ஏஓ ஈஆ என்ஐ இவற்றுள்
யாதா யினுமோ ரிறுதி யெழுத்தும்
மூவக வலிசையுள் ஒன்றும் பெறுமே
மூவடி சிறுமை உளம்போற் பெருமை

15

இருவகை யாசிரி யத்தளை யாலே
வருமிசை யகவ லிசையென் றோர்க

16

ஏந்திசை யகவல் தூங்கிசை யகவல்
ஒழுகிசை யகவல் எனவது மூன்றும்

17

நேரொன் றாசிரி யத்தளை யாலே
நேரு மிசையே ஏந்திசை யகவல்

18

நிரையொன் றாசிரி யத்தளை யாலே
வருமிசை யேதூங் கிசையா மகவல்

19

இருவகை யாசிரி யத்தளை விரவி
வருமிசை யொழுகிசை யகவல் காணீர்

20

மண்டலம் நேரிசை யிணைக்குற ளெனவிவ்
வாசிரி யப்பா மூவகை யாகும்

21

அடிக ளனைத்தும் அளவடி யாயின்
அதுமண் டலவா சிரியப் பாவாம்

22

நிலைமண் டலமடி மறிமண் டலமென
மண்டல வாசிரி யாப்பா விருவகை
23

தத்தம் தானம் தவறு தல்பொரு
வடியுடை மண்டல வாசிரி யப்பா
நிலைமண் டலவா சிரியப் பாவாம்
24

எவ்வடி யெவ்விடம் மறித்து நிற்பினும்
பிறழா மண்டல வாசிரி யப்பா
அடிமறி மண்டல வாசிரி யப்பா
25

இறுதி யயலடி முச்சீ ராயின்
அதுநே ரிசையா சிரியப் பாவாம்
26

முதலு முடிவு மளவடி யாகி
இடைபல வடிகள் குறள்சிந் தாயின்
இணைக்குற ளாசிரி யப்பா வாகும்
27

தளையும் சீரும் அளவொத் துவரும்
ஒருபொருள் மூன்றடி கொண்டதும் அற்றே
மும் மூன் றடிகள் கொண்டதும் முன்னோர்
கருதிய வாசிரி யத்தா ழிசையாம்
28

மூன்று வதடி சீர்குறை யுற்றோ
மூன்றொரு முதலும் சீர்குறை யுற்றோ
நான்கடி யுடைய தாசிரி யத்துறை
29

கழிநெடி லடிநான் கும்சீ ரொப்பும்
உடைய தாசிரிய விருத்த மென்பர்
30

வெண்டளை யளவடி வெண்பா விற்காம்;
ஈற்றடி முச்சீர் அதிலிரு திச்சீர்
நாள் மலர் காசு பிறப்பு ளொன்றும்:
ஈரடி சிறுமை, உளம்போற் பெருமை
ஆயினும் பன்னிரண் டடிவழக் குளதாம்;
செப்பலி சையிரு கற்பங் களுமாம்
31

குறள் சிந்தியல் நாலடி பல்லடியென
இவ்வெண் பாநால் வகையா கும்மே
32

இருவகை இயற்சீர் வெண்டளை யாலோ
ஒருவகை வெண்சீர் வெண்டளை யாலோ

இயற்சீர் வெண்சீர் விரவுத லாலோ
வருமிசை செப்ப லிசையென் றோர்க

33

தூங்கிசைச் செப்பல் ஏந்திசைச் செப்பல்
ஒழுகிசைச் செப்பல் எனவது மூன்றும்;

34

இருவகை இயற்சீர் வெண்டளை யாலே
வருமிசை தூங்கிசைச் செப்ப லாகும்

35

வெண்சீர் வெண்டளை யாலேந் திசையாம்

36

மூவகை வெண்டளை யாலொழு கிசையாம்

37

ஈரடி வெண்பா குறளா கும்மே

38

மூவடி வெண்பா சிந்திய லாகும்

39

இன்னிசைச் சிந்தியல் நேரிசைச் சிந்தியல்
எனவிச் சிந்திய லிருவகை யாகும்

40

குறள்வெண் பாவீ ரடியி னிடையில்
அளவடி யொன்று பொருத்தப் பெறுமேல்
அஃதின் னிசைச்சிந் தியல்வெண் பாவாம்

41

தனிச்சொல் லொன்று மோரீ ராசும்
பொருத்திக் குறளீற் றடியை நிரப்பி
அளவடி யாக்கி அதனின் பின்னர்
குறளி னிறுதி யடியொன் றிட்டால்
அதுநே ரிசைச்சிந் தியல்வெண் பாவாம்

42

நாலடி வெண்பா நாலடி வெண்பா

43

இன்னிசை நாலடி நேரிசை நாலடி
யென நா லடிவெண் பாவிரு வகையாம்

44

மூன்றள வடியும் மூச்சீ ரடியும்
சேர்ந்தா லஃதின் னிசைவெண் பாவாம்

45

இருகுற ளிணைந்து முதற்குற ளீறும்
அடியொடு தனிச்சொல் லொன்று பொருந்தி
ஒருபா வாயது நேரிசை வெண்பா

தனிச்சொல் பெற்று மடிநிறை விலதேல்
இரண்டோ ராசுபொ ருந்தலு முண்டு 46

நாலேந் தாறே ழாதி யளவடி
நவின்ற முச்சீ ரடியொடு மிறுமேல்
பல்லடி வெண்பா வென்று பகர்வர் 47

இன்னிசைப் பல்லடி நேரிசைப் பல்லடி
யெனவிப் பல்லடி வெண்பா விருவகை 48

இன்னிசை நாலடி வெண்பா முறையில்
பல்லள வடியும் முச்சீ ரடியும்
வரினஃ தின்னிசைப் பல்லடி வெண்பா 49

தனிச்சொல் லியைந்த பல்லள வடிகள்
முடிவில் முச்சீ ரடியொடு வருமேல்
அதுநே ரிசைப்பல் லடிவெண் பாவாம் 50

ஈரடிவெண்பா குறள்வெண் பாவாம்
மூவடி வெண்பா சிந்தியல் வெண்பா
நாலடி கொண்டது நாலடி வெண்பா
மேலடி வெண்பா பல்லடி வெண்பா
முன்னது நீங்கிய முப்பாக் களிலும்
இன்னிசை நேரிசை,யெனுமிரு வகையாம் 51

நாலினும் மிகுந்த சீரமைந் துளதாய்
ஈரடி யாய்முன் னடியின் பின்னடி
சீர்குறை யாய்குறள் தாழிசை வருமே 52

இருநே ரடியொரு முச்சீ ரடியாய்
ஒருபொருள் மேல்வரு மோர்மூ வடியும்
மும்மூ வடியும் சிந்துவெண் டாழிசை
சீர்தளை முதலிய நியம மிலாமை
முதலதற் கின்னிசைச் சிந்தியல் வேற்றுமை 53

இரண்டள வடிகள் பொருந்தி அமைந்தோ
மூன்றடி இழிவாய் ஏழடி உயர்வாய்
முன்னடி யிற்சீர் குறைபின் னடிநாற்
சீருள தாயோ வரல்வெண் டுறையாம் 54

குறள் வெண் பாவின் முதலடி போல
இரண்டா மடியும் அளவடி ஆமேல்

அதுவே குறள்வெண் டுறையா கும்மே

55

ஓரடிசீரடி இருநாற் சீரடி
சேர்தல் சிந்தியல் வெண்டுறை யாகும்

56

முன்னீரடியறு சீராய்ப் பின்னீ
ரடிநாற் சீராய் வருமொரு செய்யுள்
நாலடி வெண்பாத் துறையா கும்மே

57

ஐந்தடி ஆறடி ஏழடி உளதாய்
முன்னீ ரடியறு சீர்பெறும் அடியாய்
பின்னடி நாற்சீர் அடியாய் வருவது
பல்லடி வெண்டுறை என்பர் பெரியோர்

58

மூவள வடியோ நான்கள வடியோ
முடிவி லொத்த தனிச்சொல் பெற்று
வருமோர் செய்யுள் வெள்ளை விருத்தம்

59

மூன்றள வடிதனி மொழியொரு வகையாம்
நான்கள வடிதனி மொழிமற் றோர்வகை

60

கலித்தளை துள்ள லிசையள வடிகள்
பொருந்தி மேலுறு பொருளறி விக்கும்
தரவு தனித்தோ பிறிதொ டியைந்தோ
வருமேல் கலியாம்; மூன்றடி சிறுமை
உளம்போற் பெருமை தரவுக் கென்பர்

61

தனிக்கலித் தளையால் வெண்விர வியதால்
பிறவிர வியதால் வருமிசை துள்ளல்

62

ஏந்திசைத் துள்ளல் அகவற் றுள்ளல்
பிரிந்திசைத் துள்ளல் எனவது மூன்றும்

63

முற்றும் கலித்தளை பெற்று வருமிசை
ஏந்திசைத் துள்ளல் என்றார் ஆன்றோர்

64

வெண்டளை யொடுவிர வியகலித் தளைபால்
வருமிசை யேயாம் அகவற் றுள்ளல்

65

பிறதளை யொடுவிர வியகலித் தளையால்
வருமிசை யேயாம் பிரிந்திசைத் துள்ளல்

66

ஒத்தா ழிசைக்கலிப் பாவெண் கலிப்பா
கொச்சகக் கலிப்பா வெனவது மூன்றும்
67

கலித்தளை கள்கூ டியவள வடியும்
முத்துள் ளலிலொன் றும்பெறு வதொரு
தரவு. தாழிசை தனிச்சொல் சுரிதகம்
முதலிய வரல்ஒத் தாழிசைக் கலியாம்
68

பின்வரு முறுப்பின் பொருள்களைக் குறிப்பாய்த்
தன்வயின் தருவது தரவா கும்மே
69

இசைதாழ்ந் தடியும் தரவிற் குறைந்து
தரவை யடுத்துறு முறுப்பே தாழிசை
70

விட்டிசை ஒருசீர் பொருளார் ஒருசொல்
சுட்டிய தனிச்சொல் ஆய்விடு மென்பர்
71

அகவற் பாவெண் பாவினுள் ஒன்றாய்
புகலும் தனிச் சொற் பின்வரு மதுவாய்
கலியின் முடிவில் வருவது சுரிதகம்
72

நேரிசை யம்பு தரங்கம் வண்ணகம்
எனவொத் தாழிசை மூன்று வகைத்தாம்
73

தரவுட னேதா ழிசைகள் மூன்றும்
தனிச்சொல் லும்சுரி தகமும் நிரலே
வருமேல் நேரிசை யொத்தா ழிசையாம்
74

தாழிசை தனிச்சொல் நடுவே அம்பு
தரங்கம் வருமொத் தாழிசைக் கலியே
அம்பு தரங்க வொத்தாழிசைக் கலிப்பா
இதன் கண் தரவா றடியா மென்பர்
75

நாற்சீ ரடிசில முச்சீ ரடிசில
இருசீ ரடிசில அம்பு தரங்கம்
76

தாழிசை யம்பு தரங்கம் நடுவண்
கூறு மராகம் வருமேல் அதுவே
வண்ணக வொத்தா ழிசைக்கலிப் பாவாம்
இதன்கண் ணும்தர வாறடி யென்பர்
77

குறிலிணை நிரையசைச் சீர்களைக் கொண்டபல்
அடிகளா லாகு மராகமென் றோதுவர்
78

துள்ள லோசையும் கலியின் தளையும்
கொள்ளும் நாற்சீர் பலவடி, முடிவில்
வெண்பா வேபோல் சிந்தடி பெறுமேல்
அதுகலி வெண்பா வல்லது வெண்கலி

79

ஒத்தா ழிசைக்கலி வெண்கலி யல்லாக்
கலிப்பா கொச்சகக் கலிப்பா வென்பர்

80

தரவு கொச்சகம் தாழிசைச் கொச்சகம்
மயங்கிசைக் கொச்சகம் எனவது மூன்றும்

81

தரவு தரவிணை தனித்து வரலோ
தனிச்சொல் சுரிதகத் துடனே வரலோ
தரவு கொச்சக் கலிப்பா வாகும்

82

ஒருதர வென்றும் தரவிணை யென்றும்
தரவு கொச்சக மிருவகை யாகும்

83

தனித்தோ தனிச்சொல் சுரிதகத் துடனோ
தரவொன் றுவரின் தரவு கொச்சகம்

84

தனித்தோ தனிச்சொல் சுரிதகத் துடனோ
தரவிணை வருமேல் தரவிணைக் கொச்சகம்

85

தாழிசை களிடை தனிச்சொல் வருதல்
தாழிசைக் கொச்சகக் கலியின் குறியாம்

86

சிஃறுழிசைபஃ றுழிசை யென்ற
தாழிசைக் கொச்சகக் கலியிரு வகையாம்

87

தாழிசை மூன்றாய் அவைநடு வேயும்
தனிச்சொல் தனித்தனி யாக வருமந்
நேரிசை யொத்தா ழிசையே கூறிய
சிஃறு ழிசைக்கொச் சகக்கலிப் பாவாம்

88

தாழிசை பலவா யின்முற் கூறிய
சிஃறு ழிசையே பஃறு ழிசையாம்
பஃறு ழிசையில் தாழிசை யிடையே
தனிச்சொல் இன்மை சிலர்கொள் மதமாம்

89

தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம்
அராகம் அம்பு தரங்கமா முறுப்பு

குறைந்தும் மிகுந்தும் பிறழ்ந்தும் மயங்கியும்
வருமேல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா
90

சீரொத் தனவோ ஒவ்வா தனவோ
பலவடி வந்தவை யிற்றின் முடிவில்
அவ்வடி களினும் நெடிதா யோரடி
வருமேல் அதுகலித் தாழிசை யாகும்
ஈற்றடி முன்னடி தனினும் நெடிதாம்
ஈரடி களின்முத் தொகுதிக ளுளதாய்
இயங்கும் செய்யுளும் கலித்தா ழிசையாம்
91

நெடிலடி நான்கு கலித்துறை யாகும்
92

இயற்சீர் வெண்டளை இரண்டுமோ ஒன்றோ
இயங்கி விளங்காய்ச் சீரினில் இறுமோர்
ஐந்துசீர் நான்கடி கட்டளைக் கலித்துறை;
நேரசை தொடங்கின் பதினா றெழுத்தும்
நிரையசை தொடங்கின் பதினே ழெழுத்தும்
பெறுமிஃ தென்று பெரியவர் புகல்வர்;
ஏயில் முடித லிதனியல் பாகும்
93

அளவடி நான்கு கலிவிருத் தமெனல்
94

வஞ்சித் தளைமுத் தூங்க லிசைகள்
சிறுமை மூவடி பெருமை யுளம்போல்
எனுமுறை யில்பல குறள்சிந் தடிகள்
தனிச்சொல் அகவற் சுரிதக முற்று
விளங்கும் பாவே வஞ்சிப் பாவாம்
95

இருவகை வஞ்சித் தளைபிற தளையால்
முறையே வருமிசை யேதூங் கலிசை
96

ஏந்திசைத் தூங்கல் அகவற் றூங்கல்
பிரிந்திசைத் தூங்கல் எனவது மூன்றும்
97

முற்று மொன்றிய வஞ்சித் தளைகள்
பெற்று வருமிசை யேந்திசைத் தூங்கல்
98

முற்று மொன்று வஞ்சித் தளைகள்
பெற்று வருமிசை யகவற் றூங்கல்
99

இருவகை வஞ்சித் தளைபிற தளைகள்
விரவி வருமிசை பிரிந்திசைத் தூங்கல்
100

வஞ்சிப் பாகுற ளடிவஞ் சிப்பா
சிந்தடி வஞ்சிப் பாவென விருவகை

101

குறளடி கொளுமேல் குறளடி வஞ்சி

102

சிந்தடி கொளுமேல் சிந்தடி வஞ்சி

103

வஞ்சித் தாழிசை ஒருபொ ருளின்மேல்
குறளடி நான்கின் முத்தொகு திகளாம்

104

குறளடி நான்கே வஞ்சித் துறையாம்

105

சிந்தடி நான்கே வஞ்சி விருத்தம்

106

## ஒழிபியல்

புறநிலை வாழ்த்தினும் கைக்கிளை வாழ்த்தினும்
வாயுரை வாழ்த்தினும் செவியறி வுறாஉ வினும்
வெள்ளையில் தொடங்கி அகவலில் முடியும்
மருட்பா வருமென் றோதினர் முன்னோர்

1

தளையும் சீரும் சிதைவ தாயின்
உயிரள பெடையிக ரக்குறி லுக்குறில்
அலகுபெ றுவென் றறிதல் வேண்டும்

2

ஐகான் அவ்வவ் விடத்திற் கேற்பக்
குறிலா நையும் நெடிலா நீளும்

3

ஒற்றள பெழுமேல் குறிலென வொலிக்கும்
அற்றே நேரசை யெனப்பேர் பெறுமே

4

வருக்க வெழுத்தும் எதுகையில் வருமே

5

முற்சொன நெடிலே முற்றிலும் இலையேல்
மற்றொரு நெடிலும் எதுகையில் வருமே

6

வல்லினம் மெல்லினம் இடையின மெனுமிப்
பல்லின வெழுத்தும் எதுகையில் மாறும்

7

வருக்க மோனையும் உயிரினில் உண்டு

8

உயிரொன் றேவரல் உயிரெது கையெனல்

9

யரலழ வென்ற வெழுத்துள் எதுவும்
வருதலும் எதுகைக் கிடையே முறையாம்

10

இடைவிட் டெதுகை வருதலு முண்டாம்

11

முன்னிரண் டடிகளும் பின்னிரண்டடிகளும்
வெவ்வே றெதுகையைப் பெறுதலும் உண்டு

12

இரண்டா மெழுத்தில் எதுகை யில்லாமல்
மூன்றா மெழுத்தில் முந்துவ துண்டு

13

பொருளோ டடிமுதல் நிலைதனிச் சொல்லைத்
தெருளுடை யார்கள் கூனெனச் சொன்னார்

14

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தல் செய்யுள் விகாரம்

15

குறில்நெடி லெனுமுயிர் கொள்ளுமோர் .வரையறை
வல்லின மெல்லின மயக்கங் கொள் வரையறை
அடிகளில் அமையடி யெதுகைகொள் வரையறை
அடிகளின் பகுதிகள் மோனைகொள் வரையறை
அடிபகு திகளமை தனிச்சொல்கொள் வரையறை
ஆதிய திருப்புகழ் விருத்தத்தில் அமைதலாம்

16

செவிசுவை இசையின் செம்மை பொருந்திக்
கவியிற் குறிலும் நெடிலும் மெய்யும்
வல்லின மெல்லின மயக்கமும் மாறா
தெழுத்தி னளவும் பிறழ்த லின்றி
அமையும் விருத்தம் ஒருவகைச் சந்தம்
தனிச்சொல் இன்மை முன்னதின் வேற்றுமை

17

இசையும் நடையும் இணைந்து செல்லும்
வகையில் உயிரும் மெய்யும் செல்ல
வமையும் சந்த விருத்த மதனில்
வல்லின மெல்லின மயக்கம் முதலிய
முதலடி யொத்து நடத்தல் தளரின்
அஃதோர் சந்த விருத்த மென்பர்

18

அமைப்பவன் அமைப்பின் அழகிய சந்தம்
அனைத்திலும் அமையும் என்றுணர்ந் தறிக

19

## மங்களப் பாட்டு

அறிவுச் சுடர்கொளுத்தும் அருளுருவப் பரஞ்சோதி
திறலார் தெருள்தந்தென் திருமணத்து வரலாற்றை
முறையே உரையென்ன முழுமனத்தோ டுரைத்திட்டோம்
குறையாதும் கொள்ளாது குணங்கொண்மின் கூர்மதியீர்;
யாமுரைத்த யாப்பொளியில் யாதானும் குறையுளதேல்
தாமரைக்கண் நாயகனூர் தண்ணருளால் பிற்பதிப்பில்
போமென்று புகல்கின்றோம் புலவீர்காள் பொறுமின்கள்
பாமரனு மிவனெனநூல் பாராது புகலாதீர்;
தென் பெண்ணைத் திருவரங்கம் சீநிவாச ராகவன்யாம்
எம்பெருமான் திருமணத்துச் சரிதையையெம் யாப்பொளியில்
இன்பமுற இலக்கியமாய் இயைத்திட்டோம் இதுதன்னால்
அன்புறையு மலர்மகளும் அச்சுதனும் அகமகிழ்வார்

# யாப்புக் கலைச் சொற்கள்*

| | |
|---|---|
| அக்கர வர்த்தி | — ஒரு சித்திர கவி, அக்கர வர்த்தனம். |
| அக்கினி கணம் | — செய்யுண் முதற்சீராக அமைக்கத் தகாததும் நிரை நேர்நிரை என வருவதுமாகிய தீய செய்யுட் கணம். |
| அகநிலைக் கொச்சகம் | — கொச்சக பேதம். |
| அகநிலை யொத்தாழிசை | — கலிப்பா வகை. (2) கலியுறுப்பு வகை. |
| அகலப்பா | — வித்தார கவி. |
| அகவல் | — அகவற்பாவுக்குரிய ஓசை. (2) ஆசிரியப்பா. |
| அகவல் விருத்தம் | — ஆசிரிய விருத்தம். |
| அகவலுரிச்சீர் | — நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை. |
| அகவலோசை | — ஆசிரியப் பாவுக்குரிய ஓசை. |
| அகவற் சுரிதகம் | — ஆசிரியச் சுரிதகம். |
| அகவற்சீர் | — அகவலுரிச்சீர். |
| அகவற்பா | — ஆசிரியப்பா. |
| அகவற்றாழிசை | — ஆசிரியத் தாழிசை. |
| அகவற்றுறை | — ஆசிரியத் துறை. |
| அகவற் றுள்ளல் | — வெண்டளையும் கலித்தளையும் கலந்துவரும் துள்ளலோசை. |
| அகவற் றூங்கல் | — ஒன்றாத வஞ்சித்தளையான் வரும் தூங்கலோசை. |
| அகன்றிசைப்பு | — யாப்பு முறையினின்று அகன்று காட்டும் குற்றம். |
| அங்கதச் செய்யுள் | — வசைக்கவி. |
| அங்கதப் பாட்டு | — வசைக்கவி. |
| அங்கதம் | — வசைக்கவி. |

---

* தமிழ்ப் பேரகராதியிலிருந்து தொகுக்கப் பட்டது.

| | | |
|---|---|---|
| அசை | — | நேரசை, நிரையசை. (2) லகு. |
| அசைச் சீர் | — | ஓரசைச்சீர். |
| அசையடி | — | அம்போதரங்கம். |
| அசையந்தாதி | — | செய்யுளில் ஓரடியின் ஈற்றசை மற்றையடிக்கு முதலசையாக வருந் தொடை. |
| அட்டகணம் | — | நில, நீர், சந்திர, இந்திர அல்லது இயமான, சூரிய, தீ, வாயு, ஆகாச கணம் என எண்வகையுடையன வும் நல்லவும் தீயவுமாய் வருவன வுமான நூன்முதற்சீர்கள். |
| அடக்கியல் | — | சுரிதம். |
| அடக்கியல் வாரம் | — | சுரிதம். |
| அடி | — | சீர்களால் ஆகி, செய்யுட்கு உறுப் பாய் வருவது. |
| அடிமயக்கு | — | பொருளில் திரிபின்றி அடிகளை முன்பின்னுக மாற்றும்படி அமைந்த பாடல். |
| அடிமறி | — | அடிமறிமாற்று. |
| அடிமறி மண்டிலம் | — | அகவற்பா வகையுள் ஒன்று. |
| அடிமறி மாற்று | — | அடிகளை எடுத்துப் பொருளுக் கேற்றபடி கூட்டுவதும், எந்த அடியை எங்குக் கூட்டினும் பொருளும் ஓசையும் ஒப்ப வரு வதுமாகிய பொருள்கோள் |
| அடிமுரண்டொடை | — | செய்யுளின் முதலில் வரும் சொல் லாவது பொருளாவது அடுத்த அடியின் சொல்லோடும் பொரு ளோடும் மாறுபடத் தொடுப்பது. |
| அடிமோனைத் தொடை | — | அடிகடோறும் முதலில் மோனை யெழுத்து ஒன்றி வரத் தொடுப் பது. |
| அடியந்தாதி | — | ஒரு செய்யுளின் ஈற்றடி அடுத்த செய்யுளின் முதலடியாகத் தொடுக்கப்படுவது. |
| அடியளபெடைத் தொடை | | அடிதோறும் முதற்கண் அள பெடை வரத் தொடுப்பது. |
| அடியாகெதுகை | — | அடியெதுகைத் தொடை. |
| அடியியைபுத் தொடை | — | அடிதோறும் இறுதிச்சீர் ஒன்றி வரத் தொடுப்பது. |
| அடியெதுகைத் தொடை | — | அடிதோறும் முதற்கண் இரண்டா மெழுத்து ஒன்றி வரத் தொடுப் பது. |

அடுக்கியல் — அராகம்.

அடைநிலை — கலிப்பாவின் உறுப்பாகிய தனிச் சொல்.

அதிக்கண்டம் — செய்யுட்சீர்.

அந்தரகணம் — கருவிளங்காய், செய்யுட்கணம்.

அந்தாதி — அந்தாதித் தொடை.
(2) அந்தாதித் தொடையிலமைந்த பிரபந்தம்,

அந்தாதித் தொடை — அடிதோறும் இறுதிக் கண் நின்ற சீரும் அசையும் எழுத்தும் மற்றையடிக்கு ஆதியாகத் தொடுப்பது.

அம்போதரங்கம் — அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவுறுப்பினுள் ஒன்று.
(2) ஒத்தாழிசைக் கலிப்பா வகை.

அம்போதரங்க ஒத்தாழிசை — அம்போதரங்கம் எனும் உறுப்புப் பயிலும் கலிப்பாவகை.

அம்போதரங்க ஒருபோகு — ஒத்தாழிசைக் கலிப்பா வகையுளொன்று.

அம்மை — நூல்வனப்புளொன்று.

அரசர்பா — ஆசிரியப்பா.

அரவுச் சக்கரம் — சித்திரக் கவிவகை.

அராகம் — கலியுறுப்பு.

அலகிருக்கை வெண்பா — மிறைக் கவிவகை

அலகு — இசையில் ஓர் அளவு

அலங்கார பஞ்சகம் — வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்த விருத்தம் ஆகிய ஐந்தும் அந்தாதியாக வரப் பாடும் பிரபந்தம்.

அவகீதம் — வசைப்பாட்டு.

அவை நான்கு — நல்லவை, தீயவை, குறையவை நிறையவை என்ற நால்வகைக் கூட்டம்.

அளபெடை வண்ணம் — அளபெடை பயிலும் சந்தம்.

அளவடி — நாற்சீரடி
(2) 10 முதல் 14 எழுத்துப்பெறும் நாற்சீரடி

அளவழிச் சந்தம் — 4 முதல் 26 எழுத்துவரை வந்து அளவொவ்வாத அடிகளுடைய செய்யுள் வகை

அளவழித் தாண்டகம் — 27 எழுத்து முதல் பலவாக வந்து அளவு ஒவ்வா அடிகளுடைய செய்யுள்.

அளவியல் — பாவின் அடிவரையறை.

அளவியற் சந்தம் — 4 முதல் 26 எழுத்து வரை அளவொத்து வரும் அடிகளுடைய செய்யுள்.

அளவியற்றாண்டகம் — 27 எழுத்து முதலாகவரும் அளவொத்த அடிகளுடைய செய்யுள்.

அளவெண் — நாற்சீரோரடியாய் வரும் அம்போதரங்க உறுப்புவகை.

அளைமறிபாப்பு — பாட்டின் ஈற்றில் நின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று பொருள் கொள்ளப்படும் முறை.

அறப்பாடல் — கேடுவிளைக்கும் சொற்பயிலும் பாட்டு.

அறுத்திசைப்பு — வேற்றிசை கலந்துவரும் ஒருவகை யாப்பு வழு.

அனுப்பிராசம் — வழியெதுகை.

அனுபல்லவி — கீர்த்தனத்தில் இரண்டாம் உறுப்பு

அனுமோனை — இனவெழுத்தால் வரும் மோனைத் தொடை.

அனுவெழுத்து — மோனை யெழுத்து.

ஆகாயச் சக்கரம் — சித்திரக் கவிவகை.

ஆசிடுதல் — நேரிசை வெண்பா முதற்குறளின் இறுதிச் சீர்க்கும் விட்டிசைக்கு மிடையே ஓரசையேனும் ஈரசை யேனும் சேர்தல்.

(2) எதுகையில் ய ர ல ழ என்ற நான்கிலொன்றை ஆசாக இடுதல்.

ஆசிடையெதுகை — ஆசெதுகை.

ஆசிடை நேரிசை வெண்பா— ஆசிடை வெண்பா.

ஆசிடை வெண்பா — முதற்குறளின் இறுதிச்சீர்க்கும் தனிச்சொற்கும் இடையிற் கூட்டப்பட்டு அசையுடன் வரும் நேரிசை வெண்பா.

ஆசிரியச் சீர் — அகவலுரிச்சீர்.

ஆசிரியச் சுரிதகம் — கலியின் சுரிதகவுறுப்பு அகவலாக வருதல்.

ஆசிரியத் தளை — மாமுன் நேரும் விளமுன் நிரையும் வரத் தொடுக்கும் செய்யுட்டளை.

ஆசிரியத் தாழிசை — ஆசிரியப் பாவினத்துள் ஒன்று.

ஆசிரியத் துறை — அகவற்றுறை.

ஆசிரியப்பா — நால்வகைப் பாவுள் ஒன்று.

ஆசிரியம் — நால்வகைப் பாவுள் ஒன்று.

ஆசிரிய விருத்தம் — அகவல் விருத்தம்.

| | | |
|---|---|---|
| ஆசிரிய வுரிச்சீர் | — | அகவலுரிச்சீர். |
| ஆசு | — | நேரிசை வெண்பாவில் முதற்குறளினிறுதிச் சீர்க்கும் தனிச்சொற்குமிடையிற் கூட்டப்படும் அசை. (2) எதுகையிடையில் வரும் ய், ர், ல், ழ் என்னும் ஒற்றுக்கள். (3) ஆசுகவி. |
| ஆசுகவி | — | கொடுத்த பொருளை அடுத்த பொழுதில் பாடும் பாட்டு. (2) ஆசுகவி பாடும் புலவன். |
| ஆசெதுகை | — | ய், ர், ல், ழ் என்ற மெய்யெழுத்துக்களுள் ஒன்று, அடியெதுகையிடையே ஆசாக வருவது. |
| ஆண்பாலெழுத்து | — | அ, இ, உ, எ, ஒ எனும் குற்றுயிர். |
| ஆணெழுத்து | — | உயிர் எழுத்து. |
| ஆதிமடக்கு | — | அடியின் முதலில் சொல் மடங்கி வருவது. |
| ஆதோரண மஞ்சரி | — | எதிர்த்த மதயானைகளை அழித்தும் அடக்கியும் போந்த வீரனது சிறப்பை வஞ்சிப் பாவற் றெடுத்துப் பாடும் பிரபந்தம். |
| ஆற்றுப்படை | — | பரிசில் பெற்றானொருவன் அது பெறக் கருதியவனை ஒரு தலைவனிடத்துச் செலுத்துவதற்காகப் பாடும் பிரபந்தம். |
| இங்கிதக் கவி | — | இனிமைதருங் கவி பாடுவோன். |
| இசை | — | சீர். |
| இசைநிறை | — | செய்யுளில் இசைநிறைத்தற்கு வருஞ்சொல். |
| இசைப்பா | — | இசையளவு பா; இசையோடு சேர்ந்த பாக்களிலொருவகை. |
| இசைப்பாட்டு | — | சாகித்தியம். |
| இசையளவுபா | — | இசைப்பா, இசையோடு சேர்ந்த பாக்களிலொருவகை. |
| இட்டி | — | சங்கிரகச் செய்யுள். |
| இடக்கரிசை | — | செய்யுட் குற்றத் தொன்று. |
| இடமயக்கம் | — | ஒன்றற்குரிய உரிப்பொருளைப் பிறிதோரிடத்திற் குரியதாகக் கூறும் இட மலைவு. |
| இடைநிலைப் பாட்டு | — | கலியுறுப்பு. |

| | | |
|---|---|---|
| இடையாகெதுகை | — | அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றே யொன்றி வரத் தொடுப்பது. |
| இடையின மோனை | — | இடையினத்துள் யகர வகரங்கள் ஒன்றற்கொன்று மோனையாதல். |
| இடையினவெதுகை | — | இடையினத்துள், வந்த வெழுத்தன்றி அவ்வினத்து வேறெழுத்து இரண்டாமெழுத்தாய் நிற்கவரும் எதுகை |
| இடையீட்டெதுகை | — | ஒவ்வோரடி இடையிட்டு வரும் எதுகை. |
| இடையெண் | — | முச்சீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை. |
| இணைக்குறளாசிரியப்பா | — | ஈற்றடியும் முதலடியும் அளவடியாக இடையடிபல குறளடியானும் சிந்தடி யானும் வரும் அகவல். |
| இணைத் தொடை | — | அளவடியுள் முதலிருசீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது. |
| இணைமணிமாலை | — | வெண்பாவுடன் அகவல் அல்லது கட்டளைக் கலித்துறைப் பாடல் இடைகலந்து 100 செய்யுளால் அந்தாதித் தொடை பெற்று வரும் பிரபந்தம். |
| இணைமுரண் | — | ஓரடியின் முதலிருசீரும் முரண்பட இணைந்து வரும் தொடை. |
| இணைமோனை | — | ஓரடியின் முதலிரு சீரினும் மோனை இயைந்து வருந்தொடை. |
| இணையளபெடை | — | முதலிரு சீரினும் அளபெடை வரல். |
| இணையியைபு | — | அடியின் ஈற்றுச் சீரிரண்டும் இயைபுத்தொடை பெறல் |
| இணையெதுகை | — | ஓரடியின் முதலிருசீரிலும் எதுகை வரல். |
| இதழகலந்தாதி | — | நிரோட்டக அந்தாதி, |
| இந்திரகணம் | — | தேமாங்காய் எனும் செய்யுட் கணம். |
| இயமான கணம் | — | தேமாங்காய் எனும் செய்யுட் கணம். |
| இயலசை | — | நேரசை நிரையசை. |
| இயலிசை, யந்தாதி | — | பொருளாலன்றி ஓசையால் வரும் அந்தாதி |
| இயற்சீர் | — | இயலசையிரண்டாலான சீர். |

| | | |
|---|---|---|
| இயற்சீர் வெண்டளை | — | மாமுன்நிரையும் விளமுன் நேரும் வரும்தளை. |
| இயைபு | — | சீர்கள் அல்லது அடிகளின் (ஈற் றெழுத்து) ஈறு ஒன்றிவரும் தொடை. (2) வனப்புள் ஒன்று. |
| இயைபுத் தொடை | — | ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது. |
| இயைபு வண்ணம் | — | இடையெழுத்துக்கள் மிகுந்து வரும் சந்தம். |
| இரட்டைத் தொடை | — | ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது. |
| இரட்டைநாக பந்தம் | — | சித்திரக் கவிவகை. |
| இரட்டைமணிமாலை | — | பிரபந்த வகை |
| இரட்டையாப்பு | — | தொடை வகை. |
| இரட்டை விருத்தம் | — | பதினொரு சீருக்கு மேற்பட்ட சீரான் வரும் கழிநெடிலடி யாசிரிய விருத்தம். |
| இரணத் தொடை | — | முரண்டொடை |
| இருக்குக் குறள் | — | சிறிய பாவகை. |
| இருகுறணேரிசை வெண்பா | — | நேரிசை வெண்பா, இடையில் தனிச் சொல் பெற்ற இருகுறளாக அமைதல். |
| இருபாவிருபஃது | — | பிரபந்த வகை |
| இருமுற்றிரட்டை | — | ஒரு செய்யுளில் ஓரடி முற்றெது கையாய் வர மற்றையடி மற் றொரு முற்றெதுகையாய் வரு வது. |
| இழைபு | — | ஒரு நூல் வனப்பு. |
| இன்னாவிசை | — | செய்யுட் குற்றம் 27-உள் ஒன்று. |
| இன்னிசை வெண்பா | — | நான்கடியாய்த் தனிச்சீரின்றி வரும் வெண்பா. |
| இன்னிசை வெள்ளை | — | நான்கடியாய்த் தனிச்சீரின்றி வரும் வெண்பா. |
| இனமோனை | — | இனவெழுத்தால் வரும் மோனை. |
| இனவெதுகை | — | இனவெழுத்தால் வரும் எதுகை. |
| இனவெழுத்துப் பாட்டு | — | வல்லின முதலிய மூவினங்களுள் ஓரின வெழுத்துக்களே வரப் பாடும் சித்திரக் கவி. |
| ஈரடி வருக்கம் | — | செய்யுள் வகை. |
| ஈரடி வெண்பா | — | குறள் வெண்பா. |
| ஈரொற்று வாரம் | — | இரு மாத்திரை பெற்று வருஞ் செய்யுள். |
| உண்டிப் பொருத்தம் | — | செய்யுண் முதன்மொழிப் பொருத்த வகை. |

| | | |
|---|---|---|
| உளுப் பொருத்தம் | — | செய்யுண் முதன் மொழிப் பொருத்த வகை. |
| உத்தி மறுதலை | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று. |
| உய்த்துணர் மொழி | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று |
| உரிச்சீர் | — | மூவசைச் சீர். |
| உரியசை | — | நேர்பு நிரைபசைகள். |
| உருட்டு வண்ணம் | — | அராகம் தொடுத்து வரும் சந்தம். |
| உரைச் செய்யுள் | — | கட்டுரை |
| உரைப்பாட்டு | — | கட்டுரை நடை |
| உரைபெறு கட்டுரை | — | காவியங்களில் உரைநடையில மைந்த தொடர். |
| உலக்கைப் பாட்டு | — | வள்ளைப் பாட்டு |
| உலா | — | ஒரு பிரபந்தம் |
| உலா மடல் | — | ஒரு பிரபந்தம் |
| உழத்திப் பாட்டு | — | உழவுச் செய்திகளைக் கூறும் ஒரு பிரபந்தம். |
| உழிஞை மாலை | — | ஒரு பிரபந்தம் |
| உற்பவ மாலை | — | திருமால் பிறப்புப் பத்தினையும் ஆசிரிய விருத்தத்தாற் கூறும் பிர பந்தம். |
| உறழ்கலி | — | கலிப்பாவகை. |
| ஊசல் | — | ஒரு பிரபந்தம். (2) ஊசற் பருவம். (3) கலம்பக உறுப்பு. |
| ஊசல்வரி | — | ஊஞ்சலாடப் பாடும் பாடல். |
| ஊசற்சீர் | — | ஊஞ்சலாடப் பாடும் பாடல். |
| ஊஞ்சற் பாட்டு | — | ஊஞ்சலாடப் பாடும் பாடல். |
| ஊர் நேரிசை | — | தலைவனது ஊரை நேரிசை வெண் பாவால் சிறப்பிக்கும் பிரபந்த வகை. |
| ஊர் விருத்தம் | — | தலைவனூரை விருத்தச் செய்யுள் பத்தினுற் சிறப்பிக்கும் பிரபந்த வகை. |
| ஊர் வெண்பா | — | தலைவனூரை வெண்பாப் பத்தி னுற் சிறப்பிக்கும் பிரபந்தம். |
| ஊரின்னிசை | — | தலைவனூரை இன்னிசை வெண் பாக்களாற் சிறப்பிக்கும் பிரபந் தம். |
| எடுத்தலோசை | — | உயர்த்துக் கூறும் ஓசை. |
| எண் | — | அம்போதரங்கம். |
| எண்ணு வண்ணம் | — | எண்ணிடைச் சொல் பயிலும் சந்தம். |

எதிர் நிரனிறை — முறைமாறி வரும் நிரனிறை

எதுகை — எதுகைத் தொடை.

எதுகைத் தொடை — இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.

எருத்தடி — ஈற்றயலடி.

எருத்தம் — தரவு.
(2) ஈற்றயல்.

எருத்து — தரவு
(2) ஈற்றயல்.

எழுகூற்றிருக்கை — ஒன்று முதல் ஏழுவரையும் எண்கள் முறையே ஒவ்வொன்ருக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் பிரபந்தம்.

எழுத்தந்தாதி — ஒரு செய்யுளடியி னீற்றெழுத்து அடுத்த அடியின் முதலெழுத்தாக வரல்.

எழுத்தல் லிசை — எழுத்தோசை யாகாத முற்கு ஈளை முதலியவை.

எழுத்தானந்தம் — பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்தளபெழப் பாடுவதாகிய செய்யுட்குற்றம்.

எழுத்து — அட்சரம்.

எழுத்துக் குற்றம் — நச்செழுத்து வரப் பாடுங் குற்றம்

எழுத்துச் சுதகம் — அக்கரச் சுதகம்

எழுத்துப் பொருத்தம் — ஒரு காப்பியத்தின் தொடக்கச் செய்யுளின் முதன் மொழி ஒற்றெழுத்துட்பட மூன்றைந்தே ழொன்ப தென்னும் எழுத்துக்களுள் ஏதேனும் ஒன்றைப் பெற்று வருவதாகிய செய்யுள் முதன் மொழிப் பொருத்தம்.

ஏகபாதம் — நான்கடியும் ஒரே யெழுத்துத் தொடரால் அமைந்து வரும் மிறைக் கவி.

ஏந்தல் — ஏந்திசை.

ஏந்தல் வண்ணம் — விளக்கத்தின் பொருட்டும், வற்புறுத்துதற் பொருட்டும் ஒரு சொல்லே மிக்கு வரும் சந்தம்.

ஏந்திசை — செய்யுளோசை வகை.

ஏந்திசைச் செப்பல். — வெண்சீர் வெண்டளையால் பிறக்கும் ஓசை.

ஏந்திசைத் துள்ளல் — கலித்தளையால் பிறக்கும் ஓசை.

ஏந்திசைத் தூங்கல் — ஒன்றிய வஞ்சித்தளையால் பிறக்கும் ஓசை

| | | |
|---|---|---|
| ஏந்திசை யகவல் | — | நேரொன்று ஆசிரியத்தளையால் பிறக்கும் ஓசை. |
| ஐந்திணைச் செய்யுள் | — | உரிப்பொருள் தோன்ற ஐந்திணையையுங் கூறும் பிரபந்தம். |
| ஐந்துபா | — | வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா என்ற ஐவகையான பா. |
| ஐம்மொழி | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று. |
| ஒத்தாழிசை | — | கலிப்பாவின் வகை. |
| ஒயிற் கும்மி | — | ஒயிலாட்டத்துப் பாடப்படும் பாட்டு. |
| ஒருபாவொருபஃது | — | வெண்பா, கலித்துறை என்பவற்றுள் ஏதேனும் ஒரு பாவிற் பத்துப் பாடல்களால் அமைக்கப்பட்ட பிரபந்தம். |
| ஒருபொருண்மொழி | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று. |
| ஒருமுற்றிரட்டை | — | ஓரடி முற்றெதுகையாய் வருவது. |
| ஒரூஉ | — | ஒரூஉத் தொடை. |
| ஒரூஉத்தொடை | — | அளவடியுள் நடுவிரு சீர்கள் ஒழிய முற்சீர்க் கண்ணும் நான்காஞ்சீர்க் கண்ணும் மோனை முதலாயின வர்த் தொடுப்பது. |
| ஒரூஉ வண்ணம் | — | யாற்றொழுக்காகப் பொருள் கொண்டு செல்லும் சந்தம். |
| ஒலியந்தாதி | — | ஓரடிக்குப் 16 அல்லது 8 கலைகள் தொடுத்த பல்சந்த வகுப்புக்கள் அந்தாதியாக 30 கூடிய தொரு பிரபந்தம். |
| ஒலியலந்தாதி | — | ,, |
| ஒழியிசை | — | ஒழிந்த பொருள் தருஞ் சொற்களைத் தருவது. |
| ஒழுகிசை | — | வெறுத்திசை யில்லாமல் செவிக்கினிய மெல்லிசை யுடைமை யாகிய குணம். |
| ஒழுகிசைச் செப்பல் | — | இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் விரவி வந்த வெள்ளோசை. |
| ஒழுகிசை யகவல் | — | நேரொன்று, நிரையொன்று ஆசிரியத் தளைகள் விரவிய அகவலோசை. |
| ஒழுகு வண்ணம் | — | ஒழுகிய லோசையாற் செல்லுஞ் சந்தம். |
| ஒற்றெழி பாட்டு | — | மெய்யெழுத்தில்லாப் பாட்டு. |
| ஒன்றுத வஞ்சித்தளை | — | நிரையீற்றுரிச்சீர் முன் நேரிசை வரும் தளை. |

ஒன்றிய வஞ்சித்தளை — நிரையீற்றுரிச்சீரின் முன் நிரையசை வருந் தளை.

ஒன்று கூட்டு — கொண்டு கூட்டு.

ஓசை — செய்யுளோசை.

ஓசையுடைமை — இன்னேசையுடைமையாகிய ஒரு நூலழகு.

ஓரசைச்சீர் — அசையே சீராக நிற்றல்.

ஓரடிப் பந்தம் — ஒருவகை இசைப் பாட்டு.

ஓரெழுத்தினம் — ஒரு மிறைக் கவி

ஓரொற்றுவாரம் — ஒரு மாத்திரை பெற்று வரும் செய்யுள்.

கட்டளை — அளவு.

கட்டளைக்கலி — எல்லாவடிகளும், ஒற்று நீங்க, எழுத்து ஒத்து வரும் கலிப்பா.

கட்டளைக் கலித்துறை — பாவின வகை.

கட்டளைக் கலிப்பா — கலியினத்துள் ஒன்று.

கட்டளையடி — எழுத்துக் கணக்கில் அமைந்த செய்யுளடி.

கட்டளை யாசிரியம் — எல்லா வடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்துவரும் அகவல்

கட்டளை வஞ்சி — எல்லாவடிகளும் ஒற்று நீங்க எழுத்து ஒத்துவரும் வஞ்சிப்பா.

கடிகை வெண்பா — அரசர் கடவுளர் முதலியோரது அருமைச் செயல்கள் ஒரு கடிகைப் பொழுதில் நடந்தனவாகக் கூறும் ஒரு பிரபந்தம்.

கடுங்கவி — ஆசுகவி வல்லான்.

கடைக் கூழை — அளவடியுள் முதற்சீரொழிந்த மூன்று சீர்க் கண்ணும் வரும் தொடைவகை.

கடைநிலை — ஒரு பிரபந்தம்.

கடைமுரண் — அடிதோறும் இறுதிச் சீர்க்கண் சொல்லினும் பொருளினும் மறுதலைப்படத் தொடுக்குந் தொடை.

கடைமோனை — அடிதோறும் கடைச்சீரின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுக்கும் மோனைத் தொடை.

கடையாகெதுகை — இனவெழுத்து எதுகையாக வருந் தொடை.

கடையிணைத் தொடை — மோனை முதலியவை அடிகளின் ஈற்றிரண்டு சீர்களில் வரத் தொடுக்குந் தொடை.

கண்டகட்டு — பாவகை.

கண்ணி — கலிவெண்பா முதலியவற்றில்இவ் விரண்டாய் வரும் உறுப்பு.
(2) ஒருவகை இசைப்பாட்டு.

கணப்பொருத்தம் — செய்யுள் முதன் மொழிப் பொருத்த வகை.

கதிப் பொருத்தம் — ,,

கதுவாய் — மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் எனும் தொடை விகற்பம்.

கரந்துறை (ச்) செய்யுள் — ஒவ்வோரெழுத்து இடைவிட்டுப் படிக்கும்போது வேறுமொரு கவி தோன்றும்படி எழுத்துக்கள் அமைத்துப் பாடப்படும் ஒரு மிறைக்கவி.

கரந்துறைப் பாட்டு — ,,

கருவிளங்கனி — மூன்று நிரையாலான சீரைக் குறிக்கும் வாய்பாடு.

கருவிளங்காய் — நிரைநிரைநேர் எனும் சீரைக் குறிக்கும் வாய்பாடு.

கருவிளந்தண்ணிழல் — நிரைநிரைநேர்நிரையைக் குறிக் கும் வாய்பாடு.

கருவிளந்தண்பூ — நிரைநிரைநேர்நேரைக் குறிக்கும் வாய்பாடு.

கருவிளநறுநிழல் — நிரைநிரைநிரைநிரையைக் குறிக் கும் வாய்பாடு.

கருவிள நறும்பூ — நிரைநிரைநிரைநேரைக் குறிக்கும் வாய்பாடு.

கருவிளம் — இருநிரையசையாலான சீர்க் குள்ள வாய்பாடு.

கலம்பகம் — பல்வகைச் செய்யுள்களாலாகிய பிரபந்த வகை.

கலம்பக மாலை — கலம்பகத்தின் சில உறுப்புக்கள் குறைந்து வரும் பிரபந்தம்.

கலி — கலிப்பா

கலித்தளை — நேரீற்று உரிச்சீர்முன் நிரை வரு வது.

கலித்தாழிசை — ஒத்துள்ள சில, பல வடிகள் பெற்று, ஈற்றடி மிக்கு வரும் கலி யினம்.

கலித்துறை — நெடிலடி நான்கால் வரும் கலியி னம்
(2) கட்டளைக் கலித்துறை.

கலிப்பா — நான்கு பாக்களுள் ஒன்று.

| | | |
|---|---|---|
| கலிவிருத்தம் | — | அளவடிகள் நான்காலாகிய கலிப் பாவின் இனம், |
| கலிவெண்பா | — | கலியோசை தழுவி ஈற்றடி வெண் பாப் போல் முச்சீரடியான் வருவ தான கலிப்பாவின் இனம். |
| கலிவெண்பாட்டு | — | கலிவெண்பா. |
| கலே | — | ஒரு தாளப் பிரமாணம் (2) வண்ணப் பாட்டின் ஒரு பாகம். |
| கலேயொடு மலேவு | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று. |
| கவி | — | பாவலன் (2) ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமெனும் பாட்டு. |
| கவிதை | — | பாடல் |
| கழாற்றாக்கு | — | ஆறுசீரளவுள்ள தாளவுறுப்பு. |
| கழிநெடில் | — | ஐந்தின் மிக்க சீரால் வரும் அடி, |
| கழிநெடிலடி | — | ,, |
| கள்ளக் கவி | — | பிறனெருவன் பாட்டைத் தன தென்று காட்டுபவன். (2) ஒருவனுக்காகப் பாடிய பாட்டை மற்றெருவனுக்குக் கொடுப்போன். |
| களியர் வண்ணம் | — | குடியர் உண்டு குடித்து மகிழ்வ தைச் சிறப்பித்துப் பாடும் வண் ணப் பாட்டு. |
| கனி | — | கனிச்சீர்; (2) மூவசைச் சீரின் இறுதியிலுள்ள நிரையசை. |
| கனிச்சீர் | — | கனி என்ற வாய்பாட்டில் முடி யும் மூவசைச்சீர்; வஞ்சியுரிச்சீர். |
| காதல் | — | பிரபந்த விசேடம். |
| காதைகரப்பு | — | ஒரு செய்யுளே முடிய எழுதி, அதன் ஈற்று மொழியில் முதலெ ழுத்துத் தொடங்கி ஒரோர் எழுத்து இடையிட்டுப் படிக்கப் பிறிதொரு செய்யுள்வரப் பாடும் மிறைக்கவி. |
| காப்பியக் கலித்துறை | — | நெடிலடி நான்காய் வரும் கலித் துறை. |
| காப்பியம் | — | நால்வகை உறுதிப் பொருளேக் கூறுவதாய்க் கதைபற்றிவரும் தொடர்நிலேச் செய்யுள், |

| | | |
|---|---|---|
| காப்புமாலை | — | தெய்வங் காப்பதாக 3, 5 அல்லது 7 கவிகளால் பாடப்படும் ஒரு பிரப்ந்தம். |
| காமவின்னிசை | — | செந்துறைப் பாட்டின் வகை. |
| காய்ச்சீர் | — | நேரீற்று மூவசைச்சீர்; வெண்சீர். |
| காயத்திரி | — | வடமொழிச் செய்யுள்வகை; 24 அசையால் ஆவது.<br>(2) நான்கு அடிகட்குமாக 24 உயிர் உள்ள சந்தம்; |
| கிள்ளைவிடுதூது | — | தலைவி தன் காதலுக்குரிய தலைவனிடத்துக் கிளியைத் தூதுவிடுத்தலைக் கூறும் பிரபந்தம். |
| கீதம் | — | இசைப்பாட்டு<br>(2) இசை |
| கீர்த்தனம் | — | கீர்த்தனை<br>(2) ஓர் இசைப் பாட்டு |
| கீழ்க்கணக்கு | — | அடிநிமிர்வில்லாச் செய்யுள் பலவற்றால் அறம் பொருளின்பங்களைப் பற்றிக் கூறும் நூல்வகை |
| கீழ்க்கதுவாய் | — | அளவடியுள் ஈற்றயற் சீர்க்கண் அன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தல். |
| கீழ்க்கதுவாய்த் தொடை | — | ,, |
| கும்மி | — | கும்மிப் பாட்டு |
| குழமகன் | — | மாதர்கள் குழமகனைப் புகழும் ஒரு பிரபந்தம். |
| குளகம் | — | பலபாட்டுக்கள் ஒருவினை கொள்ளும் அமைதி.<br>(2) குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள். |
| குளபாகம் | — | இலளிதமான செய்யுள் நடை. |
| குற்றிசை | — | குறுகிய சந்தம். |
| குறட்டாழிசை | — | நாற்சீரின் மிக்க சீர்களால் வரும் அடியிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவனவும், வேற்றுத்தளை தட்டுக் குறள்வெண்பாவிற் சிதைந்து வருவனவுமாகிய பாவினம். |
| குறட்பா | — | குறள் வெண்பா. |
| குறத்திப்பாட்டு | — | தலைவிக்கு, அவளது காதல் முதலியவற்றைப் பற்றிக் குறத்தி குறிசொல்வதைக் கூறும் ஒரு பிரபந்தம். |

குறம் — குறவர் கூற்ருக வரும் கலம்பக உறுப்புள் ஒன்று.
(2) குறத்திப் பாட்டு.

குறவஞ்சி — குறத்திப் பாட்டு.

குறள் — குறளடி
(2) குறள் வெண்பா

குறள் வெண்பா — முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீருமாகிவரும் ஈரடி வெண்பா.

குறளடி — இருசீரடி

குறளடி வஞ்சிப்பா — குறளடியால், மூன்று முதல் பல அடிகொண்டு, தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்று வரும் வஞ்சிப்பா.

குறுஞ்சீர் வண்ணம் — குற்றெழுத்துப் பயிலும் சந்தம்.

குறையவை — அறிவு குணங்களால் குறைவு பட்டார் கூடிய சபை.

கூடைப் பாடல் — சொற்செறிவும் இசைச் செறிவும் உடைய பாடல்.

கூவிளங்கனி — நேர்நிரைநிரையைக் குறிக்கும் வாய்பாடு.

கூவிளங்காய் — நேர்நிரைநேரைக் குறிக்கும் வாய்பாடு.

கூவிளந்தண்ணிழல் — நேர்நிரைநேர்நிரையைச் சுட்டும் வாய்பாடு.

கூவிளந்தண்பூ — நேர்நிரைநேர்நேரைச் சுட்டும் வாய்பாடு.

கூவிளநறுநிழல் — நேர் நிரை நிரை நிரையின் வாய்பாடு.

கூவிளநறும்பூ — நேர்நிரைநிரைநேரின் வாய்பாடு.

கூவிளம் — நேர்நிரை குறிக்கும் வாய்பாடு.

கூழை — கூழைத் தொடை.

கூழைத் தொடை — அளவடியுள் இறுதிச் சீர்க்கண்அன்றிப் பிறவற்றில் மோனை வரல்.

கூன் — செய்யுளில் அளவுக்கு மேல் வரும் அசையும் சீரும்.

கேசாதி பாதம் — கலிவெண்பாவால் ஒருவரை முடிமுதல் அடிவரை வருணிக்கும் பிரபந்தம்.

கைக்கிளை மருட்பா — கைக்கிளைப் பொருண்மை கூறும் மருட்பா.

கைகோள் — தலைவி தலைவனின் களவு, கற்பொழுக்கம்,

| | | |
|---|---|---|
| கையறுநிலை | — | புரவலனின் இழப்பைப் பாடும் பிரபந்தம். |
| கொச்சகக் கலிப்பா | — | தரவு, தரவிணை, சிஃறுழிசை, பஃறுழிசை, மயங்கிசை யெனும் ஐம் பிரிவுடைய கலி. |
| கொச்சகம் | — | கொச்சகக் கலிப்பா. (2) அம்போதரங்க உறுப்புள் ஒன்று. (3) பரிபாட்டுறுப்புள் ஒன்று. |
| கொண்டுநிலை | — | குரவைக் கூத்தில் தலைவனது வரைவு வேண்டிப் பாடும் பாட்டு. |
| கோயிற்றாக்கு | — | தாளவகை. |
| சக்கரச் சக்கரம் | — | சித்திர கவிவகை. |
| சதகம் | — | 100 பாடலுள்ள பிரபந்த வகை. |
| சந்தக் கவி | — | சந்தப் பாட்டு. |
| சந்தக் குழிப்பு | — | சந்தச் செய்யுளின் ஓசைவாய்பாடு |
| சந்தசு | — | யாப்பு (2) வேதாங்கங்களுள் ஒன்றான யாப்பிலக்கணங் கூறும் நூல். |
| சந்தத் தாண்டகம் | — | சந்தவடியும் தாண்டகவடியும் விரவி ஓசை கொண்டு வருஞ் செய்யுள். |
| சந்தப்பா | — | சந்தப் பாட்டு. |
| சந்தப் பாட்டு | — | நான்கெழுத்து முதல் 26 எழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை. (2) சந்த விருத்தம். |
| சந்தம் | — | செய்யுளின் வண்ணம், (2) வேதத்தில் வரும் யாப்பிலக் கணத்தைக் கூறும் வேதாங்க நூல் (3) செய்யுள் (4) சந்தப் பாட்டு. |
| சந்தவடி | — | 4 முதல் 26 வரையுள்ள எழுத்துக் களால் இயன்ற விருத்த அடி. |
| சந்த விருத்தம் | — | சந்தக் குழிப்பின்படி அமைந்த செய்யுள். |
| சந்தியிசை | — | செய்யுட் குற்றங்களுள் ஒன்று. |
| சமசந்தத் தாண்டகம் | — | சந்தவடியும் தாண்டகவடியும் ஒத்துவரும் பாவினம். |
| சமநிலை | — | வன்மை-மென்மை-இடைமை இம் மூன்றும் சமமாகக் கலந்துவரத் தொடுக்கும் செய்யுட் குணம். |
| சமநிலை வஞ்சி | — | இருசீரடியால் வரும் வஞ்சிப்பா |

| | | |
|---|---|---|
| சமநிலை வெண்பா | — | சவலை வெண்பா. |
| சமபாத விருத்தம் | — | இசைப்பா வகை. |
| சமம் | — | ஒத்த அடிகளுள்ள விருத்தம். |
| சமனிலை மருட்பா | — | வெண்பா அடியும் ஆசிரிய அடியும் ஒத்துவரும் மருட்பா வகை. |
| சமனிலை வஞ்சி | — | சமநிலை வஞ்சி. |
| சலாபச் சக்கரம் | — | சித்திரக் கவி வகை. |
| சவலை | — | அடியளவு குறைந்தும் மிக்கும் வரும் பாட்டு. (2) இசைப்பா வகையுள் ஒன்று. |
| சவலை வெண்பா | — | தனிச் சொல்லின்றி இரண்டுகுறள் வெண்பாக்களை இணைத்துச் செய்யும் வெண்பா. |
| சனிபுருடச் சக்கரம் | — | சித்திர கவிவகை. |
| சாதகம் | — | கலியுகம், சகாப்தம், வருஷம் மாதம், தேதிகள் அடங்கிய தலைவன் ஜாதகத்தைக் கூறும் பிரபந்தம். |
| சார்த்து கவி | — | ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுள் புணர்ப்போன். |
| சார்த்துவரி | — | பாட்டுடைத்தலைவன் பதியொடும் பேரொடும் சார்த்திப்பாடும் வரிப் பாட்டு வகை. |
| சாரதப் பாட்டு | — | ஒரு வகை இசைப்பாட்டு |
| சாவெழுத்து | — | நச்செழுத்து |
| சித்திரகவி | — | நால்வகைக் கவிகளுள் சித்திரத்தில் அமைத்தற்கு ஏற்பப் பாடும் மிறைக் கவி. |
| சித்திர வண்ணம் | — | நெடிலும் குறிலும் ஒப்ப விரவிய சந்தம். |
| சிந்தியல் வெண்பா | — | மூன்றடியாலமைந்த வெண்பா வகை. |
| சிந்து | — | சிந்தடி<br>(2) இசைப்பாவகை<br>(3) பண், |
| சிலேடை | — | செம்மொழி, பிரிந்திசை என்ற இரு பிரிவுடையதாய், ஒரு வடிவாக நின்ற சொற்றொடர் பல பொருளுடையதாக வரல். |
| சிற்றிசை சிற்றிசை | — | வெண்டுறைச் செந்துறையில் ஒரு வகை. |
| சிற்றெண் | — | இருசீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை.<br>(2) பரிபாடல் உறுப்புள் ஒன்று. |

சிற்றெல்லை — அடிகளின் சிறுமை வரையறை.

சிறுகாப்பியம் — பெருங்காப்பியத்திற்குள்ள உறுப்புக்களிற் சில குறைந்து நடைபெறும் நூல்வகை.

சிறுதேவ பாணி — இசைப்பாவகை.

சின்னப்பூ — 100, 90, 70, 50, 30 நேரிசை வெண்பாக்களால் அரசனது தசாங்கத்தைப் புகழும் பிரபந்தம்.

சின்னம் — சின்னப்பூ.
(2) தனிச்சொல்
(3) எண்.

சீர் — தாளம்
(2) பாட்டு
(3) செய்யுளின் ஓருறுப்பு.

சீர்மடக்கு — செய்யுளுள் சீர் இடைமடக்கி வருகை.

சீரந்தாதி — பாட்டில், ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற்சீரோடு தொடுத்து வருவது.

சுண்ணம் — ஈரடி எண்சீரைப் பொருண்முறையின்றித் துணித்துச் செய்யுளியற்றும் முறை.
(2) சொல்வகை நான்கனுள் நான்கடியான் வரும் இசைப்பாட்டு.

சுண்ணமொழிமாற்று — சுண்ணமாக அமைந்த செய்யுளை ஏற்றபடி மொழிமாற்றிப் பொருள் கொள்ளுகை.

சுரிதகம் — கலியின் இறுதியுறுப்பு.

சுலோகம் — வடமொழிச் செய்யுள்.

சுவர்க்க கணம் — மூன்று நேரசைச் சீர், இந்திர கணம்.

சுழிகுளம் — எவ்வெட்டெழுத்துக் கொண்ட நான்கடியாய், மேனின்று கீழிழிந்தும், கீழ்நின்று மேலேறியும் புறஞ்சென்று உண்முடியப் பாடும் மிறைக்கவி.

சூத்திரப்பா — இலக்கணம் முதலியவற்றை அமைத்தற்குரிய நூற்பாவகவல்.

சூத்திரம் — சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளும் செறிந்து விளங்க அமைத்து முடிக்கப்படும் யாப்பு.
(2) சூத்திர வடிவில் இயன்ற நூல்.

சூத்திர யாப்பு — சூத்திரப்பா.

செந்துறை — பாடற்கேற்ற பா.

செந்துறை வெண்பா — செந்துறை வெள்ளை.

செந்துறை வெள்ளை — குறள்வெண்பாவின் இனத்துள் ஒன்ருகி, ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் பெற்று, இரண்டாய்த் தம்முள் அளவொத்து வருவது.

செந்தூக்கு — தாளவகை.

செந்தொடை — மோனை முதலியன அமையாது வேறுபடத் தொடுக்கும் தொடை.

செந்நடையந்தாதி — மண்டலம் பெருது, அடிதோறும் எழுத்து, அசை, சீர் முதலியன அந்தாதியாதல்.

செப்பல் — செப்பலோசை.

செப்பலோசை — வெண்பாவுக் குரிய ஓசை

செம்பொருள் அங்கதம் — வாய்கரவாது சொல்லிய வசைப் பாட்டு.

செம்மொழிச் சிலேடை — பிரித்தலின்றியே பல பொருள் பயக்கும் சொற்களாலாகிய தொடர்.

செய்யுட் கணம் — மூவசைச்சீர் எட்டுள், செய்யுள் தொடங்குவதற்குரிய நல்லன நான்கும், தீயன நான்கும்.

செய்யுட் கலம்பகம் — பலவகைப் பாடல் திரட்டு

செய்யுட்கோவை —

செய்யுட் சொல் — செய்யுளில் மட்டும் வரும் சொல்.

செய்யுட் பொருத்தம் — செய்யுண் முதன்மொழிப் பொருத்தம்.

செய்யுண்முதன்மொழிப் பொருத்தம் — மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்று பத்து வகையாய்க் காவியத்தின் முதற் செய்யுள் முதன் மொழியில் பார்த்தற்குரிய பொருத்தம்,

செய்யுள் — பாட்டு (2) காவியம்.

செய்யுள் வழு — யாப்பிலக்கணத்தோடு பொருந்தாத இயல்பினையுடைய குற்றம்.

செய்யுளியல் — இலக்கண நூற்களில் யாப்பிலக்கணம் கூறும் பகுதி.

செய்யுளுறுப்பு — எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற செய்யுளின் அங்கங்கள்.

செயற்கையளபெடை — செய்யுளில் ஓசை நிரம்பப் புலவர் செய்து கொள்ளும் அளபெடை.

செருக்களவஞ்சி — போர்க்களத்தைச் சிறப்பித்து அகவற் பாவாற் பாடப்படும் பிரபந்தம்.

செவியறிவு — செவியறிவுறூஉ.

செவியறிவுறூஉ — அரசர்க்கு நல்லறிவு புகட்டுதலைக் கூறும் புறத்துறை.
(2) செவியறிவுறூஉ மருட்பா.

செவியறிவுறூஉ மருட்பா — மேற்கூறிய பொருண்மையில் வரும் மருட்பாப் பிரபந்தம்.

செவியுறையங்கதம் — அரசர்க்கு உறுதிகூறும் நோக்குடன் அறிஞர் கூறும் வசைச் செய்யுள்.

சொல்லானந்தம் — பிரபந்தத் தலைவனது இயற் பெயரையடுத்துக் கேடுபயக்கும் அமங்கலச் சொல்லைப் புணர்த்துப் பாடுவது.

சொற்சீரடி — அம்போதரங்கம்.

சொற்பொருத்தம் — செய்யுண் முதன்மொழிப் பொருத்தம் பத்தனுள் வகையுளி சேர்ந்ததும் சிறப்பில்லாததும், பல் பொருட்கேற்பதும் பொருள் இல்லாததும், திரிதல் கெடுதல் என்னும் விகாரமுடையது மாகாது, மூவகையுடைய மங்கலச் சொல் செய்யுளின் முதற்கண் அமைதலாகிய பொருத்தம்.

சொற்றொடர்நிலைச்செய்யுள் — அந்தாதி.

சோரகவி — ஒருவன்மேல் பிறன்பாடிய கவியைத் தான் பாடியதாக வேறொருவனுக்குக் காட்டுபவன்.

தசகம் — பத்துச் செய்யுள் கொண்ட பிரபந்தம்.

தசப்பிராதுற்பவம் — திருமாலின் பத்து அவதாரம் பற்றிய நூல்.

தசாங்கத்தயல் — ஆசிரிய விருத்தத்தால் அரசியல் உறுப்புக்கள் பத்தினையும் பாடும் பிரபந்தம்.

தசாங்கப் பத்து — நேரிசை வெண்பாவால் அரசியலுறுப்புக்கள் பத்தினையும் பாடும் பிரபந்தம்

தண்டகம் — ஒருவகை ஆரியச் செய்யுள்.

| | | |
|---|---|---|
| தண்டகமாலை | — | 300 வெண்பாக்களாலான இலக்கியம் |
| தரவிணைக் கொச்சகம் | — | இரு தரவு கொண்ட கொச்சகக் கலிப்பா வகை. |
| தரவு | — | கலிப்பாவின் முதலுறுப்பு |
| தரவு கொச்சகம் | — | கொச்சகக் கலிவகை. |
| தரு | — | இசைப்பாட்டு வகை. (2) ஒருவகைச் சந்தம். |
| தலைப்பாட்டு | — | கூத்தின் முதலில் தொடங்கும் பாட்டு. |
| தலையாகு மோனை | — | செய்யுளின் ஓரடியின் எல்லாச் சீரிலும் மோனையெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது. |
| தலையா கெதுகை | — | முதற்சீர்கள் முழுவதும் ஒன்றி வரும் எதுகை. |
| தளை | — | ஒரு சீரின் ஈற்றசைக்கும் அடுத்து வருஞ்சீரின் முதலசைக்கும் உள்ள தொடர்பு. |
| தனிச்சீர் | — | நேரிசை வெண்பா, கலிவெண்பாக்களின் இரண்டாமடி யிறுதியில் எதுகை பெற்று வரும் சீர். |
| தனிச்சொல் | — | கலிப்பா முதலியவற்றில் ஆங்கு என்பது போலத் தனித்து வரும் சொல். (2) தனிச்சீர். |
| தனிப்பாட்டு | — | தனிப்பாடல். |
| தனிப்பாடல் | — | விடுகவி. |
| தனியன் | — | ஒரு நூலை அல்லது ஆக்கியோனைப் புகழ்ந்து கூறும் தனிச் செய்யுள். (2) குருஸ்தோத்திரமான ஒற்றைச் சுலோகம். |
| தாஅ வண்ணம் | — | இடையிட்டுவரும் எதுகையுடைய சந்தம். |
| தாண்டகச் சந்தம் | — | தாண்டகவடி மிக்குச் சந்தவடி குறைந்து வரும் செய்யுள். (2) சந்தவடியும் தாண்டகவடியும் விரவி ஓசை கொண்டு வரும் செய்யுள். |
| தாண்டகம் | — | 26 எழுத்தின் மிக்கஅடியான்வரும் அளவழி அளவியற்றாண்டகம் என்றஇரு பகுப்பினையுடைய பாக்கள். (2) 6 அல்லது 8 சீரான் இயன்ற ஒத்த நான்கடி கொண்ட செய் |

யுட்களுடையதும் கடவுளைப் புகழ்வதுமாகிய பிரபந்த வகை.

தாண்டகவடி — 26க்கு மேற்பட்ட எழுத்துக்களாலியன்ற அடி.

தாரகை மாலை — அருந்ததிக் கற்புடை மகளிர்க்குள்ள இயற்கைக் குணங்களைக் கூறும் பிரபந்தம்.

தாவு வண்ணம் — தாஅ வண்ணம்

தாழிசை — பாவினங்களுள் ஒன்று

தானப் பொருத்தம் — உயிரெழுத்துக்களை அ,ஆ,இ,ஈ,ஐ, உஊஔ, எஏ, ஒஓ, என ஐந்தாகப் பகுத்துப் பாட்டுடைத் தலைவனது பெயர் தொடங்கும் உயிரினத்தைப் பாலதானமாகக் கொண்டு தொடங்கி, மேல் குமர இராச மூப்பு மரணத்தானம் என உயிரினங்களை எண்ணி, மூப்பு மரணத்தானமுமான எழுத்துக்களை நீக்கி மற்றைத் தானங்களிலுள்ள எழுத்துக்களால் நூலைத் தொடங்கும் செய்யுண் முதன் மொழிப் பொருத்தம்.

தானம் — தானப் பொருத்தத்தில் வரும் தானங்கள்.

தான வண்ணம் — ஒருவகை இசைப்பாட்டு

தானைமாலை — ஆசிரியப்பாவால் அரசரதுகொடிப் படையைப் பாடும் பிரபந்த வகை.

திணைநிலைவரி — ஐந்திணைச் செய்திகளைக் காமக் குறிப்புத் தோன்றப் பாடும் பாவகை.

திரிபந்தாதி — முதலெழுத்து மட்டும் திரிய பிற ஒன்றி பொருள் வேறுபட வரும் அந்தாதிப் பிரபந்தம்.

திரிபாகி — மூவெழுத்துக்களைச் சேர்க்க ஒரு மொழியாகவும், அதன் முதலிறுதியெழுத்துக்களைச் சேர்க்க மற்றொரு மொழியாகவும், இடைகடையெழுத்துக்களைச் சேர்க்க வேறொரு மொழியாகவும் வந்து வெவ்வேறு பொருள்தரும் சித்திர கவி.

திரிபு — முதலெழுத்தொழிய 2 முதல் பிற எழுத்துக்கள் அடிதோறும் ஒத்திருக்கையிற் பொருள் வேறுபடப் பாடுஞ் செய்யுள்.

| | | |
|---|---|---|
| திரிபுடை | — | சத்த தாளத் தொன்று. |
| திருவிருக்குக் குறள் | — | ஓரடி இருசீராக, நாலடியான் வரும் செய்யுள். |
| திலதக் கலித்துறை | — | கட்டளைக் கலித்துறை. |
| தீக்கணம் | — | செய்யுள் முதற்சீராக அமைக்கலாகாத நிரை நேர்நிரை எனும் சீர். |
| தீயவை | — | தீயோர் கூடிய சபை. |
| துணிபுத் தூக்கு | — | எழுவகைத் தூக்குள் ஒன்று. |
| தும்பை மாலை | — | தும்பை மாலையணிந்து பெரும் போர் புரிந்த வீரனைப் புகழும் பிரபந்த வகை. |
| துயிலெடைநிலை | — | அரசர் முதலியோரைத் துயிலெடுத்தல் பற்றிப் பாடப்படும் பிரபந்தம். |
| துள்ளல் | — | கலிக்குரிய ஓசை. |
| துள்ள லோசை | — | ,, |
| துறை | — | பாவினத் தொன்று. (2) இசைப் பாட்டு வகை. |
| துறைப் பாட்டு | — | அகப்பொருள், புறப் பொருள் துறைகளைக் குறித்து வருஞ் செய்யுள். |
| தூக்கானந்தம் | — | தாளமமைத்து இசையில் பாடும் போது பெயரைப் பிளந்து கூறுதலானும் குரலை யுயர்த்துத் தாழ்த்துக் கூறுதலானும் தலைவன்பெயர் புலனாகாதமையும் குற்றம். |
| தூக்கு | — | செய்யுள். (2) பாக்களைத் துணித்து நிறுக்குஞ் செய்யுளுறுப்பு. (3) கூத்து. (4) இசை. |
| தூங்கல் | — | வஞ்சியோசை. |
| தூங்கல் வண்ணம் | — | வஞ்சியோசை பயின்றுவரும் சந்தம். |
| தூங்கலோசை | — | வஞ்சிப்பாவிற்குரிய ஓசை. |
| தூங்கிசை | — | செய்யுட்குரிய நால்வகை யோசையுள் ஒன்று. |
| தூங்கிசைச் செப்பல் | — | இயற்சீர் வெண்டளையான் வரும் வெள்ளோசை. |
| தூங்கிசைத் துள்ளல் | — | கலிப்பாவுக்குரிய ஓசை. |
| தூங்கிசை யகவல் | — | நிரையொன்றாசிரியத் தளையான் வரும் அகவல் ஓசை. |

| | | |
|---|---|---|
| தூசங் கொளல் | — | ஒருவன் பாடிய வெண்பாவின்ஈறு. முதல் எழுத்துக்களே ஈறும்முதலு மாக மற்றொரு வெண்பாப் பாடு வது. |
| தூது | — | பாணன் முதலிய உயர்திணைப் பொருளேயேனும் கிள்ளை முதலிய அஃறிணைப் பொருளேயேனும் ஊடனீக்கும் வாயிலாகக் காதலர் பால் விடுத்தலைக் கலிவெண்பா வாற் கூறும் பிரபந்தம். |
| தெம்பாங்கு | — | தெம்மாங்கு |
| தெம்மாங்கு | — | தென்னுட்டில் நாட்டுப் புறத்தார் பாடும் இசைப்பாட்டு வகை. |
| தேமா | — | நேர்நேரென்ற சீரின் வாய்பாடு. |
| தேமாங்கனி | — | நேர்நேர்நிரையின் வாய்பாடு. |
| தேமாங்காய் | — | நேர்நேர்நேரைக் குறிக்கும் வாய் பாடு. |
| தேமாந்தண்ணிழல் | — | நேர்நேர்நேர்நிரை யென்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு. |
| தேமாந்தண்பூ | — | நேர்நேர்நேர்நேர் என்பதின் வாய் பாடு. |
| தேமா நறுநிழல் | — | நேர்நேர்நிரைநிரை என்ற சீரின் வாய்பாடு. |
| தேமாநறும்பூ | — | நேர்நேர்நிரைநேர் என்பதின்வாய் பாடு. |
| தேவ கதியெழுத்து | — | செய்யுள் முதலில் வருவதற்கு உரி யனவும் நன்மை பயப்பனவுமாகிய அஇஉஎகசடதப என்ற எழுத்துக் கள். |
| தேவ பாணி | — | தேவரைப் புகழும் பாட்டுவகை. |
| தொகைநிலை | — | தொகைநிலைச் செய்யுள். |
| தொகைநிலைச் செய்யுள் | — | ஒருவராலேனும் பலரா லேனும் பாடப்பட்டனவாய்ப் பொருள் இடம் காலம் தொழில் என்பன பற்றியும் பாட்டு அளவு என்பன பற்றியும் ஒருங்கு திரட்டப்பட்ட செய்யுள் நூல். |
| தொடர்நிலைச் செய்யுள் | — | பழையதொரு கதைமேல் நாற் பொருளும் வனப்பும் அமைய இயற்றப்படும் செய்யுள் நூல், |
| தொடர்பு | — | பாட்டு |
| தொடை | — | பாட்டு<br>(2) மோனை, எதுகை, முரண், |

இயைபு அளபெடை என ஐவகை யான் செய்யுள் தொடுக்கும் வகை.

தொடைமுரண் — முரண்டொடை.

தொடையானந்தம் — அளபெடைத் தொடைப் பாட்டி னுள் பாட்டுடைத் தலைவனது பெயர்சார்த்தி அளபெடுப்பத் தொடுக்கும் ஆனந்தக் குற்றம்.

தொன்மை — உரைவிரவிப் பழைமையாகிய கதை பொருளாகச் செய்யப் படுவது.

தோல் — பழையதொரு பொருள்மேல் மெல்லென்ற சொல்லான் அறம் பொருளின்பம்வீடு என்ற விழுமிய பொருள் பயப்பச் செய்யப்படும் நூல்.

நச்சுச் சொல் — செய்யுளில் வழங்கக் கூடாத தீச்சொல்.

நச்செழுத்து — பிரபந்தத்தின் முதற்சொல் மங் கல மொழியல்லாவிடத்து, ஆதி மொழிக்கண் வருதற்கு ஆகாதன என்று விலக்கப்படும், ய்ர்ல்ள்; யா ரா லா ளா; யோ ரோ லோ ளோ; ஃ; மகரக் குறுக்கம்; அள பெடையாகிய எழுத்துக்கள்.

நட்சத்திர மாலை — 27 பாடல் கொண்ட பிரபந்த வகை.

நயனப்பத்து — தலைவனுடைய கண்களைப் 10 செய்யுளாற் புகழும் பிரபந்தம்.

நலிபு வண்ணம் — ஆய்தம் அடிக்கடி பயின்று வரும் சந்தம்.

நவமணிமாலை — ஒன்பது பாவகையால் அந்தாதி யாக இயற்றப்படும் ஒரு பிரபந் தம்.

நாட்பொருத்தம் — பாட்டுடைத் தலைவன் பெயரின் முதலெழுத்தின் நாண்மீனுக்கும், நூலின் முதன் மொழியின் முதல் எழுத்தின் நாண்மீனுக்கும் உள்ள பொருத்தம்.

நாமமாலை — தலைவன் பெயர்களை வஞ்சிப்பா வால் புகழ்ந்து கூறும் பிரபந்தம்.

நாழிகைக் கவி — அரசரும் கடவுளரும் நாழிகை தோறும் செய்யும் செயல்களை 30 வெண்பாவில் கூறும் பிரபந்த வகை.

| | | |
|---|---|---|
| நாழிகை வெண்பா | — | நாழிகைக் கவி |
| நாள் | — | வெண்பாவின் ஈற்றடி யிறுதியில் வரும் ஓரசைச்சீர் வாய்பாடு. |
| நாற்கவி | — | ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால் வகைக் கவி. (2) ஆசுகவி முதலிய நால்வகைப் புலவர்கள். |
| நான்மணிமாலை | — | அந்தாதியாகப் பாடப்பட்டதும் வெண்பா, கலித்துறை, அகவல் விருத்தம் என்பன மாறி மாறி இயைந்துவரும் 40 செய்யுளுடையதுமான பிரபந்த வகை. |
| நிரனிறை | — | பொருள்கோள் நான்கனுள், நிறுத்த முறையே சொற்களை அன்னுவயிக்கை. |
| நிரை | — | நிரையசை. |
| நிரைபசை | — | முற்றியல் அல்லது குற்றியலுகரம் தொடர்ந்து வரும் நிரையசை. |
| நிரைபு | — | ,, |
| நிரையசை | — | இணைக்குறிலாலேனும், ஒற்றடுத்த இணைக்குறிலாலேனும், குறில் நெடிலாலேனும், ஒற்றடுத்த குறில்நெடிலாலேனும்ஆகியஅசை. |
| நிரையொன்றாசிரியத்தளை | — | ஆசிரியப்பாவில் நிரையீற்றியற் சீரின் முன் நிரை முதல் சீர் வந்து ஒன்றுந் தளை. |
| நிரோட்டகம் | — | இதழியைந்து பிறவா எழுத்துக்களால் ஆகிய செய்யுள். |
| நிலக்கணம் | — | மூன்று நிரையாலான சீர்; நன்மை பயக்கும் செய்யுட்கணம். |
| நிலைமண்டிலம் | — | நிலைமண்டிலவாசிரியப்பா. |
| நிவப்புத் தூக்கு | — | ஐஞ்சீருள்ள இசைப்பாட்டு. |
| நிறையவை | — | எல்லாப் பொருளையும் அறிந்து, எதிர் வரும் மொழிகளை எடுத்துரைக்க வல்லார் குழுமிய அவை. |
| நீர்க்கணம் | — | நேர்நிரைநிரையெனும் மங்கலமான செய்யுட்கணம். |
| நீரோட்டி | — | நிரோட்டகம். |
| நூல் | — | சாஸ்திரம். |
| நூல் யாப்பு | — | தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழி பெயர்ப்பு என நால் வகையாக இயற்றப்படும் நூலினமைப்பு. |
| நூற்பா | — | நூற்பாவகவல். |

நூற்பாவகவல் — இலக்கணம் முதலிய அமைத்தற் குரிய அகவல்.

நூற்றந்தாதி — 100 வெண்பாஅல்லது கலித்துறை அந்தாதியாகப் பாடப்படும் பிர பந்தம்.

நூன்மலைவு — செய்யுட்குற்றம்.

நெஞ்சுவிடுதூது — மனத்தைக்காதலர்பால் தூது விடு வதாக அதனை முன்னிலைப் படுத் திக் கூறும் பிரபந்தம்.

நெட்டிசை — விருத்தத்தில் நெடிய சந்தம்.

நெடிலடி — ஐஞ்சீரான் வரும் அடி.

நெடுஞ்சீர் வண்ணம் — நெட்டெழுத்துப் பயின்று வரும் சந்தம்.

நெடுந்தூக்கு — தூக்கு ஏழனுள் எழுசீர் கொண் டது.

நெடுவெண் பாட்டு — 7 அடிச் சிறுமையும் 12 அடிப்பெரு மையு முடைய வெண்பா வகை.

நேர்நிலை வஞ்சி — சமநிலை வஞ்சி.

நேர் — நேரசை.

நேர்பசை — குற்றுகர முற்றுகரங்களோடு இயைந்து வரும் நேரசை.

நேர்பு —

நேரசை — குறிலும் நெடிலும் தனித்தேனும் ஒற்றடுத்தேனும்வரும்அசைவகை.

நேரடி — அடி ஐந்தனுள்நாற்சீரால்வருவது.

நேரிசை — நேரிசை வெண்பா.

நேரிசைச்சிந்தியல்வெண்பா — இரண்டாமடியில் தனிச் சொல் பெற்று வரும் சிந்தியல் வெண்பா வகை.

நேரிசை யாசிரியப்பா — ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரி யப்பா.

நேரிசையொத்தாழிசைக்கலி - தரவொன்றும் தாழிசை மூன்றும் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வரும் கலிப்பா.

நேரிசை வெண்பா — இரண்டாமடி யீற்றில் தனிச் சொல் பெற்று வரும் வெண்பா வகை.

நேரொன்றாசிரியத்தளை — நேரீற் றியற்சீர் முன் நேர் வரும் தளை.

நொச்சி மாலை — வீரர் எயில் காத்தலைச் சிறப்பிக் கும் பிரபந்த வகை.

நொண்டிச் சிந்து — நொண்டி நாடகம்.

| | | |
|---|---|---|
| நொண்டி நாடகம் | — | கள்வ னொருவன் படையிலுள்ள குதிரை யொன்றைத் திருட முயன்ற போது கால்தறியுண்டு பின் நல்வழி பெற்ற செய்தியைச் சிந்துச் செய்யுளாற் புனைந்துகூறும் நாடக நூல். |
| நோக்கு | — | ஓசை முதலியவற்றால் கேட்டாரை மீட்டும் தன்னை நோக்கச் செய்யும் செய்யுளுறுப்பு. |
| பஃறொடை | — | பஃறொடை வெண்பா. |
| பஃறொடை வெண்பா | — | நான்கடியின்மிக்குவரும்வெண்பா. |
| பகுதி | — | அடியொன்றுக்கு ஒன்பது எழுத்து வரும் சந்தம். |
| பகைத் தொடை | — | முரண்டொடை. |
| பண்ணத்தி | — | உரையும் பாட்டுமாகச் செய்யப் படும் ஒரு பனுவல். |
| பதிகம் | — | தெய்வத்தைப் பற்றிப் பெரும் பாலும் பத்துச் செய்யுளால் பாடப்படும் பிரபந்தம். |
| பதிற்றந்தாதி | — | வெண்பா அல்லது கலித்துறையில் பத்துப் பாடலால் அந்தாதியாகப் பாடும் இலக்கியம். |
| பதிற்றுப்பத் தந்தாதி | — | பெரும்பாலும் 10 பாடற்கு ஒரு சந்தமாகப் 10 சந்தபேதமுடைய 100 செய்யுளில் அந்தாதியாகப் பாடப்படும் பிரபந்த வகை. |
| பயோதரப் பத்து | — | மகளிர் தனங்களைப் பத்து பாட லால் சிறப்பிக்கும் பிரபந்தம். |
| பரிபாட்டு | — | பரிபாடல். |
| பரிபாடல் | — | ஒருவகைப் பா. |
| பல்சந்த மாலை | — | 10 வகைச் சந்தங்களால் இயன்ற தும் 10 முதல் 100 வரை செய்யுளு டையதுமான பிரபந்தம். |
| பல்லவி | — | கீர்த்தனத்தில் திரும்பத் திரும்பப் பாடப்படும் உறுப்பு. |
| பவமத்திமம் | — | முதலடியும் நான்காமடியும் எழுத் துக் குறைந்து நடுவிரண்டடியும் எழுத்து மிக்கு, நாலடியுஞ் சீர் ஒத்து வருவது. |
| பவனிக் காதல் | — | பவனி வந்த தலைவனைக் கண்டு காதல் கொண்ட தலைவி தோழி யிடம் வருந்திக் கூறுவதாகப் பாடப்படும் பிரபந்தம். |
| பழிகரப் பங்கதம் | — | வசையைக் குறிப்புப் பொருளாகக் கொண்ட செய்யுள் வகை. |
| பழிகரப்பு | — | |

பள் — நாடகப் பிரபந்தம்.

பள்ளிசை — பள்ளுப் பிரபந்தம்.

பள்ளியெழுச்சி — அரசர் முதலியோரைத் துயிலெழுப்பும் பிரபந்தம்.

பள்ளு — பள்,

பள்ளேசல் — பள்ளிசை.

பன்மணிமாலை — கலம்பக உறுப்புக்களுள் ஒருபோகும் ஊசலும் அம்மானையுமின்றி வரும் பிரபந்தம்.

பா — பாட்டு.

பாட்டு — செய்யுள்.
(2) கொய்சகம் முதலியவற்றின் அடுக்கு

பாட்டு மடை — குரவைக் கூத்து முதலியவற்றின் இடையே பாடும் பாட்டு.

பாடல் — பாடுகை.
(2) இசைப்பா
(3) செய்யுள்

பாணாற்றுப்படை — தலைவனொருவனிடம் பரிசு பெற்று வரும் பாணனொருவன் மறறொரு பாணனை அத் தலைவனிடம் பரிசு பெறுதற்கு வழிச்செலுத்துவதைக் கூறும் புறத்துறை.

பாதம் — செய்யுளடி.

பாத மயக்கு — அடி மயக்கு.

பாதாதி கேசம் — தலைமக்களின் அடிமுதல் கேசம் வரையுள்ள உறுப்புக்களைச் சிறப்பித்துக் கூறும் பிரபந்த வகை.

பாவண்ணம் — நூற்பாவுக் குரிய சந்தம்.

பாவினம் — தாழிசை துறை விருத்தம் என்ற முப்பகுதியான பாவின் வகை.

பாவின் புணர்ப்பு — மிறைக் கவி.

பாவைப் பாட்டு — திருப்பாவை, திருவெம்பாவைகளில் உள்ளவை போல் நான்கடியின் மிக்கு வரும் செய்யுள்வகை.

பாற்பொருத்தம் — செய்யுண் முதன்மொழிப் பொருத்தம் பத்தனுள், குற்றெழுத்துக்களை ஆண்பாலாகவும் நெட்டெழுத்துக்களைப் பெண்பாலாகவும், ஒற்றும் ஆய்தமுமாகிய எழுத்துக்களை அலிப்பாலாகவும் கொண்டு, ஆண்பாலைப் புகழுமி

டத்து ஆணெழுத்துக்களையும், பெண்பாலைப் புகழுமிடத்துப் பெண்ணெழுத்துக்களையும் செய்யுள் மொழிமுதலில் அமைக்கும் பொருத்த வகை.

பிசி — உவமேயத்தை யுவமானப் பொருளாற் குறிப்பித்துக் கூறுவது.

பிசிபடுமொழி — செய்யுட் குற்றங்களுள் ஒன்று.

பிந்துமதி — யாப்பு வகை.

பிரபந்தம் — 96 வகைப்பட்ட இலக்கியம்.

பிராசம் — அடுத்தடுத்து வரும் எழுத்தோசை யொற்றுமை.

பிரிந்திசை — செய்யுளோசை வகை.

பிரிந்திசைக் குறள் — ஒத்தாழிசைக் கலியுறுப்பினுள் ஒன்றாகிய அம்போதரங்கம்.

பிரிந்திசைத் துள்ளல் — பலதளையும் விரவும் கலிப்பாவோசை.

பிரிந்திசைத் தூங்கல் — பலதளையும் விரவும் வஞ்சிப்பாவோசை.

பிரிபொருட்டொடர்மொழி— செய்யுட் குற்றத்துள் ஒன்று.

பிள்ளைக் கவி — பிள்ளைத் தமிழ்.
(2) முன்னோர் மொழிந்த சொன்னடை பொருணடை கொண்டு கவிபாடுவோன்.

பிள்ளைத் தமிழ் — பிள்ளையின் பல்பருவங்களைப் பற்றிக் கூறும் பிரபந்தம்.

பிறப்பு — வெண்பாவின் இறுதியில் நிரையசையுடன் உகரமான நேரசை கூடிவரும் வாய்பாடு.

பிறிதுபடு மொழி — செய்யுட் குற்றத்து ளொன்று.

பின்முடுகு வெண்பா — பின்னிரண்டடிகள் முடுகிச் செல்லும் வெண்பா வகை.

பின் முரண் — இரண்டாஞ்சீரும் நான்காஞ்சீரும் மாறுதலைப்படவரும் தொடை.

பின் மோனை — இரண்டாம் இறுதிச் சீர்களில் வரும் மோனை.

பின்னளபெடை — இரண்டாம் நான்காம் சீரில் அளபெடை வரல்.

பின்னியைபு — இரண்டாம் நான்காம் சீரில் வரும் இயைபுத்தொடை.

பின்னெதுகை — இரண்டாம் நான்காம் சீரில் எதுகை வரத்தொடுத்தல்.

புகழ்ச்சி மாலை — அகவல் கலியடி மயங்கிய வஞ்சிப்பாவால் மகளிரது சிறப்புக் கூறும் பிரபந்தம்.

| | | |
|---|---|---|
| புணர்ச்சி மாலை | — | தண்டக மாலை. |
| புணர்ப்பு | — | பிரபந்தம். |
| புணர்ப்பு வழு | — | செய்யுட் குற்றங்களு ளொன்று. |
| புருடச் சக்கரம் | — | சித்திரக் கவிவகை. |
| புலவராற்றுப்படை | — | பரிசில் பெற்ற புலவன், புரவலனிடம் மற்றோர் புலவனை ஆற்றுப் படுத்துதல் பற்றிய இலக்கியம். |
| புலன் | — | செவ்விதிற் கிளந்தோதல் வேண்டாது. சேரி மொழியாற் குறித்தது தோன்றும் நூல்வனப்புள் ஒன்று. |
| புளிமா | — | நிரைநேரின் வாய்பாடு. |
| புளிமாங்கனி | — | நிரைநேர்நேரின் வாய்பாடு. |
| புளிமாங்காய் | — | நிரைநேர்நேரின் வாய்பாடு. |
| புளிமாந்தண்ணிழல் | — | நிரைநேர்நிரையின் வாய்பாடு. |
| புளிமாந்தண்பூ | — | நிரைநேர்நேர்நேர் என்பதன் வாய்பாடு. |
| புளிமாநறுநிழல் | — | நிரைநேர்நிரைநேரின் வாய்பாடு. |
| புளிமா நறும்பூ | — | நிரைநேர்நிரைநேரின் வாய்ப்பாடு |
| புறப்பாட்டு வண்ணம் | — | இறுதியடி முடியாதிருப்பவும் தான்முடிந்த அடிபோலக் காட்டும் சந்தம். |
| பூமி சக்கரம் | — | சித்திரக் கவிவகை. |
| பூமியாகாயச் சக்கரம் | — | சித்திரக் கவிவகை. |
| பெண்கலை | — | வண்ணப்பாவின் பிற்பகுதி. |
| பெயர் நேரிசை | — | பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்து வர 50, 70 அல்லது 90 நேரிசை வெண்பாக்களால் இயற்றப்படும் பிரபந்த வகை. |
| பெயரின்னிசை | — | பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்துவர 50, 70, 90 இன்னிசை வெண்பாவால் இயற்றப்படும் பிரபந்தம். |
| பெருங்காப்பியம் | — | தன்னிகரில்லாத்தலைவனைப்பற்றியதாய், நாற்பொருள்பயப்ப நாடு நகர் முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடப்படும் தொடர் நிலைச் செய்யுள் வகை. |
| பெருந்தேவபாணி | — | கடவுளரைத் துதிக்கும் இசைப்பா வகை. |
| பெருமகிழ்ச்சி மாலை | — | கற்புடைப் பெண்டிர் பெருமையைக் கூறும் நூல். |

| | |
|---|---|
| பேடியெழுத்து | — ஆய்தவெழுத்து. |
| பேரெண் | — நாற்சீரடியாய் வரும் அம்போதரங்க உறுப்பு வகை. |
| பேரெல்லை வெண்பா | — எட்டடி வெண்பா. |
| பொதுச் சீர் | — நாலசையாலாகிய வஞ்சிப்பாவில் வரக் கூடியனவாகிய 16 சீர்கள். |
| பொருள் வழு | — செய்யுட் குற்றங்கள். |
| பொருளானந்தம் | — இறைச்சியினும். புகழ்ச்சியினும், உவமையினும், பிறவற்றினும் ஊறுபயப்பப் பாடும் ஆனந்தக் குற்றம். |
| பொருளந்தாதி | — பொருளிசை யந்தாதி. |
| பொருளிசை யந்தாதி | — ஓசையாலன்றிப் பொருளால் வரும் அந்தாதித்தொடை. |
| பொழிப்பு | — அளவடியுள் முதல், மூன்ரும் சீர்க்கண் மோனை, முதலாயின வரத் தொடுத்தல். |
| போக்கியம் | — சித்திர கவிவகை. |
| போர்க்கெழு வஞ்சி | — வஞ்சிமாலை சூடிப் போருக்குப் புறப்படும் வீரரைப் புகழும் பிரபந்த வகை. |
| மக்கட்கதி யெழுத்து | — ஆ ஈ ஊ ஏ என்ற நான்கு நெடிலும் ங, ஞ, ண, ந, ம என்ற ஐந்து மெய்யும். |
| மகிழிசை | — செந்துறைப் பாட்டுள் ஒருவகை, |
| மங்கலச் சொல் | — செய்யுட்களின் முதலில் வரற்குரிய திரு, பூ, உலகம் முதலாய நன்மொழிகள். |
| மங்கலப் பொருத்தம் | — செய்யுள் முதன்மொழியிடத்து மங்கலச் சொல் பொருந்துவது. |
| மங்கல மொழி | — மங்கலச் சொல். |
| மங்கல வள்ளை | — உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாவால் வகுப்புறப் பாடும் பிரபந்தம். |
| மங்கல வெள்ளை | — சந்தமும் வெண்பாவும் விரவிய 9 பாடலாலேனும், கலிவெண்பா ஒன்றினுலேனும், 9 வெண்பாவாலேனும், 9 சந்தங்களாலேனும் உயர்குடிப் பிறந்த கற்புடை மடந்தையைப் புகழும் பிரபந்தம். |
| மஞ்சரிப்பா | — பிரபந்த வகை. |
| மடக்கியல் | — சுரிதகம். |

| | | |
|---|---|---|
| மடக்கு | — | செய்யுளில் சொல் சீர் முதலியன பொருள் வேறுபட்டு மீண்டு மீண்டும் வருவதாகிய சொல்லணி வகை. |
| மடல் | — | உலா மடல். |
| மண்டலச் சீரந்தாதி | — | ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற் சீரும் ஒன்றாய் வரப் பாடும் அந்தாதிவகை. |
| மண்டலமயக்கந்தாதி | — | ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியெழுத்து அசை அல்லது சீர் முதலடியின் முதல் எழுத்து அசை அல்லது சீரோடு ஒத்துவருமாறு பாடப்படும் மயக்கந்தாதி வகை. |
| மண்டல வசையந்தாதி | — | ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியசையும் முதலடியின் முதலசையும் ஒன்றாக வரும்படிப் பாடப்படும் அசையந்தாதி வகை. |
| மண்டலவடியந்தாதி | — | இறுதிப் பாட்டின் இறுதியடியும் முதற்பாட்டின் முதலடியும் ஒன்றாய் வரும் அடி அந்தாதி வகை. |
| மண்டல வந்தாதி | — | ஒரு செய்யு ளிறுதியடியின் இறுதியெழுத்து அசை அல்லது சீர், முதலடியின் முதலெழுத்து அசை அல்லது சீருடன் ஒத்து வருமாறு பாடப்படும் அந்தாதி வகை. |
| மண்டலவெழுத்தந்தாதி | — | ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியெழுத்தும் முதலடியின் முதலெழுத்தும் ஒன்றாய் வரப் பாடப்படும் எழுத்தந்தாதிவகை. |
| மண்டில யாப்பு | — | நாற்சீரடிச் செய்யுள். |
| மணிமாலை | — | வெண்பா 20-ம், கலித்துறை 40-ம் விரவிவரச் செய்யும் பிரபந்தம். |
| மதலைத் தூக்கு | — | இருசீருடைய இசைத்தூக்கு. |
| மதிக்கணம் | — | சந்திர கணம். |
| மதுரகவி | — | இனிமை பெருகப் பாடுங் கவி. (2) இன்கவி பாடும் புலவன். |
| மந்தரச் சக்கரம் | — | சித்திர கவி |
| மயக்கந்தாதி | — | எழுத்து, அசை, சீர் இவற்றின் அந்தாதிகள் விரவிவரப் பாடும் அந்தாதிவகை. |
| மயங்கிசைக் கொச்சகம் | — | தரவு முதலிய கலியுறுப்புக்கள் மிக்கும் குறைந்தும், மயங்கியும் வரும் கொச்சகக்கலி. |

மருட்செந்தொடை — செந்தொடையின் வகை.

மருட்பா — வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்துவரும் செய்யுள் வகை.

மலர் — வெண்பாவின் இறுதிச்சீர் வாய்பாடுகளுள் ஒன்று.

மன்விருத்தம் — ஆசிரிய விருத்தம்.

மா — இயற்சீர் இறுதியிலுள்ள நேரசையைக் குறிக்கும் வாய்பாடு.

மாச்சீர் — நேரானிறும் இயற்சீர்.

மாட்டு — அகன்று கிடப்பினும் அணுகிய நிலையிற் கிடப்பினும் பொருள் முடியுமாற்றான் கொண்டு கூட்டிச் சொல்முடிபு கொள்ளும் முறை.

மாத்திரை — செய்யுளில் வரும் எழுத்தொலியின் அளவு.

(2) குற்றெழுத்து

(3) குருவிற் பாதி

(4) அளவு.

மாத்திரைச் சுதகம் — மாத்திரைச் சுருக்கம்.

மாருத கணம் — தேமாங்கனி எனும் அமங்கலக் கணம்.

மாலைமாற்று — எழுத்துக்களை ஈறுமுதலாகப் படிக்குமிடத்தும் பாட்டு மாறுமல் இருக்கும் மிறைக்கவி வகை.

மிறைக் கவி — சித்திர கவி.

முடுகியல் — அராகம்.

முடுகியல் வண்ணம் — முடுகியல், முடுகு வண்ணம்.

முடுகு வண்ணம் — அராகம் தொடுக்கும் அடியோடு பிற அடி சேர்ந்து தொடர்ந்தோடும் சந்தம்.

முடுகு வெண்பா — முடுகுச் சந்தமுடைய வெண்பா வகை.

முண்டப்பாட்டு — மிறைக்கவி வகை.

முத்தகம் — தனிநின்று பொருள் முடியுஞ் செய்யுள்.

முதற்சீர் — ஈரசைச்சீர்.

முதற்பா — முற்பா, வெண்பா.

முதுசொல் — முதுமொழி.

முதுமொழி — பழமொழி.

மும்மணிக்கோவை — அகவலும் வெண்பாவும் கலித்துறையும் முறையே மாறிவர,

அந்தாதித் தொடையாகப் பாடப்பெறும் 30 பாடலுடைய பிரபந்தம்.

மும்மணிமாலை — வெண்பா, கலித்துறை, அகவல் முறையே மாறி வர அந்தாதித் தொடையாகப் பாடப்பெறும் 30 பாடலுடைய பிரபந்தம்.

முரண் — முரண்டொடை.

முரண்டொடை — தொடை ஐந்தனுள் மொழியானும் பொருளானும் மறுதலைப் படப்பாட்டுத் தொடுப்பது.

முரண்மொழி — செய்யுட் குற்றங்களுள் ஒன்று.

முரற்கை — கலிப்பா.
(2) தாளவகை.

முரற்சி — பாட்டு.

முரி — இசைப்பாவில் இறுதிப் பகுதி.
(2) நாடகத் தமிழின் இறுதியில் வரும் சுரிதகம்.

முரிநிலை — இயற்பாவில் இறுதியில் பாடுந் தரவு.

முற்சீர் — முதற்சீர்.

முற்பா — நால்வகைப் பாவினுள் முதலாவதாகிய வெண்பா.

முற்றளபெடை — அடியின் எல்லாச் சீர்க்கண்ணும் அளபெடை வரத் தொடுப்பது.

முற்றியைபு — அடியின் எல்லாச் சீரிலும் இயைபு வரல்.

முற்றுத் தொடை — அளவடியின் நான்குசீரிலும் மோனை முதலியன வரத் தொடுத்தல்.

முற்று மடக்கு — ஒரு செய்யுளின் முதலடி முழுவதும் பின் 3 அடியாக மடங்கி வரும் சொல்லணி வகை.

முற்று முடுகு வெண்பா — நான்கடியும் முடுகுச் சந்தமாக வரும் வெண்பா.

முற்று முரண் — அளவடியின் சீர் முழுதும் முரண் பெறல்.

முற்று மோனை — அடியின் நாற்சீரினும் மோனை பொருந்துதல்.

முற்றெதுகை — அளவடியின் எல்லாச் சீர்க்கண்ணும் எதுகை வரத் தொடுப்பது.

முறைபிறழ்வைப்பு — செய்யுட் குற்றங்களு ளொன்று.

முன்முடுகு வெண்பா — முன்னீரடிகள் முடுகுச் சந்தம் பெற்று வரும் வெண்பாவகை.

| | | |
|---|---|---|
| முன்னம் | — | இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற் குரியாரும் இன்னரெனப் படிப்போர் அறியுமாறு செய்யப்படுவதாகிய செய்யுளுறுப்பு. |
| முன்னிலைப் பரவல் | — | கடவுளை முன்னிலைப் படுத்திப் புகழுகை. |
| மூவசைச்சீர் | — | உரிச்சீர். |
| மெய்க்கீர்த்தி | — | அரசனது புகழ் வரலாறுகளைக் கூறி அவன் தேவியுடன் வாழ்க வென்று வாழ்த்தி அவன் இயற் பெயருடன் ஆட்சி வருடத்தைக் கூறும் பாடல் வகை. |
| மெய்க்கீர்த்தி மாலை | — | அரசனது புகழ்கூறும் நூல். |
| மெல்லிசை வண்ணம் | — | மெல்லெழுத்து மிக்கு வரும் சந்தம். |
| மேற்கதுவாய் | — | மேற்கதுவாய்த் தொடை. |
| மேற்கதுவாய்த் தொடை | — | அளவடியுள் முதலயற்சீர்க் கணின்றி ஒழிந்த மூன்று சீர்க் கண்ணும் மோனை முதலியன வரத் தொடுத்தல். |
| மொழிமாற்று | — | ஏற்ற பொருளுக்கு இயையுமாறு மொழிகளை மாற்றிப் பொருள் கொள்ளு முறை. |
| மோனை | — | மோனைத் தொடை. |
| மோனைத் தொடை | — | அடி, சீர்களின் முதலெழுத்து ஒன்றி வரும் தொடை. |
| யதி | — | சீரோசை முடியுமிடம். (2) மோனை. |
| யதி பிரஷ்டம் | — | ஓசையறும்வழி நெறிப்படவராமல் நிற்பது. |
| யதி பங்கம் | — | ,, |
| யதி வழு | — | ,, |
| யமகம் | — | வந்த எழுத்துக்களே பொருள் வேறுபடச் செய்யுளின் சீர் அல்லது அடிகளிற் பின்னும் வருவதாகிய மடக்கணி. |
| யமக வந்தாதி | — | யமகத்தோடு வரும் அந்தாதி. |
| யாப்பதிகாரம் | — | செய்யுளிலக்கணம் கூறும் நூற் பகுதி. |
| யாப்பானந்தம் | — | பாட்டில் தலைவன் பெயர்க்கு முன்னும் சிறப்புடை மொழியினைப் புணர்த்து இடர்ப் படப் பாடும் ஆனந்தக் குற்றம். |

யாப்பு — செய்யுள்.
யாப்பு வழு — செய்யுட் குற்றங்களுள் ஒன்று.
யாற்றுநீர் — எண்வகைப் பொருள்கோளில், சொற்களை முன்பின்னாக மாற்றாமல் நேராகவே பொருள் கொள்ளும் வகை.
வகைநிலைக் கொச்சகம் — கொச்சகவகை.
வகையுளி — அசை முதலுறுப்புக்களைச் சொல் நோக்காது இசைநோக்கி வண்ண மறுக்கை.
வசந்தமாலை — தென்றலைச் சிறப்பிக்கும் பிரபந்தம்.
வசை (க்) கவி — வசை கூறும் பாடல்.
வசைப் பாட்டு — ,,
வஞ்சனைப் புணர்ப்பு — இசைகொள்ளா எழுத்துக்களின் மேலே வல்லொற்று வந்தபோது மெல்லொற்றுப் போல நெகிழ்த்துப் புணர்க்கை.
வஞ்சி — வஞ்சிப்பா.
வஞ்சிச் சீர் — வஞ்சியுரிச்சீர்.
வஞ்சித் தாழிசை — இருசீரடி நான்காய் ஒருபொருள் மேல் மூன்று செய்யுள் அடுக்கும் வஞ்சியினம்.
வஞ்சித்துறை — இருசீரடி நான்காய் ஒருபொருள் மேல் ஒரு செய்யுள் வரும் வஞ்சியினம்.
வஞ்சித் தூக்கு — பரிபாடலில் வஞ்சியடிகள் வரும் பகுதி. (2) வஞ்சி ஈறு.
வஞ்சிப்பா — நால்வகைப் பாவிலொன்று.
வஞ்சியுரிச் சீர் — கனி என முடியும் மூவசைச் சீர் 4 (2) நால்வகை அசைகளின் பல்வகைச் சேர்க்கையாலாகிய மூவசைச்சீர் 60.
வஞ்சிவிருத்தம் — முச்சீரடி நான்காய் வரும் வஞ்சியினம்.
வட்டச் சக்கரம் — சித்திர கவிவகை.
வண்ணக் களஞ்சியம் — வண்ணக்கவி பாடுவதில் சமர்த்தன்.
வண்ணக் குழிப்பு — வண்ணச் செய்யுளின் சந்த வாய்பாடு.
வண்ணக் குளிப்பு — ,,
வண்ணகம் — அராகம்.

| | | |
|---|---|---|
| வண்ணக வொத்தாழிசை | — | அராகம், தாழிசை, எண், வாரம் என்னும் உறுப்புக்களைச் சிறப்பாகக் கொண்டு வரும் கலிவகை |
| வண்ணத் தரு | — | ஒருவகைப் பாடல். |
| வண்ணம் | — | சந்தப் பாட்டு.<br>(2) பாவின்கண் நிகழும் ஓசை விகற்பம்<br>(3) முடுகியல். |
| வரலாற்று வஞ்சி | — | தலைவனது குலப்பிறப்பு முதலிய பல சிறப்பையும் கீர்த்தியையும் வஞ்சிப் பாவாற் கூறும் இலக்கியம்.<br>(2) போர்க்களம் செல்லும் படையெழுச்சியைக் கூறும் பிரபந்தம். |
| வரி | — | கூத்திற்குரிய வெண்டுறைப் பாட்டுள் ஒருவகை. |
| வருக்கக்கோவை | — | மொழி முதலில் வரும் எழுத்துக்களை ஒவ்வொரு செய்யுளைத் தொடங்கும் நிலையில் முறையே அமைத்துக் கலித்துறைப் பாட்டாக இயற்றும் இலக்கியம். |
| வருக்கமாலை | — | மொழி முதல் வரும் எழுத்துக்கள் முறையே ஒவ்வொரு அடியைத் தொடங்குமாறு அமைக்கும் இலக்கியம். |
| வருக்க மோனை | — | பாடலின் முதலெழுத்துக்கள் வருக்கவெழுத்துக்களால் அமையும் மோனை வகை. |
| வருக்க வெதுகை | — | பாடலடிகளில் ஒரு வருக்கத்தைச் சேர்ந்த எழுத்துக்கள் வரத் தொடுக்கும் எதுகைத் தொடை. |
| வருணப் பொருத்தம் | — | நால்வகைச் சாதிக்கேற்பத் தமிழ் நெடுங்கணக் கெழுத்துக்களைப் பிரித்து, அந்தந்தச் சாதியை அதனதனுக்குரிய எழுத்தால் தொடங்கிப் புகழல். |
| வல்லிசை வண்ணம் | — | வல்லெழுத்து மிக்குப் பயிலும் சந்தம். |
| வல்லின வெதுகை | — | எல்லாவடிகளின் முதற்சீர்க்கண்ணும் வல்லெழுத்து எதுகையாக ஒன்றிவரும் தொடை. |
| வழிமுரண் | — | ஒரு செய்யுளில் முரண்டொடை மிகுதியாகப் பயில்வது. |

வழிமோனை — அநுமோனை.
வழியசை — கலிப்பாவில் வரும் ஓர் உறுப்பு.
வழியெதுகை — ஒரு செய்யுளில் அடிதோறும் முதன் மூன்று சீர்க் கண்ணும் வரும் எதுகை வகை.
வள்ளை — மகளிர் நெற்குற்றும்போது ஒரு தலைவனைப் புகழும் பாடல்.
வள்ளைப் பாட்டு — வள்ளை.
வளமடல் — அறம் பொருள் வீடு என்பனவற்றினும் காமமே சிறந்தது என்றுந் தலைவன் பெயரைஎதுகையிலமைத்துங் கலிவெண்பாவாற் பாடும் நூல்வகை.
வனப்பு — பலவுறுப்புத் திரண்டவழிப் பெறுவதோர் செய்யுளழகு.
வனப்பு வண்ணம் — இசைவகை.
வாகைமாலை — வீரனது வெற்றியைப் புகழும் இலக்கியம்.
வாசகம் — செய்யுள்.
வாயுகணம் — நேர்நேர்நிரை எனும் அமங்கலக் கணம்.
வாயுறை வாழ்த்து — அறிவுரை கூறி வாழ்த்திப் பாடும் பிரபந்தம்.
வாரம் — கலியுறுப்புளொன்று.
வாவன் ஞாற்று — சித்திர கவிவகை.
விசாரதம் — பிராச முள்ள நான்கடிச் செய்யுள் வகை.
விட்டிசைத்தல் — அசை முதலியன பிரிந்திசைத்தல்.
வித்தார கவி — நாற்கவிதை வகையுள் ஒன்று.
(2) வித்தார கவி பாடுவோன்.
வித்தாரம் — கவி நான்கனுள் விரிவாகப் பாடும் பிரபந்தம்.
வித்தைக் கவி — செய்யுளிலக்கண முதலிய கற்றுக் கவி பாடுவோன்.
விதலை யாப்பு — செய்யுளின் முதலும் இடையும் கடையும் பொருள் கொள்ளும் முறை.
வியனிலை மருட்பா — வெண்பா, ஆசிரியவடிகள் ஒவ்வாதுவரும் மருட்பா வகை.
வியனிலை வஞ்சி — முச்சீரடி வஞ்சிப்பா.
விராமம் — தூக்கு.
(2) யதி.
விருத்தக் கலித்துறை — கலித்துறையின் வகை.

விருத்த கந்தி — செய்யுட் கதியிற் பெரும்பாலும் பயின்று வரும் வசனம்.

விருத்த கவிதை — வித்தார கவி.

விருத்த நடை — வேற்றிசைப்பா.

விருத்தம் — பாவினம் மூன்றனுள் ஒன்று.

விருத்தவிலக்கணம் — அரசனது வில், வாள், வேல், கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடையெனும் ஒன்பதனை யும் பப்பத்து விருத்தத்தால் ஒன் பது வகையுறப் புகழும் இலக்கியம்.

விருந்து — நூல் வனப்புள் ஒன்று.

விளக்குநிலை — வேலும் அதன் தலையும் விலங்கா தோங்கியவாறு போலக் கோலும் விளக்கும் விலங்கா தோங்குகவெ னக் கூறல்.

விளச்சீர் — நிரையில் முடியும் இயற்சீர்.

விற்பூட்டு — பூட்டுவிற் பொருள்கோள்.

விற்பூட்டுப் பொருள் — ,,

விற்பூட்டுப் பொருள்கோள் — ,,

வீரமாலை — வீரனைப் புகழும் பாடல்.

வீரவெட்சிமாலை — வெட்சிமாலை சூடிப் பகைவர் நிரை கவர்ந்த வீரனின் வெற்றித் திறத் தைத் தசாங்கத்தோடு புகழும் நூல்.

வெண்கலி — வெண்கலிப்பா.

வெண்கலிப்பா — வெண்டளை பெற்றுவரும் கலிப்பா வகை.

வெண்கவி — வெண்பா
(2) பொருளாழமற்ற கவி.

வெண்சீர் — வெண்பாவுரிச்சீர்.

வெண்சீர் வெண்டளை — வெண்பாவுரிச்சீர் முன் நேர் வந்து ஒன்றல்.

வெண்செந்துறை — இரண்டடிகள் தம்முள் அள வொத்து வரும் செய்யுள் வகை.

வெண்டளை — வெண்பாவுக்குரிய தளை.

வெண்டாழிசை — மூன்றடியாய் வேற்றுத்தளை விரவி ஈற்றடி மூச்சீரான் இறுவதாகவே னும் சிந்தியல் வெண்பா ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருவ தேனுமுள்ள வெண்பாவினம்.

வெண்டுறை — மூன்றடி முதல் 7 அடியீறாக அடி களைப் பெற்றுச் சீர் குறைந்தும் மிக்கும் வருதலையுடைய வெண் பாவின் வகை.

| | | |
|---|---|---|
| | | (2) ஆடற்குரிய பாட்டு. |
| வெண்டுறைச்செந்துறைப் பாட்டு | — | கலி, வரி, சிற்றிசை, பேரிசை சிற்றிசைச் சிற்றிசை என்ற பகுதி களையுடைய இன்னிசைப் பாட்டு வகை. |
| வெண்டுறைப் பாட்டு | — | வரி, குரவை, மண்டிலம், சேதம் முதலாகிய பகுதிகளையுடைய கூத் திற்குரிய பாட்டுவகை. |
| வெண்டுறை மார்க்கம் | — | ஒன்பது மேற்புறத்திற்கும் பதினோ ராடலுக்கு முரிய பாட்டுவகை. |
| வெண்பா | — | நால்வகைப் பாவுள் ஒன்று. |
| வெண்பா விருத்தம் | — | வெளிவிருத்தம். |
| வெண்பாவுரிச்சீர் | — | வெண்பாவுக்குரிய நேரீற்று மூவ சைச்சீர். |
| வெண்புணர்ச்சி மாலே | — | 30 வெண்பாக் கொண்ட பிரபந்த வகை. |
| வெள்ளடி | — | வெண்பாவுக்குரிய அடி. |
| வெள்ளைக் கவி | — | வெண்கவி. |
| | | (2) புன் மொழிகளிற் கவி பாடு வோன். |
| வெள்ளை | — | வெண்பா. |
| வெள்ளைச் சுரிதகம் | — | வெண்டளையில்வரும் கலிப்பாவின் இறுதி யுறுப்பு. |
| வெள்ளை விருத்தம் | — | வெளிவிருத்தம். |
| வெள்ளொத் தாழிசை | — | வெண்டாழிசை. |
| வெள்ளோசை | — | வெண்பாவுக்குரிய ஓசை. |
| வெளி | — | வெண்பா. |
| ருவளிவிருத்தம் | — | 3, 4 அடியால் முற்றுப்பெற்று அடி தோறும் இறுதியில் ஒரு சொல் லேயே தனிச்சொல்லாகக் கொண்டு வெண்பாவுக்கு இனமாய் வரும் பாவகை. |
| வெற்றிக்கரந்தை மஞ்சரி | — | பகைவர் கவர்ந்த நிரையைக் கரந்தை மாலே சூடிய வீரர் மீட் டல் பற்றிய இலக்கியம். |
| வெறுத்திசை | — | வெறுத்திசைப்பு. |
| வெறுத்திசைப்பு | — | யாப்பினுள் ஓசைக் குற்ற வகை. |
| வேற்றிசைப்பா | — | சருக்கம் அல்லது இலம்பகத்தின் முடிவில் வேறு பாடான இசை பெற்று வரும் பா. |
| வேனின்மாலே | — | இளவேனில் முதுவேனில்களைச் சிறப்பிக்கும் நூல் |

# நூற்பா முதற் குறிப்பு

*(எண்: பக்க எண்)*

# சொல்லகராதி

(எண்: பக்க எண்)

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| நவீன நாடகங்களும் ஊடகங்களும் | 50.00 |

**Pub.No. 655** இலக்கணத்தொகை யாப்பு - பாட்டியல் **300.00**